இப்புவியி லிஞ்ஞான பூமியோன்றி
லிரண்டிலடைந்திருந்தா ராறு
லப்புருடர் மிலேச்சராகிலு முத்தர்
குருபாதத்தாணை மெய்யே
தப்புரை யென்றவர்கெடுவோர் நடு
வான மறைகளைச் சங்கியாதே.

(கைவல்லிய

# முகவுரை.



"எந்நிலங் களினு மிக்க [illegible]
நன்னில மருவு மேக நா[illegible]



இக்காலத்திற்கேற்ப மூதிய வுண்மைகளை புதிய உடைகளுடன் பெருங் கருணைச் செல்வர்களாம் மகரிஷிகள் வெளியிட்டு வருகிறார்கள். இவ்வகையாய் மகரிஷி குருநாமி அவர்கள், ஸ்ரீமான் ஜி. கிருஷ்ணமூர்த்தி அவர்களுக்கு, கொடுத்த போதனைகள் அடங்கிய குருபதேசம் என்கிற மூலநூலுக்கு டாக்டர் பெஸன்ட் அம்மையாரும், ஸ்ரீமான் C. W. லெட்பீடர் அவர்களும் தமது சீடர்களுக்கு அப்போதைக்கப்போது விளக்கிக் காட்டிய உரைகள் சங்கிரகமாக ஆங்கிலத்தில் Talks on The Path of Occultism குப்தமார்க்கத்தைப் பற்றிய ஆப்தமொழிகள் எனப் பெயருள்ள நூலின் முதல்பாகத்தில் அடங்கியிருக்கின்றன. இப்பகுதியை தமிழில் எளிய நடையில் அனைவருக்கும் விளங்குமாறு மொழிபெயர்த்து வெளியிடப்பட்ட நூல் இது.

ஜகத்குரு ஒருவர் அவதரிக்கப்போகின்றார் என்று இதில்சொல்லியது பதினாறு வருடங்களுக்குமுன்; போதனைகளை சொன்னது சொன்னபடி இந்நூலில் மொழி பெயர்த்திருப்பதால் இப்போது அதாவது இந்நூல் பிரசுரமாகுங் காலத்தில் ஜகத்குருவானவர் எழுந்தருளி வந்திருப்பதால் இவ்விஷயத்தை வாசிப்பவர்கள் கவனிக்க வேணுமாய் கேட்டுக்கொள்கிறேன்.

இச்சாதனங்களைப் பலர் பலவிதமாகக் கேட்டுணர்ந்திருப்பினும் இவை எவ்வகையில் நம்பிரதிதினவாழ்க்கைக்கியைந்து நிற்கின்றன, இவைகளை எவ்விதம் கையாளவேண்டும் என்பதை விளக்கி நூல் வழியாய் காட்டியிருப்பவர்கள் வெகு சிலரேயாவர். கைவல்லியத்தில் இவைகளின் பெயரை எட்டாவது பாட்டில் எடுத்துக் காட்டி, மற்ற இரண்டு பாட்டுகளில் அவைகளின் அருத்தத்தை மாத்திரம் விளக்கி பதினோராவது பாட்டில்,

"சாதன மின்றி யொன்றைச் சாதிப்பாருலகிலில்லை
ஆதலாலிந்த நான்கு மடைந்தவர்க் கறிவுண்டாகும்."

என்று முடித்துவிட்டிருக்கிறது. இதன் காரணம் இந்நூல் பிறந்தகாலத்திலும் அதற்கு முந்தியும், முத்திமார்க்கத்திற்கேக வாஞ்சையுளளவர்கள், உலகைத் துறந்து குருவுடன் கூடி வாழ்ந்து வந்ததனால் சிஷியனுக்கு வேண்டிய விவரங்கள் குருவிடமிருந்தும், மற்ற சீடர்களிடமிருந்தும், அப்போதைக்கப்போது கேட்டு அந்தப் படி ஒழுகி அதிகாரி நிலைக்குப் போயினர். இப்போதோ இல்லறமல்லது நல்லறமன்று என்பது பிரதானத்திற்கு வந்ததாலும், தற்காலத்துள்ள ஆங்கில வாசிப்பின் தரத்திற்குத்தக்கபடி கொடுக்க வேண்டியிருப்பதாலும், மேலும் குருமூர்த்தமாய் வரப்பட்ட மாஸ்டர்களுடைய ஆசிரமத்திற்கு சிஷியன் சூக்குமதேகத்தோடுப் போய் போதனைகளை பெறக்கூடுமா யிருப்பதாலும் இதுவரையிலும் வெளி உலகில் குருசிஷ்ய பரஸ்பர சம்பந்தத்தில் வாய் மொழியாயிருந்தவைகளை நூல்வழியாய் பிரசுரிக்கப்பட்டது.

இச்சாதனங்களில் முதலாவதான பகுத்தறிவு என்பது ஓர்விதமனோநிலை, மனவொளி. சிறு மின்மினிப் பூச்சியிலிருப்பதும் வெளிச்சம்தான். மின்னல் மின்னும்போதும் வெளிச்சம்தான். இவ்விரண்டிற்கும் வித்தியாசம் எவ்வளவோ இருக்கின்றது. இந்தப் படி மின் மினிப்பூச்சி ஒளிபோன்று மானிடரின் ஆரம்பநிலையில் இருக்கும்பகுத்தறிவு கொஞ்சம் கொஞ்சமாய்ப் பகுத்தறியும் அனுபவத்தாலே ஜன்மாந்தரத்தில் வளர்ந்துகொண்டே மின்னல் ஒளி போலாகின்றது. இன்னும் சூரியனைப்போல் சதா பிரகாசிக்கும் நிலைக்கும் வரும். சாதாரணமாய், ஒரு பயிரிடும் குடியானவனும் ஒரு இஞ்சினீரும் ஒரு வீட்டைப் பார்க்கும்போது அந்தப் பார்வையிலிருக்கும் அவ்விருவரின் பகுத்தறிவு எவ்வளவோ வித்தியாசப்பட்டிருக்கும். ஒரு விஷயத்தை மனதில் நாட்டியபோது உடனே பளிச்சென்று வெளிச்சங் கொடுத்து விளக்குகிறதுதான் பகுத்தறிவு. மனம், புத்தி, சித்தம், அகங்காரம் எனும் அந்தக்கரணத்தால் விசாரித்து உசாவுதல் சாதாரண விவேகம். இது யோசனையால் வருவது. இந்தப்படிக்கு ஜென்ம ஜென்மமாய் யோசித்து

யோசித்துச் சிறுகச்சிறுக பகுத்தறிவாகிய வெளிச்சம் [illegible] விடத்தில் சேர்ந்து அழியாப்பொருளாய் இருந்துகொண்டு பிறவிகள் தோறும், பஞ்சேந்திரியங்களாலும் மனதாலும் நுகரும் விஷயங்களுக்கு அப்போதைக்கப்போது வெளிச்சம் கொடுத்து விளக்குகிறது. இவ்வெளிச்சம் மானிடனுக்கு பிறவிதோறும் அதிகமாகிக்கொண்டே வளர்ந்து வருகின்றது. ஆதலால் இப்போது நமக்கிருக்கும் இச்சிறு வெளிச்சத்தைக்கொண்டு நித்தியமாயிருக்கும் ஏகத்தைக் கண்டுணர்வது கஷ்டம். ஆனால் படிப்படியாய்ப் போகப் போககாமியமலத்தைப்பகுத்தறிந்துத் தள்ளி, மார்க்கத்தில் புகுந்து அங்கு ஆணவமலத்தைப் பகுத்தறிந்து கடந்துப் பின்னும், மாயையெனும் மலத்தைவிட்டு, ஈசுவரனோடு ஒன்றானால், அப்போதும் நித்தியமாய் அவ்வியக்தத்தில் உள்ளதைக் காணுவோமோ இல்லையோ என்பது தெரியாது. இதைக் கொண்டுதான் ஸ்ரீகிருஷ்ணபகவான் நிர்குணப் பிரம்மத்தை அறிவது கஷ்டமென்றும், சகுணப் பிரம்மத்தின் வழி சாதாரணமென்றும் சொல்லியிருக்கின்றார். அது போலவே இவ்விடத்தில் "மாஸ்டர்" அதிகாரி நிலைக்குவேண்டிய காமிய மலத்தை நீக்கவேண்டிய முறையை ஒவ்வொன்றாய் விவரித்துச் சொல்லுகின்றார். காமியமென்பது தேகான்மாவின் பற்று. இதை நீக்கினால் தேகான்மா ஜீவான்மாவுடன் ஒன்று சேரும். பிறகு ஆணவம் என்பது ஜீவான்மாவின் பற்று. இதை நீக்கினால் அப்போது மனிதன் அடையவேண்டிய முத்தியைநாம பெறுவோம். அதாவது ஜீவான்மா ஞானான்மாவுடன் சேரும். ஆதலால் நமக்கு வேண்டிய பகுத்தறிவை விருத்திசெய்யும் வழி முதல் படலத்தில்

இரண்டாவது படலம் நிராசை. இதுவும் ஓர் மனநிலை; பகுத்தறிவோடு ஒட்டியிருக்கிறது. பகுத்தறிவுக்குத் தக்கபடி நிராசை இருக்கும். ஒருதடவை நெருப்பில் சுட்டுக்கொண்டால் மறுபடியும் நெருப்பில் கையை வைப்பானா? அதுபோலவே பகுத்தறிவு எவ்வளவுக்கெவ்வளவு திடமாயிருக்குமோ, அவ்வளவுக்கவ்வளவும் நிராசை திடமாய் இருக்கும். கஷ்டம் வரும்போது விடுவது நிராசையல்ல. அனுபவத்தில் தீரத்தெரிந்து விடுவதுதான் நிராசை. ஆகையால் இது பகுத்தறிவோடு கூடவே மெல்ல மெல்லத்தான் மனித

ரிடத்தில் வளர்ந்துவரும், ஆனால் இப்போது மாந்தர்களில் அநேக ஸ்ரீவான்மாக்கள் விவேகிகளாய் இருந்தபோதிலும், தேக காமிய மெனும் மோகம் மூடிகொண்டிருப்பதால், அதை நீக்கினால் பளிச் சென்று விளக்கும். அப்போது நாமெல்லோரும் விஷயங்களைக் கவரும் ஆசையைவிட்டு மெய்ப்பொருளை நாடி மார்க்கத்தில் கூடிய சீக்கிரத்தில் அடிவைக்கக்கூடும்.

மூன்றாவது சாதனம் நல்லொழுக்கம். இது ஆறு அங்கங்க ளாகப் பிரித்து மனிதன் நடக்கவேண்டிய ஒழுக்கமுறையைக் காட்டுகிறது. இதுதான் நாம் எல்லோரும் தினசரி வாழ்க்கையில் கொண்டு வரவேண்டிய முறை. இது (வாழ்க்கை) அவரவர் நிலைக் குத்தக்கபடி விரிவாக இருக்கலாம். ஆனால் மார்க்கத்திற்குள் புக வேண்டிய ஒழுக்கம் இதில் காட்டி இருக்கிறது.

நானகாவது அன்பு; இது தான் ஒழுக்கத்தில் வரவேண்டிய குணம். இதற்குத்தான் மற்ற சாதனங்கள் கைகொடுக்கின்றன, இது படிப்படியாய் விரிந்துகொண்டே போகும். ஒரு தாயின் அன்பிற்கும், மகாத்மாக்களின் அன்பிற்கும் ஈசுவரன் அன்பிற் கும் முறையே அதன் பரப்பிலும் வலிமையிலும் வரம்பு உண்டு. ஆகையால் இது ஞானதீக்ஷா மார்க்கத்தினுட் புகவேண்டியதற்கான குணமாயிருக்கிறது.

இவைகளெல்லாம் மிகத் தெளிவாக இந்நூலில் குறிக்கப்பெற் றிருப்பதாலும், இவ்வகையாய் விவரிக்கும் நூல்கள் தமிழில் இல் லாததாலும், இதை மொழிபெயர்த்து வெளியிடலானேன். இதற் காக உதவிகொடுத்த அநேக நண்பர்களுக்கு நன்றி பாராட்டுகின் றேன். இதை வாசிப்பவர்கள் எல்லோரும் சொற்பிழை இலக்கணப் பிழை இவைகளை கவனிக்காது கருத்தைகொண்டு முத்திமார்க்கத்தில் சேரவேண்டுமென குருநாதனைத் தொழுது வணங்குகின்ற,

அடையார்
பிரபவஹு பங்குனிமீ } தி. மு. மாணிக்கம்பிள்ளை,

# பொருளடக்கம்.



## பகுத்தறிவுப் படலம்.

## நிராசைப்படலம்.

## அன்புப்படலம்.

இன்னவா றந்தப் பிரமத்தை யறிவிக்கு
மிலக்கணத்தால் வேதஞ்
சொன்ன ஞானமும் விசாரத்தால் வரு
மன்றிச் சுருதிநூல் படித்தாலு
மன்னதானங் கடவங்கண் மந்திரங்
களாசாரங்கள் யாகங்க
ளென்ன செய்யினுந் தன்னைத்தானறி
கின்றதிவைகளால் வாராதே.

இந்த ஞானந்தான் வருவதெப்படி
யெனி லிடைவிடா விசாரத்தால்,
வந்தடைந்திடும் விசாரந்தா னேதெனின்
மனுதியாஞ் சரீரத்தி
லிந்த நானெவன்சித்தேது சடமேது விரண்டு
மொன்றுக்கூடும்
பந்தமேது வீடேதென வுசாவுதல்
விசாரமென்றறிவாயே.

(கைவல்லியம்)

# 1-வது அத்தியாயம்

## முத்திமார்க்கமும் உலகினர் நோக்கமும்.

C. W. L:—ஒருவன் முத்திமார்க்கத்திற் செல்லுவதற்கு முக்கியமாம் துணைஆனநூற்கள் மூன்று:—1.“குருவுபதேசம்” AT THE FEET OF THE MASTER. 2. “மௌனவாக்கு”. VOICE OF THE. SILENCE 3. “மார்க்க தீபம்” LIGHT ON THE PATH.

இவைகளில், குருவுபதேசம் எளிய நடையில் எழுதியிருப்பதாலும், இதன்றி, அதிசீக்கிரம் வரவிருக்கும் ஜகத்குருவின் அநுமதியின்பேரில் வெளியிடப்பட்டதாலும், இந்நூல் இக்காலத்தில் நமக்கு பெரிதும் நன்மை பயக்கத்தக்கது. 1909-ம் ஆண்டில் “ஆல்கியூனி” “Alcyone” எனும் குறிப்புப் பெயர்கொண்ட ஜி. கிருஷ்ணமூர்த்தி தமது இளம்பிராயத்தில் 13 வயதிலேயே, தம் குருநாதனிடம் பெற்றுக்கொண்ட உபதேசங்கள் இதில் அடங்கி யிருக்கின்றன. அந்தவயதில் அவருக்கு ஆங்கிலப்படிப்பு அதிகமாகவில்லை. மேலும் ஆங்கிலத்திலேயே உபதேசிக்க நேர்ந்தமையால், விஷயங்களையும் பாஷை நடையையும் தெளிவாகவும் எளிதாகவும் செய்ய வேண்டியதாயிற்று. இக்காரணங்களால், முதற்படியாகிற ஞான தீக்ஷை (Initiation) பெறுவதற்குரிய சாதனங்களையெல்லாம், மாஸ்டர் குதூமி “Master Kuthumi” என்ற மகரிஷி தமது வல்லமையால் அற்புத எளிய நடையில் விளக்கியிருக்கின்றார். இச்சிறு புத்தகத்திற்கு இது ஒரு விசேஷ அமைப்பு.

“மார்க்கதீபம்” - 1885-ம் ஆண்டிலும் “மௌனவாக்கு” 1889-ம் ஆண்டிலும் வெளியாயின. இம்முக்கிய நூல்கள் ஒவ்வொன்றிலும் அததற்குரிய தனித்தனி விஷயங்கள் அடங்கியிருக்கின்றன. இவ்விரண்டு நூல்களும் விசேஷமாய் செய்யுள்போன்ற நடையில் எழுதப்பட்டிருப்பன. எனினும் “குருவுபதேச”த்திலும் சில வசனங்கள் மிகவும் இனிமையான நடையிலிருக்கின்றன. இவை “மாஸ்டர் குதூமி”யவர்களின் திருவாய்மொழிக ளாதலால், வேறுவிதமாக விருக்க முடியாதன்றோ? “மார்க்கதீப”த்தில் நமது “மாஸ்டர்கள்’

ஆம் பெரியோர்கள் இப்போதிருக்கும் நிலைக்குமேலாகிய "மஹாசோகன்" நிலைக்குரிய, அடுக்கடுக்கான ஆழ்ந்த கம்பீரமான அநேக கருத்துகள் உள. "மௌனவாக்கோ", "அநுகத் தீக்ஷை" வரையிலும் உதவும். குருவுபதேசம் முதலாவது தீக்ஷைக்கு முக்கியமாய் ஏற்பட்டுள்ளது. ஆகையால் இதைக்குறித்தே முதலில் விவகரிப்போம்.

முத்திமார்க்கத்திற்குரிய சாதனங்களைப்பற்றி நாமெல்லோரும் அடிக்கடி கேட்டிருக்கினறோமாயினும், இவைபோன்ற நூல்களில், எழுதியிருக்கும் ஒவ்வொரு விஷயத்தையும் அனுபவத்தில் கொண்டுவந்து, பழகித் தேறுகிற வரையில், இவைகளை இடைவிடாமல், நமக்கு பெரியோர்கள் சொல்லிக்கொண்டுதா னிருப்பார்கள். சாதனங்களை எப்படி சாதிக்க வேண்டுமென்பதை உள்ளவாறு தெரிந்துக்கொள்வதற்கு யாதொரு கஷ்டமுமில்லை. கஷ்டங்களெல்லாம் நாமே ஏற்படுத்திக்கொண்ட தடைகளே யன்றி வேறல்ல. ஆனது பற்றியே இங்கு சொல்லியிருப்பதை தங்கள் அனுஷ்டானத்தில் கொண்டுவந்து, தேறி வருகிறவர்கள், உண்மையில் சிலரே. ஏனெனில் அவர்களுடைய தேகான்மா "Personality" அடிக்கடி குறுக்கே வந்துநிற்கிறது. அதை ஜெயிப்பது கஷ்டமாகவிருக்கிறது. ஆகையால் தான் இதிலுள்ள விஷயங்களை ஒவ்வொருவரும் தாம் தாமே சரிவர அனுஷ்டிக்கவேண்டும். போதகாசிரியர், சாதனங்களின் விபரங்களை அநேகவிதமாய் விளக்கிக் காட்டலாமேயன்றி, அனுஷ்டிக்கவேண்டியது ஒவ்வொருவருடைய சொந்த வேலையல்லவோ? உதாரணமாக, பந்தய ஓட்டத்திற்கும், தேகப்பயிற்சிக்கும் இப்படித் தானே பழகுகிறோம்? இன்ன இன்ன மாதிரியென்று வழியை ஒழுங்காய் ஒருவர் காட்டிக்கொடுக்க, மாணுக்கன் தனது கைகால் பலத்தைக் கொண்டு பழகவேண்டுமே யன்றி, வேறொருவன் எவ்விதத்திலும் இவனுக்காக பயில முடியாதல்லவா?

மதவிஷயமாகப் பார்ப்போம். நம்மைச்சுற்றிலுமுள்ள கோடானுகோடி ஜனங்கள் தத்தம் மதாசார கொள்கையின்படி நடப்பதாக எண்ணங்கொண் டிருக்கிறார்களே யன்றி, உண்மையில் அதுபோல் நடப்பவர்கள் சிலரே. "நல்லவர்கள்", "பக்திமான்கள்" எனப்படு

வோர்களுங்கூட சாதாரணமாய் மதத்திற்கு விதித்துள்ள நீதிகளை யெல்லாம் சர்வரத்தமுவி நடப்பதில்லை. மதங்களிலுள்ள வெளி போதனைகள் சில அனுவசியமான வைகளாயும், பொருத்தமில்லா தவைகளாயு மிருக்கின்றன. மதங்களிலிப்படி யிருந்தாலும் "முத்திமார்க்கம்", என்னும் குப்த மார்க்கத்தில் அனுவசியமான நீதிமுறைகள் ஒன்றும் போதிப்பதில்லை. அங்கே ஒவ்வொன்றையும் சொன்னது சொன்னபடி அனுஷ்டிக்க வேண்டும். "மாஸ்டர்கள்"ஆனபெரியார்கள் நம்மை சிஷ்யராக ஏற்றுக்கொள்ளுவதற்கு முன், இச்சாதனங்களை யெல்லாம் பூரணமாகச் சாதித்து, நாம் சாத்தியர்களாயிருக்க வேணடுமென்பதல்ல. அம்மாதிரி சாதகர்களாய் விடுவது ஜீவனமுக்தி நிலையாகும். நியாயமாய், போதுமான அளவு, உள்ளபடியே நல்லொழுக்கங்களாக நம்மிடம் அமைந்து இருக்க வேண்டியதுதான அவசியம். மரியாதைக்கு வெளி வேஷமாக விருக்கக்கூடாது. வாகட சாஸ்திரியைப் பாருங்கள். மருந்துகளை இனனவிதம் சேர்ந்தால் இன்னது உண்டாகுமென்று நமக்கு தெரிவிக்கிறார். அவவாறேயாகுமென்பதில் நமக்குச் சந்தேகமில்லை. அவைகளின் அளவை மாற்றினால், எதிர்பார்ப்பது வாராமல் ஏதோ யின்னொன்று உண்டாகும் என்பதும் நமக்குத்தெரியும். அப்படித் தெரிந்திருந்தும், மதவிஷயங்களில் மாத்திரம் போதித்த போதனைகளை, சொல்லியபடி ஒழுங்காய் அனுஷ்டிக்காமல், ஏதோ கொஞ்சம் ஏறக்குறைய அனுஷ்டித்தால் போதுமென்பதாக நினைக்கிறோமே, இது சரியா? குப்த மார்க்கத்தில் அப்படி நினைப்பது முற்றிலும் தவறு. இங்கும் இரசாயன விதிகளைப்போலவே எடுத்துப் பழக வேண்டும். இந்த சாதனங்களைப்பற்றி எத்தனைதரம் கேட்டிருந்த போதிலும், அவைகளின் விபரங்களை அக்கரையோடு வாசித்துத் தெரிந்துகொள்ள முயன்று, பிறகு அனுஷ்டிக்க வேண்டியதை சரிவர முறை தவறாமல் அனுஷ்டிக்கும் பக்ஷத்தில், இதுவரைக்கும் தேறிவராமல் நின்றிருப்பவர்கள்கூட முத்திமார்க்கத்தில் அடியெடுத்து வைக்கக்கூடுமாயிருக்கும்.

இந்த அந்தரங்க விஷயங்கள் வெகு தொலையிலுள்ளவைகளல்ல. கூடிவருமோ, வாராதோ என்று சந்தேகப்படும்படியானவைகளுமல்ல. சென்ற சில வருஷங்கள் வரையில் இவைகள் கிட்ட

தவைகளாகத்தான் தோன்றின. ஏனெனில் நமக்குத் தெரிந்த வரையில், "மாஸ்டர்க"ளிடத்திற்கு நேராகப் போக்குவரவு வைத்திருந்தவர்கள் சிலர்தா னிருந்தார்கள். அப்போது வேண்டுமானால், மாணக்கன் "சரிதான், நற்பாக்கியமுள்ள இரண்டு மூன்றுபேர்கள் கடைத்தேறி இருக்கலாமேயன்றி, நம்போன்ற சாமானியர்களால் இது எட்டக்கூடியதாகக் காணப்படவில்லை" என்று எண்ணியிருக்கக்கூடும்.

ஆனால் இப்போதோ, "மாஸ்டர்க"ளிடத்தில் போக்குவரவு உள்ளவர்கள் அதிகப்பட்டிருக்கின்றனர், ஆகையால், மற்றவர்களுக்கு மார்க்கத்தில் வர பாக்கியம் கிடைத்திருக்க, ஏன் எனக்கு கிடைக்கக்கூடாது? என்று ஒருவன் கேட்க நியாயமுண்டு. கடைத்தேறாமல் இருப்பதற்கு காரணம் நம்மிடத்திலிருக்கிறதே யன்றி வெளியிலுள்ள எதிலுமில்லை. குருமூர்த்தமாய் வரும் "மாஸ்டர்"களின் அனுக்கிரகக் குறைவாலல்ல என்பது திண்ணம். சிஷ்யன சித்தமாகிறபோது குருநாதன சித்தமாய் வருகின்றார். சிஷ்யன சித்தமாவது தான் தடை. சிலருக்கு யாதோ வொரு குறை தடுக்கிறது. இன்னுஞ் சிலருக்கு சாதாரண அபிவிருத்தியில் குறைவிருக்கலாம்; ஆனால் நம்மிடத்தில் யாதொரு குற்றம் குறையில்லாதிருக்குமாகில் நாமெல்லோரும் முன்னமேயே கடைத்தேறி யிருக்கவேண்டும். என்ன குற்றம், என்ன குறை, என்பதைக் கண்டுபிடித்து அதற்குத் தக்க பரிகாரஞ்செய்ய, நன்முயற்சி யெடுத்துக்கொள்வது தான் பயனளிக்கக் கூடியது.

இந்த முயற்சி பலப்படுவதற்கு விசாரணை வேண்டும். இந்த தூல வெளியுலகை விட அந்தரங்க சூக்ஷ்ம உலகொன்றிருக்கிறது. அதன் வன்மை நம்மை சதா தாக்கிக்கொண்டே யிருக்கின்றது. உலகத்திலே ஜனங்கள் தாங்கள் தாங்கள்செல்லும் வழிகளில் அதிக சாதுர்யமுள்ளவர்களாகவும் கவனமுள்ளவர்களாகவும் இருப்பதாக எண்ணிக்கொண்டிருக்கிறார்கள். உண்மையிலோ, அவர்களெல்லாம் அநித்தியமான வெளி உலகத்தில் உழலுகின்றவர்களாகவே இருக்கிறார்கள். இந்தஉலகத்தைவிட வெகு சிரேஷ்டமாயிருக்கும் சூக்ஷ்ம உண்மையுலகு ஒன்று உள்ளது, என்பதை உற்றுணர்ந்தவர்கள் சிலரே.

நாம் முத்திமார்க்கத்தில் செல்லுபவர்களாயினும், இந்த வெளியுலகமேடையில், நமக்குரிய நாடகப்பகுதிகளை ஆடத்தான் வேண்டும். ஏன அப்படி என்றால், உண்மைவாழ்க்கை யொன்று உள்ளேயிருக்கிறபடியால் தான். நடனொருவன் ஏன் வேஷம்போடுகிறான்?. அவனுக்கு யதார்த்தத்தில் சொந்தவாழ்க்கை வேறொன்றிருக்கிறது. அதினால்தான் வேஷமொன்று போடவேண்டியிருக்கிறது. அநேக ஜென்மங்களெடுத்து வெவ்வேறு தேகங்களோடு நாம் வருவதுபோல, நாடகன் நானாவித வேஷங்கள் போட்டுக்கொள்ளுகிறான். இவனிடத்தில் சாதாரண மனிதனென்பதொன்று, நடன் என்பதொன்று. இந்த இரண்டு வாழ்க்கைகளும் எப்போதும் கலந்து நிற்கின்றன. உண்மையிலுள்ள தனது மனிதவாழ்க்கைக்கு பயன்படுவதற்காகத்தான் நாடக வேஷத்தைச் சரிவர நடித்துக் காட்ட விரும்புகிறான். அதுபோலவே, நாமும் சூக்ஷமமாக நமக்குள்ளே நிற்கும் நம் சொந்தவாழ்க்கையை முன்னிட்டும், இன்னும் அந்த உண்மைவாழ்க்கையின் சிறுபாகம் இந்த தூலவாழ்க்கையில் இருப்பதாலும், இதை சரிவர நடத்திக்கொள்ளவேண்டும். இந்த விஷயம் நமது புத்திக்கு நன்றாகப் புலப்பட்டுவிட்டால் இந்த வெளி வாழ்க்கையின் சாரமெல்லாம, எதிலடங்கியிருக்கிறதெனபது தெரிந்துவிடும். நமது நாடகப் பகுதியை—அது எதப் பகுதியானாலு மாகட்டும்—அதை நனறாய் நடிப்பதில் தான், இந்த வெளிவாழ்க்கையின் பிரயோஜன மிருக்கின்றது. எந்த பகுதி நமக்கு கிடைத்தது? இந்த பாவனை நாடகத்தில் என்ன நமக்கு நேரிடுகிறது? என்ற இவைகளெல்லாம் அமுக்கிய மானவை. ஒரு வேஷக்காரன அதிக கஷ்டங்களையும் ஆபத்துக்களையும் அனுபவிப்பதாக நடிப்பதில் அவனுக்கு உண்மையில் அந்த கஷ்டங்களுண்டோ? இல்லையே. உதாரணமாக சண்டையில் உயிர் துறக்கிற வேஷம் ஒருவன் போடுகிறதாக வைத்துக்கொள்ளுவோம். இந்த மரணத்தால் அவனுக்கென்ன பயம்? என்ன கெடுதி? நடன் செய்யவேண்டியதெல்லாம் தனது வேஷத்தை நன்றாய் உண்மையைப் போல நடித்துக் காட்டுவதேயாகும்.

இந்தவிதமாக நம்மைச் சுற்றிலுமுள்ள உலகம் நாடக உலகென்றும், அதிலிருந்து நமக்குவரும் அனுபவங்கள் எதுவானாலுஞ் சரி

முக்கியமல்லவென்றும் தெரிந்துக்கொள்வது கஷ்டமாக விருக்கப் படாது. நமக்கு நேரிடுபவையெல்லாம் நமது பூர்வ கர்மபலன். வெகு காலமாகவே, முன் ஜென்மங்கள் பலவற்றில் இவைகளின் காரணங்கள் ஏற்பட்டுவிட்டன. அவற்றை இப்போது மாற்றமுடியாது. ஆகையால் சம்பவிப்பவைகளைப் பற்றி வருத்தப்படுவதில் என்ன பிரயோஜனம்? அவைகள் முற்பகல் செய்ததின் பிற்பகல் விளைவாக விருக்கின்றனவே யன்றி வேறல்ல. ஆகையால் மனச் சமாதானத்துடன் அவைகளைச் சகித்துக்கொள்ள வேண்டும். அநேகர் வினைப்பயனை அனுபவிப்பதில் வகை தெரியாதவர்களா யிருப்பதால், கஷ்டம், உபத்திரவம், வியாகுலம், இவைகளைத் தாங் களே தங்களுக்கு உண்டாக்கிக் கொள்ளுகின்றார்கள். மலரிலிருக் கும் தேனை மாத்திரம் உண்டுவிட்டு, புஷ்பத்தினின்றும் விலகி விடும் தேனீயைப்போல, இவைகளால் கற்றுக்கொள்ள வேண்டிய ஒழுக்கங்களைக் கற்றபிறகு அவற்றை மனதிலிருந்து நீக்கிவிடுதலே சரியான உபாயம். கர்ம பலன்களை இப்போது நாம் அனுபவிக்கும் விதத்தினாலேதான் பின்காலத்தில் நமது குணம் விருத்தியாகிக் கொண்டு வருகிறது. இதுதான் முக்கியமான விஷயம். கர்மானு பவத்தின் மூலமாக, தைரியம், பொறுமை, முதலிய வேறு அநேக நற்குணங்களை நம்மிடத்தில் விருத்தியாக்கிக்கொண்டு, பிறகு அதை மனதைவிட்டு ஒழிக்கவேண்டும்.

இவ்வித நோக்கம் நமக்கேற்படுவது கஷ்டமே. ஏனெனில், ஆட்டத்தையே அதாவது இந்த உலகவாழ்க்கை யொன்றையே நித்தியமென்று நிச்சயித்திருப்பவர்கள் ஆயிரக்கணக்காய் நம்மைச் சூழ்ந்திருக்கின்றார்கள். அவர்கள் சொல்லுவதும் செய்வதும் நமக்கு சற்று இடையூறாகவே யிருக்கின்றது. எனினும் நமக்கு நமது மார்க் கத்தில் பெரிய தடையாக இருப்பது ஊரார் அபிப்பிராயம் என்னும் பெரியதோர் பாராங்கல். இது இடைவிடாமல் நமக்குத் தெரியாம லே நம்மை அமிழ்த்திக் கொண்டிருக்கிறது. இதன் அளவு சொல்ல முடியாது. உலகத்தில் உண்மை தெரிந்தவன் ஒருவனென்றால், அவனைச் சுற்றி, அறியா மாந்தர்கள் எத்தனையோ ஆயிரக்கணக்காக இருக்கின்றனர். இவர்களுடைய நோக்கமோ "வீடுவாசல், பொருள், இவைகளைச் சீக்கிரம் சேகரித்து வைக்கவேண்டும். நம்மை மற்ற

வர்கள் மதிக்கும்படியாகவைத்துக்கொள்ளவேண்டும். இது தான், உலகத்தில் முக்கியம்" என்பதே.

இப்படியே, அதிகாரம், கீர்த்தி இவைகளைப் பெறவும், இராஜ விருந்துகளுக்கும் இராஜ கச்சேரி, கேளிக்கைகளுக்கும் போகும் படியான பெருமை கிடைக்கவும், தன் வீட்டிற்கு பிரபு முதலிய பிரதானிகள் வரும்படியான மரியாதையடையவும், இவைபோன்ற ஆசைகளையுடையவர்களின் மனதிலிருந்து பொங்கி வெளிவரும் எண்ணங்கள் மேகம்போல நம்மைக் கவிந்துக் கொண்டிருக்கின்றன. இதுபோலவே மத விஷயங்களிலும் மதிமயக்கமென்கிற பெருங் கடல் நம்மைச் சுற்றிலும் மோதிக்கொண்டிருக்கின்றது. ஏனெனில் பெருந்தன்மையான எண்ணமுடையவர்கள் சிலரே. அவ் வெண்ணமில்லாதவர்கள் கோடிக்கணக்காக விருக்கிறார்கள். இன் னும் தேசாசாரங்களிலும் இதுபோன்ற விபரீத எண்ணங்கள் நிறைந் திருக்கின்றன. உதாரணமாக இங்கிலாந்தில் போலிநாணமுடைய வர்கள் ஆண் பெண் பாலைப்பற்றிய விஷயத்தை சம்பாஷிப்பது தோஷமென்று எண்ணுகிறார்கள். இப்படி இருப்பதால் சிறுவர்கள் இவ்விஷயத்தில் கொஞ்சமேனும் தெளிவில்லாதவர்களாய் வழிதப்பி எதிர்பாராத விபத்துக்களில் விழுந்து போகிறார்கள். ஏனெனில் காமமயக்கம் எனபது ஆறுபோல் சதா ஓடிக்கொண்டிருக்கிறது. இதில் அறிவீனத்தால் விழுந்து அடித்துக்கொண்டு போதல் வெகு சுலபம். கிரீக் உரோமன தேசத்தின் பழைய நாகரீக நாட்களில் இருந்த மரியாதை வழக்கங்களை அசங்கியமானவைகள் என்று சொல்லுகிறார்கள். ஆனால் அக்காலத்திலிருந்தவைகளை ஞாபகப் படுத்திக்கொண்டு இப்போது ஐரோப்பா கண்டத்திலுள்ள ஆபாசங் களை பார்த்தால் அவைகள் குறைவாயிருந்தனவென்று சொல்ல வேண்டியிருக்கிறது.

பிரபஞ்ச விஷயங்களின் பரமார்த்தத்தைக் கொஞ்சம் அதிக மாய் அறிந்திருக்கும் நாம் மற்றவர்களைப் போல இராமல், ஊரார் அபிப்பிராய முதலிய இப்பெருங் காற்றுகளுக்கு எதிர்த்து நிற்க வேண்டும் "இது அப்படியல்ல. இவையெல்லாம பொய், மயக்கு, அநித்தியம்.நாமோ அநித்தியத்தினின்றும் நித்தியத்திற்கு வழிகாட்

டும் என்றல்லவோ பிரார்த்திக்கிறோம்,'' என்று சொல்லிக்கொள்ள வேண்டும். உண்மையாயுள்ளது உள்ளே அந்தரங்கமாயிருக்கும் வாழ்க்கை, அது நித்தியமானது, கடவுளோடு கலந்து நிற்பது. என்ற இவ்வெண்ணம் எப்பொழுதும் நம் மனதை விட்டகலாமல், வெளியிலுள்ளவை பரமார்த்திகத்தில் முக்கியமானவையல்ல வென்று நிச்சயித்து, அதற்குத் தக்கபடி வாழ்வதென்றால் கஷ்டந்தான். ஆனால் அப்படித் தான் நாம் நடந்துகொள்ளவேண் டியிருக்கிறது. நமது "மாஸ்டர்"களில் ஒருவர் சொல்லுகிறார். "எங்கள் பின்னால் வரவேண்டுமென ஆசிக்கிறவன் உங்களுலகை விட்டு எங்களுலகில் வந்தாகவேண்டும்" என்பதாக. இதன் அர்த்த மென்ன? நமது குடும்பவாழ்க்கையை விட்டு தவசியாகத் தனியே யிருக்க வேண்டுமென்பதா? அல்ல அல்ல. இந்த உலகநாடகமாகிற அதிசயத்தில் நமக்கேற்பட்டிருக்கும் கடமைகளையெல்லாம் மனக் களிப்புடன் முன்னிலும் பன்மடங்கு நன்றாய்ச் செய்து முடிக்க வேண்டுமென்ற அர்த்தமும் அடங்கியிருக்கிறது. அன்றியும் நமது சாதாரண நோக்கத்தைவிட்டு விடவேண்டும். நமது பெரியார்களு டைய நோக்கத்தைத் தெரிந்து அதையே நாமும் கொள்ளவேண் டும், என்பதே மேற்சொன்ன திருவாக்கின் உள்ளர்த்தமாகும்.

இந்த நன்முயற்சியில் உழைத்து வருபவர்கள் ஒருநாள் மாஸ் டர்களில் யாராவதொருவரால், சிஷ்யராக ஏற்றுக்கொள்ளப்படு வார்கள். அப்போது அவனுடைய மனது குருநாதர் மனதின் ஓர் பாகமாக ஆகிவிடும். உலக நோக்கால் என்றும் கலங்காமலிருக்கும் குருநாதனுடையஎண்ணத்தோடு, தனதெண்ணத்தைசிஷ்யனானவன் உரைபோட்டுப் பார்க்கலாம். அதல்லாமல் ஒரு விஷயத்தைப்பற்றி குருநாதனுடைய நோக்கமென்ன? என்பதையும் நன்றாய்த் தெரிந்து கொள்ளலாம். இந்தவிதமாகத் தெரிந்துகொண்டு அதன்படி நடந்து வருகிற பழக்கமேற்பட்டு விட்டால் குருநாதனுடைய மனோ நிலையைக் கண்டுபிடிப்பது சுலபமான காரியமாய் விடும். ஆனால் இந்தவித அப்பியாச ஆரம்பத்தில் சில எதிர்பாராத சங்கடங்க ளேற்படக்கூடும். அப்படியே, முன்னம் நமக்கு விசேஷ பெருங் காரியங்களாக இருந்தவைகள், இப்போது விசேஷமென்பதில்லா

தவைகளாகிவிடும். முன்னம் ஏறெடுத்துப் பாராமல் நாம் அலக்ஷிய மாக விட்டுவிட்ட மற்றுஞ் சில காரியங்கள், இப்போது முக்கிய மானவைகளாக விருக்கும். இதன் காரணம் பெரிதோ சிறிதோ எப்படியாலுைம், எந்தவகையிலாவது நாம் பிறருக்குப் பிரயோசனப் படக்கூடிய வழியாக விருக்கும். பிறருக்கு பிரயோசனப்படும் படி நம்மை செய்விக்கக்கூடியது எதுவானாலும் அது முக்கியமா னதே. ஏனென்றால் அந்த விஷயத்தில்தான், பிறருக்கு உப யோகமாக விருத்தல் என்பதில்தான், மெய்ப்பொருளை நாம் ஸ்பரி சிக்கினறோம்.

சுற்றிலுமுள்ள மனோலோகத்திலிருந்தும் காமலோகத்திலிருந் தும் நமது மனதை மோதுகின்றவைகள், உயர்நிலையிலிருந்து வரு பவைகளல்ல. ஆனதால் அவைகளுக்கு நாம் காது கொடுக்கப் படாது. உயர்நிலையிலிருந்து வரும் சப்தத்திற்கே, குருநாதனு டைய திருவாக்கு திருக்குறிப்புக்கே செவி சாய்க்கவேண்டும். இதனால்தான முற்காலங்களில், இந்தியாவிலும் இதர தேசங்களி லும் நிவர்த்திமார்க்கத்தில் வாழவேணுமென்று முயற்சிகொண்டவர்க ளெல்லாம், முதலில் சாமானிய உலக வாழ்க்கையைவிட்டு நீங்கி, விலகிப்போய், குகையோ, காடோ, இவைகளில் தனியே வசித்து வாதிருந்தார்கள்; இந்த உபாயத்தாலே அவர்களுக்கு பாமர உல கினருடைய அபிப்பிராயமெனும் பெரும் பாரம் நீங்கிற்று. நீங்கவே தங்களிஷ்டப்படி நோவழியிலே தடையின்றிச் செல்லுவதற்கு அதிசுலபமாக விருந்தது. அநேக கிறிஸ்த்துவ பெரியார்களுங்கூட உலக விவகாரங்களினின்றும் நீங்கி தவசிகளாகவும் சன்னியாசிக ளாகவும் ஆகியோ அல்லது தங்களைப்போன்ற நோக்க முடையவர்க ளோடு சேர்ந்தோ வாழ்ந்து வந்தார்கள்.

இப்படி உலகத்தைவிட்டு விலகித் தனியே வசிப்பதின் பலன் குருநாதன் அல்லது அவருடைய முக்கிய சீடர்களில் யாராவதொரு வர், இவர்களருகில் வசிக்க நேர்ந்தால், இன்னும் அதிகப்படும். இந்தப் பெரியார்களைச் சுற்றிலும் பரவிநிற்கும் தேஜஸ் (Aura) சீஷனுடைய பல கோசங்களையும் மோதி, அவைகளைச் சீர்படுத்தி, தகுதியற்ற அணுக்களை வெளிப்படுத்தி விலக்கி, வேண்டிய நல்ல

வீரத்தன்மை. பெரியதோர் காரியம். அப்படி உயிர்துறப்பவர், தான் அரும் பெரும் முயற்சி செய்வதாக மனதில் உணர்வதால், அந்த உணர்ச்சியானது அவருக்கு கைலாகு கொடுத்துத் தூக்கி, கஷ்ட நிஷ்டூரங்களைக் கவனிக்காமலிருக்கும் தன்மையை உண்டு பண்ணிவிடுகிறது. அந்தச் சமயத்தில் அந்தப் பெருங் காரியத்தைச் செய்து முடிக்க வீராவேசம் ஒன்று உண்டாகிறது. நாமிப்போது இங்கே சொல்லுகிறது அப்படியல்ல. அதைவிட மிகக் கடினமான வேலை. நமக்குச் சதா வந்துகொண்டே யிருக்கும் பிரதி தின இடையூறு, இக்கட்டுகளின் மத்தியில், முன் குறிப்பிட்ட வீரத் தன்மையுடனிருந்து வருவதென்றால் அசாத்தியந்தான். செய்ய வேண்டியதாகவிருக்கும் காரியங்களைச் செய்யாமல், நமக்குச் சலிப்பையே யுண்டு பண்ணிவரும் மனிதர்களோடு தினம் விவகாரங்கள் வைத்துக்கொண்டு, ஒரே மாதிரியாக மனமானது நடுநிலையோடிருக்க வேண்டுமென்றால், அதிக கஷ்டந்தான். சொற்ப விஷயங்களிலெல்லாம் பகவானுக்காக வாழ்ந்து வருவது கடினமே. இந்த விஷயங்கள் அற்பமாகத் தோனறுகிறபடியால் முத்திமார்க்கத்திலே நடப்பதும் மெத்தக் கஷ்டமாக விருக்கின்றது.

ஆகவே, இந்த சாதன சதுஷ்டயமென்னும் நூலை ஆரம்பித்து அதிற் சொல்லியிருக்கும் போதனைகளைப் பின்பற்றி, எவ்வளவு தூரம் அவைகளை அனுஷ்டானத்திற்கு கொண்டு வரலாமென்று பார்ப்போம். அநேகர் அனுஷ்டித்து முத்தி மார்க்கத்தையும் அடைந்துவிட்டார்களென்றால் ஏன் நாமும் அப்படியே செய்து பெறப்படாது? பெறவேணுமானால் நம்மை நாம் செயித்தல் வேண்டும். அதாவது நம்மை நாமே நன்றாக விசாரித்துப் பார்த்து, நமது விஷயங்களை விவரமாகத் தெரிந்து கொண்டு, நம் மனதில் முட்செடிகளிருந்தால் பிடுங்கி எறியவேண்டும். எவ்வளவு ஆழம் வேரூன்றியிருந்தாலும், பிடுங்குவதால் கஷ்டமெவ்வளவு ஏற்பட்டாலும், அதைப் பார்க்காமல் பிடுங்கி எறியவே வேண்டும். அப்பா! மெத்த கஷ்டமான வேலைதான். ஆனால் நமக்கு முன்னே, இந்த வழியாக, மேல் நிலைகளில் போய் நிற்கின்றவர்கள் சொல்லுவதாவது "பின்னடையாதே, கொஞ்

சமோ அதிகமோ, ஒரே தடவையோ அல்லது பல தடவைக ளிலோ, இதற்காக எம்முயற்சி செய்தாலும் வீண் போவதில்லை. பலன் இருக்கிறது. அதிக பலன் இருக்கிறது'' என்பதே.



# 2-வது அத்தியாயம்

## ஞானதீக்ஷையும் அதையணுகும் விதமும்.

C. W. L:—இந்நூலுக்கு ஆங்கிலத்தில் குறிப்பிட்டு எடுத்துக் கொடுத்த முப்பது நாற்பது பெயர்களிலிருந்து "AT THE FEET OF THE MASTER" எனும் பெயரை பொருத்தமானதென்று நமது பிரசிடெண்ட் பொறுக்கி எடுத்தார்.

"திருக்கதவைத் தட்டுவோர்க்கு"

என்று இதை அர்ப்பணஞ் செய்ததும் அவரே. இது 'தட்டுங்கள் உங்களுக்கு திறக்கப்படும்; தேடுங்கள் நீங்கள் காண்பீர்கள்" என்கிற குறிப்பை விளக்குகிறது. டாக்டர் பெசண்டு அம்மையார் நூன முகத்தில்:—

> "உண்மையில் தேகம் இளமையா யிருப்பினும், ஆன்ம வழியில் தேறின ஒரு இளைய சகோதரர் முதன்முதல் எழுதிய இச்சிறு புத்தகத்திற்கு முகவுரை எழுதவுரிமை முதியவளான எனக்கு கொடுக்கப்பட்டிருக்கின்றது."

என்று கூறுகிறார்

இதில் கவனிக்கவேண்டிய முக்கிய விஷயமொன்று இருக்கின்றது. அதாவது, சாதாரண வாழ்க்கையில் நாம் இப்பூவுலகைப் பற்றியும் இந்த ஜனமம் ஒன்றைப்பற்றியுமே கவனித்து ஒருவனுடைய வயதை இப்போதுள்ள தேகத்தைக்கொண்டு நிர்ணயிக்கின்றோம். ஆனால் குப்த அபிவிருத்தியில் உள்ளிருக்கும் ஆனமாவின் பக்குவ நிலையைக்கொண்டு அதன் வயதைச்சொல்லுகிறோம். இப்பூவுலகில் சாமானியர்கள் செய்வதுபோல் நாம் வெளிக்குறிகளால் மாத்திரம் ஒருவரைப்பற்றி தீர்மானிக்கக்கூடாது. ஏனெனில் ஆன்மவளர்ச்சியொன்று இருக்கின்றது. அது இடைவிடாமல் நடைபெற்று வருகிறது. அதிக அபிவிருத்தியடைந்த ஆன்மாவொன்று அத

னுடைய தேகம் சிறுவயதா யிருக்கும்போதே புத்தி கூர்மையை யும், மனக்கிளர்ச்சியையும், சித்தி பலத்தையும் வெளிப்படுத்து கிறதைக் காணலாம். இம்மாதிரியான நிலையை ஆசிரியரான "ஆல்கி யூனி" விளக்கினுரென்பது அவருடைய அதிதீவிர பயிற்சியினுல் தெரிய வருகின்றது. தனக்குக்கிடைத்த உபதேசத்தை வரை தவருமல் திருப்திகரமாய் அப்பியாசித்ததால் அநேக வருஷங்களில் பெறக் கூடிய விருத்தியை சிலமாதங்களில் பெற்ருர். இப்படி வருவதென்ருல் மனிதனுடைய சாமானிய சுபாவகுணத்தை முழுதும் அடியோடே மாற்றவேண்டியிருக்கிறது.

ஜகத்குரு எழுந்தருளும் தருணம் சமீபித்திருப்பதால் இந்நாளில் இவ்விதமான பிறப்புகள் மெத்த அதிகரிக்கும். அவருடைய பிரதான சிஷ்யர்களாக வரப்பட்டவர்கள் யௌவன வயதாயும் பல சாலிகளாயு மிருப்பார்கள்; வெகுவாய் அவர் எடுக்கும் தூலதேக வயதிற்கு மேல்படாதவர்களாக இருப்பார்கள். அவர் அதிசீக்கிரத் தில் வருகின்றபடியால் சீடராகி வருகிறவர்கள் இப்போது வாலிப ராய் இருக்கவேண்டும். நம்மிடையில் குழந்தைகளாக இப்போது இருக்கிறவர்களில் சிலர் இனிமேல் நடைபெறவேண்டிய திருத் தொண்டுகளிற் சிறந்தவர்களாக வரக்கூடும். இக்காரணத்தைக் கொண்டு இவ்வித நல்ல பாக்கியம் பெற்றவர்களில் அநேகர் அதற்கு வேண்டிய கல்வி பயிற்சி பெறும்படியான இடங்களில் - அதாவது - திவ்வியஞான சபையார் குடும்பங்களில் பிறந்து வரக்கூடும்.

ஆகையால் இம்மாதிரியான சம்பவங்களை நாம் விழிப்புடன் எதிர்பார்க்க வேண்டும்; நமது பார்வையின் கீழ்வரும் பிள்ளைகள் யாராயினும் அவர்களுக்கு ஜகத்குருவின வருகையைப்பற்றி காதில் விழும்படி செய்யவேண்டும். அவர்களுக்கு கிடைக்கக்கூடிய பாக்கி யத்தை அவர்கள் தெரிந்துகொள்ளும் வகையில் சொல்லவேண்டும். குறைந்த பட்சம் நாம் அவர்களுக்கு சந்தர்ப்பத்தை கூட்டிகொடுக்க வேண்டும். அதை அவர்களாகவே கைப்பற்ற விடவேண்டும் "இவ் விஷயங்களை யான் சிறியவனுக விருக்கும்போது சொல்லியிருக்க லாகாதா, சொல்லியிருந்தால் சந்தர்ப்பத்தை கைப்பற்றியிருப் பேனே; இவைகளைப்பற்றி ஒன்றுமே காதில் போடாமல் என்னை

உலகவாழ்க்கையில் வளர்ந்து வரும்படி விட்டுவிட்டீர்களே; கைப்பற்றக்கூடிய நல்ல சமயத்தை இழந்தேனே" என்று நமது பிள்ளைகள் நம்மைப்பார்த்து பிற்காலத்தில் குறை சொன்னால் மிக பரிதாபமாகவிருக்கும். நல்ல சமயம் இதோவென்பதாக காட்டுவது நமது கடமை. அதோடு நமது வேலை தீர்ந்துவிடுகிறது; ஏனெனில் எவரையும் இவ்வழியாகப் போவென்று வற்புறுத்துவதும் அல்லது முன்னுக்குவேண்டிய ஒரு உபாயத்தை 'பிளானை' வெகுவாய்ப் பக்குவ விசேஷர்களான இவர்களுக்கு, சொல்லி, அவ்வாறு நடக்கும்படி இவர்களை எதிர்பார்ப்பதுவும் நம்மைப் பொருத்ததல்ல.

> "இதில் அடங்கிய போதனைகள் அவரை
> தீக்ஷைக்கு பக்குவமாக்கிக் கொண்டிருந்த
> சமயத்தில் அவருடைய * மாஸ்டர் அவர்கள்
> அவருக்கு அருளிச் செய்தவைகளாகும்."

தீக்ஷை (Initiation) என்கிற பதம் ஆங்கிலத்தில் வெகு சாதாரண வகையில் அநேகமாய் உபயோகிக்கப்பட்டு வந்திருக்கின்றது. இருந்தாலும் இங்கு அதற்கு சாஸ்திரக்கருத்தொன்று கண்டிதமாய் இருக்கின்றது. நமது சபையாரம்ப நாளில் 'பிளவட்ஸ்கி' அம்மையாரும் இதை திருத்தமில்லாத வகையில் உபயோகித்து வந்தனர். ஆனாலிப்போது நமது வார்த்தைகளெல்லாம் கருத்துகளை சரியாக விளக்கும்படி அமைக்கப்பட்டு வந்திருத்தலால் இப்பதத்தை மஹாதீக்ஷைகளுக்கே - அதாவது முத்திமார்க்கத்திற்குரிய ஐந்து படிகளுக்கு மட்டுமே உபயோகிக்கவேண்டியது. மனிதனுடைய ஆன்ம விருத்திக்குரிய பரிபக்குவ நிலைகளை, அதிகாரி மார்க்கம், (Probationary Path) முத்திமார்க்கம் (Path Proper) உத்தியோக பருவம் (Official Period) என மூன்றாக பழயநூல்களில் சொல்லி இருந்தோம். அதிகாரி மார்க்கமென்பது தீக்ஷைக்கு சோதித்து திருத்தப்பட்டு வரும் பருவம்; முத்திமார்க்கம் (உண்மையான மார்க்கம்) என்பது முதல்தீக்ஷை துடங்கி, அதாவது ஒருவன் அருள் வாரியில் இறங்குவது துடங்கி, ஜீவன் முக்தி நிலையில் முடிவாகிறது. நாற்பது வருடங்களுக்குமுன் திவயஞான சபையில் சேருவதையும் தீக்ஷை

* மாஸ்டர் = ஞானசத்குரு,

என்று சொல்லுவது வழக்கம்; மெஸானிக் (Masonic) முதலிய இதர கிருஸ்திய சபைகளிலும் இப்பதத்தை உபயோகப்படுத்துவதுண்டு; இவ்விதக் கருத்துகளை குப்தமார்க்கத்துள்ள மஹாதீக்ஷைகளோடு கலந்து குழப்பிவிடக் கூடாது.

அதிகாரி மார்க்கத்திலிருக்கும் பருவத்தை நான்கு நிலைகளாக பிரித்து இந்நூலில்சொல்லி இருக்கிற பகுத்தறிவு, நிராசை, நல்லொழுக்கம், அன்பு எனும் நான்கு சாதனங்களோடு சேர்த்து முன்னர் சொல்வதுண்டு.

இந்தபாகங்களை நிலைகள் என்றாவது அல்லது இவைகளுக்கிடையில் தீக்ஷைகள் என்றாவது சொல்லுவது பிசகு. இச்சாதனங்களை எழுதியிருக்கும் கிரமவரிசைப்படி எடுத்து அனுஷ்டிக்கவேண்டியதென்பதல்ல. அவைகள் கீழ்நாட்டு சாஸ்திரங்களிற் சொல்லிய வரிசையின்படி எழுதப்பட்டிருக்கின்றன; என்றாலும் அவைகளையெல்லாம் நாம் ஏககாலத்தில் பெற பெரும்பாலும் கருத்தாயிருக்கின்றோம். கூடியமட்டில் எல்லாவற்றையும் கையாளுகிறோம். நம்மில் சிலருக்கு யாதோ ஒரு சாதனம் மற்றவைகளைவிட சுலபமாய் இருக்கக்கூடும்.

மார்க்கத்தில் செல்ல நிச்சயிப்பதற்கு பகுத்தறிவு பலம்கொடுப்பதால் இதுமுதல் ஸ்தானத்தை பெற்றிருக்கிறது. பௌத்தர்கள் இதை "மனோதுவாரவஜ்ஜன" "மனக்கதவு திறத்தல்" என்கிறார்கள். "பரமார்த்த விஷயங்கள் நித்தியமென்றும், சாதாரண உலகவாழ்க்கையெல்லாம் வெறும் போக்கென்றும் பார்க்க முதன்முதல் மனக்கண் திறக்கப்பட்டது" என்று இதற்கு அருத்தம். இந்துக்கள் இதை விவேகம்அதாவது பகுத்தறிவு, என்கிறார்கள். கிருஸ்தவர்கள் இவ்வுற்றுணர்வை "கன்வர்ஷன" மனம் திரும்புதல் என்று சொல்லுகிறார்கள். இதுவும் நன்றாய் விளக்குகிற வார்த்தை; ஏனெனில் "கன்வர்ஷன்:" என்றால் "திருமபி ஒன்றாய் கூடிவருவது" என்று அருத்தம்.

கடவுளுடைய திருவுள்ளத்தைப்பற்றி சிந்தையில்லாமலேதன்னிஷ்டப்படி போய்க்கொண்டிருந்தவன், அவருடைய திருவுள்ளம் பிரபஞ்சத்தை நடத்துகின்ற விதத்தை இப்போது உற்

றுணர்ந்துகொண்டு, அதற்குஒத்துநடக்கத் தன்னைத்திருப்பிக்கொண்டான் என்று இதற்கு அருத்தம். கிருஸ்து மதத்திலுள்ள அநேக உட்பிரிவுகளில், இதை எப்போதாவதுவரும் ஒருவகையான பாவச ஆவேசக்கிளர்ச்சி எனக்கருதி தாழ்த்திவிடப்பட்டிருக்கிறது.ஆனால் இதிலும் திருவுள்ளத்திற்கு இசைந்து திரும்பி அதனோடுபோவது எனகிற கருத்திருக்கின்றது. "உங்கள் பிரியத்தை உலகவிஷயங்களில் வைக்காது உயர்ந்த விஷயங்களில் நாட்டுங்கள்" என்று ஒரு "அபாஸ்டல்" (Apostle) சொன்ன வார்த்தைகளை ஒத்திருக்கிறது.

முத்தி மார்க்கத்தில் படிகளிருப்பது போலவே தீக்ஷைக்கு சித்தப்படுத்தும்குருநாதன் கையின்கீழ் சிஷியன இருக்கும்போதுள்ள குருசிஷிய சம்மந்தத்திலும் திட்டமான இதரபடிகள் இருக்கின்றன. தீக்ஷைகள் வெள்ளியம்பலத் திருச்சபையாரால், தீக்ஷைக்கு ஏகாதிபதியாகிய இறைவனது பெயரை முன்வைத்தும், அவருடைய ஆக்கினையைக்கொண்டும், கொடுக்கப்படுகின்றன. குருநாதனோடு அடுத்திருக்கும் சிஷியனுடைய சம்மந்தம் வேறு. ஒருவன் முதலாவது சோதிக்கப்பட்டுவரும் சீடனாகவும், இரண்டாவது ஏற்றுக்கொள்ளப்பட்ட அடியானாகவும், மூன்றுவது குருநாதனோடு முற்றும் ஐக்கியப்பட்ட சேயனாகவும், இருக்கும்படிகள் மூன்று இருக்கின்றன. இவைகள் பிரத்தியேகமாயுள்ள குருசிஷிய பரஸ்பர சம்பந்தங்கள். இவைகளை வெள்ளியம்பல மகா சபையாரால் கொடுக்கப்படும் தீக்ஷைகளோடு கலக்கக்கூடாது.

மானிடனை வெள்ளியம்பலம் எனும் சகோதரத்வ மகாசங்கத்தில் "The Great White Brotherhood" ஒரு அங்கத்தினராக சேர்ப்பிக்கின்றபடியே முதல் தீக்ஷையாகும். இதற்குமுன் அவன் முமூட்சு; உண்மையில் முத்திமார்க்கத்தில் எவ்வகையிலும் நுழைந்தவனல்லன்; அதற்காக தன்னை சித்தப்படுத்திக்கொண்டிருந்தவன். தீக்ஷையை அறமுறையின்றி கொடுத்து விடுவதல்ல; ஆனால் விகாச முறையில் ஒருவன் குறிப்பிட்ட ஓர் பக்குவநிலையை யடைந்திருக்கிறன் என்பதைக் கண்டு கொடுப்பது. அதாவது "கீழ்நானும் (Lower self-Personality) மேல்நானும் (Higher-Self—Individulity) ஒன்று சேர்வது - தேகான்மாவும் ஜீவான்மாவும் ஒருமைப்படுவ

தென்று வழக்கமாய் சொல்லுவது. இந்த முதல் தீக்ஷையைப்பெற வேண்டி முன்வரும் சிஷ்யனானவன இந்நூலில் சொல்லியிருக்கும் சாதன ஒழுக்கங்களைப் பெற்று வருவதுடன தன்னுடைய தேகான்மாவை, ஜீவான்மாவின் கருத்துகளை விளக்கிக்காட்டும் கருவியாகச் செய்ய வேண்டும். அதாவது ஜென்மமெடுத்துவரும் ஜீவான்மாவினுடைய நோக்கங்களுக்கு (எதிரிடை) தடங்கலாக தன்னரசு செய்யவோ, தனக்கென ஆசைகளைக் கொள்ளவோ ஒரு தேகான்மா என்பது இல்லாதிருக்க வேண்டும்.

அப்போது சீடனுடைய கோசங்களில் உண்டாகும் மாற்றத்தை "திருசியா திருசிய மனிதன்" ("Man Visible & Invisible") எனகிற புத்தகத்திலுள்ள படங்களில் காட்டியிருக்கின்றது. காட்டுமிருண்டியினுடைய ஆசைமய தேகத்தில் அவனுடைய அநேகவித தாழ்ந்த விகார தாபங்களைக்காட்டும் வர்ணங்கள் நிறைந்திருக்கின்றன. தவிர அதன வெளிவடிவு ஒழுங்கற்று இருக்கிறது; ஏனெனில் அது இன்னும் அவனுடைய ஆளுகைக்குள் அகப்படவில்லை. மனோமய தேகமும், காரணதேகமும் ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாம லிருக்கின்றன. காரணசரீரத்தில் (நற்குணத்தை காட்டும்) வர்ணம் யாதுமில்லை, சூன்யமாக தோன்றுகின்றது; மனோமய தேகத்தில் தேர்ச்சி கிஞ்சித்துதான் காட்டுகிறது. எனினும் ஆசைமய தேகத்தோடு சம்பந்தம் அதிகமில்லை. காட்டுமிருண்டியின் ஆசைமய தேகத்தில் மனதோடு யாதொரு சம்பந்தமில்லாத அநேகவித தாபவிகாரங்கள் இருக்கின்றன. இவன் அவைகளைப் பற்றி நினைப்பதே கிடையாது; எப்படி நினைப்பது என்பதே இவனுக்குத் தெரியாது. அவைகள் அவனுக்குள்ளே வாசஞ்செய்து கொண்டு அவனை வசப்படுத்தி இழுத்துக்கொண்டு ஓடுகின்றன.

பக்குவியானவ னிடத்தில் இந்த தேகங்களெல்லாம் ஒன்றோடொன்று சம்மந்தப்பட்டு நிற்கின்றன. காரணதேகம் சூனியமாயிருப்பதுபோய் இப்போது நிறைவுற் றிருக்கின்றது; உயர்குணங்களை காட்டும் விதவித வர்ணங்கள் அதில் படிந்து வருகின்றன, அன்றியும் உலகினருக்கு உதவிபுரியும் பொருட்டு பல பக்கங்களிலும் "உத்தரீயம்" வீசுவதுபோல் அதுவீச ஆரம்பித்துவிட்

மனோமய தேகத்திலும் அதே வர்ணங்களிருக்கின்றன. எதோ கொஞ்சம் அடர்த்தியாக விருக்கின்றன, என்றாலும் பார்வைக்கு அழகாயிருக்கின்றன. இவைகள் காரணதேகத்தின் அடி அடுக்கின் நிலையை காட்டுகின்றன. இதுபோலவே ஆசைமய தேகமும் மனோமய தேகத்தின் பிரதிபிம்பமாக விருக்கின்றது. இங்கும் அதே வர்ணங்களிருக்கின்றன. ஆனால் கீழ்படிக்கு தக்கவாறு இவைகள் கொஞ்சம் புகையடைந்ததுபோல் ஒளி குறைவாயிருக்கின்றன.

காட்டு மிராண்டியினுடைய தேகான்மா, ஜீவாத்மாவிற்கு சம்மதமில்லாத அநேகவித தாபவிகாரங்களிலெல்லாம் உழன்று வருகின்றது. ஆனால் பக்குவியினிடத்திலோ, அவன் பிரியப்பட்டெடுத்துக்கொண்டவைகளைத் தவிர மற்றதாபங்கள் வருவதில்லை. தாபகுணங்கள் இவனை முன்னும் பின்னும் ஊசலாட்டி காலைவாரிவிட்டு தூக்கிச் செல்வதுபோய், இவனே அவைகளை பார்த்து பொருக்கி எடுக்கின்றான். "அன்பு நல்லது தான், அன்பானது என்னிடத்திலிருக்கட்டும், சம்மதம்; பக்தி நல்ல ஆசைதான், என்னுள்ளே பக்தி புகுவதற்கு சம்மதந்தான்; அனுதாபம் அழகான எழுச்சி, அது எனனிடத்தி லிருக்கட்டும், எனக்கு சம்மதம்;" எனபதாக சொல்லுகிறான். இவ்விதமாய் கண்ணை திறந்தவனாய் கவனத்துடன் செய்கிறான். இந்தப்படி தாபங்கள் மனதின் கைவசப்பட்டு நிற்கின்றன; மனதோ காரணதேகத்தின் கருவியாக நிற்கின்றது. இவ்வகையாக இருந்தால் தேகானமாவும் ஜீவாத்மாவும் முற்றும் ஒருமிக்கின்ற நிலைக்கு மெத்த அணுகிவருகின்றோம்.

மனிதனிடத்தில் இரண்டு தனித்தனி ஆன்மா இருப்பதாக எண்ணிவிடக் கூடாது. தேகான்மாவென்று, தனியாக வொன்று இடையாது. ஆனால் கீழ் கர்மபூமியில் அனுபவங்களை நுகருவதற்காக ஜீவாத்மா தனது மிகச் சிறியதோர் அம்சத்தை தேகேந்திரியங்களுக்குள் செலுத்துகிறது அப்போது கீழ் "நான்" என ஒன்று முளைத்து உயிர்வந்து ஜீவான்மாவைவிட அதிகமாய் மீறிவாழ எத்தனிக்கிறது. ஏனெனில் இங்கு அதற்கு தக்க சலனங்களில் விவகரிக்க இடமிருக்கின்றது. அதனால் முளைத்த தேகான்மா இம்மாதிரி வர்த்தமானத்தி லிருக்கும்போது தான் ஜீவான்மாவைச் சேர்ந்த

வன் என்பதை மறந்து தானே தனக்காக உலக விவகாரங்களை ஏற்படுத்திக்கொண்டு ஜீவான்மாவின் வழியைவிட்டுத்தனதுபோக்கிலே போக எத்தனிக்கின்றது. ஆனால் பல ஜன்மங்கள் எடுத்தெடுத்து ஜீவான்மா பலப்பட்டு வந்ததும் கண்திறந்து இந்த தேகான்மா என்பது ஜன்மாந்திர சுழலிலிருக்கும் தன்னை—ஜீவான்மாவை—விளக்கிக்காட்டும் கருவி என்பதை கவனித்து அது தனக்குகீழ்படிந்துநடவாது மீறிப்போகும்போ தெல்லாம், இது சரியல்ல, இதையடக்க வேண்டும் என்று அறிகிறது. ஆகையால் தேகானமாவானது ஜீவாத்மாவை விளக்கிக் காட்டுவதே தவிர மற்றுயாதும் அதற்கு இல்லாதபடி அதை சீர்படுத்துவது நமது கடமை. இதைத்தான் "ஜீவானமாவிற்கு வாழ்க்கைப்படுதல்" (அடிமைப்படுதல்) என்று ஸ்ரீமான் சின்னட்டு அவர்கள் சொன்னார். "மௌன வாக்கில்" சிஷ்யன தனது "சந்திரவடிவை" அழிக்க வேண்டுமென்று சொல்லியிருக்கிறது. இது ஆசைமய தேகத்தை குறிக்கின்றது. இதன் கருத்து இதை கொலைசெய்ய வேணடுமென்பதல்ல; ஆனால் அத்தேகம் தான எனகிற தனமையில்லாமல் ஜீவான்மாவை விளக்கத் தக்கதாக விருக்கவேண்டும். தனது சொந்த தாபவிகாரங்களை விட்டு ஜீவான்மா பொருக்கி எடுப்பதை மாத்திரம் காட்டவேண்டும் என்பது இதன் அர்த்தம்.

முதல் தீக்ஷைக்கு ஒருவனை குருநாதன் கொண்டுபோய் சபை சமுகத்திலிடுவதற்கு முன்னமே மேற்சொன்ன நிலையை இவன் அடைந்திருக்க வேண்டும். ஸ்தூல ஆசைமய மனோமய தேகங்கள் அடங்கி வசப்பட்டிருக்க வேண்டும். இவவித அதிகாரிநிலைக்கு வருவது சாமானியனுக்கு அபாரமான கஷ்டகாரியம். அநேகர் "அப்பா, இது நம்மால் முடியாது அதைப்பற்றி பேச வேண்டாம்" என்பார்கள். அவர்களுக்கு ஒரே தடவையில் எடுத்துரைக்க இதுபுத்தி கலங்கும்படியான வெகு உயர்வான கருத்தாயிருக்கும். ஆனால் அநேக வருஷங்களாக இவ்விஷயங்களைப்பற்றி விசாரணை செய்துகொண்டும் தியானித்துக்கொண்டு மிருப்பவர்களுக்கு இது அவ்வளவு கடினமான வேண்டுகோளாக விருக்க இடமில்லை. எல்லாவித ஆசைகளையும், விகாரதாபங்களையும் ஒன்றொன்

ருக அடக்கி, ஆசைமய, மனேமய தேகங்களை ஆளுவது உண்மையில் சுலபமல்ல, கஷ்டந்தான்; என்ருலும் அடக்கியாளுவது வெகு சிறந்த பிரயத்தினம். அடையும்பலன், முயற்சிக்கு மேல், அளவில்லாதுவரும் என்பதற்கு சந்தேகமில்லை. ஜகத்குருவிற்கு மிக்க உபயோகப்படத் தக்கவர்களாகலாம், என்கிற எண்ணம் இந்த பிரயாசையான முயற்சிக்கு இன்னும் தைரியமும் ஊக்கமும் தரும். இந்த தீக்ஷைகளைப் பெறுவது தங்கள் சொந்த உபயோகத்திற்காகவல்ல; உலகத்தொல்லையி லிருந்தும் சங்கடத்திலிருந்தும் தான் தப்பிப் போவதற்காகவுமல்ல, பின்னை பிரபஞ்சத்தை திருவுள்ளத்தின் பிளான்படி நடத்தி நிறைவேற்ற உதவி புரிகின்றவர்களாகவே தான்.

ஜீவனுனவன் மகா மன்வந்திரச்சுழலி லிருக்கும்போது உண்டாகும் பல ஜன்மங்களில் ஏற்படும் மாற்றங்கள் எல்லாவற்றைவிட முக்கியமானவை சிலவுள. அவைகளில், விலங்குவர்க்க கர்ப்ப கூட்டைவிட்டு தனியே பிரிந்து மானிட வர்க்கத்தில் புகுவது ஒன்று. அதாவது மிருகமாயிருந்த நிலையைவிட்டு மனதோடு நான் எனும் அகங்கார தத்துவத்தைப் பெற்று ஜீவான்மாவாக தனித்து விவகரிக்க ஆரம்பிப்பது. ஐந்தாவது தீக்ஷைபெற்று முத்தர் நிலையை அடைவது மற்ெருன்று. இது மானிடவர்க்கத்தை கடந்துபோவதை குறிக்கின்றது. ஏனெனில் அப்போது ஒருவன் மானிட வர்க்கத்திற்கு அப்பாலுள்ள மனிதாதீத வர்க்கத்தில் புகுகிருன். இது தான மானிட வர்க்கத்தார் இப்போது அடையவேண்டிய வீடு (முக்தி), நாம் எல்லோரும் இப்பூமண்டலத்தில் கண்முன் வைத்திருக்க வேண்டிய குறிப்பு இதுதான். மானிடவர்க்கத்திற்காக ஏற்பட்டிருக்கும் முறையின்படி நடந்து வருபவரும், தனக்காக ஏற்பட்ட தருமநீதி ஒழுக்கத்தை தன்னுல் கூடியவரையில் ஒழுகிவருபவரும், இப்பூமண்டல முடிவில் மானிடவர்க்கத்தை கடந்து போவார்கள். நம்மில் அநேகர் அது முடிவதற்கு வெகுமுந்தியே போகக்கூடும்.

(மானிட வர்க்கத்தில் வந்து புகுதல் பிறகு அதை தாண்டிப் போதல்) இவ்விரண்டு படிகளுக்கு இடையில் வெகு முக்கியமான படியொன்று இருக்கிறது. அதாவது முதலாவதான மகாதீக்ஷை,

"திட்டமாய் அருள் வாரியில் இறங்குதல்". சிஷ்யனை "சகோதரபாவ சங்கத்தில்" சேர்த்துக் கொள்ளும்போது சபைத்தலைவர் சொல்லும் வார்த்தைகளில் "நீ இனிமேலென்றைக்கும் க்ஷேமமாய் இருப்பாய். பரமார்த்த வாரிதியில் இறங்கிவிட்டாய், சீக்கிரம் அக்கரை சேருவாயாக" எனும் வசனம் இருக்கின்றது. (கைவல்லியத்தில் முதல் பூமி கைவந்தால் முத்தியும் கைவந்ததாமே என்று இதையே கூறி இருக்கின்றது). கிருஸ்தவன் இவனை இரக்ஷிக்கப் பட்டவன், க்ஷேமமடைந்தவன், என்று சொல்லுகிறான். அதாவது இந்த மன்வந்தரத்திலேயே விகாசமுறையில் மேல் நோக்கிப்போக திடமுள்ளவன் என்றும், மறு உபமன்வந்தரசுற்றில் பக்குவமுள்ளவரை பொருக்கி எடுக்கும் நாளாகிய (Judgment day) "ஜட்ஜிமெண்ட்டு டேயில்" பள்ளிக்கூடத்தில் தம் வகுப்பினர்களோடு மேல் வகுப்பிற்குபோக பக்குவமில்லாத சிறுவர்கள் தள்ளப்படுவது போல் தள்ளப்படமாட்டான என்பதும் இதன் கருத்து.

முதல் தீக்ஷையைப் பெற்றவன ஐந்தாவது தீக்ஷையாகிய முத்தர் நிலையை யடைவதற்குமுன் இடையில் இரண்டாவது, மூன்றாவது, நான்காவது தீக்ஷைகளைப் பெறவேண்டி யிருக்கிறது. ஆனால் அந்நிலையை யடையுங்காலத்தில், முன் தேகான்மா ஜீவான்மாவுடன சேர்ப்பித்ததுபோல் இப்போது ஜீவான்மாவை பிரத்தியேகான்மா (Monad) வுடன் ஒன்று சேர்ப்பிக்கின்றோம். கீழ்நானும் மேல்நானும் ஐகியமான தனமையை ஒருவன் பெற்றபோது அவனதுகீழ் நானாகிய தேகான்மா மேல் "நான்" உடைய கருத்தை வெளிப்படுத்தி விவகரிக்கும் கருவியாக இருக்கின்றதே தவிர மற்றபடி "தான்" என்பது ஒன்றுமே இல்லை. இந்தப்படிக்கே இன்னும் ஒருமுறை ஜீவான்மாவை கூடஸ்தவானமாவின் கருத்தை விளக்கும் கருவியாக ஆக்கவேண்டி யிருக்கிறது அப்படியானால் இதைப்போல் இதற்கு மேலும் ஐக்கியமாகும் நிலையிருக்கின்றதா என்பது நமக்குத் தெரியாது, ஆனால் நாம் முத்தர் நிலையை யடைவோமானால் அப்போது நமக்குமுன் பிரமிக்கும்படியான முன்னேற்றம் இருப்பதைக் காண்போம் என்பது திண்ணம்.

இப்படி நம் கண் முன்பாக மேன்மேலும் போய்க்கொண்டிருக்கும் விகாசத்தினுடைய முடிவுதான் எப்பொழுது என்று அடிக்கடி

கேள்வி கேட்பதுண்டு. அவ்விகாசமானது ஓர் முடிவு பெறுமோ அல்லது முடியாமலே போய்க்கொண்டிருக்குமோ இவ்விஷய மாக எனக்கொன்றுந் தெரியாது. தத்துவ சாஸ்திரியொருவர் ஒரு சமயம் சொல்லியிருக்கின்றார்; "முடிவு இருந்துதான் ஆகவேண்டு மென்பதும் புத்தியிலடங்கவில்லை. முடிவே கிடையாதென்பதும் புத்தியிலடங்காததாக விருக்கின்றது. ஆனால் இந்த இரண்டி லொன்று உண்மையாகத்தான் இருக்கவேண்டும்" என்பதாக. பிரம் மத்தோடிரண்டறக் கலத்தல்" என்று சிலர் சொல்லுகின்றார்கள். அதைப்பற்றி நமக்கொன்றுந் தெரியவில்லை. ஒன்று மாத்திரம் புலப்படுகிறது; நமது அறிவு அதிகமதிகமாக விரிவடைந்துகொண் டே போகின்றது. அந்தவிதமாக மேலே, நமது நிலைக்குமேலே ஒன்றன்பின் ஒன்றாக புதிய படிகள் அநேகமிருக்கின்றன, என் பதேயாகும். இப்பொழுது நமக்குத் தெரிந்தவரையில் துரிய பூமியை (Bnddhic conscience) அடைவது சாத்தியமென்பதும், அந்த நிலை யிலே நமது அறிவானது (பிரக்ஞையானது) அதிகமாக விரிந்து, தானென்பதறமலே மற்றவர்களையும் பெரியோர்களையும் தன்னி டத்தில் தானாகவே பார்க்கக்கூடும் என்பதும் நமக்கு நிச்சயம்.

இந்தத் துரியானுபவத்தில் "தான்" எனும் நம் தன்மையை யிழந்துவிடும் உணர்ச்சி ஏற்படுகிறதில்லை. நாம் நம் உணர்ச் சியை உணர்வதுபோல் பிறர் உணர்வதையும் உணருகிற சத்தி நம்மிடம் உண்டாகக்கூடிய விதமாய் நமது பிரக்ஞை விரிகின்றது. இம்மாதிரியான நிலையை தியான சமயத்தில் ஸ்பரிசிக்க நேரிட் டால், அதையே இடைவிடா அப்பியாசம் செய்யவேண்டும். இடை விடா வளர்ச்சியால் நமது அறிவு விரிந்துகொண்டே போகும் அப்போது அதனுடைய பரப்பில் பெரியார்களை மாத்திரம் சேர்ப்ப தோடு கூட நம்மிலும் சிறியவர்களையும் சேர்க்க அப்பியாசிக்க வேண்டும். எனினும், முதல் சொன்ன மஹான்கள், பலம் அதிக முடைத்தாய், சத்தியைப் பரப்பும் வல்லமை அதிகம் படைத்தவர் களாயிருப்பதால், அவர்களோடேயே முதலில் கலக்கவேண்டும். இம்மாதிரியான விரிவு படிப்படியாக உண்டாகின்றது. துரிய அறி வின் பல பகுதிகளையும் கடந்து செல்ல வழி ஏற்படுகின்றது.

அப்படிச் செய்தால் கொஞ்சம் கொஞ்சமாக விக்ஞானமய கோசத்தை அபிவிருத்தி செய்யக் கற்றுக்கொள்ளலாம். காலதேசங்களைக் "கடவாமல் கடக்கக்" கூடிய வல்லபமும், எல்லா அண்டங்களையும் ஒன்ருகக் காணும் சாக்ஷியும் உள்ள பெரியதோர் நிலையை இந்த கோசத்தைக்கொண்டு அடையலாகும்.

நம்மில் அநேகர் இந்த அனுபவத்தை அடைந்திருப்பதால் இப்படித்தானிருக்கும் இதற்குமேல் வியாபிக்கக்கூடிய அறிவு வளர்ச்சிகளும், என்று நிதானிக்க விடமிருக்கின்றது. கவி வர்ணித்திருப்பதுபோல "சோதியாம் சுகவாரிதி" யினுள்ளே அமிழ்ந்து போகாமலும், "நாம்" என்பதை இழக்காமலும் உள்ளதோர் அற்புத ஐக்கியத்தை அனுபவித்திருக்கின்ருேமாகையால், வாரிதியில் நாம் அமிழ்ந்து போவதின்றி, நம்மில் வாரிதி நிரம்பித்ததும்பி நிற்கிறதென்றே சொல்லலாம்.

இது முன்பின் முரணுகத் தோன்றும், எனினும் அனுபவம் அப்படித்தானிருக்கின்றது. சிறுதுளியின் அறிவு பெருகிப் பெருகிப் பெருங் கடலின் அறிவாக விளங்குகின்றது. இதுவே யாங்கள் உணரும் அனுபவம். ஆதலால் இந்த முறையில் திடீரென முழு மாற்றம் ஏற்பட்டு விடுமென்று நினைக்கவிடமில்லை. இத்தனை காலமாய் சம்பாதித்துச் சேகரித்த அறிவானது, நமக்கன்னியமான வாழ்வொன்றில் அமிழ்ந்தியதால், அழிந்து போய் விடுகிறதென்று நினைக்க மனஞ் சம்மதிக்கவில்லை. என்னபிப்பிராயம்: இந்த அறிவானது வளர்ந்துகொண்டே போய் கடவுளோடு ஐக்கியமாகும் என்பதே. ஆனல் எந்த அர்த்தத்தில் கிருஸ்துவானவர்; "நீங்கள் கடவுளர்கள், நீங்களெல்லாம் பெருமானின் பிள்ளைகள்" என்று சொல்லியிருப்பது போலாகும்.

விகாசப் போக்கிற்கு முந்திய காலத்திலும் சரி, இனி வரும் காலத்திலும் சரி, எப்படியிருந்தது, எப்படியிருக்கும் என்று நாம் தெரிந்துகொண்ட வகையில் என்ன ஏற்படுகிறதென்ருல்: எண்ணற்ற ஆயிரக்கணக்கான வருஷங்கள் நீடித்து விளங்கும் விசேஷ சீருள்ளதாய், பெருமை, வல்லமை, அன்பு இவைகள் நிறைந்ததாய்,மனதிலடங்காத நிலைகளுள்ளதாய், எதிர்காலம் தோன்றுகிறது.

அதற்கு மேலென்னவென்றால் நமக்குத் தெரியாது. பொது ஞாயமாகப் பார்ப்போம். முடிவை எப்படித் தெரிந்துகொள்ள முடியும். இந்த விகாசப்போக்கின் கடைசி முடிவு இப்போதே நமது புத்திக்கு எட்டிவிடக் கூடுமென்றால், அந்த முடிவுக்கு முன்னதாகவே உணரவொண்ணுப் பெரும் நிலைகளிருக்கின்றன வென்பதைத் தெரிந்தும் அதற்கும் மேற்பட்ட முடிவு நமது புத்தியிலடங்குமேயாகில் அந்த முடிவு அதிசாமானியமானதென்றல்லவோ ஏற்பட்டுவிடும்.

நமது புத்தியோ குறுகியதாம் "சிற்றறிவு". அது எவ்வளவு குறுகியதென்பது அதனுடையமேல்வளர்ச்சியைக் கொஞ்சமேனும் கண்டுகொள்ளும்போது தான் தெரியவரும். வெகு சிறப்பாகப் பேசி இறுமாந்திருக்கும் நமது தற்கால புத்தியானது உண்மையில் அதி அதி சொற்பமே. அறிவின் ஆரம்பமென்றே சொல்லவேண்டும். பெரியதோர் மரத்தின் சிறுவித்தைப் போனறது. வருங்காலத்து அறிவுக்கு முன்பாக இப்போதைய நமது புத்தியைச் சிறு குழந்தையின் புத்திக் கொப்பிடலாம். ஆனல் குழந்தை புத்தியென்பதில் பாதகமில்லை. இதுவரையில் எவ்வளவோ மேலுக்கு வந்திருக்கின்றது, இனி பிற்காலத்திலும் அபிவிருத்தியடையக் கூடியதே. இங்கே சொல்லவருவது, பெரியோர்களுடைய அறிவை நோக்க நம்முடைய அறிவெல்லாம் குழந்தையறிவிற்குச் சமானமே. ஆகையால் தான், இந்த நமது புத்தியால் அதிகமாய் ஆழ்ந்தகன்று பார்க்கமுடியாது. இதைக்கொண்டு, அந்தமும் ஆதியும் கண்டுபிடிக்கலா மென்பது அசாத்தியமே. எனனைக் கேட்டால், பரம்பொருளினுடைய திருநோக்கத்தின் இறுதி முடிவு இன்னதென யாரொன்றுமறியேன். ஆனல் அப்பரம்பொருளாம் இறைவன் இருக்கின்றான் என்பதில்மாத்திரம் சந்தேகமில்லை என்பது நன்றாய்த் தெரிகின்றது.

இம்மாதிரி கேள்விகளில் தத்துவ சாஸ்திரி, ஞானசாஸ்திரி இவர்கள் தலையிட்டு ஆழ்ந்த விசாரங்கள் செய்துவருகின்றார்கள். இதனல் இவர்களுடைய மனேமய தேகமும் காரணதேகமும் அபிவிருத்தி யடையும் என்பதில் சந்தேகமில்லை. இந்தப் போக்குக-

ளில் பிரியமுடையவர்களுக்குக் கெடுதி யாதும் கிடையாது. ஆனால் இவைகளெல்லாம் மனதினுடைய போக்குகளேயென்று தெரிந்திருக்கவேண்டும். தங்களுடைய அபிப்பிராயங்களை உண்மையெனக் கோர்வைசெய்து அவைகளை நாமெல்லோரும் ஏந்துக்கொள்ளும்படி இவர்கள் எதிர்பார்ப்பது சரியல்ல. ஏனென்றால் அநேக முக்கிய விஷயங்களை இவர்கள் கண்டறியாமையால் விட்டுவிட்டிருக்கக்கூடும். என்னைப்பற்றிய வரையில் நான் அம்மாதிரியான மனோபாவனைகள் செய்வதில்லை. நமக்கு முன் நிச்சயமாயிருக்கும் பெருவாழ்வும் மேன்மையுமே நமது சகல ஆவல்களையும்பூர்த்தி செய்யவும் நம்மை மேற்செலுத்தவும் போதுமானவை என்பது எனக்குத்தெரிகிறது. "கண்ணால் கண்டிராததும், காதாற் கேட்டிராததும் மனதால் நினைக்கமுடியாததுமான அவ்வளவு பெரிய அற்புதங்களை, கடவுளானவர் தனனுடைய அன்பர்களுக்காக வைத்திருக்கின்றார்" என்பதாக இரண்டாயிரம் வருஷத்திற்குமுன் பெரியாரொருவர் சொல்லியிருக்கின்றார். இந்த உண்மை இன்றைக்கும் சாத்தியமானதேயாகும்.



# 3-வது அத்தியாயம்.

## நூல் வரலாறு.

C. W. L.:—அன்னை பெசன்டம்மையார் (1910-ஞு டிசம்பர்மீ) எழுதிய முகவுரையில், இந்நூலை (AT THE FEET OF THE MASTER) ஆசிரியர் ஆல்கியூனி ((Alcyone) எவ்விதமாகத் தொகுத்தாரென்பதைப்பற்றி பினவருமாறு சொல்லுகின்றார்.

"இவ் வுபதேசங்களை ஞாபகப் படுத்திக் கொண்டு கொஞ்சம்கொஞ்சமாக பிரயாசையுடன் எழுதிவைத்தார்; ஏனெனில் சென்ற வருஷம (1909-ஆ-ல்) அவருக்கிருந்த ஆங்கில பாஷையின் சொல்வளம் இப்போதைக்கிருப்பதைவிட அதிக குறைவாக விருந்தது. இந்நூலின் பெரும்பாகம் (மாஸ்டர்) குருநாதன் சொன்ன வார்த்தைகளே யாகும். அப்படி அவருடைய வார்த்தைகளாகவே யிலலாத விடங்களில், அவருடைய கருத்தையே சிஷ்யனுனவர் (Alcyone) தனது வார்த்தைக ளால் அமைத்திருக்கின்றார். விடுபட்டுப் போன இரண்டு சொற்றொடர்கள் மாஸ்டர் அவர்களால் எடுத்துத் தொடுக்கப்பட்டன. இன்னுமிரண்டி டங்களில் விடுபட்ட வார்த்தையொன்று சேர்க்கப் பட்டது. இவைதவிர நூல் முழுதும் ஆல்கியூனி யினுடையதே. உலகத்தாருக்கு இவர் கொடுத்து தவும் முதற்கொடைஇதுவேயாகும்.

இந்நூலின் வரலாற்றைப்பற்றி மற்றோரிடத்தில் நானெழுதி யிருப்பதைத் திரும்பவும் சொல்லுகின்றேன்.

இச்சிறு புத்தகம் எழுதப்பட்டதின் விபரங்கள் வெகு சாமா
னியமானவை. குருநாதனவர் இச்சிறுபிள்ளைக்கு (Alcyone)
உபதேசஞ் செய்யும்பொருட்டு இவருடைய ஆசைமயதேகத்தில்
(Astral body) இவரை இரவுதோறும் மாஸ்டருடைய ஆசிரமத்
திற்கு நான் இட்டுக்கொண்டு போவது வழக்கம். குருநாதன் பதி
னைந்து நிமிஷம் ஒவ்வோரிரவிலும் இவருடன் சம்பாஷிப்பார்.
பிறகு, சொல்லிவந்தவைகளில் முக்கியமான விஷயங்களைச்
சேர்த்து, ஒன்று அல்லது பல மொழிதொடர்களாக தொகுத்
துரைப்பார். இந்த சுருக்கவசனங்களைத் திரும்பச் சொல்லுவது
சிறுவனாகிய (Alcyone) ஆல்கியூனி மனப்பாடமாகக் கற்றுக்கொள்
வதற்கு சுலபமாயிருந்தது. இந்த வசனங்களைக் காலையில் தான்
விழித்துக் கொண்டதும் ஞாபகப்படுத்திக் குறித்துக் கொண்டே
வந்தார். இவ்வித வாக்கியங்களடங்கியதே இந்நூலாகும். அதாவது
மாஸ்டரவர்கள் தாமே தமது திருவாக்கால் சொல்லிய வார்த்
தைகளடங்கிய உபதேசச் சுருக்கமிது. அப்போது இச் சிறுவருக்கு
ஆங்கில வாசிப்பு அதிக மில்லாத காரணத்தால், இவ்வசனங்களை
யெல்லாம் கொஞ்சம் பிரயாசையுடனேதான் பெயர்த்தெழுதினார்.
இவைகளெல்லாம் மனப்பாடமாக விருந்தமையால் அவைக
ளைக் குறித்துவைத்த துண்டுக் கடுதாசிகளைப்பற்றி அதிக கவலை
யெடுத்துக் கொள்ளவில்லை. பிறகு கொஞ்சகாலஞ் சென்று,
நமது சபைத் தலைவர் (Annie Besant) உடன் காசிக்குப்போயிருந்த
காலையில், அங்கிருந்தெனக்கு அடையாற்றுக்குக் கடிதம்எழுதி தன
க்கு மாஸ்டர் சொல்லியவைகளைக் குறிப்பிட்டு வைத்திருந்த துண்டு
கடுதாசிகளைச் சேர்த்து அனுப்பும்படியாகக் கேட்டுக் கொண்டார்.
என்னாலியன்றவரையில் இவைகளை யொழுங்குபடச் சேர்த்து
டைப் (Type)பில் அடித்தேன். அப்போதெனக்கு ஒரு எண்ணம்
பிறந்தது. இவைகள் மாஸ்டருடைய திருவாக்காகையால் பெயர்த்
தெழுதியதில் பிசகுகளேதேனும் விழுந்திருக்கின்றதா வென்ப
தைத் தெரிந்துக்கொள்வது நலம் என்பதாக உடனே டைப்பி
லடித்த பிரதியொன்றை யெடுத்துப்போய், "குதூமி" மாஸ்டரிடம்
கொடுத்து, இதை முற்றும் வாசித்துப்பார்க்க வேண்டுமெனக் கேட்
டுக்கொண்டேன். அவர் அதை வாசித்து, இரண்டொரு வார்த்தை

களைச் சில விடங்களில் மாற்றி, முன்பின தொடர்ச்சிக்காகவும், நன்ருய் விளக்கிக் காட்டவும், சில குறிப்புக்களையும், வசனங்களையும் சேர்த்துவிட்டு, சரி ! போதும் ! ஒழுங்காக விருக்கின்றது என்பதாகச்சொல்லிவிட்டு, உடனே "மைத்திரேய பகவானிடம் இதைக் காண்பிப்போமே" என்ருர். இருவருமாக அவரிடம் போனேம். தன்னிடமிருந்த புத்தகத்தை ஜகத்குருவிடம் காண்பித்தார். அவரும் அதை வாசித்து ஒப்புக்கொண்டார். அப்போது மைத்திரேய பகவான், நீங்களிதை இனியதோர் சிறுபுத்தகமாக வெளியிட்டு (Alcyone) ஆல்கியூனியை உலகினர் தெரிந்துகொள்ளும்படி செய்வது நலம்" எனபதாகச் சொன்னுர். எங்களுக்கோ ஆல்கியூனியை உலகினற்கு பிரசித்தம் செய்யவேணுமெனகிற நோக்கமே கிடையாது. இனனம் படித்துக்கொள்ள வேண்டியவராயும், 13 வயது மாத்திரமுள்ளவருமான இச்சிறு பிள்ளையினமீது உலகினர் தத்தம் கருத்துக்கள் அல்லது அபிப்பிராயங்களாகும் கல்பாறைகளை வீசுவதுசரியல்லவெனவே இருந்தோம். ஆனுல் குப்த உலகில், சொல்லப்பட்டதைச்செய்வதேகடமையாகையால், இந்நூலானது இவ்வகையாக அச்சிற்குக் கொடுக்க வேண்டியதாயிற்று.

சமயம் வருவதற்கு முன்னதாக வெளியிடுவதால் ஏற்படக்கூடுமென யாங்கள் எண்ணிய இக்கட்டுகளெல்லாம் ஏற்பட்டன. எனினும் மைத்திரேய பகவானுடைய திருவாக்கே பலிதமானது. யாங்களெண்ணியதே பிசகு. ஏனென்ருல் இப்புத்தகத்தால் எங்களுக்கேற்பட்ட தீங்கைவிட அதினுல் விளைந்த நலமானது அளவிடக்கூடியதல்ல. எத்தனையோ ஆயிரக்கணக்கான பேர்கள் இந்த புத்தகத்தைப்பற்றி எழுதியிருப்பதில், இவர்கள் இந்நூலிலுள்ளதையுணர்ந்ததால், தங்கள் வாழ்க்கையே முற்றும் மாறிவிட்டதாகவும், இதை வாசித்ததால், உலக வ்பகாரங்கள் ஒவ்வொன்றும் வேறு விதமாகப் படுகிறதாகவும் வெளியிட்டுள்ளார்கள். இந்நூலானது இருபத்தேழுபாஷைகளில் மொழிபெயர்க்கப் பட்டிருக்கின்றது. சுமார் நாற்பது பதிப்புக்களாகி இலக்ஷக்கணக்கான அச்சுப் பிரதிகள் வெளிவந்திருக்கின்றன. இப்புத்தகம் செய்திருப்பது ஆச்சரியமானதோர் வேலையாகும். முக்கியமாக இதற்கு, உலக குருவின்

விசேஷ அனுமதியான முத்திரையிருக்கின்றது. அதுதானிதற்குப் பெரியதோர் மதிப்பாகும். ஏனெனில் இதனாலேற்படுகின்றது: அநேகமாய் ஜகத்குருவினுடைய போதனையின் போக்கு இவ்விதமாகத்தானிருக்குமென்பதைக் காட்டுகிறதல்லவா?



## 4-வது அத்தியாயம்.

### பாயிரப் பிரார்த்தனை.

C. W. L:—தனது முகவுரையை பெசன்டம்மையார் பின்வருமாறு நமக்கெல்லாம் நல்லாசிகூறி முடிக்கின்றார்.

> "தான் கேட்ட உபதேசம் தனக்கெப்படிப் பயன்பட்டதோ அதுபோலவே மற்றெல்லோருக்கும் நன்மை பயக்கவேணுமென்ற நன்னோக்கத்தோடுதான் இப்புத்தகத்தைஉலகினருக்கு அளிக்கின்றார். குருநாதனுடைய திருவாக்கிலிருந்து கிடைத்ததுமுதல் தான் ஒழுகிவந்ததுபோல, பிறரும் நடந்து வந்தால்தான், இந்த உபதேசம் பயனளிக்கக்கூடும். இதிற் சொல்லியுள்ள போதனையின்படியும் காட்டிய திருஷ்டாந்தத்தின்படியும் அனுஷ்டிக்கும பக்ஷத்தில், இந்நூலாசிரியருக்குக் கிடைத்தது போலவே இதைவாசிப்பவனுக்கும், திருக்கதவம் சுழன்று திறக்கும். அப்பொழுதுதான் அவன் (முத்தி) மார்க்கத்தில் அடியெடுத்து வைக்கக்கூடும்.

இந்த நூலைப்பற்றி அபிப்பிராயங் கூறவந்த காலையில் பெசன்டம்மையார் சொல்லுகின்றார்; "வெகு வெகு அபூர்வம், இம்மாதிரியான உபதேசங்கள் மானிடர்களுக்கு கொடுக்கப்படுவது. இவ்வளவு நேராகவும், சாத்திரமுறைப்படிக்கும் அழகாயும் செய்யப்பட்ட உபதேசமொழிகள் அருமையேயாகும்." ஆகையால்தான் உண்மையிலேயே உபதேசத்தின் ஒவ்வொரு வார்த்தையையும் அதிக கவனத்துடன் நாம் யோசனை செய்வது நலம்.

புத்தக ஆரம்பத்திலே, ஆல்கியூனியின் நூன்முகத்திற்கு முன்னதாகவே, சமஸ்கிருத புராதன பிரார்த்தனையொன்று எழுதப்பட்டிருக்கின்றது.

அது:—"அசதோ மா சத்கமய
தமசோ மா ஜ்யோதிர்கமய
ம்ருத்யோர் மா அமிர்தம்கமய" - வென்பதே.

இதன் பொருள்:—அநித்தியத்தினின்றும் என்னை நித்தியத்திற்குக் கூட்டிப்போக வேண்டும். இருளினின்றும் என்னை ஒளியிற்கூட்டிப் போகவேண்டும். மரணத்தினின்றும் என்னை சாகாத தன்மைக்கு கூட்டிப் போகவேண்டும்.

இங்கே நித்தியமாயுள்ளது Real என்கிற ஆங்கில பதத்தை யுபயோகித்திருப்பது தப்பர்த்தம் செய்து விடும்படி செய்யக்கூடியது. Real & unreal என்றால், உள்ளதென்றும், இல்லாததென்றும் நினைக்கலாம். Unreal என்பது சுத்தமாய் மனோ கல்பிதமென்று நாம் (ஆங்கிலர்) அறிகிறோம். ஆனால் இவ்வாக்கியத்தில் இந்துக்கள் கொண்டிருக்கும் அருத்தம் அதுவல்ல. நீடித்தில்லாததிலிருந்து நீடித்துள்ளதற்கு என்னைக் கூட்டிப் போகவேண்டும் என்றால், "Unreal" என்கின்ற வார்த்தையின் அர்த்தம் ஒருவாறு சரியாயிருக்கலாம்.

அதேமாதிரியாகத்தான பூ, புவர், சுவர்க்க (தூல, காம, மானஸ) உலகங்கள், Unreal இல்லாதவை என்பது தப்பர்த்தமாகும். அததன்னிலையில், அதது நிற்கின்றவரையில் அந்தந்த உலகம் இல்லாததல்ல. பூலோகத்தில் நாம் விவகரிக்கும்போது, தூலப்பொருட்களெல்லாம் இருக்கின்றன, சந்தேகமில்லை. ஆனால் தூலதேகம் நித்திரை வாய்ப்பட்டதும், நமது தூலப்பிரக்ஞையை விட்டு ஆசை மயதேகப் பிரக்ஞையை உபயோகிக்கையில், அதாவது கனவிவகாரம் செய்கையில், மேலுள்ள புவர்லோகத்தில் விவகரிக்கிறோம். அங்கு தூலப்பொருட்கள் மறைந்தன, இல்லாமல் போய்விட்டன. இந்தக் காரணத்தால் தூலப்பொருட்கள், இல்லாதவைகள் என்று சிலர் சொல்லுகின்றார்கள். ஆனால் அதே நியாயத்தைக்கொண்டு பூலோக விவகாரத்தில் புவர்லோகப் பொருட்களை நாம் காணவில்லையாகையால் புவர்லோகமும், இல்லாததுவே என்று சொல்லலாம். தூலப்பொருள்களும் சூக்குமப்பொருட்க

ளும் எப்போதும் உள்ளனவே. அவைகளின் நிலைக்குரிய பிரக்ஞையுடன் நோக்கினுல் தான் அவைகள் தோன்றும்.

நமக்குத் தெரிந்தவரையில் தோன்றுவதெல்லாம் அழிவுடையதே. தோன்றுத அவ்வியக்தந்தான் என்றும் உள்ளது, மாறுத தன்மையுடையது. தோற்றமெல்லாம் எவ்வளவு அதிசூக்கும மல்லது உயர்ந்த நிலையிலுள்ளதாலும் மாறுத தன்மையுடைய அவ்வியக்தத்தில் ஒரு காலத்தில் போய் சேர்ந்துவிடும். ஆகையால் நாம் அழிவுள்ளதென்று சொல்லுவதும் நீடித்த சூக்ஷ்ம உலகென்று சொல்லுவதும் கால அளவைப் பொருத்தது. காலாதீதமாகிற நித்தியத்திற்கு முன்பாக, காலம் என்பது ஒன்றுமில்லாததே. நிர்வாண உலகம் (சத்திய உலகு) எவ்வளவு நிச்சயமோ அவ்வளவு உண்மையானதுதான் பூலோகமும்; அதன்றி,இவ்வுலக முதல்யாவும்அழியாப் பொருளாகிற கடவுளின் தோற்றங்களேயாகும். ஆனதால் ஒன்றை நித்தியமானதென்றும் சத்தியமானதென்றும், மற்றொன்றை மனே விகாரத்திலன்றி வேறென்றும் கொள்ளவே கூடாது.

இன்னமொரு கொள்கை, சாமானியமாக எல்லோருடைய எண்ணப்படி, * "பிரகிருதி தீயது" என்பதே. அதல்லவேயல்ல. பிரகிருதி சடமானது, சித்தாகும் புருஷனைப்போல ஈஸ்வரனுடைய தோற்றமே. இரண்டும் அவரிடத்திலுள்ளவைகள். அவருடைய இருபுறங்களாகும். நம்முடைய அபிவிருத்தியைத்தடுக்கும்படி நாமதை உபயோகப்படுத்தும்போது மாத்திரந்தான் பிரகிருதி நமது அபிவிருத்தியைத் தடுக்கின்றது. அதை தீயது என்று சொல்வது எப்படியிருக்கிறதென்றால், ஒரு கத்தியை எடுத்துத் தன் கையை வெட்டிக்கொண்டு கத்திகளெல்லாம் மிகக்கொடியவைகளென்று ஒருவன் சொல்லுவதைப்போல இருக்கிறது. சமஸ்கிருத வார்த்தையின் நெளிவைப்பார்க்கும்போது முன் சொல்லிய முதல் சுலோகத்தை "பொய்யினின்றும் விலக்கி உண்மையைக் காணச்செய்யும்" என்பதாகவும் அர்த்தம் சொல்லலாம். உண்மையானது, நீடித்தது, நிலையுள்ளது, என்ற அர்த்தங்களெல்லாம் நித்தியம் என்கிற சமஸ்கிருத வார்த்தையிலடங்கி யிருப்பதாகத் தெரிகின்றது. ஆகையால் நாம் பிரார்த்திப்பது, வெளித்தோற்றத்

* பிரகிருதி = மாயை

தினின்று அதாவது மாயை அதிபலமாகவிருக்கிற நிலையிலிருந்து, உண்மைக்கு அடுத்திருக்கும் நிலைக்கு நம்மைக் கூட்டிக்கொண்டு போக வேணுமென்பதே யாகும்.

இரண்டாவது வேண்டுகோள், "இருளினின்றும் ஒளியில் என்னை இட்டுப்போம்" என்பது, அதாவது அஞ்ஞானமாகிற இருட்டினின்றும் ஞானமாகிற வெளிச்சத்தில் செல்ல உதவிபுரியவேண்டுமென்பதே. இந்த பிரார்த்தனை குருநாதனை நோக்கி செய்யப்படுகின்றது. அவருடைய போதவின சோதியால் நமது சிற்றறிவை விளக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறோம். இந்தியாவில் இன்னமொரு அர்த்தமுங் கொள்வதுண்டு. இந்த பிரார்த்தனையில் ஒருவன் மேலுலகங்களை அறியும் ஞானத்தைக் கொடுக்கும்படி வேண்டுகிறான் எனும் உபகருத்துமுண்டு. இந்த அர்த்தத்தையொட்டி புராதன நூல்களில் "கீழுலகின ஒளி, மேலுலகிற்கிருள்" என்றும் ஒரு அழகிய கட்டுரை காணப்படுகின்றது. அது உண்மையிலும் உண்மை. இங்கே நாம் வெளிச்சமென்று கருதுவது, புவர்லோக ஒளியை நோக்கமங்கலாயும் இருளடைந்ததாயுமிருக்கின்றது. அதுபோலவே புவர்லோகத்தின ஒளியானது சுவர்க்கலோக வொளியின் முன்பாக அதிசொற்பமாகத் தோற்றுகின்றது. இம்மாதிரியான வித்தியாசங்களை வார்த்தைகளால் எடுத்துக் காட்டுவது மிகவும் கடினமான விஷயம். ஏனெனில் கீழ் நிலையிலிருந்து மேல் நிலைக்கு நமது பிரக்ஞை போகும்போதெல்லாம், அதற்கு முன் தெரிந்திராத அபாரமான சக்தி, அபாரமான ஒளி, அபாரமான இன்பம், இவை மேலும்மேலும் உதிக்கின்றன.

நமது பிரக்ஞையானது விரிந்து ஒருபடி மேலுயர்ந்தால் என்ன நினைக்கின்றோம்: ஓகோ! இப்போதுதான் உண்மையில் வாழ்க்கை யின்னதென்பதை நாம் முதன முதல் தெரிந்துகொண்டோம்! என்ன ஆநந்தம்! என்ன உயர்வான விஷயங்கள்! என்றெண்ணுகிறோம். இம்மாதிரியாகவே படிப்படியாய் ஒரு உலகத்தைவிட அதற்குமேலான (அதைவிட சூக்ஷுமமான) உலகு அளவு கடந்து பெரிதாய்த் தோன்றுகிறது. உதாரணமாக, புவர்லோகத்திலிருந்து அதற்கடுத்த பூலோகத்திற்கு வருதல், சூரிய

வெளிச்சத்திலிருந்து இருளடைந்த சிறைக்கூடத்தி லடைபட்டது போலாய்விடுகிறது. ஒருவன்மனோலோகத்தில் ஜாக்கிராவஸ்தையின் பிரக்ஞையுடன் விவகரிப்பானே யாகில், புவர்லோகத்திலவன் தெரிந்து கொண்டதைவிட நானா பக்கங்களிலும் அவனது பிரக்ஞை விரிந்து செல்லுவதைப் பார்க்கின்றான், புத்திமயகோசத்தில் பிரக்ஞாஸ்பரிசம் ஏற்படும்போது, எவ்வகையாகக் கடவுள் பிரபஞ்சத்தை (பிரபஞ்ச விஷயங்களை) நோக்குகின்றார் என்பதைச் சற்று உணருகின்றான். அந்நிலையில் ஈஸ்வரனோடு நெருங்கி ஸ்பரிசிக்கின்றான். அப்போதுதான் எல்லாவற்றிலுமுள்ள கடவுள் எல்லாவற்றின் மூலமாயும் எப்படி உணருகின்றார் என்பதைத் தெரிந்துகொள்ள ஆரம்பிக்கின்றான். "அவருள்ளே நாமெல்லோரும் இருந்து ஓடி ஆடி, வாழ்கின்றோம்" என்பதாகவும், "அவருடையதே அவராலேயே அவருக்கே, இருக்கின்றன வெல்லாப் பொருட்களும்" என்றும் சொல்லப்பட்டிருக்கின்றது. இதுகவியினது கற்பனை அலங்காரமல்ல, எதார்த்தமாக வுள்ளதைத்தான் உரைக்கின்றது. உன்னத ஐக்கிய மொன்றுள்ளது. சகோதர பாவனை மாத்திரமல்ல. எதார்த்த ஐக்கியம், ஒருமை. அந்த ஐக்கியத்தின் தாழ்ந்ததோர் வரம்பை ஒருவன் ஸ்பரிசிக்கின்ற காலையில்தான், கடவுள் பிரபஞ்சத்தை நோக்கும்போது எவ்விதமாக உணர்கின்றார் என்பதை முதன்முதல் ஏதோ ஒருவிதமாகக் கண்டுபிடிக்க ஆரம்பிக்கின்றான். நன்றுநன்று என்பதாகச் சொல்லி மகிழ்கின்றான். ஆகையால் தாழ்ந்த உலகங்களின் இருளினின்றும் பேரறிவின் ஒளியினிடத்தே நம்மைக் கொண்டுபோகும்படி கேட்டுக்கொள்ளுகின்றோம். அந்த உயருலகப் பிரக்ஞையைக் கீழுள்ளதோடு ஒத்துப்பார்க்க ஒளியேயாகும். இதைவிட வேறுவிதமாக எடுத்துக் காட்டுவதற்கு வார்த்தைகளில்லை. உள்ளே யுணருவதை வெளியே வாயால் சொல்லுவதற்கு இதைவிடத் தக்க வார்த்தைகள் கிடையா.

அதன் பிறகு, "மரணத்தினின்றும் சாகாததன்மைக்கு எம்மை கூட்டிக்கொண்டுபோம்" என்றுசொல்லுகிறோம். இதற்குசாமானிய மதாபிமானி யொருவன் எடுத்ததும்சொல்லுகிற அர்த்தமல்ல உண்மையர்த்தம். மரணத்தைப்பற்றி இவ்விஷயங்களை யறியாத பொது

ஜனங்களுக்கும், பிரம்ம வித்தியா சபையினருக்கும் இருக்கும்அபிப் பிராயமும் நோக்கமும் முழுதும் மாறானவைகள். ஒன்றுக்கொன்று நேர்விரோதமென்று சொல்லலாம். மரணமென்பது பயங்கரமான தல்ல. பயமுறுத்தும் எமதர்மராஜனல்ல. இப்போதிருப்பதைவிட பூரணமானதும் மேலானதுமான வாழ்க்கையில் நம்மைப் புகுவிக்கும் வாயற்கதவின் திறவுகோலைக் கையிற்கொண்டு வரும் தேவதூதனே யாகும். இறக்கின்றவர்களைப் பற்றி நாமெல்லோரும் துயருறுவது சகஜந்தான். ஆனால் நாம் துயரப்படுவது நம்மைத் தழுவியகை தழுவ வில்லையே, நம்முடன் பேசியவாய் பேசாமல் நிற்கின்றதே, என்ப தற்காகத்தான் அசனம். "மரணத்தினின்றும் சிரஞ்சீவித் தன்மைக்கு கொண்டுபோம்." என்று பிரார்த்திக்கும்போது, கிருஸ்து மதத்தி னர் நினைக்கின்றவிதமாக நாம் அர்த்தம் கொள்ளுகின்றோமில்லை அதாவது அவர்கள் என்ன நினைக்கின்றார்கள், இந்த உருவம் போனா லும் வேறொந்த உருவத்தோடாவது இப்போதைய தேகான்மா புத்தி யோடு என்னைக்கும் வாழுவோம் என்பதே; அப்படியல்ல நாம் கொள்ளுவது, மரணத்தினின்றும் தப்பிக்க வேண்டுமென்பதே நமது இச்சை. ஆனால் அதோடுகூட இணைபிரியாத ஜெனனத்தின் றும் தப்பிதுக்கொள்ள வேண்டுமெனபதே. நம்முன நிற்பது, புத் தர்கள் சொல்லும் "சம்சார" எனகிற சம்சாரசக்கரம் ஆகையால் இந்த ஜெனனமரண சக்கரத்தினின்றும் சிரஞ்சீவி நிலைக்கு, அத வது பிறப்பிறப்பு கடந்த மேல்நிலை வாழ்விற்குநம்மைக்கொண்டு போக வேணும் எனபதே. அந்நிலைக்குவந்த பிறகு கீழ் உலகங் களிலே இறங்க வேண்டுமென்ற அவசியமில்லை, ஏனெனில் மானிட வாழ்வு முடிந்துவிட்டது. இங்கு கற்கவேண்டியதெல்லாம் கற்றாய் விட்டது.

இக்கருத்தைதப்பற்றி ஜனங்கள் சிந்திக்கிறதாகத் தோன்றவில் லையாயினும், கிருஸ்துமதகக் கிரந்தங்களிலும் அதைப்பற்றி விசேஷ மாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. தற்கால கிருஸ்து மதத்தில் சில விபரீத மனத்தடிப்புகள் கஷ்டப்படுத்துகின்றன. மனத்தடிப்பு கள் என்பதைவிட வேறு வார்த்தையால் அவைகளை குறிப்பிட முடியவில்லை. அவைகளிலொன்று "ஓயா நரகவேதனை" என்னும் பயங்கரமான கொள்கையாகும். இந்தக் கொள்கையானது வேற

னேக உண்மைகளைக் கண்டுகொள்ள வொட்டாமல் மேகம்போல் மறைக்கின்றது. "இரட்சணியம் இரட்சிப்பு" என்பதின் நோக்கமெல்லாம் மனோபாவனையில் மாத்திரமுள்ளதான இந்த தீரா நரகத்தினின்று தப்புவித்தலே இரட்சணியமென்று அர்த்தமாய் விட்டது. அதன் உண்மையர்த்தமோ அதல்லவேயல்ல. அந்த இரட்சணியத்தைப்பற்றி சொல்லுகிறதாகக் கருதப்படும் வேத வாக்கியங்களின் அர்த்தம் இன்னதென நன்கு புலப்படவில்லை; எனினும், ஒவ்வொருவனது இதயத்திலும் கிருஸ்து பிறத்தலே மனிதனுடைய இரக்ஷணியமாகுமென்று கண்டு தெளிந்தால், மேற்சொன்ன நூற்களின் பொருள் நன்கு விளங்கும்.

மரணத்திற்கு அதாவது அழிவிற்குகொண்டு போய்விடுகிற பாதை அகலமாயிருப்பதாயும் அதில் செல்லுகிறவர்கள் கணக்கில்லையென்றும் அடிக்கடி கிருஸ்துநாதர் ஜனங்களுக்குச் சொல்லி யிருக்கின்றார். ஒரு சமயத்தில் அவருடைய சீடர்கள் அவரிடம் வந்து பிரபுவே! இரக்ஷிக்கப்படுவோர்கள் சிலரேனுமில்லையா வென்று கேட்டார்கள். அதற்கவர் பரமார்த்த வாழ்விற்கு கொண்டுபோகும் வாசற்படியும் நெருக்கமாயிருக்கின்றது பாதையும் குறுகலாயிருக்கின்றது, அதைக் கண்டு பிடிப்பவர்கள் அதிசொற்பமே, என்று பதில் சொன்னார். இந்த பதிலை நூலார்த்தமாக அப்படியேயெடுத்துக்கொண்டு, அதன் உண்மையையும் அழகையும் விட்டுவிட்டு, மானிடவர்க்கத்தில் அதிக பேர்கள் நித்தியநரகில் தள்ளப்படுவார்கள் என்றும், சிற்சிலரே மோட்சமடைய முடியும் என்பதாகவும் அர்த்தம் செய்துவிட்டார்கள். இந்தவிதமான கொள்கையை கிருஸ்துநாதர் மேல் ஏத்திவைப்பது முற்றும் அவமதிப்பிற்கிடமாகும். அவர் சொல்லிவந்தது முற்றுந் தெளிவானது. எத்தனை பேர்கள் தீக்ஷாமார்க்கத்தில் நுழைவார்கள் என்ற கேள்விக்கு "சிலரே" என்றார். இந்த வார்த்தை அப்போது மாத்திரமல்ல இப்போதும் உண்மையானதே. மரணத்திற்கு கொண்டு போய்விடும் மார்க்கமானது அகலமாயிருக்கின்றது. அதிற்செல்பவர்கள் அநேகர் என்று அவர் சொன்னது, ஜனனமரண சக்கரத்தில் கொண்டு போய்விடும் வழியைக் குறிப்பிட்டதாகும். உண்மையிலே இந்த மார்க்கம் அகண்டு விரிந்ததுதான், சுலபமானதுதான்.

அபிவிருத்தி யடைவதற்காக இந்த வழியைப் பின்பற்றுவதில் யாதொரு கஷ்டமுங் கிடையாது உண்மையே. இப்படிச் செல்பவர்கள் சுலபமாக, ஏழாவது மன்வந்தரத்தின் முடிவில் வீட்டை யடைவார்கள்.

ஆனால் நிலைக்கு அதாவது மார்க்கத்திற்கு கொண்டுபோய் விடும் வாயிற்படியும் நெருக்கந்தான் வழியும் குறுகலானதுதான். ஆநந்தவர்க்கமென்று கிருஸ்துநாதர் சொன்னது வானலோகத்தை யல்ல, மரணத்திற்குப் பின்னுள்ள நிலைமையையல்ல, சுவர்க்கத்தை யல்ல. எப்பொழுதும், பெரியாருடைய கூட்டம், இரக்ஷிக்கப்பட்டவர்களின் சபை அதாவது மகா சகோதரசங்கம், இதையே குறிப்பிட்டார். மரணத்திற்கும் புனர்ஜெனமத்திற்கும் இடையிலுள்ள நிலையைப்பற்றி பேச நேர்ந்தபோதெல்லாம் வேறு வார்த்தைகளைப் பிரயோகித்திருக்கின்றார். சேனட்ஜான் என்பவர் எழுதியுள்ள பின்வரும் வசனத்தை ஞாபகப்படுத்திப்பாருங்கள்; அகோ! பெரியதோர் கூட்டம். மனிதனால் எண்ணமுடியாது. எல்லா ஜனங்களும் உற்றார் உறவினரும், தேசத்தார்களும், எல்லா பாஷை பேசுவோர்களும், சிம்மாசனத்தின் முன்பும், வெண்துகிலணிந்த கிருஸ்துவின் முன்பும், கையில் வெற்றி ஓலைகளை வைத்தவர்களாய், நிற்கின்றார்கள்.—இங்கே பாருங்கள்; இந்த நிலையைக் குறிப்பிடும்போது மனிதனால் எண்ணமுடியாத பெருங்கும்பல் என்று சொல்லுகிறாரேயன்றி, கஷ்டத்துடன் வழி பிடித்துச் சென்ற சிற் சிலர் என்று சொல்லுகின்றாரில்லை.



# 5 - வது அத்தியாயம்

## சீடனது நோக்கம்.

C. W. L:—ஆல்கியூனி எழுதிய அவையடக்கத்திற்கு இப்போது வந்தோம்.

"இவை எனது வார்த்தைக ளல்ல; எனக்கு உபதேசித்த குருநாதனுடைய திருவாக்குகள். அவரில்லாதிருந்தால் யாதொன்றுஞ் செய்திருக்க மாட்டேன். அவருடைய உதவியாற்றான் முத்தி மார்க்கத்தில் அடிவைத்திருக்கின்றேன்."

மாஸ்டர் அவர்களுடைய உதவியாலும் அநுகிரகத்தாலும் இவர் முற்றிலும் விருத்தியடைந்து வந்தார் என்று தெளிவாய் எடுத்து கூறுகின்றார். இவருக்கு அப்போது கிடைத்த உதவி இப்பொழுதும் நமக்கு இருக்கின்றது; அது இப்புத்தகத்திலுள்ள வார்த்தைகளே; இவைகள் குருநாதனுடைய வார்த்தைகளன்றோ ? ஆனால், அவர் சந்நிதானத்திலிருந்து பெறும் பாக்கியமும், அவர் நேராக காட்டிக்கொடுக்கும் படியான உதவியும் சித்தமாய் இருந்துகொண்டு நம் ஒவ்வொருவரையும் எதிர்பார்த்திருக்கின்றது. இது சங்கதி நம்முடைய மனதில் உறுதியாகப் பதிந்து நிச்சயப்பட்டிருக்க வேண்டும். இது நிச்சயமாய் நடக்குமென்று நாம் ஐயம்திரிபற தெரிந்திருக்கவேண்டும். ஆல்கியூனிக்கு கொடுத்த உதவியைப் போலவே இதை அநுசரிக்க சித்தமாக்கி கொள்பவருக்கெல்லாம் உதவி கொடுத்து வரும்.

"நீயும் இதே மார்க்கத்தில் புக இச்சிக்கின்றாய்; ஆனபடியால் அவர்எனக்கு போதித்த வாக்குகளின்படி ஒழுகி நடப்பாயாகில் உனக்கும் அவை ஒத்தாசை தரும். அவைகளை உண்மை எனவும், நேர்த்தியானவை எனவும் சொல்லு

வது போதாது. கடைத்தேற வேண்டுமெனும் இச்சையுள்ளவன் சொன்னதை சொன்னபடிச் செய்யவேண்டும். பட்டினியாய் இருப்பவன் ஆகாரத்தைப் பார்த்து நல்லது என்று சொல்லிக் கொண்டிருந்தால் அவன் பசிதீருமா? கையை நீட்டி எடுத்து சாப்பிடவேண்டும். ஆகையால் மாஸ்டர் அவர்களுடைய திருவாக்குகளை கேட்பது போதாது. ஒவ்வொரு வார்த்தையையும் கவனித்து ஒவ்வொரு குறிப்பையும் கைக்கொண்டு அவர் சொல்லுகிறபடி நீ செய்யவேண்டியது."

"இப்புத்தகத்தில் எழுதியிருப்பவையெல்லாம் செய்வேன்" என்று சொல்வது போதாது. இப்போதனைகள் ஒருவரது அறவாழ்க்கையில் ஒவ்வொரு பாகத்திலும் ஊடுருவி பாய்ந்திருக்கவேண்டும். அன்றியும் சந்தர்ப்பங்களை எப்பொழுதும் எதிர்பார்த்திருக்கவேண்டும். இப்புத்தகத்தின் முடிவில் ஓர் செய்யுளிருக்கின்றது; இது இந்த எதிர்பார்த்தலை நன்கு விளக்குகின்றது.

"அந்தரங்க ஒளியைநோக்கி குருநாதன் சொல்லுக்கு எதிர்பார்க்கின்றேன்- உலக வாழ்வாம் தொல்லைச் சண்டை நடுவிலிருந்து அவர் கட்டளையை உற்று கேட்கின்றேன். ஜனக்கூட்டத் திற்குமேல் அவரது நுட்பமான எச்சரிக்கையைக் கவனிக்கின்றேன். பூமியின் கீதமுழக் கத்தைவிட்டு அவரது மெல்லிய திருவாய்மொழிகளுக்கு செவி கொடுக்கின்றேன்."

குருநாதனிடத்தில் சிஷியனாக வரவேண்டுமென்கிற வாஞ்சையுள்ளவனானால் வாழ்க்கைப்போரின் மும்முரத்திலும், சுழலிலும், சந்தடிகளிலும்,மத்தியிலிருந்துகொண்டு எப்பொழுதும் உற்று அவர் சொல்லை கேட்கவேண்டும். போதனைகள் எதையும் அநுபோகத்திற்குக் கொண்டுவரவேண்டிய சந்தர்ப்பங்களை ஆவலோடு எதிர்பார்த்திருக்கவேண்டும். முடிவாய் பார்த்தால் உண்மையில் இது அவ்வளவு கடினமல்ல; ஏனெனில் இது பழக்கத்தைப் பொறுத்தது.

ஆரம்பிப்பதுதான்கஷ்டம்; ஆரம்பித்த பிறகு பழக்கத்தில் வந்து விட்டால், வர்த்தகன் பணம் சம்பாதிக்கும் பொருட்டு சமயங்களை எப்பொழுதும் எதிர்பார்த்திருப்பதுபோல், இதற்கும் எதிர்பார்த் திருக்க எப்போதும் மிக சுலபமாக விருக்கும். இவ்வித விழிப்புடன் சதா எதிர்பார்த்திருப்பதே சரி, மேலும் ஒருவன் தொழிலைத்தீர செய்யவேண்டி கவனத்துடனிருப்பது அவனது கடமை. ஆனால் அற்பகால விஷயங்களைப்பற்றி ஒருவன் ஊக்கத்தோடு இருக்கிறான் என்றால் நீடித்துள்ள மேல் வாழ்வுக்குரிய இவ்விஷயங்களின் பொருட்டும் நாம் எவ்வளவு ஊக்கத்தோடு இருத்தல் வேண்டும்?

குருநாதனுடைய பாதாரவிந்தத்தை அடைய வேண்டுமென் கிற இச்சையுடையவர்கள் அவருடைய நோக்கத்தை அறிந்து கொள்ளல் வெகு பிரதானமானது. திவ்வியக்ஞான பாடங்களால் வரவேண்டியதும் அதுவே. ஆனால் வாசிக்கவேண்டியதின் கருத்து உண்மையில் இந்நோக்கம் ஒன்றுக்காகவே. ஏனெனில் திவ்வியக் ஞானம் என்பது ஒழுகவேண்டிய ஒரு வாழ்க்கை; கற்க வேண்டிய வெறும் கல்வியல்ல. ஆதலால் நாம் நமது நோக்கத்தை குருநாதனு டைய நோக்கத்தோடு சற்றும் பலவந்தப்படுத்தாமலே ஒத்து வரும் படி செய்வதற்குப் பிரயத்தினப் படவேண்டும். குருநாதன் ஒரு அபிப்பிராயத்தை எவ்விதம் எடுத்தார் என்பதை அறியாமல் அவ ருடையதுதானே என்று வெறுமையாக பின்பற்றுதல் அறிவுள்ள தன்று. அப்படி அதை தழுவுதலில் யாதொரு குறையுமில்லை; ஏனெனில் நம்மினும் எத்தனையோ மடங்கு அதிகமாய் அவருக்குத் தெரியும். ஆயினும் அப்படி நாம் செய்தால் அவர் பிரியப்படமாட் டார். அவருடைய எண்ணம் நமது வெறும் உள்ளக்கிளர்ச்சியை மாத்திரம் கிளரி விட்டிருக்காமல் அதை நாம் தெளிவாய் தெரிந் திருக்கவேண்டும்.

அந்தரங்க விஷயங்கள் அதிக நித்தியமானவை, நிச்சயமா னவை, அன்றியும் முக்கியமானவை என்று ஒருவனுடைய மனதில் உறுதியாய் படிந்திருக்க வேண்டியது மிக்க அவசியம். சாதாரண கிருஸ்தவன் காண்பவை யெல்லாம் நிலையற்றவை யாகவும் காணாத விஷயங்களை வெகு முக்கியமானவையாகவும் நிட்

டமாய் சொல்லுகின்றானாயினும், விவகாரத்தில் அவனுடைய நம்பிக்கையின்படி சர்மம் நடக்கிறதில்லை. ஏன்? அவனுக்கு அதில் நிச்சயமில்லை. பூலோகத்தில் பணம் முக்கியமென்பது நிச்சயமாய் தெரியும், அதை எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாகச் சேகரிக்கிறானோ அவ்வளவுக்கவ்வளவு பிரயோஜனம் உண்டு என்பது அவனுக்கு திட நிச்சயமாகத் தெரியும். ஆனால் பரமார்த்த விஷயங்கள் நிச்சயமானவை என்று அவனுக்கு அவ்வளவு தெளிவாக தெரியவில்லை. இவைகளை மதத்துக்குரிய விஷயங்களென்று பெயரிட்டு ஒதுக்கி வைத்திருக்கிறான். மேலும் எப்படியோ சாதாரண உலக வாழ்க்கையிலிருக்கும் நிச்சயத்தை போல இவ்விஷயங்கள் நிச்சயமென்றும், செய்யக்கூடியதென்றும், மெய்யானதென்றும், திட்டமானதென்றும் அவனுக்கு புலப்படவில்லை. இவ்வழியில் வர பிரயத்தனப்படும் நாம் பார்க்கொணாத அந்தரங்க லோகத்திற்குரிய விஷயங்களில் திடமான நிச்சயத்தை கண்டிதமாய் வைத்திருக்க வேண்டியது. ரயில்வே ஸ்டேஷன இருத்தல் நமக்கு எவ்வளவு நிச்சயமோ அவ்வளவு நிச்சயம் இவ்விஷயங்களில் இருக்க வேண்டும். இவ்வாக்கியம் யதார்த்தமானதுதான்; நாம் ஒவ்வொரு நாளும் பார்க்கின்ற ஜடவிஷயங்களைப்போலவே இவ்விஷயங்களும் நமக்கு சகஜமானவைகளாக இருக்கவேண்டும்.

விசாரணை செய்வதினாலாவது, உற்றுணரும் யூகத்தினாலாவது, அல்லது இவைகளுக்கெல்லாம் மேலான அனுபவத்தினாலாவது, இந்நிச்சயம நமக்கு ஏற்பட்டுவரும். ஒரு விஷயம் எப்பேர்ப்பட்டது என்று நமக்குள் தெளிவாய் நிச்சயமான பிறகு அது ஒரு உண்மையாக நமக்குள் தங்கி விடுகிறது. வெகுவாய் புதிதாய் சேர்ந்த மாணாக்கர்களைவிட பழயமாணாக்கர்களுக்கு இருக்கும் சிலாக்கியம் இது. புதியவர்கள் எவ்வளவு ஊக்கத்தோடிருந்த போதிலும், பழயவர்கள் இத்துடன் வாழ்ந்து வந்ததால் சிறுகசிறுக மணிமணியாய் அதைத் *தங்களுடைய பகுதியாக ஆக்க காலமிருந்தது. கவிஞர் சொல்வது போல் அறிவு அதிகம் ஆக அதிகரித்துக்கொண்டே வரும். மேலான விஷயங்களை கேட்டவுடன யூகத்தினால் அவைகள் நிச்சயம் என்கிற நிர்ணய நிலைக்கு திடமென்று

வருபவர்கள் சிலருண்டு. இது நிச்சயமாகவே அவர்கள் முன் ஜன்மங்களில் செய்துவந்த நற்கரும பலன். ஆனால் நம்மில் அவ்வித நற்கரும பயனை பெற்றிராத அநேகருக்கு படிப் படியாய் தேறி வருவதிலிருந்து நிச்சயம் வரும். அங்கத்தினரா யிருப்பவர் ஒருவர் இச்சபையில் முப்பது வருஷமாயிருந்தும் துவக் கத்திலிருந்தது போல் இப்போதும் மேற்கொண்டு தெரியாமல் இருக்கக்கூடும். இது துர்பலமானது; ஏனெனில் சந்தர்ப்பங்களை வீணாய் கழித்துவிட்டார். ஆனால் திவ்யஞ்ஞான போதனைகளை அடிக்கடி யோசித்து அந்தப்படி நடந்து வந்தவர்களுக்கு நிச்சயம் படிபடியாய் வந்திருக்கிறது. அறவாழ்க்கையின அநுபோகங்களும் மேல் விஷயங்களின சிந்தனையும் நாம் நேராய் கண்கொண்டு பார்க் கும் வரையில் நமக்கு படிபடியாய் நிச்சயத்தை நிரூபித்துக்கொண் டேவரும்.

அநேகருக்கு திவ்யஞ்ஞான கருத்துகள் துவக்கத்தில் சிக்கான தாகவும் கஷ்டமானதாகவும் தோன்றுகின்றன. ஆனால் நாளாவட் டத்தில் சுலபமாய் விடுகின்றன. அவைகள் சுபாவமாக ஆய்விட் டன. ஓர் குழந்தை ஓர் ஏட்டிலுள்ளதை எழுதுகிறது, தப்பித மில்லாவிட்டால அதற்கு மிக சந்தோஷமுண்டாகிறது. போகப் போக அதை நினைக்காமலே தப்பிதமில்லாமல் எழுத திறமை வரு கிறது. இது ஒரு சாமர்த்தியமாய் விட்டது. நாம் தெரிந்துகொள்ள பிரயத்தனப்பட்டுக் கொண்டிருக்கும் வரையில் திவ்யஞ்ஞான உண் மைகளை இன்னும் தெரியாதவர்களாகவே இருக்கின்றோம். ஆனால் போகப் போக நமது வாழ்க்கையில் அவைகள் அநுபவத்தில் வந்து திறமையாகிவிடும்.

தன் சுய அனுபவம் கொஞ்சமாயிருந்தாலும் அதை அடைந்த வன் செல்லும் வழி அதிக சுலபமாகவும் இருக்கும், அவன் விரை வாகவும் செல்லக்கூடும். அநுபவம் முற்றும் இல்லாமலிருப்பவர் கள் நம்மில் மிகச்சிலரே. அனுபவத்தில் வந்த உண்மை கிஞ்சித்தாய் இருந்தபோதிலும் மற்ற விஷயங்கள் (ஒருகால் உண்மையாக இல்லா விட்டாலும்) இப்படியே உண்மையாய் இருக்கலாம் என்று நமக்கு காட்டுகிறது. நாம் அறிந்திருந்த பாகம் நிச்சயமாய் இருப்பன

காங்களை பார்த்துவிட்டோம். நியாயப்படி ஒன்றோடொன்று ஒத்திருப்பதால் மற்றவையும் அவ்விதமே இருக்கவேண்டும் என்று மதிக்கின்றோம். இந்த மதிப்பு அவ்வளவு பலமாய் இருப்பதால் நமக்கு அனுபவத்தில் அது ஓர் நிச்சயமாகிவிடுகிறது.

"குறிப்பொன்றை எடுக்காவிட்டாலுஞ் சரி, வார்த்தையொன்றை சோர விட்டாலுஞ் சரி, அது போனது போனதே; ஏனெனில் அவர் மறுதரம் சொல்லுவதில்லை."

A B:—இவ்விஷயங்களை அடிக்கடி கேட்பவர்கள் அனுபோகத்திற்கு கொண்டுவர பிரயத்தினப்படாததால் இவைகளை கேளாத உலகினரைவிட மிகக் கேடாய் இருக்கிறார்களே தவிர நல்லவகையில்லை என்று தெரிந்துகொள்ள அநேகருக்கு முடியவில்லை. இவைகளை ஒழுகாமல் விட்டு வருவதை குறிப்புடன் கவனிக்கப்படும் என்று நான் சொல்லவில்லை. ஆனால் முயற்சிக்கவில்லை என்பதை கவனிக்கப்படும். வைராக்கியமுள்ள விடாமுயற்சி தான் அவசியமானது. இதைத்தான் நாம் அடிக்கடி மறந்துவிடுகிறோம். மாஸ்டர் அவர்கள் ஒரு தரத்திற்குமேல் சொல்லுவதில்லை என்பது வாஸ்தவந்தான், அவர் நினைப்பூட்டுவார், எடுக்காவிடில் நழுவவிட்டு விடுவார், சொன்னதை மறுமுறை அவர் சொல்வதில்லை. அவருடைய சிஷியர்களே உலக நிலையைக் கண்டு, சொல்லவேண்டிய விஷயங்களை ஜனங்களுக்கு உரைக்கும்வரையில் அடிக்கடி மாறி மாறி சொல்வார்கள். நீங்கள் அங்கீகரிக்கப்பட்ட சிஷியர்களாக இருந்தால் மாஸ்டர் அவர்கள் உங்களால் கூடாத விஷயங்களை செய்யென்று சொல்லமாட்டார். அவர் சொன்ன புத்திமதி ஒன்றை நீ எடுக்கத் தவறினால் அதை மறுபடியும் சொல்லார். இவ்விதம் சொல்லாதிருப்பதினால் அவர் பக்ஷமில்லாதவர் எனபதல்ல. பின்னை அவர் காலத்தை வீணாக கழிக்கிறதில்லை. அவருக்கு உலகத்திற்காக செய்யவேண்டிய திருப்பணி அதிகம். இப்போதனைகளை ஆல்கியோனிக்கு மாத்திரம் கொடுத்த காரணம் என்னவெனில் அவர் எல்லா வேலைகளிலும் பிரயாசையுடன் அநுஷ்டித்து வந்தார். வைராக்

கியத்துடன் ஊக்கமாயிருப்பவர்களே மாஸ்டரவர்களை யடுத்து வரக் கூடும். உங்களுக்குள் அநேகருக்கு இவ்வித இடைவிடா முயற்சி வெகு கஷ்டமென்று எனக்குத் தெரியும். ஆனால் இது தான் வேண்டியதாயிருக்கிறது. இதுயின்றி மார்க்கத்தில் செல்லமுடியாது.

C. W. L:—மாஸ்டர்களை பின்தொடர்ந்து அவர் சேவகத்தை வெளியுலகில் செய்பவர்களாகிய நாம் ஒரு தடவைக்கு மேல் சொல்லவேண்டியிருக்கிறது. ஜனங்கள் அக்கரையோடு இல்லாததாலும் கவனிக்காதிருப்பதாலும், நாம் நம்மிடத்தில் ஒப்புவித்திருக்கும் அநேக விஷயங்களை அவர்களுக்கு அடிக்கடி சொல்லவேண்டியதாயிருக்கிறது. ஆனால் மாஸ்டர்களை நெருங்கி சேர்ந்து வருகிறவன் எவனும் இனி கவனிக்காமலிருக்க முறையில்லை. அவனுக்கு குறிப்பு ஒன்றே போதுமானது. அதை கவனிக்காவிடில் கட்டாயம் மறுதரம் கொடுக்கப்படமாட்டாது. மாஸ்டர்கள் இரு மாப்புடைய ஆசாரியரென்று இதன் அர்த்தமல்ல; பின்னை மாணாக்கன் இன்னும் பக்குவமடையவில்லை என்று பொருள்.

மாஸ்டர்கள் தங்கள் சீடர்களை சீர்திருத்தும் வகையைத்தெரிந்து கொள்ளவேண்டியது அவசியம். வாஸ்தவத்தில் அவர்கள் நேராக யாதொரு ஆக்ஞையும் கொடுப்பது அருமை. அநேக வருஷங்களுக்கு முன் என்னை சோதிக்கும் சீஷனாகஎடுத்தபோது "நான் என்ன செய்யட்டும்?" என்று நான் கேட்ட முதல் கேள்விக்கு அவர் "அதை நீயே கண்டுபிடிக்கவேண்டும்" என்று பதில் சொல்லி "நான் எதைச் செய்யச் சொன்னாலும் அதை நீ உடனே செய்வாய் என்று எனக்கு நன்றாய் தெரியும்; அப்படி செய்வதால் சொன்னதை கேட்டவுடன், கீழ்படிந்து நடக்கும் (கர்ம) பலன் மாத்திரம் உனக்கு வருமே தவிர, செய்த காரியத்தின (கர்ம) பலன் என்னைச் சேர்ந்துவிடும். காரியத்தின் பலனை கூட நீயே பெற வேண்டுமென்பது எனது கருத்து. நீயே நல்ல விஷயங்களை எடுத்து நற்கருமங்களைச் செய்யவேண்டும் என்று எனது இச்சை. கருத்தை நீயே துவக்கவேண்டுமே தவிர என்னால் துவக்கப்பட்டு வரக்கூடாது," என்று விவரித்துச் சொன்னார். பெரியோர்கள்

ஒருபோதும் நேராக கட்டளை யிடுவதில்லை. ஆனால் அடிக்கடி மாஸ்டர்கள் சொல்லுவதிலிருந்தும் அல்லது அவர் கண் பார்வையி லிருந்தும் ஒரு விஷயத்தைப் பற்றி அவருடைய அனுமதியை தெரிந்துக் கொள்ளக்கூடும். அநேகமாய் மாஸ்டர் குதூமி அவர்களை சூழ்ந்திருப்பவர்கள் முக்கியமாய் இவ்வித குறிப்புகளை எடுத்துக் கொள்ள சீக்கிரத்தில் கற்கிறார்கள். சிஷியர்கள் எல்லோரும் குருநாதனுடைய குறிப்பிற்காக எப்பொழுதும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

மாஸ்டர் மோரியா அவர்கள் இப்பொழுது எடுத்திருக்கும் ஸ்தூல தேகத்தின் துவக்கத்தில் அரசனாக இருந்தார். அவர் அரச ருக்குரிய கம்பீர வார்த்தைகளாடுகினறார். பெரும்பாலும் இவர் நேராக கட்டளை அடிக்கடி கொடுப்பதுண்டு. இவர் சம்மதிக்காத தைப் பற்றி தெளிவாக எடுத்துச் சொல்லுவார். மாஸ்டர் குதூமி அவர்களோ சம்மதிக்காததைப் பற்றி ஒருபோதும் சொல்லுவ தில்லை. ஆனால் அவருடைய பார்வையைக் கண்டு இன்னது என்று தெரிந்துகொள்ள சிஷியர்கள் கற்று இருக்கிறார்கள். ஏனெ னில் அவர் குற்றமாக படும்படியான வார்த்தைகளை ஒருபோதும் உபயோகிக்கிறதில்லை. ஆதலால் ஒவ்வொரு விஷயத்திலும் அவ ரது குறிப்பை தெரிந்துகொள்ள வெகு ஜாக்கிரதையுடன் சிஷியர் கள் காத்திருக்கிறார்கள். கொடுத்தபோது அதை எடுத்துக்கொள் ளுகிறார்கள். ஏனெனில் தவறினால் அக்குறிப்பு மறுமுறை கிடைக் காது. அப்படி எடுக்காது தவறுதல் குற்றமென்றாவது கஷ்ட மென்றாவது காட்டும் குணம் மாஸ்டர்களிடத்திலில்லை ஆனால் சிஷியனுக்கு இன்னொரு தடவை குறிப்பு கிடைப்பது துர்லபம்.

''மாஸ்டர்களும் மார்க்கமும்'' என்கிற நூலில் வெவ்வேறு மாஸ்டர்கள் தத்தமக்குரிய ரேகை (Ray) யின்படியும் அவர்களுக் காக ஏற்பாடு செய்துவரும் வேலையின் சம்பிரதாயத்தின் படியும் அவர்களுடைய சீடர்களை பழக்கி வருகிறார்கள் என்று விவரித் திருக்கிறது. மனுவுடையவும் மாஸ்டர் மோரிய அவர்களுடையவும் கதிர் கிரண (Ray) வகுப்பில் இருப்பவர்கள், க்ஷத்திரிய வம்சத்துக் குரியவர்கள், இராஜ்ய பரிபாலிக்கும் அதிகாரிகள், நியாயாதிபதிகள்,

Lawyers படைவீரர்கள் அமைச்சர்கள் முதலியவர்களாம். போதசத்வருடையவும் மாஸ்டர் குதூமி அவர்களுடையவும் கதிர கிரண (Ray) வகுப்பில் பிராமண வகுப்பினர், உபாத்தியாயர்கள், ஆசாரியர்கள், மதத்தை சீர்த்திருத்துபவர்கள் முதலியவர்களாம். இவ்விரண்டு கிரணத்திற்கு மேல் இன்னும் ஐவகை கிரணங்கள் தத்தமக்குரிய பிரதான லட்சணக் குறிகளோடு இருக்கின்றன. ஆறுவது தீக்ஷை பெற்ற சோவஹன் எனும் மஹாரிஷி ஒருவர் ஒவ்வொரு கிரணத்திற்கும் அதிபதியாக வீற்றிருக்கின்றார். அவர் கை கீழ் அநேக மாஸ்டர்கள் இருக்கின்றார்கள். இப்படி இருத்தலால் இரண்டாவது கிரணத்துக்குரிய ஒரு சிஷியன் மாஸ்டர் குதூமி அவர்களின் கை கீழ் இருக்கவேண்டிய அவசியமில்லை; ஜீவால்கூல் அவர்களின் கை கீழ் இருக்கக்கூடும்.



## ௬-வது அத்தியாயம்

### நால்வகை பிரவேச வழிகள்,

C. W. L.:—அதிகாரியாக்கும் மார்க்கத்தின் (Probationary Path) முகனைக்கு கொண்டுபோய்விட முக்கியமான வழிகள் நான்குள என்று சொல்லப்பட்டிருக்கிறது. இவ்வழிகளில் மார்க்கத்தில் நடப்பவருடன சேர்ந்திருக்கும் "சத்சங்க" சேர்க்கை மெத்த விசேஷமென்று கூறப்படும். அப்படி கூடியிருந்தால் மார்க்கத்திலுள்ள மகிமையையும் சிறப்பையும் அதை பெறவேண்டிய அவசியத்தையும் நோக்கும்படிச் செய்கிறது. பரிபக்குவத்தில் தேர்ந்த சிஷியருடைய தேகத்திலிருக்கும் காந்தவன்மை அவர்பேசும்போது மாத்திரம் வருவதல்ல; மற்று பரமார்த்த வாழ்க்கையின் தீக்ஷண்யம் அவருடைய தேகத்திலிருந்து சதாவீசிக்கொண்டிருக்கிறது; இது எவ்வளவோ பலமுடையது. இவ்வுண்மை இந்தியாவில் முற்றும் தெரிந்திருக்கிறது. அத்தேசத்தில் விதவிதமான அநேக ஆசாரியர்கள் வெவ்வேறு படிகளில் அவரவர் மகத்துவத்திற்குத் தக்கபடி இருக்கின்றனர். இவர்களை குருக்கள் என்று சொல்லுகிறார்கள். இவர்கள் தம்மைச் சூழ்ந்திருக்கும் சிஷியர்களுக்குச் சாஸ்திரக் கருத்துகளை உபதேசிக்கிறார்கள்; சிலசமயங்களில் மந்திரங்கள் ஜபித்தலையும், தியானஞ் செய்யும் விதத்தையும், யோகவழிகளையும் கற்றுக் கொடுக்கிறார்கள். ஆனால் சிஷியர் தேறுவது முக்கியமாய் இவைகளால் அல்ல; குருவுடன கூடி வசித்திருக்கவேண்டியது வெகு முக்கியமான விஷயம். அவர் இடம்விட்டு இடம்போகும் சஞ்சாரியாய் இருந்தால் கிருஸ்து பகவானுடன் சிஷ்யர்கள் "பலஸ்டைனில்" போனதுபோல் இவர்களும் கூடவே போய்க்கொண்டிருப்பார்கள். அவர் ஓர் இடத்தில் வசித்திருந்தால் சிஷியர்கள் அவரைச்சூழ்ந்து காலருகில் உட்கார்ந்து அவர் எப்போதாவது சொல்லும் மொழிகளை உற்றுகேட்டுக் கொண்டிருப்பார்கள். ஆனால் அவர் சந்நிதியின் அருகிலிருக்கும் மகிமையால் அவர்கள் பிரயோஜனமடைகிறார்கள். உபதேசங்களால் அவ்வளவு இல்லை.

இந்தப்படி தேறிவரும் முறை முற்றும் சாஸ்திரயுக்தமாயுள்ளது. குருவினுடைய உயர்வான சூக்ஷ்ம கோசங்கள் மாணாக்கர்களுடையவைகளைவிட மேலான மெட்டில் பேசும்படி மூட்டிக்கொண்டிருக்கின்றன. இவர்கள் உலகவாழ்க்கையை விட்டு துறவிகளாக வந்தது கொஞ்ச காலமானதால் இவர்களுடைய சூக்ஷ்மதேகங்களின் நிலை தாழ்ந்திருக்கின்றது. குருவைப்போல் இவர்களிடமிருந்து, சுயகாமிய நோக்கம் முற்றிலும் போகவில்லை. இவர்கள் தாங்களாகவே தங்களை கைக்கொண்டு தங்களுடைய குற்றங் குறைகளைத் தெரிந்து அவைகளைக் களையவும், நற்குணங்களைப்பெருக்கவும் பிரயாசைப்பட வேண்டியிருக்கிறது. சுருக்கமாகச் சொல்லின் தங்கள் சுபாவகுணத்தை முற்றும் மாற்றுவது. இதுவெகு மெதுவான நீடித்தவேலை. துற்குணங்களை ஒழித்து நற்குணங்களால் நிறைந்துள்ள குருவினது சந்நிதானத்தில் இருக்கப்பெற்றால் நல்லொழுக்க சாதனைகளைச் சாதிக்க அவர்களுக்கு மெத்த அநுகூலமாயிருக்கும். குருவினது உயர்வான மனோதீக்ஷண்யம், சீடர்கள் விழித்திருந்தாலும் சரி, தூங்கிகொண்டிருந்தாலும் சரி, அவர்கள் மேல் சதா தாக்கிகொண்டிருக்கும். சீடர்களுடைய தேகம் இதை உறிந்து கொண்டு எல்லாவேளையிலும் சீர்பட்டு வரும். இப்படி திருத்தப்படும் முறை இரஸாயன சாஸ்திரப்படி இருக்கின்றதென்று நன்ருய்த் தெரிந்திருக்கிறது. ஒத்து நடவாத இரண்டு கெடியாரங்களைச் சேர்த்து ஓர் இடத்தில் வைத்தால் வேகமாய்ப் போவது மெதுவாய்ப் போவதைத் தன்னோடு படிப்படியாய் சரிவர போகச்செய்யும்; அல்லது அதை முற்றிலும் போகவிடாமல் நிறுத்திவிடும்.

இரண்டாவது பிரவேச வழி: மார்க்கத்துக்குரிய போதனைகளை 'கேட்டல்' அல்லது வாசித்தல். இதில் சிரத்தையுள்ளவன் மேலான வழிக்குள்ளபோதனையை பற்றி பிடித்துக்கொள்ளுகிருன். அது அவனுடைய யூகத்தை தட்டி, எழுப்பி உற்சாகங்கொடுக்கிறது. ஆதலால் அவனுடைய விருப்பத்தை திருப்திசெய்யவும் அதைப்பற்றி அதிகமாய்த் தெரிந்துக்கொள்ளவும் உடனே விசாரிக்கத்துடங்குகிருன். இது என்னுடைய சொந்த அனுபவம். அக்கல்டு ஓரள்டு (Occult World) என்ற புத்தகத்தைபார்த்தேன் "அப்படியாளுல் தெளிவாய் இருக்கிறது; இப்பெரியோர்கள் இருக்கிருர்களாளுல், அவர்கள்

நமது சேவகத்தை ஏற்றுக்கொள்ளச் சம்மதப்படுகின்றார்களானால், அதற்குப் பதிலாக அவர்களுடைய மதிக்கமுடியாத அறிவை கொடுக்கின்றார்கள் என்றிருந்தால், நானும் சேவகம் செய்பவர்களில் ஒருவனாய் இருப்பேன்; என்றால் கூடியவரையில் சிதறிக்கிடக்கும் ஞானத்தை பொறுக்கி எடுத்து இப்போதிருந்தே எப்படியாவது அந்நிலைக்கு வர வேலை செய்துவருவது ஒன்றுதான் முக்கியம்," என்று உடனே துணிந்தேன. ஆம், போதனைகளை வாசிப்பவர்களும் கேட்பவர்களும் அநேக ஆயிரக்கணக்காய் இருக்கின்றார்கள், என்றாலும் அவர்களுக்கு ஊக்கமென்பது வரவில்லை, ஊக்கம் வருதல் முன ஜன்மங்களிலிருந்த வந்த சாதகத்தைப் பொறுத்தது. அவன் முந்திய ஜன்மங்களில் உலகசேவையின் உண்மையைக் கண்டு அதனது சிறப்பையும் நிச்சயத்தைடம் சந்தேகமற தெளிந்திருந்தால் மாத்திரம் இப்பிறப்பில் அவனுக்கு அதை எடுத்துக்காட்டினவுடன் உண்மைதான் என்று அறிந்துக்கொள்ள முடியும்.

திவ்வியக்ஞான சபையிலுள்ள புத்தகங்களை வாசிக்கும் ஒவ்வொருவரும் திரும்பவில்லையே என்பது அநேகருக்கு ஆச்சரியமானதே. திவ்வியக்ஞான போதனைகள் அற்புதமானவைகளே. அவைகள் அநேகவித சந்தேகங்களை நிவர்த்திக்கின்றன. என்றாலும் திவ்வியக்ஞான புத்தகங்களை சிநேகிதர்களுக்கு வாசிக்க கொடுத்தால் அவைகளை திருப்பி கொடுக்கும்போது பாதி ஜனங்கள் "ஆம் சந்தேகமின்றி இது மனோகரமானது" என்கிறார்கள். ஆனால் அவர்கள் வாஸ்தவத்தில் தெரிந்துகொண்டவர்களலலர். ஒருவனுடைய தற்கால அறிவும் திறமையும் முன் வாசித்துவந்த நற்கருமத்தின் பலனாகும். எவ்வளவுக் கெவ்வளவு முன் அறிந்திருக்கிறானோ அவ்வளவுக்கவ்வளவு அதிகம் இப்போது தெரிந்துகொள்ளக் கூடும். இருபது வருடங்களுக்குமுன ஏதோ ஒரு நல்ல புத்தகத்தை நாம் வாசித்த அனுபவம் இதுவேயாகும். இப்போது அதை வாசித்துப் பாருங்கள். அப்போதைவிட எவ்வளவு அதிகம் தெரிந்துகொள்வீர்கள் என்பது நீங்களே காண்பீர்கள். நீங்கள் தெரிந்துகொள்ளவேண்டிதேறிவந்த திறமையை அதில் பார்க்கக்கூடும்.

மூன்றாவது வழி தெளிவான "அறிவு":—என்று சொல்லுவார்கள். முறைப்படி கடினமாய் தியானிப்பதால் ஒருவன் பிரபஞ்ச

விருத்திக்கு வேண்டிய ஈசுவரனுடைய அமைப்பு (Plan) ஒன்று இருக்குமென்பதையும், அதைமுற்றும் அறிந்திருக்கும் முத்தர் (மாஸ்டர்கள்) இருக்கவேண்டு மென்பதையும், அவர்களைச்சேரும் மார்க்கம் ஒன்று இருக்கவேண்டும் என்பதையும் பார்க்கமுடியும், என்று இதற்கு அருத்தம். எவனொருவன் இவ்வித சங்கற்பத்துடன் இருக்கிறானோ அவன் அந்த நிச்சயத்திற்கு வந்து, மார்க்கத்தை தேடமுயலுகிறான். ஆனால் இவ்வழி நடப்பவர்கள் வெகு சிலரே.

நான்காவது வழி: ஒருவிதத்தில் மிக பிரசித்தம் பெற்றிருக்கிறது; அதாவது 'சீல ஒழுக்கம்', சாதாரண கிருஸ்தவனுக்கு சிலாக்கியமானதாகத் தோனறும் வழி இது. ஏனெனில் அவனுக்கு வேண்டியதெல்லாம் நல்லவனாக இருக்கவேண்டியது ஒன்றே என அவன நம்பி இருக்கிறான். கிருஸ்துவமதத்தில்''பரிசுத்தமடைதல்'' புண்ணிய வானாதல்'' என்பதையே, அடையவேண்டிய முத்தி வீடாகவைத்திருக்கிறார்கள். ஆனால் இதை திவ்வியஞான சபையோர் முதற்படி எனறு, ஞாபகப்படுத்திக் கொள்ளுகிறான். பரிசுத்தமெனபது துர்குணமில்லாத வெறுமையான தனமையே தவிர, மற்றபடி அதிகமானதல்லவென்றும், அது விசேஷமாய் அகமுகப்பார்வைக்கு ஓர் படியாக உதவுகிறது என்றும் 'சேயின்டு கிளமேன்ட்' என்கிற ஞானி தீரமாய்ச் சொல்லுகிறார். இந்த படிக்கு வந்த பிறகு கற்கத் தகுதியானவனாகி ஞானவெளிச்சத்திற்குச் சித்தமாக்கிக் கொள்ளுகிறான். இது இரணடாம்படி. இதற்கு அப்புறம் இருக்கும் மூன்றாவது படியை ''பூரண பக்குவமாதல்'' எனறு கூறுகிறார். 'சேயின்டுபால்' இதைப்பற்றி சொல்வதை கவனியுங்கள் ''பூரண பககுவமடைந்தவர்களிடததில்தான, நாங்கள் ஞானம் பேசுகிறோம். மற்றவர்களிடத்திலில்லை.

இந்த சீல ஒழுக்கம் மார்க்கத்தின் முகனைக்கு கொண்டுபோய் விடுகிறது. ஏனெனில் பலஜன்மங்களில் நன்னடக்கையை சாதித்து வாழ்ந்து வந்தவன் புத்தி விசாலத்தில் தேர்ச்சி*அடையாதிருந்தாலும் அவன் அறிந்தவர்களுடைய சந்நிதிக்குப் போகக்கூடிய அளவும், வாஸ்தவத்தில் மாஸ்டர்களின் சேவகர்களாக இருக்கும் ஒருவருடைய பாதார விந்தத்தை சேருமளவு யூகம் சீக்கிரம் அடை

வான். என்றாலும் இந்தவழி அநேக ஆயிரவருஷங்கள் செல்லும், பல ஜன்மங்களும் பிடிக்கும் என்று நாம் அறிந்ததே. சில ஒழுக்கத்தில் பழகிவரும் ஒருவன் அறிவை விருத்தியாக்குகிறதில்லை, என்றாலும் கடைசியில் மார்க்கத்தில் வந்துசேருவான. ஆனால் இது மெதுவான வழி. அவன் "சேயின்டு பீடருடைய" புத்திமதியை அனுசரித்து அறிவையுங்கூட விருத்தி செய்வானானால் கூடிய சீக்கிரத்தில் முன்னேற்றத்தை அடைவான்.



# 7-வது அத்தியாயம்

## நான்கு சாதனங்கள்.

இச்சாதனங்கள் அநேக மதங்களில் மேன்மேலும் சொல்லப் பட்டு வருகின்றன. ஆனால் இப் புத்தகத்திலுள்ள சாதனப் பெயர் கள் கொஞ்சம் வித்தியாசமுடையன. முதற்படியாகிய பகுத்தறிவு என்பதில் வித்தியாசம் கொஞ்சமும் இல்லை. கிருஸ்தவர்கள் சொல் லும் "கன்வர்ஷன்" என்ற பதத்தின் கருத்து இந்துக்களும் புத்தர்களும் உபயோகிக்கும் வார்த்தைகளில் இருக்கிறது என பதையும், சிஷியன் தனது "கீழ் நானை" ஜீவாத்மாவுடன் சேர்ப் பிக்கும் விதத்தையும், நான் முன்னரே கூறியிருக்கிறேன். உண்மை யான மார்க்கத்தில் வந்தபிறகு ஜீவான்மாவையும் பிரத்தியேகான் மாவையும் ஒன்றுசேர்க்க இன்னொருதரம் துவக்கவேண்டியதா யிருக்கிறது. ஜீவான்மாவானது பிரத்தியேகான்மாவினுடைய ஒரு சிறுபின்னம், இதை பிரம்மலோகத்தின் மேல்படியில் இறக்கிவைத் திருக்கிறது. போக சாதனத்திற்கும் தன்னுடைய நிலையில் முடி யாத வர்த்தமான விவகாரங்களை எடுக்கவும் தொடுக்கவும் கர்க பிரத்தி யேகான்மா தன்னுடைய ஓர் பின்னத்தை கீழே அனுப்புகிறது. ஆகையால் ஜீவான்மாவும் கிரமமாக தான் பிரத்தியேகான்மாவி னுடைய ஒருபாகம் என்பதையும், பிரத்தியே கான்மாவுக்காகவே தான் இருப்பதையும் அறிந்து கொள்ள வேண்டி யிருக்கிறது. அதை கிரமமாக முற்றும் அறிந்து கொண்டால் ஐந்தாவது தீக்ஷை பெற சித்தமாகி அப்படியே முத்தராகக்கூடும்.

இவ்விரண்டு தீக்ஷைகளுக்கு சித்தப்படுத்திக்கொள்ள வேண் டிய முக்கிய கருத்துக்கள் இவைதான். முதல் தீக்ஷையில் "கீழ் நான்" என்பதில் வேலை செய்வது. "மேல்நானை"த்தவிர வேறொன றில்லாதபடி ஒன்று சேர்வது. ஐந்தாவது தீக்ஷையில் பிரத்தியே கான்மாவின் சம்மதம் இல்லாத விஷயமாவது, அதன் ஏவலாக இல் லாத விஷயமாவது ஜீவான்மாவிடத்தில் இல்லாதபடி ஒருமைப்படு வது. பிரத்தியேகான்மா நமது வாழ்வை கவனிக்கும்போது அதுமே லிருந்து கடவுளைப்போல் தாக்கி விளக்குகின்றது. தீக்ஷைகளைப்

பெறும்போது அது மின்னலைப்போல் கீழ் தாக்கி ஜீவான்மாவுடன் ஒன்று சேர்ந்து அச்சமயத்தில் ஜோதியாய் நிற்கின்றது. இவ்வித ஐக்கியம் முத்தர் நிலையைப்பெற்றபோது ஸ்திரமாயிருக்கும்,வேறுசில சமயங்களிலும் பிரத்தியேகான்மா இறங்கி வருகிறது. ஆல்கியூனி புத்தபகவானிடத்தில் முன் ஜன்மம் ஒன்றில் பிரதிக்கினை எடுத்த போது பிரத்தியேகானமா இறங்கி வந்தது என்று முன் ஜன்மங்கள் என்கிற புத்தகத்தில் எழுதியிருக்கிறது.

எதை அநுசரித்து நடந்தால் பிரயோஜனமானது, எது நிஷ் பிரயோஜனமானது எனும் பகுத்தறிவு முற்கூறிய பிரவேச வழிகள் ஏதாவது ஒன்றில் நடப்பவர்களை, கொண்டு போய்விடுகிறது.பிறகு மாஸ்டர் அவர்கள், இந்நூலில் பெயரிட்ட விராகை என்னும்இரண் டாம் சாதனத்தை அநுஷ்டிக்க வேண்டுமென்று அவர்களுக்குத்தெரி கிறது. டாக்டர் பெசன்ட் அம்மையார் இதை 'உபேக்ஷை' என்றும் 'விராகம்' எனறும் மொழிபெயர்த்தார். "ஒருவனுடைய கர்மத்தால் வரும் பலனில் விரக்தியோடிருத்தல் எனபது வைராக்கியத்தின் பொருள். இதை புத்தபகவான் கொஞ்சம் வேறாக கொடுத்திருக் கிறார். இதை பாலி பாஷையில் "பரிகம்மா" என்று கூறியிருக் கிறார். கம்மா அல்லது கர்மா என்றால் வினை செய்வதற்குச் சித்த மாக்கிக்கொள்வது என்று பொருள். ஆதலால் இரண்டாவது படியை வினையைச் செய்வதற்கு ஆயத்தப்படுத்தல் என்று அவர் கூறுகிறார். சரியாயிருக்கவேண்டும் என்பதற்காகவே சரியான வினையைச் செய்யவேண்டும் என்பதையும், தனக்கென்று எவ்வித பிரயோஜனத்தையும் எதிர்பார்க்காமல் அதைச் செய்யவேண்டும் என்பதையும், கற்க இப்படியில் வற்புறுத்தியிருக்கிறார். இதை தவ றாக அருத்தம் கொள்ளக்கூடாது. பிரதி பலனில் விரக்தி என்று சொல்வதால் ஒருவன் மற்றவர்களுக்கு என்ன நேரிடும் என்பதை கவனியாமல் கடமைத்தொழிலைச் செய்யவேண்டும் என்று அநேகர் சொல்லுகிறபடி யல்ல. இந்நூலிலும் முன்னுக்கு, பலனைப்பற்றி கவனியாமல் "எது சரியோ அதை நீ செய்யவேண்டும், எது பிழை யோ அதைச் செய்யக்கூடாது" என்று சொல்லி யிருக்கிறது. இத னால் மற்றவர்களுக்கு என்ன கெடுதிவரும் என்பதை கவனியா மலே நினைத்ததை எல்லாம் செய்யலாம் என்கிற அருத்தமல்ல

வாஸ்தவத்தில் பிறருக்கு விளையும் பலனைக்கொண்டுதான் வினையை நல்வினை என்றும் தீவினை என்றும் பகுக்கிறோம். மாஸ்டர்களிடத்தில் சிஷ்யனாக இருக்கப்பெற்றவன் செய்வதில் தனக்கு வரும் பலனைப்பற்றி கவனிக்கிறதில்லை. ஆனால் மற்றவர்களுக்கு என்ன நேரிடும் என்பதை வெகு கண்டிப்பாய் கவனிக்கின்றான்.

நல்லொழுக்கம் எனும் மூன்றாவது சாதனத்தில் ஆறுவிதிகள் அடங்கியிருக்கின்றன. இதை இந்துக்கள் "ஷட்சம்பத்தி" என்று பெயரிட்டிருக்கிறார்கள். இதை புத்த பகவான் பாலிபாஷையில் "உபசாரோ" என்று கூறியிருக்கின்றார். இது 'ஒழுக்கம்' அல்லது "கவனிப்பு" என்று பொருள். அதாவது இந்த ஆறு விதிகளிலுள்ள ஒழுக்கங்களை கவனித்தல். மாஸ்டர் துநாமி அவர்களது சாதனப் பெயர்களை இப்புத்தகத்தில் போகப்போகக் காண்போம். புத்தபகவான் அவைகளை "சமோ" அதாவது "அமரிக்கை" அதாவது மன அடக்கம்; பிறகு "தமோ" அதாவது "அடக்கி ஆளுகை" அதாவது தேக அடக்கம் (செயலடக்கம்) பிறகு 'உபாதி', 'திதிக்கா' "சமாதானு" 'சத்தா,' இவை ஒருங்கே விடல், சகித்தல், ஏகாக்கிரம், சிரத்தை, என்பவையாம். இவ்வார்த்தைகளை எல்லாம் தென்புத்த ஆதீன கிளைக்கு அதிபதியான 'சுமங்கலதீரோ' என்னும் பெரிய குருக்களைகொண்டு முக்கிய அகராதிகளைக் களைந்து பார்த்து மொழிப்பெயர்க்கச் செய்தேன். இவ்வார்த்தைகள் அந்த ஆதீனத்தில் இப்பொழுது வழங்கும் பாடங்களுக்கு ஒத்திருக்கின்றன.

இவைகள் இப்புத்தகத்தில் இருக்கும் சாதனப் பெயர்களைவிட கிஞ்சித்து வித்தியாசப்பட்டிருக்கின்றன. "விடல்" என்பதை 'பொறுமை' என்று சொல்லியிருக்கிறது. ஏனெனில் பிடிவாதத்திலிருந்தும், விபரீத மூடக்கொள்கையிலிருந்தும் விடுபடுவதும், தான் செல்லும் வழி மற்றவர்களுடையதைவிட மேலானது எனும் எவ்வகை கருத்தை யொழிப்பதும், யாதொரு சடங்கும் மதாசார கிரியையும் அவசியமில்லை என்றுவிட்டு பொறுமையோடிருப்பதே விடல்; சகித்தல் என்பதை இன்னொரு கருத்தில் பார்த்தால் 'களிப்பு'. ஏகாக்கிரம் என்பது ஒரே மனநிலை நாட்டம்; தன்வாழ்க்கையை தன் நோக்கத்திற்குத் தக்கவாறு அமைப்பது; ஆதலால் ஸ்தி

ரத்தோடிருப்பது. சிரத்தை என்பது தனது குருவினிடத்திலும் தன்னிடத்திலும் வைக்கும் விசுவாசம். இவ்விரு மதங்களிலும் சாதனங்கள் ஒரேமாதிரியாகத்தான் இருக்கின்றன. ஆனால் **புத்த பகவான்** அறிவு அவசியம் என்கிற கருத்தின்படி வற்புறுத்தி சொல்லியிருக்கிறார். மைத்திரேய பகவானும் **மாஸ்டர் குதூமி** அவர்களும் அன்பு அவசியமெனும் கருத்தின்படி வற்புறுத்தியிருக்கின்றார்கள். ஆல்கியூனிக்கு உபதேசித்து வரும்போது மாஸ்டர் அவர்கள் சாதாரணமாய் வழங்கிவரும் பெயர்களைவிட்டு அனுபோகத்திற்குரிய கருத்துகளை யூட்டும் வார்த்தைகளை உபயோகித்திருக்கின்றார்.

நான்காம் சாதனம் அன்பு என்று சொல்லப்பட்டிருக்கிறது. இது வடமொழியில் "முமூட்சத்துவம்"; பிறப்பு இறப்பிலிருந்து விடுபட்டு பரம்பொருளில் ஒன்று சேர இச்சிக்கும் தீவிரமான விருப்பமென்று அருத்தம். **புத்த பகவான்** அவருடைய முறையில் "அநுலோமா" என்று கூறினார், அதாவது "நேர்வரிசைக் கிரமம்" அல்லது "தொடர்பான சம்பவம்" ஒருவன் மற்ற சாதனங்களைச் சாதித்துத் தேர்ந்திருப்பானானால் கீழ்லோகத் தடைகளிலிருந்து தப்பிக்கொள்ளவும, உதவி புரியவேண்டி பரம்பொருளோடு ஒன்றுபடவும், அவன கட்டாயம் இச்சிக்கவேண்டி யிருக்கிறது என்பது அவர் அருத்தம்.



எப்பொருள் எத்தன்மையதாயிருப்பினும், அப்பொருளி
லிருக்கும் மெய்ப்பொருளைக் காண்பது அறிவு.

## 9-வது அத்தியாயம்

### மெய் நோக்கம், பொய் நோக்கம்.

C. W. L:—நூலிற் குறித்திருக்கும் முதல் சாதனத்தைப் பற்றி இப்போது பேசுவோம்.

> "இச் சாதனங்களில் முதலாவது பகுத்தறிவு; முக்தி மார்க்கத்துள் மக்களைப் புகவைக்கும் நித்தியாநித்திய வஸ்து விவேகம், என்று இதைச் சொல்வது சாதாரணம். உண்மையே; என்றாலும் பகுத்தறிய வேண்டியவை இன்னும் அதிக மிருக்கின்றன. அதை மார்க்கத் துவக்கத்தில் மாத்திரமே யல்லாமல் முடிவு வரையில் ஒவ்வொரு படியிலும் நாள்தோறும் சாதிக்க வேண்டி யிருக்கிறது."

மார்க்கத்தின் சிறப்பை தெரிந்துகொண்டு, அதில் நடக்க நிச்சயித்து, மாஸ்டர்களுடைய பாதாரவிந்தங்களைச் சேர விரும்புகிறவர்களில் அநேகருக்கு இருக்கும் கஷ்டங்கள் மேற்கூறிய வாக்கியங்களில் திட்டமாகக் காட்டப்பட் டிருக்கின்றன. இப்படி வருபவரெல்லோரும் நல்லவர்கள், ஊக்கமுடையவர்கள், பிரயாசைப்படுபவர்கள். என்றாலும் இவர்களுடைய தேகான்மா ஸ்திரமான சுபாவமில்லாமல் இருக்கிறது. மேலும் தேச அபிப்பிராயம் என்னும் எண்ணத்தின் வலிமையை இவர்கள் எதிர்த்து போகவேண்டி யிருக்கிறது. இதுவுமன்றி இன்னும் விசேடித்த கஷ்டம் ஒன்று இருக்கின்றது. அதாவது மானிட வர்க்கம் மன்வந்தரசுற்று மூன்றை முடித்து, இப்போது நான்காவதின் நடுவைத்தாண்டி கொஞ்சம் வந்திருக்கின்றது. ஏழாவது சுற்றுமுடிவில் வாழ்வதற்கு சுலபமாகவிருக்கும் ஒழுக்கங்களை இப்போதே செய்ய இவர்கள் முயலுகிறார்கள். அந்தகாலத்தி லிருப்பவர்களுடைய ஸ்தூல,காமமய, மனோமய, கோசங்களாகச் சேரும் பௌதிக அணுக்கள், (நமக்கு இப்போது

இருக்கின்றவைகளைவிட) முற்றிலும் பக்குவப்பட்டிருக்கும். மேலும் அவைகளில் நாதம்பேசும் இழைபோன்ற சூட்சும கம்பிகள் சில, இப்போது பக்குப்வபட்டு வந்திருக்கின்றன; அப்போது எல்லா கம்பி களும் பக்குப்வபட்டிருக்கும். அனறியும் அவர்களைச் சூழ்ந்திருக்கும் எல்லாவித பூத பௌதிக சக்திகளும் அக்காலத்தில் உதவி புரியும். இப்போது இருக்கின்ற தடைகள் யாவும் இரா.

மாஸ்டர்கள் நமக்கு அநுகூலமாய் இருக்கிறார்கள்; அவர்க ளுடைய கிருபாபலமும் நமக்கு உதவிதருகின்றது; விகாசமுறை மெதுவாக நடப்பினும் நமக்கு அநுகூலமாயிருக்கின்றது. இனிவர வேண்டியதும் நமக்கு இசைந்து இருக்கின்றது. எனாறலும் இவ் விதமான சாதனம் எதையும் செய்தற்கு இப்போது வெகு கஷ்ட காலமாக இருக்கின்றது. மன்வந்தர ஐந்தாவது சுற்றின நடுவில் மானிடவர்க்கம் வரும்போது நம்முடைய அபிவிருத்திக்கு இடை யூறாக கஷ்டங்கொடுப்பவர் யாவரும் ஒதுக்கி விடப்படுவார்கள். நம்மோடு சேர்ந்து செல்கிறவர்களைத் தவிர மற்றவர்களை இருக்க விடமாட்டார்கள். ஆகையால் ஏழாவது சுற்றில், விஷயங்கள் அற் புதமாகவே சுலபமாயிருக்கும். இப்போது ஜீவன் முத்தர்கள் வசிக் கும் இடங்களில் இருக்கும் அநுகூல சௌகரியங்கள் அப்போது எங்குமிருக்கும். ஒருவன் வெளிஉலகில் எங்கும் வசிக்கக்கூடும், "அப்படியிருக்குமானால் நாம் ஏன் ஏழாவது சுற்றுவரைக்கும் காத் திருக்கக் கூடாது"? என்று சிலர் எண்ணக்கூடும், நம்மில் அநேகர் இருபது அல்லது முப்பதாயிரம் வருஷங்களாக சௌக்கியமாய் எல்லாவித சௌகரியத்துடன் பவச்சுழலில் மிதந்துகொண்டு வந் திருக்கின்றார்கள். முன்னேற்றம் அடையவும், அல்லது உலகத் திற்கு உதவிபுரியவும் தீவிரவிருப்பம் இதயத்திலில்லாதவர்கள், இன்னும் ஒரு கோடிவருஷம் இவ்விதமே பழயபடி போய்க்கொண் டிருக்கலாம். முடிவில் இவர்களுக்குச் சுலபமாயிருக்கும் என்பதற்கு ஐயமில்லை. ஆனால் இப்போது கஷ்டமெடுத்து மேலே போகிற வர்களுக்கு, விகாசமுறையில் உதவிபுரியபாக்கியமும், மாஸ்டர்களை தேற்றி முன்னுக்கு கொண்டுபோக ஏராளமான அதிகார கௌரவ மும் கிடைக்கும். கிருஸ்துவ பழய பாசுரம் ஒன்றில் சொல்லி யிருப்பதை கவனியுங்கள்:—அதில் ஒருவன் தெய்வலோகத்திற்குப்

போனபோது சுற்றுமுற்றும் பார்த்ததில் தான் மாத்திரம் மற்றவர்களைவிட எப்படியோ வேறு விதமாக இருப்பதைக் கண்டு ஆச்சரியப்பட்டு கடைசியாய் கிருஸ்து பகவானை நோக்கத் தரிசித்தபோது தான் இவ்விதம் இருக்கும்காரணம் என்னவென்று அவரைக் கேட்க அவர்:—நீ என்னை நம்பினதும், எனக்காக நீ செய்த நடவடிக்கைகளும் மற்றவைகளும் எனக்குத் தெரியும். ஆனால் உன்னுடைய கிரீடத்தில் இருக்கவேண்டிய மகிமைபெற்ற நட்சத்திரங்கள் போன்ற வைரங்கள எங்கே? என்னிடத்திற்கு கொண்டுவந்த ஒவ்வொரு ஆன்மாவிற்கும் ஒரு இரத்தினம் அதோ அந்த ஆநந்த கூட்டத்திலிருக்கும் ஒவ்வொருவருடைய நெற்றியிலும் பிரகாசிக்கின்றது பார், அவர்கள் இப்போது இரத்தின கிரீடத்தைத் தரித்துக்கொண்டிருக்கின்றனர்'' என்று கூறினார்.

கிருஸ்து வேதத்தில், அறிஞர்கள் சுத்த ஆகாயத்திலிருக்கும் ஒளிபோல் அகண்ட ஜோதியாய்ப்பிரகாசிப்பார்கள் என்று சொல்லியிருக்கிறது. ஆனால் சன்மார்க்கத்திற்கு அநேக ஆன்மாக்களை திருப்பிக்கொண்டு வருகிறவர்கள் என்றென்றைக்கும் நட்சத்திரங்களைப் போல் இருப்பார்கள்.—ஜகஜ்ஜோதியான சூரியர்களாகவிருந்து ஆயிரக்கணக்கான ஜனங்களுக்கு அறிவையும் அன்பையும் பலத்தையும் பொழிந்துகொண்டிருப்பார்கள். இப்போதிருந்தே சாதித்து வருவோருக்கும், ஏழாவது மன்வந்தரம் வரையில் நிதானமாய் மிதந்து கொண்டு போகிறவருக்கும் உள்ள வித்தியாசம் இதுதான்.

"பெறுதற்குரிய பொருட்களை இம்மார்க்கத்தில்தான் கிடைக்கமுடியுமென்று நீ தெரிந்து கொண்டதினாலல்லவோ நீ இதில் பிரவேசிக்கின்றாய்; அறியாமாந்தர்கள் ஆஸ்தியையும் அதிகாரத்தையும் தேட உழைக்கின்றனர். ஆனால் இவைகள் எவ்வளவு காலமிருந்தபோதிலும் ஒரு ஜன்மத்திற்குமேல் நிற்காது; எனவே நித்தியமல்ல; இவைகளைக் காட்டிலும் சிறந்த பொருள்கள், மெய்யானவைகள், நீடித்துள்ளவைகள்

இருக்கின்றன. இவைகளை ஒருதரம் பார்த்து விட்டாயானால் மற்றவைகளை இனிமேல் ஒரு போதும் நீ ஆசைப்பட மாட்டாய்.''

A, B :—நித்தியமெது, அநித்தியமெது எனும்கேள்வி மிகவும் ஆழ்ந்த தத்துவ விசாரணைக்குரியது. ஆனால் இவ்விடத்தில்அதைப் பற்றி நமக்கு விசேஷமாய்ச் சம்பந்தம் இல்லை. ஏனெனில் மாஸ்டர் அவர்கள், ஆல்கியூனி பசும்பாலகனை விருக்கும்போது சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தார்; மேலும் புவர்லோகத்திலிருந்து (Astral Plan) சொன்னது. இவ்வித சந்தர்ப்பங்களில் மாஸ்டர் அவர்கள் ஜீவான்மாவையும் மனதையும், நோக்கி சொன்னது. முற்றும் பக்குவத்திற்குவராத சிறுவனுடைய மனதிற்குத் தக்க நடையில் போதித்தார். ஜீவான்மா எவ்வளவோ அதிக பரிபக்குவத்திற்கு வந்திருந்தபோதிலும் இப்பிறப்பிற்குரிய புதிய (ஸ்தூல, ஆசைமய, மனோமய) மூன்று கோசங்களும் இவர்வயதிற்குத் தக்கபடி இளமையாயிருந்தன. ஆதலால் சிஷியனை இவர் விழித்தவுடன் நனவில் மனதிற்குத் தெரியும் வண்ணம் போதனைகளை வெகு சுலபமாக விளக்கிக் கூறினார்.

பரமார்த்தமல்லாதவைகளும், கானல் ஜலம்போன்ற இவ்வுலகில் தோன்றி அழியும் ஒவ்வொன்றும், தேகான்மாவிற்குச் சொந்தமென்று உரிமையாடும்படியான எல்லாவஸ்துக்களும், சுவர்க்கம் வேண்டுமென்று சிரத்தையோடு செய்யும் உயர்வான எல்லா விஷயங்களும், அநித்தியமென இவ்விடத்து கொள்ளப்படுகின்றன. இவ்விடத்தில் மாஸ்டருடைய கருத்துயாதெனில், கடவுள் பிளான் படி இசைந்திராதவை எல்லாம்அநித்தியமென்பதே. பகுத்தறிகின்ற அறிஞர்கள் உண்மையான விஷயங்களை அறிந்திருக்கிறார்கள்; உண்மையில் கர்த்தா அவரே ஆகையால் அவர்கள் கடவுளின் பிரதிநிதிகளாக விருந்து அவரது திருவுள்ளத்தை நிறைவேற்றச்சேவகஞ் செய்கின்றார்கள். இப்படிச் செய்யும்போது லௌகிக அலுவல்களை அலக்ஷியமாய் விட்டுவிடவேண்டுமென்கிற குறிப்பில்லை. உலகத்திலுள்ள வேலையை முன்னைவிட நன்றாய்ச் செய்யவேண்டுமென்பதேயன்றி குறைவாகச் செய்யவேண்டுமென்பதல்ல, ஏனெ

னில் அவர்கள் வெளியுலகில் கடவுளுடைய வேலையை நடத்தும் ஏஜண்டுகள். "யோகமென்பது வேலையைத் திறமையோடு செய்வது" என்று "கீதையில்" சொல்லி இருக்கிறது. மேலும் யோக மென்றால் கடவுளோடு ஒன்று சேர்ந்திருத்தல் எனப் பொருள். எவனொருவன் இவ்விதம் ஒற்றுமைப்பட்டிருக்கிறானோ அவனுடையவேலை சாமர்த்தியமாய் செய்யப்பட்டதாய் இருக்கவேண்டும். ஏனெனில் அவ்வேலையைச் செய்வது அவனல்ல;பின்னை அவனுள் இருக்கும் கடவுள். அர்ச்சுனன் ஸ்ரீ கிருஷ்ணபகவானை நோக்கி யுத்தத்தைப்பற்றி கேட்டபோது அவர் பகைவர்களை தாம் முன்னரே சம்ஹரித்து விட்டதாகச் சொல்லி "ஓ அர்ச்சுனா ஆதலால் யுத்தம் செய்" என்றார்.

மேலான விஷயங்களைப் பார்த்தபிறகு மற்றவைகளின் பேரில் ஆசைநாடாது என்று மாஸ்டர் கூறினார். இக்கருத்தை கீதையை வாசிப்பவர்கள் அறிவார்கள். அதில் "ஐம்புலன்களுக்குச் சம்பந்தப்பட்ட விஷயங்கள் நிராஹாரமாயிருக்கும் தேகியைப் பற்றுது திரும்பி விட்டபோதும் அவைகளின் ருசி விட்டுப்போவதில்லை; பரம்பொருளைக் கண்டவுடன் இந்தருசியும் நழுவிவிடும்" என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஏகமான ஒன்றை ஒருவன் தரிசித்த போது இந்திரிய விஷயங்களின்மேலிருக்கும் ஆசை அவனிடமிருந்து ஒழிந்துபோகின்றது,

C. W. L:—மேலான விஷயங்களை ஒருமுறை பார்த்தபோது கீழ்விஷயங்களின் பேரிலிருக்கும் ருசிபோய் விடுவது வாஸ்தவந்தான்; ஆனால் ஒருவன் உலகவிஷயங்களைப் பின்பற்றாதிருப்பதற்கு மேல்விஷயங்களைத் தரிசித்தலே காரணமாயிருத்தல்வேண்டும். கீழ் விஷயங்கள் அவைகளுக்குரியபடியில் வெகு நல்லவைகளாக விருப்பினும் பரமார்த்தத்திற்குரிய மேலானவைகளோடு வைத்துப் பார்க்கும்போது அவைகள் கீழானவையே; பலசமயங்களில் மாந்தர்கள் காரியத்தைக் காரணமாகவும், காரணத்தைக் காரியமாகவும் கொண்டு மலைத்து, உலககாரியங்களில் கவலையில்லாமைபோல் நடித்தால் அது உடனே தங்களை மேலானபடியில் கொண்டுபோய் விடுமென்று நினைக்கிறார்கள். நிச்சயமாகவே அப்படி கொண்டுபோவதில்லை. இந்த மதிமயக்கத்தில் வெகு சாதாரணமாயுள்ளது சந்நியாசம். சந்நி

யாசந்தான் முடிவு (வீடு) என்று அநேகர் தொடர்ந்து பிடித்து வாழ்க்கையிலிருக்கும் சாதாரண சௌகரியங்களை விலக்கிப் பல வாறாக தங்களைச் சுகமில்லாத வகையில் வைத்துக்கொள்வது மிக புண்ணிய காரியமென்றுத் தவறாக எண்ணுகிறார்கள். ஒரு காலத்தில் இங்கிலாந்திலும் ஐரோப்பாகண்டத்திலும் பிரபலமாயிருந்த "சுசீலர்கள்" என்பவர்களுடைய ஐதீகத்தின் அடையாளமாக இருக்கின்றது. நல்லவனாக இருக்கவேண்டுமானால் நீ கூடியமட்டில் சுகமற்றவனாக இருக்கவேண்டுமென்பது வீரசீலர்களுடைய முக்கிய கருத்து. பூலோகத்தில் சுகமாய் வாழ்வது தகாததாக கருதியிருத்தலால் எப்போதாவது எவ்வகையிலாவது ஒருவன சுகமாய்இருப்பானேயாகில் அவன் ஐதீகவிதிமுறைகளின்படி நடவாது உண்மையில் தவறினான் என்று அவர்களுடைய கருத்து; மேலும் தூலதேகம் மிக அருவருப்பானது; ஆதலால் அதை ஒவ்வொரு விதத்திலும் அடக்கி வைக்க வேண்டியது என்றும், செய்யும் எந்த காரியத்திலும் சந்தோஷம் எப்போதாவது உண்டானால் அக்காரியம் கெட்டது என்று கண்டிதமாய் நிச்சயிக்கவேண்டும் என்றும், அவர்களுடைய கருத்து, இவையெல்லாம் அறிவீனம்; உண்மையை தலைகீழாய்ப் பார்ப்பதாலே வரும் விபரீதம். அதன் உண்மை என்னவெனில், மேல்நோக்கிப் போகும் ஒருவன் மேலுள்ள விஷயங்களைக்கண்டு முற்றிலும் பேரின்பத்தோடிருப்பதால், உலகில் அநேகர் முக்கிய சுகங்கள் என்று சொல்லும் விஷயங்களை அவன் சுகமானவைகள் என்று கருதுகிறதில்லை.

உலகில் வைதிக நோக்கமுள்ளவனுக்கு பிரியமில்லாத அநேக விஷயங்களை ஜனங்கள் மெத்த சந்தோஷத்தோடு கொண்டாடுகிறார்கள்; அவையாவன; குதிரைப் பந்தயம், குடி, சூது, இன்னும் கெடுதியற்ற குழந்தைகள் பொம்மை விளையாட்டைப்போலுள்ள நாடகங்கள் சீட்டு விளையாட்டுகள் முதலியன. குழந்தை வளரவளர விளையாட்டு சாமானைத்தேடுவதில்லை. மூன்று அல்லது நான்குவயதில் செங்கல்லையும், பொம்மையையும் வைத்து விளையாடப் பிரியப்படுகிறது. இன்னும் கொஞ்சம் பெரியவன் ஆனால் இராணுவச் சேவகர்களைப்போன்ற பொம்மை, காத்தாடி, பம்பரம், கோலி இவைகளோடு விளையாடப் பிரியப்படுகிறது.

அவன் இன்னும் பெரியவனானால் இவைகளை கவனிக்கிறதில்லை. ஆனால் கிரிக்கெட், புட்பால் போன்ற வெளியோடி யாடும் விளையாட்டுகளில் பிரியப்படுகின்றான். இவையெல்லாம் குழந்தை வளரும் படிகளாய் இருக்கின்றன. ஒவ்வொன்றும் அதனதன்படியில் தகுதியானதுதான். அவன் இன்னும் பெரியவனானால் இதுவரைக்கும் பிரியப்பட்டு ஆடிச்சுகித்தவைகளையெல்லாம்விட்டு விடுகிறான். இவன் இவ்விதம் விடுவது விடவேண்டும் என்கிற எண்ணத்தோடல்ல; பின்னை அவைகளின் பேரிலிருந்த ஆசை அவனை விட்டு விட்டது. அவன் பெரியவனானதும் விருத்திக்கு வரவேண்டிய வேறொன்றைக்கண்டு கொண்டான். மூன்று வயதுள்ள குழந்தை தன்வயதிற்கு ஏற்பட்ட விளையாட்டுகளை எல்லாம் விட்டுவிட்டு கிரிக்கெட் முதலியவைகளோடு விளையாட விரும்பினால் அக்குழந்தை பெரியவனாகுவானா? ஆகமாட்டான் என்பதை நீ உடனே பார்ப்பாய். பரிபக்குவத்தில் மெத்த தேர்ந்தவனுக்கு, சாதாரண ஜனங்கள் அவசியமென்று எண்ணும் அநேக விஷயங்களில், அக்கரையில்லை. தியாசொபிக்கும், வாழ்க்கையின் ஆழ்ந்த விஷயங்களுக்கும், ஊக்கத்தோடிருந்துகொண்டு, வெளி உலக விஷயங்களில் உண்மையில் கருத்தில்லாதவனாய், நம்மில் பலர் இருந்து வருவதைப்போல் உலகிலுள்ளவன் வாழ எத்தனிப்பானானால், அதை அவன் பொறுக்க முடியாததான கஷ்டமென்று அநேகமாய் காண்பான். அப்பேர்ப்பட்ட சிஷியர்கள் ஒரே விஷயத்தில் எப்போதும் ஊக்கமாயிருக்கிறார்கள் என்றும், மற்ற எதையும் தெரிந்துகொள்ளவாவது அதைப் பற்றி கவலைப்படவாவது அவர்களுக்கு அக்கரையில்லை, என்றும் சாதாரண உலகினன் ஒருவன சொல்லிக்கொள்வான். அது வாஸ்தவந்தான். ஏனெனில் சிஷியர்கள் செய்யும் விதத்தில் மற்றவை எல்லாம் அடங்கியிருக்கின்றன. ஆனால் ஒருவன உண்மையாகவே இரகசியமாய் ஆசைப்பட்டு கொண்டிருக்கும் தன் சொந்த விஷயங்களில் கவலைப்படாதவன்போல் பாசாங்கு காட்டினால் அவன் முன்னேற்றத்தில் தேறி வருபவனாகமாட்டான்.

"மாநிலமெங்கும் அறிந்தவர், அறியாதவர்
என இருவகையாகத் தானிருக்கின்றனர் ;
எனவே அறியும் இந்த அறிவுதான் முக்கியமா

கும். எம்மதத்தினன் எஜ்ஜாதியன் என்பன முக்கியமல்ல.

A. B:—மாஸ்டர்கள், அவர்கள் இவ்விடத்தில் மாந்தர்களிருக்கும் பேதத்தைத் தெளிவாக விளக்கி அவர்களைத் தெரிந்தவர், தெரியாதவர் என இருபிரிவினர்களாக வகுக்கின்றனர். குப்த நோக்கத்தின்படி இது மிகச்சிறந்த வகுப்பாகும். தாம் எந்த வகுப்பில் இருக்கின்றவர் என்பதை ஒவ்வொருவரும் தங்களையே கேட்டுக்கொள்ளவேண்டியது. இருவகுப்பிலும் அநேகவித ஜனங்கள் இருக்கின்றனர்கள், ஏனெனில் வெளிச்சின்னங்களும், ஜாதி பேதங்களும், முக்கியமானவைகளல்ல. தெரியாதவர்கள் ஒரு ஜன்மத்திற்கு மாத்திரம் நிலைக்கும் விஷயங்களுக்காக உழைத்து வருகிறார்கள்; ஆனால் நித்திய விஷயங்களைத் தெளிவாக ஒருதரம் பார்த்தவர் எவரும் ஈஸ்வரனுக்கு சேவகம் செய்யவும், அவருடைய விசித்திர (Plan) அமைப்பிற்கு இசைந்து, கிஞ்சித்தாயினும் தன்னால் கூடியமட்டில் அதை நிறைவேற்ற வாஞ்சையோடு இருப்பார். நாம் அந்தப்படி வேலையைச் செய்ய நம்மறிவில் ஊக்கம் நுழைந்து ஏறியிருக்கின்றதா, இல்லையா, என்று நாம் பரீக்ஷித்துக்கொள்ளுதல் கூடும். வெகு சாதுரியமாய் பேசச்செய்விக்கும் வாசிப்பும், மற்றவருக்கு கற்பித்து கொடுக்கும் வெறும் மூளையின் கல்வியும், இவை எல்லாம் அநித்தியமேயாகும். ஒருவனுடைய வாழ்க்கையாக அமைந்து வருவதே உண்மையான அறிவு. ஒவ்வொரு இரவிலும், படுக்கைக்குப் போகுமுன் கொஞ்சநேரம் உட்கார்ந்து, கடந்தநாளின் விவகாரங்களைப் பரீக்ஷிக்கும் பழக்கமுடையவர்கள் அநேகர் இருக்கின்றனர்கள். இது வெகு பிரயோஜனமுள்ள பழக்கம். உனக்கு அந்தப் பழக்கமிருக்குமாகில் நீ செய்த காரியங்களைப் பற்றியும், உனக்கு உண்டான தாபங்களைப் பற்றியும், எண்ணங்களைப் பற்றியும் கவனிப்பதோடு உன்னுடைய நோக்கத்தைப் பற்றியும் விசாரித்துக்கொள், நீ செய்த விஷயங்களைப்பற்றி எண்ணிக்கொண்டு மெய் மறந்து மூழ்கியிருப்பாயாகில் அந்தகாலம் வீணாகப் போனதே! ஆனால் விஷயங்களை ஈசுவரார்ப்பணமென்று எக்ஞார்த்தமாக செய்திருப்பாயாகில் அவைகள் உனக்கு உதவி தரும்; தடையாக இரா.

"மாந்தர்களுக்காக கடவுளால் ஏற்பட்டிருக்கும் (விசித்திர) அமைப்பை அறிவதே உண்மையில் முக்கியமானது. ஏனென்றால் கடவுள் ஓர் அமைப்பை ஏற்படுத்தி யிருக்கின்றார்; அது தான் விகாசமுறை, பிரபஞ்ச விருத்திக்குரிய பிளான். இதை ஒருதரம் ஒருவன் கண்ணாரப் பார்த்து, உள்ளபடி தெரிந்து கொள்வானானால், பின்னர் அதற்கென உழைக்காமலும், அத்துடன் தான் ஒன்றாகாமலுமிருக்க முடியவே முடியாது. அதனது பெருமை, அழகு அத்தன்மை யானவை.

C. W. L:—தேசீயசபை, மதநிக்கிரக சங்கம் முதலிய அநேக சமாஜங்கள் உலகுக்கு உதவி புரியுமென்று எண்ணி அவைகளில் சேரச்செய்விக்கும் ஊக்கமானது ஒருவன் கடவுளிடத்திலுள்ள விசித்திர (Plan) அமைப்பை பார்த்த சமயத்தில் மனதில் விசேஷ வுறுதியுடன் ஏட்டுப்படுகின்றது; இதுமேலே உந்நதமான நிலையி லிருந்து வருகிறது. ஒருநாளைக்கு நிறைவேறிவரும்; அதற்காக உழைப்பவர்கள் அதிகமாய்ச் சேருவார்களானால் நிறைவேறுங்காலம் நெருங்கிவரும் என்று தோற்றுகிறது. குடியினால் வரும் கஷ்டத்தைப் பார்த்து, நிக்கிரக சங்கத்தில் சேர்ந்து உழைக்க உலக முழுதும் உள்ள ஜனங்களைத் தூண்டி சேரவைத்தால் சிலவாரங் களிலோ, அல்லது வருஷங்களிலோ, ஈஸ்வரன் திருவுள்ளத்தின்படி இருப்பவை யெல்லாம் சீக்கிரத்தில் நிறைவேறும். ஜனங்கள் இதைப்பார்த்து தெரிந்துகொள்ளப் போதுமானபக்குவத்திற்கு வரா திருப்பதால்தான் நமது கோரிக்கை நிறைவேறாமல் இருக்கிறது. இச்சூரிய பகவான் கண்முன் அநேக விதமான துக்கங்களும் பிழை களும் போகாமல் தங்கியிருக்கின்றன.

திவ்வியஞான மாணாக்கர் அநேகருக்கு அவ்வமைப்பின் சிறு பாகம் தெரிந்திருக்கிறது. அவர்கள் கண்ணாரப் பார்த்ததாக நான் சொல்லவில்லை. என்றாலும் அவர்கள் பார்த்தவர்களுடன் சேர்ந் திருக்கிறவர்கள்; ஆகையால் அவ்வமைப்பு எப்பேர்ப்பட்டது, அதன் படி நடக்கவேண்டுமானால் எவ்விதம் செய்யவேண்டியது, என்று

அவர்களுக்குத் தெரியும். ஆனால் அவர்கள் அதை கண்காணப் பார்க்கும் சமயம் வரும்போது இவ்விடம் சொன்னவைகளின் உண்மையைக் காண்பார்கள். உலகிலுள்ள நல் விஷயங்களிலும்,சீர்திருத்தங்களிலும் மானிடர்கள் ஊக்கத்தோடும் சாமர்த்தியத்தோடும் அடிக்கடி பிரயத்தனப்பட்டு வருகிறார்கள். ஆனால் அவர்கள் விகாச முறையின் விரிவான அமைப்பில் (Plan) கொஞ்சம் தெரிந்து கொண்டு, தாமெடுத்த காரியம் அதில்பொருந்தி இருக்கிறதாவென்று சோதித்தாலொழிய பிழைகள் நேரிடும். அவர்கள் சில காரியஸ்தர்களுடன் சேர்ந்து ஒத்து உழைக்கிறார்கள். ஏனெனில் அக்காரியங்களை உடனே செய்யவேண்டு மென்கிற அவசரமும். அவைகளால் வரும் பிரயோஜனமும் அவர்கள் மனதில் பதிந்துவிட்டது. குடி நிக்கிரக காரியம் இவ்விதம்அவசியமாயிருக்கிறது. குடியினால் விளையும் நடுங்கத்தக்க கொடுமைகளைக் கண்டதினாலும், அவைகளை நீக்கிவிட்டால் உலகம் எவ்வளவோ சௌக்கியப்பட்டு வரும் என்பதைத் தெரிந்திருப்பதனாலும் அவர்கள் குடியை நிறுத்த வேண்டிய காரியங்களில் தொடர்ந்து வருகிறார்கள். ஆனால் கொடுமையான அறிவீனக் குடிப் பழக்கத்திலிருந்து விலகும்படி ஜனங்களுக்குப் புத்திமதிகளைச் சொல்லுவதைவிட்டு குடியின் விற்பனையைத்தடுத்து ஜனங்களைப்பலவந்தம்செய்கிறார்கள். இதுகுடிக்க வேண்டுமென்கிற ஆசையை எவ்வகையிலும் நீக்குகிறதில்லை; மற்று அதை திருப்திசெய்ய சௌகரியமில்லாத வகையில் வைக்கிறது. நான், இவ்விதமாய் நிக்கிரகிக்கும் உபாயத்தைக் கண்டனமாகச் சற்றும் பேசவில்லை.அதற்கு அநுசரணையாகச்சொல்லவேண்டிய விஷயங்கள் அதிகமிருக்கின்றன. பாஷாண முதலிய சரக்குகள் விற்பனையைக் குறைக்க கட்டுப்பாடுகளை ஏற்படுத்துவது அறிவு என்றால் பாஷாணங்களைவிட அதிகமான கெடுதிக்கு காரணமாயிருக்கும் கள், சாராயம், முதலிய லாகிரி வஸ்துக்கள் விற்பனைக்கு நாம் ஏன் அவ்விதம் கட்டுப்பாடு செய்யக்கூடாது? ஆனால் இந்த வழி அதன் கொடுமைக்குக் காரணமாய் இருக்கும் வேரைக் களைகிறதில்லை, என்பதை மாத்திரம் எடுத்துக் காண்பிக்கின்றேன். ஜனங்களுக்குப் புத்திமதிகளைச் சொல்லி திருந்திவரச் செய்யாமல் பலவந்தத்தால் சீர்திருத்தம் தொடங்குகிறது அவ்வழி.

இவ்விதமே ஜனத்தொகையில் பத்தில் ஒருபங்காயுள்ள தாழ்ந்த ஜாதியாருடைய கோரமான கஷ்டத்தையும், சொல்லமுடியா துயரத்தையும், கண்டறிந்தவர்கள் இப்பெருத்த ஓலமிடும்படியான வெட்கக்கேட்டை நிவர்த்திக்க நானாவிதத்திலும் முயலுகிறார்கள். ஆனால் அந்தோ! சிலர் அதிக குடியரசு பெற்றபோது அல்லது அரசின்மையா யிருக்கும்போது வரும் என்று எண்ணுகின்றனர். சுற்றுமுற்றுள்ள ஜனங்களின் சங்கடங்களை எடுக்குமென்று, நிஷ்காமியத்தோடு ஒருவழியில் பிரயத்தனப் படுபவர்களின்பேரில் குற்றம் சொல்லக்கூடாது. இவ்வித காரியங்களைச்செய்து வருபவர்களின் மூளையில் (எண்ணும் வகையில்) பிசகு இருக்கிறதே தவிர, தமது தோழர்களுடைய கஷ்டத்தைத் தீர்க்குமென்கிற நம்பிக்கையுடன் தங்களுடைய சௌககியத்தைப் பாராமலும் நஷ்டத்தைக் கவனியாமலும் வேலைசெய்ய ஊக்கம் தரும், இவர்களுடைய இதயத்தில் பிசகு இல்லை. மாந்தர்களுடைய விருத்திக்கென்று ஓர் அமைப்பு (Plan) இருக்கின்றதை அவர்கள் தெரிந்துகொள்ள வேண்டியதவசியம். அவர்களுடைய காரியம் (வேலை) நிஷ்காமியமாகவும் சாமர்த்திய மானதாகவும் இருக்கவேண்டில் அவர்கள் வாசித்து அதைத் தெரிந்துகொள்ள வேண்டியிருக்கிறது. பகுத்தறிவு ஒன்றுதான வேண்டியதாய் இருக்கிறது; கஷ்டதின் ஓர் புறத்தைத் தான பார்க்கின்றார்கள். ஆதலால் சாந்தப்படுத்துவதை விட்டுமீள கஷ்டம் கொடுக்கும் ஏதேதோ வழிகளில் தலைகீழாய்ப் போகிறார்கள்.

> "எனவே இதனை அறிந்தவன் கடவுள் பக்கம் சார்ந்தவனாய், நன்மைக்குப் பரிந்து நின்றும், தீமைக்கு எதிர்த்து நின்றும், சுய நலத்திற்கின்றி பிரபஞ்ச விருத்திக் கென்றே, உழைப்பவனாகிறான்."

C. W. L:—இந்த உரைக்கல்லை கொண்டுதான் தெரிந்தவர் யாவர் என்று பகுத்தறிய முடியும். மதத்தாலும் வம்சத்தாலும் அவர்களை மதிப்பதன்று; மற்று தீங்கை எதிர்த்து நன்மையைச் சீர்தூக்கி வருகிறார்களா என்கிற ஒரே ஒருவிஷயத்தில்தான் 'தெரிந்

தவர்கள்' என்று அறியப்படுவது. மேலானதாக தனக்குத் தெரிந்த விஷயத்தில் விசுவாசமாக இருந்துகொண்டு, நல்லதென்று, தான் எண்ணுகிற காரியங்களுக்கு அநுகூலமாய் நின்று, தீங்கு என்று தனக்கு தோன்றினவைகளைத் தடுத்து இருப்பவரை, எங்கே நாம் கண்டபோதிலும் அவர் கடவுளைச் சார்ந்தவர்; அவர் செய்யும்வேலை நம்முடைய சம்மதிக்குத் தகுந்ததாக இல்லாதிருந்த போதிலும்,அல்லது அது கடவுளுக்குப்பிரீதி இல்லாததாக இருக்கலாம் என்று நாம் நினைத்தபோதிலும், அவர் கடவுள் பக்கம் இருந்து உழைக்கும் ஓர் சகோதரர் என்று நாம் கருதவேண்டியது. தாம்கொண்ட கருத்தின் படி முற்றும் விசுவாசத்துடனும் நல்ல தன்மையோடும் உழைப்பவர் அநேகர் இருக்கின்றார்கள், என்றாலும் அவர்கள் கடுமையான நிர்ப்பந்தங்களுக்கு உடன்பட்டிருக்கின்றவர்கள். தங்கள் பலத்தையும், காலம்முழுதையும் (அவர்கள் சொல்லுவதுபோல்) மற்ற ஆன்மாக்களை கிருஸ்து பகவானிடம் கொண்டுபோக வேண்டி, அவர்களிடத்திலிருக்கும் எல்லா பொருளையும் வாஸ்தவத்தில் தத்தம் செய்துகொண்டிருக்கிறவர்கள். எனறாலும் இவர்கள் மிக கட்டுபாடுள்ள மதப்பிடிவாதக் கொள்கைகளுக்கு உட்பட்டவர்கள். சில சமயங்களில் இவர்கள் தங்கள் கொள்கைகளுக்குச் சற்று வேறான நம்பிக்கையுடையவர்களை கடுமையோடெதிர்த்து வெறுப்பை காட்டுகிறார்கள்.

வெள்ளியம்பல மஹாசபையாரின் திருப்பணியில் விசேஷம் யாதெனில் மேற்கூறிய மதப்பிடிவாதிகள் செய்யும் விஷயங்கள் ஒவ்வொன்றிலிருக்கும் தீங்கை ஒதுக்கித் தள்ளி, நல்லதைப் பொறுக்கி எடுத்துக்கொளவது ஒன்று. எப்படியும் இப்பூலோகத்தில் நன்மையை வெளியாகாதபடி தடுக்கும் தீவினைகளை எல்லாம் ஒதுக்கி, பக்தியாலும், ஊக்கத்தாலும் வெளியாகும் சக்தியை எடுத்து அதை குண்டுமணி இடைகூட விடாமல் உபயோகப்படுத்திக் கொள்ளுகிறார்கள்.மதப்பிடிவாதத்தால் அன்பை மறைத்து,வெளிக்கு வெறுப்பைக் காட்டும்படியான கிருஸ்துமத கூட்டங்கள் அநேகமிருக்கின்றன. வெள்ளியம்பல (சபை)ச் சகோதரர்கள் மதப்பிடிவாதத்தைக் கண்டு பரிதவித்து, அதனால் விளையும் தீங்கு மற்றவைகளைவிட அதிகமாய் இருந்தாலுங்கூட அதிலிருக்கும் அன்பு, பக்தி,

நல்லெண்ணம் முதலிய சக்திகளை தேர்ந்தெடுத்து உபயோகிக்கின்றார்கள். மேலும் அதனால் வரும் பலனை இதை விளைவித்தவர்களுக்கே திருப்பிக் கொடுக்கிறார்கள். கர்ம நியதியின்படி அவரவருடைய கோபத்தாலும், மதப்பிடிவாதத்தாலும், வரும்பலன் அதற்குத் தக்கபடி அதில் இருந்தபோதிலும் ஒருவனுடைய நன்மையால்வரும் பிரயோஜனம் முழுதும் அவனுக்கே தவறாமல் கிடைக்கும்.

ஆனதுபற்றி, இப்பேர்ப்பட்ட ஜனங்களிடத்தில் நாம் தயாள குணத்தோடிருந்து இந்த விவகாரங்களில் அநேகரைப் போல் குற்றம் பிடிக்க முந்திபோகும் தன்மையைவிட்டு "முத்தை எடுக்கத் தாவுங்கள்" என்று மாஸ்டர்கள் சொன்னபடி நல்லவைகளைப் பொறுக்கி எடுத்து அவைகளின்பேரில் கருத்தைச் செலுத்த எத்தனப்பட்டுக் கொண்டிருக்கவேண்டியது.

"கடவுளை சார்ந்தவனானால், இவனும் நம்மில் ஒருவனே; அவன் தன்னை இந்து அல்லது பௌத்தன், கிருஸ்தவன் அல்லது மகம்மதியன், என்றாலுஞ் சரி, இந்தியன் அல்லது ஆங்கிலன், சீனன் அல்லது உருஷியனாயிருந்தாலுஞ் சரி, இவைகளைப்பற்றி யாதொரு பாதகமுமில்லை."

A.B:— மேன்மார்க்கத்தில் நடக்க வாஞ்சையுள்ளவர்கள் மறக்கக்கூடாத விஷயம் இது. ஏனெனில் இதை வாழ்க்கையாக வாழாவிட்டால் மார்க்கத்தின் வாயிற்படிக்கு நீ இன்னும் வெகுதூரமாய் தான் இருப்பாய். உன்னுடைய ஜாதி எது, மதமெது, என்று கேட்பவர்கள் யாருங் கிடையாது. ஆனால் உன் குணத்திற் சேர்ந்துவரும் நல்லொழுக்கத்தைத் தான் கேட்பார்கள். ஒவ்வொரு வம்சத்திலும் கிரமப்படி நாமெல்லோரும் ஜன்மமெடுத்து வந்திருக்கிறோம். இப்போது நாம் ஒரு வம்சத்தில் பிறந்திருக்கிறோமல்லவா? ஏனெனில் நமக்கு வேண்டிய நற்குணம் இந்த வம்சத்தில் கிடைப்பதாய் இருக்கிறது. ஆகையால் அது எதுவாய் இருக்கினும் நமக்குக் கிடைக்கும். என்றாலும் அவ்வம்சத்திலிருக்கும் நற்குணங்களை விருத்திசெய்ய அநேகர் கருத்தாய் இருக்கின்றனர். "தற்சமயம் வேறெந்த வம்சமும் என் குறையை நீக்கி என்

குணத்தை சீர்படுத்த எனக்கு தகுதியானதல்ல'' என்று சொல்வது மிக சரியானதே. ஆனால் நாம் ஆங்கில வழிகளை தொடுத்து அவைகளைத் துதிக்கும் உணர்ச்சியுடன் இருப்பது சரியல்ல. மானிடர்களை பக்குவப்படுத்த வேண்டி ஒவ்வொரு வம்சமும் ஓர் நற்குணப் பகுதியை விருத்திசெய்கின்றது. அந்தப்படி ஒவ்வொரு வம்சமும் தன் பகுதியை கொடுக்கும். எந்த வம்சத்தில் நீ இருக்கின்றாயோ அச்சமயம் அதிலிருக்கும் பகுதி உனக்கு வெகு சாதாரணமாயும் சுலபமாயுமிருக்கும். ஆனால் இனிமேல் அதைக் கடந்து போகவும், வேறு இதர பகுதியை கையாண்டு கற்கும்படி உனக்கு நேரும். உலகினர் இதைத் தெரிந்து கொண்டிருப்பார்களேயானால் மற்ற வம்சத்தினர்களை இகழும் தன்மையும், அறிவீன தேச இறுமாப்பும் குறைந்துவிடும்.

ஒருவன், ஆங்கிலன் அல்லது இந்தியனாக இருப்பதால் குற்றம் ஒன்று உண்டாயிற்று, என்று ஒருவனை சுட்டி, குறையாடுவதை நான் கேட்கும்போது குறை சொல்கிறவன் அநித்தியத்தால் இன்னும் மதிமயங்கி இருக்கிறான் என்பதை அது உடனே எனக்குக் காட்டுகின்றது. ஒருவன் தன் குறையை, தன் வம்சத்தின் குறையென்று சாக்கு சொல்லிக் கொள்ளும்போதும் அதையேதான (அநித்தியத்தை) காட்டுகிறது. நீ உன்னுடைய வம்சத்திலும், கிளைவம்சத்திலும் உள்ள குறைகளை விட்டு அதிலுள்ள நற்குணங்களை அடைய முயலவேண்டும். உதாரணமாக:—பரமார்த்த (தெய்விக) தன்மை, துன்பஞ் செய்யாமை, பொறுமை, பற்றில்லாது உழைக்கும் வல்லமை, முதலியவைகளை பெற இந்தியன முயலவேண்டும். ஏனெனில் ஆரியவம்சத்தின் முதல் குடும்பமாகிய இந்தியன் காட்டத்தக்க குணங்கள் இவைகளாயிருக்கின்றன.

என்றாலும் செயல் முக்கியமல்ல. ஒருவன் செயலால் வரும் பிரதிபலனுக்கு விரக்தியோடிருக்க வேண்டும் என்கிற கருத்தை தவறாகக் கொள்ளுவதால் பற்றில்லாதிருத்தலோடு அஜாக்கிரதையும், அறைகுறை வேலையும் தொடர்ந்து வருவதை சில சமயங்களில் காணலாம். ஆனால் உண்மையில் வேண்டியது யாதெனில் பிரதிபலனில் பற்றில்லாது வேலையைப் பூர்த்தியாய்ச் செய்யும் தன்மை. ஆங்கிலனிடத்தில் இது அநேகமாய் தலைகீழாக இருக்

கும்; அவன் சாதாரணமாய் வேலைக்குத் தகுதியானவன்; வேலையில் ஜாக்கிரதையுள்ளவன்; ஆனால் பிரதிபலனைப்பற்றி ஒரு சமயம் துடிதுடிப்பாய் இருப்பான். ஏனெனில் (உபேக்ஷை) சமாதானம் என்கிற குணம் அவனிடத்தில் பெரும்பாலுமில்லை. தனனிடத்தி லில்லாத நற்குணத்தை அடைய முயல்வது ஒவ்வொருவருடைய அலுவலாய் இருக்கின்றது. தாம் பெற்றிருக்கும் நற்குணங்களுக்கு யாதொரு பின்னமும் வராமல், இந்தியன் வேலை செய்யும் வகை யிலும், ஆங்கிலன உபேக்ஷையிலும் பழக முயலவேண்டும். இவ் விதம் செய்துவந்தால் ஒவ்வொரு வம்சத்திலும் வெவ்வேறாயுள்ள நற்குணங்கள், எல்லா வம்சத்தையும் சீர்தூக்கி பலப்படுத்தும்; ஏனெனில் ஒரு வம்சத்திலில்லாததை மற்றவர்களிடமிருந்து கற்க முடியும்.

C.W L:—தேசாபிமானத் தோடிருப்பதும், (தன வம்சத்தை மெச்சிக்கொண்டிருப்பதும்) அதற்கு தான கொடுக்க ஏதோ ஒரு கடன் இருப்பதாக உணர்வதும், அதற்காக சேவகஞ்செய்ய சித்த மாயிருப்பதும், இவையெல்லாம் சிரேஷ்டந்தான. ஆனால் மற்ற வம் சத்தாரை அவமதிக்காமலிருக்க ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். நம்முடைய நீடித்த பந்துத்துவம் மானிடவர்க்கத்தைப் பொருந்தி இருக்கிறது. நாம் உலகவாசிகள்; உலகத்தைச் சார்ந்தவரேயன்றி (Citizen) ஒரு வம்சத்தை சேர்ந்தவரல்ல. எனறுலும் தேசாபி மானம், குடும்ப பாசத்தைப்போலவே நல்லது எனறாலும், நன மையைவிட்டு தீங்கை விளைவிக்கும்படி அதிதீவிரமாக இவ்விரண் டையும் மீறவிடக்கூடாது. குடும்பபாசம் உண்மையில் சிரேஷ்ட மானதுதான; ஆனால் முன் காலங்களில் பாளையக் கொள்ளைவீரர்கள் (Baron Robbers) தங்கள் குடும்பத்தாரை செல்வர்களாக்கவேண்டி மற்றவர்களை கொலை செய்தார்கள். இது உண்மையில் பாசத்தை மிதமிஞ்சிப் போகவிட்டதால் தீங்காய் விளைந்தது. இவ்விதமே தேசாபிமானமும் நல்லதாய் இருந்தபோதிலும் அது மற்ற வம்சத் தாரைப் பழித்து ஆக்கிரமிக்க ஆரம்பித்தால் அது தீங்காய்விடு கிறது. ஆனால் மற்றவருக்குக் கெடுதியின்றி உன் வம்சத்திற்கு ஏதோ ஒரு உதவி செய்வாயானால், உன் வம்சத்தில் உன்னை மதிக் கத்தக்க பேர் பெறுவாயானால், நீ அதில் இருப்பதால் அந்த வம்ச

மேம்பட்டு வருமானால், அப்போது நீ அதில் பிறந்திருப்பதற்கு ஓர் திருப்திகரம் இருக்கின்றது. மதவிஷயத்திலும் குறைவில்லாது இவ்விதமாய் இருக்கவேண்டும். நாமெல்லோரும் அநேக பெரிய மதங்களுக்குள் பிறந்து வந்திருக்கின்றோம். ஒவ்வொரு மதமும் ஒவ்வொரு சிலகுணத்தை வற்புறுத்துகின்றது. ஆனால் மானிடவர்க்கத்தின் பரிபக்குவத்திற்கு இவை எல்லாம் அவசியம்.

> "கடவுளைச் சார்ந்தவர்கள் இங்கு ஏன் பிறந்துளோம்? யாம் செய்யவேண்டியதேது? என்பதைத் தெரிந்தவர்களாய் அதைச்செய்வதிலே முயன்று வருகிறார்கள். மற்றயோரெல்லாம் தாம் செய்யவேண்டியது இன்னவென இன்னம் தெரியாதவர்களாகையால் அறிவீனமாய் அடிக்கடி நடந்துகொள்ளுகிறார்கள்."

C. W. L:—இவ்விடத்தில் அவித்தையால் எல்லா தீங்கும் விளைகின்றது என்று கௌதமபுத்தர் கொடுத்த போதனையை ஒட்டியிருக்கிறது. தெரியாதவர்கள் பெரும்பாலும் அறிவீனத்தனமாய் நடக்கிறார்கள் என்பது உண்மைதான். அப்படி இருத்தலால் அது கெட்டவனை எப்போதும் இரக்கத்தோடு பார்க்கவேண்டுமென்பதே தவிர அருவருப்பையாவது, வெறுப்பையாவது காட்டக்கூடாது என்று நிச்சயமாக்குகின்றது. அவன் சுயகாமிய நோக்கத்தோடு தான் நினைத்தவண்ணம் தன்னுடைய சொந்தகாரியத்தில் கவனத்தோடு இருக்கின்றான் என்று ஜனங்களுக்கு சாதாரணமாய் புலப்படுகின்றது; என்றாலும் உண்மை அறியாத அவனுடைய மதியீனத் தன்மையை ஒருவாறாய் மறந்துவிடுகிறார்கள். உதாரணமாக அநேகருடைய கைத்தொழில்களை (எந்திரங்களை ஏற்படுத்துவதால்) அழித்து அவர்களை பிச்சைக்காரர்களாக்கி அற்பகாலத்திற்கும் தாங்கள் செழித்து ஓங்கும் இலட்சாதிபதிகள் அநேகர் இருக்கின்றனர். பிழைப்பை இழந்தவரெல்லாம் இத்தனவான்களை பாபிகளென்று சபித்து வருகிறார்கள். ஒவ்வொருவரும் இவர்களை மகா லோபிகளென்றும் மிருகத்தன்மையுடையவர்களென்றும் தூஷிக்கின்றனர்.

ஆம், இவர்கள் அப்படி செய்துவருவது மதியீனம். அப்பேர்ப்பட்டவன் செய்யத்தொடங்குகிறதை நினைத்த வண்ணம் தவறாமல் செய்துவருகிறான. மற்றவர்களை நசுக்கும் வேலை எல்லாம் நன்றாய்ச் செய்வேனென்கிற நினைப்பாய் செய்கிறான. ஒருவேளைத் தன் வேலையை விருத்திக்கு கொண்டுவரலாம், ஏராளமான பணம் சம்பாதிக்கலாம் என்றும் எண்ணுகிறான். ஆனல் அவன மற்றவர்களுக்கு துன்பம் விளைவிப்பதைப் பார்க்கிலும் அதிகமான துன்பம் இவனுக்கே விளைவித்து வருவதையும், நசுக்கிவிட்ட ஜனங்களை விட முன்னுக்கு இவனை அதிகமாய் அனுபவிக்கும்படியான கொடூரமான கர்மத்தை செய்து வருவதையும், தெரிந்திருப்பானுனல் அவன் அப்படிச்செய்ய துடங்கி இருக்கவேமாட்டான. அவனுடைய லோப குணத்தைச் சுட்டி நிந்திப்பதைவிட்டு அவனுடைய அறியாமைத் தனத்தை நோக்கி பரிதவிப்பது அறிவுள்ளது.

> "தவிர எல்லோரும் 'ஏகம்' ஒன்றே. ஆகையால் அந்த ஏகபுருஷன் இச்சைதான் எப்போதும் எவருக்கும உண்மையில் சுகமளிக்கக்கூடியது என்பதைத தெரிந்துகொள்ளாமல் தங்களுக்குச் சுகம் வருமென்பதாக தாம் நினைக்கும் உபாயங்களை உண்டாக்க முயன்று வருகிறார்கள்."

C. W' L:—"அநேகமாய் அநேகருக்கு நன்மை தருவதைத் தொடர்" என்பது நல்லமுதுமொழிதான. இது முன்சொல்லியபடி சிலருடைய நன்மையைக் கருதி மற்றெல்லாரையும் கவனிக்காமல் இருக்கும் கருத்தைவிட மேலானது; என்றாலும் இதில் சில ஜனங்களின் நன்மையைவிட்டிருக்கிறது; அப்படி விடப்படாது. வாஸ்தவத்தில் ஒவ்வொருவருடைய நன்மையையும் கவனிக்கவேண்டியிருக்கிறது. ஏனெனில் எல்லோரும்'ஏகம்'ஒன்று. இந்தஐக்கியத்தை புத்தி (தபோ, ஜன) லோகத்தில் விழிப்புடன் விவகரிக்கவரும்வரையில் அறிந்து கொள்ளமுடியாது. அப்போதுகூட மெதுவாய் படிப்படியாய்த்தான் எல்லோரும் ஒன்று என்பதைத்தெளிவாய்க்கற்கமுடியும். இவ்விதமாக இருக்கும் ஐக்கியத்தை மதத்தில் விதித்த கடமையாகவும் அல்லது ஒரு நாளைக்கு எல்லோரும் ஒன்றாகுவோம் என்

கிற ஒருவகையான பக்திவாஞ்சையாகவும் நம்புகின்றோம். "நாமெல்லோரும் கடவுளாகிய மகத்தான ஏக தந்தையிடமிருந்து வந்திருக்கின்றோம்; ஆதலால், நாமெல்லோரும் சகோதரர்கள், நாம் எல்லாம் ஒன்று." என்று சொல்லுகிறோம். என்றாலும் அதன உண்மையையும், ஆழ்ந்த நிலையையும் புததிலோக பிரக்ஞையோடு அனுபவத்தில் பார்க்கிறவரையில் நமக்குத் தெரியாது.

எனறாலும் உயிரெல்லாம் ஒன்று, உலகமெல்லாம் ஒன்று, அதிலுள்ள அன்பு எல்லாம் தெய்வ அருளே, அதிலிருக்கும் அழகு முற்றும் தெய்வீக அலங்காரமே. உலகத்திலுள்ள நியமம் எல்லாம் கடவுளின் தெய்வீகமே என்று சொல்லுதலால் ஏகம் என்பதின் கருத்தை ஒருவாறாக கொடுக்கமுடியும். ஒருவன் கிருஸ்து பகவானை நோக்கி "ஓ நல்ல எஜமானே" என்று கூவினபோது அவர் "நீ ஏன் என்னை நல்லவன என்று கூவுகின்றாய் ஒருவரைத் தவிர நல்லவர் வேறு எவருங்கிடையாது, அவர் தான் கடவுள்" என்றார். ஒவ்வொருவனுடைய நற்குணம் ஒவ்வொன்றும் அவனிடத்திலிருக்கும் கடவுள் காட்டிவைக்கும் குணம். உலகில் நமது கண்ணெதிரிலிருக்கும் தரையிலும், கடலிலும், வானத்திலும், உள்ள அலங்காரமும், மகிமையும், எல்லாம் தெய்வீக அழகின் ஓர் பகுதி. மேலும் நாம், மேல் (லோக) உட்பிரிவுகளில் படிப்படியாய் ஏறிப் போகப்போக அழகையெல்லாம் ஒவ்வொருவஸ்துவிலும் நாம் பார்க்கும் வரையில், நமக்கு எதிரில் அழகு மேன்மேல் விரிந்து கொண்டேவரும். எல்லாம் ஒன்றே.

அதை கற்ற பிறகு, திருவுள்ளத்தின் மகிமை ஒவ்வொரு வஸ்துவிலும் உள்ளும் புறமுமாய் காணப்படும். மேலும் அதன் இதர மகிமைகளேயும் ஒவவொரு வஸ்துக்களின மூலமாய் பார்ககலாகும்; அதாவது ஒரு அழகான காட்சி நமக்கு முன் வரும்போது நாம் அதிசயப்படுவது அதன்வெறும் காட்சியாலல்ல; பின்னை அதினால் நினைவூட்டப் பெற்று பார்க்கப்படும் கரைகடந்த பூரணம். காட்சியானது அப்பூரணத்தின் சிறுபகுதி; அப்போது நமது வாழ்வு அற்புதமாய் ஆனந்தமாயிருக்கும், அன்பில் நிறைந்திருக்கும், அந்த ஆனந்தத்தின் மூலமாய்ப் பேரினபத்தின் அனுபவம் கிஞ்சித்து கிடைக்கும்; அந்த அன்பால் அருட்பெருங்கருணையை உற்றுஉணர

முடியும். இவ்விதமாகத்தான் நாம் பிரம்மாண்டத்தில் ஓர் சிறு புள்ளியாக இருக்கிறோமே தவிர மற்றபடி 'தான்' என்பது ஒன்றுமேயில்லை, என்று உற்றுணரும்போது பெருத்த முன்னேற்றம்வரும். பிறகு நமது பிரக்ஞை அவரது பிரக்ஞையில் கலக்கும்படியான நிலைக்கு வரும். அப்படி வருவதால் நம்மின் வழியாய் (மூலமாய்) எல்லா அழகையும் அவர் பார்க்கமுடியும்;நாமும் அவருக்கிருக்கிறதை உற்று உணரமுடியும்.

"இவர்கள் நித்தியத்தைவிட்டு அநித்தியத்தின் பின்செல்கிறவர்கள். இவ்விரண்டையும்பகுத்தறிய கற்றுக்கொள்ளும் வரையில் இவர்கள் கடவுளைச் சார்ந்தவர்களே அல்லர். ஆகையால் இப்பகுத்தறிவு முதற்படி. ஆனால் இந்த நிச்சயம் செய்துவிட்ட பின்னும் நிததியம், அநித்தியம் என்கிற முறையில் பல படிகளுண்டு என்பதை ஞாபகத்தில் வைத்து சரி பிழை,முக்கியம் அமுக்கியம், உபயோகமுள்ளது உபயோகமற்றது, மெய் பொய், காமியநோக்கம் நிஷ்காமிய நோக்கம், எனும் விதங்களில் பகுத்தறிய வேண்டும்."

C.W.L:—இவை எல்லாம் நித்தியாநித்தியத்தில் விசேஷமாய்ப் பகுத்தறியவேண்டிய உட்பிரிவுகள். நாம் இந்த மார்க்கத்தில் நடக்க வேண்டுமானால் வாழ்வின் வியவகாரங்களுக்குரிய சிறு விஷயங்களிலும் பகுத்தறிய வேண்டியிருக்கிறது. இவ்வுட்பிரிவுகளை ஒவ்வொன்றாய்ச் சொல்வதால் அது கிளைகிளையாய்ப் படர்ந்திருப்பது நமக்குக் காணப்படுகின்றது. நாம் இவ்விதமாய் அல்லது அவ்விதமாய் பகுத்து நிச்சயிக்கும்படியான சிற்சிறு உத்தேசங்கள் அடிக்கடி வருகின்றன. ஆகையால் நாம் பகுத்தறிவை மனதில் சதாயிருத்தி இடையறுவிழிப்புடன் இருக்கவேண்டியது. எல்லா வேளையிலும் திருத்தி திருத்தி யோசித்தல் ஆயாசமானது. அநேக நல்ல ஆதமாக்கள் அதை முயன்றபோது சலித்துப்போகிறார்கள். அவ்விதப் பிரயாசை அவர்களுக்கு அதிகமாய் இருக்கிறது. (சதா

பிரயாசை எடுக்க அவர்களால் முடியாது) இது எல்லோருக்கும் சாதாரணமாய் உள்ளதுதான். ஆனால் எவனொருவன் முயற்சியாது விடுகிறானோ அவன் நழுவிவிடுகிறான். ஆதலால் அது எவ்வளவு பிரயாசையாய் இருந்தபோதிலும் மறவா நினைவுடனிருந்து வாழ்வை ஓயாமல் நடத்திவரவேண்டும்.

> "இது சரி இது பிழை, என பிரித்தெடுக்க கஷ்டமிருக்கக் கூடாது; ஏனெனில் குருநாதனை பின் பற்றி நடக்க இச்சிப்பவர்கள் கஷ்ட நிஷ்டூரத்திலும் சரியானதையே கைப்பற்ற முன்னரே துணிந்தவர்கள்."

A. B:—எவனொருவன பிழையையும், சரியையும் நிச்சயிக்கத் தடுமாடுகிறானோ அவன் உண்மையில் மாஸ்டர்களை பின்தொடர இச்சிப்பவனல்லன். பின்தொடர நிச்சியித்தவர்கள் சரியானது சிறியதானாலுஞ்சரி பெரியதானாலுஞ்சரி, எவ்வளவு கஷ்டமானாலுஞ் சரி, அதனால் என்ன விளைந்தாலுஞ்சரி, எப்போதும் அதைக் கைக்கொள்ள மனோதிடம் செய்திருக்கவேண்டும். யோக சூத்திரத்தில் ஐந்து மஹாசீலங்களை 'இயமம்' என்று சொல்லியிருக்கிறது. அதாவது:—துன்பஞ்செய்யாமை, மெய்மை, நேர்மை, மார்க்கத்திற்கு வேண்டிய இன்னும் இதர சீலங்களும் இதில் காட்டி இருக்கின்றன. இவைகள் பொதுவாதலால் மஹா விரதங்களென்று கூறப்படுகின்றன. தனக்காவது அல்லது பிறருக்காவது சௌகரியமென்று அவைகளில் ஒன்றை சிஷ்யன் தவறிவிடக்கூடாது; எல்லா சந்தர்ப்பங்களிலும் அவைகளை ஒழுகவேண்டியது என்பது அதன் பொருள். அந்த நிலைக்கு வந்தவன் பொய் சொல்லுவதாலும், பொய் நடக்கையாலும், தனக்கு எவ்வளவோ அனுகூலமாயிருந்தாலும் அதற்கு இணங்கமாட்டான. பணத்தில் மாத்திரமல்லாமல் மற்றெல்லா விஷயங்களிலும் இப்படியே தானிருப்பான். உதாரணமாக (கௌரவ பரிசுகளிலும், பணத்திலும்) ஞாயமாய் தனக்குச் சேரவேண்டிய பகுதியைத் தவிரமற்றவைகளை எடுத்துக் கொள்ளமாட்டான். நீ சுபாவமாகவே மெய்மையை எப்போதும் பிரியப்படுகின்றாயா, இல்லையாயென்று உனக்கு நீயே சோதித்துக்

கொள். ஏனெனில் அது உனக்கு சுபாவத்தில் வரும் வரையில் முதற்படியான தீக்ஷைக்கு வெகு தூரமாய்த்தான் இருப்பாய். இவ் விஷயத்தைப்பற்றி மாஸ்டர்கள் அதிகமாய்ச் சொல்லவேண்டிய அவசியமில்லை. இது மிகவும் தெளிவாக இருக்கின்றது. மெத்த விளக்கமாய் இருக்கிறது.

C.W.L:—இக்கருத்து குணத்தை மாத்திரம் குறிப்பதல்ல; பின்னை செய்யவேண்டிய வேலை ஒவ்வொன்றிலும், அதைச் செய் யும் வகையிலும், சரியானதென்றும் சரிதப்பினதென்றும் இருப் பதைக் குறிக்கின்றது. எவனொருவன் இவ்விதியின்படி கண்டித மாய் அனுசரிக்கவில்லையோ அவன் உள்ளத்தில் உண்மையில் கடைத்தேறிவர இச்சிப்பவனல்லன். உலகினர் ஒரு சமயத்தில் "எனக்குத் தெய்வீக பார்வை வேண்டும்; எவ்வளவோ ஆசைப்படு கிறேன், புவர்லோகத்தைப் பார்க்க எவ்வளவு விருப்பத்தோடிருக் கிறேன், எப்படி துவக்குகிறது? முதற்படியாது?" என்கிறார்கள். கோசங்களை சுத்திசெய்வது முதல்படி; தகுதியில்லாத உணவை தூலதேகம் உட்கொள்ளாமலிருக்க ஜாக்கிரதையோடு இருக்கவேண் டியது. அநேகர் புவர்லோகப் பார்வையை இச்சிக்கின்றனர். ஆனால் தக்க சமயம் நேர்ந்தபோது அதை மறந்து விருந்து போஜனத்தில் பிரியப்படுகிறார்கள். போஜனம் பழக்கமாய் வந்துவிட்டதால் உணவு அவர்களுக்கு அவசியம். அச்சமயம் புவர்லோகப் பார்வை யின்மேலிருக்கும் இச்சை மறந்து போய்விட்டது; என்றாலும் உணர்ச்சி சுத்தமாய்ப் பழக்கத்தை பொறுத்தது. தூலதேகத்திற்குப் பழக்கம் ஒரு விசேஷகுணம். இதை நாம் தெரிந்துகொண்டால் தகுதியில்லாத கெட்ட வழக்கங்களை விட்டு நல்லவைகளை ஏற்படுத்த திடநம்பிக்கையுடன் துவக்கலாம். பழக்கத்தை பொருந்திய நியதி யானது, துவக்கத்தில் நடைசெய்வதுபோல் கஷ்டமாய் இருந் தாலும் பின்னுக்கு நம்முடைய ஒழுக்கத்திற்கு அனுகூலமாகும் என் பது தைரியத்தைக் கொடுக்கின்றது. ஏனெனில் நாம் நற்குணப் பழக்கத்திற்கு வந்துவிட்டவுடனே அது தானாகவே நடந்துகொண்டு போகும். மேலும் நாம் அதைப்பற்றி கவலையில்லாது மற்ற விஷ யங்களைக் கவனிக்கக்கூடும்.

ஒழுக்கத்தில் சரியானது எது பிழையானது எது எனப் பிரித்தெடுக்கச் சந்தேகம் யாதுமிருக்கக்கூடாது. இந்நூலில் கருத்துடையவனும், அல்லது மாஸ்டர் அவர்களுடைய பாதாரவிந்தத்தை அடைய வேண்டுமென இச்சிப்பவனும், சரி என்பதைப் பார்த்தவுடன் பின்பற்ற தாமசப்படமாட்டான். சகோதரனை மற்றவனை ஏமாற்றவும், ஏதோ ஒரு அநுகூலஞ் செய்யும்பொருட்டு சற்றுகிலும் மெய்யற்றத்தைச் சொல்லவும், நம்மில் ஒருவரும் எத்தனிக்கமாட்டார்கள், என்று நம்பிக்கையோடு இருப்போம். இந்தப்படியை நாம் முன்னமே தாண்டி வந்துவிட்டோம். மிருகங்களை கொலைசெய்து ஜீவனம் செய்துவரமாட்டோம்; அல்லது அவைகளை கொலை செய்து உண்டாக்கும் ஆபரணங்களையும், உடைக்குரிய வஸ்துக்களையும் தரிக்கமாட்டோம். குஞ்சுகளுடன் இருக்கும் தாய்ப்பக்ஷியைக் கண்ணுருவித் தன்மையுடன் கொன்று அதன் இறகுகளை எடுக்கிறார்கள். இவ்விதமாய் எடுக்கும் வஸ்துக்களை தரிக்கின்ற ஒவ்வொருவரும் உண்மையில் மாஸ்டர்களைப் பின்தொடருகிறவர்கள் அல்லர். அவர்கள் நோக்கம் நடை யுடை பாவனையில் இருக்கிறது.



# 9 - வது அத்தியாயம்.

## தேகங்களின் உயிர்வாழ்க்கை.

"ஆனால் தேகம் வேறு, மனிதன் வேறு. தேகத்தின் விருப்பம் அநேகமாய் மனிதனுடைய இச்சையாக இராது. உனது தேகம், எதையாவது விரும்புகிறபோது அதை நீ நிறுத்தி வாஸ்தவத்தில் விரும்புகிறாயாவென்று யோசித்துப் பார்."

A. B.:—தேகம் எதையாவது இச்சிக்கும்போது அதை நிறுத்தி வாஸ்தவத்தில் அதை விருமபுகிறது நீதானா என்று யோசிக்கும்படி மாஸ்டர் தமது சிஷியனுக்கு இவ்விடத்தில் திடமான ஆக்ஞையிடுகின்றார். ஒவ்வொரு நாளும், நாள்முழுதும் எண்ணத்தை நிறுத்தி நிறுத்தி யோசிக்க அநேகருக்குக் கடினந்தான். என்றாலும் இது அநிகாரி (Probation) நிலைக்குச் சித்தமாவதற்கு முக்கியமாயிருப்பதால் இதை துணிவுடன் செய்யத்தான் வேண்டும். இது வெகு கஷ்டமென்று எனக்குத் தெரியும். அநேக வாஞ்சையோடிருப்பவர்கள் முயற்சிப்பதில் களைத்துப் போவார்கள்.

களைத்துப் போவதால் நழுவவிட்டுவிடுகிறவர்கள் தேறிவரமாட்டார்கள். இதுதான் அதன் முடிவு. இதை அப்பியாசிப்பதில் பிரயாசை அதிகமாயும், நீடித்துமிருக்கும். இதை அப்பேர்ப்பட்ட கிரமமான வாழ்க்கையாக வைக்கவேண்டும் என்று அருத்தம்; அதாவது வேலையிலும், வசனத்திலும், நினைவிலுங்கூட அவசரம் என்பது இல்லாமல் சிஷியன் தனது தூல, ஆசைமய மனோமய தேகங்களின் விவகாரங்களை எல்லாம் முற்றும் அடக்கியாண்டு வருவது என்பது.

C W. L:—உண்மையில் விருத்திக்கு வரவேண்டுமென்று தன்னால் கூடியவரையில் பிரயத்தினப்பட விருப்பமுள்ளவன் தனது கோசங்களைப்பற்றி நிரவாசித்து அவைகள் எத்தன்மையானவையென்று தெரிந்துகொள்வது பிரயோஜனமானது. தேகி

(மனிதன்) விரும்பத்தகாத விஷயங்களை தூலதேகம் இச்சிக்கின்ற தென்று தெளிவாய் இவ்விடத்தில் சொல்லியிருக்கின்றது. ஆசைமய, மனோமய தேகங்களும் இவ்விதமே இச்சிக்கும் என்பதற்குச் சந்தேகமில்லை. இத்தேகங்களின் அமைவை தெரிந்து கொண்டால் அவைகளுக்கு வேண்டுமென்று ஆசைப்படுபவை தேகிக்கு வேண்டாதவை என நன்கு விளங்கும். அவைகளை பிரத்தியேக ஜீவிகளாக பாவித்துப் பேசுகின்றோம். ஒரு விதத்தில் அவைகள் அப்படித் தான் இருக்கின்றன. தேகங்கள் ஒவ்வொன்றும் உயிருள்ள அணுக்களால் சேர்த்து கட்டப்பட்டிருக்கின்றன. இவைகளில் ஒவ்வொன்றிலும் இருக்கும் உயிரெல்லாம் ஒன்று சேர்ந்து பிறகு அதற்கு ஓர் வகை கூட்ட பிரக்ஞை, 'தான்' என அறிவு, ஒன்று முளைக்கப்பெறுகிறது.

ஆகவே ஆசைமய தேகம் ஆசாபாச அரும்புகளால் திரண்டு உருவமாய் (Desire Elemental) ஆசைமய பூதம் என பேர்பெற்ற ஒரு ஜீவன் அதில் ஏற்படுகின்றது. அந்த தேகத்திலிருக்கும் புவர்லோக (காமலோக பௌதிக) அரும்புகளின் சிறு சிறு உயிரெல்லாம் கூடி ஓர் கூட்டு உயிராக தோன்றிய ஒரு பூத ஜீவன் இது. ஒவ்வொரு அரும்பிலுள்ள உயிரை தனியாய் பிரித்துப் பார்த்தால் அது பிரக்ஞையை வெகு கிஞ்சித்துதான் வெளிப்படுத்தும் ஓர் சிற்றுயிர். ஜீவசஞ்சார முறைப்படி அது மேலிருந்து (மாயைபடியிலிருந்து) ஸ்தூல அணுவாகிவர கீழே இறங்கிவந்து கொண்டிருக்கிறது. அது ஜடமாகி வருவதில் அதாவது (பிரதிவி) மண்ணுருகமாறுவதில் அதனுடைய முன்னேற்றம் இருக்கின்றது. இவ்விதம் சிற்றுயிர்கள் ஆசைமய தேகத்தில் தாம் ஏகமாய் சேர்ந்து இருப்பதைக் கண்டு இவைகளெல்லாம் திரண்டு ஒற்றுமைப்பட்டு ஒரு உயிரைப்போல நடிக்கின்றன. ஆதலால் ஆசைமய தேகத்திற்கு ஓர்பலத்த பிரத்தியேக சுபாவத் தன்மை இருக்கிறது. அது அவ்வளவு பலமுள்ளதாய் இருப்பதால் அதற்குத்தனிஇச்சை ஒன்றுஇருப்பதாக அநேகமாய்ச்சொல்லலாம். அதனுடைய விருத்திக்கு வேண்டிய வழி, உணர்ச்சியிலும், தாபங்களிலும், நமக்கு வேண்டியிராத, பொறாமை, மாச்சரியம், லோபம் (சுயகாமியம்) முதலிய வெகு முரணுக, வெகு பலமாகவுள்ள தாபங்களைக் கிளரி அவைகளில் உழலுதலில் இருக்கின்றது. இத

ஞல்தான் இதனுடைய நோக்கத்திற்கும், நமது நோக்கத்திற்கும் பெரும்பாலும் நேர் விரோதமாக இருக்கின்றது. வெகு நுட்பமாயும் விரைவாயும், உண்மையில் பலமாயுமுள்ள தாபங்களாகிய அன்பு தயை, பக்தி, ஆகிய இவைகள் ஆசைமயதேகத்தின் மேல் பாகத்தைச் சேர்ந்தவை. அவைகள் நமக்குத் தேவையாய் இருந்தபோதிலும் அத்தேகத்திற்கு இப்போது தேவையில்லை.

தங்கள் இஷ்டப்படி செய்யவும் பேசவும் தடையில்லாதிருக்க வேண்டுமென்று கிரம வாழ்க்கைப்படி நடக்காதவர்கள் உண்மையில் ஆசைமய தேகத்திற்கு அடிமைப்பட்டவர்கள். இதைப்பற்றி ஆசைமய தேகத்தின்மேல் பழி சொல்லக்கூடாது. அல்லது மத்திய கால கிருஸ்தவர்கள் எண்ணியதுபோல் வஞ்சித்து மயக்கும் பேய் என்று இதை கொள்ளக்கூடாது. நம்மைப் பற்றியாவது அல்லது நாம் இருக்கின்றோம் என்றாவது அதற்குத் தெரியாது. அது நம்மை எவ்வகையிலும் வஞ்சிக்க தூண்டுவதில்லை. ஆனல் அது தன்னை விளக்கிக் காட்டுவதற்கும், மற்ற ஜந்துக்களைப் போல தன் வழியில் விருத்திக்கு வர பிரியப்படுகின்றது.

"இப்பூத ஜீவனுடைய விருத்திக்காக நாம் நம்முடைய தேகத்தில் இடங்கொடுக்கக் கூடாதா? அதனுடைய முரணுன தாபங்களை அது வைத்திருக்க நாம் இடம் விடக்கூடாதா?" என்று சில சமயங்களில் சிலர் கேட்பதுண்டு. அது சரியல்ல; அது தவறுன பரோபகாரம். அப்படி உதவிக் கொடுத்தாலும் முற்றிலும் உதவ முடியாது, நாம் முன் ஜன்மங்களில் முரணுன தாழ்ந்த தாபங்களை நமக்குள் பலமாக உழலவிட்டதனுல் இப்போது முரணுன அணுக்கள் வந்து தமது காமமய தேகத்திற் சேர்ந்திருக்கின்றன. இதற்கு நாம் செய்யவேண்டிய உபகாரம் யாதெனில், இதை நம்மிடமிருந்து உதறித்தள்ளி அதற்கு வேண்டிய கிளர்ச்சியால் எவருக்கும் கெடுதி உண்டாகாதிருக்கும்படியான நாயோ அல்லது பசுவோ அல்லது காட்டுமிருண்டியோ ஒன்றை தொத்தும்படி அதை விட வேண்டும்.

ஆசைமய பூதஜீவன், தன் வழியில் மிக தந்திரமானது. அது இருக்கும் தாழ்ந்த நிலைக்கு நாம்இறங்கி அதனுடைய சிறு பிரக்ஞை

எப்பேர்ப்பட்டது என்று தெரிந்துகொள்ள முடியாது. ஆனால் அது, தன்னைவிட நுட்பமான ஏதோ ஒன்றால் (மனோமய பௌதிகத்தால்) சூழப்பட்டிருக்கிறது என்று தெளிவாய் உணருகிறது. இவைகளை (மனோமய அணுக்களை) தன் அணுக்களோடு சேர்த்து ஆடவைத்தால் தனக்கு அதிதீவிர துடிப்புகள் இன்னும் அதிகமாயும் கிடைக்குமென்று சோதித்துத் தெரிந்துகொண்டிருக்கிறது. இதற்குத்தேவையானதை தேகியாகிய மனிதனுக்கு வேண்டியதாக அவனை நினைக்கத் தூண்டினால், அப்போது தனக்கு வெகுவாய் கிடைக்குமென்று தெரிந்து நுட்பமான அணுக்களைக்கிளரி எழுப்ப பிரயத்தனப்படுகிறது. உதாரணமாக அசுத்த எண்ணத்தை தூண்டி எழுப்பினால் தனக்கு இஷ்டமான அசுத்த தாபம் உடனே கிடைக்கும். அல்லது பொறாமை எண்ணத்தை எழச்செய்தால் தனக்கு வேண்டிய கொதிக்கும்படியான வயிற்றெரிச்சல் உடனே வரும் என்று தெரியும். இது கெடுதியானது ஆகையால் தனக்கு வேண்டும் என்பதல்ல. ஏனெனில் அது சுகிக்கவேண்டிய முரணான தாப விகாரங்களைத் தவிர மற்றது ஒன்றும் அதற்குத் தெரியாது. இவ்விதமாக, பூதஜீவன் விகாசமுறையில் வெகு தாழ்ந்தநிலையில் இருந்தபோதிலும், மனிதனுக்கு எதிரியைவிட வெகு சாமர்த்தியத்தை பலகாலும் காட்டுகிறது. இன்னும் மண்ணாகி, ஜடமாகி வராதிருக்கும் ஏதோவொரு அற்ப ஜீவனால் நாம் பிடிபட்டு, அது நம்மை ஓர் கருவியாக உபயோகித்து, வருவதைத் தெரிந்து யோசிக்கும்போது வெட்கக்கேடாய் தானிருக்கிறது. ஆகையால் பண்டைய நாளிலிருந்து வரும் கெட்ட பழக்கங்கள் நம்மிடத்தில் ஏதாவது இருந்தால் அவைகளை மாற்றி அவைகளுக்குப் பதிலாக இனி வேண்டிய நற்குணதாபங்களை அமைக்கவேண்டும். ஆசைமய தேகத்தை அதனிஷ்டப்படி விடாமல் நாம் அதை அடக்கி சுத்தி செய்யவேண்டும்.

இதைத் தவிர மனோமய ஜீவபூதம் ஒன்று மனோமய தேகத்திலும், தூல ஜீவபூதம் ஒன்று தூல தேகத்திலும் இருக்கின்றன. தூல தேக ஜீவபூதம் சாதாரணமாய் தேக சௌக்கியத்தை விசாரித்து தேக தசைகளைக்கட்டி பழுது பார்க்கும் வேலையோடிருக்கின்றது. கீறல் காயமாவது, வெட்டு காயமாவது, அடியாவது, பட்

டால் தூல ஜீவபூதம், உடனே இரத்தத்திலுள்ள வெள்ளை பில்லைகளை (White Corpuscles) அடிபட்ட இடத்திற்கு விரைவாகப் போகச்செய்து, அங்கே புதிய தசை அரும்புகளை உண்டாக்கிப் பழுது பார்க்கின்றது. தூல தேகத்தில் இது செய்யும் அநேக அற்புத வேலைகளிருக்கின்றன. இதனுடைய வேலைகள் சில நமக்கு வெகு பிரயோஜனமானவைகள், என்றாலும் நமக்கு நன்மைதராத தூண்டுதல்களை இது வைத்திருக்கவும் கூடும்.

> "ஏனெனில் நீ கடவுள்; மேலும் கடவுள் இச்சிப்பதைத் தான் நீயும் இச்சிப்பாய். என்றாலும் உனக்குள்ளிருக்கும் கடவுளைக் காண நீ உன்னுள் ஆழ்ந்து ஆராய்ந்து அவருடைய வாக்காயுள்ள உனது வாக்கையுற்று கேள்."

C. W. L:—கடவுளோடு நமக்கிருக்கும் ஐக்கியத்தை உற்று உணர கஷ்டமாயிருக்கிறது. இது எனக்குக் கிடைத்த விதத்தை உங்களுக்குச் சொல்கிறேன். என்றாலும் சொல்லக்கூடிய வழி ஒன்றேயல்ல. ஒவ்வொரு லோகங்களிலிருக்கும் அடுக்குகளில் (ஒவ்வொரு லோகத்திலும் எழு அடுக்குகள் உள) அணுப்படியிலிருந்து மற்ற லோக அணுப்படிக்கு குறுக்கே மேல் போகும் வழியை கண்டுபிடிக்க மனோமய லோகத்தின், அதாவது பிரம்மலோகத்தின் உச்சியில் எனக்குள்ள மனோபலத்தோடு உற்றுப் பார்த்து கொண்டிருந்தேன். ஒருவன் கீழிருந்து மேல் லோகங்களுக்குப் போகவேண்டுமானால் பூலோக உட்படிகளை ஒன்றொன்றாய்த் தாண்டி மேல் அணுப்படிக்குப் போகவேண்டும். அங்கிருந்து புவர்லோக அடிப்படியைப் பிடித்து உச்சி அணுப்படி வரைக்கும் போகவேண்டும். அப்படியே மனோமய லோக கீழ்ப்படிக்கு வந்து மறுபடியும் அங்கிருந்து மேல் வரைக்கும் கிளை கிளையாக ஏறிப் போகவேண்டும். இது சாதாரணமான வழி. பூலோக அணுப்படியிலிருந்து சரேலென்று புவர்லோக அணுக்கிளைக்கும் அங்கிருந்து ஒரே நெட்டாய் மனோமயலோக அணுக்கிளைக்கும் குறுக்கே போவது இன்னொரு வழி.

இதற்கும் செங்குத்தான மற்றொரு குறுக்கு வழி இருப்பதாக எனக்கு மேலிருக்கப்பட்ட சிஷியர்கள் சொல்லக் கேள்விப்பட்டேன். நமது அண்டத்திலிருக்கும் ஒரு லோக அணுக்கிளையில் ஒருவனுடைய பிரக்ஞையை நாட்டினால் பிரம்மாண்டத்திலிருக்கும் இதற்கு நேர்சரியான, லோகத்திற்கு போகும் வழி திறக்கும் என்று சொன்னார்கள். ஆதலால் மனோமயலோகத்தின் அணுக்கிளையிலிருந்து உற்று கண்ணோக்கினால் நாம் அறியாத இதர அண்டங்களிலிருக்கும் மனோமய லோகத்தை எட்டமுடியும்.

அப்பேர்ப்பட்ட லோகத்திற்கு போவேன் என்கிற நம்பிக்கை எனக்கில்லை. ஆனால் வழியொன்று இருக்கலாமென்று நம்பினேன் பிரயத்தனப்பட்டேன், நமக்கு இருக்கும் லோகங்களைப் போல இரண்டு அடுக்குகளுக்கு அப்பால் பிரம்மாண்டத்திலுள்ளதைபார்க்க முடிந்தது, வர்ணிக்க என்றால் முடியாது, எவ்விதத்திலும் அவ்விடத்திற்குப் போக முடியவில்லை;முத்தர்கள்கூட போவார்களென்று நான் நினைக்கவில்லை. ஆனால் அதை நான் பார்க்க முடிந்தது: நான் ஒரு ஆழமான கிணற்றிலிருந்து நக்ஷத்திரத்தை பார்ப்பது போலிருந்தது. ஆனால் அந்த உயர்வான பிரக்ஞையைத் தெரிந்துகொள்ள முடிந்தது. அப்போது சொல்லமுடியாத அதிதீவிர உணர்ச்சி ஒன்று என்னுள் உண்டாயிற்று. அது யாது எனில், இதுவரையில் எனக்கென்று ஒரு இச்சைஇருந்ததாகவும், அறிவு எனக்கென்று ஒன்று இருந்ததாகவும், தாபங்கள் எனக்கென்று இருந்தனவாகவும் நினைத்தவை எல்லாம் என்னுடையவையல்ல அவருடையவை என்கிற உண்மை தெரிந்தது. அவருடைய இச்சை, அவருடைய தாப உணர்ச்சி, என்னுடையது அல்லவே அல்ல. அந்தப் பார்வையினால் சொல்லமுடியாத நிச்சயம் என்னில் பதிந்துவிட்டது, அந்த அனுபவத்தை மறக்கமுடியாது.

தைவீக ஐக்கியம் நமக்குள் இருக்கின்றது என்கிற நிச்சயம் புத்திலோகத்தில் விழிப்புடன் விவகரிக்கும்போதுதான் வரும். அப்போது பிரக்ஞை கடல்போல் விரிந்து எல்லோரையும் சுற்றிச் சேர்த்துக்கொண்டு சூழ்ந்திருப்பதைப் பார்ப்போம் ; நாமும் அதில் ஒருபகுதியாய் இருப்பது தெரியும்; அப்படியேஅநேகர்அதிலிருந்து

கொண்டு நம்மோடு கலந்து ஐக்கியப்பட்டிருப்பதையும் காண்போம்; உடனே இந்த உணர்ச்சிக்குமேல் எல்லாம் ஒரே பிரக்ஞையா யிருப்பதையும், அதில் நம்மையும் மற்றவரையும் உள்ளும் புறமு மாய் கலந்து இருப்பதையும், நாமும் கடவுள் என்பதையும், அறி வோம். இந்த உற்றுணர்வு வருமானால் இது நமக்கு பரம அடைக் கலம், விசுவாசம், நினைக்கக்கூடிய அளவு தீக்ஷண்யமான துணிவு, உற்சாகம், இவைகளைத் தரும். என்றாலும் துவக்கத்தில் சிலர் பயப்படுவார்கள். ஏனெனில் புத்தி பிரக்ஞையில் விழித்து பார்க்கும்போது அவர்கள் தாம் எனும் தங்களை இழந்துவிடுவதாக உணரக்கூடும் : நிச்சயமாய் அவர்கள் இழந்து போவதில்லை. கிருஸ் துபகவான சொன்னதை ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள்:—"எனக் காக எவனொருவன் தன் உயிரை இழக்கிறானோ அவன் அதைக் காண்பான்" கிருஸ்து என்பது புத்தி தத்துவத்தைக் குறிக்கின்றது. "எவனொருவன எனக்காக (அவனுக்குள் இருக்கும் கிருஸ்து தத்து வத்தை விருத்தி செய்வதற்காக) இதுவரைக்கும் வாழ்ந்துவந்த காரணசரீரத்தை ஒதிக்கிவைக்கின்றானோ அவன் தன்னைத்தான் தரி சிப்பான்—மேலான மகிமைவாய்ந்த பரமார்த்த வாழ்வைக் காண் பான." என்று அந்த வாக்கியத்தின் பொருள். இதைச்சாதிக்க கொஞ் சம் தைரியம் வேண்டியதாய் இருக்கிறது. துவக்கத்தில் ஒருவன் புத்தி (விக்ஞான) மயகோசத்திலிருந்து தன்னைப் பார்த்தால், ஆயிரக் கணக்கான வருஷங்களாய் அங்கைபட்டு "தான்" என நம்பிக்கொண் டிருந்த காரண சரீரம் மாயமாய்ப் போனதைக் காண அவனுக்கு திடுக்கிட்டுப் போகும். நான் விவரித்தஅனுபவங்களில் ஒன்று ஒருவ னுக்கு இருக்குமானால் 'ஏகபுருஷன்' தானே ஒன்றாய் இருப்பதை திடநிச்சயத்துடன் தெரிந்து கொள்வான். இக்கருத்தை எடுத்துக் காட்டமுடியாது; ஆனால் அது அனுபவத்தில் தெரியும். பிறகு அந்த நிச்சயத்தை யாதொன்றும் எப்போதும் அசைக்கமுடியாது.

"உனது தேகங்களை 'நான் என தவறி எண்ணாதே; தூலதேகம் நீயல்ல, காமமய தேக மும் நீயல்ல, மனோமய தேகமும் நீயல்ல, இவை ஒவ்வொன்றும் தனக்கு வேண்டியதை

பெறும்பொருட்டு உன்னை மயக்கி, நீ அவைகளை 'நான்' என பாவிக்கச் செய்து நடிக்கும். ஆனது பற்றி இவைகளை யெல்லாம் தெரிந்திருக்கவேண்டும்; தவிர இவைகளுக்குத் தலைவன் நீதான் என்று அறிந்திருக்கவேண்டும்."

C.W.L:—நாம் முன் கவனித்திருந்த பூத ஜீவன்களைச் சுட்டி இத்தேகங்களைப் பிரத்தியேகமானவைகளாக வெகு தெளிவாய்ப் பேசி வருகின்றார். அநேகர் இவைகளின் (ஆளுகையை) போராட்டத்தை கொஞ்சமேனும் கண்டிக்கிறதேயில்லை. இவைகளின் கொலுவை அடக்காமலிருப்பதோடு கூட அவர்கள் கழுத்திலேயே ஓர் நுகத்தடி இவைகள் மாட்டியிருப்பதாக அவர்களுக்குத் தெரியாது. இவர்கள் தங்களை தேகங்களிலிருந்துப் பிரித்துக்கொள்வதும் இல்லை. மனிதன் ஆன்மாவை உடையவன் எனும் இடரான போதனை இவ்வழியில் விளைவித்த மெத்த தீங்கிற்குக் காரணமாகும். மனிதன் என்று சொல்பவன்தான் ஆத்மா, இவன் தேகங்களை உடையவன், என உற்று உணர்ந்தால் அப்போது இவைகளின் சிக்கை கொஞ்சம் உடைக்க துவக்கக்கூடும் ஆன்மாவை நிச்சயமில்லாத ஏதோ ஒன்றாக, மேகம்போல் தனக்குமேல் மிதந்துகொண்டிருப்பதாகக் கருதிக்கொண்டிருக்கும் வரையில் நன்மை உண்டாகுமென்னும் நம்பிக்கையில்லை. "பூதஜீவன் நம்முள் எழுவதை நாம் கண்டபோது இந்த தாபம் எனது காமமய தேகத்தின் குறிப்பு. எனக்கு இஷ்டமானபடி தான் நான நடப்பேன்; தற்சமயம் இந்தத் தேகங்களுக்கிடையில் நான் நடுநாயகனாக விருக்கின்றேன், அவைகளை என்னிஷ்டப்படி உபயோகிப்பேன்" என்று நாம் சொல்ல வேண்டும்.

"செய்தாக வேண்டிய வேலையிருக்கும் போது தூலதேகம் இளைப்பாறவோ, உலாவப் போகவோ உண்ணவோ, பானம் அருந்தவோ வேணுமென்கிறது;. தெரியாதவன் "நான் இவைகளைச் செய்யவேண்டும் கட்டாயம் செய்வேன்"

என்று தனக்குள் சொல்லிக் கொள்ளுகிறான். ஆனால் தெரிந்தவனே "வேண்டுமென்று இச்சிக்கிற இதுவல்ல நான், சற்று காத்திருக்கட்டும் என்கிறான்."

C.W.L:—பிள்ளைகளிடத்தில் இவ்வழக்கம் வெகு பலமாயிருப்பதைக் காணலாம். குழந்தை யொன்றை செய்யப் பிரியப்பட்டால் அது அதற்குக் கைலாசந்தான். அதை, அவ்விடமே அத்தக்ஷணமே செய்தாகவேண்டும். செய்யாவிடில் உலகமே மூழுகிப் போனது போலிருக்கும். காட்டு மிருண்டியும் இப்படித்தான தட்டி எழும்பும் துடிப்புகளுக்கு அடிமைப்பட்டவன்; இது அவனிடத்தில் அவ்வளவு துடிப்பாயிருத்தலால் ஏதோ ஒரு சிறு விஷயத்தைப்பற்றி சில சமயம் கொலை செய்யத் துணிவான். நாகரீகமுள்ளவனே "நான் பொறுத்து என்ன ஆகும் என்பதை யோசிப்பேன்" என்று சொல்லுவான். குழந்தை குதித்தோடி விளையாடுகிறது, அநேகமாய் அடிக்கொரு தரம் பெரியவர்களான நாம் குழந்தையை அறியாமலே அதைக் கண்டிக்கின்றோம். "எனக்கு ஞாபகமில்லை" என்று குழந்தை சொல்லும். அது கண்டிப்பாய் வாஸ்தவந்தான் என்றாலும் நாம் சந்தேகிக்கிறோம். ஏனெனில் நாம் மறக்கக்கூடாதென்று நமக்கிருக்கிறது. நாம் நமது குழந்தை பருவத்தை மறந்துவிட்டோம். வம்சத்தையும் மறந்தோம். தேகத்தைக் குழந்தையாக மதித்து "உனக்கு குதிப்பு உண்டாயிற்று என்று எனக்குத் தெரியும் என்றாலும் அதை நீ இப்போது காட்டப் படாது. மற்றவர்களுடைய வேலையைக் கெடுத்துவிடும், வேறு ஒரு சமயத்தில் காட்டலாம்" என்று நாம் சொல்லவேண்டும். இந்தப்படி நடத்தினால்தான் தேகம் சீர்பட்டு வரும். காட்டு மிருண்டியும் இப்படித்தான். அவன் சில தாபக்கிளர்ச்சிகளின் படி நடக்கக் கூடாதென்று நாளாவட்டத்தில் தெரிந்துகொள்ளுவான்; தெரிந்துகொள்ள பல ஜன்மங்கள் கொள்ளும். சாதாரணமாய் இதை கற்பதில் கொலையுண்டு போகும்படி வரும். ஆனால் படிப்படியாய் முரட்டுத்தனம் குறைவுபட்டு நாகரீகம் மேலிட்டு வரும். தேர்ந்த மனிதனே தன் தேகத்தைத் தனி ஜந்துவென்று

எண்ணி விவகரித்து வருவான். இவன் அதை அடக்கி நடத்தி வருவான்.

> "எவருக்காவது சகாயஞ்செய்யும் சமயம் நேர்ந்திருக்கும்போது அநேகமாய் தூலதேகம் "இதென்ன பெருந் தொல்லையாயிருக்கின்றதே, வேறு யாராகிலும் செய்யட்டுமே", என்று எண்ணுகிறது. ஆனால் மனிதனோ தனது தேகத்தைப் பார்த்து "நற்செய்கைகளைச் செய்வதில் என்னை நீ தடுக்காதே" என்று பதிற் சொல்லுகிறான்."

C.W.L:—இதைப்பற்றி டாக்டர் பெஸண்டு அம்மையார் சொன்னதாவது:—வாஸ்தவத்தில் நல்ல வேலை செய்யவேண்டி வரும் சந்தர்ப்பங்கள் அநேகமிருக்கின்றன. ஆனால் அநேகர் அதைப் பார்த்து, "ஆம், இதை செய்யவேண்டியதுதான. யாராவது ஒருவர் ஒருநாளில் செய்வார்கள், நான் ஏன் அதைப்பற்றிச் சங்கடப்பட வேண்டும்" என்கிறார்கள். ஆனால் உண்மையில் ஊக்கமுடையவன் "செய்யவேண்டிய வேலை ஒன்று இருக்கிறது, நான ஏன் அதைச் செய்யப்படாது" என்று சொல்லி அந்த வேலையைத் தாவிப் பிடித்து உடனே செய்ய ஆரம்பிப்பான்.

> "தேகம் உனது மிருகம், நீ; ஏறுங் குதிரை, ஆகையால் நீ அதை நன்றாகப் பாதுகாத்து, அதனிடம் அதிகவனம் வைக்கவேண்டும். அளவிற்கதிகமாய் வேலையை வாங்காமல் அதற்குச் சுத்தமான ஆகார பனுதிகளை மிதமுடன் கொடுத்து அதனிடம் அழுக்கென்பது அணுவளவுமில்லாதபடி எப்போதும் அது சுத்தமாய் இருக்குமாறு வைத்திருத்தல் வேண்டும்."

C.W.L:—தேகம் ஒருமிருகம் என்கிற கருத்து நிச்சயமாகவே மெத்த உபயோகமுள்ளது. தெளிவாகத் தான் இருக்கிறது. இந்த

உவமையை இன்னும் நெருங்கித் தொடர்ந்தால் நாம், நடக்கவேண்டிய வாழ்க்கைக்கு சற்றேறக்குறைய ஒட்டி இருப்போம். நீங்கள் ஓர் குதிரையை வைத்திருப்பதாக வைத்துக்கொள்வோம்; நீங்கள் நியாய மானவர்கள் பக்ஷமுள்ளவர்கள் என்றும், குதிரையிடத்தில் வேலைவாங்கப் பிரியப்படுவதுடன் அதை கூடியவரையில் சௌக்கிய சுகத்துடன் வைத்திருக்கப் பிரியப்படுகிறவர்கள் என்றும் எடுத்துக்கொள்வோம். அப்போது நீங்கள் முதல் முதல் செய்யவேண்டியது யாதெனில் அதை சிநேகிக்கச் செய்தல்; அதாவது நீங்கள் அதைத் தெரிந்து கொள்ளவேண்டும்; அது உங்களைத் தெரிந்துகொள்ளும்படி நடக்க வேண்டும். மேலும் நீங்கள் அதனிடத்தில் பக்ஷமாய் இருப்பதாக அது தெரிந்து கொள்ளும்படி காட்டவேண்டும். பிறகு அதற்குத் தகுந்த உணவைப் போதுமான அளவு கொடுக்கவேண்டும்; தகாததை கொடுக்கப்படாது. அதனிடத்தில் வேலையைச் சரியாய் வாங்க வேண்டும். குதிரையை வைத்திருப்பது வேலைக்காகவே; எனறுலும் களைக்கும்படி வேலைசெய்யவிடக்கூடாது. அது செய்யக்கூடிய வேலையைக் கண்டுபிடித்து அதைச் செய்யவிடு. அது உன்னை நம்பியிருக்கும்படி செய்திருப்பாயானல் அது நீ சொன்னபடி கேட்கும். எதைக காட்டினலும் அது தனக்கு நல்லதென்று எண்ணி உன் இஷ்டப்படி நடக்கும். பிறகு அது பயப்பட்டு மிரண்டு இருக்கும் போது கூட உன்னை நம்பும். அப்படி நடத்துவாயானல் உனக்குக் கொஞ்சமும் கஷ்டமில்லாமல் எல்லா வேலையையும் அதனிடத்திலிருந்து வாங்கமுடியும். சரி தவறி பழக்குகிறவன் குதிரையைச் சில சமயங்களில் மிரட்டிப் பயப்படுத்தி விடுகிறன். பிறகு நல்ல வேலை அதனிடமிருந்து ஒருபோதும் வாங்கமுடியாது. அப்பேர்ப்பட்ட குதிரை உனக்குத் தேவையில்லை. குதிரையுடன் சிநேகிதமாயிருக்கவேண்டும்.

தேகம், குதிரைபோல் சரியாய்த் தான் இருக்கிறது. இதோடு பழக உசிதமான வழியைக் கண்டுபிடிக்க வேண்டியிருக்கிறது. அடயோகசாதனங்களைப் பிரயோகிப்பது பெரும் பிழை; அதோடு பக்ஷமாயிருக்க வேண்டும்; வசதியான அளவு வேலையை அதனிடமிருந்து வாங்கவேண்டும். களைத்துப் போகும்படி வேலைசெய்ய

விடப்படாது. அப்படிவிட்டால் ஒருமணி நேரத்தில் கெடுதி வருவித்துக் கொள்ளக்கூடும். அதைச் சரிப்படுத்த வருஷங்கள் செல்லும். தற்கால வாழ்க்கையில் மெத்த பிரயாசை இருக்கின்றது. வேலையில் இருக்கும் ஜனங்கள் "வாஸ்தவத்தில் நான இன்னும் கொஞ்சம் அதிகம் செய்திருக்கவேண்டும்" என்று அடிக்கடி சொல்கிறார்கள். ஆனால் அந்தக் கொஞ்ச அதிகமும் தேகத்தைத் தளரச்செய்து விடுகிறது. அப்படி தளர்ந்த தேகம் சாதாரண நிலைக்கு வருகிறதில்லை. இவ்விதமாய்க் கெடுதியை வருவித்துகொள்வது மிக சுலபம். ஏனெனில் தேகமானது வெகு நுட்பமான இயந்திரம் ; உயிரோடிருக்கும் இயந்திரம். இது ஆச்சரியமானபடி தேர்த்திச் சரிப்படுத்திக்கொள்ளும். நல்ல தேகம் எனபது கண்டபடி உபயோகித்தபோதிலும் தாங்கவேண்டும் எனறு அநேகருடைய கருத்து. ஆனால் கண்டபடி உபயோகித்தும் தேகம் தப்பிப் பிழைத்திருக்கிறது என்பதாலும், தேகி (மனிதன்) இன்னும் ஜீவித்திருக்கிறன் என்பதாலும் தேகத்திற்குத் தீங்கு நேரிடவில்லை என்பதல்ல. மாறாக பலகாலும் அளவிற்கு மிஞ்சின கொஞ்ச கஷ்டமும் ஆயுள் பரியந்தம் இருக்கும்படியான ஓர கெடுதியை கொடுத்துவிடும். ஆதலால் அந்தரங்க குப்த தேர்ச்சியைப்பெற எவ்விதத்திலாவது பிரயத்தனப்படுபவருக்கு தேகத்தை உபயோகிக்கும் விஷயத்தில் பத்திரமாய் இருக்கும்படி எனது எச்சரிக்கை. மேலும் நம்முடைய பிரசிடெண்டு சொல்லியவாறு எதைச் செய்ய நமக்கு நேரமில்லையோ அது நம்முடைய வேலையல்ல என்பதை முற்றும் தெரிந்திருக்க வேண்டும்.

பிறகு உணவைப்பற்றி சொல்லி வருகிறது, 'எவனும் எதையும் உண்டு வாழலாம்' என்கிற வதந்தி அனுபோகஸ்தனுக்கு சிலாக்கியமானதல்ல. ஜனங்கள் கைத்தொழிலளவினாலும் தேக அமைவாலும் வித்தியாசப்படுகின்றனர். ஒருவனுடைய உணவு மற்றவனுக்கு விஷம் என்று சொல்லுவது பழைய முதுமொழி. இது பதார்த்த குணத்தைப்பற்றிய விஷயத்தில் வாஸ்தவந்தான். உணவைப்பற்றி அதிகமாய் கவனிக்கிறவர்கள் சுத்தமாய் பூலோக விஷயங்களைப்பற்றி அனுவசியமாகக் கவலைப்படுகின்றவர் என்று நினைக்கலாம்; நிச்சயமாகவே கவலை மெத்த வைக்கலாகாது; நடுத்தரமாய்

நின்று அறிவோடிருப்பதுதான் சரி; தேகத்திற்குத் தக்க உணவு யாது, எவ்வளவு, என்பதைத் தெரிந்து கொள்வது ஒவ்வொருவருக்கும் ஓர் கடனாயிருக்கிறது. தேகத்திற்கு வேண்டியதையும் அது இஷ்டப்பட்டதையும் ஓர் அளவாக அதற்கு கொடுக்க வேண்டி இருக்கிறது. மற்றபடி கெடுதி உண்டாக்கும் மதுபானம், இறைச்சி முதலியவைகளை ஒருபோதும் கொடுக்கக்கூடாது; ஆனால் நீ அதோடு பழகிவருவதற்கு தேவையானது எதுவென்று தெரிந்து கொண்டு அதை எப்போதும் கவனிக்கவேண்டும். இவ்விதம் செய்தால்இத்தேக ஜீவனை அதன் அறிவிக்குத் தக்கபடி நம்மோடு ஒத்து நடக்கச் செய்ய முடியும்.

மாமிசத்தைவிட்டு மரக்கறி போஜனத்தைத் துடங்குபவர்களுக்கு அடிக்கடி தொந்திரவு வருகின்றது. இங்கிலாந்தில் சைவச் சாப்பாட்டை ஆரம்பிப்பவர்கள் அதை முற்றிலும் தவறாக எண்ணுகிறார்கள். இவர்கள் விசேஷமாய் மாமிசம், கோசுமுட்டை, உருளைக்கிழங்கு இவைகளைத்தான் சாப்பிட்டு ஜீவித்து வருபவர்கள். சைவ சாப்பாடு என்றால் மாமிசத்தைத் தள்ளி கோசுமுட்டையையும் உருளைக்கிழங்கையும் சாப்பிடவேண்டும் என்பது இவர்களது கருத்து. உருளைக்கிழங்கு முற்றிலும் சர்க்கரை ஆகும் பதார்த்தம். கோசுமுட்டையோ பெரும்பாகம் (ஜலம்) நீர். ஒருவன் வெறும் நீராலும் சர்க்கரையாலும் ஜீவிக்கமுடியாது. தேகத்திற்குத் தசை இரத்தம் முதலியவை உண்டாக்கும் மூலபதார்த்தங்கள் அநேகம் தேவை. இவைகளடங்கிய பதார்த்தங்கள் அநேக தினுசுகள் இருக்கின்றன; ஆகையால் ஒருவன், தைரியமாய் கஷ்டமில்லாமல் தன் தேகத்திற்கு ஆகவேண்டிய நல்லவைகளைப் பொறுக்கி எடுத்துச் சாப்பிட்டு வரக்கூடும். ஜீரண விஷயத்தில் எவனுக்காவது கஷ்டமிருந்தால் அவன் தகாததை உட்கொள்ளுகிறான் என்று விளக்குகிறது. மற்ற பதார்த்தங்களை உபயோகித்து சோதிக்கவேண்டும். ஏனெனில் அவன் தீராவியாதியஸ்தனாக இருந்தாலொழிய ஆகாரத்தைச் சரிப்படுத்திக்கொள்ள எப்போதும் இடமிருக்கின்றது. சிறு பிள்ளைகள் வண்ணாத்தி பூச்சியாக மாறும் புழுக்களை வளர்த்து வரும்போது இப்புழு தின்னும் இலையைத் தேட வெகு பிரயாசை எடுக்கிறார்கள். ஒருவித

இலையைத்தான் அது தின்னுமென்று அவர்களுக்குத் தெரியும். இப்படியிருக்க நமக்கு ஆயுள் பரியந்தம் பணிவிடைசெய்யும் தேகமான இந்த மிருகத்திற்குத் தக்க உணவைத் தேடிக்கொடுக்க தடையின்றிப் பிரயாசை எடுக்கத்தான் வேண்டும். அன்றியும் அதற்கு சுத்த ஆகாரத்தையும் பானத்தையும் தான் கொடுத்து வரவேண்டும்.

அதன் சுத்தத்தைப்பற்றி வெகு ஜாக்கிரதையாக இருக்கவேண்டும்; இதற்கு அநேக காரணங்கள் உண்டு. சௌக்கியத்தை மாத்திரம் பற்றியல்ல, அல்லது சும்மாவெறும் நாகரீகமாக இடம் பத்திற்காகவுமல்ல; பின்னை மாஸ்டர் அவரது சக்தியை உலகத்தார்பேரில் பொழிய, அவருடன் நெருங்கி சம்பந்தப்பட்டவர்களின் தேகங்களை வாய்க்கால்களாக உபயோகித்து வருவது சாதாரணம்; ஆனால் இதைப்போல் நூலில் விதித்திருக்கும்முறையின்படி ஒழுக பிரயத்தனப்படுகிற எவனும் அவருடைய கண்பார்வையில் வரக்கூடும். ஆதலால் அப்பேர்ப்பட்டவன் அவருக்கு வேண்டியதாயிருக்கக் கூடும். ஓர் வாய்க்காலாக அவனை உபயோகப்படுத்தக் கூடும். தகுதியானசீடர்கள்இல்லாத இடங்களில் ஏதோ ஓர்சக்தியைபொழிய இவனை உபயோகிக்கவேண்டி நேரும்; ஆனால் பரிபக்குவத் தேர்ச்சியில்போதுமான அளவு இல்லாதபோதிலும் ஒருவன் சுத்தமாயிருப்பானானால், இந்த விசேஷ காரியத்திற்கு தக்கவனாக அமையக்கூடும். அப்பேர்ப்பட்ட சந்தர்ப்பங்களில் மாஸ்டர் அவனை உபயோகப்படுத்தவேண்டி வரும்.

மாஸ்டர் அவர்கள் வெவ்வேறு காரியங்களுக்காக வெவ்வேறு சக்திகளைப்பொழிகின்றார். சிலசமயங்களில் ஒருவன் தக்கவாய்க்காலாயிருப்பான். மற்ற சமயங்களில் இன்னொருவன் தகுந்தவனாகவிருப்பான். இரண்டு சிஷியருடைய சந்தர்ப்பங்களை கவனித்துப் பார்த்தால் ஒருவனை ஒருவித சக்திக்கும் மற்றவனை இன்னொருவித சக்திக்கும் உபயோகப்படுத்தி வருவதை காண்கிறோம். பொழிந்து வரும் சக்திகள் பூலோகத்திற்கும், காமமய லோகத்திற்கும், மனோமய லோகத்திற்கும், புத்திமய லோகத்திற்கும் போகவேண்டிய சக்திகளாகவிருக்கின்றன. பூலோகத்திற்கு முக்கியமாய் கைகால் வழி

யாய்ப் பாய்ந்துவருகிறது. இப்படியிருக்க பொழிவதற்காக குறித்து வைத்தவனுடைய தேகம் அச்சமயத்தில் சுத்தமில்லாதபடி அசுசியாயிருந்தால் மாஸ்டர் அவனை உபயோகிக்க முடியாது. ஏனெனில் அப்போது அவன் சுத்தவாய்க்காலாயிருக்க முடியாது. ஒருவேளை பொழிந்தால் அது சுத்தஜலத்தை அழுக்கடைந்த குழாயின் வழியாய் பாய்ச்சுவதுபோலிருக்கும். போகும் வழியிலிருக்கும் அழுக்கால் கெட்டுப்போகும். ஆதலால் மாஸ்டர் அவர்களுக்கு நெருங்கிய சம்பந்தப்பட்டவர்கள் தேக சுத்தியை வெகு ஜாக்கிரதையோடு கவனிக்க வேண்டும். ஆதலால் அவருக்கு வேண்டியவர்களாக நாம் இருக்க வேண்டுமானால் சுத்தியாய்த் தேகத்தை வைப்பதில் ஜாக்கிரதையாக இருப்போமாக.

பிரயோஜனப்பட வேண்டுமென்கிற விருப்பம் நமக்கு இருக்குமானால், ஜாக்கிரதையாய்க் கவனிக்கவேண்டியகுறிப்பு இன்னொன்று உண்டு. அதாவது, முக்கியமாய் பாதங்கள் முறுக்கிக்கொண்டு கோணுதபடி தடுத்தல். கொஞ்ச நாளைக்குமுன் நான் ஒரு ஜாதியாரிடையில் சிலவாரம் தங்கவேண்டி வந்தது. அவ்விடம் வெறுங்காலோடு நடப்பது வழக்கம். அநேகப் பள்ளிக்கூட மாணக்கருடைய பாதங்கள் முறுக்கி முடக்கிக்கொண் டிருந்ததைப் பார்த்தேன். இவ்வித திருகலான அவலக்ஷண பாதங்கள் வழியாய் சக்தியைப் பொழிய மாஸ்டருக்குக் கடினமான இடைஞ்சலாக இருப்பதைக் கண்டு திகிலடைந்தேன். சக்தியானது சிஷியனுடைய தேகமுழுதும் நிறைந்து கைகால் வழியாய்ப் பாய்ந்துபோவது தான் சாதாரண வழி. ஆனால் பிடித்து இறுக்கும் சுகமற்ற பாதரக்ஷைகளால் உண்டாகும் நீடித்தஅங்கக்குறை ஏற்பட்டிருந்தால் மாஸ்டர்கள் அப்பேர்ப்பட்ட சீடருடைய மேல்பாதியைத் தான் உபயோகிக்க முடியும். இவ்விதமாய் பாதிதேகத்தை உபயோகஞ்செய்ய வேண்டுமானால், ஒவ்வொரு தடவையிலும் தேகமத்தியில் அணைபோல் தடையொன்றை கட்டவேண்டி யிருக்கிறது. இவ்வங்கக்குறையால் அவருக்கு இன்னுமொரு கஷ்டம் வருவதால் குறையில்லாத மற்றவர்களை அநேகமாய் உபயோகப்படுத்த வேண்டி வரும்.

"ஏனென்றால் தேகம் முற்றிலும் சுசியா யும் சௌக்கியமாயும் இல்லாவிடில் (அதிகாரி யாக) பக்குவப்படுத்திக்கொள்ள வேண்டிய கடின மான சாதனங்களைச் செய்ய உன்னால் முடியாது; (அவைகளால்) உண்டாகும் ஓயா பிரயாசையை யும் உன்னால் சகிக்கமுடியாது."

C. W. L. தற்கால நிலைமையில் மார்க்கத்திற்குச் சித்தமாக்கிக் கொள்ள உண்மையில் கஷ்டமாயிருக்கின்றது. மேலும் அதை துரி தப்படுத்தினால் ஓயா களைப்பு உண்டாகிறது. நம்முடைய தூல முதல் மற்ற தேகங்கள் யாவற்றையும் சரியானபடி வைக்காவிடில் இதை சகிக்கமுடியாது. ஆதலால் பூரணதேக சௌக்கியம் விரை வான முன்னேற்றத்திற்கு அவசியமானது. எவரிடத்தில் இது இல்லையோ அவரிடம் தாமதம் உடனே ஏற்படும். சிஷியனுடைய முன்னேற்றத்தைக் கவனிக்க அவனைக் கண்பார்வையில் வைத்திருக் கிறவர்கள் அவனுக்குக் களைப்பு வாராதபடி ஜாக்கிரதையோடு கவனிக் கிறார்கள். முற்றும் சகிக்கும்படியான சக்தி சிக்ஷியனுக் கிருப்ப தாகக் பார்க்கும் வரையில் கொஞ்சமேனும் சக்திக்கு மிஞ்சின வேலை கொடுக்கமாட்டார்கள். (அப்போதுகூட தகுந்த அளவிற்குக் குறைவா கவே கொடுப்பார்கள்.)

"ஆனதுபற்றி அத்தேகத்தை அடக்கி யாள்வது எப்போதும் நீயாயிருக்க வேண்டுமே யன்றி அது உன்னை வசப்படுத்தி யாளவிடக் கூடாது.

காமமய தேகத்திற்கு அதன் ஆசைகள் உள. அவைகளோ பல; உன்னை கோபித்துக்கொள் ளும்படியும், கடிந்து பேசும்படியும், மாச்சரியம் பாராட்டும்படியும் பணத்தாசைப் படும்படியும், பிறர்உடைமைமேல் பொறாமை கொள்ளும்படி யும், மனவாட்டத்திற் கிடங்கொடுக்கும்படியும்,

அது விரும்புகிறது. இவைகளெல்லாம் அதற்குத் தேவை; இன்னும் அநேகமும் அதற்கு வேண்டும்; ஆனால் உனக்குத் தீங்குசெய்வதற்கென்றல்ல, பின்னைப் படபடப்பான விகாரத் துடிப்புகளில்துடிக்க அதற்குப்பிரியம்; மேலும் அவைகளில் ஒருவகையைவிட்டு மற்றொன்றில் மாறிமாறிதுடிக்க அதற்கு விருப்பம். அப்படியிருக்க, இப்பேர்ப்பட்டவை யாவும் உனக்கு வேண்டியதே யில்லை. ஆகையால் உன்னுடைய தேவையெது, உன்தேகத்தின் தேவையெது என்பதைப் பகுத்தறிய வேண்டும்."

A. B:—விசாரணையுள்ள அநேகர் தம் தேகங்களைத் தாமல்லவென்றுத் தெளிவாயறிவார்கள் என்று நான் நினைக்கிறேன். ஆனால் மாஸ்டர் அவர்கள் இவ்விடம் கொடுக்கும் உவமை இவர்கள் தங்களுடைய காமமய தேகத்தை தான என கொண்டிருப்பதை காட்டுகின்றது. சில சமயங்களில் "நான் கோபமாயிருக்கின்றேன். அல்லது ஆக்கிரஹத்தோடிருந்தேன்" என்று நீங்களே சொல்வதை அறிவீர்கள். கீழான தாபம் வந்தபோது தாமென்றுசொல்ல பிரியமில்லாதவர்கள்கூட மேலானவைகளுடன் அடிக்கடி கலந்து மயங்கிப் போகிறார்கள். வெகுவாய், தங்களுக்குள் பொறாமை தாபம் கிளம்பினால் அப்போது நான் பொறாமைப் படுகிறேன் என்று சொல்லமாட்டார்கள். ஏனெனில் மாந்தர்கள் தாபகுணங்களோடு கலந்திருந்த போதிலும் கீழானவைகளைக் காட்டாதபடி மறைக்க எத்தனிக்கின்றார்கள். "நான நேசிக்கும் பலானவர் என்னிடத்தில் பிரியங்காட்டுவதைவிட இன்னொருவரிடத்தில் அதிகமாய்க் காட்டுகிறார். அது எனக்கு வருத்தமாயிருக்கிறது" என்று சொல்லுகிற விஷயத்தில் தங்களுடைய உணர்ச்சியை பொறாமையல்ல அன்பு என்று கொண்டு தாங்களே ஏமாந்திருக்கிறார்கள்.

அன்பு வெகுதூரம் போகக்கூடிய சக்தியாயும், எல்லாவற்றையும் சேர்த்துத் தழுவி கொள்ளுவதாயும் இருப்பதால்

ஜனங்கள் இதன்கீழ்ப் படிதுங்கப் பிரியப்படுகின்றனர். அன்பிற்குக் கொஞ்சம்கூட சம்பந்தமில்லாத பலவிஷயங்களை அதற்காக என்று சுட்டிக்காட்ட எத்தனிக்கின்றனர். இப்பாரமான விஷயங்களோடு விளையாடாமலும், நேர்த்தியான வார்த்தைகளால் நம்மை ஏமாற்றிக் கொள்ளாமலும், நம்முடைய மனதை நேர்மையோடு கபடில்லாது பரிசோதித்தல் மெத்த நல்லது. நாம் இப்போது யோசித்து கொண்டிருக்கும் விஷயத்தில் உன் சிநேகிதனிடத்தில் அன்பாய் இருப்பதால் நீ வருத்தப்படவில்லை பின்னை அச்சிநேகிதனை மற்ற வனிடம் சேரவிடாமல் நீ மாத்திரம் சேர்த்து வைத்துகொள்ள உனக்குப் பிரியமிருப்பதால் வருத்தப்படுகின்றாய். இவ்வித வருத் தப்படும்படியான உணர்ச்சி வரும்போதெல்லாம் அது அன்புக்கு விரோதமாய் இருக்கும். இது சுயகாமிய நோக்கத்திலிருந்து வருகின றது. நீ உண்மையில் கடவுளாகிய நீ, பொறுமைப்பட முடியாது; ஆனால் உன் காமமய தேகத்திற்கு முடியும் தவிர கோபமாவது கடுப்பாவது நீ படமுடியாது, இவையெல்லாம் காம தேகத்தின விகாரங்கள்.

மாஸ்டர் அவர்கள் லோபம், பொறுமை, மனவாட்டம், என்ற வைகளைப் பற்றி உதாரணங்களை கொடுக்கின்றார். மார்க்கத்திற்கு வர வாஞ்சையுடையவர்கள் மூன்றாவதைத் தவிர முதல் இரண்டிற் கும் அவ்வளவாக இடங்கொடுக்க மாட்டார்கள். அநேகமாய் ஜனங் கள் மனவாட்டத்திற்கு வெகு ஜாக்கிரதையாக இருக்கிறதில்லை. ஏனெனில் இது இவர்களுடைய மனதை மாத்திரம் தாக்கி இருக் கிறது என்கிற கருத்தோடு மதிமயங்கினவர்கள், "நான் விசனப் பட்டாலும் வாட்டமாய் இருந்தாலும் என்னமாய் இருந்தபோதிலும் அது என்னுடையதே; தவிர மற்றவனுடைய விசாரமல்ல" என்று நினைக்கின்றார்கள். அது வாஸ்தவமல்ல. இது மற்றவர்களையும் தொத் திப் பிடித்து கஷ்டப்படுத்துகிறது. இது நாம் சாதாரணமாய் அறிந் திருப்பதற்கு மேல் அதிகமான தீங்கை விளைவிக்கின்றது. ஏனெ னில் மனவாட்டமுற்ற உன் எண்ணம் தாக்குகின்ற ஜனங்கள் முன்னேற்ற மில்லாதவர்களாய் இருக்கலாம். அன்றியும் அவர்கள் கொஞ்சத்திற்கெல்லாம் குற்றஞ் செய்யும்படியான நிலைமையில் இருக்கவும் கூடும்.

அநேகமான குற்றங்கள்—முக்கியமாய் கொலை, தற்கொலை, முதலியன— கடுமையானமனவாட்டமுற்ற காலத்தில் நடக்கின்றன, என்பதை குற்றம் வரலாற்றின் விதத்தையும் அதன் வருஷக் கணக்கையும் தெரிந்தவர்கள் கண்டிருக்கிறார்கள். நியாயாதிபதி கச்சேரி கூட்டில் இருக்கும் குற்றவாளிகள் "என்னால் பொறுக்கமுடியாத சஞ்சலம் வந்து மூடிகொண்டது அடக்க முடியாமல் போய்விட்டது" என்று அடிக்கடி சொல்லுகிறார்கள். இவ்வித மனவாட்டத்தில் சிக்கிக்கொண்டு, குற்றஞ்செய்து கஷ்டப்படுகிறவர்கள் கீழ் நிலையில் அநேகர் இருக்கிறார்கள். சிலர் சிறைச்சாலைக்குப் போவார்கள்; சிலர் மரண தண்டனைக்கு உட்படுவார்கள்; என்றாலும் இவர்கள் கையால் செய்த குற்றத்திற்கு இவர்கள் வாஸ்தவத்தில் உத்திரவாதிகள் அல்ல; (மற்றவர்களுடைய எண்ணத்தால் தூண்டப்பட்டுக் குற்றஞ் செய்தவர்கள்) ஒரு சமயம் கொஞ்சம் உத்தரவாதிகளாக இருக்கலாம். இந்த அந்தரங்க நியதிகளை அறிந்தவர்கள் வெகு குறைவாயிருப்பதாலும், நமது நியாயஸ்தலங்களில் மனோதத்துவ விசாரிப்பில் கிஞ்சித்த அறிவும் இல்லாததனாலும் அறை குறை நியாயங்கள் ஏற்படும் பூவுலகில் நாம் வாழுகின்றோம்.

இதை நான் பெரும்பாலும் வெகு கூர்மையாக உணர்ந்தறிகிறேன். ஏனெனில் எனக்கு உற்சாக தாபம் தீவிரமாய் வருவதுண்டு; பிறகு அது அடங்கினவுடன் அதே வேகமாய் பின்னோடே மனவாட்டம் வரும். அநேகர் இவ்வித அலைகள்போல மேலும் கீழும் போவதான தாப சுபாவமுடையவர்கள். ஒரு நாளைக்கு உலகமெல்லாம் சுகமாய் யிருப்பதாகவும், சூரியன் பளிச்சென்றுப் பிரகாசிப்பதாகவும், பிரபஞ்சமெல்லாம் அழகாய்இருக்கிறதாகவும், ஒவ்வொரு ஜீவனும் ஆனந்தித்துக்கொண்டு க்ஷேமமாய் இருக்கிறதாகவும் காண்பார்கள். பிறகு தொடர்பாகவே இவை எல்லாம் மாறி மெத்த விசனகரமான தளர்ச்சிவந்து உலகமுழுதும் இருள்மூடினதுபோல் தெரியும். இதை நிதானமாகக் கவனித்தால் தாப விகாரங்கள் மாறிவருவதற்கு வெளிக் காரணங்கள் போதுமானவைகளல்ல; என்றாலும் இந்த சுபாவத்தில் கொஞ்சம் அனுகூலமிருக்கிறது. இஜ்ஜன்மத்தில் நான் இதை என்னோடு கொண்டு

வராதிருந்தால் அவ்வளவு பலமாய் அதைப்பற்றி நான் பேச முடியாது. உணர்ச்சியின் இருகரைகளையும் அறிவது பிரசங்கம் செய்பவர்களின் தன்மையாய் இருக்கிறது. ஆனால் மற்ற ஒவ்வொரு சுபாவத்தைப்போல இதற்கும் அநுகூலத்தோடுப் பிரதிகூலமும் உண்டு. மாறி மாறி வரும் உக்கிரதாபக் கிளர்ச்சிகளுக்கு ஒருவரும் இடம் கொடுக்கக்கூடாது.

"நான் மனவாட்டத்திற்கு இடம் கொடுக்கப்படாது" என்று சும்மா சொல்லிக்கொள்ளுவதினால் இக்குறையை எடுக்க முடியுமா என்பது எனக்குச் சந்தேகம். மற்றவர்களுக்கு இது பரிதாபமான கெடுதி உண்டாக்குவதால் இதற்கு இடங்கொடுக்கக் கூடாதென்று ஒருவன் ஞாபகப்படுத்தி கொண்டால் கடுமையான சந்தர்ப்பங்களிலும் இக் குறையை எடுக்கமுடியும். தீர்க்கமுடியும். ஆகையால் அதை ஒழிந்துவிட மாத்திரம் பிரயத்தினப்படாதே; பின்னை அதற்குப் பதிலாக தைரியம், களிப்பு, என்கிற நல்லெண்ணத்தை மனதில் பதித்துப் பின்னும் அதில் உனது பரோபகார உற்சாகத்தையும் சேர்க்கவேண்டும்.

மாஸ்டர் அவர்கள் காட்டி கொடுக்கிறபடி காமமய தேகம் கெடுதி செய்ய விரும்புவதில்லை. அது கீழ் இறங்கி ஜடமாகும் பௌதிகச் சிற்றுயிர்களால் சேர்க்கப்பட்டிருப்பதாலும், மாறிமாறி வரும் உக்கிர தாப விகாரங்களால் அது விருத்திக்கு வரவேண்டியிருக்கிறபடியாலும், சுபாவமாகவே அது இவைகளில் உழன்று வருகின்றது. உக்கிரமான தாபங்களை அடிக்கடி மாற்றிகொள்ள காமமய தேகம் விரும்புகிறது என்கிற விஷயத்தை யோசித்தால், காமமய தேகம் 'நான்' அல்ல என்றும், புத்திக்கு ஒவ்வாத தாப விகாரங்களை தானல்லாத ஏதோ ஒன்று அதில் கொண்டுவந்து விடுகிறது என்றும், இவைகள் காமமய தேகத்தின் சுபாவச் சேஷ்டைகள் என்றும் அறிய மாணுக்கனுக்கு ஒத்தாசை தரும். இதை ஒருவன் அறிந்திருக்கவேண்டும்; தவிர இந்த மாறுபாடான தாப விகாரங்கள் ஆடுவதற்கு தன்னை ஓர் இடமாக விட்டு கொடுக்கக் கூடாது. உன்னுடைய காமமய தேகத்தின் தன்மையை விசாரித்து அது விசேஷமாய் இச்சிக்கும் தகாததான விஷயங்கள் எவை என்று கண்டுபிடி;.

பிறகு நிதானமாய் அவைகளுக்கு இடங்கொடுக்க மாட்டேனென்று திடஞ்செய்துகொள்; பிறகு அவைகளைப் பற்றி நீ நினைக்காதே (விசாரப்படாதே), அவைகளின் பேரில் மனதை நாட்டாதே, பின்னை அதற்கு எதிரிடையான நற்குண தாபங்களை பொறுக்கி எடுத்து அவைகளை நாள் முழுதும் அனுசரி. உன்னுடைய காமமய தேகம் ஆத்திரப்படுவதாக இருந்தால் உன்னுடைய மனதில் பொறுமையை நாட்டிவை. காலை தியானத்தில் பொறுமையைப் பற்றி தியானஞ்செய்து அதை நாள் முழுதும் சாதனைக்கு கொண்டுவா; உன்னுடைய காமமய தேகம் உன்னை பொருமைப்படும்படி தூண்டினால் அதை சும்மா குறித்துகொள்; பிறகு அந்த பொருமையைப்பற்றிநினைக்காதே அதற்குப் பதிலாகபரோபகார (நிஷ்காமிய) காரியத்தை நினைத்து கடினமாய்ச் சாதனஞ் செய். அப்போது பொருமைக்கு இடமிருக்காது. இரண்டுவித மாறுபாடான விஷயங்களை உன்னுடைய மனதில் ஏககாலத்தில் நினைக்க இடமில்லை.

குப்த வழியில் செல்பவனுக்குக் கஷ்டங்களெல்லாம் தகுந்த சந்தர்ப்பங்களாக வருகின்றனவென்று ஞாபகத்திலவை. பிரியமாயும் அன்பாயும் இருப்பவரிடத்தும் பொறுமையோடிருக்கிறவர்களிடத்தும் அன்பை காட்டுவது சிஷியனுக்கு ஒரு பிரமாதமல்ல. இதை சாமானியன் எவனுஞ் செய்வான். சிஷியர்களாக வர விரும்புவோர்கள் தகாததைச் செய்பவரிடம் அன்பை காட்டவேண்டும். அப்படி காட்டாவிடில் அவர்கள் மற்றவர்களைப்போலத்தான் இருக்கிறார்கள். கஷ்டம் வரும்போதும் தியக்சம் வரும்போதும் இதை ஞாபகப்படுத்தி கொள்ளவேண்டும். வாஞ்சையுடையவன் தன்னுடைய கர்மகடனைக் கழிக்கவரும் சந்தர்ப்பங்கள் என்று இவைகளைத் தாவித்தழுவவேண்டும். சிஷியனுக்கு எதிர்படுவது கொடியவனானுஞ்சரி, அல்லது கடினமான சந்தர்ப்பமானாலும் சரி, அது அவனைத் தூண்டி வெளித்தாபங்களைக் காட்டும்படியானதாகவருவதல்ல; மற்று அன்பை பாராட்டத்தக்க சந்தர்ப்பம். மூர்க்க தாபங்களைக் காட்டினவருக்கு அன்பைதிருப்பி கொடுத்தானானால் அப்போது சிஷியன் தனது குருநாதனுக்குச் சமானமாகிறான். அப்போது தான் மாஸ்டரின் குணங்களை இவன் காட்டுகிறான்.

ஆகையால் நீ காலையில் தியானஞ் செய்யும்போது உனக்கு வேண்டிய சில ஒழுக்கங்களை எடுத்து தியானி; உதாரணமாக கோபிக்குந் தன்மை உனக்கிருந்தால் பொறுமையைத் தியானி. பிறகு கோபக்காரனை அல்லது கஷ்டந்தரும் ஒருவனை அன்றைய தினத்தில் சந்தித்தால் உனக்கு கோபிக்குந் தன்மை இருப்பதால் முதலில் கோபித்துகொள்வாய். ஆனால் ஒரு க்ஷணத்திற்குப் பிறகு பொறுமையை நினைத்து கொள்வாய். மறு தடவை, உனக்கு கோபம் வரும்போதே பொறுமையை நினைத்துகொள்வாய், இன்னும் கொஞ்சம் தியான சாதனம் அதிகரித்தால் கோபிப்பதற்கு முந்தியே அதை நினைக்கக் கூடும். அப்போது கோப உணர்ச்சி உனக்குத் தெரியும். ஆனால் காட்டமாட்டாய். அடைவினில் அக் கோப உணர்ச்சி வருவதும் நின்றுவிடும். உன்னுடைய காலை தியானம் பலப்பட்டுப் பலனைத்தர ஆரம்பிக்கின்றதை இந்த முதல் படியில் காட்டும்.

இவ்வித சாதனையை அப்பியாசிக்க ஆரம்பித்த சிலநாள் அல்லது சிலவாரம் கழிந்த பிறகு "இந்த வழியில் இனிநான் தியானஞ் செய்யமாட்டேன; பிரயோஜனம் ஒன்றும் காணவில்லையே; எனது தியானம் எனக்கு ஒருபலனும் தரவில்லை,அதில் தேர்ச்சிவரவில்லை' என்று அநேகர் சொல்லுவதுண்டு ஒருவன் மூன்றுநாள்போகவேண்டிய ஓர் ஊருக்குப் பிரயாணப்பட்டு ஒருமணி அல்லது இரண்டுமணி நேரம் நடந்த பிறகு உட்கார்ந்துகொண்டு "நடப்பதால் என்ன பிரயோஜனம் ஊர்போய்ச் சேரமாட்டேன்போல் தெரிகிறது" என்று சொல்வதுபோல் இருக்கிறது. இப்படி நடப்பவன் எவ்வளவு விவேகமற்றவன் என்பதை இந்த மண்ணுலகத்திலுள்ள ஒவ்வொருவருக்கும் தெரியும்.தியானத்தை முற்கூறியவாறு விட்டு விடுபவர்களது மடமையும் இத்தகையதே. இதற்கு சற்றும் குறைந்ததல்ல. நடந்தால் ஒவ்வொரு அடியும் தரையைக்கடந்து முன்னே போவது போல், தியானமும் பலனைக் கட்டாயம் காட்டும்; அதைப்போல கிடைக்குமென்பது நிச்சயம். இரஸாயன விதிகளில் சொல்லிய படி ஒவ்வொரு விஷயத்திற்குரிய பலன் எல்லாகாலங்களிலும் ஒரே விதமாக உண்டு என்பது திண்ணம். நீ தொடுக்கும் ஒவ்வொரு சக்தியும் பலனை கொடுக்கத்தான் கொடுக்கும். நீ கோரிய பலனை

நீ உடனே பெருவிட்டால் உனக்குத் தடைகள் இன்னும் அதிகம் இருக்கின்றன என்று காட்டுகிறது; உனது சக்தி அத்தடைகளைத் தாக்கி அதன் பலத்தை குறைத்து விலக்கின பிறகு நீ முற்றும் வெற்றிபெறுவாய் (உனக்குப் பலன் கிடைக்கும்) பலனைப்பற்றி கவனிக்காதே. பொறுமை எனும் சீல குணத்தின் பேரிலாவது அல்லது உனக்கு வேண்டிய மற்றெந்த சீலகுணத்தின் பேரிலாவது உன் எண்ணத்தை செலுத்தி தியானஞ்செய். அதன் பலன் தானாக வரும்.

C. W. L.:—கிஞ்சித சாதனையோடு யோசித்துப் பார்த்தால் இந்த தூலதேகம் நாமல்ல, மேல் தரிக்கும் சட்டைதான் என்று உற்றுணர்ந்து கொள்வது வெகு கஷ்டமல்ல. ஆனால் நமது காமமய தேகம் அதாவது தாபவிகாரங்களும் ஆசைகளும் அதிக கஷ்டங் கொடுக்கின்றன. ஏனெனில் அவை நமக்கு மிகநெருங்கி ஒற்றுமைப் பட்டபாகமாகப் பெரும்பாலும் காணப்படுகின்றன. தாபவிகாரங்களையும் ஆசைகளையும் தாம் என்று தினவாழ்க்கையில் உணர்ந்திருக்கும் ஜனங்களை எங்கும் காணலாம். சிலர் இவைகளால் எவ்வளவோ நிறைந்திருக்கின்றபடியால் இவைகளை ஒதுக்கிஅவர்களைப் பார்ப்போமானால் அவர்கள் என்று குறிப்பிடக்கூடிய நிலை ஒன்றும் இல்லை போலிருப்பது விளங்கும். இவர்கள் முழுவதும் தாபமும் ஆசையுமாய் இருக்கின்றனர் அப்பேர்ப்பட்டவனுக்குக் காமமய தேகத்திலிருந்துத் தன்னை பிரித்து கொள்ளல் மிகவும் கஷ்டம் என்றாலும் பிரிக்கத்தான் வேண்டும். காமமய தேகம் அடிக்கொருதரம் தன் தாபவிகாரங்களை மாற்றிக்கொள்ளுகின்றது; என்கிற விஷயம் அது "நான்" அல்லவென்று தெரிந்துகொள்ள ஜனங்களுக்கு உதவி செய்யவேண்டும். ஆன்மா திரிபற்றவன்; அவனுக்கு எப்போதும் ஒரே ஒரு விஷயத்தில் பிரியம்; அதாவது நமதுமாஸ்டர்களுக்கிருக்கும் நோக்கத்தின்படி மற்றவர்களை மார்க்கத்திற்கு கொண்டுவர உபகாரஞ்செய்ய சாமர்தியனாயிருக்க வேண்டுமென்கிற ஒரு விஷயந்தான் உள்ளிருக்கிற 'அவனுக்குப்' பிரியம். ஆகையால் இந்த தாபவிகாரங்களுடைய தேகம் 'நான்' அல்ல என்பது தெளிவா

காமமய ஜீவபூதம் ஏதோ ஒருவகையில் நம்மை விடாது தொடர்ந்து ஜன்ம ஜன்மமாய் வருகின்றது. ஏனெனில் நம்மிடத்தில் எப்போதுமிருக்கும் சூத்திராத்மா (Permanent Atoms) மூல அணுவானது முன் ஜன்மத்தில் சேர்த்து அணைத்து விவகரித்த படியிலுள்ள அணுக்களை இப்போதும் கவர்ந்து சேர்த்து இழுத்துப் பிடித்திருக்கின்றது. ஆகையால் இந்த ஜந்துவைத் தடுத்து சட்டென அடக்குவது கஷ்டம்; என்றாலும் திருப்பமுடியும்; சரியான வழி எதுவெனில், காமமய தேகம் எவ்வித தகாத விகாரங்களில் ஓடி ஆடுகின்றது என்பதை ஜாக்கிரதையுடன் பரிசோதித்துக் கண்டு பிடிக்கவேண்டும். ஒவ்வொருவனுக்கும் அவனுக்குரிய கஷ்டங்கள் இருக்கின்றன. ஒருவன் நடுக்கமுடையவனும் சடுதியில் கோபப்படும்படியானவனும் இருக்கலாம். மற்றவன் பொறாமைப்படுபவனுயிருக்கலாம். இன்னொருவன் பணத்தின்மேல் பேராசையுடையவனுயிருக்கலாம். இதைக் கண்டு பிடித்தவுடன் நிதானமாய் நிறுத்த மனம் நாட்டவேண்டும்; முன்கோபம் ஒன்றை எடுத்து கொள்ளலாம். தற்கால வாழ்க்கையிலிருக்கும் சந்தடியாலும் பயங்கரமான நிலைமையாலும் இது வெகு சாதாரணம். கோபப்படமாட்டேன்'' எனறு திட்டமாய் ஒருவன் மனதில் வைக்கவேண்டும். இதை காலையில் தியானிக்கவேண்டிய விஷயமாக வைத்தால் நல்லது,' என்றாலும் தியானத்தில் இக்கொடிய கோபத்தை எதிர்த்துப்போராட எத்தனிக்கக்கூடாது. மற்று இதற்கு எதிரிடையான பொறுமை என்கிற குணத்தை தியானிக்கவேண்டும். கெடுதியாகவுள்ள எத்துடனும் போர்செய்ய ஒருபோதும் நினையாதே. ஏனெனில் அது அதைக் கிளரிவிட்டு அதிகமாக்குகின்றது.

மற்றவர்களுக்கு எண்ணத்தால் உதவி புரிய எத்தனிக்கும் போதும் இதே முறையைப் பிரயோகிக்கவேண்டும். இக்குறையுள்ள (கோபமுள்ள) ஒருவனுக்கு நீ உதவிசெய்ய வேண்டுமானால் அவன் முன்கோபத்தைக் குறித்துச் சிந்திப்பதைவிட்டு (சிந்தித்தல், பாவம், அதை அதிகப்படுத்துகிறது) அவனைச் சாந்தத்துடனும், அமைதியுடனும் இருக்கும்படி நான் விரும்புகிறேன், என்று நீ சிந்திக்கவேண்

டும். பிறகு உன எண்ணத்தின் வலிமையெல்லாம் அவனை அவ் விதம் திருத்தப்போகும்.

ஒரு முன்கோபியை நாம் கண்டபோது துவக்கத்தில் நாமும் வெகுவாய்க் கோபித்து கொள்வோம்; ஏனெனில் நமக்கு அது வழக்கம். பிறகு "நான் அவ்விதம் கோபிக்க எண்ணவில்லை" என்று நமக்கு ஞாபகம் வரும். இதை பிற்பாடு ஞாபகத்திற்கு கொண்டுவருவது கூட ஏதோ கொஞ்சம் அனுகூலந்தான். இது முதல்படி. ஒருக்கால் மறுதடவை அல்லது இருபதாவது தடவை கோபித்து கொண்ட பிறகு நினைப்பதைவிட்டு கோபமாய்ச் சொல் லும் சமயத்தில் நமக்கு ஞாபகம் வரும். இது இரண்டாவது படி. நாம் கோப வார்த்தை சொல்லுவதற்கு முந்தியே நமக்கு ஞாபகம் வருவது மூன்றும் படி. கோப உணர்ச்சி வந்திருக்கின்றது. ஆனல் நாம் காட்டமாட்டோம்; இதற்கு அடுத்தபடி கோப உணர்ச்சி நமக்குச் சற்றும் வராது. அதை ஜயித்துவிட்டோம், இனிமேல்இந்த ஜனமத்திலாவது இனனும் இதர ஜன்மத்திலாவது அதன் தொந்த ரவு நமக்கிருக்காது.

காமமய தேக சுபாவத்தை அடக்கி ஆளுவதற்கு நம்மிடத்தில் வருத்தப்படவாவது அல்லது மனஸ்தாபப்படவாவது வரும் தன்மை சற்றும் இல்லாமலிருததல் அவசியமானது. நற்குண உணர்ச்சிக ளான தயை, அன்பு முதலியவை மிகுதியான அளவு நம்மிடத்தில் இருக்கவேண்டியது அவசியம். ஆனல் வருத்தப்பட முடியாமலும் மனஸ்தாபப்பட முடியாமலும் நமக்கிருக்க வேண்டும். எவனொருவ னுக்கு வருத்தப்படும் தன்மை இருக்கிறதோ அவன் தன்னையே நினைத்து கொண்டிருக்கிறான். நாம் நம்மை மாஸ்டர்களுக்கு ஒப்புவித்திருந்தால் அப்படி செய்வது நமக்கு நியாயமில்லை. நிந்தை ஒன்றையும் உணராத மட்டி மூளைகள் சிலர் இருக்கின்ற னர். அப்படி இருப்பதும் விரும்பத்தக்கதல்ல. ஆனல் நிந்தனையைக் கேட்டால் அதை கவனிக்காதபடி அறிவுடன் இரு. இதுதான் நல்லவழி. ஜனங்கள் உன்னைப்பற்றி இழிவாகச் சொன்னல் கவனி யாதே.உலகம் உண்டானது முதல் ஜனங்கள் மற்றவர்களைப் பழித்து கொண்டே தான் வருகிறார்கள். நாம் ஜீவன் முக்தி நிலைக்கு வரும் வரையில், அவர்கள் அப்படித்தான் சொல்லி கொண்டிருப்

பார்கள். நீ ஆலோசித்துப் பார்க்கில் மற்றவன் சொல்லுவதனால் பாதகம் ஒன்றுமில்லை. அது சந்தடியில் சந்தடியாய்க் காற்றுவாக்கில் போகின்றது. நாம் அதை இப்பேர்ப்பட்டதென்று நினைத்தாலொழிய அது காற்றோசையுடன் ஒதுக்கவேண்டியதே. ஒருவன உன்னைப்பற்றி பிரியமில்லாத (அசங்கியமான) ஏதோ ஒன்றைச் சொனனால் நீ அதைக் கேட்காதிருந்தால், அது உன்னை கொஞ்சமேனும் பாதைப்படுத்தாது. அதைக் கேட்ட நேரம் கோபாக்கினி, பயங்கரமான நடுக்கம், சஞ்சலம் முதலியவை மூண்டு வந்தால் இவையெல்லாம் பழி சொன்ன பாவியின் செயலன்று; நீயே வருவித்து கொண்டவை; உன்னை நீயே வருத்தப்படுத்தி கொள்ளுகின்றாய். அதை வெகு நியாயமானபடி எடுத்துகொள். அப்பிராணி! இவனுக்கு அவ்வளவுதான் தெரியும்!" என்று சொல்லி அதைப்பற்றி மிக சாந்தமாயும், அன்புடனும் இரு. மற்றவர்கள் சொல்லுகிற குறைச்சொல் முக்கியமானதல்ல. ஏனெனில் அவர்கள் தெரியாதவர்கள். "இதயத்திற்கே அதனது குறை தெரியும்" என்பதைக் கவனி. ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும், எவனுக்கும் சொல்லுவதற்கும், செய்வதற்கும் நினைப்பதற்கும் அவனுக்குத் தெரிந்த காரணங்கள் அநேகம் இருக்கும். வெளியிருந்து கொண்டு அவனது காரணங்கள் முழுவதும் நீ அறியமாட்டாய். ஏனென்றால் அவைகளை ஆழ்ந்து பாராமல் உபாயமாய் நீ பார்க்கின்றாய். அன்றியும் தவறாகப் பார்க்கின்றாய். ஆகையால் புத்திலோகத்திற்கு நீ விழித்துவரும் வரையில் சந்தேகத்தில் அடங்கியிருக்கும் நற்பகுதியின் பலனை அவனுக்கு கொடு. அல்லது மற்றவனுடைய நோக்கத்திற்கு எதுகூற (எண்ணம் எப்பேர்ப்பட்டதென்று குற்றம் குறைசொல்ல)ப் பிரயத்தனப் படாமலிருப்பது இன்னும் விசேஷ அறிவுள்ளது. அவன் செய்வது தப்பிதமென்று உனக்குத் தெரியுமானால் "நான் அப்படிச் செய்யமாட்டேன், அது எனக்குத் தப்பிதமென்று தோன்றுகிறது: ஆனால் அவனுக்கும் காரணங்கள் இருக்கலாம். அவைகள் எனக்குத் தெரியவில்லையென்று வகித்துகொள்வேன்" என்று சொல்வது உபகாரமானது

ஒருவன் முரட்டுத்தனத்தை காட்டினால் அநேகமாய் அவனுடைய கோரிக்கையில் ஏதோ வொன்று கெட்டுப் போய்விட்டது.

அதனால் அவன் (அபசுவாரப்பட்டு) கடுப்போடிருக்கின்றான். அப்போது அவனோடு பேசுவதற்கு உனக்கு நேர்ந்தது. அவன் உண்மையில் உன்மேல் கோபப்படவில்லை. ஏதோ வொன்று அவனை கோபமூட்டிக் கவிழ்த்துவிட்டது. ஒருக்கால் அவனுக்கு நல்ல போஜனங் கிடைக்காமலிருக்கலாம். மற்றவர்கள் போக்குக்கு விட்டு கொடுக்க நாம் கற்கவேண்டும். "எளியவன் பாவம் நான் எப்போதும் அமைதியுடன் ஒத்திருப்பதைப்போல அவனால் இருக்கமுடியாதுபோல் இருக்கிறது" என்று நாம் சொல்லவேண்டும். ஒருக்கால் உன்னிடத்தில் கொஞ்சம் முரட்டுத்தனமாய்ப் பேசினதைப் பற்றிபிற்பாடு அவன் விசனப்படக்கூடும். அல்லது வித்தியாசமாய்ப் பேசினதாக அவனுக்குத் தெரியாமலே இருக்கவுங்கூடும். வருத்தப்படவாவது, மனஸ்தாபப்படவாவது வரும் உணர்ச்சி சுயகாமிய நினைவிலிருந்து வருகிறது. நாம் நம்மைப்பற்றி நினையாதிருந்தால் வருத்தமும் வியாகுலமும் வரமுடியாது. இந்தச் சுயகாமிய நினைவைத்தான் நாம் திட்டமாய்க் களைந்து உதறி தள்ளவேண்டும். பொறாமை எங்கேயிருந்தபோதிலும் அங்கே இந்தச் சுயகாமிய நினைவு இருக்கின்றது. தான மற்றவனோடு எவ்வளவோ பிரியத்தோடு இருப்பதாக மாத்திரம் நினைத்து கொண்டிருந்தால், அவன் வேறொருவனை எவ்வளவு பிரியத்தோடு பார்க்கின்றான் என்பது இவனைப் பாதிக்காது. நம்முடைய கஷ்டங்களெல்லாம் அநேகமாய் "நான் வேறு" என பிரிக்கும் மயக்கத்தால் விளைகின்றது.

சுயநல நோக்கமுடையவன் கழிந்த பண்டைய காலத்தின்வழுவுடையோன். இருபதினாயிரம் வருஷங்களுக்குமுன் (மானிடவர்க்கம் குழந்தைப்பருவத்திலிருந்தபோது அவசியமாக உபயோகப்பட்டு வந்த "சுயகாமிய" தன்மையை இன்னும் வைத்திருக்கிறான். அது இப்போது பிரயோஜனப்படமாட்டாது, அவசியமற்றது. அறிவீனத்தால் அவன் காலநிலைமைக்குப் பின்பட்டவன். காலநிலைமைப்படி இருக்கவேண்டியது கிரமம். லோக குருவானவர் நமக்கு இனி ஏற்படுத்தி வரும் விஷயங்களை யோசித்து கொண்டு வாழ்ந்து வருகிறோம். ஆகையால் இவ்வகையான பண்டைய நாள் கருத்துக்களை உதறித்தள்ள வேண்டும்.

நீக்கவேண்டிய குற்றங் குறைகளைக் கண்டுபிடிக்க உன்னை நீ சோதிக்கும்போது, தன்னை நொந்துகொண்டும் பச்சா தாபப் பட்டுகொண்டும் தடுமாடாதபடியிருக்க எச்சரிக்கையோடிருக்க வேண்டும். "லாட்" என்பவரின பத்தினியின் கதை ஞாபக மிருக்கட்டும்; திரும்பிப் பார்க்காதே—(சென்றதை யோசிக்காதே) அது பிரயோஜனமில்லாத அலுவல். ஏதோ ஓர் பெரும் தப்பி தத்தை செய்து விட்டபோது நீ சாந்தத்தோடு "அப்படிச் செய் தது மதியீனம்; இனி செய்யமாட்டேன்" என்று சொல்லி கொள்ள லாம். டல்லிராண்ட் எனபவர் சொன்னார் "எவனும் தப்பிதஞ் செய்யக்கூடும், நாமெல்லோரும் தப்பிதஞ் செய்கிறோம், ஆனால் அதே தப்பிதத்தை இன்னொரு முறை செய்பவனே மூடன்" என்பதாகச்சொன்னார். மாஸ்டர் அவர்களும் ஒரு தடவை சொன்ன தாவது:—"மறுபடியும் செய்யமாட்டேன் என்று திடத்தீர்மானஞ் செய்வதுதான் பச்சாதாபத்தின் பிரயோஜனம் ஏதாவதுண்டென் பது, தப்பிதம் ஒருபோதுஞ்செய்யாதவன் சுத்தமாய் எதையும் செய் தவனல்லன்" என்பதையும் கவனி. முன் ஜன்மங்களில் செய்த பிழைகளைப்பற்றி நீ கவலைப்படுகிறாயா? இல்லையே. அப்படி இருக்கையில் ஏன் நேற்று செய்ததைப்பற்றி மாத்திரம் கவலைப் படுகின்றாய்? இரண்டும் கழிந்த காரியங்களே. தன்னை நொந்து கொள்வது காலஹரணம், வீண்வேலை. இன்னும் இதைவிட கேடா னது மாகும். ஏனெனில் அது ஒருவிதமான சுயகாமிய நோக்கம்.

நம்மோடு அன்பாயும் பக்ஷமாயும் இருப்பவருக்கு நாம் அன்பை பாராட்டுவது சுலபந்தான். ஆனால் நாம் உண்மையில் முன் னேற்றத்தில் தேறிவந்திருந்தால், பக்ஷமில்லாதிருப்பவருக்கும் நாம் அன்பை பாராட்டிப் பொழிந்து கொண்டிருப்போம். கிருஸ்து பகவான் சொன்னதாவது "உங்களிடத்தில் பிரியமாயிருப்பவரிடத் தில் நீங்கள் அன்பை காட்டினால் அதற்கென்ன வெகுமதி! சாதாரண ஜனங்கள் செய்வதுதானே!" அவரது ஆக்ஞை "உனது பகையாளிகளிடம் நீ அன்பு பாராட்டு, உன்னை நிந்தித்து வருபவர் களுக்காக நீ பிரார்த்தனை செய்" அப்பேர்ப்பட்ட சந்தர்ப்பத்தில் தான் மாஸ்டரை அடுத்திருக்கும் சிஷியன் தனது உண்மை யான தன்மையைக் காட்டக்கூடும். மாஸ்டர் எவ்வாறு ஒழுகு

கின்றரோ அவ்வாறு இவன் ஒழுகும்போது அதாவது ஜனங்கள் இவனை இகழ்ந்து துராக்கிரதமாக நடத்தும்போதுகூட அவர்களைப் பக்ஷத்தோடும் அன்போடும் நோக்கி அவர்களுடையஅறிவீனச் செய்கைக்கு சாக்குகளும், போக்குகளும் சொல்லுவானேல் அப்போது மாஸ்டர்களுடைய தன்மையைக் காட்டுகின்றான். நாம் செய்ய வேண்டியது. இதுதான் அன்பையும் பக்ஷத்தையும் கெடுதி செய்தவனுக்குத் திருப்பி கொடுப்பதோடு மாத்திரம் நிற்கக் கூடாது. இந்த விஷயம் எப்பேர்ப்பட்டதென்று இன்னும் தெரியாதிருக்கும் ஜனங்களின் பேரில் பொழியவேண்டியதா யிருக்கிறது. கிருஸ்து பகவானைப்பற்றி சொல்லியிருப்பது யாதெனில் அவரை இகழ்ந்து பேசினபோது அவர் திருப்பி இகழவில்லை. அவரை வருத்தப் படுத்தியபோது அதட்டவுமில்லை. ஆனால் அவர் நியாயமாய்ப் பார்க்கும் கடவுளிடத்தில் தன்னை ஒப்புவித்தார்.சில சமயங்களில் நமக்குப் பிறர் கெடுதி செய்கின்றனர்; நம்மை தவறுதலாய் எண்ணுகின்றனர், சில சமயம் நம்மேல் மனஸ்தாபப்படுகின்றனர். இதைப் பற்றி எவரும் கவலைப்படவேண்டிய அவசியமில்லை. கர்மம் இவையெல்லாம் சரிப்படுத்தி கொள்ளும். "பழிக்குப் பழிவாங்குவது என்னுடையது, நான் அதை திருப்பி கொடுப்பேன் என்றார் கடவுள்." அவருக்கே அதை விடவேண்டியது; எப்போதும் நியாயப்படி நடக்கும்.பிழையுள்ளவையெல்லாம் ஒருநாளைக்குச் சரிபட்டுவரும். இப்போது மனஸ்தாபப்படுகிறவர்கள்தங்கள்குற்றத்தை ஒரு நாள் இல்லாவிட்டாலும் ஒருநாள் அறிவார்கள். மனஸ்தாபப்பட்டதைக் குறித்து விசனமுறுவார்கள் அநியாயமென்பது நடக்காது. மொத்தத்தில் எப்படி தேர்ந்து வரவேண்டுமோ அப்படிவரும்.

அன்பின் வழியை திருஷ்டாந்தமாக ஈசுவரன்தானே எல்லா சமயத்திலும் காட்டுகின்றார். அநேகர் அவரை நிந்திக்கின்றனர். அநேகர் மனஸ்தாபப்பட்டு தூஷிக்கின்றனர். அவர் பதில் சொல்வதில்லை, என்றாலும் அவருடைய திருவருளை எப்போதும் ஒரே நிதானமாய்ப்பொழிந்துகொண்டே வருகின்றார்.நாம் தெய்வீகத்தைக் காட்டும் விளக்காக இருக்கவிரும்பினால் அவ்வித குணம் நம்மிடத்தி லிருக்கவேண்டும்.

"உனது மனோமய தேகமானது கர்வத்தோடு தான் வேறெனவும், தன்னைப்பற்றி மாத்திரம் பெருமையாகவும், மற்றவர்களைக் குறித்து அற்பமாகவும், நினைக்க விரும்புகிறது."

C. W. L.:—இவ்விடத்திலும் இன்னொருமுறை நம்முடைய விருப்பமெது என்பதையும் மனோமய தேகத்தினுடைய விருப்பமெது என்பதையும் பகுத்து மனது நாமல்லவென்று உற்றுணர வேண்டும். "நான் இப்படி நினைக்கின்றேன்" என்று சொல்வது நமக்கு வழக்கம்; ஆனால் அப்படி சொல்வதில் பத்து தடவைகளில் ஒன்பது தடவை நாம் நினைக்கவில்லை, மனதே நினைக்கின்றது. நம்மில் அநேகர் தமது எண்ணங்களை அடக்கி திருத்தப் பிரயத்தனப் பட்டுகொண்டு வருகிறார்கள். என்றாலும் அவைகளைக் கவனித்தால் நம்முடையது எவ்வளவு கொஞ்சமென்பதையும், மனதினுடையது எவ்வளவு அதிகமென்பதையும் பார்ப்போம்.

மனது ஒருவிஷயத்திலிருந்து மற்றொன்றிற்குப் பறந்தோடி கொண்டே யிருக்கின்றது. அநேக விஷயங்களில் மேலாகவே பறபறப்புடன் தொட்டு தொட்டு விட்டுகொண்டே ஓடுகிறது. ஆனால் எதையும் தீரயோசிக்கிறதில்லை; எதைப்பற்றியும் முற்றிலும் விசாரிப்பது அதற்கு வழக்கமில்லை. தனக்கு வேண்டிய விகாரங்களை அடிக்கடி மாற்றிகொள்ள ஒரு விஷயத்திலிருந்து இன்னொன்றிற்கு வெறுமையாகவே போய் கொண்டிருக்கிறது. நாம் சற்று நிறுத்தி மனதைக் கவனித்துப் பார்த்தால் கொஞ்சநேரத்திற்குள்ளும் அற்பமான விஷயங்களை அநேகமாய் நினைத்து வருவதை காண்போம். உதாரணமாக நீ தெருவில் நடக்கும்போது, எதுவொன்றையுங் குறிப்பாய் நீ நினைக்காதபோதிலும் ஏதோவொன்றை அந்த வேளையில் அது நினைத்துகொண்டே வருகிறது. அதுதான் மனோமய தேகம். சுயநல நோக்கத்தோடும், தனது சுயகாரியமா யிருக்கும் போதுமே தவிர மற்ற நேரம் அதை அடக்கி பிடிக்காவிட்டால், உனக்குக் கெடுதியாகக் கண்டிதமாய் இராத உபயோகமற்ற அநேக விஷயங்களை அது தன்முன்விட்டுப் பராக்கு பார்த்துகொண்டிருக்கும். விஷயங்களைப் பிரிக்கவும் சேர்க்கவும் உத்தேசமான கருத்து

களை உண்டாக்கவும் வழக்கம் இதற்குண்டு. இன்னும் சிலசமயங்களில் ஒருவனுடைய சிறப்பான எண்ணத்தைமுறுக்கிச்சுத்தமாய்வேறான அற்ப ஏதோ ஒரு விஷயத்தில் கொண்டுபோய்விடும். இவைகளை எல்லாம் அடக்கி, மாற்றவேண்டும். மனது செய்துகொண்டிருக் கிறதை நிமிஷத்திற்கு நிமிஷம் தடுத்துகொண்டிருக்கக் கஷ்ட மென்று எனக்குத் தெரியும். என்றாலும் அதை செய்யத்தான் வேண்டும். ஏனெனில் மனது ஓர் பலத்த சக்தி; நம்மிடத்தில் இருப்பவைகள் எல்லாவற்றிலும் இது வெகு பலமானது. இச் சையை மனோமய தேகத்தின் வழியாய்ச் செலுத்தினால் ஒருவனால் செய்ய முடியாத விஷயம் வெகு குறைவு (ஒன்றுமில்லை). இந்த அளவில்லாத வன்மை நம்முடையது. செல்வனாக இருந்தாலுஞ் சரி, ஏழையாயிருந்தாலும்சரி, வாலிபனாய் இருந்தாலுஞ்சரி, கிழவ னாயிருந்தாலும் சரி இது நம்முடையதே. நாம் இதை சதா விழிப் புடன்பிரயோகித்துமனதைப் புதியபழக்கத்திற்கு கொண்டு வந்தால் அது மாஸ்டர்களுடைய பணிவிடைக்குத் தக்க கருவியாகும். மற்ற படி முடியாத அநேகவிஷயங்கள் எண்ணத்தால் நிறைவேறும். நமக்குத் தெரிந்தவர்களுக்குள் ஒருவருக்கு ஒத்தாசை வேண்டியதாக இருக்குமானால் அவருக்குப் பிரேமையுடன் அனுப்பிய எண்ணமா னது ஒரு தொகை பணத்தைவிட மெத்த உதவிதரும். அதனால் பலிக்கும் பலன் ஆயுள் பரியந்தம் இருக்கும். இது மண்ணுலகில் தோன்றாமல் இருக்கலாம். என்றாலும் மாஸ்டர்களுக்கு இதுகெட்டி யான பணிவிடை.

மாஸ்டர்களைப்பற்றிய எண்ணத்தை மனதிற்குப் பின்னால் ஓர்புறத்தில் வைத்திருக்கவேண்டும். யாதொரு விஷயத்தையும் கவனிக்கவேண்டியில்லாது சும்மாயிருக்கும் சந்தர்ப்பங்களில் எல் லாம், அந்த எண்ணத்திற்கு மனதை திருப்பி விடவேண்டும். இந்த எண்ணம் கூடியமட்டில் திட்டமான (தெளிவான) தாயிருக்க வேண்டும். அநேகருக்கு மாஸ்டர்களைப்பற்றிய எண்ணம் ஒருவகை பேரானந்தமாகவும், அறைகுறைப்பரவசமாகவும், நினைவு அடங்கின பக்திமயக்கமாகவு மிருக்கின்றது. திட்டமில்லாதுத் தெளி வில்லாத ஏதோ ஓர் எண்ணத்தில் விவரமில்லாமல் மூழ்கியிருப் பதைவிட்டு, மாஸ்டர்களின் பேரிலிருக்கும் நமது பக்தியால்

"அவருக்கு என்ன பணிவிடை நான் செய்யட்டும், என் எண்ணத்தின் சக்தியை நான் எவ்விதம் உபயோகப்படுத்தட்டும்,"என்பதைத் திட்டமான ஓர் உருவேத்தி வைத்திருக்கவேண்டும்.

உண்மையில் நமக்கு எண்ணம் ஒன்றே, இச்சை ஒன்றே, அலுவல் ஒன்றே, என்பதை இந்நூலில் அடிக்கடி வெகு பலமாய் வற்புறுத்தி வருவதைக் காணலாம். எண்ணம் ஒன்றாவது, மாஸ்டர்களுடைய பணிவிடையில் கருத்து; இச்சையாவது அப்பணியை செய்யும் இச்சை; அலுவலாவது, அவரிடத்தில் பக்தியோடிருந்து அவர் பொருட்டு உலகினரிடத்திலும் பக்தியோடிருத்தல். நம்முடைய வழியில் செய்யவரும் பணிவிடைகளில் அநேகவித சிக்குகளிருந்தபோதிலும் இவையெல்லாம் அவருக்காகவேதான், உலகத்திற்காகவேதான் வருகிறது. மாஸ்டர்களுடைய மனதில் ஒரு கருத்து தான் இருக்கின்றது; அது பணிவிடை. அவருடன் ஒன்றுபட்டிருக்க நாம் விரும்பினுல் நமக்கும் அந்தக் கருத்துதான் இருக்கவேண்டும். நாம் பணிவிடைக்கு நம்மை சித்தப்படுத்திக் கொள்ளவேண்டும்· என்கிற ஊக்கம் இது தருகின்றது. இவ்வழியில் நமக்குக் கொஞ்சம் விருத்தியும் வருகின்றது. நாம் பெரியவர்களாக இருக்கவேண்டியதற்காகவல்ல; பின்னை நற்கருவிகளாக விருக்க விரும்புகிறபடியால் சேவகத்திற்குச் சித்தப்படுத்தி கொள்ளவேண்டும்.

அநேகர் தங்கள் மனோமய தேகத்தை விருத்திசெய்துகொண்டு வருகிறுர்கள். ஏதோ ஓர் பெரிய விஷயத்தைக் கண்டுபிடித்தால் தான் பிரக்கியாதியாய் வரலாம் எனும் காமிய எண்ணம் அவர்கள் மூளையில் ஓர் பக்கமிருக்கலாம். ஆனுல் இரசாயன சாஸ்திரிகளில் அநேகருக்கு அவ்வித எண்ணமில்லை என்று எனக்குத் தெரியும். அறிவை உபயோகப்படுத்தி கொள்ளவேண்டும் என்கிற விருப்பம் சாதாரணமாய் இவர்கள் மனதின் பின்புறம் இருக்கின்றது, ஆனுல் முதலில் தெரிந்து கொள்ளவேண்டும் என்கிற தீவிர ஆசை,இரசாயன சாஸ்திரி மனதிலிருக்கின்றது.இது கண்ணியமான வழி.அதில் அநேகக் கண்ணிய ஆத்துமாக்கள், மானிடவர்க்கத்திற்குப் பெருத்த பணிவிடை செய்து வருகிறுர்கள்.

நாமும் நமது மனோமய தேகத்தை தீக்ஷண்யமாகும்படியும் சுறு சுறுப்பாயும் உபயோகப்படும்படியாயும் விருத்திசெய்யப் பிரயத்த னப்படவேண்டும். அது ஏன்? தச்சன் ஏன் தனது இழைப்புளியை தீட்டுகிறான்? தன் இழைப்புளி மற்ற தச்சனுடையதைவிட கூர் மையாய் இருக்கவேண்டுமென்றல்ல. பின்னை பலகையை நன்றாய் இழைப்பதற்காகவே! தன் வேலை நன்றாய் செய்வதற்காகவே! இக்காரணத்தை திட்டமாய்க்கொண்டு நமது மனோமய தேகத்தை திருத்தவேண்டும். ஆனால் எல்லா சந்தர்ப்பத்திலும் "மாஸ்டர் களுக்கு யான் ஓர் கருவி" என்கிற எண்ணம் மனதின் முன்னி ருக்கவேண்டும். இக்கருத்தை வைத்திருப்பவனுக்கு வைதீக கர் வம் வராது, ஆகையால் வெறும் படிப்பை விருத்தி செய்பவர்கள் சந்தேகமின்றித் தடுமாறி வீழும்படியான பள்ளங்களினின்று ஒதுங் கக்கூடும்.

> "நீ, அதை உலகவிஷயங்களிலிருந்து திருப்பி யிருக்கிற போதும், குருநாதனுடைய சேவை யையாவது, பிறருக்கு உதவிபுரிவதையாவது நினைக்க உன்னை விடாமல், தனக்கு வேண்டிய தைக் கணக்கோடு பார்க்கவும், தன் சொந்த விருத்தியைப்பற்றி நினைப்பூட்டவும் முயலு கிறது."

A.B:—மாஸ்டர்கள் கொடுத்த போதனைகளில் முக்கிய மாய் எனக்குத் தட்டினது யாது எனில்:—ஓர் எண்ணம், ஓர் இச்சை, ஓர் பணி என்கிற கருத்தையே சுற்றிச் சுற்றி மாறி மாறி கொடுத்து வருகின்றது என்பதே. இந்த ஒற்றுமை கருத்தை எவ்வளவோ பலமாக ஒவ்வொரு போதனையிலும் பதிய வைத் திருப்பதால் மாஸ்டர் ஒரே ஒரு எண்ணத்தோடு இருக் கிறார் என்பதைக் காட்டுகிறது. ஏகவஸ்துவோடு அவர் பூரணமாய் இழைந்து சேர்ந்திருப்பதால் மற்ற விஷயத்தை நினைக்க முடியாம லும், அவருடைய கவனம் எதன்பேரிலிருந்த போதிலும் அதை மறக்காமலும் இருப்பது தெரிகிறது. இப்படித்தான் சிஷ்யனுக்கு உறுதியான கருத்து இருக்கவேண்டும். மாஸ்டர்களின் பணி

விடையையும், மற்றவர்களுக்கு உதவிபுரிவதையுமே எப்போதும் சிந்தித்து வரவேண்டும். இந்த ஒரு கருத்து மற்ற எல்லாவற்றைவிட மேற்பட்டு இருக்கவேண்டும். மற்றபடி நினைக்கும் பக்ஷத்தில் அப்போது நீ அல்ல நினைக்கிறது; அது உன் மனது. ஆனால் அந்தக் கருத்து வைத்திருப்பாயாகில் உன்னிடத்தில் மற்றவையெல்லாம் இருக்கும். நீ தியானத்தில் ஒரு சீலத்தை சிந்திப்பதாக வைத்துக்கொள்வோம்; உனக்கு ஏன் அது தேவை?—பிறர் மெச்சுவதற்கா?—அல்லது தீக்ஷைக்கு அருகில் உன்னை கொண்டு போவதற்கா? அல்லது மாஸ்டர்களுடைய வேலைக்கு நீ நல்ல கருவியாக இருக்கவா? இந்தப் பரிசோதனையால் எண்ணுகிறது நீயா, அல்லது உன் மனமா என்பதைத் தெரிந்துகொள்ளக் கூடும்.

ஒரு திட்டமான வழியில் உன்னை நீயே சோதித்து கொள்வது நல்ல மாதிரிதான். எவனொருவன் தேர்ச்சியில் அதிகரித்து இருக்கிறானோ அவன அதிகப் பிரயோஜனமுள்ளவன் என்பது சாதாரண விதி. இது அறியக்கூடாததென்று நான் நினைக்கவில்லை. மாஸ்டர்களுடைய ஒரு வேலையைச் செய்வதற்காக வேண்டிய சில ஒழுக்கம் ஒன்று, உன்னிடத்திலிருப்பவைகளை விட மிகத் தாழ்ந்ததாக வைத்துகொள்வோம். உன்னுடைய மேலான சாதுர்யங்களை உபயோகப்படுத்தி கொள்ள உயர்வான வழியில் நீ விருத்திக்கு வருவதைவிட்டு, இதை எடுத்து அந்தத் தாழ்ந்த படியில் வேலைசெய்ய இஷ்டப்படுவாயா? அதிகமாய் உபயோகப்படவேண்டி தாழ்ந்த நிலையிலிருக்க உனக்கு இஷ்டமா? மாஸ்டர்களுக்கு உபயோகப்படவேண்டும் என்கிற ஒரே கருத்தை உன் மனதில் வைத்திருப்பாயாகில் நீ இஷ்டப்படுவாய். அந்த வேலையில் உனது மனோமய தேகத்தை, கூர்மையாயும் சுறுசுறுப்பாயும், உபயோகமுள்ளதாயும் விருத்திக்கு கொண்டுவர அநேக சந்தர்ப்பங்கள் வரும். இந்த வேலைக்காக நாம் நம்மை விருத்தி செய்துவந்தால் தான் வேறு, என்கிற அஞ்ஞானத்தில் விழும்படியான அபாயம் நேராது. மற்றவர்கள் முக்கியமில்லாததென்று விட்டுவிட்ட சந்தர்ப்பங்களை எல்லாம் எடுக்கத் திறந்த கண்ணுடன் கீழ் உலகங்களிலிருக்கவேண்டும். மற்றவர்கள் செய்து முடிக்காமல் விட்டதை எடுத்து அதற்கு வேண்டியதை கொடுத்து சீர்திருத்த சிஷ்யன் எப்போதும் எதிர்

பார்த்து வருகிறான். அப்பேர்ப்பட்ட நோக்கம் என்றால் மனது அடங்கி வருகின்றது என்று அருத்தம்.

C.W.L:—மாஸ்டர்களுடைய பணிவிடை செய்யவேண்டுமென்கிற எண்ணம் ஒன்றே; மற்ற எண்ணங்களை ஆண்டுவர வேண்டும். இதைவிட்டு வேறு கருத்து ஏதாவது வந்தாலுஞ் சரி; அல்லது ஏதோ ஒன்றைச் செய்யவேண்டி இதர நியாயம் நாம் கண்டாலுஞ் சரி; அப்போது காரணங் காட்டுவது மனது, ஜீவான்மாவல்ல. இதுதான் முக்கிய வித்தியாசம். மனது வாஸ்தவத்தில் தனித்து (வேறாகி) இருப்பது; இறுமாப்புள்ளது. மேலும் மண்ணுலகத்திலுள்ளது. எல்லாவகை கருவத்தை விட்டிருந்தபோதிலும், தன்னுடைய தேர்ச்சியைக் குறித்தும், மாஸ்டர்களிடத்தில் தனக்குள்ள சம்மந்தத்தைக் குறித்தும், அல்லது அதைப் போன்ற ஏதோ ஒன்றைக் குறித்தும், நம்மை கர்வப்படச் செய்ய எத்தனிக்கும். இவைகளின் மீதுள்ள கர்வத்தை ஒழித்தபிறகும் இறுமாப்பு இல்லாமலிருக்கின்றோம் என்கிற கர்வத்தை கொண்டு வந்துவிடும். நுட்பமான மனோமய ஜீவபூதத்தின் பேரில் குற்றம் சாட்டவேண்டாம். அதற்கு உன்னைப்பற்றிய எண்ணமே கிடையாது. ஆனால் அதனுடைய அதிர்ச்சிக்கு வேண்டிய வகைகளை எடுக்கச் சுயமாகவே எத்தனிக்கின்றது.

> "நீ, தியானஞ் செய்யும்போதும், உனக்குத் தேவையானதை விட்டு, அதற்குத்தேவையானப் பல்வேறு விஷயங்களைப்பற்றி யுன்னை நினைக்கச் செய்யும். இந்த மனது நீயல்ல, அது உன் உபயோகத்திற்கு வாய்ந்த உன்னுடைய கருவி. ஆதலின், இவ்விடத்தும், இன்னொரு முறை பகுத்தறிவு அவசியம்; இதை இடைவிடாது கவனிக்கவேண்டும்; இல்லாவிடில் நழுவிவிடுவாய்."

C.W.L:—இந்தியாவில் மனதைப் புலன்களுக்கு அரசன் என்றும், இதை அடக்குவது மிக்கக் கஷ்டமானது என்றும், சொல்

கிறார்கள். இவ்விஷயத்தில் மேல்நாட்டாராகிய நமக்கு இந்தியர்கள் சொல்லுகிறதைவிட அதிகக் கஷ்டமிருக்கிறது. ஏனெனில் நாம் கீழ் மனதை முக்கியமாய் விருத்தி செய்துகொண்டு வருகிறோம். அது ஒரு விஷயத்திலிருந்து மற்றொரு விஷயத்திற்கு மாற்றிக் கொள்ளும் வேகத்தைக் கண்டு இறுமாப்படைந்து வருகிறோம்.

என்றாலும் நிதானமாய்ப் பிரயாசைப்பட்டு அடக்கப் பழக்கம் ஏற்பட்டால் பூதஜீவனைத் தாக்கமுடியும். அதை ஓர் வழியில் கொண்டுவந்து நீயாகிய ஜீவான்மா உனது கருத்தின்படி எப் போதும் அதை ஆளப்போகிறாய் என்பதை அது தெரிந்துகொள் ளும்படி செய். ஆனால் அக்கருத்தில் அநேகவித உபகருத்துகள் இருக்கின்றன. ஏனென்றால் மாஸ்டர்கள் திருப்பணிக்கு உத வாதது ஒன்றுமேயில்லை. அப்போது அடக்கமுடியாத விசித் திரமான இந்த ஜீவபூதம் தெரிந்துகொள்ளும். கடைசியாய் உன்னை அறிந்துகொள்ளாமலே உனக்கு விரோதமாய் இருப்பதைவிட்டு உன்னோடு ஒத்து இது வேலை செய்யும். உன்னை அதிகமாய்த் தெரிந்துகொள்ளும்; பிற்பாடு சந்தோஷமாய் உன்னோடு ஒத்து வேலை செய்யும்.



## 10-வது அத்தியாயம்.

### சரியேது பிழையேது.

"குப்த மார்க்கத்தில் சரியானதோடு சரியில்லாததைச் சேர்த்து ஒப்பிட இடமில்லை. எவ்வளவு கஷ்டமாகத் தோன்றின போதிலும், சரியானதைத் தான் நீ செய்யவேண்டும்; அறிவீனர்கள் என்ன நினைத்தாலும் சரி, என்ன சொன்னாலுஞ் சரி, பிழையுள்ளதை நீ செய்யவே கூடாது. மறைந்திருக்கும் பிரபஞ்ச நியதிகளை நீ தீரவாசித்து அறிந்தபின் அவைகளுக்கிசைய உனது வாழ்க்கையைச் சீர்படுத்தி கொள்ள வேண்டும். ஆனால் எப்போதும் நியாயத்தையும், தெளிவான அறிவையும் ஒட்டி நடக்க வேண்டும்."

A.B:—இதை நேர்மையோடு நோக்கில் சாதாரண வாழ்க்கையானது (நிகழும் சம்பவங்களைக் கோர்வைபோல்) தொடர்பாய் ஒன்றைக்கொன்றைச்சேர்த்து சரிப்படுத்துவதாயிருப்பதைப் பார்க்கலாம். தங்களுக்குச் சரியானதென்று தெரிந்திருந்தபோதிலும் "ஜனங்கள் என்ன சொல்லுவார்கள்" என்கிற கடுமையான கேள்விக்குப் பயந்து அப்படிச் செய்வதைவிட்டு விஷயங்களை அரைகுறையாய் அடிக்கடி செய்து வருகின்றார்கள். ஓர் விஷயத்தை எவ்விதஞ் செய்தால் மெத்த நல்லது என்று தெரிந்திருந்தும், தங்களுக்குக் கஷ்டமில்லாது எளிதாயிருக்கும் வண்ணம் அதை கொஞ்சம் அப்புறம் ஒதுக்கிச் சரிபடாத வகையில் முறுக்கிவிடுகிறார்கள். மற்றவர்களுடைய அபிப்பிராயங்களுக்காகப் பயப்படும் இந்தத் தன்மையானது எவரையும் திருப்தி செய்யவேண்டுமென்கிற இச்சையிலிருந்தும், சினேகிதத்தோடு இருக்கவேண்டு மென்பதிலிருந்தும் உண்டாகின்றது; இது ஒரு பகுதித் திடமில்லாத மனக் குறை

வால் ஏற்பட்டு வருகிறது. இது இந்தியாவில் மிகச் சாதாரணம் ஆனால் நீ குப்தமார்க்கத்தில் கிரமமாய் நடக்க வேண்டியவனானால், பெரிய மதங்களைப் பற்றியாவது தேசாசாரங்களைப்பற்றியாவது உள்ள நெறிமுறைகளிலும், முக்கிய விஷயங்களிலும், நியாயப்படி செல்லாதுச் சரிப்படுத்தும் வழிகளில் நீ போகக்கூடாது. உதாரண மாகக் குழந்தைப் பெண்களின் கலியாண விஷயத்தைப்பற்றி எடுத்துகொள்வோம்; பெண் சிறியவளாயிருக்கும்போது புருஷனோடு சேர்த்து அனுப்பிவிடும் வழக்கம் அநேகருக்குண்டு. சிறு பெண் முற்றும் பக்குவத்திற்கு வருமுன்னே கர்ப்பவதியாக்கும் கொடுமையைப்பற்றியும், இவ்வழக்கத்தால் சந்ததி ஈனமாய்க் கெட்டுப் போவதைப்பற்றியும், நான் அடிக்கடிப் பிரசங்கஞ் செய்திருக்கிறேன். இது தப்பிதமென்று அநேகருக்குத் தெரியும்; பகிரங்கமாயும் சொல்லுகின்றனர்; பிள்ளைகளைச் சிறுவயதில் ஏன் கலியாணஞ் செய்கிறீர்கள் என்று மற்றவர்களை கேட்கவும் கேட்கிறார்கள். என்றாலும் தாங்கள் அதைத்தான் செய்துகொண்டு வருகிறார்கள். ஏனெனில் அவர்கள் அப்படி செய்யாவிடில் ஜனங்கள் என்ன சொல்லுவார்கள் என்கிறார்கள். இப்பேர்ப்பட்டவர்களுக்குக் குப்த மார்க்கத்திற்கு வர யோக்கியதை இல்லை.

ஜனங்களெல்லாம் முன்னுக்கு வரவேண்டிய கனத்த விஷயங்களை தற்சமயம் ஒருபுறம் வைத்துவிட்டு, தினசரி வாழ்க்கையிலிருக்கும் சிறு விஷயங்களைக் கவனிப்போம்; இவைகளிலும் அரை குறையாய்ச் சரிபடுத்தும் வழக்கங்கூடாது; சரியெது என்று மனோதிடஞ்செய்து கொண்டபிறகு அதை உறுதியாய் விடாமல் பற்ற வேண்டும். மலை அடிவாரத்திலிருந்து உச்சிக்குப்போக ஒவ்வொரு அடியாய் எடுத்துப் போவதுபோலப் போகாதபடி உனது மேலான கருத்துகளை உடனே எடுத்துத் தொடுக்க (சாதிக்க) உன்னால் முடியாதென்று எனக்குத் தெரியும். ஆனால் நீ மலை ஏறுவதாகயிருக்கும் பக்ஷத்தில் உச்சிக்குப் போகவேண்டும் என்கிற எண்ணத்துடன் ஒவ்வொரு அடியைஎடுத்து வைக்கவேண்டும். ஒவ்வொரு அடியும் உச்சிக்கு அருகில் கொண்டுபோக வேண்டும். உன்னுடைய கருத்தைத் தாழ்ப்போக விடாதே அது ஆபத்து; உபநிடதம் சொல்லு

 "ஒன்று சரியானது; சுகமானது இன்னொன்று; சுகம்

தருவதைவிட்டுச் சரியானதை அறிவுடையோன் ஆய்ந்து எடுக்கிறான்."

உனது மனச்சாக்ஷிக்குச் சரியென்று படும் சிறு விஷயங்களைச் செய்ய முயன்றுவா. மற்றவனது மனச்சாக்ஷி எப்பேர்ப்பட்டது என்பதற்காவது, அல்லது அவன் தன் மனச்சாக்ஷியின்படி நடக்கிறானா என்பதற்காவது, நீ உத்தரவாதியல்ல. உனக்குக் கஷ்ட நிஷ்டூரங்கள் இருந்தபோதிலும் உன்னுடைய மனச்சாக்ஷியின்படி நடக்க நீ உத்தரவாதியாயிருக்கின்றாய். நஷ்டம் என்பது வெளித்தோற்றமே தவிர உண்மையிலல்ல, என்பதைக் கவனத்தில் வை; சரியென்று தெரிந்திருப்பதைச் செய்வதில் உனக்கு ஓர் நஷ்டமுமில்லை. ஆனால் விஷயமொன்றை உன்னுடைய மனோபாவனையிலாவது பக்ஷபாதமாகவாவது, பித்த மயக்கத்திலாவது சரி என்று மதித்து கொள்ளாமலிருக்க ஜாக்கிரதையோடு இருக்கவேண்டும். இதைப்பற்றி மாஸ்டர் இவவிடம் எச்சரிக்கை கொடுத்துச் "மறைந்திருக்கும் பிரபஞ்ச நிபதிகளை ஆழ்ந்துபடி" என்று சொல்லுகின்றார். முதலில் சரி என்பதைக் கண்டுபிடி, பிறகு உன்னுடைய கல்வி விசாலத்தின் படி வாழ்.

இவ்வாக்கியத்தின் கடைசியில் "எப்போதும் புத்தியையும் தெளிவறிவையும் உபயோகி" என்கிற முக்கியமான குறிப்பை மாஸ்டர் சேர்க்கின்றார் எப்போதும் மற்றவர்களுக்கு வருத்தம் கொடுக்காதபடி கவனித்திரு. ஆனால் உன்னிடத்திலாவதும் நீ சரியென்று தெரிந்துகொண்ட விஷயத்திலாவதும் மற்றவனைத் தலையிடவிடக்கூடாது. (சரியாய்ச்செய்தால்) ஜனங்களுக்கு மனவருத்தமுண்டாகும் அல்லது (அப்படிச் செய்யாவிடில்) உன் மனச்சாக்ஷிக்குவிரோதமாயிருக்கும் என்கிற சந்தர்ப்பம்உனக்கு வருமானால், வருத்தமுண்டானாலும் சரியானதை எடுத்துச்செய். குப்தன் ஜனங்களுடைய ஜிவான்மாவின் கருத்தையும் அவர்களுடைய தேகங்களின் போக்கையும், பகுத்தறிய வேண்டும். அவன் ஒருபோதும் வருத்தம் கொடுக்கமாட்டான், என்றாலும் சரியல்லாததைச் செய்வதைவிட அவர்களுடைய தேகத்தின் துர் அபிப்பிராயங்களுக்கு வருத்தமானாலும் சரியானதைச்செய்வான்.இன்னும்

சொல்வோமானால் அவைகளைக்கூட அநாவசியமாக வருத்தப்படுத்த மாட்டான். அப்படி கட்டாயம் செய்யும்படி நேரிட்டால் அது உண்மையில் வருத்தம் கொடுப்பதல்ல உதவிகொடுப்பது என்றும், தேகத்திலிருக்கும் தேகியை இறுகக்கட்டி யிருக்கும் கட்டுகளைத் தரிக்க, தான் ஒருகருவியாக இருக்கவாய்ந்தது என்றும் அறிகிறான். அந்த சந்தர்ப்பத்திலும் அமைதியுடனும் யோசனையோடும் காரியத்தை நிறைவேற்றுவான். அநேகருக்கு இது கஷ்டமாகத் தெரிகிறது. நிதானமாய் விவேகத்துடன் ஒரு விஷயத்தைச் செய்வது இன்னும் மிக கஷ்டம். தாபவிகாரம் கிளம்பினால் மிகச் சுலபமாயிருக்கும். தாபம் நல்லதாயினும், கெட்டதாயினும் பின்னுக்குக் கஷ்டங்கொடுக்காமலே முடிக்கும்படி ஒருவனைத் தட்டி கொடுக்கிறது. நீ (அந்தரங்க) குப்த வழியிலிருப்பவனானால் சாதாரண உலகினர் செய்வதுபோல திடீரென்று எழும் துணிவால் எதையும் செய்யப்படாது. உனது யுக்தி கூர்மையையும், பகுத்தறிவையும் விருத்தி செய்யவேண்டியது. இவ்வித அப்பியாசத்தால் உன்னை அறியாமலே புத்தியூகம் விருத்தி அடைந்து மலர்ந்துவரும்.

C. W. L.:—அவரவர்களுக்குரிய துர் அபிப்பிராயங்கள் சாதாரணமாய் ஜனங்களுக்கு உண்டு. அவைகள் ஏராளமாயும் இருக்கின்றன. அவர்கள் அவைகளைச் சரியானவைகளென்று வைத்துகொண்டு இருக்கின்றனர். ஒரேவித வழியில் வாழ்ந்து வந்திருப்பதனால் இவைகளைப்பற்றி விசாரிக்க அவர்களுக்குத் தோன்றவில்லை, ஆதலால் அவர்களுடைய வழக்கத்தின்படி ஒத்து வராதவனைத் தவறான வழியில் செல்கிறான என்று நினைப்பதற்கு அவர்களுக்கு இடமிருக்கின்றது. வழக்கமாயிருக்கும் துர்அபிப்பிராயங்கள் சாதாரண நியாயத்திற்கு ஒத்து வராதவைகள். ஆகையால் சரி, சரியல்ல என்னும் விஷயங்களில் இவர்களுடைய அதிகாரத்தைச் செலுத்தவிடப்படாது. வழக்கமொன்றை ஆழ்ந்து ஆராய்ந்து பார்த்தால் அதற்கு நியாயங்கள் யாதும் இல்லை என்று நான் சொல்ல வரவில்லை. வெகுவாய் ஜனங்கள் எடுத்துக்காட்டும் காரணம் அல்லாத வேறு ஏதோ என்று இருக்கக்கூடும். ஆனால் சாதாரணமாய் அதில் இருக்கும் கொஞ்ச உண்மையைத்தவறுதல் எனும் அபிப்பிராய குப்

பையில் மூடியிருப்பதால் அது முறுக்கிகொண்டு ஒன்றைவிட்டு இன்னொன்றைக் காட்டுகிறது.

குப்த மார்க்கத்திலுள்ளவனுக்கு மற்றவர்களின் மதிமயக்கங் களுக்கு விரோதமாகும் என்கிற பயமில்லாததால் பிழையான விஷயம் எதையும் செய்யமாட்டான்; ஆனால் அவர்களுக்கு அனு வசியமான வெறுப்பை யுண்டாக்கமாட்டான். எல்லா விஷயங்களி லும் புத்தி சாதுர்யத்தோடும் பொது நியாயத்துடனும் இருக்க வேண்டும். மூடியிருக்கும் பட்டி கதவை காளை எருது பாய்ந்துத் தாக்குவதைப்போல் எதையும் தாக்காதே; எருது தாண்டிப்போகும், ஆனால் தன் தேகத்திற்கும் கதவிற்கும் மெத்த கெடுதி உண் டாக்கும். செய்யும் காரியம் எல்லாவற்றிலும் திருப்திகரமான நியாயத்தை எப்போதும் காட்டவேண்டியது. ஒரு விஷயத்தைப் பற்றி ஆத்திரமாய்க் கோபப்பட்டால் அலைபோல வரும் தாபம் நம்மை முடிவு வரையில் கொண்டுபோக கைகொடுக்கும். ஆனால் நம்மை தடுப்பவரின் பேரில் மனவருத்தப்படாமலும் சாந்தமாயும் அவசரமில்லாமலும் ஒரு விஷயத்தைச் செய்வது மிக்கக் கஷ்டம். என்றாலும் அதுதான் கண்டிதமாய்ச் சரியான வழி.

அநேகர் செய்கின்றபடி துணிச்சலால் அவசரப்பட்டு எதை யுஞ் செய்யக்கூடாது. அவர்கள் இதையாவது, அதையாவது பொறுக்கமாட்டார்கள்; அறியார்கள்; அறிந்துகொள்ளப் பிரயாசை எடுக்கவும் மாட்டார்கள். அவர்கள், தாம் சரியாய்த் தான் செய்கின் றோம் என்று எண்ணி வேலையில் மும்முரமாய்ப் போகின்றவர்கள். ஆனால் நாம் செய்வதில் மற்றவர்களைக் கவனிக்கவேண்டி யிருக் கிறது. அவர்களுக்கு வருத்தமுண்டாகுமோ என்பதையும் (ஓர் முக்கிய விஷயத்தில்) அவர்கள் சரிதானு அல்லது நாம் பிழைபட நினைக்கின்றோமா, என்பதையும் நாம் கவனிக்கவேண்டும்.

> "முக்கியமெது, முக்கியமல்லாதது எது வென்று நீ பகுத்தறிதல் வேண்டும். சரியையும் பிழையையும் பகுத்து எடுக்கவேண்டிய இடத் தில் மாத்திரம் கற்பாறைபோல் நீ உறுதி

யாய் நின்று, முக்கியமில்லாத விஷயங்களிற் பிற ருக்கு எப்போதும் விட்டு கொடு, ஏனெனில் எப்போதும் யோக்கியனும், அநுகூலனும், ஞாயமானவனும், இணக்கமானவனும், இருக்க வேண்டியதோடு கூட நீ உனக்கு வேண்டுமென் கிற முழு சுதந்திரத்தையே பிறருக்கும் கொடு."

A.B:—இது மிகவும் தயவோடு கொடுத்த நேர்த்தியான வாக்கியம். இது முந்தி சொன்னதைச் சரிப்படுத்துகிறது. இதைவிட்டு அதைத் தனியே எடுத்து யோசித்தால் கடினமானதாய்த் தோன்றும். இப்போது ஜனங்கள் சாதாரணமாய் மெத்த கவலைப்படும் விஷயங்கள் முக்கியமில்லாதவைகளாதலால், அநேக சந்தர்ப்பங்களில் அவர்களிஷ்டப்படி விட்டு கொடுக்க குப்தனுக்கு இயலும். செய்யவேண்டியிருக்கும் விஷயம் ஒன்றுதான் அவனுக்கு முக்கியம் அந்த முக்கிய விஷயத்தில் தனது கருத்தை நாட்டுகிறான். மற்ற வேலைகளில் மற்றவர்களை இஷ்டம்போல் செய்ய விடுகிறான். அவன் அப்படி விட்டுக் கொடுப்பதால், தமக்கு வேலை செய்ய எவ்வளவு சுகமானவன் என்று அவர்கள் அறிந்துப் படிபடியாய் முக்கியமான விஷயத்திலும் வெகு சந்தோஷமாய்த் தாங்களறியாமலே அவனைப் பின்தொடர்ந்து போகின்றார்கள். உலகில் இக்குணத்தை சாதுர்யம் என்பார்கள். குப்த மார்க்கத்தில் பகுத்தறிவு என்று கூறப்படும்.

இப்படி சாதுர்யமாய் நடத்த அபிமான பித்தம் பிடித்தவன் (Fanatic) கவனிக்கிறதில்லை. ஆகையால் அவனுக்குக் காரியம் கைகூடி வருகிறதில்லை. என்றாலும் குப்தனுக்குக் கைகூடுகிறது. அபிமான பித்தம் பிடித்தவன் முக்கியத்திற்கும் முக்கியமில்லாததற்கும் உள்ள வித்தியாசத்தை ஒருபோதும் அறிந்துகொள்ளுகிறதில்லை. ஆதலால், முக்கியமில்லாத விஷயங்களில் விட்டு கொடுக்கிறதில்லை. ஜனங்கள் போகும் போக்கை எதிர்த்துத் தாக்குகிறான். பிறகு இவன் எவ்வளவு சரியானபடியிருந்தபோதிலும் அவனுடைய கருத்து எவ்வளவு முக்கியமானதாக விருந்தபோதிலும் அவனைப் பின்தொடர்ந்து போகார்கள். அப்படி செய்வதை

விட்டு அவர்கள் போக்கின்படியே விட்டு, அவர்களைத் தட்டி கொடுத்தால் பூனை குறுகுறுவென்று உறைந்து வருவதுபோல் பின்னேடே வருவார்கள். இது சாதாரணமாக உலகத்திலுள்ள வழக்கம். மனிதனையாகிலும் மிருகத்தையாகிலும் எவராவது பிடித்து இழுத்தால் எதிர்த்துத் தாக்கி முரணுவது வழக்கம். நான் ஒரு நாள் இச்சிறு சம்பவத்தைக் கண்டேன்; ஒருவன் ஒரு கன்றை இழுத்துகொண்டிருந்தான்; கன்றுக்குட்டியும் தன் நான்கு கால்களைத் தன்னுல் கூடிய பலத்தோடு தரையில் நாட்டிகொண்டது, வாலையும் கிளப்பிகொண்டு எதிர்த்திழுத்து கொண்டிருந்தது அவன் அறிவுள்ளவனயிருந்தால் அதையிழுக்காமல்விட்டிருக்கவேண்டியது. பிறகு கன்றும் எதிர்த்து இழுக்காது. அதைக் கொஞ்சம் தட்டிக் கொடுத்து உபசரணை செய்திருந்தால் அவனேடுப் பிரியத்துடன் வரும்படி செய்திருக்கலாம்.

அதில் கற்கவேண்டிய ஒரு புத்திமதி இருக்கிறது. உன்னிஷ்டப்படி ஜனங்கள் நடவாவிட்டால், அதன் காரணத்தை உன்னிடத்தில் சோதித்துப் பார். அவர்களை எதிர்த்துப் போகச் செய்கிற ஏதோ ஒன்றைச் சாதாரணமாய் உன்னிடத்தில் காணலாம். நானும் இந்த வழியை அநுசரிக்கிறேன். எந்த இடத்திலாவது என் வேலையில் தொந்திரவாவது சச்சரவாவது ஏற்பட்டால் நான உட்கார்ந்து அதைப்பற்றி யோசனை செய்கிறேன். மேலும் நான் செய்வதில் ஏதாவது கஷ்டம் உண்டாகுமா என்பதைக் கண்டுபிடிக்க எத்தனிக்கின்றேன். தன் வழியில் வரும்படி, ஜனங்களைப் பலவந்தஞ் செய்வதைவிட இது மெத்த நல்லவழி. சந்தேகமின்றி அவர்களைக் கொஞ்சம் பலவந்தம் செய்யக்கூடும்; ஆனுல் அது நியாயத்திற்கு விரோதம்; அநுபவத்தில் கஷ்டமும் விரோதமும் உண்டாக்குகின்றது. (அதிகார) தலைவரின் சாமர்த்தியக் குறைவை காட்டுகிறது—அதிகார சாதுர்யம் இனிமேல் நமக்கு இருக்கவேண்டுமென்று மாஸ்டர் சொல்லுகின்றூர். நீ ஜனங்களை செம்மட்டியால் அடிப்பதுபோல் அடித்துப் பலவந்தம் செய்யாமல் அவர்களுக்கு உதவிபுரிவதற்காக உனக்கு வேலை நடத்தும் வகை தெரிந்திருக்கவேண்டும் என்பது மாஸ்டருக்கு இஷ்டம்.

C.W.L:—சுமார் எழுநூறு வருஷங்களுக்குப் பிறகு ஆறுவது வம்சத்திற்கு வேண்டிய வேலை செய்ய சந்தர்ப்பம் நம்மில் அநேகருக்குக் கிடைக்கும் இதற்கு இடையில் லோக குரு வருகைக்கு உலகைச் சித்தப்படுத்த மெத்த அக்கரை நமக்கு இருக்கின்றது. அவர் வரும்போது நம்மில் சிலர் உயிருடன இருப்பார்கள். நாம் அவர் கைக்கீழ் வேலை செய்பவர்களாகையால் நாம் அதிகாரநாயக சாமர்த்தியத்தை (திறமையை) விருத்திசெய்ய வேண்டியிருக்கிறது. அதிகாரத் தலைவனுக்கு முதல் முதல் வேண்டியது—சாமர்த்தியம் (Tact).

முக்கியமான வேலை எதையும் குப்தன் கைசோற விடாதிருத்தலால் தடைகள் நேரிட்டபோதிலும், ஒருவேளை அவனைப் பின்னுக்கு தள்ளி வைத்திருந்தபோதிலும் முடிவில் எப்போதும் அவன் ஜயமடைகிறான். பிரான்சில் நடந்த இராசீய குழப்பம் இவ்விதமாய் நடந்த சம்பவத்தில் ஒன்று- பிரஞ்சுதேச சுதந்திரத்திற்காக ஏற்பட்டப் பிரயத்தனத்தில் வெறி கொண்டெழுண்ட பொது ஜன கிளர்ச்சியைக் மூலகர்த்தா யிருந்தவர்களுக்குத் தடுக்க முடியாமல் போயிற்று. ஆதலால் இரத்தகளமான ஸம்ஹாரமும் பழிபாதகங்களும் விளைந்தன. அச்சமயத்தில் கிரகமும் இரத்த வீட்டிலிருந்தது. அந்தக் கோரமான சமயத்தில் நடந்த விவரிக்கக்கூடாத பாதகங்களையும், இராஜ துரோகத்தையும், கொடுமையையும், சொல்லத்தகாத அசங்கியத்தையும், துன்பத்தையும் பேய்போலத் கொலை புரிந்த விகாரக்கிளர்ச்சியையும், மேலோர் அங்கீகரித்ததாக ஒரு நிமிஷமும் நினைக்காதே. கொடுங்கோன்மையால் நசுக்குண்டு வெறிபிடித்திருந்தத் தாழ்ந்த ஜனங்களுக்கு அதிகாரம் வந்ததால் அவர்கள் காட்டு மிருகங்களைவிட மிகக் கொடூரத்தைக் காட்டினார்கள். இந்த சொல்லத்தகாத படுகொலைகளை நாகரீகத்திற்காக உழைத்து வரும் மேலோர் சம்மதித்ததாகக் கினவிலும் நினையாதே ஆனால் கடைசியில் அவர்கள் (மேலோர்) தங்கள் கருத்தை வேறுவிதத்தில் நிறை வேற்றி கொண்டார்கள். தற்காலத்தில் அத்தேசமும் இன்னும் இதர தேசங்களும்(ஜனங்கள் அடைய வேணுமென்று போராடி கொண்டிருந்த) சுதந்திரத்தை அடைந்திருக்கினறார்கள். இப்படித் தான் மேலோர் உண்டாக்கும் எல்லாவித பெருத்த சீர்திருத்தங்கள்

நடந்தேறி வருகின்றன. துவக்கத்தில் எப்போதும் பிரதிகூலமா யிருந்தபோதிலும் நாளடைவில் மேலோர் நிறைவேற்றி வருகிறார்கள்.

நாமும் அவ்விதம் குறைவில்லாது செய்யவேண்டும்—தோல்வி என்பதைக் கவனியாமல் வேலையிலேயே அக்கரை வைத்திருக்க வேண்டும்—ஆனால் வேலையை நன்றாய்ச் செய்ய சாமர்த்தியத் தோடு உதவிபுரியும் வகையைக் கற்கவேண்டும். ஒவ்வொருவரையும் அதிகாரஞ்செய்ய நல்லவர்களில் அநேகர் விரும்புகிறார்கள். ஆனால் அதுவல்ல வழி. மனிதர்களுக்காக இருக்கும் முன்னேற்றத்தையும் மாஸ்டர்களுக்காகச் செய்யும் சேவகத்திலிருக்கும் மகிமையை யும், ஆநந்தத்தையும், உற்சாகத்தையும் அவர்களுக்கு எடுத்துக் காட்டவேண்டும். பிறகு அவர்கள் அவர்களாகவே நம்முடன் கூடி வருவார்கள். சில ஜனங்களோடு வேலை செய்ய உனக்குச் சரிபடா விட்டால் அதனது குற்றத்தை உன்னிடத்தில் சோதித்துப்பார்அவர் களிடத்தில் அநேக குற்றங்கள் சந்தேகமின்றி இருந்தபோதிலும் அவைகளைப்பற்றிச் சங்கடப்படாதே. ஆனால் அவர்களுடன் உன்னை சேரவிடாதுத்தடுக்கிறது எது என்பதை உன்னிடத்தில் பார். கவ னித்துப் பார்த்தால் ஏதோ ஒன்று இருப்பதை வெகுவாய்க் காண் பாய்.

> "செய்யத்தகுந்ததைக் கவனித்து எடுக்க முயலுவாய்; பரிமாணத்தை கொண்டு விஷய மொன்றை மதிக்கக்கூடாதென்பதை ஞாபகத் தில்வை. உலகினர் நன்றென நவிலக்கூடியபெரிய தோர் காரியத்தைவிட, குருநாதனுடைய தொண் டுக்கு நேர் உபயோகப்படும் ஒரு சிறு விஷயம் எவ்வளவோ மேலானதாகும். உபயோகமுள் ளதை உபயோக மில்லாததிலிருந்துப் பிரித்து கொள்வதுடன் சொற்ப வுபயோக முள்ளதிலிரு ந்து மிக்க உபயோகமுள்ளதைப் பிரிக்கவேண் டும்."

A. B.:—நித்திய நோக்கத்தின்படி இருக்கும் விஷயங்களைப் பற்றி சாதாரணமாய் ஜனங்கள் கொஞ்சம் கூட கவலைப்படுகிற தில்லை என்று முந்தியே சொல்லியிருக்கின்றேன. அவர்கள் முக்கியமில்லாதவைகளில் கருத்தாயிருக்கின்றனர். ஆதலால் சிஷ்யன் இதைப் பகுத்தறிந்து உபயோகமற்ற வேலைகளில் நாள் முழுதும் உலகினர் உழலுவதுபோல் தனது காலத்தை வீணாகக் கழிக்கக் கூடாது.

பிறகு மிக நுட்பமான குறிப்பை கொடுக்கிறார். பரிமாணத்தைகொண்டு ஒரு விஷயத்தின் பிரயோஜனத்தை மதிக்கக்கூடாது என்கிறார். உலகினர்களுக்கெதிரில் மிக விமரிசையாய்க் காட்டும் தேசபக்தனுடைய காரியங்கள் மாஸ்டர்களுடைய மதிப்பிற்கு முக்கியமில்லாதவைகளா யிருக்கக்கூடும். ஓடும்சக்கரத்தால் எழும் தூசி போன்றவை. பகிரங்கத்திற்கு வராத எவனோ ஒருவன செய்த ஏதோ சிறு விஷயம் மாஸ்டர்கள் செய்யும் வேலைக்கு ஒத்திருக்குமானால் அது அளவில்லாத முக்கியமாயிருக்கும்.

பிறகு இன்னும் வெகு நுட்பமான பிரிவு. அதாவது உபயோக முள்ளவைகளிலிருந்து கிஞ்சித்து உபயோகமுள்ளது எது, மெத்த உபயோக முள்ளது எது என்கிற பிரிவு. எல்லாவற்றையும் உன்னால் செய்ய முடியாதாதலால் மாஸ்டர்களுக்கு மிக்க உபயோகப்படும் என்று நீ மதிக்கிறதைச் செய்யவேண்டும். உலகத்திற்கு உபயோகப்படும் ஒவ்வொன்றும் மாஸ்டர்களுடைய வேலைக்கு உதவும். ஆனால் உன்னுடைய சாவகாசத்திற்கும் சக்திக்கும் ஒரு அளவு இருப்பதால் சமயம் நேர்ந்தபோது மிக்க உபயோக முள்ளதை எடுக்கவேண்டும். மாஸ்டர் அவர்கள், பின்வரும் இரண்டு வாக்கியங்களில் தேகங்களை விட ஆன்மாக்களுக்கு ஊட்டுவதைப் பற்றி சொல்லும்போது இதன் திருஷ்டாந்தத்தைக் குறிப்புடன் காட்டுகின்றார். ஆன்மாவிற்கு உதவி செய்வதால் உலகில் உள்ள தீங்குகளின் வேரைத் தாக்குகின்றாய்; ஏனெனில் தீங்குகள் எல்லாம் அறியாமையிலிருந்தும், சுயகாமிய லோபகுணத்திலிருந்தும், விளைகின்றன.

"ஏழைகளுக்கு அன்னமிடுவது நல்லதோர் உயர்ந்த உபகாரமே. எனினும், தேகத்திற்கு உணவு அளிப்பதைவிட, அவர்களது ஆத்துமாவுக்குஅறிவை யூட்டுவது மெத்த வுபயோகமானது, மிக்கமேன்மையானது; தனவானெவனும் தேகத்திற்கு உணவு கொடுக்கக்கூடும்; ஆனால் அறிந்தவர்கள் மாத்திரமே ஆன்மாவுக்கு ஞானம் போதிக்க முடியும்."

C. W. L.:—வஸ்திரதானம், அன்னதானம் முதலிய பரோபகாரங்களை திவ்யஞான சபையார் கைப்பற்றுகிறதில்லை என்று சில சமயங்களில் குற்றங்கூறுவதுண்டு. சில சபைகளில் (Lodges) இவ்வழியில் அதிகமாய்ப் பரோபகாரஞ் செய்யப்பட்டுவந்திருக்கின்றது. ஆனால் இதுவல்ல அவர்களுடைய முக்கியவேலை. பணத்தோடும், தர்ம சிந்தையோடும் இருப்பவன் எவனும் இதைச் செய்யக்கூடும். ஆனால் தெரிந்தவர்கள் செய்யவேண்டிய வேலை அதிகமாயிருக்கின்றது. நாம் தெரிந்தவர்கள் என்கிற பெயரை வகித்துப் பெருமையாகச் சொல்வது ஒருவகையான தற்புகழ்ச்சி என்று சிலருக்கு ஒருவேளை தட்டும். ஆனால் அதைச் சொல்வதில் உண்மையாகவே உயர்த்திச் சொல்லிக்கொள்வதில்லை. திவ்யஞான சபையில் சேராதவர்களில், நம்மைவிட புத்தி சாதுர்யத்தில் எவ்வளவோ மேலான நல்ல ஆத்துமாக்கள் அநேகரைத் தெளிவாகப் பார்க்கின்றோம். ஆனால் இந்த விஷயங்களை கற்கவேண்டி நம்முடைய கர்மமாக வந்திருக்கின்றது. ஆகையால்தான், மெத்த மேன்மையானவர்களை விட நமக்கு அதிகம் தெரியும்; பக்தியிலும், தெய்வீகத்தன்மையிலும், அறிவிலும் மேம்பட்டவர்கள் அநேகர் இருக்கின்றார்கள். எந்த வழியில் சாமர்த்தியத்தை பிரயோகிக்க வேண்டியது என்று நமக்குத் தெரிந்திருப்பதை இவர்கள் தெரிந்து கொள்ளும்போது வெகு சீக்கிரம் மேல் போவார்கள். இவர்கள் வெகுவாய் நம்மை வழியில் கடந்து போவார்கள்; நாமும் அவர்களைப் பார்த்து வரவேற்பு கொண்டாடிக் களித்திருப்போம்; ஏனெனில் இவ்வழியில் பொறாமை என்பது கிடையாது. அதில் இருக்கும் ஒவ்வொருவ

ரும், சகோதரன் முன்னுக்கு வருவதைக் கண்டு வாழ்த்தி கொண்டாடுவார்கள்.

இதற்கிடையில் இந்த திவ்யஞான அறிவாகிய ஒரு பெருத்த பொக்கிஷத்தை உபயோகப் படுத்துவதற்காக நம் கையில் கொடுத்து வைக்கப்பட்டிருக்கிறது. இதைக்கொண்டு மற்றவர்களுக்கு யாதொரு ஒத்தாசையும் கொடுக்காது அதை நம்மிடத்திலேயே வெறுமையாக அணைத்து வைத்துகொண்டும், கவலையற்று, கஷ்டமில்லாதத் தன்மையைப் பெற்றும், கஷ்டமான சந்தேகங்களை நிவர்த்தி செய்துகொண்டும் சுகித்திருந்தால் பிரயோஜனப்படுத்துவதற்காக கொடுத்த பணத்தைப் புதைத்து வைத்தான் என்று 'பைபிளில்' சொல்லிய கதைபோலிருக்கிறது. நமக்கிருக்கும் அறிவை நம்மால் கூடியவரையில் பரவச்செய்து, ஒவ்வொரு விதத்திலும் உதவி புரிந்து வந்தால் அப்போது நம்முடைய முதலைப் பெருக்க வட்டிக்கு விடுகின்றோம். தெரிந்தவன் எவனும் எளியவர்களுடைய ஆத்துமாக்களுக்கும், செல்வருடைய ஆத்துமாக்களுக்கும் சரிசமானமாகத் தன் அறிவைக்கொண்டு ஊட்டமுடியும். இகலோகார்த்தமாகப் பார்த்தபோதும் ஆத்துமபோதம் சாப்பாட்டை விட அநுபவக்குறைவானதாக சற்றும் இல்லை. உலகிலுள்ள தரித்திரத்திற்கும் துன்பத்திற்கும் காரணம் என்ன தெரிகின்றதா? அறிவீனம், சுயகாமிய லோபம். வாழ்விற்கு வேண்டிய ஆதார விதிகளை ஜனங்களுக்கு எடுத்துச் சொல்லி அவர்களுடைய சுயகாமியத்தை நீக்கவேண்டியது அவசியமென்று எடுத்துக்காட்டி லோபத்தையும் அறிவீனத்தையும் தாக்கினால் இகலோகார்த்தமாகவே இப்பூவுலகில் ஜனங்களுக்குச் சுகத்தையும் சௌரியத்தையும் கொடுக்கும், ஆதலால் அன்னதானத்தைவிட அதிக நன்மை நாம் விளைவிக்கின்றோம். அதை அன்னதானத்தை அநாவசியமானதென்றும், நல்லதல்லவென்றும், செய்யப்படாதென்றும், ஒரு க்ஷணமாவது எவனும் சொல்லமாட்டான்: அந்தந்த சந்தர்ப்பத்திற்கு வேண்டியதைச் செய்யவேண்டும். ஆனால் கஷ்டத்திற்கெல்லாம் காரணமாயிருக்கும் வேரை நீக்குவது மேன்மையான சேவகம், பூலோகத்தில் உதவி புரிகின்றவனால் முடியாதவைகளை நாங்கள் செய்கிறோம்.

இவ்வித வழிகளில் உதவும்படியான கலைக்கல்வி எவ்வகையி லிருந்தாலும் சரி அதைத் தெரிந்தவர்கள், மற்றவர்களுக்குக் கற்றுக் கொடுக்கும் பொருட்டு, மற்ற அலுவலிலிருந்து விடுபட்டு வருவார் கள். இதை ஒரு திருஷ்டாந்தமாக 'அபோசல்' என்பதில் வாசிக்க லாம். அதில் ஆதி கிருஸ்தவ 'சர்ச்சுகளில்' நகரவாசிகளுடைய பண் டங்கள் பொதுவாக வைக்கப்பட்டு வந்தன. உணவுக்கு வேண்டிய வைகளை பங்கிட்டுகொள்ள அவர்களுக்குள் சங்கடம் வந்தபோது இந்த வழக்கைத்தீர்க்கும்படி (Apostles) அபோசல்களை அனுப்பி னார்கள். அவர்கள் கடவுளது சேவகத்தைவிட்டு உணவை பங்கிடப் போவது அவர்களுக்கு நியாயமாகத் தோன்றவில்லை என்று சொல்லி அந்த வேலைக்கு தகுந்தவர்களாயும் சொன்னபடி நடக்கிறவர்களாயு முள்ளவர்களைப் பொது ஜனங்களிடமிருந்தே பொறுக்கி எடுத்து அதை தீர்க்கச்சொன்னார்கள். "வேதவாக்கியங்களைப் பிரசங்கிப் பதே தொழிலாயுள்ள எங்களைச் சுத்தமாய் இகார்த்தமாயுள்ள விஷ யங்களைச் செய்யும்படி எதிர்பார்க்காதீர்கள்" என்றார்கள். இதனால் இவ்விஷயங்களைப் பாராமுகமாய் விட்டுவிடுவது என்று அருத்த மல்ல; ஆனால் பரமார்த்திக வேலையைச் செய்ய முடியாமல் இருப் பவர்களே இதைச் செய்யத் தகுந்தவர்கள்.

A. B.:—திவ்யஞான சபையில் இருக்கும் நமக்கு வாசிப்பு இருக்கின்றது. இந்த வாசிப்பு சபைக்கு வெளியில் இருப்பவர்க ளிடத்திலில்லை. ஆகையால் திவ்யஞானக் கல்வியை பரவச்செய்ய வேண்டியது நமது கடமை. 'சொசைடியில்' பிரசங்கம் செய்யவா வது, எழுதவாவது, கற்று கொடுக்கவாவது, இன்னும் சித்தமாயில் லாது இருப்பவர்கள், பயின்று கொண்டு வருகின்ற சமயத்திலும் மற்ற வேலைகளைச் செய்யவேண்டும். கற்றுகொடுக்க முடியாதவர் களுக்காகத் திருப்பணி நிலையம் (Order of Service) ஒன்று ஏற் படுத்தியிருக்கிறேன். ஆகையால் சொசைடியில் வரும் ஒவ்வொரு வரும் செய்ய வேலை ஏதோஒன்று இருப்பதைக் காண்பார்கள். சொசைடியில் இருப்பவன் எவனும் சோம்பலாயிருப்பது ஒன்று தான் செய்யத்தகாத விஷயம். எல்லா மெம்பர்களும் மாஸ்டர் களுடைய வேலையைச் செய்ய சுறுசுறுப்பாயிருக்க வேண்டும்.

C. W. L.:—ஜனங்களுடைய தூக்கக்கண்களைத் திறந்து விட்டால் விரைவாக விருத்திக்கு வரும் படியிலிருப்பவர்கள் எத்தனை பேர் என்பதைத் தெரிந்துகொள்ளக் கஷ்டமாயிருக்கின்றது. சிறுவர்களில் அநேகரிருப்பதை நானே நேருக பார்த்தேன்; ஏனெனில் சாதாரணமாய் சிறுவர்களை சீர்திருத்துவது என்னுடைய வேலை. திவ்யஞான விஷயங்களை சிறுவர்களுக்கும் சிறுமிகளுக்கும் எடுத்துக் காட்டினுல் சீராய் விருத்திக்குவருபவர்கள் கோடிக்கணக்காய் இருப்பதை அநேகமாய் ஒவ்வொரு தேசத்திலும் பார்க்கின்றேன். ஆனுல் அப்படி விருத்திக்கு வருகிறதில்லை. அவர்கள் நாளடைவில் வரும் உலக விஷயங்களில் ஆழ்ந்துபோய்,சாதாரண ஜனங்களைவிட வெகு நல்லவர்களாக மாத்திரம் ஆகிவிடுகின்றனர். திவ்யஞானத்தைச் சரியானபடி அவர்களுக்கு எடுத்துக் காட்டினுல் அதை எடுத்து தொடுக்கச் சாமர்த்தியராயிருந்தும் அவர்கள் இருபது அல்லது முப்பது அல்லது இன்னும் அநேக ஜன்மங்கள் வரையில் இவ்விதமாய்த்தான் போய்க்கொண்டிருப்பார்கள். இவ்வித நிலையில் உலகினரிருப்பது இந்த ஞான முடையவருக்குக் கனத்த உத்தரவாத பாரமாயிருக்கிறது. ஆகையால் தக்கசமயம் நேரும்போதெல்லாம் திவ்யஞானத்தை எடுத்து சாமர்த்தியமோடு விளக்க சித்தமாயிருக்க வேண்டியது நமது கடமையாயிருக்கின்றது. இருபது ஜன்மத்திற்குப் பிந்திப் பரிபக்குவத்தை எடுப்பவர்கள் அதை இப்போதே எடுக்கக்கூடிய நிலையில் இருக்கின்றுர்கள். எடுக்காதிருப்பது அவர்களுடைய கர்மத்தைப் பொறுத்தது. ஆனுல் அவர்களுக்குச் சந்தர்ப்பம்கொடுத்து இவ்விஷயங்களை அவர்கள் எதிரில் வைக்கவேண்டியது நமது கடமை. அவர்கள் எடுப்பதும் அல்லது தள்ளிவிடுவதும் அவர்களைச் சேர்ந்தது. நம்மால் கூடியதைச் செய்து முடிக்கிறவரையில் அவர்களுக்கு உதவ வேண்டிய கடமை நமக்கு உளதோ இல்லையோ என்பது நமக்குத் தெரியாது.

"நீ அறிந்தவனு யிருக்கில் மற்றவர்களையும் அறிவாளர்களாக்கச் சகாயஞ் செய்வது உனது கடமை. இதற்குமுன் நீ எவ்வளவு அறிவுடையவனுக இருந்தபோதிலும் நீ இம்மார்க்கத்தில்

*கற்றறிய வேண்டியவை அதிகமிருக்கின்றன; எவ்வளவோ இருப்பதால் கற்கத்தகுந்த தெது வென்பதை நீ கவனத்தோடு இங்கும் யோசிக்கப் பகுத்தறிவை இன்னும் பிரயோகிக்க வேண்டும். எல்லா கல்வியும் உபயோகமானதே; ஒருநாளைக்கு எல்லா கல்வியும் உனக்கு வரும்; ஆயினும் உன்னிடத்தில் இருப்பது கொஞ்சமாயிருந்த போதிலும் அது மிகப் பிரயோஜன முள்ளதாயிருக்கக் கவலையோடிரு. அறிவே கடவுள், அன்பும் அவரே; உன்னிடத்தில் அறிவு எவ்வளவுக்கெவ் வளவு அதிகமா யிருக்கின்றதோ அவ்வளவுக் கவ்வளவு அதிகம் நீ அவரை விளக்கிக் காட்டக் கூடும். ஆகையால் நீ வாசித்து வா; ஆனால் மற்றவர்களுக்கு உபயோகப் படுவதான படிப்பை நீ முதலில் கற்றுகொள்."*

C. W. L.:—மாஸ்டர்கள் இவ்விடத்தில் வாசிக்கும்படி புத்திமதி சொல்கிறார். ஆனால் இயன்ற அளவு மற்றவர்களுக்கு உதவும்படியான வாசிப்பைத் தெரிந்தெடுக்கும்படி சிஷியருக்குக் கட்டளையிடுகின்றார். இதன் அருத்தம் என்னவெனில்: எவனும் திவ்ய ஞான வாசிப்பை முற்றும் தெரிந்துகொள்ள வேண்டியது முதன்மையான அவசியம். இன்னும் வாசிப்பிலும், கல்வியிலும் காலத்திற் கேற்ற வாசிப்பை பெற்றிருக்க வேண்டும் என்று நான் அருத்தம் கொள்ளுகிறேன். திவ்யஞான சபையில் அநேக காரணங்களைக் கொண்டு வாசிப்பில்லாதவர்கள் அநேகர் இருப்பது எனக்குத்தெரியும்; என்றாலும் இவர்கள் பக்தியிலும், ஊக்கத்திலும் மிகச்சிறந்தவர்கள். இவர்கள் கல்வியின் விபாங்களைக் குறித்து "ஏன் நம்மை கஷ்டப்படுத்திக்கொள்ள வேண்டியது? விஷயத்தின் உண்மையைக் கண்டுபிடித்த பிறகு அதை எப்படியாவது எடுத்துக் காட்டுவோம்" என்று சொல்லிக்கொண் டிருக்கிறார்கள். மெய்தான்; ஆனால் வாசிப்பில்லாதவன் சாதாரணமாய் வாசித் திருக்கிறவனுக்கும்,

வாசிப்பில் தேர்ந்திருக்கிறவனுக்கும், அவ்வுண்மைகளை எடுத்துச் சொல்லும் வகையில் உடனே வெறுப்புத் தட்டும்படி வெகுவாய்ச் செய்வான். யூகத்தோடு அறிந்துகொள்பவன் வகையில்லாது சொன்னதைக் கூட கேட்டு அதன் உண்மையை கிரகிப்பான் என்று சொல்வதைக் கேட்டிருக்கின்றேன். ஆனால் துரதிர்ஷ்டத்திற்குத் தக்கபடி அவ்விதமாய்த் தெரிந்துகொள்ளும் ஜனங்கள் அதிகமில்லை. வழியோடு சொன்னால் ஒரு வேளை ஜனங்களைத் தூண்டி அவர்களுக்கு ஊக்கம் கொடுக்கும். அப்படி செய்வதைவிட்டு நமது சோம்பேறித்தனத்தால் அவர்களுக்கு இன்னும்கஷ்டங்களை ஏற்படுத்துவது நமக்கு நியாயமில்லை. விஷயங்களை நம்மால் கூடியவரையில் தெளிவாய் எடுத்துக்காட்டி கொடுப்பது கண்டிதமாய் நமது முக்கிய கடமை.

> "பாடங்களை பொறுமையுடன் வாசித்துவா, ஆனால் ஜனங்கள் உன்னை அறிஞன் என்றெண்ணும் பொருட்டல்ல, அல்லது புத்திமான் என்று நீ மகிழவுமல்ல, பின்னை விவேகிதான் யூகத்துடன் மற்றவனுக்கு உதவி புரியக்கூடும். பிறருக்கு உதவிசெய்ய உனக்கெவ்வளவு பிரியமிருந்த போதிலும் நீ அறிவீனனா யிருக்கும் பக்ஷத்தில் நன்மையைவிட்டு மிக்கத் தீங்கை விளைவிப்பாய்."

A. B.:—முக்கியமாய் நமது இளய மெம்பர்களுக்குச் சிரேஷ்டமான புத்திமதி இவ்விடம் இருக்கிறது. காலேஜில் வாசிக்கும் இளைஞர்கள் புத்தி புது ஊக்கத்தில் தீவிரமாயிருப்பதை அடிக்கடி பார்த்திருக்கின்றேன். அவர்கள் உதவிசெய்ய மிக ஊக்கமுடையவராய், வாசிப்பை ஒதுக்கிவைக்க அடிக்கடி பிரியப்படுகிறார்கள் "இந்த வாசிப்பில் நமக்கு என்ன பிரயோஜனம்" என்று கேட்கிறார்கள். "நீங்கள் விடாது வாசித்துக் கற்றவர் என்றுப் பேரெடுங்கள். நீங்கள் வாசிக்கும் பாடங்களில் முக்கிய மில்லாதவைகள் அநேகமிருந்த போதிலும், அவைகள் புத்தியை விருத்திக்குக் கொண்டுவருபவை

கள். உங்களுடைய வாசிப்பின் பிரயோஜனம் அதில் இருக்கின்றது. வாசிப்பு மனதை நியாயப்படி யோசிக்க, ஏறத்தாழ இல்லாது சரியாய் மதிக்க, திறமையை கொடுக்கின்றது. இவ்வித மனோ பயிற்சி உங்களுக்கு இல்லாவிட்டால் பின்னுக்கு உங்களது வேலையில் நீங்கள் கஷ்டப்படுவீர்கள்'' என்று சொல்லுகிறேன்.

திவ்யஞான உண்மைகளைத் தெரிந்துகொள்ள வல்லமையோடு இருப்பது போதாது; மற்றவர்களைத் தெரிந்தவர்களாக்க உதவிசெய்ய வேண்டுமானால் நீ அவ்வுண்மைகளைத் தெளிவாக எடுத்துக் காட்டும்படியான அளவு மனோபயிற்சி உனக்கு வேண்டியதாயிருக்கிறது. வாசிப்பில்லாதவன் ஒரு விஷயத்தை எடுக்கும் வகையில் உடனே அது காணப்படுகிறது. என்னுடைய கல்வி பயிற்சியில் இரசாயனப்பகுதி மற்றெல்லா பகுதியைவிட அதிகமாயிருப்பது எனக்கு சந்தோஷம். முதலாவது: இது புத்திசாலிகளையும் அறிஞர்களையும் உற்று கேட்கும்படியான நியாய முறையுடன் விஷயங்களை எடுத்துச் சொல்ல எனக்கு உதவுகிறது. இரண்டாவது: இது ஜனங்களுடைய மனதைக் கவரும்படியான வேண்டிய திருஷ்டாந்தங்களை எனக்குத் தருகின்றது. ஏனெனில் இவைகள் கண்டிதமாய் நிரூபிக்கத்தக்க விஷயங்கள்.

நமக்குள் பெரியவர்களா யிருப்பவருக்கு இளைஞர்களிடத்தில் விவகரிக்க அநேக சந்தர்ப்பங்கள் இருக்கின்றன. இவர்களுடைய ஊக்கத்தைக் கெடுக்காமல் உலகினர் அறிவுடையோர் என்று இவர்களை சொல்லும்படி விருத்திக்குக்கொண்டுவரவேண்டியமுக்கிய விஷயங்களை பக்ஷமாகவும் சுறுசுறுப்பாயும் இவர்களுக்குச் சொன்னால் மெத்த உபயோகப்படுவார்கள்; மேலான சமாசாரங்களைத் தெரிந்திருக்கும்போது ஒருவனுக்குக் கீழ்ப்படிப்பில் கொஞ்சம் பொறுமையில்லாதிருக்கும்படி வரும்; ஆகையால் மாஸ்டர் அவருடைய இளைய சிஷ்யர் இன்னும் வாசிக்கவேண்டியிருப்பதால் இவருக்கு "உன்னுடைய பாடங்களை அமைதியுடன் வாசித்துவா" என்று சொல்கிறார்.

C.W.L.:—இந்த புத்திமதியின் அனுகூலத்தைச் சரித்திரங்களை வாசித்தால் கண்டிதமாய் காணலாம். நல்லவர்களில் அநேகர்

வெகு நல்ல நோக்கத்துடன் இருந்தும் மெத்த கடுமையானவகையில் பிழைபடச் செய்திருக்கிறார்கள். அவர்கள் எடுத்த காரியங்களில் வெளியிலிருந்து வரும் கஷ்டத்தைவிட அதிகமான கஷ்டத்தைக் கொண்டுவந்துவிட்டு அவைகளைக் கெடுத்திருக்கிறார்கள். திவ்யஞான சபை உண்மைகளைப் பிழைபடும் வகையில் அல்லது கவலையில்லா வகையில் காட்டினதால் அடிக்கடி அதன் சேவையில் கஷ்டம் வந்தது. நம்முடைய சொந்த குறையாலும் சாமர்த்தியமின்மையாலும் திவ்யஞான சபையை இழிவாகப் பிறர் சொல்லக் கேட்க நமக்குப் பிரியமில்லை. சொசைடிக்காக வேலைசெய்ய ஆரம்பித்து அதை திருப்திகரமாய்ச் செய்ய முடியாவிடில் வகையோடு செய்யக் கற்று கொள். உன்னை ஏதோ ஒன்றை வாசிக்கச் சொன்னால் அதைப் படிக்கமாட்டாதவனாயிருந்தால் அதை சரியாய்ப் படிக்கக் கற்றுக் கொள். உனக்குப் பிரசங்கஞ் செய்யமுடியாதிருந்தால் நீ போதுமான அளவு தெரிந்து கொண்ட உடனே சித்தமாக்கி கொள்ள பிரயாசைப் பட்டுப்பிரசங்கஞ் செய்யக் கற்றுக்கொள்வாய், ஆனால் எப்படியும் ஏதோ ஒன்றை செய்துகொண் டிரு, அதை நன்றாய்ச் செய்யப்பிரயத்தனப்படு. தியாஸபிஸ்டாயிருக்கும் நம்முடன் நடமாடும்ஜனங்களுக்கு விஷயங்களை அவர்களுக்குத் தெரியும்படியாய்ச் சொல்ல இலக்கணப் பிழையில்லாமலும் வார்த்தை பிழையில்லாமலும் நாம் கற்கவேண்டிய கடமையா யிருக்கின்றது.உண்மை எதுவாயினும் அது எவ்வளவு மகிமையானதாக விருக்கினும் அதைத் தெளிவு இல்லாது, பிழைபடச் சொன்னால் விளங்காது. இவ்விஷயங்களைக் கூடிய அளவு சாமர்த்தியமாக விளங்கச்செய்வது நமது கடமை. இவ்வுண்மைகளைச் சரியாய்ச் சொல்ல வேண்டுமானால் நாம் வாசிக்க வேண்டியது அவசியம்.



## 11-வது அத்தியாயம்

### உள்ளும் புறமும் உண்மையாயிரு.

"மெய்யெது பொய்யெது எனப் பிரித்தறிய தெரிந்திருக்க வேண்டும்; நீ உள்ளும் புறமும, அதாவது எண்ணத்திலும் வாக்கிலும், செய்கையிலும் உண்மையாய் இருக்கக் கற்க வேண்டும்."

A. B.:—ஒருவன் மாஸ்டர்களுடைய கருத்தின்படியும், வார்த்தையின்படியும் நடந்தால் இங்கே இக்குறிப்பு வரவேண்டிய காரணம் ஆச்சரியந்தான். மெய்யையும், பொய்யையும் பகுக்கும் அறிவை நிச்சயமாய் முதலில் வைத்திருக்கவேண்டியது. இது மிக்க கஷ்டமானதால் மாஸ்டர் பிந்திவைத்திருக்கின்றார். நீ உள்ளும், புறமும் உண்மையாயிரு என்கிறார். மனதிலும் வாக்கிலும் செயலிலும் அவ்விதம் தன்னை வகித்துக்கொள்வது சுலபமல்ல. எண்ணம் முதலில் வருவதைக் காண்பீர்கள். இது குப்தமுறை கிரமப்படியிருக்கின்றது. இதில் எண்ணத்தை முதலிலும், பிறகு வசனத்தையும், செயலையும் வைத்திருக்கின்றது. புத்தபகவானும் இந்த வரிசைக் கிரமத்தின்படி அவைகளைச் சரியான எண்ணம், சரியான வசனம், சரியான செயல் என்று அருளினார்.

"முதலில், எண்ணத்தில் துவக்கவேண்டும்; இது சுலபமல்ல. ஏனெனில் உலகில் அநேக மெய்யற்ற எண்ணங்களும் அநேக மூட நம்பிக்கைகளும் இருக்கின்றன. இவைகளுக்கு அடிமைப்பட்டவன் எவனும் விருத்திக்கு வரமுடியாது."

C. W. L.:—திவ்யஞான சபையிலுள்ள நாம் மூட நம்பிக்கையிலிருந்து முற்றும் விடுபட்டவர்கள் என்று எண்ணுகிறோம். எப்

போதும் உண்மையாகவே அவ்விதமிருக்கிறதோ என்பது எனக்கு நிச்சயமில்லை. திவ்யஞானத்தைப்பற்றியே மூடநம்பிக்கைகள் இருக்கலாம் என்று எனக்குத் தோன்றுகிறது. ஒரு விஷயம் 'பைபிளில்' எழுதியிருக்கின்றது என்பதால் அதை நம்புகிறவன் சந்தேகமின்றி அந்த விஷயம்வரைக்கும் மூட நம்பிக்கையுடையவன் எனலாம். ஏனெனில் அந்த நம்பிக்கைக்குத் தகுந்த முகாந்திரம் அவனுக்குத் தெரியவில்லை. அப்படியிருக்க "மேடம் பிளவட்ஸ்கி அம்மையார் இவ்விதம் சொன்னார் "அல்லது"(Secret Doctrine)ல் அவ்விதம் எழுதியிருக்கிறது" என்று சொல்லுவதும் மூட நம்பிக்கையைவிட ஒருபடித்தான் முந்தி வந்திருக்கின்றது. அது ஒருபடித்தான். ஏனெனில் "செயிண்ட்பால்" அல்லது மற்ற புராதன ஆசிரியர்களைவிட மேடம் பிளவட்ஸ்கி அம்மையாருக்கு, தான் சொல்லும் விஷயங்கள் தெரிந்திருந்தது என்பதற்கு அநேக அத்தாக்ஷிகள் இருக்கின்றன. என்றாலும செயிண்ட் ஜேம்ஸ் அல்லது செயிண்ட் பீடர் அவர்கள் சொன்னார் எனபதைவிட மேடம் பிளவட்ஸ்கி சொன்னார் என்பதால் அது நம்முடைய சொந்த அநுபவமாகப் போகிறதில்லை நாம் ஒருவிஷயத்தை தெரிந்து கிரகித்துகொண்டு அதை நம்மறிவோடு அறிவாகச் சேர்த்து அதில் நாம் வளரவேண்டும். அதை நம்மில் வேருன்றவிட வேண்டும் நாம் கிளிப்பிள்ளைபோல் வாசித்ததைச் சொல்லிக்கொண்டிருக்கும் வரையில் விஷயங்கள் எல்லாம் மூட நம்பிக்கைகளே. இங்கே எழுதியிருக்கின்றது. அங்கே எழுதியிருக்கின்றது என்பதைவிட்டு நல்ல முகாந்திரம் தெரிந்துகொள்ளாவிடில் உண்மைப் பொருளில் இருக்கும் நம்பிக்கைகூட மூட நம்பிக்கைதான். நம்முடைய மனதோடு மனதாகும்போது "அது எனது என்னுடைய சொந்தம், நான் ஏன் நம்புகிறேனென்று எனக்குத் தெரியும், ஆதலால் எனது நம்பிக்கை அறிவோடுள்ள நம்பிக்கை, மூட நம்பிக்கையல்ல." என்று சொல்லலாம் அநேக சந்தர்ப்பங்களில் உண்மையாயிருக்கும் விஷயத்தில் கூட தெரியாத நம்பிக்கைகள் அதிகமிருக்கின்றன.

A. B.:—முக்கியமில்லாததை முக்கியமாக கொள்ளும் விபரீதத்திலிருந்து அதாவது மூடநம்பிக்கையிலிருந்து ஒருவன் தன்னை விடுவித்துகொள்வது எவ்வளவோ கஷ்டமாயிருப்பதால் இதை

முதல் ஞான நிஷ்டை பெற்ற பிறகுதான் முற்றும் விடமுடியும். இது மனிதனுடைய சுபாவத்தில் இறுக்கிப் பிடித்து மறைவாய் வேலைசெய்யும் கபடமானத் தன்மை. இதற்கு அடிமைப்பட்டவன் எவனும் விருத்திக்கு வரமுடியாது என்று மாஸ்டர் சொல்லுகிறார். இது ஒரே வீச்சாய்ச் சொல்லும் வாக்கியம். ஆனால் அதில் 'அடிமைப்பட்டவன' எனும் வார்த்தையைக் கவனிக்கவேண்டியது. ஏதோ கொஞ்சம் மூட நம்பிக்கையுள்ளவன் விருத்திக்கு வரமாட்டான் என்று அவர் சொல்லவில்லை. ஆனால் அதற்கு அடிமைப்பட்டவன் விருத்திக்கு வரமுடியாது என்று சொல்லியிருக்கிறார். மூடநம்பிக்கையானது ஜனங்களை பின்னுக்கு இழுத்துப் பிடித்து வைக்கும் ஓர் பெருத்த விஷயம். நல்லவர்களாகவும் பக்தர்களாகவும் பரோபகாரஸ்தர்களாகவும் ஊக்கத்தோடு சிறந்த வாழ்க்கையுள்ளவர்களாகவும் இருக்கும் மகாமனிதர்கள் மூட நம்பிக்கையோடிருக்கின்றார்கள். அவர்களுடைய குலாசார விரதங்கள் கிரியைகள் அவர் செய்யும் சடங்குகள் இவைகளைப் பிரதானமென்று நினைக்கின்றார்கள். ஆனால் இவைகள் கொஞ்சமேனும் முக்கியமல்ல.

இறந்தவர்களுக்காகச் செய்யும் ஓர் முக்கியசடங்கை ஒருதிருஷ்டாந்தமாக எடுத்துப் பார்ப்போம். 'ரோமன் காதோலிக்' இனத்தார் மாண்டவருக்கு ஓர் கூட்டம் கூடி ஜபம் செய்கின்றனர். இந்துக்களும் சிராத்தத்தை அதே நோக்கத்தோடு செய்கின்றார்கள். இவ்விரண்டு கருமங்களும் மாண்டவருக்கு உதவிபுரியும்படியாக ஏற்பட்டவை. இவ்விரண்டும் ஒன்றுக்கொன்று செய்யும் விதத்தில் வேறாக இருந்தும் அவர்களுடைய கோரிக்கையை நிறைவேற்றுகின்றன. என்றாலும் இந்துவாவது அல்லது காதோலிக் கிருஸ்தவனாவது செய்யும் சடங்குகளில் பற்று வைத்திருப்பது மூடநம்பிக்கை. அச்சடங்குகள் செய்யும்போது வைக்கும் நல்ல எண்ணமும் ஊக்கமும், மாண்டவர்களுக்காகப் பொழியும் அன்பும் இவையே முக்கியமானவைகள். இவை கோரிய பலனைத் தருகின்றன. ப்ரேமையோடு கூடிய நல்லெண்ணந்தான், வெகு முக்கியமானது. ஆனால் சடங்குகளாய் இருக்கும் வெளிக்கிரியைகள் முக்கியமானவையல்ல. ஏனெனில் அவைகள் அவர்களுடைய நல்ல எண்ணத்தைக்காட்டும் வெளி நடவடிக்கைகளாக இருப்பதே தவிர முக்கிய மானவையல்ல

வெளிச்சடங்குகள் நீ பிறந்த தேசத்தை ஒட்டி இருக்கின்றன. ஏனெனில் நீ ஒரு மதத்தில், ஒரு வம்சத்தில், ஒரு நாட்டில் பிறந்து வருகின்றாய். இடத்திற்கு தக்கபடி கிரியைகள் இருக்கும். கிரியைகளில் வைக்கும் எல்லா நம்பிக்கையும், வெறும் வெளி ஆசாரங்களில் சித்தி பலனிருக்கிறதென்கிற நம்பிக்கையும் நீ உன்னிடத்திலிருந்து முற்றும் ஒழித்து விடவேண்டும். வெகுநாள் வரையிலும் இந்த நம்பிக்கை வெகு முக்கியமாயும் நல்ல விஷயமாயும் இருந்தது. ஏனெனில் இது ஒன்றுதான் ஜனங்களைச் சோம்பலிலிருந்தும் அக்கரையற்றிருப்பதிலிருந்தும், அஜாக்கிறதையிலிருந்தும் தட்டி எழுப்பிகொண்டிருந்தது இந்த வெளிச் சடங்குகள் கஷ்க தண்டம்போல் ஊன்றுகோலாக விருக்கின்றன. தானாக நடக்கமுடியாதவர்களுக்கு அவைகள் இன்னும் வேண்டியதுதான். ஆனால் அவைகளின்றி நீ நடக்கமுடியுமானால் அவைகளைத் தூர எறிந்துவிடவேண்டும்.

> " ஆகையால், ஒரு கொள்கையைப் பலபேர் வழிபட்டிருப்பதாலும், அல்லது அதை நூற்றாண்டுகளாய் நம்பி வருகிறபடியாலும், அல்லது ஜனங்கள் பூஜிக்கத்தக்க புஸ்தகத்தில் அது எழுதப்பட்டிருப்பதாலும், நீயதை ஏற்றுகொள்ளக்கூடாது ; விஷயத்தை நீயே யோசித்து அது சரிதானா என்பதை நீயே மதிக்கவேண்டும்."

C. W. L.:—இவைகள் மாஸ்டர் குதூமி அவர்களின் வார்த்தைகள். இரண்டாயிரத்து ஐநூறு வருஷங்களுக்குமுன் கௌதம புத்தபகவானும் இவ்வார்த்தைகளையே மொழிந்தனர் அவரிடத்தில் ஜனங்கள்வந்து "அநேக ஆசாரியர்கள் இருக்கின்றார்கள், அநேகவித கொள்கைகள் எங்களுக்கு கொடுக்கப்பட்டு வருகின்றன. அவைகளெல்லாம் நன்றாய் இருக்கிறனவாகக் காண்கின்றன. இவைகளில் மேன்மையானது எதுவென்று எப்படிஅறிவது; இவைகளிலிருந்து நல்லதை எப்படி பிரித்தெடுப்பது" என்று கேட்டதற்கு அவர் கொடுத்த மறுமொழி அங்குத்திர நிக்கியாவில், காலாமா சூத்திரத்தில் அடியில் வருமாறு எழுதியிருக்கிறது.

"எது ஒரு விஷயத்தையும், அதை சும்மா சொன்னதினாலுஞ் சரி, அல்லது பண்டையகாட்களிலிருந்து வந்த ஐதீகமானாலுஞ் சரி, வதந்தியானாலுஞ்சரி, பெரியார்கள் எழுதிவைத்த சாசனமாக விருந்தாலும் சரி, ஏதோ ஒரு சுவாமியின் அருள்வாக்காயிருக்கலாம் என்று நிதானிக்கக் கூடியதானாலுஞ் சரி, தெய்வாதீனமாய் ஓர் முடிவாக நாம் அனுமானித்துக் கொண்டிருந்ததானாலுஞ் சரி, நமது ஆசாரியர்கள். குருக்களாகிய இவர்களுடைய பிரமாணமாக விருந்தாலும் சரி, அதை நம்பக்கூடாது. ஆனால்; சாசனம், கொள்கை, போதனை எதுவும், நம்முடைய சுயபுத்திக்கும் மனச்சாக்ஷிக்கும் ஒத்துவருமானால் அப்போது அதை நம்பவேண்டும், என்று புத்த பகவான் சொல்லி கடைசியாய் "இதற்காகத்தான் நான் சொல்லக் கேட்டதால் நீங்கள் வெறுமையில் நம்பக்கூடாது. ஆனால் உங்கள் மனச்சாக்ஷி அறிய நம்பினீர்களானால் அப்போது அதனபடி தாராள மாய் நடந்துகொள்ளுவீர்களென்று சொன்னார்."

மாஸ்டருடைய சிஷ்யர்களுக்கு நியமிக்கப்படும் அப்பியா சங்களில், தாங்களே வாஸ்தவமாய்த் தெரிந்து கொண்டிருக் கிறது எவ்வளவு என்பதையும், நம்பிக்கையின்மேல் வைத்திருப்பது எவ்வளவு என்பதையும், கண்டறியும் அப்பியாசம் ஒன்று. நம்மு டைய மனதில் இருக்கும் சரக்குகளில் (1) நம்முடைய சொந்த மென்றுத் திடமாய் உரிமையாடுவது எவ்வளவு? (2) விசாரித்துத் தெரிந்தபிறகு மதித்து நம்முடையதாக வைத்திருப்பது எவ்வளவு? (3) மற்றவர்கள் சொன்னவைகளை யோசிக்காமலே ஒத்துக்கொண்டு வைத்திருப்பது எவ்வளவு என்று, சோதிப்பது நல்ல அப்பியாசந் தான். ஒவ்வொருவரும் ஒருதேசத்தில் பிறப்பதோடு ஒரு மதத் தில் பிறந்து வருகிறார்கள். இப்படியேதான் அநேக பெரிய வழக் கங்களிலும் பிறந்து வருகிறார்கள். உதாரணமாக Dinner இராச்சாப் பாட்டுக்கு போகும்போது ஒருவித உடையை உடுப்பது ஒருவழக் கம். முக்கிய மில்லாமலும், சரி, பிழை என்கிற கேள்விக்கு இட மில்லாமலுமிருக்கும் பழக்கத்திற்கு விரோதமாக நடக்க எவருக்கும் இஷ்டமிருக்காது.

A. B.:—அடிக்கடி நமது மனதின் இருப்பை சோதித்து, அதில் (1) அநேகர் நம்பிவருவதால் நீயும் வெறுமையாகவே நம்பு

கின்ற விஷயங்கள் எத்தனை, (2) புராதன நம்பிக்கைகளென நீ நம்பிவரும் விஷயங்கள் எத்தனை, (3)ஏதோ ஒரு பூஜிக்கத்தக்கவேத முதலிய சாஸ்திரங்களில் எழுதி இருப்பதால் நீ நம்பும் விஷயங்கள் எத்தனை என்று கவனிப்பது வெகு பிரயோஜனமான அப்பியாசந் தான். இந்த மூவகை நம்பிக்கைகளையும் பொறுக்கிக் கழித்தபிறகு மீதி எத்தனை இருக்கின்றது என்பதைக் கவனி: அப்போது உன்னுடைய சுய நம்பிக்கைகளாக உண்மையில் ஸ்திரமாயிருப்பது எவ்வளவு என்பதுதெரியும். எனக்குகிடைத்ததுபோல் (Free Thought) சங்கத்தின் அநுபவம் வந்தால் அநுகூலமாயிருக்கும். மதாபிமானத்தோடு உண்மையில் கொள்கைகளைக் கெட்டியாய் பிடித்து வைத்திருப்பாயானால் அவைகளை விடுவது எப்படியிருக்கும் என்பதும், நீ நின்றுகொண்டிருந்த அஸ்திபாரம் உடைந்துக் கடைசியாக விழும் போது உனக்கு எப்படி இருக்கும் என்பதும் அச்சங்கத்தில் சேராதவன் எவனுக்கும் தெரியாது. அது என்னை கொன்றுவிட்டது போலிருந்தது. சில வாரங்கள் வரையில் என்னை படுக்கவைத்து விட்டது. ஆனால் இவ்விதமாய் முற்றிலும் அனுபவித்த பிறகு அவ்விதம் இன்னொருமுறை அனுபவிக்கவேண்டியதென்கிற அவசியமில்லை. ஆகையால் நான் திவ்யஞான சபையில் சேர்ந்தபோது அதன் உண்மையைஉற்று உணர்வால் நிச்சயமென்று அறிந்து கொண்டபோதிலும் அதை என் மனதார கூடியவரையில் சோதித்த பிறகுதான் ஏற்றுகொண்டேன்.

> "ஒரு விஷயத்தை ஆயிரக்கணக்கான ஜனங்கள் ஒத்துக்கொண்டிருக்கினும் அதைப் பற்றி அவர்களுக்கு ஒன்றுமே தெரியாதிருந் தால் அவர்களுடைய அபிப்பிராயம் உபயோக மில்லை என்பதை ஞாபகத்தில்வை."

C. W. L.:—தற்காலத்தி லுள்ளவர்கள் தெரிந்துகொள்ள வெகு கஷ்டமான விஷயம் இது. அறிவீனத்தை மூட்டை மூட்டையாய்க்குவித்து வைத்தால் எப்படியோ அதிலிருந்து அறிவு பிறக்கும். என்று ஜனங்கள் எண்ணுகிறார்கள். ஆனால் அப்படி கிடைக்காது

அறிவீனர்களை வழிநடத்திச் சீர்திருத்தத் தெரிந்தவர்கள் வேண்டிய தாயிருக்கின்றது.

A. B.:—யோசித்துப் பார்த்தால் இப்போது நமக்கிருக்கும் ஏரா ளமான புஸ்தகங்கள் ஒரு விஷயத்தில் பிரதிகூலமாயிருக்கின்றன. இது யோசனையின்றி மேலாக வாசிக்கச் செய்கின்றதால் திடமில் லாத சபல எண்ணத்தைத் தருகின்றது. இதற்காகதான் கொஞ்ச மாய்ப் படிக்கும்படியும், பிறகுவாசித்ததை (குருட்டுப்பாடமாய்)பாரா யணமாயில்லாமல் விஷயத்தின் கருத்தை (தெளிவாய்க் கிரகித்ததை) மீள எடுத்துரைக்கும்படி ஜனங்களுக்கு எப்போதும் புத்திமதி சொல்லிவருகிறேன். எதைப்பற்றி நீ தீரயோசிக்கின்றாயோ அது தான் உண்மையில் உன்னுடையது. நீ கேட்பதையும், வாசிப்ப தையும் யோசித்து, கிரகித்துகொண்டால்தான் அதை உன்னுடைய சொந்தமாக்கி கொள்ளக்கூடும். இல்லாவிடில் எவ்வளவுக்கெவ்வளவு நீ அதிகம் வாசிக்கின்றாயோ அவ்வளவுக்கவ்வளவு விபரீத நம்பிக் கைகள் உனனிடத்தில் அதிகமாகின்றன. உன்னிடத்தில் ஏற் கனவேயிருக்கும் நம்பிக்கைகளோடு இன்னும் அநேகம் சேர்த்து கொண்டே போவாய் இவைகள் ஒன்றிலாவது நிச்சயம் எனகிற ஆதாரபீடமில்லாதிருக்கும்.

சுத்தமாய்க் கணக்கு வைக்கத்தெரியாத ஒருவன் என் கைகீழ் வேலைசெய்து கொண்டிருந்தான். அவன் கணக்குத் தாறுமாறாக எழுதிய போதெல்லாம் கணக்கை சரிப்படுத்திகொள்ளலாம் என்கிற நம்பிக்கையோடு ஒரு புதிய புஸ்தகத்தில் கணக்கை பதியவைப் பான். இவ்விதமாகவே ஜனங்கள் இக்காலத்தில் புதியபுதிய விஷயத் தை எப்போதும் விரும்புகிறார்கள். ஏனெனில் அவர்களிடத்திலி ருக்கும் இலேசான வாசிப்பு நிச்சயமாகவே எவ்வகை திருப்தியை யும் கொடுக்கவில்லை (திருப்தி என்பது எவ்வகையிலுமில்லை).என்னு டைய புத்தகங்களையும் C. W. L. உடைய புத்தகங்களையும்எடுத்து எல்லா இடங்களிலும் அத்தாக்ஷியாக, பிரமாணமாகக் காட்டுகிற நமது மெம்பர்களும் மூட நம்பிக்கை யுடையவர்களே. அவர்கள் எடுத்துக் காட்டிய விஷயம் எவ்வளவு உண்மையானதாக விருந்தபோதிலும் அவை அவர்களுக்கு உண்மையாகவில்லை. ஏனெனில் அவர்கள் அவைகளை கிரகித்திருப்பார்களேயாகில் எங்களை அத்தாக்ஷியாக

அடிக்கடி காட்ட நேர்ந்திராது. நாங்கள் சொன்னதை எவ்விதத்திலாவது எடுத்துக்காட்ட நேரிடுமானால் எங்களது சொற்களை அபிப்பிராயங்களாக எடுத்துச் சொல்ல வேண்டியதே தவிர அவைகளை மற்றவர்கள் நம்பும்படி பலவந்தஞ்செய்ய எத்தனிக்கக் கூடாது. உலகில் ஒரே ஒரு அத்தாக்ஷி தான் இருக்கின்றது. அது அறிவு (ஞானம்)

"மார்க்கத்தில் நடப்பவன் தானாகவே யோசித்து மதிக்க கற்கவேண்டும்; ஏனெனில் மூடநம்பிக்கை என்பது உலகிலுள்ள கனத்த தீங்குகளில் ஒன்று, முற்றிலும் விடுவித்துக் கொள்ளவேண்டிய விலங்குகளில் ஒன்று."

C. W. L.:—விபரீதம் என்பது மார்க்கத்தில் முதல் ஞான தீக்ஷை பெற்றபிறகு நறுக்கி எறியும் (அஞ்ஞானம், சந்தேகம், விபரீதம், என்கிற மூன்று) விலங்குகளில் இது மூன்றாவதா யிருப்பதால் ஓர் பெருத்த கபடமான (நுட்பமான) சுபாவத்தில் ஒட்டியிருக்கும் தன்மை. இதை பாலிபாஷையில் "சீலபத்த பரமாசா" என்பது; அதாவது எவ்வித ஆசார கிருத்தியங்களில் சித்திபலன் இருக்கின்றதாக எண்ணுகிற நம்பிக்கை.

"பிறரைப்பற்றிய எண்ணம் உண்மையா யிருக்க வேண்டும்; அவர்களைப் பற்றி உனக்குத் தெரியாததை நீ நினைக்கக் கூடாது."

C. W. L.:—மற்றவர்களைக் குறித்து நமக்கு உத்தேசமாய்த் தோன்றியதை நினைப்போமானால் அந்த எண்ணம் வெகுவாய் வெறும் மனோபாவனைதான். நமக்கு வெகு நெருங்கினவர்களைப் பற்றியும் நாம் உண்மையாகவே அதிகமாய் அறியமாட்டாம லிருக்கிறோம். எப்போதோ ஒருதடவை பரிசயமுள்ளவனைப் பற்றி இன்னும் கொஞ்சமாய்தான் அறிவோம் என்றாலும் மற்றவர்கள் செய்பவைகளைப்பற்றியும் சொல்பவைகளைப் பற்றியும் அவர்களுடைய எண்ணம் எப்பேர்ப்பட்டதென்று நாமாய் உத்தேசித்து கொள்பவைகளைப்பற்றியும் தெரிந்ததுபோல் சதாவீண் வாயாடி வருகின்றோம். ஆனால் இவைகளில் அநேகம் நல்லகாலம் சுத்தமாய் மெய்யற்றவைகள்.

A. B:—மற்றவர்களைப் பற்றிய அபிப்பிராயங்கள் அநேகமாய் மெய்யற்றவைகள். மற்றவனை உண்மையில் தெரிந்துகொண்டபோது, அதாவது அவனது எண்ணத்தைக் கண்ணூரப் பார்த்தபோது தான், அவனைப்பற்றி வாஸ்தவமாய் நினைக்கக்கூடும். இப்படி அறிந்துகொள்வது அநேகருக்கு அசாத்தியம். என்றாலும் மற்றவர்களைக் குறித்து கெட்டியான அபிப்பிராயங்கள் வைத்திருக்கின்றனர். மற்றவர்களைத் தோஷங்கூறி அவர்களை இரக்கமில்லா வகையில் நினைக்கின்றனர்.

மாஸ்டர் கொஞ்சம் பிறகு சொல்கிறார்:—"மற்றவனுடைய நோக்கம் எப்பேர்ப்பட்டது என்று உத்தேசமாய் சொல்லாதே" அது வெகு சிலாக்கியமான புத்திமதி; இதன்படி உலகினர் நடந்தார்களானால் குறைந்த பக்ஷம் உலகில் இருக்கும் துன்பத்தில் பாதி எடுபட்டுப் போகும். நீ தெரிந்துகொள்ளாத ஒன்றை ஒருவன் செய்தால் அதைத் தெரியாததாகவே விட்டுவிடு; கூடுமான உத்தேசங்களை உண்டுபண்ணூதே. ஒருவன் எதையாவது செய்து கொண்டிருப்பான்; அதன் காரணம் உனக்குத் தெரியாமலிருக்கலாம்; ஆனால் அவனுடைய நோக்கம் எதுவாயிருக்கலாம் என்று கவலைப்பட்டு, சாதாரணமாய் ஒரு தகாததைக் கண்டு பிடித்து, அதை அவன் செயலோடு நீ முடிபோடுகின்றாய்; பிறகு நீயே உத்தேசமாய் உண்டாக்கின பழியை அவன்மேல் போடுகின்றாய். ஜனங்கள் இந்தப்படி தகாத நோக்கங்களை மற்றவன்பேரில் சுமத்துவதால் தோஷங் கூறப்பட்டவனுடைய மனதில் ஏற்கெனவே இருக்கும் தீயகுணத்தை பலப்படுத்தி, இதை அதோடு சேர்த்து விடுகிறார்கள். அல்லது யாதொரு தீயகுணம் அவனிடத்தில் இல்லாவிடில் இதை கொடுத்து உண்டாக்குகிறார்கள். கிருஸ்து பகவான் சொன்ன "தீங்கை எதிர்த்துத் தடுக்காதே" என்றவாக்கியம் இச் சந்தர்ப்பத்தில் ஒத்திருக்கின்றது. தீங்கை எதிர்ப்பதற்காக ஜனங்களுடைய மனதை சோதிப்பது நமது வேலையல்ல. அதை சும்மாவிட்டுவிடு. அது மடிந்துவிடும்.

> "உன்னைப் பற்றி பிறர் எப்போதும் நினைத்துக்கொண் டிருக்கிறார்களென்று நீ பாவித்துக் கொள்ளாதே."

C. W. L:—இது சதா நடந்தேறி வருகிறது; யாரோவொருவன் எதைச்சொன்னாலும், எதைச் செய்தாலும் அது நம்மைப்பற்றி தான் என்று பாவித்துக்கொள்கின்றோம். ஏனெனில் நாம் நம்மைப் பற்றியே எப்போதும் நினைத்துக்கொண் டிருக்கின்றோம்; மற்றவர் களும் நம்மையே நினைப்பதாக பாவிக்கின்றோம். ஆனால் நாம் நம்மைப்பற்றி எப்போதும் சிந்தித்து கொண்டிருக்கிறோ மென்றால், மற்றவர்களும் வெகுவாய் அவர்களைப் பற்றியே நினைத்துக் கொண்டிருப்பார்களல்லவா? நம்மைப்பற்றி நினைக்கமாட்டார்கள் என்று அருத்தங்கொள்வதில் விவேகமிருக்கின்றது. இவர்கள் தாங் களாகவே தங்கள் எண்ணத்தால் செய்த ஓர் கூட்டின் மத்தியிலிருக் கிறார்கள்; இவர்களைச் சுற்றிச் சுற்றி இவர்களுடைய எண்ணங் களும் தாபங்களும் சுழலுகின்றன. இவர்களுக்கெதிர்பட்ட நடவடிக் கைகள் ஒவ்வொன்றைப் பற்றியும் நினைத்துகொண் டிருக்கின்றார் கள். தங்களையே சுற்றிச் சுற்றி வட்டமிட்டுச் சதா மனதில் ஓடிக் கொண் டிருக்கின்றனர்.இவர்கள் இப்படிச் சுற்றி ஓடிக்கொண்டிருப் பதால் மற்றவர்களும் இவர்களையே சுற்றிக்கொண் டிருப்பதாக எண்ணுகிறார்கள். ஆனால் மற்றவர்கள் அப்படி செய்யவில்லை. ஒவ் வொருவனுக்கும் அவனவனுடைய சொந்த வட்டவோட்டம் இருக் கின்றது. சந்தேகமின்றி இதற்கு இடைகுறையாமலே விஷமுள்ள தாயிருக்கலாம். வெகுவாய் மற்றவர்கள் செய்வதிலும், சொல்வதி லும் குற்றங் கொள்ளுகிறவர்களில் பத்தில் ஒன்பதுபேர் இக்கருத் தோடு தான் நிறைந் திருப்பவர்கள்.

"உனக்குத் தீங்கு செய்வதாக நீ நினைக்கும் ஏதோ ஒரு விஷயத்தை ஒருவன் செய்தாலும், அல்லது உன்னைப்பற்றி தான் என்று நீ நினைக் கக்கூடிய ஏதோ ஒன்றைச்சொன்னாலும்,உடனே "அவன் எனக்குக் கெடுதி செய்ய எண்ணினான்" என எண்ணிவிடாதே. அநேகமாய் அவன் உன் னைப்பற்றிச்சற்றும் நினைத்திருக்கவேமாட்டான்; ஏனெனில் ஒவ்வொருவனுக்கும் அவனவனுக் குரிய கஷ்டங்களுண்டு; ஆகவே அவனுடைய

எண்ணங்கள் முக்கியமாய் அவனையே சுற்றிச் சுற்றிச் சுழலுகின்றன. ஒருவன் உன்னை கோபத்தோடு பேசினால் "அவனென்னை வெறுக்கிறான். என்னை வருத்தப்படுத்தப் பார்க்கிறான்" என்று நினையாதே; வெகுவாய் யாரோ அல்லது ஏதோ வொரு விஷயம் அவனைக் கோப மூட்டி யிருக்க லாம், உன்னை சந்திக்க நேரிட்டதும் அவன் கோபத்தை உன்பேரில் திருப்பிக் காட்டுகிறான். அவன் செய்வது மூடத்தனம்; ஏனெனில் கோப மெல்லாம் அறிவீனம்; ஆகையால் அவனை உண்மையில்லாத வகையில் நீ நினைக்கக்கூடாது."

C. W. L:—இது சுத்தமான பொதுஜனசாதாரண தெளிவைப் பொறுத்தது (Commonsense). என்றாலும் எப்போதாவது இதை அநுசரிக்கிறவர்கள் வெகுச் சிலரே. நான் 'சர்ச்சு ஆப் இங்கிலாண்ட்' பாதிரியாயிருந்தபோது எனது சபையிலுள்ள குடியானவர்களுக்கும் வேலையாட்களுக்கும் சாதாரணமாய் பாபகாரியங்களைச் செய்யத் தூண்டும் மயக்கங்களைப்பற்றி ஓர் பிரசங்கம் செய்தேன். ஒருவன் ஏதோ ஒருவகையில் கஷ்டம் வருவித்துகொள்வதை பற்றி விளக்கினேன. முடிந்த உடனே (கூட்டங்கலைந்ததும்) ஓர் குடியானவன் என்னிடம் கடுங்கோபத்தோடு வந்து, என்னை ஏன் சுட்டிப் பிரசங்கம் செய்தீர், அதனுடைய அருத்தம் யாது, என்றுகேட்டான். பரிதாபம்அந்த எளியவன் கேட்ட கேள்வியில் அக்குற்றத்தில் அவன் விழுந்தவனாகத் தன்னைக் காட்டிக்கொண்டான். சொன்ன சமயத்தில் அவன் குற்றஞ் செய்திருப்பதாக நான் சற்றும் நினைக்கவேயில்லை. என்றாலும் அது குற்றமுள்ள நெஞ்சை உறுத்திவிட்டது. நான் எடுத்துச் சொல்லவே அது அவனைப் பதியப் பாய்ந்துவிட்டது. நான் பிரசங்கம் செய்ததில் அவனை நிச்சயமாய் சுட்டினதாக இன்றைய வரையில் அவன் எண்ணிக்கொண் டிருக்கிறான் என்பதற்கு ஐயம் இல்லை.

நாமெல்லோரும் இருக்கும் இந்த சந்தைக் கூட்டவாழ்வில் தடையில்லாது நிஷ்டூரங்கள் நேரிடத்தான் செய்யும்; அவைகளை வெகுப்பிரமாதமாகவாவது அல்லது வெகு முக்கியமாகவாவது எடுக்கக்கூடாது. ஒருபெரிய பட்டணத் தெருவில் நாம் நடந்துபோவோமானல் அங்கே ஆயிரக்கணக்கான ஜனங்கள், ஒவ்வொருவரும் அவரவருடைய சொந்த அலுவலேயேகவனித்து மற்றவர்களைக் கொஞ்சமேனும் கவனிக்காது நெட்டி வழிசெய்துகொண்டு போகின்றதைப் பார்க்கலாம். ஒருவருக்கொருவர் முட்டிக்கொள்ளும்படி கட்டாயம் நேரிடுகிறது. ஆனல் இதை நிந்தையாகக்கொள்ள ஒருவருக்கும் தோன்றுகிறதில்லை. அப்படி நிஷ்டூரப்பட்டால் வெட்கக்கேடாயிருக்கும். இவ்விதமே எண்ணங்களிலும், தாபங்களிலும் கட்டாயம்உண்டாகும். பெருத்த கூட்டம் எவ்விடமிருக்கின்றதோ அவ்விடத்திலெல்லாம் மனஸ்தாப முட்டுகளும் தாபங்களாகிய இடிகளும கட்டாயம் உண்டாகும். இதையும் சரியாய் அதே மனதோடு நோக்கி நம்முடைய (காலிலிருக்கும் ஆணியைமிதித்ததுபோல்) மனஆணியைத் தெரியாமல் மிதித்து விட்டானே தவிர வேணுமென்று மிதிக்கவில்லை. நம்மைப்பற்றி நினைக்கவேயில்லை. அவன தன் சொந்த அலுவலைக் கவனித்துத் தன் வழியேபோய்க்கொண் டிருக்கின்றுன என்று அறிந்துகொள்ள வேண்டும். இச்சிறு அருவருப்புகளை தெருவில் இடிபடுவதைவிடப் பிரமாதமாக எடுத்துக்கொள்ள கூடாது.

அவரவர் அவரவர் காரியங்களில் ஆழ்ந்திருக்கின்றுர்கள் என்கிற நோக்கத்தோடு நாம் இருப்பதும் தவிர நம்முடைய அலுவலில் முட்டிகொள்ளும்போ தெல்லாம் வாழ்வை வெகு லகுவாய்ச்செய்யும் சிறு சிறு உபசார மரியாதைகளை மறக்காமல் கொடுக்கக் கண்ணுயிருக்க வேண்டும்.

உபசார மரியாதைகளாலும், சாந்தத்தன்மையாலும் எப்போதும் களிப்பா யிருப்பதாலும், உலகினரிலிருந்து குறித்துக் கொள்ளக் கூடிய வகையில் (Theosophist) தியாசபிஸ்டா யிருப்பவர்களிருக்கவேண்டும். அமரிக்கையோ டிரு; சாந்தமாக இரு; ஒருவன் எவ்வளவு அவசரத்தோ டிருந்தபோதிலும் நேசத்தோடும் சாந்தத்தோடும் விவகரிக்க நேரமிருக்கின்றது. சந்தை கூட்டமாய் இருக்கும் இக்காலங்களில் சாதாரணமாய் நாடிகளின் களைப்பால் உண்டா

கும் ஆத்திர (பதட்ட) தாப அலைகள் நம்முடையகாலை வாரிவிட இடங்கொடுக்கக் கூடாது.

A. B:—மாஸ்டர் இவ்விடம் கொடுக்கும் குறிப்பு மிக விவேக முள்ளது. நீ உன்னைப்பற்றியே நினைத்துக்கொண் டிருக்கிறதனால் ஒவ்வொருவரும் உன்னைத்தான் நினைத்துக்கொண் டிருப்பதாக நினைக்காதே. மற்றவர்களும் அவரவர்களைத் தான நினைத்துக் கொண்டிருக்கிறார்களே தவிர உனனைப்பற்றியல்ல.நீ உன்னுடைய காரியங்களில் கவனித்திருப்பதுபோல் அவர்களும் தங்களுடைய தில் கருத்தாயிருக்கின்றனர். இக்கருத்தைக்கொண்டு ஜனங்கள் அநு சரித்தார்களானால் தேசத்தாருடைய சுகம் மெத்த அதிகரித்துவரும். சந்தடியோடு அவசரமும் கலந்த வாழ்க்கையில் எவனாவது ஒருவன் உனனோடு இடிபட்டால் அவன உன்னை துன்பப்படுத்தக் கருதி னன் எனறாவது, எவவகையிலாவது கெடுதி செய்யவேணும் என் கிற நோக்கம் வைத்திருப்பதாகவாவது நினைக்காதே.அவன் உனக்குக் கெடுதிசெய்யக் கருதினன் என்பது நிச்சயமாய்த் தெரிந்தாலொழிய அதற்கு மாறான நல்லதை நினைப்பது மிக்க நல்லது.

ஒருவன் உனனை கோபத்தோடு பேசினதாக வைத்துகொள் வோம். அவனபேரில் தவறான அபிப்பிராயத்தைச் சாட்டாமலும், இன்னும் கோபித்துக்கொள்ளாமலு மிருக்க அப்போது நீ ஞாபகப் படுத்திகொண்டால் உனக்குத் தன்னை அடக்கியாளும் திறமை சீக்கி ரம் விருத்திக்கு வரக்கூடும். சாதாரணமாய் ஜனங்கள் இதைகோபித் துக்கொண்ட பிறகு நினைத்துக்கொள்கிறார்கள். ஒருவன் தன்னை அடக்கியிருந்தால் கோபத்தைக் காட்டமாட்டான். இன்னும் அவன் முற்றும் அடக்கி ஆண்டிருந்தால் அவனுக்குக் கோபமே வராது. மற் றவனிடத்தில் தப்பிதமிருந்தாலும் முடிவாய் பார்க்கில் அது அவனு டைய திடக்குறைவு, மேலும் குப்தமார்க்கத்தில் வரப்பட்டவன் எவனும் மற்றவர்களுடைய குறைகளைப் பொறுத்துப் பெருந் தனமையாயிருக்கக் கவனிக்கவேண்டும். கோபவார்த்தையும் ஆத்தி ரத்தோடும் பதட்டத்தோடும் வரும் பதில் சொல்லும் அநேகமாய் அதைச்சொல்லுபவன் ஏதோ ஒரு கஷ்டத்தாலோ மனவியாகூலத் தாலோ பிடிபட்டு வெகு உக்கிரத்தோடிருப்பதாகவும்,மேலும் அவன் அதைச் சமாளித்துக் கோப சின்னங்களை அடக்கமுடியாதிருப்பதாக

வும், அதன் ஆயாசத்தைத் தாங்க அவ்வளவு பலசாலியல்லவென்றும் காட்டுவதைக் கவனிக்கவேண்டும். அவனுடைய நாடி நரம்புகள் (விறைப்புடன்) இழுத்து அதிக மெட்டில் மீட்டிகொண்டிருக்கிறது. ஆகையால் தான் அவன் அவனுக்குத் தோன்றியபடி ஆடுகிறான்.

மாஸ்டர் அவர்கள் சொல்லுவதுபோல் அவன் அறிவீனத்தனமாய் செய்கிறான் என்பது உண்மைதான். ஆகையால் நாம் அவனுக்கு விட்டுக் கொடுக்கவேண்டியது அவசியம். ஜனங்களுக்கு உண்டாகும் அநேகவித சிற்சிறு கஷ்டங்கள் இவ்வகையில் தான் வருகின்றன. கடினமான பிரயாசை ஒருவனுக்கு இருந்தால் அது அவனை தொட்டதற்கெல்லாம் குற்றம் கொள்ளச் செய்யும். எத்தனைவித கஷ்டங்கள் உலகிலிருப்பதை யோசித்துப்பார். விதவிதமான கஷ்டங்கள் இடைவிடாது ஜனங்களை நெருக்கி வியாகுலப்படுத்துகின்றன. நமது சுற்றிலும் உள்ளவர்களுடைய கஷ்டம் நமக்குத் தெரியாது. ஏனெனில் நிச்சயமாய் அறிவுள்ளவன் எவனும் தனது கஷ்டத்தை ஊரார் அறிய சொல்லிக்கொண்டுத் திரியமாட்டான். இது மரியாதைக்கு குறைவானதால் சொல்லுகிறதில்லை. ஆனால் இவைகள் இருப்பதாக கவனித்து அவைகளுக்காக விட்டு கொடுத்தால் மாஸ்டர் இந்தப் போதனையால் குறிக்கும் பூரண சாந்தத்தை நாம் அடையக்கூடும்.

> " குருநாதனுடைய சிஷ்யனாகிவர உனக்கு பாக்கியம் கிடைத்தால், அப்போது உனது எண்ணம் மெய்மையி லிருக்கின்றதா என எப்போதும் தெரிந்துகொள்ள அவருடையதுடன் வைத்துப் பார்க்க முடியும். சிஷ்யன் குருநாதருடன் ஒருமனப்பட் டிருக்கிறபடியால் தன் எண்ணம் சரிதானாவென்பதை உடனே தெரிந்து கொள்ள குருநாதனுடைய எண்ணத்துடன் வைத்தால போதும். ஒத்திராவிடில் அது பிழை; சிஷ்யன் அதை யுடனே மாற்றி கொள்கிறான்; ஏனெனில்

குருநாதன் எல்லாந் தெரிந்தவராதலால் அவ
ரெண்ணம் பரிபூரணமானது.''

A. B:—அங்கீகரிக்கப்பெற்ற சீடன் எப்போதும் தனது எண்ணத்தை மாஸ்டருடையதோடு வைத்து சோதித்துகொள்ள முடியும். மாறாக தென்பட்டால் தன்னெண்ணத்தைப் பிழையென தெரிந்துகொள்கிறான். பூலோக உவமையைக்கொண்டு பார்த்தால் அது சங்கீதத்தில் அபசுவரம் பாடுவதுபோலிருக்கும். சீடன் சோதிக்கும்போது மாஸ்டர்களைக் கவனிக்கும்படி செய்ய வேண்டிய அவசியமில்லை. அவன் தன் எண்ணத்தை மாஸ்டருடையதோடு சும்மா (வெறுமையாக) வைக்கின்றான் சரியென ஒத்து சுவரம் பேசாவிடில் அதை உடனே தள்ளிவிட்டு அந்த க்ஷணமே அவனுடைய எண்ணத்தை மாஸ்டருடையதுடன் (ஒற்றுமைப்பட) ஒத்திருக்கச் செய்து கொள்ளுகிறான். அதைப் பற்றி அவன் நியாயமாடுகிறதில்லை; அல்லது எப்படியாயினும் தன்னுடைய எண்ணம் சரியாக இருக்கும் என்று நினைக்கிறதில்லை. ஏனெனில் பிழையாயிருப்பது உடனே விளங்குகிறது. அங்கீகரிக்காத சீடர்கள் இதைச் சுத்தமாய் செய்யமுடியாது. ஆதலால் அது அநேக அத்தியாபேக்ஷையுள்ளவர்களுக்குக் கஷ்டங் கொடுக்கின்றது. சீடனுடைய மனது மாஸ்டருடையதுடன் ஒற்றுமைப்பட்டிருக்கிறது; ஆதலால் ஒருசமயம் சிஷ்யனுக்கு வாத்தகாத எண்ணங்கள் வந்தால் அவைகள் மாஸ்டர் மனதைத் தாக்காமல் இருக்க ஓர் அணையை அவர் அடிக்கடி கட்டும்படியாக வரும். அப்பேர்ப்பட்ட சிஷ்யனை அவர் அங்கீகரிக்கமாட்டார்.

C.W.L:—சீடன் தன்னுடைய மாஸ்டருடன் ஒருமைபட்டிருப்பதாகச் சொல்லியிருக்கிறது. இது ஒருவிதத்தில் உண்மைதான்; இதை மாஸ்டர் தான் பூரணமாய் அறிவார். சீடனும் அறிவான், ஆனால் பூரணமாய் தெரியாது. அந்த ஒருமைபாட்டின் தீவிரத்தை அவ்வித சம்பந்தமில்லாதவர்கள் அறியமாட்டார்கள் சீடன், மாஸ்டருடைய எண்ணத்தினது புறம்பிலுள்ள கிளையாக ஏற்பட்டிருக்கிறான். இவன் அவரோடுசேர்ந்திருக்கும் சம்பந்தம் எப்படியிருக்கிறது என்றால் கீழ் தேகான்மா, மேல் ஜீவான

மாவைச் சேரும் வகையிலிருக்கின்றது. ஜீவான்மா தனது சிறு பகுதியைக் கீழ்லோக நிலையில் செலுத்துகின்றது; இப்படி சொல்வதும் முற்றும் சரியல்ல. என்றாலும் பிரதிபிம்பிக்கின்றது என்கிறதைவிட இது மேலானகருத்து. இங்கே தனக்கு உன்னதமான ஸ்தூல, காமமய, மனோமய தேகங்களிலிருந்தபோதிலும் அவைகள் தன் கருத்துகளை வெகு அறைகுறையாய் வெளிப்படுத்துகின்றன. இப்பூவுலகில் நமக்கிருக்கும் அநேகவித குறைகளைப்பற்றி நாம் வியாகூலப்படும்போது இது (இப்படியிருப்பது) ஓர் ஆறுதலாயிருக்கவேண்டும். "எப்படி யிருந்தபோதிலும் ஜீவான்மாவுக்கு இதற்குமேல் தெரியும். ஆகையால் சஞ்சலப்படவேண்டிய அவசியமில்லை. நான் மேல் லோகங்களில் எப்படி சுத்தமாய் விவகரிக்கின்றேனோ அப்படி விவகரிக்கக் கீழே எனனுடைய பகுதியை அதிகமாகச் செலுத்தவேண்டியதா யிருக்கின்றது. அதிகப்படுத்தினால் அப்போது எனது குறைகள் குறைந்துபோகும்" என்றுசொல்லிக்கொள்ள வேண்டும்.

இவ்விதமாகவே சீடன் தனது மாஸ்டருடனிருக்கும் ஒப்புமையை வெறுமையாக காட்டுகின்றது மாத்திரம் இல்லை. உண்மைக்கருத்தின்படி அவனும் மாஸ்டர்தான்; ஆனால் அநேக நிர்ப்பந்தங்களுக்குட்பட்ட மாஸ்டர். கீழ்லோகங்களிருக்கும் நிர்ப்பந்தங்கள் மாத்திரமல்ல. மற்று சீடனுடைய தேகான்மா முழுவதும் அடங்கிப்போகாததால் இதனுடைய நிர்ப்பந்தத்திற்கும் பந்தப்பட்டிருக்கின்றவன். சீடனுடைய ஜீவான்மா கீழ் தேகங்களை முற்றும் அடக்கி, அவைகளை தன் பிரதிநிதிகளாகவும் தன் கருத்துகளை விளக்குபவைகளாகவும் ஆண்டுவரப்பெற்றிருந்தால் அப்போது அவன் மாஸ்டருடைய தன்மையை அதிகமாக விளக்கி காட்டமுடியும். என்றாலும் அப்போது கூட அவனது பிரபையின் (Aura) பரப்பை கொண்டு வரம்பு ஏற்படுகின்றது. ஏனெனில் சீடன் மாஸ்டரை விட இளைய ஜீவான்மாவாகையினால் குறைவாகத்தான் காட்டமுடியும். என்றாலும் எவ்விதமான எண்ணங்கள் சீடனிடத்தில் இருந்தபோதிலும் இவைகளெல்லாம் மாஸ்டர்களுடைய காமமய, மனோமய தேகங்களிலு மிருக்கச் செய்யும். இக்காரணத்தை ஒரு பகுதியாகக்கொண்டு சீடர்களைச்சோதிக்கும்பருவமென்று ஏற்படுத்தி

இருக்கிறது அப்படி சோதித்துவரும் பருவத்தில் சீஷனுடைய எண்ணங்கள், தாபவிகாரங்கள், இவைகளை எல்லாம் பிரதிபிம்பித்து காட்டும் ஓர் மாயாரூபத்தை அவனைப்போல் உண்டாக்கி அதை அவர் கண்பார்வையில் வைத்திருப்பார். இனிமேல் சிஷியனாக அங்கீகரிக்க வேண்டியிருப்பதால் இவனுடைய எண்ணங்கள், உணர்ச்சிகள் எப்பேர்ப்பட்டவை என்று அவர் திட்டமாய்த் தெரிந்துகொள்ள வேண்டியதா யிருக்கின்றது. ஏனெனில் அப் படிக்கில்லாவிடில் சிஷியனாக எடுத்தபிறகு இவர் தன் வேலையில் கவனமாயிருக்கும் போதெல்லாம் சிஷியனுடைய தகாத எண்ணங் களும், தாபங்களும் மாஸ்டருடைய காமமய, மனோமய தேகங்களில் புகுந்து அடிக்கடி அவருடைய கவனத்தை கலைக்கும். சிஷியனிடத் தில் தகாத எண்ணங்களும் தாபங்களும் அநேகமாய் இல்லை என்று வெகுகாலம் பார்த்து சோதித்த பிறகு தான் அவனை அங்கீகரித் துத் தன்னில் ஓர் பாகமாக ஆக்கிக் கொள்வார்.

அப்போது கூட மாஸ்டர் தனனுடைய மனதிலிருந்து சிஷியனுடைய மனதைப் பிரித்துத் தடுக்கும் உபாயம் வைத்திருக் கிறார். இவருக்கு தடுக்ககூடாது என்கிற கருத்திருந்தாலும் இங்கே கீழ் உலகிலிருக்கும் சிஷியராகிய நாம் இன்னும் தவறமாட் டாதவர்களல்ல; மேலும் வரத்தகாத ஏதோ ஒரு நினைப்பும் அல்லது உணர்ச்சியும் நமக்கு அடிக்கடி வர நேரிடும். மாஸ்டர்கள் அப்பேர்ப்பட்டதை வேண்டுவதில்லை ஆதலால் அவர் அதை மெது வாய்த்தனனிடத்து வாராதபடி அணையைக்கட்டி தடுத்துவிலக்குவார். இப்படி தடுப்பதைக்கூட விடும்படியான ஒரு பருவம் முன்னுக்கு இருக்கினறது. அதாவது சிஷியனைத் தன் "சேயனாக" அவர் எடுத்த பிறகு தடுப்பதில்லை. ஆனால் தடுக்கக்கூடியது யாதும் சிஷியனிடத் தில் இல்லையென்று நிச்சயப்பட்ட பிறகு தான் எடுப்பார்.

சீடனுக்குத்தன் குருநாதனோடு இவ்விதமாய் நெருங்கியசம்பந்த மிருப்பதால் அவன் தன்னுடைய எண்ணத்தை மாஸ்டருடைய எண்ணத்தோடு வைத்து சரிபார்க்க முடியும். மாஸ்டரை கவனிக் கும்படி செய்யவேண்டிய அவசியம் சற்றுமேயில்லை. தான் கவ னித்திருக்கும் விஷயத்தை பற்றி அவருடைய அபிப்பிராயத்தை

சிஷியன் கேட்பதல்ல. அதைப்பற்றி மாஸ்டருடைய மனதில் எப்படி யிருக்கும் என்பதை (மாஸ்டர் மனதிலிருக்கும் கருத்தை) கண்டறிய தான் ஒருமைப்பட்டிருக்கும் மனதின் வழியேபோய் எட்டிப்பார்க்கிறான். சிஷியன் செய்வதெப்படி என்று நீ கேட்கக் கூடும்? ஒற்றுமையின் அநுபவம் உள்ள அளவிற்குத் தக்கபடி வழிகள் அநேகம் உள. அவன் அவனது மாஸ்டருடைய உருவத்தை மனக்கண்ணால் பார்க்கத்தெரியுமளவு உருவேற்றுவான்; பிறகு தன்னால் கூடிய பலத்தோடு அதனுள் நுழைந்து தனதெண்ணத்தை நினைத்து அதில் ஏதாவது கொஞ்சம் முரண் அல்லது அபசுவரம் இருக்கிறதாவென்று பார்ப்பான். இருக்கும் பக்ஷத்தில் உடனே எண்ணத்தை மாற்றிவிடுவான்.

இவ்விடத்தில் குப்த நோக்கத்திற்கும் உலக நோக்கத்திற்கும் அதிக வித்தியாசமா யிருக்கின்றது. உலகில் உன்னுடைய அபிப்பிராயத்திற்கும் மற்றவனுடையதற்கும் ஏதாவது வித்தியாசம் ஏற்பட்டால் உடனே நீ உன்னுடையதை சிலாக்கியமாக தூக்கி வாதாடி அதை சரி என்று நிரூபிக்க எத்தனிப்பாய்; குப்தவழியில் நாங்கள் விவாதம் செய்கிறதில்லை. மேல்படியிலுள்ளவர் எங்களைவிட அதிகமாய் அறிவார்களென்று எங்களுக்குத் தெரியும். அவருடைய அபிப்பிராயத்திற்கு ஒத்துக் கொள்ளுகிறோம். மாஸ்டர்களுடைய கருத்திற்கு விரோதமாக ஒரு நிமிஷமாவது நினைக்க எங்களுக்குத் தோன்றாது. ஏனெனில், அவரிடத்தில் இருப்பது அபிப்பிராயங்கள் அல்ல; மற்று எல்லாம் அறிவு; அவர் நமக்கு தெரியாத வழிகளில் எவ்வகை சமாசாரங்களையும் அறியக்கூடியவர் என்று எங்களுக்குத் தெரியும். ஆதலால் அவர் பேசுவது என்னவென்று அவருக்குத் தெரியும். அவருடைய அபிப்பிராயம் நம்முடையதைவிட மிக்க விசாலமான அறிவைப் பொருந்தியது. அதற்குவேண்டிய காரணங்களை பிற்பாடுகண்டுகொள்ளலாம். அது வேறு காரியம். ஆனால் இதன் நடுவில் நாங்கள் அதை எதிர்த்துப் பேசுவதில்லை அவ்விதம் செய்யவும் மனம்வராது. சீடன் தனது எண்ணத்தை மாஸ்டர்களுடையதோடு வைக்கும்போது நியாயமாடுவதில்லை. உன்னிடமிருக்கும் வீணை அபசுவரம் பேசினால் இது ஒரு வேளை

நல்ல சுருதியாய் இருக்கலாம் என்று விவாதம் செய்யமாட்டாய். நீ அதை சுருதி கூட்டி சரிபடுத்துவாயல்லவா?

குப்த உலகில் இருக்கும் நாங்கள் தோஷம் கூறிக்கொண்டிருக்கிறதில்லை. வெள்ளியம்பல திருக்கூட்டத்திற்காக உழைப்பவர் எவரும் தங்களால் இயன்றளவு முயர்ச்சித்து வருவதாக நாங்கள் எடுத்துக்கொள்ளுகிறோம். மேலும் சிஷியன் அவனால் கூடியதை செய்வானானால் பிறகு அவன் தன் சொந்த மாஸ்டரிடத்தில் சிஷியனாக விருக்கும் முறையில் நிற்பதும் தவறுவதும் அவரைப் பொறுத்தது; நம்மைப்பொறுத்ததல்ல. ஏதோ ஓர் குறையை நாம் பார்த்தோமானால் "இவ்விதம் செய்தால் ஒருவேளை கொஞ்சம் நல்லதாய் இருக்கிறதா பார்" என்று நம்மால் கூடிய மரியாதையுடன் சில சமயங்களில் நினைப்பூட்டலாம். மற்றவர்களின்வருத்தத்தையும் சங்கடத்தையும் சற்றும் அறியாமலே அவர்களை கண்மூடி கண்டனம் செய்வது குப்த மார்க்கத்திலுள்ள வர்களுக்காவது அல்லது அவ்வழியில் வருபவர்களுக்காவது முற்றிலும் ஒவ்வாதது. அவ்வழியில் நாங்கள் போவதில்லை. அது பிழை என்று கருதுகிறோம்.

மார்க்கத்துக்குவர உண்மையில் வாஞ்சையுள்ளவர்கள் இதைக் குறித்து மாஸ்டர்களுடைய சிஷியர்கள் அனுசரிக்கும் வழிகளைத் தொடர்ந்து பிடித்து ஒழுகிவருவது நல்லது. தத்தம் வேலையை செய்து கொண்டிருப்பவனை இப்பேர்ப்பட்டவன், அப்பேர்ப்பட்டவன் என்று சொல்லத் தலைகீழாக போகக்கூடாது. அநேகர் அவரவர் நோக்கப்படிக் கூடியவரையில் உன்னதமான வேலையை செய்து கொண்டு வருகிறார்கள். நமக்கு அவர்களைவிட மேலான நோக்கம் இருக்கக்கூடும். எப்படியானாலும் அவர்கள் அறிந்தவண்ணம் அவர்களால் செய்யமுடியுமேதவிர மற்றபடி நமக்குத் தெரிந்தபடி அவர்களால் செய்யமுடியாது. உதாரணமாக நமது சொசைடியில் ஏதோ ஒரு அலுவலைப்பார்க்க ஒரு அதிகாரியை ஏற்படுத்தியபோது அவனை அவன் வழியேபோக அவனுக்கு சுதந்திரத்தை நாம் கொடுக்கவேண்டியது. அவன் நாளடைவில் வேலையை திருப்திகரமாக நடக்காத பக்ஷத்தில் அவ்வேலையை இன்னொருவனுக்கு கொடுக்கலாம். என்றாலும் இதற்கு இடையில் அவனை கஷ்டப்படுத்-

தப்படாது. அவனுக்கிருக்கும் அனுபவத்தை அவன் காட்டவும் அவன் மனதிலிருக்கும் கருத்துகளை அவன் பிரயோகிக்கவும் அவனுக்கு ஒரு சந்தர்ப்பம் கொடுக்கவேண்டியது. வேலையில் தலையிடுவது எப்போதும் கெட்ட விஷயம்.

குற்றம் கூறும் மனநிலையோடு எப்போதுமிருப்பது, அதாவது சதா சொத்தை, சொள்ளைகளுக்கு கண்ணோட்டமாயும் எப்போதும் தப்பிதங்களை கண்டுபிடிக்க எத்தனிப்பதும் வெகு பொல்லாத குணம். குப்தமார்க்கத்திற்கு உகந்தவழி இதுவல்ல. "கண்டனஞ் செய்யாமலிருக்க என்னால் முடியாது, அது என் சுபாவம்" என்று ஜனங்கள் அடிக்கடி சொல்லக் கேட்கிறோம். அது உனக்குச் சுபாவமாய் இருந்தால் வெகு கெட்ட சுபாவம். அதை ஒழிக்கபிரயத்தினப்படுவது மிகவும் நல்லது. ஒருவிஷயத்தை சுபாவம, மனுஷீகம், என்று நீ சொல்லுகிறபோது அதை சாதாரண ஜனங்கள் செய்யும் வழக்கமென்று அருத்தம் கொள்கிறாய். ஆனால் உண்மையாய் தன்னை அடக்கியாள பிரயத்தினப்படுகிறவனானால் அவன் சாதாரணமாய் இருப்பவர்களைவிட கொஞ்சம் மேன்மையாகவிருக்க எத்தனித்திருக்கிறவன். நம்முடைய சுபாவங்களை மாற்றவேண்டி நாம் இவ்விடமிருக்கின்றோம். இதில் இறுமாப்பு என்பது இருக்கத் தகாது. சாதாரண ஜனங்களை சீர்தூக்கி ஒத்தாசை செய்ய வாஞ்சையுடையவன் சாதாரணமானவர்களைவிட மேலுக்கு வர பிரயத்தினப்பட்டுக் கொண்டிருக்கவேண்டும். அதே படியில் அல்லது அதற்கு கீழ்படியில் இருந்துகொண்டு மேல்படிக்கு கொண்டு போக உதவிபுரிய இயலாது. எவனொருவன் உதவிசெய்ய இச்சிக்கிறானோ அவன் கெட்ட வழக்கமாகிய கண்டனம் செய்வதை விட்டுவிட வேண்டியது.

சில சமயங்களில் "உங்களுடைய ஜீவான்மாவுக்கு குறுக்கே நீங்கள் போகாமல் அதற்கு வழிவிடுங்கள். தன்னால் இயன்றமட்டில் செய்ய அதற்கு சந்தர்ப்பங்கொடுங்கள். ஜீவான்மா சுலபமாய் செய்யக்கூடிய விஷயத்திலும், செய்யவிரும்பும் விஷயத்திலும் நீங்கள் உங்களுடைய தேகான்மாவை (Personality) குறுக்கே மறுக்க விடுகின்றீர்கள்" என்று ஜனங்களுக்குச் சொல்லக்கூடும். என்னால்

விடாமலிருக்கமுடியாது என்று எவரும் சொல்லமாட்டார்கள். நீ "என்னால் முடியாது" என்று சொல்வாயானால் அவ்விஷயத்தை முன்னாலேயே மதித்து முடியாமல் போவதற்கு நீயே முடிபோட்டு கொண்டாய். அப்படி நினைப்பதை விட்டு, "இவ்விஷயத்தைச் செய்யமுடியும், நான் செய்வேன்" எனகிற எண்ணத்தை உரு வேத்திக்கொள்; இப்படி செய்தால் அவ்விஷயம் அப்போதே பாதி முடிந்துவிட்டது. ஜனங்கள் முயற்சியில் அடிக்கடி தேறுகிறதில்லை. இது வெகு சாதாரணம், என்றாலும் அவர்கள் அதைவிடாது முயற்சித்தபோது அனுபவ சாமர்த்தியம் பெருகிக்கொண்டிருக்கும் இது (நாளடைவில்) ஒரு நாளைக்கு நிறைவேறிவர கைகூட்டி கொடுக்கும். கைகூடாதபோதெல்லாம் "எல்லாம் போய்விட்டதே" என்று நினைக்கக்கூடாது ஏனெனில் சாமர்த்தியக் குறைவால் அது உடனே கைகூடாவிட்டாலும் அதனால்கிடைத்த அனுபவம் நமக்கு கெட்டிலாபம். இப்படிக்கு அனுபவத்தை கொஞ்சம் கொஞ்மாய் சேர்த்துக்கொண்டு போவோமானால் நம்முடைய முயற்சி நிறைவேற ஒருசமயம் வந்தேதீரும்.

இவ்விரண்டு நோக்கங்களுக்கு இடையில் பாதாளம் போன்ற வித்தியாச மிருக்கின்றது. அதாவது உட்கார்ந்து சஞ்சலப்படுவது ஒன்று, எழுந்து ஏதோ ஒன்றை செய்துவருவது மற்றொன்று. இவ்விரண்டு நோக்கங்களை கொண்டு உலகினரை இருவகையாகப் பிரித்திருப்பதாகச் சொல்லியிருக்கிறது. எதையாவது ஒன்றை கைக்கொண்டு இருப்பவர்கள் என்றும்; சும்மா உட்கார்ந்து கொண்டு இதை என் இப்படிச் செய்யவில்லை அப்படிச் செய்யவில்லை என்று சொல்லிக் கொண்டிருப்பவர்கள் என்றும், ஜனங்களை பிரித்திருக்கிறது. நாம் முதல் சொல்லியவருடன் சேர்ந்திருக்க வேண்டும். தம்மால் செய்ய ஒரு விரலைக்கூட நீட்டாதவர்கள்என்ன சொன்னபோதிலும் கொஞ்சமேனும் நாம் கவனிக்கக்கூடாது.

" இன்னம் அவரால் அங்கீகரிக்கப்படாதவர்கள் இப்படி சரிவரச் செய்ய முடியாது; ஆனால் "இதைப்பற்றி குருநாதன் எம்மாதிரி நினைப்பார் இந்த சந்தர்ப்பத்தில் குருநாதன் எவ்

விதம் சொல்லுவார், அல்லது செய்வார்'' என்று அடிக்கடி யோசிக்க நிதானித்தார்களானால் அவர்களும் மெத்த உதவி பெறக்கூடும். ஏனெனில் குருநாதன் இதைச் செய்வார் சொல்லுவார், நினைப்பார் என்று உன் மனதிற்குப் படாததை ஒருபோதும் நீ செய்யக்கூடாது, சொல்லக்கூடாது, நினைக்கக் கூடாது. வாக்கிலும் நீ உண்மையா யிருக்கவேண்டும். வார்த்தைகளில் சங்கதி உள்ளவாறு, மிகைபடாது இருக்கவேண்டும்.''

C. W. L.:—மாஸ்டர்கள் நினைக்கக்கூடாததை நினைக்காமலும் அவர்சொல்லக்கூடாததை சொல்லாமலும், அவாசெய்யக்கூடாததை செய்யாமலும் எப்போதும் இருப்போமானால் நம்முடைய வாழ்க்கைகளைத்திருத்தவேண்டிய அவசியம் அதிகமிருக்காது. அவர் எவ்விதம் நினைக்கின்றார், சொல்வார், செய்வார் என்று நாம் நினைப்பதில் ஒருவேளை ஏதோ கொஞ்சம் பிசகு வரக்கூடும்; என்றாலும் முடிவாய்ப் பார்க்கில் அது நம்முடைய வாழ்வை அற்புதமானபடி சுத்தமாக்கி அவருக்கு அருகில் கொண்டு போய்விடும். ''நான் நிறுத்தி நிறுத்தி நினைப்பேனானால் என்னால் ஒன்றும் சொல்லமுடியாதே'' என்று அநேகர் சொல்லுவார்கள் என்பதற்குச் சந்தேகமில்லை. அவர்கள் அப்படிச் சொல்லாமல் மௌனம் சாதிப்பாராகில் உலகம் துர்க்கதியடையப் போவதில்லை. ஏனெனில் அவர்கள் சொல்லப்பட்ட வார்த்தைகள் சமயானுசாரப்படி உபயோகமுள்ளவைகளல்ல. ஒருவன் ஒவ்வொரு தரமும் பேசுவதற்கு முன் நான் சொல்லப்போகிறதை மாஸ்டர் சொல்லுவாரா என்று கண்டிதமாய் யோசிக்கத் துடங்குவானானால் அவன் வெகு கொஞ்சமாய்த்தான் பேசுவான். எண்ணத்தை மாஸ்டருடைய மனதோடு ஒத்துப்பார்ப்பது முதலில் மெதுவாகவிருக்கும்; ஆனால் சீக்கிரத்தில் வழக்கத்திற்கு வந்துவிடும் பிறகு அதை ஓர் மின்னலைப்போலசெய்து வரமுடியும்.

எண்ணமானது வெளிச்சத்தைப் போல வெகு வேகமாய் போகின்றது. ஒரு சமயம் இன்னும் விரைவாகவும் போகலாம். இராசாயன சாஸ்திரி சொல்லுவதுபோல் வெளிச்சம் ஒரு சகிண்டுக்கு 186,000 மைல் போகின்றது, என்றால் உதாரணமாக நாம் 12,500 மயில் தூரமுள்ள இங்கிலாந்தை நினைப்போமானால் அது ஒரு மின்னல் மின்னும் நேரம் தான் செல்லும். எண்ணத்தின் வேகம் இவ்வளவு என்று கணிக்கும் முறையை குப்தவித்தையில் இன்னும் கண்டுபிடித்துக் கொண்டிருக்கிறார்கள். குப்தசாஸ்திர வழியில் புது புது உண்மைகளைத் தெரிந்து எடுக்க முயலுகின்றோம், முன் காலத்தில் இரசவாதிகள் செய்து வந்ததுபோல் சோதனைகளை அறை குறையாகதான் செய்துகொண்டு வருகிறோம். முடிவில் அவர்களுடைய பிரயத்தினத்தால் அநேக ஆயிரம் உண்மைகள் சேர்ந்த இராசாயன சாஸ்திரம் ஒன்று ஏற்பட்டது. அதுபோல வருஷங்கள் சென்ற பிறகு இப்போது சிலரால் மாத்திரம் செய்துவரும் அறை குறை பரிசோதனைகளிலிருந்து உலகினருக்கு வெகு முக்கியமான ஓர் குப்த சாஸ்திரம் வெளியாகுமென்று நான் நம்புகிறேன்.

சாதாரணத்தில் நம்முடைய எண்ணங்கள், போகக் கூடிய வேகத்தில் போகின்றதில்லை. ஏனெனில் அவைகளை வசனத்திலும் செயலிலும் இறக்கிவிடாமல் தனியாய் எண்ணமாகவே உபயோகப்படுத்துவது அதிகமாயில்லை. தியானஞ்செய்வதால் வரும் சாமார்த்தியங்களில் இது ஒன்று. இது எண்ணத்தை இதர விஷயங்களில் செலுத்தாது தனியே உபயோகிக்கும் திறமையைக் கொடுக்கிறது. இது கை கூடிவருமானால் ஒருவனுக்கு அற்புதமான அநுபவம் கிடைக்கின்றது. டாக்டர் பெசன்ட் அம்மையார் இதை ஓர் வித்தையாக கற்று இருக்கின்றார். அவர் பிரசங்கம் செய்யுஞ்சமயத்தில் ஒரு வாக்கியம் சொல்லிக்கொண்டிருக்கும்போதே அடுத்த வாக்கியம் தன் மனதின்முன் மூன்று அல்லது நான்கு விதமாக வந்து நிற்கிறதாகவும் அவைகளில் நன்றாய் விளக்குவதை யோசனையோடு பொறுக்கி எடுத்து வருவதாகவும் அவர் சொல்லியிருக்கிறார். இவ்விதம் செய்பவர்கள் வெகு சிலரே. எண்ணத்தை செயலில் பரிணமிக்க விடுவதைவிட்டு பிரத்தியேகமாய் உபயோகப்படுத்துவதாலும், குணிக்கக்கூடாத அதிதீவிர வேகத்துடன்

அப்பியாசிப்பதாலும் வரும் அநுபவம் இது. இதனால் இதை எவ்வளவு வேகமாய் உபயோகிக்கலாம் என்பதை காட்டுகின்றது, எண்ணத்தை எண்ணமாகவே பிரயோகிக்கிறது மிகபிரயோஜனமானது தான். சிஷ்யன் பேசு முன்னும், அல்லது செய்யு முன்னும், யோசிக்கும்படியான உன்னதப் பழக்கத்தைப் புழங்கிவருவானானால் அவன் தன் மாஸ்டருடைய வாழ்க்கை போல அவனுடையது இசைந்து வருவதையும் மனோவேகம் விருத்தியாகுவதையும் காண்பான்.

" மற்றவனுடைய நோக்கங்கள் இன்ன இன்னதென்று உத்தேசமாய் பாவித்துக்கொண்டு சாட்டாதே; அவனுடைய எண்ணங்களை அவனுடைய குருநாதர் ஒருவர் தானறிவர்; உன் மனதில் தட்டாத வேறு காரணங்களைக் கொண்டு, அவன் எதையும் செய்து கொண்டிருக்கக் கூடும்."

C. W. L.:—ஒவ்வொருவனும் தனகு மிக நெருங்கியவனிடத்திலும், மிக சிநேகிதனிடத்திலும் அறியப்படமாட்டாத ஒரு விடுதையைப் போலிருக்கிறான். அவன ஏதோ ஒன்றைச் செய்ததின் காரணங்கள் சில சமயங்களில் வெகு நாள் பிறகு உனக்கு தெரியுமானால் அவை சாதாரணமாய் பிரமிக்கத் தக்கவையாயிருக்கும். உன்னுடைய மனதிற்குத் தட்டாத ஏதோ ஒன்று அவனைத் தூண்டி செய்யச் செய்து கொண்டிருக்கின்றது. மற்ற தேசங்களைவிட வெகுவாய் இந்தியா தேசத்தில் இதை அநேகமாய் பார்த்திருக்கின்றேன. ஏனெனில் இந்தியனுடைய மனது நம்முடையதை விட அநேக விதங்களில் மொத்த வித்தியாசப்படுகிறது. மேலும் நம்முடைய இந்து சகோதரர்கள் ஆங்கிலனுக்குத் தட்டுப்படமாட்டாத கருத்துகளைக் கொண்டு காரியங்களைச் செய்யத் துணிகிறார்கள் அவர்களுடைய மனது வெகு நுட்பமானது. அதன் காரியங்களோ நம்முடைய எண்ணத்தின் வழிபடி யல்லாது அந்நியமான ஐதீகப்படிகளிலிருந்து செய்து வருகின்றன. ஆகையால் நம்முடைய தேச ஜனங்களுக்குள் எவராவது சொல்வதைப் பற்றி யாவது செய்வதைப்பற்றியாவது யாதொரு அபிப்பிராயத்தை சாட்

டக்கூடாது என்றால் அன்னிய தேசத்தில் வேறுவித நாகரீகத்தில் இருப்பவர்கள் பேரில் அபிப்பிராயத்தை சாட்ட எத்தனித்தல கெடு தியே தவிர தப்பிக்கொள்வதற்கு உனக்கு இடமில்லை. நாம் உத் தேசமாய்அபிப்பிராயப்படுவதாலே தீரா மனஸ்தாபங்கள்ஏற்படுகின் றன. இதை நாம் செய்யப்படாது. விஷயம் ஒன்றை என் செய்தார் கள் என்று தெரிந்து கொள்வது நம்முடைய அலுவலல்ல; அதைப் பற்றி கஷ்டப்பட வேண்டியதில்லை.

> "ஒருவனைப் பற்றி பிரதிகூலமான கட்டுக் கதையைக் கேட்டால் அதை நீ திரும்பச் சொல் லாதே. அது உண்மையற்றதா யிருக்கலாம்; (ஒருவேளை) அது உண்மையாக இருந்தபோதி லும் அதை சொல்லாமலிருப்பது மிக்க வுபகா ரம்."

A. B.:—இதைக் கேட்ட பிறகும் நீபோய் யாரோ ஒருவன் பேரில் ஒருகட்டுக் கதையைச் சொனனால் நீ மாஸ்டருடைய நேரான ஆக்கினை ஆணைப்படி நடக்கத் தவறிவிட்டாய். எனெனில் அது உன்னிடத்தில் கிரமக்கிரமமாய் வந்திருப்பதால் அது உனக்கு நேராகச் சொன்னதுதான. உனது நாவையடக்கி இருப்பது சுலப மாகத் தான் இருக்கும், ஆனால் உன்னுடைய எண்ணத்தை அடக்கு வது கஷ்டம். என்றாலும் நிச்சயமாய் உன்னுடைய தேகத்தை அடக்கக்கூடும். நீ சொல்லும் கதை பிரமாதமற்றதா யிருக்கலாம். ஆனால் அது உண்மையற்றதா யிருந்தால், அதை நீ திருப்பிச் சொல் வாயானால் நீ பொய் சொல்லுகின்றாய். தீக்ஷைக்கு சித்தப்படுத்திக் கொண்டிருப்பவர்களுக்கு இது வெகு முக்கியமான விலக்கு. இதை பொய் என்று சொல்லுவது ஒருவேளை கஷ்டமானதாகத் தோன் றும்; ஆனால் அது வாஸ்தவமாய் பொய்யே, மேலும் நாம் உண்மை யானவைகளை கவனிக்க வேண்டியிருக்கிறது.

இவ்வித கட்டுக் கதைகளை உண்மைதானென்று விசாரித்து கொண்டே நமது வாழ்நாளை கழித்துகொண்டிருக்க முடியாது என் பதுதெளிவாயிருக்கின்றது. ஆகையால் அவைகளைத் திருப்பி சொல் லாமலிருப்பதே குற்றமற்ற வழி. நம்மையும், நம்முடைய விருத்

தியையும் நாம் கெடுத்துகொள்ளுகிறதைத் தள்ளித் தனியாக யோசி த்தபோதிலும், அக்கதை உண்மை என்று தெரிந்திருந்தபோதி லுங்கூட ஒன்றும் சொல்லாமலிருப்பது மிக்க உபகாரம். நீ ஏன் ஒருவனைக் கஷ்டப்படுத்த விரும்பவேண்டும? மற்றவனை கேவல மாக காட்டும்படியான எதையும் நாம் ஏன் திருப்பிச் சொல்லவேண் டும் ?

ஆம் அவன் துஷ்டன் என்றும், வஞ்சகன் என்றும், பேதை யர்களுக்குத் துன்பம் கொடுக்கப்போகிறான் என்றும்,நீ கண்டுகொள் வாயானல் அப்போதுஅவனைக்காட்டிகொடுப்பது அல்லது குறைந்த பக்ஷம் அவனல் கஷ்டத்திற்குள்ளாகு கிறவர்களுக்கு எச்சரிக்கை செய்வது உன்னுடைய கடமை. ஆனல் இப்படிச்சொல்வது சாதா ரண புறங்கூறலிருந்து முற்றிலும் வேருனது. என்றாலும் வெகு ஜாக்கிரதையுடனும் முன் யோசனையுடனும் முக்கியமாய் கொஞ்ச மாவது விரோத உணர்ச்சியில்லாமலும் கோபமில்லாமலும் சொல்ல வேண்டிய விஷயம் இது.

"சொற்குற்றத்தில் நீ விழாதபடி, பேசு வதற்குமுன், தீரயோசித்துப் பேசு."

C.W.L:—இதை அநேக வருஷங்களாகப் பிரசங்கித்து வரு கின்றது. அப்படியிருந்தும் நம்முடைய மெம்பர்கள் கூட திட்ட மில்லாத வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு வருகிறார்கள். ஜனங் கள் சில வேளைகளில் வெகு மிகைபட சொல்கிறார்கள். ஒரு பொருள் நூறுகஜ தூரம் இருந்தால் எத்தனையோ மைல் தூரம் என்கிறார்கள். சாதாரண நாளைவிட ஒருநாள் உஷ்ணமாயிருந்தால் "கொதிக்கின்றது" என்று சொல்கிறார்கள். இவ்விதம திருத்தமில் லாத, அருத்தமில்லாத, அளவுக்கு மிஞ்சின வார்த்தைகளில் தலை கீழாய் போகாதபடி எண்ணத்தின் வெவ்வேறு கருத்திற்கு தக்க படி சொல்லத் தகுந்த வார்த்தைகளை காணவிட்டால் நமக்கு ஆங் கில பாஷையில் சொல்வளம் சொல்பமா யிருக்கின்றது. இது கல்வியின் குறைவாலும் ஏறத்தாழவில்லாது சொல்லும் திறமை யின்மையாலும் ஏற்படுகிறது. இவ்விஷயத்தைப்பற்றி பரல்மாறிக் கையாக இருக்கக்கூடாது என்பது என் கருத்து. ஜனங்கள்

சொன்ன ஒவ்வொரு சோம்பேறி வார்த்தைக்காக ஜட்ஜிமென்ட் நாளில் (Judgement day) கணக்கு ஒப்புவிக்க வேண்டியிருக்கிறது என்று கிருஸ்து பகவான் சொன்னதாகப் புகழ்வது கருத்தில்லாத தாகப் போகவில்லை.

"செயலில் உண்மையாய் இரு; நீ இருப் பதைவிட்டு வேறாக ஒருபோதும் பாவனை காட் டாதே; ஏனெனில் களங்கமற்ற கண்ணாடி வழி யாய் சூரியவொளி பிரகாசிக்கிறதைப்போல் உன் வழியாய்ப் பிரகாசிக்கவேண்டிய உண்மைத் தன் மையின்சுத்த வொளியை வெளிப்பாவனைத் தடுக் கின்றது."

A.B:—செயலில் உண்மையாக நடப்பது வெகு கஷ்டமான விஷயம். ஜனங்களுக்கெதிரில் அவர்கள் உன்னைப்பற்றி உயர்வான அபிப்பிராயங் கொள்ளும்படி ஒரு விஷயத்தை எப்போதும் செய் யப்படாது என்றும், மற்றவர்களிருக்கும்போது செய்ய வெட்கப் படுபவைகளை நீ தனியே யிருக்கும்போது ஒருபோதும் செய்யப் படாது என்றும், ஆனால் எப்போதும் சுத்தமாய் நேர்மையோ டிருக்கவேண்டும் என்றும், இதன் அருத்தம். நீ எப்படி இருக்கின் றாயோ அப்படியே ஜனங்கள் உன்னை பார்க்கட்டும். அதை விட்டு வேறாக பாவனை காட்டாதே. நம்மில் அநேகர் தங்களை இவ்வகையானவர்களென்று மற்றவர்களை நினைவிக்கப் பிரியப்படும் கருத்துகளோடு இருக்கின்றனர். ஆகையால்தான் நாம் தனியாயிருக் கும்போது அநேகவித அற்ப விஷயங்களைச் செய்கின்றோம்; மற்ற வர்கள் இருக்கையில் செய்கிறதில்லை. ஏனெனில் அவர்கள் அறிய நாம் செய்யத்தக்க விஷயங்கள் அல்லவென்று நமக்குத் தெரியும்.

யாரோ ஒருவர் இருக்கிறதனால் நீ ஏதோ ஒரு விஷயத்தை செய்யப்படாது என்று உனக்குப் படும்போதெல்லாம் அந்த உணர்ச் சியை அடக்கு; அது சரியாயிருந்தால் அதைப்பற்றி மற்றவர்கள் என்ன சொல்லுவார்கள் என்பதைக் கவனியாதே; அது சரியில்லா திருந்தால் அதை செய்யவே செய்யாதே. அந்த உணர்ச்சி

எவ்வகையானதென்று எனக்குத் தெரியும். ஏனெனில் அது எனக்கு வருவதுண்டு, மற்றவர்கள் என்னை மதித்திருக்கிற வண்ணம் நான் நூலாசிரியர் போலவும், போதகாசிரியர் போலவும், இன்னும் அதிகமாயும் ஜனங்களுக்கு முன் நடந்துகொள்ளும்படி எனக்கு ஒரு உணர்ச்சி வருவதுண்டு. வெகு காலத்திற்கு முந்தி இந்த உணர்ச்சி ஒருவிதத்திலும் கெடுதியில்லாத சந்தர்ப்பத்தில் வந்ததை நான் கண்டிருக்கின்றேன், உதாரணமாக கப்பலில் நான் ஒருபோதும் சுகப்படுவதில்லை—அங்கே பொழுது போக்கும் விளையாட்டாக நானே பேஷன்ஸ் (Patience) எனும் சீட்டாடும் வழக்கம் ஒரு காலத்தில் எனக்கிருந்தது. இது குற்றமில்லாது பொழுதுபோக்கும் விளையாட்டு - ஒருநாள், "குப்த வித்தைக்குப் போதகராயிருக்கும் நான், ஞாயிற்றுக்கிழமை தினம் விளையாடுவதை பிரயாணிகள் பார்த்தால் என்ன நினைப்பார்கள், அது அவர்களைத் திடுக்கிட்டுப் போடாதா" என்கிற எண்ணம் என் மனதில் ஆச்சரியப்படும்படியானதாய் உதித்தது. பிறகு "ஜனங்கள் பார்த்தாலும் சரி, பார்க்காவிட்டாலும் சரி, அது பிரமாதமல்ல, அது பிழையாய் இருந்தால், அதைவிட்டு விடவேண்டியது அவசியம்; சரியாய் இருந்தால் அவர்களுடைய அபிப்பிராயம் அதைத் திருத்தப்போகிறதில்லை" என்று நினைத்துகொண்டேன். மேடம் பிளவட்ஸ்கி அம்மையார் இவ்விதம் நடப்பதில் பேர் பெற்றிருந்தார். அவர் செய்ய நினைத்ததை செய்தார், மற்றவர்கள் அதைப்பற்றி என்ன நினைப்பார் என்பதை கொஞ்சங்கூட லட்சியம் செய்யவில்லை. குப்த மார்க்கத்தில் உள்ளவர்கள் எப்படி நடக்க வேண்டுமென்று நினைத்த வண்ணம் அந்த அம்மை நடக்கவில்லை யென்று ஜனங்கள் நினைத்தார்களானால் அதைப்பற்றி அவருக்கு என்ன கவலை? என்ன சொன்ன போதிலும் ஜனங்களுக்கு அதைப்பற்றி ஒன்றுமேதெரியமாட்டாது.

ஜனங்களின் நோக்கத்தின்படி குப்த மார்க்கத்திலுள்ளவன் பயபக்தி முகத்தோடு கம்பீரமாய் விஷயங்களைச் செய்யுங் கவலையோடு அங்குமிங்கும் போவதில்லை. குப்த விஷயத்தைப்பற்றிப் பொதுஜன கருத்துகள் முற்றிலும் தவறானவை. குப்த மார்க்கத்திலுள்ளவன் அற்புதமானபடி சாதாரண சுபாவமுடையவன். முற்றிலும்உண்மையாயும், கபடமில்லாமலும் நேர்மையோடு வாழ்வது தற்

காலத்தில் மிக முக்கியமானது. ஏனென்றால் எழுந்தருளிவரும் லோககுரு வருகைக்கு வேண்டிய பிரயத்தினங்களை கொஞ்சமாயாவது எடுத்து சித்தப்படுத்த அநுகூலமாகுமென்று நான் நினைக்கின்றேன். இது அவர் வருகையை கொஞ்சம் சுலபமாக்கும். ஏனெனில் ஜனங்களுடைய கருத்தின்படி முத்தர்கள் எப்போதும் நடப்பவர் அல்லர். ஜனங்கள் எண்ணப்படி "அச்சில் வார்த்ததுபோல்" அவாகள் ஒழுகுவதில்லை. ஆனால் அவர்கள் உலகை சீர்திருத்த வருபவர்கள். சாதாரணமா யிருக்கும் பொதுஜன நோக்கத்தை அடியோடு மாற்ற வருகினறார்கள். ஜனங்களுடைய உணர்ச்சியை வெகு உருக்கத்தோடு நோக்கியபோதிலும் அவர்களுடைய (மதிமயக்கங்களுக்கு) துர அபிப்பிராயங்களுக்கு எப்போதும் இரக்கப்படுபவர் அல்லர். நாம் கபடமின்றியும் தயாள குணத்தோடும் தாராள குணத்தோடும் வாழ்வோமானால், இது ஜனங்களுடைய மனதைத் திருத்தி சித்தமாகக உதவி கொடுக்கும். மைத்திரேய பகவான் வரும்போது இவர்கள் தங்களுடைய துர்அபிப்பிராயங்களில் சிலவற்றை ஒழித்து விட்டிருப்பார்கள். மேலும் சாதாரணமாய் காட்டும் வெறுப்பு முன்னைவிட கொஞ்சம் குறைந்திருக்கும். ஆகையால் நம்முடைய கருத்தை தாழ இறக்கிவிடாமல் நாம் முற்றிலும் தாராளமான தன்மையோடு நடப்போமாக. ஜனங்களுக்கு முன் நாம் எவ்விதம் நடந்தாலும் பாதகமில்லை என்று நினைக்கக்கூடாது. ஆனால் அரையிலும், சபையிலும், ஒரே சரியான நேர்மையோடும் ஜாக்கிரதையோடுமிருக்க வேண்டும்.

C.W.L:—நாம் பாசாங்கு எப்போதும் காட்டப்படாது என்பதும் எவவித பாசாங்கிலும் பொய் பாவனை இருப்பதும் வாஸ்தவந்தான், அதை நீக்கப் பிரயத்தினப்படுவதில் அதற்கு எதிர்நேரான குற்றத்தில் போய் விழப்படாது. தனக்கு எப்போதுமுள்ள சுபாவத்தை காட்டவேண்டும் என்று சிலர் சிலவேளை சொல்லியபிறகு அவர்களுடைய கடுமையான கொடூர இழிய பகுதியைக் காட்டத்தொடங்குகின்றனர். அவர்களுடைய சுபாவ நிலைமையில் இருக்கும் தங்களை காட்டுகிறதில்லை. அவர்கள் எப்படி இருக்கவேண்டும் என்பதைவிட்டு இழிவானச் சாயலைக் காட்டுகின்றனர். மனிதனில் மேலானதாயும், உன்னதமாயும், கம்பீரமாயும் இருப்பது உண்மை

பொருளான ஆன்மாவுக்கு அருகில் உள்ளது; ஆகையால் சுபாவம் என்பது நம்முடைய அதீத உன்னதமான நிலை.

பக்திபாவனையாகக் காட்டுவது மெய்யற்ற வகையிலொன்று. எவனுவது ஒருவன் குப்தமார்க்கத்திலுள்ளவன் என்று சொல்லிக் கொண்டே தன்னுடைய உயர்ந்த நிலையைப்பற்றியும், பொறுமையைப்பற்றியும், பேசிக்கொண்டும், தனனுடைய பராக்கிரமங்களை சுட்டியும் சபுதியில் நம்புவாாகள் என்று பேதையர்கள் வியப்பை கவரும்படி எத்தனித்துக்கொண்டும், பண்டைய காலத்து பாசாங்குகாரர்கள் கோயில்களிலும் தெருமூலைகளிலும் நின்று வழியில் போகிறவர்கள் பார்க்கும்படி ஜபித்துக்கொண்டிருந்ததைப் போலவும், இனனும் சிலர் நீடித்தகால ஜபம் செய்வதாக பாவனை காட்டுவதைப்போலவும், இருந்தால் அவன உண்மையில் குப்த மார்க்கத்திலுள்ளவனன்று எனறு நீ அறியவும். எதார்த்தமான குப்தன் சாதாரணமானவனை விட எவ்வளவோ மேல்படியிலிருந்து வாழ திடஞ் செய்திருந்தபோதிலும் பயபக்தி பூச்சித் பிடிப்பதில்லை.

ஜனங்களுக்கு மாஸ்டர்களைத் தெரிந்துகொள்ள பலகாலும் முடிகிறதில்லை. ஏனெனில் மாஸ்டர் எப்படியிருக்க வேண்டும் என்கிற கருத்தை கெட்டியாய் இவர்கள் பிடித்து வைத்திருக்கிறார்கள். வாஸ்தவத்தில் மாஸ்டர் எவ்வகையிலும் இவர்கள் கருத்தின்படி இருக்கமாட்டார். நம்முடைய மதிமயக்கக் கருத்துகளுக்கும் மாஸ்டர் இசைந்துவரமாட்டார். அவர் தம்முடைய சுயஸ்தானத்தில் இருப்பதுபோலவே எப்போதுமிருப்பவர். நாம் நம்முடையதவறுன கருத்துகளால் கட்டுண்டிருந்தால் லோககுரு வரும்போது அறிந்துகொள்ளமாட்டோம் அவர் என்ன செய்வார் சொல்லுவாா, எவ்வாறு நடந்துகொள்வார் என்று முன்னமே சிலர் தங்கள் மனதில் திடஞ்செய்து கொண்டிருக்கிறார்கள். முன் மனேபாவனை கருத்துகளால் அவரிடமிருந்து நீ தூர விலகிப்போய் மோசம் போகாதே. அவர் அருட்போதத்தை உபதேசிப்பார் என்று எங்களுக்குத் தெரியும். அதை செய்யும் விதமும் விவரமும் அவர்தான்முற்றிலும் ஸ்தாபிப்பார். அவரை முற்றிலும் அறிந்து கொள்வோமாக. அவர் எவ்விடம் எவ்வழியில் நம்மை நடத்திக்கொண்டு போவாரோ அவ்விடத்திற்கு நாம் போக சித்தமாயிருப்போமாக.

---

## 12-வது அத்தியாயம்

### பொதுநல நோக்கமும் பரமார்த்த வாழ்வும்.

*"நோக்கத்தில் காமியத் தன்மையையும் நிஷ்காமியத் தன்மையையும் பகுத்தறியவேண்டும். ஏனெனில் சுயநல நோக்கத்திற்கு அநேக வித வடிவங்களுண்டு. அவைகளில் ஒன்றிலிருக்கும் சுயகாமியத்தை அறவே அடக்கிவிட்டதாக நீ எண்ணிக்கொண்டிருக்கும்போதே, மற்றொரு உருவத்தில் எப்போதும் போலவே உக்கிரத்தோடு (இராவணன் சிரசைப்போல்) அது புறப்படும். ஆனால் படிப்படியாக பரோபகார எண்ணங்கள் உன்னிடத்தில் மேன்மேல் நிறையும்படியான நிலையை நீ அடைவாய்; அப்போது உன்னைப்பற்றிய காமிய நினைவுகளுக்கு மனதில் இடமில்லாமலும் அவகாசமில்லாமலும் போய்விடும்."*

A.B:—பூரண நிஷ்காமிய நோக்கம் வரவேண்டிய வழி இதுதான் என்று மாஸ்டர் இவ்விடம் காட்டுகின்றார். ஒரு வகையான சுயநல நோக்கத்தின வேரையறுக்க முயற்சித்தால் நிச்சயமாகவே அந்த ஒரு வகையைத்தான் விட்டொழிக்க முடியும். ஆனால் மாஸ்டர்கள் சொல்கிறபடி அது இன்னொரு விதத்தில் புறப்படுகின்றது. இவ்விதம் செய்து வருவோமானால் ஒரு வகைச் சுயநலத்தை களைய வெகுகாலஞ் செல்லும். அப்புறமும் ஹரிகுலஸ் (Hercules) என்பவர் 'ஹைட்ரா' என்னும் பாம்பைக் கொல்லும்போது கண்டதுபோல் நீ காண்பாய் (ஒரு தலையை வெட்டின உடனே இன்னொன்று வளர்ந்து வந்தது). ஆனால் இவ்விடம் கற்றுகொடுக்கும் வழி அதன்வேரை அறுக்க நேராய் தாக்குகின்றது.

பக்தியின் அருமையான பலன்களில் ஒன்று இதிலடங்கி யிருக்கின்றது. இது எல்லாவற்றைவிடச் சிறந்தது. பக்தியோடு ஒருவரை நினைக்கும் எண்ணமானது மனது முழுவதும் பரவி நிறைந்து வருவதால் ஒருவன முயற்சியில்லாமலே பொதுநல நோக்கத்தை அடைகிறான. "புஷ்பம் தானாய் தன்னை அறியாமலே மலர்ந்து இதயத்தை சூரியனுக்கு காட்டுவதுபோல்" வளர்ந்து வரு வதுதான் கிரமமான வழி; முயற்சியென்று எடுப்பவை யெல்லாம் குறைவைச் காட்டும் குறிகள். உன்னை நீ சரிப்படுத்த சமர்த்தான வழியை கண்டுபிடித்தால் அது மிகப் பிரயோஜனப்படும். உன் னுடைய எண்ணங்களை உபாயத்தால் வென்று மனோ சக்தியை நல்ல வழியில் செலுத்து; வேண்டாத சுயநலக் குணம் ஊட்டமில் லாமல் காய்ந்துபோகும். ஒருவனது குற்றங்குறைகளை களைய இது தான் உன்னதமானவழி. ஏனெனில் குறைகளை வியாகூலத்துடன் நினைத்தால் அவைகள் பலப்பட்டு வருகின்றன.

மற்றவர்களை குறித்து உன் எண்ணம் நிறைந்திருக்கட்டும் பிறகு மாஸ்டர் சொல்லுவதுபோல உன்னைப்பற்றி நினைக்க உனக்கு மனதில் இடமும் அவகாசமும் இல்லாமல் போய்விடும். அப் போது நீ மெத்த சந்தோஷமா யிருப்பாய். இது என் விஷயத்தில் வாஸ்தவமாக இருந்தது. எனக்குரிய ஏதோ ஒருவிஷயத்தைப்பற்றி வியாகூலமாவது, ஏதோ கொஞ்சம் மனவருத்தமாவது, வருவதாக நான் கண்டபோதெல்லாம் (இப்போது அவ்விதம் மனஞ் சாயு மென்று நான் நினைக்கவில்லை. ஆனால் நான் ஒருகாலத்தில் அப்படி யிருந்தேன்) உடனே என் மனதில் மற்றவர்களுக்கு உதவவேண் டிய வேலையைப்பற்றிய எண்ணங்களை நிறப்பினேன. தன்னை சஞ் சலப்படுத்திய விஷயத்தில் விசனப்படுவது சுயநலநோக்கம். இது எவரையும் சுகமில்லாத வகையில் கொண்டுபோய் விடும்; என்று லும் இதைத்தான் அநேகர் செய்துகொண் டிருக்கிறார்கள். அவர்கள் உட்கார்ந்து கொண்டு "கடவுளே! எவ்வளவு துக்கம்! எவ்வளவு கஷ்டம்! இது எனக்கு மிகக் கஷ்டம்கொடுக்கிறது; அவன் என்னை கவனிக்கிறதில்லை; என்னை காப்பாற்றுகிறதில்லை; என்னை பிரியத் தோடு பார்க்கிறதில்லை." இவ்வகையில் கணக்கில்லாதபடி முறை யிட்டுக்கொண் டிருக்கிறார்கள்.

இவையெல்லாம் சுயநல நோக்கம்; உன்னுடைய விசனத்தையும் சுயநல நோக்கத்தையும் இவ்விரண்டையும் மாற்ற வேண்டுமானல் நீ உடனேபோய் வேறு யாருக்காவது ஏதோ ஒரு வேலையைச் செய்யவேண்டும். போய் வேலையைச்செய். ஏக காலத்தில் உன்னுடைய மனதில் இரண்டு விஷயத்திற்கு இடமிருக்காது. நீ உன்னைப்பற்றி நினைக்காமல்விட்ட க்ஷணமே நீ சுகப்படுவாய். "சுற்றிலுள்ள எவரிடமிருந்தும் எனக்கு யாதும் தேவையில்லை. நான் அவர்களோடு அன்பாய் இருக்கின்றேன். அதற்குப் பதிலாக எனக்கு ஒன்றும் வேண்டியதில்லை", என்று நீ சொல்லமுடியும் போது நீ சுகமாயிருப்பாய். ஜனங்கள் கொஞ்சம் அன்பை உள்ளே வைத்து மேலேசுயநலநோக்கக் கவசத்தால் கெட்டியாய் மூடி அதை அவர்கள் அன்பு என்று சாதாரணமாய்ச் சொல்லுகிறார்கள். அன்பின விஷயமாய் சங்கடம் நேரிட்ட க்ஷணம் சுயநலம் அங்கே இருக்கின்றதென்று அருத்தமாகினறது.

நேசத்தோடும் பக்ஷத்தோடும் இருப்பவர்கள் கற்கவேண்டிய ஒரு கடினமான பாடம் இது. என்றாலும் அதை கற்கத்தான் வேண்டும். கற்றபிறகு சுகத்தையும், சாந்தத்தையும், கொடுக்கிறது. நான் எனது சொந்த அநுபவத்திலிருந்து பேசுகிறேன். பதிலுக்கு யாதும் கோராமல் எல்லோரிடத்தும் அனபுடனிருக்க கற்றுக் கொள். நீ அவ்விதம் செய்யும்போது அநேகர் உனனிடத்தில் அன்பு காட்டுவதை காண்பாய். தாவிப்பற்றிப் பிடுங்கிகொண் டிருக்குமளவும் தூர விலகிக்கொள்ளுவது ஜனங்களுடைய சுபாவம். கடுமையான பாடம் இது. ஆனல் கறறபிறகு வரும் சாந்தத்தை யாதும் அசைக்க முடியாது. நீ பிரேமையுடன் நேசிக்கும் ஒருவன் அச்சமயம் அருவருப்பைக் காட்டினபோதிலுங் கூட அசைக்காது. அதனல் என்ன பிரமாதம், ஒருநாளைக்கு அவன் சரிப்பட்டு உன்னண்டை வந்துசேருவான் என்று உனக்கு தெரியும். இதனிடையில் எப்போதும்போல் அவன்பேரில் அன்பை ஊற்றிங்கொண்டிரு. நீ வருத்தமடைந்தால் அதைப்பற்றி கவலைப்படாதபடி மனம் திட்டஞ்செய்துகொள். உனக்குள் சொல்லிக் கொள். எனது கீழ் "நான்" வருத்தபடுகிறதைப்பற்றி எனக்குக்கவலையில்லை. (குறைந்த பக்ஷம் தேகஆன்மா) வருத்தப்படும்போது கவலைப்படலாவது,

பிரமையோ டிருக்கும்போது உரிமையாடவாவது, நாம் யார்? வருத்தம் வந்தபோது இந்த நோக்கத்தோடு பார்த்தால் நீ அதை தீர்க்க முடியும்.

C. W. L:—ஒரு குற்றத்தைப்பற்றி நினைத்தல் அதை பலப் படுத்தல்.கிருஸ்தவ முறையில் பலகாலும் செய்து வருகின்ற பிழையிது; அதில் அவரவர் குற்றங்களைப்பற்றி பச்சாதாபப் படும்படியும் அவைகளைப்பற்றிநொந்துகொள்ளும்படியும் ஜனங்களை திப்பந்தஞ் செய்து வருகிறது. எவ்வளவு அதிகம் ஒருவன் நொந்துகொள்ளுகிருனே அவ்வளவு அதிகம் தன்னுடைய குற்றத்தை மனதில் திருப்பி திருப்பி நினைக்கின்றுன. அப்படி செய்வதால் அது பலப்பட்டு வளர்ந்து வருகிறது. ஆனால் ஒருவன் துணிந்து எழுந்து மற்றவனுக்கு உதவவேண்டிய ஏதோ ஒரு வேலையைச் செய்தால் குற்றமுள்ள எண்ணம் பலப்படுவதில்லை அது தானய் காய்ந்து உதிர்ந்து போகும்; மறந்துபோய்விடும். இழிவான வகையில் உள்நோக்கி தன்னைத் தான சோதித்தல் பலகாலும் சிறு குறைகளை பெருத்த பாபங்களாக விரித்து காட்டுகின்றது. சிறு குழந்தைகள், செடிகள் எப்படிவளருகின்றன என்பதைப்பார்க்க அடிக்கொருதரம் வேரை பிடுங்குகிறதை ஞாபகப்படுத்துகினறது. இவ்விதம் ஒருவன நல்ல நாணயமான வேலையொன்றை ஊக்கத்துடன செய்ய எடுத்த பிறகு தன்னைப்பற்றியே சந்தேகப்பட துடங்கி, "என்னுடைய நோக்கம் சுத்தமானதென்று எனக்கு நிச்சயமில்லை. நான் உள்ளுக்குள் கர்வங்கொண் டிருந்தேன். ஆதலால், அதை செய்திருக்கக் கூடும்" என்று சொல்லிக் கொள்ளலாம். அல்லது அவன் துன்பத்தை தீர்த்தானுல் அவன் "நான் வாஸ்தவமாய் பொதுநல (நிஷ்காமிய) நோக்கத்தோடு செய்யவில்லை, துன்பத்தைப் பார்க்க என் கண் கூசியதால் அதை தீர்த்துவிட்டேன்" என்று நினைக்கக்கூடும் 'சர்ச் ஆப் இங்கிலாண்டில்'உள்ளவர்கள்"பிரபுவே துர்ப்பாக்கிய பாபிகளாகிய எங்கள் பேரில் கிருபை வைய்யுங்கள்" என்று சொல்கிருர்கள். நாம் பாபிகளாக இருக்கலாம்; ஆனுல் துக்கப்பட்டு அக்குற்றத்தைப் பலப்படுத்தவும் அப்படியே மற்றவர்களையும் கூட விசனப்படச் செய்யவேண்டிய அவசியமில்லை. சென்றதைப்பற்றி விசாரப்படாதே; ஆனுல் இனிமேல் நல்லவகையுடன் செய்ய நிருத்தி

கொள் நான் அவ்விதம் செய்யவில்லையே இவ்விதஞ் செய்யவில்லையே என்று நினைத்துகொண் டிருப்பது வீண். "நான அதை எப்படியோ செய்துவிட்டேன, பரிதாபம், அக்கரையில்லை. இது தற்கால நிலைமையின வளமையாய் இருக்கின்றது. அதை கூடிய வரையில் பிரயோஜனப்படும்படி செய்ய கவனிப்பேன்" என்று சொல்வது மிக்க நல்லது. உயர்ந்த நிலையிலிருந்து சென்றதை திருத்தமுடியாதென்று சொல்லவில்லை. ஆனல் அதை இப்போது எடுத்துக் கவனிக்க நம்முடைய அநுபவத்திற்கு நிச்சயமாய் வராது.

புத்தபகவான் அளித்த ஆயரி அஷ்டாங்க மார்க்கத்தில் ஏழாவது படியை "சரியான ஞெப்தி, கவனம்" என்று கூறப்பட்டிருக்கின்றது. அவர் தனது கூட்டத்தாருக்குச் சொன்னதாவது "ஞாபகத்திற்கு நீ கொண்டு வருபவைகளைப்பற்றி வெகு ஜாக்கிரதையாயிருக்க வேண்டியது; நீ ஒவ்வொன்றையும் ஞாபகததிற்கு வராதபடி தடுக்க உன்னல் முடியவில்லை என்று சொல்வாயானல் அப்போது உனது ஞாபகத்தையும் உனது தன்மையின ஒரு பாகமாகிய மனதையும் நீ அடக்கியாளவில்லை. அது எப்படி இருக்கின்றது என்றல் நீ தெருவே போய்க்கொண்டிருக்கும்போது எதிரில்அகப்பட்ட குப்பைகூளம் எல்லாம் சேர்த்துக்கொணடுபோவதுபோலிருக்கின்றது" நீ உனது ஞாபக களஞ்சியத்தில் அநேகவித பிரயோஜனமில்லாதவைகளையும், வேண்டாத விஷயங்களையும் குப்பைபோல் சேர்க்கின்றனே. சரியான விஷயங்களை ஞாபகத்தில் வைத்திருக்க வேண்டும்;மற்றவைகளை மறக்கமுக்கிய கவலையோடிருக்கவேண்டும்" என்று சொல்லியிருக்கிறர். பிறகு அவர் ஜனங்கள் கண்டிதமாய் மறக்கவேண்டிய விஷயங்களை விவரித்து ஒவ்வொன்றய் சொல்லுகின்றர்; தங்களைப்பற்றி சொன்ன எல்லாவித தூஷணைகளையும், அவமதிப்புகள், கஷ்டங்கள் என்று தாம்கொள்ளும் எல்லாவற்றையும் கட்டாயமாய் மறககவேண்டியவைகள் என்றும், நம்முடன் எப்போதாவது அன்பாய்ப்பேசின எல்லா வார்த்தைகள், எல்லா நேச உபசாரங்கள், நம்முடைய அயலானிடத்தில் கண்ட எல்லா நற்குணங்கள் இவைகள் ஞாபகத்தில் வைக்கவேண்டியவைகள் என்றும் விவரித்தார்.

நம்மோடு நடமாடிவரும் ஒவ்வொருவரையும் அனபாய் நேசிக்கக்கற்கவேண்டும். எல்லோரையும் ஒரேதரமாய் நேசிக்க வேண்டுமென்று நான் சொல்லவில்லை. அவ்விதம் செய்ய வேண்டுமென்று எவரும் எதிர் பார்ப்பதில்லை. புத்த பகவானுக்கும் மிக பிரியமுள்ள 'ஆனந்தா' என்கிற சிஷியர் இருந்தார். இவரிடத்தில் மற்றச் சீடரைவிட அதிக பக்ஷமாயிருந்தார். கிருஸ்து பகவானும் "சென்ட் ஜான்" என்பவரிடத்தில் வெகு பக்ஷமாக விருந்தார். கடைசியாய் கொடுத்த விருந்து பந்தியில் கிருஸ்து பகவானுடைய மார்பில் இவர் சார்ந்திருந்தார். எல்லா ஜனங்களிடத்தும் ஒரே நிறையோடு அனபு பாராட்ட மேலோர் நம்மை எதிர்பார்க்கவில்லை; அதாவது தாய் தகப்பனரிடத்திலும் மனைவி மக்களிடத்திலும் இருக்கும் அன்பைப்போல் எல்லோரிடத்திலும் வைக்கும்படி சொல்லவில்லை. ஆனல் எல்லோரிடத்திலும் நல்ல எண்ணத்தோடும் அன்போடும் வெறுப்பில்லாமலும் இருக்கவேண்டும். அன்பிற்குப் பதிலாக ஒன்றையும் கோராமலே, இவ்வித நோக்கத்தை வைக்கவேண்டும். வேண்டுமென்று கேட்க ஆரம்பித்த க்ஷணம் தனக்கென்று உரிமையை ஏற்பட்டு வருகிறது. மறுபடியும்ஆசை என்கிறதைகொண்டு வந்து விடுகிறது. அது இன்னும் ஒருமுறை தனனையே கவனிக்கின்றதே தவிர தான் நேசிக்கும் மற்றவர்களைக் கவனிக்கச் செய்யவில்லை. எவ்விதப் பிரதிபலனை வெகுமதி கோராமலே அன்பை பாராட்டுவது தான் சுயமான அன்பு என்று சொல்லத்தகும். இவ்வித நிஷ்காமியத் தனமையில்லாததால் ஜனங்கள் பொறாமையுடனும் மாச்சரியத்துடனும் இன்னும் அநேகவித ஆசைகளுடனும் பிடிபட்டு அவர்களுடைய அன்பு சூக்குமதேகத்தில் சுத்தமான உன்னத ரோஜா வர்ணத்தை காட்டுவதைவிட்டு ஒருவித மங்கலடைந்த அரக்கு சிகப்புபோல அல்பமானதாயும் உருவத்திலும் அவலக்ஷணமாயும் காட்டுகிறது. ஏனெனில் அது சூரிய கிரணம் போல் வீசாமல் கொக்கிகளைப்போல் தாவிப்பிடிக்கும் வகையில் திருப்பிப் பலகாலும் எவருக்கும் உதவாத வண்ணம் தனனையே தாக்கும்படி வளைந்திருக்கின்றது.

உலகங்கள் தெய்வீகநிஷ்காமிய அன்பால் நடந்தேறி வருகின்றன. அகண்ட நீண்ட கிரணங்களாய் போவதால் அது அவரிடத்

திற்கு மறுபடி திரும்பி போவதில்லை; வரவேண்டும் என்கிற கருத்து அவரிடத்தில் இல்லை கடவுள் திருவுள்ளத்தின்படி மற்ற உலகங்களை நடத்த இது ஓர் அளவால் பொழிந்து போகின்றது. இந்தப் படி நடத்தும் நியதியின் பாடத்தை நாம் கற்கவேண்டி யிருக்கிறது. இது கஷ்டம், ஏனெனில் கீழான தேக சுபாவங்களை அழிக்கவேண்டியது என்று அருத்தமாகின்றது. என்றாலும் இதுதான் சாந்தி நிலைக்கு போகும் வழி.

"இன்னுமொரு வகையிலும் நீ பகுத்தறிதல் வேண்டும். எவனுவது அல்லதுஎப்பொருளாவது வெளிக் கெவ்வளவு கெடுதியாய்ப் புலப்பட்டாலும் சரி அதைப்பற்றி பாதகமில்லை. அவனிடத்திலும் அப்பொருளிலும் இருக்குங் கடவுளை உற்றுப்பார்க்க கற்றுகொள். உன் சகோதரனுக்கும, உனக்கும் பொதுவாயுள்ளது எதுவோ, அதை கொண்டு தான் அவனுக்குச சகாயஞ் செய்யகூடும். அது எதுவெனில் "பரமார்த்த ஜீவன்" அவனுள்ளிருக்கும் அதைத் தட்டியெழுப்பும் வகையைக் கற்றுகொள். அவனிடையிருக்கும் அதை வேண்டி கொள்ள தெரிந்துகொள். அப்பொழுது தான் உனது சகோதரனைத் தீங்கில் விழாமற் காப்பாற்றுவாய்."

A.B:—நித்தியானித்திய விஷயமாய்ப் பகுத்தறிய வேண்டிய பிரிவுகளில் இது கடைசியான பாடம். ஒரு விஷயம் வெளிக்கு எவ்வளவு கெட்டதாயிருந்த போதிலும் கடவுள் அதில் இருக்கின்றார். ஏனெனில் கடவுள் அதன் மத்தியில் நடுநாயகம்போல் இல்லாதிருந்தால் அது நிலைத்திருக்க முடியாது. இவ்வுண்மையை இந்து சாஸ்திரங்களில் அடிக்கொரு தரம் சொல்லியிருக்கிறது. பகவத்கீதையில் ஸ்ரீகிருஷ்ண பகவான் "நான் ஏமாற்றுபவனுக்கு சூதாட்டமாயிருக்கின்றேன்" என்று சொல்லுகிறார். இவ்வாக்கி

யம் சிலரை திடுக்கிட்டு நடுங்கச் செய்கின்றது. எனினும் அது உண்மைதான். ஏனெனில் ஏமாற்றுபவன் கற்கவேண்டிய ஏதோவொன்று இந்த வழியிலிருக்கின்றது. நல்ல வழியில் கற்க மாட்டேன் என்று அவன் முரணுகிறான். ஒருவன் புத்திமதிகளின் படி அமரிக்கையோடு கற்காவிட்டால் அவன் பிரபஞ்ச நியதிகளைக் கவனிக்காததால் வரும் கஷ்டத்தோடு கற்கவேண்டும். இயற்கை நியதிகள் என்று பெயரிட்டிருப்பவை யெல்லாம் கடவுள் மனதி லிருக்கும் முறையின் உன்னதமான வெளி விளக்கம்.

இயற்கை விதிகள் பாராங்கல்போல் இங்கே இருக்கின்றன. ஒருவன் அவைகள் மேல்தாக்கி உறைந்துகொண்டால் அதனால் விளையும் நோய், அவனுக்கு இனிமேல் அப்பேர்ப்பட்ட தப்பிதஞ் செய்யாதே என்று சொல்லி கொடுக்கின்றது. ஒருவன் புத்தி மதிகளாலும் அல்லது காட்டி கொடுத்த உதாரணத்தாலும் கற்காமல் போனால், (இவ்விரண்டு வழிகள் உலகில் நிறைந்திருக்கின்றன.) விதிமுறைப்படி நடக்காததனால் வரும் கஷ்டத்திலிருந்து அதை கற்கவேண்டியிருக்கிறது. அவனை எப்படியாகிலும் ஐக்கியமாக்கி சேர்த்துவர திருவுள்ளம் கொண்டு போய்விடும்; ஏனெனில் திரு வுள்ளம் விகாசமுறைக்காக விருக்கின்றது. இவனுடைய அந்த ரங்க ஆழ்ந்த இச்சையும் தெய்வீகத்தோடு கலந்திருக்கின்றது. "ஹீப்ரு" பாட்டிலுள்ள கருத்தை கவனியுங்கள். "நான் மேலே தெய்வலோகத்திற்குப் போனாலும் நீர் அவ்விடமிருக்கின்றீர்" இதுவரைக்கும் தெளிவாய்த்தான் இருக்கிறது. கடவுள் தெய்வ லோகத்திலிருக்கிறார் என்று நமக்குத் தெரியும். ஆனால் பின்னும் "நான் நரகத்தில் படுக்கை போட்டாலோ, அந்தோ, அங்கேயும் நீர் இருப்பதைப் பார்க்கின்றேன்", என்ற வாக்கியத்தின் அருத்தம் இதுவே.

ஆதலால் உன்னை சுற்றிலுமுள்ள ஒவ்வொன்றிலும் கடவுளைப் பார். மற்றது உனக்குச் சம்பந்தபட்டதல்ல. இவ்வழியில் மாத்தி ரமே உனது சகோதரனுக்கு உதவிபுரிய முடியும் ஏனெனில் எல்லோருக்கும் பொதுவாய் உன்னிடத்தி லிருக்கப்பட்டது பர மார்த்த ஜீவன். மற்றவையெல்லாம் வெவ்வேறு; ஆனால் அதில் (பர

மார்த்தத்தில்) நீ ஒருமைப்பட்டிருக்கின்றாய். அதை நீ ஓர் உலுக்கு மரமாக உபயோகித்து எவ்வகையிலும் அவனுக்கு வேண்டிய உதவி கொடுக்கலாம். அவன் குறையை அவனாகவே வெல்ல ஒருவனுக்கு உதவிபுரிய வேண்டுமானால் அவனும் (ஜீவான்மாவும்) அக்கெட்ட விஷயத்தை விட்டுத்தள்ள உன்னைப்போல் ஆவலாயிருக்கின்றான் என்பதை கவனி. அது அவனை உபத்திரவப்படுத்துகிறது. உள்ளிருக்கும் யதார்த்த புருஷனை பிடிப்பாயாகில் அக்குற்றத்தை நிவர்த்திக்கவேண்டும் என்கிற விருப்பம் அவனுக்கிருப்பதை நீ காண்பாய். இதுதான் உதவி செய்யவேண்டிய சரியான வழி. உள் பக்கவழி ஒருபோதும் வருத்தப்படுத்துகிறதில்லை, எவரையும் மன வருத்தப்படுத்துகிறதில்லை.

C.W.L:—இந்த உலகத்திலுள்ளவை எல்லாம் இதர உலகங்களிலிருப்பதைப் போலவே கடவுளுடைய தோற்றம். ஆகையால் அதிலிருக்கும் நல்லதும் பொல்லாததும் எல்லாம் ஒரேதரமாய்க் கடவுளுடைய விளக்கமாக இருக்கவேண்டும். கடவுளே தாம் நடு நாயகமாயும் ஆதாரமாயும் இல்லாதது ஒன்றும் நிலைக்கமுடியாது. இந்த உண்மையை எல்லா சாஸ்திரங்களில் கெட்டியாய்ச் சொல்லி இருக்கிறது. கிருஸ்தவ சாஸ்திரங்களில் "நான் வெளிச்சத்தை உண்டாக்குகிறேன்; இருட்டைப் படைக்கின்றேன். நான் சமாதானத்தை உண்டாக்குகிறேன்; தீங்கை சிருஷ்டிக்கின்றேன்; நான் இறைவன். எல்லா விஷயங்களையும் செய்கிறேன்." என்று இருக்கிறது. ஜனங்கள் சாதாரணமாய்த் தீங்கென்று சொல்லுவதுகூட எப்படி தெய்வீகமாகும் என்பதை அறிந்துகொள்ள முடியவில்லை; என்றாலும் வாஸ்தவத்தில் இருப்பதைப் பார்க்கவேண்டியிருக்கிறது. மாந்திரீகர்களும் இந்திரஜால வித்தகர்களும், தீங்கை விளைவிக்கும். பலவிதமான ஜனங்களும் இருக்கின்றார்கள். ஆனால் அவர்களிடத்திலிருக்கும் ஜீவனே பரமார்த்த ஜீவன். ஏனெனில் அதைத்தவிர மற்ற ஜீவிதம் கிடையாது.

ஒருவன் தனது வாழ்க்கையில், மடத்தனத்தாலும் தவறான எண்ணத்தாலும் தீங்கை வருவித்து கொண்டானானால், எப்படியாயினும் அதிலிருந்து நல்லது வரும். அப்பேர்ப்பட்டவன் சீர்

பட்டுவருவது இவ்வழியில்தான் இருக்கின்றது. ஏமாற்றுபவன் ஏமாற்றி கொண்டிருப்பான். அப்படிச் செய்ய அவன் மனதில் வைத்திருக்கிறான்; என்றாலும் அவன் தெய்வீக நியதிக்குள்ளே தான் இருக்கிறான். அவன் தப்பிதஞ் செய்துகொண்டிருந்தபோதிலும் அதிலிருந்து அவனுக்கு நன்மை விளையும். ஏனெனில் அதை செய்வதிலிருந்து அவன் கற்றுகொள்வான். தவறுவதால் சரியான வழிக்கு வருவான். இது கடைசியாகக் காட்டும் வழியாயிருக்கிறது. என்றாலும் அதுவும் ஒரு நியதியின்படி என்று சொல்லலாம். ஆதலால் அதை பரமார்த்ததிற்குள் இருக்கிறதாக அங்கீகரித்து கொள்ளவேண்டும்.

ஒவ்வொரு வஸ்துவும் தடையில்லாது கடவுளாய்த் தானிருக்கிறது என்று சொல்வதில் கருத்தொனறு இருக்கிறது. எனறாலும் முக்கியமாய் அக்கருத்தினபடி இவவார்த்தைகளை எழுதவில்லை. ஒருவனை மனிதனாகச் செய்வது அவனிடத்தில் இருக்கும் கடவுளின அம்சம் (பொறி). முறுக்கிகொண்டும் வகையில்லாது போகும் தேகபுந்தி பலன்களைத் தள்ளி மனிதனிலிருக்கும் பரமார்த்த ஜீவனைக் கண்டுபிடித்தால் அதற்கு இரக்கம் வரும்படி நீ கேட்டுகொள்ளலாம். தீங்குள்ள மனிதனிலிருக்கும் ஜீவானமாவும் விருத்திக்கு வரவேண்டி நம்மைபோலவே இச்சிக்கினறது, என்பதை நாம் கவனிக்கவேண்டும். தனது தேக ஆன்மாவை, பேய்ப்போல் பிடித்துப் பலகாலும் கஷ்டப்படுத்தும் தீங்கை, விலக்கிகொள்ள ஆவல் கொண்டிருக்கிறது. ஆகையால் கெட்டியாயிருக்கும் வெளி ஓட்டையும் தீங்கையும் தாண்டி உள்ளிருக்கும் ஆன்மாவிடத்திற்குப் போவோமானல் அவனுக்கு உதவப்போகும் நம்முடைய பிரயத்தனத்திற்கு ஒத்தாசை செய்ய அவனுடைய ஆனமாவும் விழுந்து எதிர்கொண்டு ஓடிவரும்.

என்னுடைய வாழ்நாளில் அநேகமாய் உபதேசியாயும் வெளி உபகாரனுகவும் இருந்தேன. இங்கிலாந்தில் வெகு தாழ்வான இடங்களில் போய் உதவிபுரிந்து வந்தேன். தீராப்படுபாவிகள் என்று சொல்லத் தகுந்தவர்கள் அநேகரைப் பார்த்தேன். என்றாலும் ஏதோ ஓர்வகையில் கிஞ்சித்து அருள் அம்சமில்லாத ஒருவரையும் நான்

பார்க்கவில்லை. அது அவனுக்கு குழந்தை பேரிலிருக்கும் பக்ஷத்தில் மாத்திரம் அல்லது நாயின்பேரில் இருக்கும் பிரியத்தில் மாத்திரந் தான் அவனை மனிதனுகக் கண்டுகொள்ளலாமே தவிர மற்றபடி அவன் மிருகந்தான். மேலும் அபாயகரமான மிருகம். என்றாலும் பரமார்த்த வாழ்க்கை அவனை ஏதோ ஒருவகையில் தூண்டி வளர்த்து கொண்டு வருகின்றது. அந்த வகையில் தட்டிக்கொடுத் தால் அந்த ஓர் விஷயத்தின் மூலமாய் அவனுக்கு முறையிட்டு அவனை முன்னுக்குக் கொண்டுவர உதவிபுரிய முடியும்.

A.B.:—இவ்விஷயத்தைப்பற்றிமாஸ்டர் கடைசியாக "ஆனபடி யால் உனது சகோதரனைத் தீங்கில் விழாமல் காப்பாற்றுவாய்," என்று இவ்விடம் வெகு மும்முறமாய் சொல்லுகின்றார். சிஷியன் முடிவாக அடையவேண்டிய வாழ்க்கையாக இருக்கும் இதை சுட்டி காட்டுகின்றார். ஏனெனில் உலகத்திற்கு இரக்ஷகராக வேண்டுமென்பது தான் சிஷியனுடைய நோக்கம். சிஷியனுடைய சுயவிருத்திக்கு வேண்டியதைவிட இதை எவ்வளவோ பலத்தோ டும் முறையோடும் சொல்லுகின்றார். மாஸ்டர் உலகினருக்கு உதவி புரிவதற்காகத்தான் வாழ்ந்திருக்கின்றார். நமது வாழ்க்கையில் சேவ கம் செய்யும் திறமையை அதிகமாக்கி வரவர அவைகளில் அவ ருடைய நேர்த்தியை அதிகமாய் காட்ட முடியும்.



## மூன்றுவகை விராகம்

---

வெந்துயரம் வரும் பொழுது குடும்பத்தை
வெறுத்துவரும் விராகம் மந்தம்.
இந்த உடலளவுமனை தனம் வேண்டா
மெனவிடல் தீவிரமென்பார்கள்.
அந்தணர்நூல் மித்தையென விடல்
தீவிரதரமாம்.

(கைவல்லியம்)

# 13-வது அத்தியாயம்

## ஆசையை நீக்கல்.

A.B.:—நாம் இப்போது இரண்டாவது சாதனத்தை தொடங்குகிறோம். இது சம்ஸ்கிருத பாஷையில் வைராக்கியம் என்று வழங்கி வருகிறது. இதை ஆங்கிலத்தில் சொல்லும்போது நிராசை என்கிற பதத்தை மாஸ்டர் உபயோகப்படுத்தினார். இது தான் வெகு சரியான மொழிபெயர்ப்பு. முன்னர் நான் "விராகம்" என்ற வார்த்தையை உபயோகித்து வந்தேன். ஆனால் இனி மாஸ்டர் கொடுத்த பதத்தை உபயோகித்து வருவேன்.

> "நிராசை யென்னும்சாதனம்அநேகருக்குக் கடினமாக விருக்கின்றது; ஏனெனில், அவர்கள் தமது ஆசைகளையே தாம் என உணருகிறவர்கள். அவர்களிடத்திலிருக்கும் முக்கிய ஆசைகளையும், விருப்பு வெறுப்புகளையும், நீக்கிவிட்டால், அவர்களது "நான்" என்கிற உயிர்நிலை போய்விடுமே என்று உணருகிறவர்கள்."

A.B':—மார்க்கத்தில் செல்ல உண்மையில் இச்சிக்கிறவர்கள். எல்லாரும் முதல் வாக்கியத்திலிருக்கும் உண்மையை அநுபவத்தில் அறிகிறார்கள். இதில் நிராசை எனுஞ் சாதனம் கஷ்டமானதென்று மாஸ்டர் சொல்லுகிறார். ஜனங்கள் தங்களுடைய ஆசைகளே தாம் என்கிற அறிவோடு இருக்கிறதனால் கஷ்டம் வருகிறது. ஆசை யொன்றை திருப்தி செய்யாவிடில் அது உன்னை சுகமில்லாதவகையில் வைக்கின்ற வரையில் நீ உன்னுடைய ஆசைகளை நீயாக பாவித்துகொண்டிருக்கின்றாய். இதைத் தெரிந்து கொண்டு உனக்குள் நிச்சயப்படுத்திகொண் டிருப்பது நல்லது. ஏனெனில் வாஸ்தவத்தில் உன்னிடமிருந்து ஆசைகளைப் பிரிக்காதிருந்தபோதிலும் தான் வேறாகி இருப்பதாக நினைத்துகொள்வது மிகச் சுலபம். அநேகர் தங்கள் வாழ்க்கை முழுவதிலும், ஒவ்வொரு செயலிலும் ஆசைத் தன்மையை அடக்கியாளவில்லை என்று

காட்டிகொண்டிருக்கும்போதே தாங்கள் அதை அடக்கி வென்று விட்டதாக நினைக்க விரும்புகிறார்கள். நீ அப்படி மனதில் பிரிக்காதிருக்கும் பக்ஷத்தில் இவ்வுண்மையைத் தெரிந்திருப்பது எவ்வளவோ நல்லது. பிறகு நீ அதை திருத்துவதற்குப் பிரயத்தனப்பட சித்தமாயிருப்பாய்.

சாதிக்கவேண்டிய முதல்படியாதெனில் "நான் எனது ஆசைகளல்ல" என்னும் கருத்தை நிறுத்தி யோசனைசெய். நான் மனோவியல்புகளைக் குறித்து முன்னமே விவரித்துச் சொன்னதை இங்கே நீ உபயோகித்து கொள்ளலாம். உனது மனவியல்புகளைப்போலவே உனது ஆசைகளும் மாறுகின்றன, மாறுபடுகின்ற எதுவும் ஆன்மாவல்ல (நான் அல்ல). ஆன்மா (self) மாறாதது. (திரிபுஇல்லாதது) உதாரணமாக "அடையாற்றில் இருப்பது எவ்வளவு ஆனந்தம்; இனி உண்டாக வேண்டிய பெருத்த விஷயங்களை நினைப்பது எவ்வளவு நேர்த்தியானது" என்று ஒருநாள் நினைத்து மறுநாளே மனம் வாடி அதைரியத்துடன் இருக்கும் ஜனங்களை எனக்குத் தெரியும். இப்போது இந்த மாறுபாடு மனோவியல்புகளாவது, உற்சாகமாவது, மனவாட்டமாவது நீயல்ல. இரண்டும் காமமய தேகத்தை வெளியிலிருந்து ஏதோவொன்று தாக்கிக் கிளரினதால் உண்டாகி வெறுமையாக ஓடும் அலைகள்.

இக்காரணத்தைகொண்டு ஒவ்வொருநாளும் தியானஞ்செய்யும்படி ஜனங்களுக்குப் போதிக்கப்பட்டு வருகிறது. ஏனெனில் உனது ஆசைகளை எழவிடாது நிறுத்துகிறவரையில் சரியாய்த் தியானஞ்செய்ய உன்னால் முடியாது. தினசரி கிரமமாய் நியமத்தோடு நீ தியானித்தாயானால் உனது ஆசைகளுக்குப் பின்புறமாயிருக்கும் ஆன்மாவைச்சிறுகச்சிறுக உற்றுணருவாய். மேலும் தியானஞ்செய்து கொண்டு போகப்போக, இன்னும் நாளெல்லாம் வைக்க வேண்டிய நோக்கத்தைச் சாதித்துவரவர, எல்லாவேளையிலும்(self)ஆன்மாவை உற்றுணரத் துடங்குவாய். அப்போது நீ உனது ஆசைகளோடு இனி சேரமாட்டாய். "எனக்கு வேண்டும், எனக்கு விருப்பம். எனக்கு இஷ்டம்" என்கிற உணர்வோடு சதா இருப்பதைவிட்டு இது 'நான் அல்ல இது கீழ்நான்" என நினைப்பாய்.

இரண்டாவது சாதனத்தைக் குறித்து மாஸ்டர் கொடுக்கும் முதன்முதல் பெருத்த போதனை இது. தீக்ஷை பெறுமுன் நிராசையை முற்றும் நீ பெற்றிருக்கவேண்டிய அவசியமில்லை. ஆனால் அதை பெரும்பாலும் பெற்றிருக்கவேண்டும். மேலும் மாஸ்டர் எதிர்பார்ப்பது நிராசைத் தன்மை ஏற்பட்டுவருகிறதா என்பது. மனவாட்டம் ஒருபக்கமும், உற்சாகம் இன்னொரு பக்கமும், வைத்து இரண்டுக்கிடையில் ஊஞ்சலாடும் தன்மை தீக்ஷைபெறுவதற்கு முன்னமே முற்றும்போக வேண்டும்.

C.W. L.:—அநேகர் தங்களிடமிருந்து ஆசைகளைப் பிரித்துப் பார்க்க முயற்சி எடுப்பதில்லை ஆனால் "கடவுள் என்னை சிருஷ்டித்தவாறு நான் இருக்கின்றேன். எனக்கு ஒரு கெட்டப் பதட்டம் இருக்கிறது, எனக்குத்திட இச்சையில்லை, அவர் எனக்கு கொடுத்ததுஅப்படி; நான் மோக வலையில் அகப்பட்டு மீண்டுவர பலமில்லாவிட்டால் அவ்விதம்தான் என்னை சிருஷ்டித்தார்" எனறு சொல்லுகிறார். முன் ஜன்மங்களில் வாழ்ந்த வாழ்க்கையால் தங்கள் நிலையை உண்டாக்கி கொண்டார்கள் எனபது அவர்கள் அறியவில்லை. மாற்ற முடியாத பிறவிக்குருடு, பிறவிமுடம், இவைபோல் அவர்களுடைய குணங்களும் அமைந்திருப்பதாக நினைக்கும் வழக்கம் அவர்களுக்குண்டு. சுபாவமாயிருக்கும், தகாத குணம் ஒன்றை மாற்றுவது அவர்களுடைய அலுவல் என்று அவர்கள் தெரிந்து கொள்ளவில்லை. அவர்களால் கூடும் என்பதும் அவர்களுக்குத் தெரியாது. அப்பாலும் அநேகமாய் என்ன செய்யவேண்டியது என்பதையும் யோசிக்கின்றதில்லை.

சாமானியமானவன் தன் குணத்தை மாற்றவேண்டும், மெத்த கஷ்டம் எடுக்கவேண்டும், என்பதற்குத் தக்க காரணம் அவனுக்கு எடுத்து எவரும் காட்டவில்லை. அவன அவ்விதம குணத்தை மாற்றினலொழிய சுவர்க்கத்திற்கு போகமாட்டான் என்று சிலர் சொல்லுவார்கள். ஆனால் அநேகர் சுவர்க்கம் சந்தேகமானது என்றும், கிடைத்தாலும் சொல்லமுடியாத சலிப்பைத்தரும், என்றும் வேறு ஏதோ வொன்றை எதிர்பார்க்கின்றோம் என்றும், பதில் சொல்லுகிறார்கள். உண்மையில் சுவர்க்கத்தைப்பற்றிய போதனை விசாலமாய்ப் பரவியிருந்தபோதிலும், அது ஜனங்களுக்கு குணங்க

ளைச் சீர்திருத்துவதற்குக் கொஞ்சமேனும் அநுகூலந் தரவில்லை என்பதுதெளிவாகிறது.ஒருவேளை அது இருக்குமோ என்கிற நம்பிக்கை குறைவுபட் டிருக்கின்றது. நான் கேட்டவரையில் தூண்டிப் பிரயத்தனப்படச் செய்விப்பது தியாசொபியின் வழியாய் வரும் போதனை ஒன்றுதான். இது செய்யவேண்டியது எதுவென்று காட்டுகிறது. கடைத்தேறுவதற்குப் போதுமான காலமும் சந்தர்ப்பமும் இருக்கிறதென்று காட்டுகிறது. கடவுளுடைய திருவுள்ளத்திலிருக்கும் ஏற்பாட்டை ஒருவன் அறிந்துகொண்டு அவரோடு ஒத்து உழைக்கப் பிரயத்தனப்படுவானுனல் அவன் விகாச முறையின்படி உழைக்கவும், அதற்காகத் தன்னை சித்தப்படுத்தி கொள்ளவும் வெகு ஸ்திரமான நோக்கம் அவனுக்கு வரும். அப்போது அவன் தன்னுடைய குணத்தையும், தன்மையையும் அடியோடே மாற்றி கொள்ள முடியும். சந்தேகமின்றி கைகூடும் என்று திடமுடன் காணக்கூடும்.

விருத்திக்கு வரவேண்டும், உயர்வான தனது தன்மையை விளக்கிக் காட்டவேண்டும், தேகங்களைத் தன் கருவிகளாகச் செய்ய வேண்டும், என்பதுதான் ஜீவான்மாவின் மாரூத வாஞ்சை.இதற்குச் சம்பந்தமில்லாத மற்றஆசைகள் எழும்போதெல்லாம் அவைகளுக்கு இடங்கொடுக்காதே. இவைகள் ஜீவான்மாவுடையதல்ல. ஆதலால் "இதை இச்சிக்கின்றேன்" என்று நாம் சொல்லுவதில்லை. ஆனுல் "எனது ஆசைப் பசுக்கூடம்(Elemental) திரும்பக்கிளம்பி வருகின்றது. அதற்கு அது தேவை என்கிறது. ஆனுல் நானுகிய ஜீவான்மா பரிபக்குவ விருத்தியை இஷ்டப்படுகிறேன். தெய்வத்திரு அமைப்பிற்கு ஒத்து உழைக்க எனக்குப் பிரியம். இந்த மாறும் விகாரங்களும் ஆசைகளும் என்னுடையதல்ல" என்று சொல்லுவோம். திருப்தி செய்யாத ஆசை ஒன்று வருத்தத்தை கொடுக்கிறதாயிருந்தால் இன்னும் ஆசைப்பசுவை "தான்" என்று அறிந்திருக்கின்ருன் என்று ஒருவன் தெரிந்துகொள்ளவேண்டும்.

> "இவர்களோ குருநாதனைத் தரிசிக்காதவர்கள்; அவருடைய தெய்வீக சந்நிதி தேஜஸிலிருக்கும் பொழுது, அவரைப்போலாக வேண்டு

மென்கிற ஆவல் ஒன்றே தவிர மற்றெல்லா ஆசைகளும் நசிக்கின்றன. என்றாலும் அவரை முகத்துக்கு முகம் பார்க்கப் பாக்கியம் கிடைப்பதற்கு முன்னும் நீ மனோதிடஞ் செய்தால் நிராசையை யடையக்கூடும்.''

A. B.:—இது இன்னொருமுறை கீதையின் வாக்கியத்தை கவனிக்கச் செய்கிறது, "புலன்களுக்குச் சம்பந்தப்பட்ட விஷயங்கள் தேகத்தில் வீற்றிருக்கும் உபவாசியாகிய தேகியைவிடுகின்றன; ஆனால்அவைகளின் வாசனை விடுவதில்லை. இதுவும் பரம்பொருளைத் தரிசித்தவுடன் நழுவுகின்றது" ஆவலாயிருக்கும் வஸ்துவை (கடவுளை) எட்டி ஒருதரம் பார்த்தவுடன் எல்லா ஆசைகளும் நசிக்கின்றன. ஆதலால் மாஸ்டருடைய பிரசன்னத்தை உற்றறிந்து கொள்வதால் ஆசைகள் நீங்கிப்போவது மாத்திரமல்ல. மற்று ஆசைப்படும் தன்மையே இல்லாமல் போய்விடும். ஆசை என்பது அநேகக் குருத்துகளைவிடும் அடி (தாய்) கிழங்கு. நீ இக் குருத்துகளை வெட்டி எறியமுடியும் ஆனால் தாய்க்கிழங்கு இருக்கிறவரையில் அது புதிய குருத்துகளை விட்டுகொண்டேயிருக்கும். ஆனால் மாஸ்டருடன் ஐக்கியப்பட்டிருந்தால் எல்லா ஆசைகளின் வேரே உன்னிடம் இல்லாமற்போம்.

என்றாலும் இதற்கு முந்தியும் நீ இச்சித்தால் நிராசையைப் பெறமுடியும் என்று மாஸ்டர் சொல்லுகின்றார். "நீ இச்சித்தால்" என்பது பிரதானமான வார்த்தை, கஷ்டம் இருக்கின்ற இடத்தை நமக்குக் காட்டுகின்றது. சாமர்த்தியம் இல்லை என்று காட்டவில்லை; ஒரு விஷயத்தைச்செய்ய திட இச்சை அநேகமாய் எப்போதும் இல்லை என்பதைக் காட்டுகிறது. நீ உனது உலக காரியத்தில் வைக்குமளவு இச்சையை மார்க்கத்திற்குச்செல்லும் காரியத்தில் வைத்தால் உண்மையில் உனக்கு விருத்தி துரிதமாய் வரும்.

C. W. L.:—இந்த அருமையான புஸ்தகத்தில் இருக்கும் சிறந்த வாக்கியங்களில் ஒன்று இது:—நீ மாஸ்டரைத் தரிசித்து அவர் எப்பேர்ப்பட்டவர் என்று உற்றறியுங்கால் கீழ் ஆசை

கள் எல்லாம் இனி இல்லாதபடி போகின்றன. உன்னுடைய தன்மை முழுதும் மேலான ஏதோ ஒன்றால்நிறைந்து விடுகிறது.

அநேகர் நிராசைத்தன்மையைப் பெறவேண்டுமென்கிற விருப்பத்தை சொல்லிகொண்டே எல்லாவேளையிலும் ஆசைப்படும் விஷயங்களை இறுக்கி அணைத்துகொண் டிருப்பதும் தவிர அவைகளில்லாவிடில் சுகப்படுவதில்லை. வாஸ்தவத்தில் அவர்கள் நிராசையை விரும்பினவரல்லர். இச்சிப்பதாக நினைத்துகொள்ளுகிறார்கள். உபாயமாய் மேலாகவே இச்சிக்கிறார்கள். ஆனால் ஆழ்ந்திருக்கும் தேகானமாவில் அவர்கள் இச்சிப்பதில்லை. இதைப்பற்றி நம்மை நாம் விசாரித்து, தீர சோதித்து, வாஸ்தவத்தில் இந்த கீழ் ஆசைகளை எல்லாம் விலக்கிவிட் டிருக்கிறோமா என்று பார்ப்பது நல்லது. (தியாசொபிஸ்டு) திவ்யஞான சபையோன் ஒருவன்தான் ஆசைகளை ஒழித்துவிட்டதாகப் பலகாலும் நினைக்கிறான். மேலும் இது வெறும் அற்ப சிறுவிஷயம் என்றும் நினைக்கிறான்; ஆனால் இவ்வித அநேக சிறு விஷயங்கள்தான் வெகு ஆழமாய்ப் பாய்ந்திருக்கின்றன. மேலாக ஒருவன் அவைகளை ஒழித்து விடுகிறான். ஆனால் அவைகள் வேறு விதத்தில் புறப்படுகின்றன, அவைகளை ஒழித்து விட்டதாக நிச்சயமாயிருப்பது கடினந்தான். நல்லகாலம், நாமிருக்கும் இந்த நிலையில் அவைகளை முற்றும் ஒழித்திருக்க வேண்டுமென்று மேலோர் நம்மை எதிர்பார்க்கவில்லை. இவைகளின் சில வேர்கள் நமக்குள்ளிருந்தபோதிலும் தீக்ஷைபெறக்கூடும். ஆனால் தீக்ஷைக்கு அப்புறம் அவைகளை வேரோடு முற்றும் களையவேண்டும். என்றாலும் இப்போதிருந்தே அவைகளின வேரைக்களைவது நல்லது. அப்படி செய்தால் நம்முடைய விருத்தி இலகுவாயும், அதி சீக்கிரமாயும் வரும். அது அநுபவத்திற்கு வரக்கூடியது; ஏனெனில் நாம் செய்யமுடியாதது எதையும் மாஸ்டர் ஒரு போதும் சொல்லமாட்டார். என்றாலும் நமது மனோதிடத்தையும் அல்லது சகிக்கும் தன்மையையும் பலப்படுத்துவதற்காகக் கடினமாகக்காட்டும் அநேக விஷயங்களை நமக்கெதிரில் கொண்டுவந்து விடுவார். ஏனெனில் நாம் துரிதமாய் விருத்திக்கு வரவேண்டுமானால் அதைச் செய்யத்தான் வேண்டும்.

" அநேகர் ஆசைப்படும் ஐசுவரியமும் அதிகாரமும் பெறத்தகுந்தவைகளல்லவென்று பகுத்தறிவுப் படலத்தில் முந்தியே உனக்கு விளக்கியிருக்கிறது. இது வெறுஞ் சொல்லாயிராமல் உண்மையில் உணர்ந்தறியப்படுங்கால் அவைகள் மேலிருக்கும் ஆசைகளெல்லாம் நழுவிவிடும்."

A. B.:—ஐசுவரியத்தையும் அதிகாரத்தையும் பற்றி இருக்கும் ஆசைகள் பணத்திலும், தேசாசாரத்திலும் இராஜரீகத்திலும் ஒட்டியிருப்பது மாத்திரம் அல்லாமல் அநேகவிதங்களாய்ப் பரிணமித்து வருகின்றன. எல்லாவற்றைவிடச் செல்வம் அநேகமாய் எல்லாருக்கும் வேண்டியவஸ்து. ஆனால் அதைமாத்திரம் வைத்திருப்பது நல்லதல்ல. ஏனெனில் இது ஆசைகளை ஆதரிக்கின்றதே தவிர சுகந்தருவதில்லை. பணக்காரர்களைப் பார்த்தால் தெரியும். இவர்கள் எவ்வகையிலும் சுகப்பட்டிருப்பவர்களல்ல. தேசீய இராஜாங்க அதிகாரத்திலும் இப்படியேதான இருக்கிறது. இவை எல்லாம் தூசி, காக்காய்ப்பொன், தங்கமல்ல. "கீதையில் சொல்லுகிறது:-கிடைத்தது எதுவாயினும் அதில் அறிவுடையன் திருப்தி அடைந்திருக்கிறான்". அதாவது கிடைத்தது எதையும் எடுத்துக் களிப்புடன் உபயோகப் படுத்துவான், ஏதோ வேறொன்றின்மேல் ஆவல் கொண்டு காலத்தையும் பலத்தையும் வீணாகக்கழிக்கமாட்டான.

தேசீயவழியிலும் அல்லது இராஜரீகவழியிலும் உயர்ந்த அதிகாரத்திற்கு வருபவர் வெகுச் சிலரே. என்றாலும் அது இல்லாதிருக்கும்போதே அதிகாரத்தைக் கவரும் மயக்கம் பலகாலுமிருக்கிறது. அதிகாரமென்பது தனசொந்த அலுவலைக் கவனியாமல், மற்றஜனங்களை அடக்கியாளுவது. அவர்களுடைய வேலையில் தலையிட்டு எப்படிச் செய்யவேண்டுமெனபதை சொல்வது. இவ்விதமான இச்சை தேசீய அல்லது இராஜீய அதிகாரத்திற்குரியவைகளில் மெத்த இல்லாவிட்டாலும் எவ்விதம் செய்யவேண்டுமென்று நாம் பாவித்துகொண்டதை மற்றவர்களைச் செய்விக்கும்படியான சுகமற்ற விருப்பம் இன்னும் வரும். நாம் விருத்திக்கு வரவேண்டுமானால் இதை ஒழித்துவிடவேண்டும். காரியத்தில் கண்ணாயிருப்பவர்கள் மற்றவர்

எவரிடத்திலும் தலையிடாதபடி தமது கீழ் "நான்" ஆகிய தேகான்மாவை நிருவகித்து நடத்தப் போதுமான வேலை தமக்கிருப்பதாகக் காண்பார்கள். மற்றவர்களிடத்திலிருக்கும் ஆன்மாவும் நம்மிடத்திலுள்ளதைப்போல்தான் இருக்கிறது. ஆனால் அது அவர்கள் மூலமாய் விளக்கிக்காட்ட வழி ஒன்றை தேர்ந்தெடுக்கவிடுவது அவர்கள் வேலை, நம்முடையதல்ல. ஆதலால் தலையிடும்படியான எவ்விதத் தன்மையையும் களைந்தெடுக்கவேண்டும்.

உனது கடமையாயிருக்கும் போதல்லாது மற்றபடி தலையிட உனக்கு நியாயமில்லை. அதுவும் இயற்கையாகவே உனது பிள்ளைகளாகவும் அல்லது கர்மநியதியின்படி சிப்பந்திகளாகவும், வேலையாட்களாகவும் உனதுகைகீழ் வந்து உனக்கு ஆள கொஞ்சம் அதிகாரம் இருக்கும்போது தலையிட உனக்கு நியாயமிருக்கின்றது. குழந்தைகளை அடக்குவது ஆதரிக்கும்வகையில் இருக்கவேண்டும்; காப்பாற்ற வேண்டிய குறை ஒன்று இருக்கும் வரையில் தலையிடவேண்டும். உள்ளிருக்கும் ஜீவான்மா தனது கோசங்களைச் சமாளித்து ஆண்டுகொள்ள சாமர்த்தியம் வரவர அதை படிப்படியாய் விட்டுவிடவேண்டும். உனக்குச் சமானமானவர்களிடத்தில்—நான் இவ்வார்த்தையை விசாலமான அருத்தத்தில் உபயோகிக்கின்றேன—உனக்குச் சுத்தமாய்த் தலையிட நியாயமில்லை.

C.W.L.:—ஜனங்கள் மற்றவர்களிடத்தில் ஏன் அடிக்கடி தலையிட பிரியப்படுகின்றார்களென்றால், இவர்கள் விஷயங்களை மற்றவர்களைவிட நன்றாய் நிருவகிக்க முடியுமென்று நினைக்கிறார்கள். ஆனால் முடிவாய்ப் பார்க்கில் நிருவகிக்க இவர்களுக்குத் தெரியாது. தெய்வீக சக்தி ஒவ்வொருவனிடத்திலும் வேலையாயிருக்கின்றது. அது போகிற வழியில் அதைச் செய்யவிடுவது நமக்கு நல்லது. கிருஸ்து பகவான் எஹூதியர்களை அவர்களுடைய சாஸ்திரங்களில் சொன்னதை எவ்விதம் ஞாபகப்படுத்தினார் எனபதைக் கவனியுங்கள் "நீங்கள் கடவுள்கள்" என்றார். அவர்கள் எல்லாரும் மேலான பரம்பொருளின புத்திரர்கள் மற்றவன் தன்னுடைய வேலையை மிக உன்னதமானவகையில் செய்யாதிருக்கக்கூடும். அல்லது வெகுவாய்ச் சில பிழைகளை செய்துகொண்டிருக்கக்கூடும்

என்றாலும் அவன நேர்மையுடனும் ஊக்கத்துடனும் தன்னால் கூடியமட்டில் உன்னதமாய்ச் செய்துகொண்டிருக்கும் வரையில் நல்லதுதான். அவன் உன்னைப்போல பந்தடிப்பதில் அவ்வளவு கெட்டிக்காரனாக இல்லாவிட்டாலும் அவனுடைய எண்ணிக்கையை (Innigs) அவன் எடுக்கட்டும். சிலவேளைகளில் ஒருவன் மிக மரியாதையுடனும், இதமாகவும் புத்திமதியை கொடுக்கக்கூடும். ஆனால் அதுகூட அநேக சந்தர்ப்பங்களில் தகாததான தலையிடு தலே. எவன் பேரிலாவது ஒரு அபிப்பிராயத்தை யாது காரணத் தைகொண்டும் பலவந்தப்படுத்த எத்தனிக்கக்கூடாது. நமது சொந்த விஷயங்களை நன்றாய் நிருவகிக்கவேண்டியது நமது முதல் அலுவல். ஏனெனில் ஒவ்வொருவனும் தனக்கே உத்தரவாதியாயிருக்கின்றான்.



## 14-வது அத்தியாயம்

### ஓர் நல்ல ஆசை.

*"இதுவரைக்கும் சொன்னதெல்லாம் சாதாரணமே; நீ தெரிந்துகொள்ள வேண்டியதுதான் அவசியம். ஆனால் சுவர்க்கம் வேண்டுமென்றுவது, பிறப்பு இறப்பிலிருந்து விமோசனம் பெறலாமென்றுவது, உலக நோக்கங்களை கைவிட்டு, (சந்நியாசம்) போகிறவர்கள் சிலருண்டு; இக்குற்றத்தில் நீ விழக்கூடாது."*

C. W. L.:—ஜனன சக்கரத்திலிருந்து தான் விடுபடவேண்டுமென்கிற ஆவல் முக்கியமாய் இந்தியாவில் காணலாம். ஏனெனில் அங்கிருக்கும் அநேகர்புனர்ஜன்மமிருப்பதைத்தெரிந்திருக்கிறவர்கள். சாதாரண கிருஸ்தவனுக்கும் மோக்ஷமென்பது பூலோக வாழ்விலிருந்து விடுவித்துகொள்வதுதான். இப்போதனைகள் இந்திய வாலிபனுக்கு கொடுக்கப்பட்டவை. ஆகையால் அவைகள் அநேகமாய் இந்திய நிலைமைக்குரியவைகளைக் குறிக்கின்றன; என்றாலும் கருத்துகளை மேல்நாட்டாரும் உபயோகப்படுத்தக்கூடும். தியாசொபிஸ்டாய் இருக்கும் நாம் சுவர்க்கலோக சுகத்தையடைய கடும் முயற்சி எடுக்கமாட்டோம். அவ்விடத்தில் ஜனங்கள் பூலோகப் பிறப்புகளுக்கு இடையில் நூறு இன்னும் ஆயிரம் வருஷக் கணக்காய் காலத்தைக் கழிக்கின்றனர். நம்மில் அநேகர் அதை முற்றிலும் தவிர்த்து பூவுலகில் சேவகஞ்செய்ய சீக்கிரம் திரும்பிப் பிறக்கப் பிரியப்படுவோம். இப்படி பிறப்பதற்கு வாஸ்தவமாய் இச்சையுள்ளவருக்கு முடியும். என்றாலும் அதற்கு உறுதியுள்ள மனோதிடம் வேண்டியிருக்கிறது. ஏனெனில் அப்போது எடுக்கும் புதிய ஸ்தூல தேகத்தோடு இப்போதிருக்கும் பழைய காமமய மனோமய தேகங்களை அப்படியே எடுத்துச் சேர்க்கவேண்டியிருக்கிறது.

ஸ்தூலமான மூளை அலுத்துப்போகிறதைப்போல காமமய தேகமாவது, மனோமய தேகமாவது களைத்துப்போகுமென்பதல்ல.

என்றாலும் கவனிக்கவேண்டியது வேறொன்று இருக்கின்றது. நாம் இந்த ஜன்மத்தில் வைத்திருக்கும் காமமய மனோமய தேகங்கள் சென்ற ஜன்மத்தில் கடைசியாக நமக்கிருந்த நடவடிக்கைகளை விளக்கிக் காட்டுகின்றவைகள். பிறந்த பிறகு வாழ்ந்துகொண்டு போகப் போக நாம் அவைகளை மெத்தத் திருத்திகொண்டே போகிறோம். ஆனால் ஓர் அளவுக்குமேல் அதை திருத்த முடியாது. எதற்கும் ஓர் வரம்பு இருக்கின்றது. உதாரணமாக ஒரு மோடார் கார் (Motor car) பழுது பார்க்கவாவது திருத்தவாவது இடங்கொடுக்கும். அநேகமாய் பழய காரைதிருத்திப் புதிய மாதிரியாய்ச் கொண்டுவருவதை விட புதியதை வாங்குவது நல்லதாய்த் தெரியும். காமமய மனோமய தேகங்கள் விஷயத்திலும் அவ்விதமே. அவைகளை அடியோடே மாற்ற வெகு காலம் செல்லும். அப்படி செய்தும் முடிவில் பார்த்தால் ஒருவேளை அறைகுறையாய்த்தான் இருக்கும். ஒருவனுடைய சாமர்த்தியம் இந்த பிறப்பில் மெத்த அதிகரிக்குமானால் அவனுடைய விருத்திக்குத் தக்கபடி பழைய காமமய, மனோமயதேக உடைகளை ஒட்டுபோட்டு சரிப்படுத்துவதைவிட புதிய தேகங்களை எடுப்பது மிகவும் நல்லது. ஆதலால் உடனே எடுக்கும் பிறப்பு பலகாலும் அநுபவத்திற்கு மெத்த உதவாத விஷயம். எனாலும் இப்போது இருக்கும் நிலையின்படி லோக குரு வருகையின் நிமித்தம் உழைப்பவர்கள் முக்கியமாய்த் தேவையாயிருக்கின்றபடியால் நாம் உடனே பிறப்பு எடுக்கக்கூடும். எவனொருவன் இப்பிறப்பில் நன்றாய் சேவகம் செய்து இன்னும் உழைக்க வேண்டி உடனே பிறக்க ஊக்கத்துடன் விரும்புகிறானோ அவன் தன்னுடைய கோரிக்கையின்படி பெறமுடியும்.

மானிடர்களுக்கெல்லாம் மரணத்திற்குப் பிறகு கிரமமாய் போகும் சாதாரண வழியொன்று இருக்கின்றது. அவ்வழியாய்ப் போகிறவர்களுக்கு யாதொரு முக்கிய ஏற்பாடுகள் செய்யவேண்டிய அவசியமில்லை. ஆனால் அதைவிட்டு வேறு வழியில்போக ஒருவன் விரும்புவானானால், அவன் விண்ணப்பத்தைப்போல் மனு ஒன்று செய்யவேண்டியிருக்கிறது; அல்லது அவனுக்காக வேறொருவர் செய்யவேண்டியிருக்கிறது. இதை மேலான அதிகாரியிடம் கேட்க வேண்டியிருக்கிறது. அவர் தகுதியானதென்று கருதுவாராயின்

சரியென்று கட்டளையிடுவார். ஆனால் இவனுடைய பிரயோ ஜனத்திற்கு இடையூராக விருக்குமென்று நினைப்பாரானால் ஒத்து கொள்ளமாட்டார். இதைப்பற்றி ஆவலாயுள்ளவர்கள் தங்கள் மனதைத் தேர்த்திகொண்டு சமாதானத்தோடு இருக்கவேண்டும். எனெனில் இப்போது நன்றாய் வேலை செய்கிறவர்களுக்கு, வேலை செய்ய இன்னும் சந்தர்ப்பங்கள் கண்டிப்பாய் வரும். உடனே பிறக்க இச்சிப்பவன் இன்றியமையாத உபயோகமுள்ளவனாக விருக்கவேண்டும். அப்படியிருந்தால்தான் அவன் உடனே பிறந்துவரும் பக்ஷத்தில் பிரயோஜனமுள்ளவன் என்று தெரிந்திருக்கும். அப்படியிருப்பதும் சமயோசிதமாகவே காமமய, மனோமய தேகங்களை தக்கநிலைக்கு கொண்டுவர உன்னதமான வழியாயிருக்கின்றது.

> " உன்னை நீ முற்றிலும் மறந்தவனானால் எப்போது அந்த "நீ" விடுபடுமென்றாவது, அதற்கெவ்வித சுவர்க்கம் கிடைக்குமென்றாவது நீ, எண்ணிகொண்டிருக்க முடியாது. சுயநல (காமிய) இச்சையெல்லாம், அதன் நோக்கம் எவ்வளவு மேலானதாக விருந்தபோதிலும், பந்தப்படுத்துமென்பதைக் கவனி; அதை விட்டொழிக்கும் வரையில் குருநாதனுடைய அலுவலைச் செய்தற்கு நீ முற்றிலும் விடுபட்டவனல்ல."

A. B.:—காமலோகமும், மனோலோகமும் பூலோகத்தை விட நொய்யபூதங்களால் அமைக்கப்பட்டிருந்தபோதிலும், ஜடம் என்று நாம் கவனிக்கவேண்டும். அவைகளும் தனக்கு வெளியாயுள்ளவைகள். மேலும் அவைகளில் ஆசைக்கு வேண்டிய வஸ்துக்கள் நிறைந்திருக்கின்றன. ஆதலால் மனோலோகத்தின் கீழ்பாகமாகிய சுவர்க்கலோகத்தின் இச்சையானது தேகான்மாவுக்குப் பூலோகத்திலிருப்பவைகளிலிருக்கும் இச்சைபோல் இதுவும் இருக்கின்றது இது தூரமாயும் எட்டித் தொட்டறிய முடியாததாக மாத்திரமிருக்கிறது. மற்ற ஆசைகளைவிட சுவர்க்கலோகத்தின் பேரிலிருக்கும் ஆசையால் வரும் பிரயோஜனம் யாதெனில், இதை உடனே

திருப்தி செய்ய முடியாததால் ஆசையை எழவிடாது தடுக்கின்றது. ஆதலால் இது மொத்தத்தில் ஆசைகளை ஒழிக்க ஒருவனுக்கு உதவுகிறது. மேலும் அவனை முரணானத் தாழ்ந்த ஆசைகளை விட்டு அதிக சுத்தமான ஆசைகளைத் தெரிந்தெடுக்க தூண்டி இவைகளை ஆதரிக்கச் செய்கின்றது "ஆசையை நீக்குங்கள்" என்று சொல்வது அநேகருக்கு வீண் பிரயோஜனமில்லாத வார்த்தை. உண்பதிலும் குடிப்பதிலும் காமத்திலும் உழலும் ஒருவனுக்கு அவைகளைத் தவிர்க்க உதவிபுரிய வேண்டுமானால் சுவர்க்கலோக இச்சையை அவன்முன் வைக்கலாம். ஆனதுபற்றி தான் எல்லா மதங்களும் சுவர்க்கத்தைப் பற்றியும், நரகத்தைப் பற்றியும் அவ்வளவு போதனைகளை கொடுத்துவருகின்றன. புத்தபகவானும் சாதாரண ஜனங்களுக்குச் சொல்லும்போது இவைகளை எடுத்துச் சொன்னார்.

மார்க்கத்தில் நடக்க இச்சிப்பவன் சுவர்க்கலோகத்தின் இச்சையை விடவேண்டியது மாத்திரமல்ல; இன்னும் பிறப்பிலிருந்து தான்மாத்திரம் விடுபடவேண்டும் என்கிற விருப்பத்தையும் ஒழிக்க வேண்டும். அதன் காரணம் வெகு தெளிவாயிருக்கிறது, மாஸ்டர்கள் அதை இங்கே சொல்லுகின்றார். நீ உன்னை முற்றிலும் மறந்திருப்பாயானால் உன்னைப்பற்றிய விஷயங்களைக் குறித்து நீ நினைத்துகொண்டிருக்கமாட்டாய். மாஸ்டர்களுக்காக வேலை செய்ய உனக்கு கருத்திருக்குமானால் அவ்விஷயங்கள் மேலிருக்கும் ஆசையை ஒழித்திருக்கவேண்டும்.

ஒரு வகையிலோ அல்லது மற்றொரு வழியிலோ ஊழியஞ் செய்ய விரும்புகிறவர்கள் அநேகர் இருக்கின்றார்கள்; ஆனால் சிஷியனே, மாஸ்டருடைய இச்சையின்படி அவருக்குவேண்டிய இடத்தில் செய்யப் பிரியப்படவேண்டும். இதயம் (மனசு) ஏதோ ஒன்றில் கட்டுண்டிருக்கிறவரையில் நிபந்தனை இல்லாத அவ்வித சேவகஞ் செய்யமுடியாது. 'உபனிடதம்' ஒன்றில் சொல்லுவதைப்போல் "இதயத்தைக் கட்டியிருக்கும் கயிறுகளை அறுக்கிறவரையில் மனிதன் ஜீவன் முக்திநிலையை அடையமாட்டான்" இதயத்தைக் கட்டியிருக்கும் கயிற்றில் நாம் வெகு முக்கியமென்றிருக்கும் அன்பின் வகைகளும் சேர்ந்திருப்பதாக நினைப்போமானால் அது வெகுகடினமை

யானவிஷயமாக ஒலிக்கின்றது; என்றாலும் அதில் இதயத்தை (மனதை) முறிக்க வேண்டியது என்று சொல்லவில்லை. ஆனால் அதை சுற்றிக் கட்டியிருக்கும் கட்டை உடைக்கவேண்டும். இப்படி செய்வதால் இதயத்திலிருக்கும் அன்பிற்கு வரம்பில்லாதபடிச் செய்யவேண்டும். நான சொல்வதைத் தவறான வகையில் கொண்டு அன்புபாராட்டுவது விரும்பத்தக்கதல்லவென்று சொன்னேனென்று நினைக்காதீர்கள்; பற்றாகக் கட்டுவது அன்பல்ல; பின்னை அநேகமாய் அதில் சேர்ந்திருக்கின்ற காமியத் தன்மையின் அம்சங்கள். ஒருவனிடத்திலிருக்கும் ஆன்மா மற்ற ஆன்மாவினபேரில் காட்டும் அன்பு இயற்கையாகவே எப்போதுமுள்ளது. நாம் என்ன முயற்சி செய்த போதிலும் அதை மாற்றமுடியாது. ஆனால் ஆன்மாபேரிலிருக்கும் அன்பை அதன் வெளி உருவமாகிய கோசத்தின் மேல் நாட்டும் போது அது பந்தப்படுத்துகின்றது. இவ்விதமாய் அன்பு கூட தானாக ஒரு விலங்காகிவிடும்.

மாஸ்டர்களுடைய சேவகத்திற்கு உன்னை தடுக்கும் ஒவ்வொரு கட்டைதறிக்க சதாமுயற்சி யோடிருப்பதுவொனறே தவிர அவருடைய வேலைக்கு நீ விடுபட்டவனாக இருக்கும் நிலைக்கு வர வேறு வழியாதும் கிடையாது. உனது அன்பில் ஏதாவதொன்று உனக்கு வருத்தம் கொடுப்பதாக இருந்தால் அதில் காமியத் தன்மை (சுயநலம்) இருக்கின்றது, அதை நீக்கிவிடவேண்டும். அதை ஒழித்துவிட்டால் உனது அன்பு மிகத்திடமாயும் மிக நேர்மையோடும், மிக சுத்தமாயும் நிலைத்திருக்கும். மேலும் அப்பேர்ப்பட்ட அன்பு மாஸ்டர்களுடைய வேலையைத் தடுப்பதில்லை. ஓர் ஊரில் உனக்கு இஷ்டமானவனிடத்தில் போயிருக்க உனககுப் பிரியம் இருப்பதாக வைத்துகொள்வோம்; நல்லது போகவேண்டுமெனும் கருத்தை விட்டுவிடு. முக்கியமான ஜனங்களிடத்தும், விஷயங்களிடத்தும், உன்னை காமியார்த்தமாகக் கட்டும் விலங்குகளை விழிப்புடன் தறிக்க வரும் சந்தர்ப்பம் இது. இவ்வித கட்டுகளை நறுக்கிவிடு.

இதை நான் அதிதீவிர ஊக்கத்துடன் இருப்பவருக்குசொல்லுகிறேனே தவிர மெதுவாய்க் கஷ்டமில்லாமல் விருத்தியடையும் சாதாரண வழியில் செல்பவருக்குச் சொல்லவில்லை. இந்த வழி

யில் செல்வதால் யாதொரு குற்றமும் இல்லை. ஒவ்வொருவனுக்கும் மெதுவாயாவது துரிதமாயாவது அவன் இஷ்டப்படி முன்னுக்குப் போக சுதந்திரமிருக்கின்றது. ஆனால் நான் இப்போது காரியக் கருத்தோடு இருப்பவருக்கும், மனப்பூரணமாய்த் துரிதமாய்ப்போக ஊக்கமுடையவருக்கும், சொல்லிகொண்டு வருகிறேன். மாஸ்டர்கள் இவ்வித ஊக்கமுடையவரை எதிர்பார்த்துகொண்டு இருக்கின்றார்கள். அதிகமாக காண்கிறதில்லை. இன்னொருமுறை எனது அநுபவத்திலிருந்துப் பேசுகின்றேன். ஏனெனில் எனக்கு இவ்வழியில் சங்கடங்கள் ஏற்பட்டன. அப்போது நானே என்னை சீர்திருத்தத்துடங்கினேன. ஒரு சிநேகிதருடன் இருக்க மெத்த ஆசை வந்தபோது அவரிடமிருந்து விலகியிருக்கப் பிரயத்தனப்படுவேன். உன்னிடத்தில் சாதுர்யமும் சாமர்த்தியமும் இருந்தால் உள்ளுக்குள்ளே பல முறையிலும் பந்தக்கட்டை யவிழ்த்து மற்றவர்களுக்கு அப்படிச் செய்ததாகக் காட்டாமலே இருக்கலாம். முன்பிருந்தபடியே அன்பு பாராட்டிகொண்டிருக்கலாம். மேலும் வெளிப்பாவனையில் ஒருவித வித்தியாசத்தையும் காட்டாது இதயத்திலிருக்கும் சொந்த சாமியார்த்தமான பந்தத்தை அவிழ்த்துவிடலாம். செய்வது எப்படியென்றுத் தெளிவாய்ப் பார்த்துகொண்ட பிறகு அதை கண்டிப்புடன செய்ததால் நம்மில் சிலர் அநேகரைவிட அதிக விருத்திக்கு வந்திருக்கின்றார்கள். உன்னை கட்டியிருக்கும் பந்தங்கள் எல்லாம் விடுகிறவரையில் மாஸ்டருடைய வேலையை நீ முற்றிலும் கவனிக்க உன்னால் முடியாது எனும் உண்மையை நீ ஞாபகத்தில் வைத்திருப்பாயானால் பிரயத்தனம் சுலபமாய் வருவதைக் காண்பாய்.

C. W. L.:—இவ்வாக்கியத்தில் சுவர்க்கத்தின் இச்சை தேக ஆன்மாவைச் சேர்ந்ததாகக் காட்டுகிறது. மானிட ஜன்மத்தில் ஆரம்பபடிகளுக்கு வேண்டியதுதான். என்றாலும் சிஷியனுக்காக ஏற்பட்டதல்ல. விகாசமுறையில் இதற்கு ஓர் இடமிருக்கின்றது. காட்டுமிராண்டி உண்பதிலும், குடிப்பதிலும் இவ்விதமான சிற்றின்ப எண்ணங்கள் நிறைய வைத்திருக்கிறான். உயர்வான சுத்த ஆசைகளைக் கைகொள்ளும் நிலைக்கு அவன் வரவேண்டியிருப்பதால் அவனிடத்தில் நிராசையைப்பற்றிப் பேசுவதில் பிரயோஜன

மில்லே. அவனுக்கு "உன்னுடைய ஆசைகளைச் சுத்தப்படுத்து. நீ நினைப்பதைவிட சிறப்பான வேறு விஷயங்கள் இருக்கின்றன. மேலும் பொங்கி எழும் உன்னுடைய உணர்ச்சிகளைத் தடுத்திருந்தாலொழிய இனி அவைகளை போக்கமுடியாது" என்று இதைத்தான் சொல்லக்கூடும். ஜனங்கள் படிப்படியாகத் தான் மேலே போகக்கூடும். அதிக சாமர்த்தியமுள்ளவன்தான் மார்க்கத்திலுள்ள உயர்ந்த படிகளை சீக்கிரத்தில் ஏறமுடியும். எனினும் இப்புத்தகத்திலுள்ள வார்த்தைகளை வாசித்து ஆல்கியூனி நடந்ததைப்போல நடக்க இச்சிப்பவர்கள் எல்லாவித காமிய ஆசையை உடனே விட்டொழிக்கத் திடஞ்செய்து கொள்ளவேண்டும். ஏனெனில் அது பந்தப்படுத்துகிறது. ஒரு கடுகளவு காமியம் அன்போடிருக்குமானால் அதுகூட இதயத்தைக் கட்டுகின்றது என்று முந்தியே சொல்லியிருக்கிறேன். காமியார்த்த நினைவு முற்றிலும் அதில் இல்லாதிருக்கும் பக்ஷத்தில் அது இதயத்தின் சக்தியாகிறது. பந்தத்தை உடைத்தாலொழிய, காமியத்தைக் களைந்துவிட்டாலொழிய, அன்புகூட தடுக்கவும் தடுக்கும், உதவவும் உதவும்.

இந்தியாவிலும் இதர இடங்களிலும் நிஷ்காமியமாயிருக்கும் அன்போடு காமியமான ஆசைகளைக்கலந்து குழப்புவதால் இதைப்பற்றித் தவறான கருத்துகள் அதிகமிருக்கின்றன. சில நியாய சாஸ்திரிகள், வருத்தம் வராதபடி அன்பை ஒதுக்கிவைத்துத் தங்களுக்கு நேரும் எதைப்பற்றியும் விரக்தியோடிருந்து அவர்களுடைய மனதை கல்லாக்கிகொள்ள எத்தனிக்கின்றார்கள். ஆனால் அது தவறான வழி. அது அவர்கள் அறிவை கூர்மையாக்கி பக்தியில்லாதபடிஒரு பகுதியை மாத்திரம் விருத்திசெய்கின்றது. பெரு அலைபோன்ற உற்சாக உணர்ச்சிகளை வெளிக்கு எடுத்துச் சொல்ல திறமை நமக்கிருக்கவேண்டியது. ஆனால் அவைகள் ஆன்மாவின் உயர்ந்த வளர்ச்சியின் பிரதிபிம்பமாகக் காட்டினபடிக் கண்டிதமாய்த் தனக்கு அடங்கியிருக்க வேண்டியதே தவிர, ஆசை ஜீவபூதத்தின் இச்சைபடி ஓடும் காமதாப அலைபோலிருக்கக்கூடாது. தாபத்தை (Emotion) அடக்கியாளப் பயந்து அதை தொடுக்காது ஒழித்து விடுதலானது எப்படியிருக்கிறதென்றால் கெட்ட கருமம் செய்ய நேரிடுமே என்று யஞ்பது ஒன்றையும் செய்யாமலே சும்மா இருப்பதை ஒத்தி

ருக்கிறது. நம்முடைய காரியங்களாலும், தாபக்கிளர்ச்சிகளாலும் எண்ணங்களாலும் மானிடவர்க்கத்திற்கு மேன்மேலும் நாம் உபயோகப்பட வேண்டுமென்றே மாஸ்டர்கள் நமக்காக வழிவைத்திருக்கின்றூர். இம்மூன்று வகைகளிலும் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாய்ச் செய்யக்கூடுமோ அவ்வளவுக்கவ்வளவும் அதிக நலம்.

"தன்னைப்பற்றிய ஆசைகளெல்லாம் போய் விட்டபோதும், உன் வேலையின் பயனைப்பார்க்க வேண்டுமென்கிற விருப்பம் இன்னுமிருக்கக் கூடும். நீ யாருக்காவது உபகாரஞ் செய்தாயானல் அவனுக்குதவியது எவ்வளவென்பதைப் பார்க்க உனக்குப்பிரியமிருக்கக்கூடும். ஒருக்கால் அவனும் அதைப்பார்க்க வேண்டுமென்றும், உன்னிடம் நன்றி காட்டவேண்டுமென்றும், உனக்கு இச்சையிருக்கலாம். எப்படியிருக்கினும், இதுவும் ஆசையே; தவிர இன்னும் நம்பிக்கை குறைவே."

A. B.:--இதை கீதையில் பலனுக்காக வேலை செய்வதல்லவென்று சொல்லிவருகிறது. முடிவில் வருவது பலனே. வேலையை உண்மையாகச் செய்துகொண்டிருந்தால் அதன் பலனைப்பற்றி கவனிக்க நேரமிருக்காது; முடிந்த வேலையைப் பார்க்கவும் நேரமிருக்காது. ஒன்றை செய்து முடித்தவுடன் மற்றொன்று கையோடே செய்ய காத்திருக்கும். நீ பலனைப் பார்த்துகொண்டிருந்தால் காலம் வீணய்க் கழிக்கின்றூய். நீ முன்னமே செய்து முடித்த வேலையைப்பற்றி நினைத்துகொண் டிருப்பாயானல் அடுத்த வேலையை எப்படி நடத்தக்கூடும். ஒருவனுக்கு ஒத்தாசை கொடுப்பது எல்லா வேலையைவிட மிக இன்பகரமானது; ஏனெனில், அதன் பின்னல் சுயகாமிய பக்ஷம் ஒன்று இருக்கிறது. ஒத்தாசை ஏற்றுக்கொண்டவன் அதை நன்றியறிகின்றூனே வென்றுத் திரும்பிப்பார்க்காதே. நீ ஒருவனுக்கு வெகுமதி கொடுத்தபிறகு அவன் பின்னேடே ஓடிப்போய் அவன் நன்றிபாராட்டுகிறானே என்பதைப்

பார்த்து உபகாரஸ்துதியை (Thanks) கேட்பதுபோல் இருக்கின றது. எவனொருவன் இவ்விதஞ் செய்கிறானோ அவன் கொடை கொடுத்தவனல்லன். அதை விற்றுவிட்டவன். இது சந்தை வியாபாரம். இவ்வளவு உதவிக்கு இவ்வளவு நன்றி. நீ இவ்விடம் வியாபாரஞ் செய்யக்கூடாது. கிருஸ்து பகவான் கோயிலண்டை வஸ்துக்களை எக்னார்த்தமாக விற்று கொண்டிருந்தபோதிலும் அவர்களை எனது தந்தை வீட்டை மண்டிக்கடையாய் உபயோகப் படுத்தாதீர்கள் என்று சொல்லி துரத்திவிட்டதைக் கவனியுங்கள்.

C. W. L:— குப்தனைவிட அதிக வேலை செய்பவர் எவரு மில்லை. அவனை ஒரு காரியத்தை முடித்த தக்ஷணம் மற்றொன்றைத் தொடுக்கிறானே தவிர தான் செய்துமுடித்ததை நினைறு உற்றுப் பார்த்துகொண்டிருக்கிறதில்லை. உன்னை போர்க்களத்தில் ஒரு நர் ஸாக (Nurse) அல்லது ஒத்தாசை கொடுப்பவராக வைத்துக்கொள் வோம். உனனால் கூடியமட்டில் ஒருவனுக்கு உதவிகொடுத்தவுடன மற்றொருவனைப் பார்க்க வேண்டியிருக்கிறது. கடைசியாய் என்ன ஆகும் என்று அரைமணி நேரம் நின்று ஒருவனையே பார்க்க உன் னால் முடியாது. அவன் பிழைப்பானா அல்லவா என்பதைக்கூட பார்க்க உன்னால் முடியாது. மாஸ்டர்கள் வேலையிலும் இந்தப்படி தான். முடிவில் வரும் காரியங்களைப்பற்றி நிறுத்தி நினைக்க நமக்கு நேரம்இல்லை. இன்னும் பார்க்கில் அந்த காரியங்களில் நமக்கிருக்கும் சம்பந்தத்தைப்பற்றி நினைக்கவும் நேரமில்லை. நம்முடைய முயற்சி கைகூடிவர வேண்டுமென்பதும் பின்பு அதைப் பார்த்து உற்சாகப் படுவதும் மனுஷீகத் தன்மைதான்; ஆனால் அவ்விதமான அல்ப விஷயங்களைத் தாண்டி நாம் இருக்கவேண்டும். ஏனெனில் நாம் கவனிக்கவேண்டிய வீடு மானிடவர்க்க வரம்பைத் தாண்டிபோவது. ஒரு விஷயத்தை நன்றாய்ச் செய்துமுடித்தால் உண்மையில் சந் தோஷமடைவோம். ஆனால் மற்றவன் செய்துமுடித்த விஷயத் திலும் நம்முடையதைப்போலவே களிப்புடனிருக்க வேண்டும்.

**சில சமயங்களில் உன்னால் உதவியடைந்தவனை கூட அதைப் பார்க்கச்செய்து நன்றியறியச் செய்ய வேண்டுமென்கிற இச்சை யைப்பற்றி இங்கே சொல்லிவருகிறது. ஒருவனுக்கு அவ்வித**

உணர்ச்சி வருமானால் அவன் அதை கொடுத்ததல்ல; விற்று விட்டான். கடவுள் அன்பைப் பொழிவதைபோலவும், சூரியன் பிராண சக்தியைப் பொழிவதைப் போலவும் கொடுப்பதே கொடை என்று குப்தமுறையில் அங்கீகரித்திருக்கின்றது.

> "நீ உதவிசெய்ய உன் பலத்தை பொழிந்தால், நீ பார்த்தாலும் அல்லது பார்க்காவிட்டாலும், அதற்குப் பலனிருந்துத்தான் தீரும். நீ கர்மநியதிகளை அறிந்திருப்பாயாகில், அந்தப் படிக்கிருக்குமென்று உனக்குத் தெரியும்."

A. B.:—"இமிடேஷன் ஆப் கிரைஸ்டு" என்ற புத்தகத்தில் ஒன்றையும் கோராது கடவுளுக்கு எவன் சேவகம் செய்வான்?" என்று ஒரு கேள்வி கேட்டிருக்கிறது. சிஷியன் வேலையின் பொருட்டே வேலையைச்செய்யவேண்டியதே தவிர பலனைப் பார்க்கும் பொருட்டல்ல. மேலும் "நான்உழைக்கிறேன' என்கிற திருப்தியான சுகநினைவோடிருக்கும் பொருட்டுமல்ல. உலகத்தின்பேரில் அவனுக்கும் பிரேமையிருப்பதால் அதற்குஉழைப்பதற்காகத் தன்னை சமர்பித்திருக்கவேண்டும். உண்மையாகவே செய்கைக்குப் பலன் இருக்கத்தான் வேண்டும்; எனெனில் நாம் நியதியோடமைந்த உலகில் வாழ்கிறோம். ஆகையால்தான் பலனை நம்முடைய சொந்தமாகக் கருதவேண்டிய அவசியமில்லை. அநேகமாய் நம்முடைய வேலையானது பூவுலகில் சடுதியாய்ப் பலனைத் தரக்கூடியதாக விராது. ஆனால் முடிவிற்குக் கொஞ்சம் அருகாமையில் கொண்டுபோய் விடும். மற்ற எவரோ ஒருவர் வந்து வேலையை எடுத்து முடிவாக்குவார். ஆனால் இதுவரைக்கும் பலனைப் பார்க்காது உழைத்தவர்கள் இல்லாதிருக்கும் பக்ஷத்தில் அக்காரியம் முடிவுபெற்றிருக்காது.

முக்கியமான வேலை செய்யும்போது நியதியில் நம்பிக்கை வைக்காமல் செய்யமுடியாது. எனெனில் பெருத்த காரியங்களெல்லாம் நிதானமாய்த்தான் முடியும். உதாரணமாக மநுவின் வேலையைக் கவனியுங்கள். பலன் என்று சொல்லும்படியானதைப் பார்க்க வருஷம் ஆயிரக்கணக்காய்ச் செல்லுகின்றன. ஒரு பெரிய

வீட்டைகட்டும்போதும் இதே விதந்தான். ஏனெனில் அதற்கு ஆழ மான அஸ்திபாரம் தேவை. நம்முடைய வேலையோ, வெகுவாய் பார்வைக்கு வராத அஸ்திபாரத்தில் செய்வதாயிருக்கிறது. பிற்பாடு யாராவது ஒருவர் வந்து தரைமட்டத்திற்கு மேல் செங்கல்லை ஏத்து வார்கள். அப்போது உடனே பார்க்கமுடியும். ஆனால் அஸ்தி பாரம் வீணாய்ப் போய்விட்டதா ?

பலன் வந்தேதான் தீரும். ஆதலால் வேலையை அமரிக்கை யுடன் இரஸாயன முறைப்படிச்செய்; விக்கினம் ஒருபோதும் வராது. விக்கினமெல்லாம் பலனைப் பார்க்கவேண்டுமென்கிற ஆசை யால் வருகின்றது. முடிவைக் காணாமல் வெகுகாலம் விடாமுயற்சி யோடு ஒரு வேலையைச் செய்துகொண்டிருக்கலாம். ஒருநாளில் அதன் முடிவு பளிச்சென்றுத் தென்பட்டு வரும்.(Chemist) இரஸா யனசாஸ்திரி உப்புநிறையக் கரைக்க உப்பை நீரில் கொஞ்சங் கொஞ்சமாய் போட்டுகொண்டே இருக்கலாம். கொஞ்சநேரம் வரை யில் நீரில் வித்தியாசம் ஒன்றும் தோன்றாது. அப்புறம் கடைசியாக ஒரு கடுகளவுபோட்டதும் எல்லாம் இறுகிக் கெட்டி உப்பாகிக் கீழே படியும். இப்படித்தான் நம்முடைய வேலையிலும் திடீரென்று முடிவைக் காட்டும். நாம் மகாகுரு வருகைக்காகச் சித்தஞ்செய்து கொண்டு வருகிறோம். நம்முடைய வல்லமையெல்லாம் அமரிக் கையுடனும் விசுவாசத்துடனும், சாந்தத்துடனும் அவர் வேலையில் செலுத்தவேண்டும். இந்த வேலைக்காகவே நம்மை அற்பணஞ் செய்யவேண்டும். மைத்திரேய பகவான் வரும்போது நாம் செய் ததையெல்லாம் எடுத்துகொள்ளுவார். அப்போது அதன் பலன் உலகில் வெளிப்படும்.

C. W. L. :—யாதொரு பெருத்த பிரயத்தனம் முடிவாகிவர கூட்டங்கூட்டமாய் அநேகமாய் அநேகர் தொடர்பாகவே வேலை செய்ய வேண்டியதா யிருக்கின்றது. உலகில் ஒரு பெருத்த சீர் திருத்தத்தை ஏற்படுத்த வேண்டியிருந்தால் சாதாரணமாய் ஒரு வனோ அல்லது சிலரோ சேர்ந்து அதற்குத் தேவையானதைப் பற்றி யோசித்துப்பேசவும், எழுதவும் தொடங்குவார்கள். இவர்களை ஜனங் கள் பழிப்பார்கள்; இவர்கள் செய்தவேலைக்குப் பலன ஒன்றுமில்லா

ததுபோலக் காணப்படும். ஆனால் இவர்கள் எடுத்தகாரியத்தைப்பற்றி சிலருக்குத் திருத்தமாய்ச்சொல்லி அவர்களைச்சேர்த்து வருவார்கள். பிறகு இவர்கள் அதை பொதுஜனங்கள் முடிவாய் ஏற்றுக்கொள் ளும் வரையில் செய்துகொண்டே போவார்கள். முந்தியே ஆரம் பித்துப் பலன் இல்லாததுபோல் காணப்பட்ட வேலையைச் செய்து வராவிட்டால் பிந்தி வந்தவர்கள் முடிக்கக்கூடாததாக விருக்கும்.

அநேக தடவைகளில் நமது வேலையின் சுபாவம் அதன் முடி விற்குக் கொஞ்சம் கிட்டே கொண்டுபோய் விடக்கூடியதா யிருக் கும். வேறு யாராவது ஒருவர் வந்து அதை முடித்துவிடுவார்கள். அப்போது அவருடைய வேலையை அங்கீகரித்து (மதித்து) முழு வதும் அவர் செய்துவிட்டதாக நினைக்கப்படும். இதை கவனிக்கக் கூடாது; பேர் பெற வேண்டுமென்கிற அக்கரை சற்றும் இருக்கக் கூடாது; ஆனால் வேலை செய்யச் சந்தர்ப்பம் கிடைத்ததற்காகச் சந் தோஷப்பட்டிரு. "இது எனக்கு கஷ்டமாயிருக்கிறது" என்று ஒருவனும் நினைக்கக் கூடாது. நாம் செய்ததை நம்முடைய கர்மம் பார்த்து கொள்ளும். அதைப்பற்றி தற்காலத்தில் உலகம் என்ன செய்துகொண் டிருக்கிறது, சொல்லிகொண் டிருக்கிறது என்பது அநாவசியம். ஒருவன் அறிவோடு,இரஸாயன முறையின்படி பலன் என்கிற கோரிக்கையில்லாமல் செய்வானானல் எப்படியோ எங்கிருந் தாலும் எல்லா நல்ல காரியமும் நல்லதைச் செய்யும், விக்கினம் எப் போதும் நேரிடாது.

பகவான் வரும்போது நம்முடைய வேலையெல்லாம் அவர் எடுத்து முடித்துவிடுவார். அப்போது எல்லாம் அவருடைய வேலை யாய்த் தெரியும். ஒருவிதத்தில் வேலையைச்செய்ய அவரால் அருள் ஊட்டம் பெற்றிருப்பதால், எல்லாம் அவருடையதே. என்றாலும் அதன் பெரும்பாகம் பார்க்கமுடியாத கந்தர்வ தேவர்களாலும், பிர யோஜன மற்றதாகத் தோன்றின வேலையைத் தாழ்மையோடு அநே கர் முந்தியே செய்து வந்ததாலும் முடிவுபெறும். அவ்வித ஜனங் களில் நாம் ஒருவராய் அமைந்து இருக்க சமயம் நேர்ந்தால் நாம் கோரியபடி உண்மையில் மேன்மையான உரிமை நமக்கு கிடைத் திருக்கிறது.

இயற்கையாகவுள்ள நியதிகள் ஒருவனுக்குத் தெரியுமானல் அவைகளை எல்லா சந்தர்ப்பங்களிலும் உபயோகிக்கமுடியும் நாம் செய்யும் பூலோக வேலையிலிருப்பது போலவே அந்தரங்க லோகங் களில் சதா செய்யவேண்டி யிருக்கும் எல்லா வேலையிலும் இது உண்மையாகத்தான் இருக்கிறது. நம்முடைய ஒவ்வொரு எண்ண மும் காமலோகத்திலாவது, மனோலோகத்திலாவது ஓர் உருவமாகி வருகிறது. இது நாம் நினைக்கிறவ னிடத்திலாவது, விஷயத்தி னிடத்திலாவது போய் அதனுடைய தரத்திற்குத் தக்கபடி நல்ல தற்கோ அல்லது கெட்டதற்கோ அவனைச் சுற்றிகொண்டிருக்கும், அல்லது மோதிப்பொழியும், தாக்கும். சங்கடப்படுத்தும் எண்ண உருவத்தை செய்வதைவிட நல்ல எண்ண உருவத்தை செய்வதில் கஷ்டம் அதிகமில்லை. இது மனதின் தன்மையைப் பொறுத்தது. "என்னுடைய மனதின் நோக்கம் என்னுடைய அக்கரை, தற் சமயம் என்னுடையது தான்" என்று நீ நினைக்கக்கூடும். ஆனல் அது மற்றவரையும் தாக்குகிறது. இனனும் தற்சமயத்ததல்ல மறு நாளோ, மறுமாதமோ, அல்லது மறுவருஷத்திலோ உனனையும தாக் கும். ஏனெனில் அது அதே எண்ணத்தை ஜனிப்பிக்கும் பீஜம். அதுமாறி உன்மேல் தாக்கும். மாறிமாறி நினைப்பதால் அந்த எண் ணம்தானே பலப்பட்டு வருகிறது. ஒவ்வொரு வகையிலும் உபயோ கப்படும்படியான எண்ண உருவங்களை உண்டாக்குவது நம்மைச் சார்ந்தது. ஏனெனில் சாதாரண பார்வைக்கு அவைகள்தெரியாவிட் டாலும் தவருமல் உதவிசெய்யும்.

> "ஆகையால் கைம்மாறு எதிர்பாராமலே நீதிக்கென்றே நீதியானதைச் செய்ய வேண்டும். பலனைப் பார்க்க வேண்டுமென்ற எண்ணம் வையாமலே வேலையை வேலையின் பொருட்டே செய்யவேண்டும். உலகத்தார் பேரில் உனக்கு அன்பிருக்கும் காரணத்தாலும், அவர்களுக்குத் தொண்டு செய்யாமலிருக்க உன்னல் முடியாத காரணத்தாலும் அவர் சேவைக்கென்றே யுன்னை நீ யொப்புவித்திருக்க வேண்டும்."

C. W. L:—நோக்கங்கள் எல்லாவற்றிலும் அன்பு உண்மையில் மிகவும் பெரியது. இப்புஸ்தகத்திலும் இதன கருத்தின்படியே தொகுத்த சில நூல்களிலும் இருக்கும் போதனைகளில் அன்பானது ஒவ்வொரு விஷயத்திற்கும் சமாதானம் (அருத்தம்) சொல்வதாலும், எல்லாவித கஷ்டங்களை நிவர்த்திப்பதாலும், வாழ்க்கையின் நோக்கத்திற்கு இது (அன்பு) அவசியமாக வேண்டியிருப்பதாலும், இதை பலமாய்திருப்பித் திருப்பிச் சொல்லுவதைக் காணலாம். அது ஏனெனில் லோககுருவானவர் வரும்போது அவருடைய போதனைகளிலிருக்கும் விதத்தைக்காட்டும் குறிப்பாயிருக்கின்றது. அவருக்காகத் தங்களுக்குதக்க சிறசிறு வழிகளில் சித்தம் செய்துகொள்ள பிரயத்தனப்படுபவர்களுடைய வாழ்க்கையில் அதன் சாயை பலமாய் முனனமே தாக்கி யிருக்கினறது,

இப்புத்தகத்தில் முழுவதிலும் மாணுக்கன் கவனிக்க வேண்டிய இன்னொரு விஷயம் யாதெனில் நாம் எல்லோரும் முற்றிலும் ஊக்கமுடையவர்கள் என்பதாகவும், நமக்கு சேவகமென்பது ஒரு முக்கிய விஷயமாக இருக்கின்றது என்பதாகவும், மாஸ்டர் கொண்டிருக்கினமுர். நம்மை சுற்றி கொண்டும் ஒட்டிகொண்டும் மற்ற கருத்துகள் ஏதாவது இருக்குமாளுல் அவைகளை ஒழித்து நம்மை நல்ல மனோ நிலைக்கு கொண்டுவருவது நிச்சயமாய் உன்னதமான வழி. சேவகத்தைத்தவிர மற்றஎண்ணம் யாதும் அவருடைய மனதில் சுத்தமாயில்லை என்ற நினைவு நம்மை சித்தப்படுத்தி கொள்ளுவதற்குப் பெருத்த தூண்டுகோலாக விருக்கின்றது.

பலகாலும் நம்முடைய வழியின் குறுக்கே நாமே வருகிறோம். நாம் ஓர் பக்கமாய் நின்று நம்முன் இருக்கும் ஆன்மாவிற்கு வேலை செய்ய ஒரு சந்தர்ப்பம் கொடுக்கவேண்டும். அதாவது நாம் சுயகாயியார்த்தமாய் நமக்கென்று ஏதோ கொஞ்சம் ஒதுக்கி வைத்திருக்கும் வரையிலும் மாஸ்டருடைய வேலைக்காக கொடுக்கமுடியாமல் ஏதோ ஒன்றை வைத்திருக்கும் வரையிலும் நாம் நமது வழியின் குறுக்கே நிற்கிறோம். தனக்கென்று யாதும் பிடித்து வைக்காதவனையும். மாஸ்டருடைய சேவகத்திற்கு தன்னை முற்றிலும் அர்ப்பணஞ் செய்பவனையும், எதையும் இழுத்துப் பிடிக்காது எல்-

லாம் கொடுப்பவனையும், இப்பேர்ப்பட்டவனை காண்பது அரிது. அரிதுதான். என்றாலும் அக்குணத்தைப் பெற்றிருப்பவன் வெகு தூரம் வெகு விரைவாய்ப் போகமுடியும்.



## 15-வது அத்தியாயம்

### சித்திகள் மேலாசை.

*"நீ சித்திகளின் பேரிலாசை வைக்காதே. அவைகள் உனக்கிருப்பது உத்தமமென்று குருநாதன் எண்ணும்போது உனக்குவரும்."*

A. B:—'சித்திகள்' என்ற பதத்தில் ஸ்தூலதேகத்திலும், காமமய தேகத்திலும், மனோமய தேகத்திலும் இருக்கும் (பூத பௌதிக அணுக்களால் சேர்க்கப்பட்ட) இந்திரியங்கள் வழியாய்ப் பிரக்ஞையால் வெளிப்படுத்தும் எல்லாவித சக்திகளும் அடங்கியிருக்கின்றன. ஆதலால் அறிவாகக் காட்டும் சாமர்த்திய மெல்லாம் சித்திகளே. சாதாரணமாய் மூளையின் மூலமாய் வரும் மனோ சக்திகளுக்கும் இன்னும் வேறு வகையில்வரும் தேவப்பார்வை முதலிய சித்திகளுக்கும் உண்டாக்கிய வித்தியாசம் கேவலமானது. தங்களுடைய ஸ்தூல தேக மூலமாய் எல்லா வேலையிலும் ஒருவகை வல்லமைகளை (சக்திகளை) உபயோகப்படுத்தி கொண்டிருக்கும்போதே மற்றவைகளை அடைவது சரியானவையல்லவென்று அநேகர் சொல்லுவதை கேட்கிறோம். ஸ்தூல பார்வையை உபயோகித்துகொண் டிருக்கும்போது காமலோகப் பார்வையைக் கண்டனம் செய்கிறார்கள். பூலோகப் பார்வையும் தேவலோகப் பார்வையும் இவ்விரண்டையும் ஒரேமாதிரியான தடைகளென நினைக்கும் இந்திய யோகிகளைப்போல் நியாயமான முறையில் நீயும் கருத சித்தமாயிருந்தாலொழிய அதை கண்டனஞ்செய்வது நியாய விரோதமானது. இவர்கள் சுத்தமாய் நியாயப்படி நடப்பவர்கள். இந்திரியங்களின் வர்த்தமானங்களை மதிக்கிறதில்லை. ஏனெனில் தாங்கள் தப்பித்துக்கொள்ள வேண்டுமென்கிற மாயா உலகத்திற்கே இவைகள் கொண்டுபோய் விடுகின்றன என்று நோக்குகிறார்கள்- ஆனால் இவர்களுடைய அபிப்பிராயங்களை நான் ஒத்துகொள்ளவில்லை. சௌகரியத்துடன் இருந்துகொண்டு ஒருவனது திறமையை (சாமர்த்தியத்தை) எல்லா லோகங்களிலும் உபயோகப்படுத்துவது மெத்த நல்லது என்று நான் நினைக்

கிறேன். ஆனால் சீருடன்போகும் அவர்களுடைய நோக்கத்தை எடுத்தாலொழிய சித்திகளைக் கண்டித்துபேசும் வார்த்தைகள் அநேகமாய் அறிவீனம்.

உண்மை யாதெனில் காமதேகத்திலிருக்கும் இந்திரியங்களைப் பிரயோகிக்க ஆரம்பிக்கும்போது எப்போதும் அவைகள் தவறான வழியில் கொண்டுபோய் விடக்கூடும். ஆனால் ஒருவனுடைய தூல தேக இந்திரியங்களும் அப்படியேதான வஞ்சிக்கும் உதாரணமாக பார்வையில் சில மாயாதோற்றங்கள் அஜீரணத்தாலும், பித்தகோளாராலும் உண்டாகின்றன. என்றாலும் சாதாரணமாய் டாக்டர்கள் இவ்வகுப்பில் சேர்க்கும் அநேக விஷயங்களை நான் சேர்க்கவில்லை. உண்மையில் அவைகள் காமலோக அல்லது பிரேதலோக(Etheric)ப் பார்வைகள். நமது இந்திரியங்களால் வஞ்சிக்கப்படும் சாதாரண உதாரணம் எதுவெனில் சூரியோதயம். சூரியன் எழுந்து வருவதில்லை என்றாலும் வருவதாகப் பார்க்கின்றோம்.

இந்திரியங்களின் விவகாரங்களைப் புலனறிவிற்கு மேலான புத்தியறிவால் எப்போதும் திருத்தவேண்டி யிருக்கிறது. நீ காமலோகப் பார்வையை உபயோகிக்கும்போது அது உன்னை அடிக்கடி ஏமாறச்செய்கிறது. இதற்காகத்தான் மாஸ்டர்களால் தேறி வரப்பட்ட சிஷியர்கள் ஒவ்வொருவரும் அநுபவத்திற்கு வரும் முறையில் கண்டிதமாய் பயிர்ச்சிக்கப்பட்டு வருகின்றனர். பயிலுகிற சமயத்தில் பார்க்கிற ஒவ்வொன்றையும் எனனவென்று கேட்கப்படும். சிஷியனது உத்தரம் முதலில் அநேகமாய்ப் பிசகாயிருக்கும். பிறகு அவனது தப்பிதங்களை அவனுக்குக் காண்பித்து விவரமாகச் சொல்லி கொடுக்கப்படும்.

மாஸ்டர்களால் தேர்ச்சிபெறாத ஒருவனுக்கு இந்தபார்வை இருப்பதாக வைத்துகொள்வோம்; இவ்விதம் அநேகருக்கு வருவதுண்டு; ஏனெனில் சாதாரணமாய் விகாசமுறை கிரமப்படி காமதேக இந்திரியங்கள் வளர்ந்து வருகிறதனால் அவைகள் அநேகருக்குப் பார்வைகொடுக்க ஆரம்பித்திருக்கின்றன. அப்பேர்ப்பட்டவன் காமலோகத்தில் இங்கிருக்கும் குழந்தைபோல் தான் இருக்கின்றான். வீட்டுக் கடைசியிலிருக்கும் தீபத்தை எட்டிபிடிக்க குழந்தைத் தன்கையைநீட்டுவது உங்களுக்குத் தெரிந்திருக்கலாம். குழந்

தையின் குறைகளைச் சாதாரணமாய் அதனுடைய மூத்தோர்கள் திருத்தி வருகிறார்கள். குழந்தை இச்சிக்கும் வஸ்துக்களிடத்திற்கு தூக்கி கொண்டுபோவதால் அவைகள் தூரமாயிருக்கின்றன வென்று குழந்தை தெரிந்துகொள்கிறது. அப்படித்தான் நாமும் காமலோகத்தில் குழந்தையாயிருக்கின்றோம். புதிதாய் காமதேக இந்திரியங்களை உபயோகிக்க ஆரம்பித்தவனை குழந்தை என்றே சொல்லத்தகும். அவன் அநேக தப்பிதங்களைச் செய்வான். பெரியவர்கள் கண்பார்வையி லிருந்தால் கொஞ்சமேனும் பாதகமில்லை; அல்லது அவனுக்கு விதரணை அறிவு (பகுத்தறிவு) இருந்தால் அப்போதும் அவ்வளவு பாதகமில்லை. ஆனால் கேவலம் காமலோக வர்த்தமானம் ஒன்றை பெற்றவனும், அல்லது காமலோக காக்ஷியைப் பார்ப்பவனும், அநேக தடவைகளில் தனக்கு ஏதோ ஒரு திருவருள் பாக்கியம் கிடைத்ததாகவும் மற்றவர்களைவிட தான் பிரக்கியாதி பெற்றவனாகவும் எண்ணிகொள்ளுகிறான். ஆதலால், குழந்தைகள் பெரியவர்களிடத்தில் கற்க இஷ்டப்படுவது போல இவன் கற்கும்படியான நிலையில் இல்லை. ஆதலால் மெத்த கஷ்டம் உண்டாகின்றது.

C. W. L:—மாஸ்டர்களுடைய சிஷியர்களாக வருபவர்களைச் சாதாரணமாய்த் தேவப் பார்வை பார்க்கும் விதத்திலும், மேல் உலக வர்த்தமானங்களில் விவகரிக்கும் விதத்திலும், பயிலவேண்டிய முறையில், வெகுகாலம் பழகி வருகிறார்கள். அவ்விதமாய்ப் பயிலுதல் அநேகருக்கு மிக ஆயாசமானதாயிருக்கும் என்று நினைக்கின்றேன். மூத்த சிஷியன் இளையவனைத் தன்கீழ் வைத்துகொண்டு பலவகையான வஸ்துக்களை அவனுக்கு முன்போகச் செய்து அவன் பார்ப்பதைச் சொல்லும்படி கேட்பான். துவக்கத்தில் இளைய சிஷியன் சாதாரணமாய் எல்லாவற்றிலும் தப்பிதமாகச் சொல்லுவான்; ஏனெனில் பார்க்கும் விஷயங்களை இவன் (Focus) குறிப்புடன் பார்க்கிறதில்லை. இறந்தவனுடைய ஆசைமய தேகத்திற்கும் உயிருடனிருப்பவனுடைய ஆசைமய தேகத்திற்கும் உள்ள வித்தியாசத்தையும் அல்லது மனிதனுடைய சூக்கும தேகத்திற்கும் பக்ஷத்தோடு சிந்திப்பதால் உண்டாகும் மாயாவிரூபத்திற்கும் உள்ள வித்தியாசம் அவனுக்குத் தெரியாது. இவைகளிலும் இன்னும் அனேக

வழிகளிலும் அநுபவமில்லாது பார்க்கிறவன் ஏமாந்து போகக் கூடும். போதகர் பொறுமையுடன் அடிக்கொரு தரம் இவைகளை எடுத்துக் காட்டி அவைகளின் நுண்ணிய வித்தியாசத்தையும் சுட்டிக்காட்டி இவைகளைத் தெரிந்துகொள்ளும் விதத்தில் கற்று கொடுப்பார்.

இவ்விதப்பயிற்சி அவசியமாயிருப்பதால் ஆசைமய தேக இந்திரியங்களை முக்கியமாய் நம்பக் கூடியவைகளல்ல வென்று எவரும் நினைக்கக்கூடாது. இந்திரியங்களெல்லாம் பழகி தேறுகிற வரையில் நம்பத் தக்கவைகளல்ல. அப்போதுகூட புத்தி விதரணையோடு உபயோகிக்காதபோது நம்பத்தக்கவையல்ல. நாம் பிரதிகாலையிலும் சூரியன் எழும்பி உதயமாவதைக் காண்கிறோம். அது எழும்பி வருவதில்லை என்று நமக்குத் திட்டமாய்த் தெரியும், என்றாலும் எழும்பிவருவதைக் காண்கிறோம். அநுபவத்திற்கு வராத விஷயங்களைப்பற்றி குதற்கமுள்ளவர்கள் பார்க்காததை நம்பமாட்டோம் என்றும், ஆனால் பார்த்தால் நம்புவோம் என்றும், சில சமயங்களில் சொல்லுவதுண்டு. சிலர் இன்னும் அப்பாலும் சென்று, அதைத் தொட்டுப் பார்த்த பிறகு தான் சந்தேகமற நம்பமுடியும் எனகிறார்கள். ஒரு சிறு சோதனையால் இந்தப் பிழை நன்குவிளங்கும். மூன்று கிண்ணங்களில் ஜலத்தை ஊற்றுங்கள். ஒன்றில் அதிக சூடான ஜலம், மற்றொன்றில் பனிக்கட்டி போல குளிர்ந்த ஜலம், மூன்றாவதில் வெதுவெதுப்பாய் (இளஞ்சூடாய்) இருக்கட்டும். சூடானதில் ஒரு கை விரலும், குளிர்ந்ததில் மற்றொரு கைவிரலும் தோய்த்துச் சில நிமிஷம் வையுங்கள், பிறகு இரண்டு விரலையும் மூன்றாவது இளஞ் சூடான கிண்ணத்தில் தோயுங்கள், சுடு ஜலத்திலிருந்த விரல் குளிர்ந்திருப்பதாகச் சொல்லும். மற்றவிரல் சூடானதாகச் சொல்லும். இதனால் புலன்களை எப்போதும் திட்டமாய் நம்பத்தக்கவையல்லவென்று தெரிகிறது. இவைகள் சொல்லுவதை புத்தியினால் சோதிக்கவேண்டும். ஸ்தூலத்தில் இருக்கிறதைச் சோதிப்பது போலவே காமதேக இந்திரியத்தையும், மனோதேக இந்திரியத்தையும் சோதிக்க வேண்டியிருக்கிறது.

ஒருவன் சித்திகளை விரும்பினால் அவைகளை விருத்திசெய்ய சாதனைவேண்டும். எல்லாவகையிலும் அவன் திருத்தமாயிருக்க

முற்றிலும் தெரிந்துகொள்ளப் பலகாலும் அநேக வருஷங்கள் செல்லுகின்றன. இந்த தேவக்கண்பார்வை எவ்வளவுதூரம் சாத்தியமாகின்றது என்று தெரிந்துகொள்வது கஷ்டம். ஒரேஒரு உதாரணத்தை எடுத்துக்கொள்வோம் காமலோகத்தில் 2,401 வித பௌதிக உயிருள்ள அணுக்கள் (பூச்சிகள்) இருக்கின்றன. ஒருவன் திடமுடன் வேலையை நன்றாயும், சீக்கிரமாயும் செய்யவேண்டுமானால் இவைகளுக்குள் ஒன்றுக்கொன்றுள்ள வித்தியாசத்தைத் தெரிந்திருக்க வேண்டியதும் தவிர, எப்போது, எதை உபயோகப்படுத்த வேண்டியது என்பதையும் தெரிந்திருக்கவேண்டும். இந்த அறிவு இல்லாமலே வேலை செய்யக்கூடும். ஆனால் வீணில் வேலை அதிகமாகும். விரலைக் கழுவ குடம் தண்ணீரை ஒருவன்பேரில் ஊற்றுவதைப் போலிருக்கும்.

என்றாலும் பலத்தை வீணாய்ச் செலவழிக்கக்கூடாது என்பது முக்கியமான விலக்குகளில் ஒன்று. பலம் (புஷ்டி) என்பது அசல் வைப்பு; அதை கூடியமட்டில் பிரயோஜனமாக்குவது நமதுகடமை. வீண்செலவு செய்தால் அவ்வளவுக்கும் நாம்தான் உத்தரவாதி. சோம்பலினால் அதைக்கொண்டு ஒன்றும் செய்யாமலே சும்மா நாம் இருப்போமானால் அதுவும் வீணே.

மாஸ்டரிடத்தில் சிஷ்யனாக இருக்கப்பட்டவன் "எனக்கு முன்னமே தெரியும்" என்று சொல்லுவது உபயோகமில்லை. இவ்விஷயங்களை நாம் கைகொள்ளும் நோக்கம் இதுவல்ல. இன்னும் அநேக விஷயங்களின் விபரங்களை அறியவேண்டி ஊக்கத்தோடும், வாஞ்சையோடும் இருக்கின்றோம். ஆனால் நாம் எப்போதும் அதிகப் பிரயோஜனப்பட வேண்டும். இன்னும்நல்ல வகையோடு உழைக்கவேண்டும் என்கிற நோக்கத்தோடு கற்க வாஞ்சையோடிருக்கின்றோம். இதுதான் கருத்து. நிச்சயமாகவே நாம் செய்யவேண்டிய வேலையில் உபயோகப்படாத கல்வி ஒன்றுமேயில்லை. தெரிந்துகொண்ட குறிப்புகளை, மற்றவர்களுக்கு எடுத்து விளக்கிக்காட்டவும் தெளிவாகாத குறிப்புகளைத் தெரிந்துகொள்ளும்படியும் குப்தனுக்கு உதவி கொடுக்கின்றது; இந்த விகாசமுறையின் முடிவினில் நாம் எல்லோரும் எல்லா அறிவையும் பெறுவோம், அறி

வீனத்தை (அவித்தையை) நிவர்த்தித்துக் கொள்ளுவோம். நம்முடைய வேலை யெல்லாம் அவ்வழியில் சார்ந்திருக்கின்றது. நம்முடைய முறைவரும்போது மேலான வேலையை நன்ருய்ச் செய்ய நாம் விஷயங்களை நன்ருய்த் தெரிந்து இருக்க வேண்டியிருக்கின்றது. இதனிடையில் ஒருவனுக்கிருக்கும் சக்தியை முற்றிலும் உபயோகிக்கவும், நமக்கு சித்திகள் இருக்க வேண்டியதென்று மாஸ்டருக்குத் தோன்றுகிற வரையில் அவைகளை இச்சியாமலிருப்பதும் அறிவு.

> "அவசரப்பட்டு அவைகளைத் தூண்டுவதால் பின்னேேட மெத்த சங்கடங்களைப் பலகாலுங் கொண்டு வந்துவிடும். சித்துகளுடைய வினை கபடமுள்ள தேவகணங்கள் அநேகமாய் ஏமாற்றிவிடும் அல்லது, அவன் இறுமாப்படைந்து, தான் பிசக முடியாதென் றெண்ணுவான். எப்படியானுலுஞ் சரி அவைகளைப்பெறவேண்டிபடும் கஷ்டத்தையும் கழிக்குங் காலத்தையும் பரோபகாரப் பணிவிடையில் பிரயோகிக்கக் கூடும்."

C. W. L.:—வஞ்சிக்கும் சிறு கணங்கள் பலவிதங்களாய் இருக்கின்றன. அவைகள் இவ்விஷயத்தில் அவைகளுடைய விசேஷலக்ஷணத்தை காட்டுகின்றது. அநேகமாய் அவைகள் சிற்சிறு ஜந்துக்கள். பெரியவனுயிருக்கும் மனிதன் அவைகள் சொல்லுவதைக் கேட்டு அதன்படி நடக்கின்றதைப் பார்க்க அவைகளுக்கு பெருத்த விளையாட்டு. அவைகள்பலகாலம் "ஜூலியஸ் சீஸரை"ப் போலவும் "நெப்போலியனைப்" போலவும் அல்லது வேறுயாரோ ஒரு பெரியவரைப் போலவும் உருவெடுத்துப் பாவனைகாட்டி விளையாடுகின்றன. அவைகளுடைய கூட்டத்திலில்லாத உயர்ந்த வர்க்கத்திலிருக்கும் மனிதர்கள் சொன்னபடி செய்கிறதைப்பார்க்க அவைகளுக்கு ஒரு பெருத்த விநோதவிளையாட்டு. அது வெகுவாய் ஜனங்களுக்கு கஷ்டம். என்ருலும் இவர்கள் பார்க்கும் தோற்றங்களில் புத்தி விதரணையைச் செலுத்திப் பகுத்தறியவேண்டி யிருக்கிறது.

சில சமயம் காமலோகத்திலிருந்து வாக்கு ஒன்றை கேட்டால் உடனே மாஸ்டருடையதென்றாவது, தேவராஜாக்களுடைய தென்றாவது தீர்மானிக்கத் துள்ளிவிழக்கூடாது. மரணமடைந்தவர்கள் காமலோகத்திலிருந்துகொண்டு பலகாலும் சமாசாரங்களைச் சொல்லவும், புத்திமதிகளை கொடுக்கவும் வருவதுண்டு. சிறு கணங்களும் அடிக்கடி தங்களுடைய சிறு கண்கட்டி வித்தைகளைக் காட்டுவதுண்டு. ஆதலால் அக்குரலை பொறுமையோடு கேட்டிரு; அது ஒரு கவனிக்கவேண்டிய விசித்திரமான சம்பவம். அதனால் உனக்கு ஏதோ ஓர் பிரயோஜனம் கிடைக்கும் என்பதல்ல. பின்னை சாதாரணமாயில்லாத எதுவும் விநோதமாய்த்தானிருக்கும். அதனால் நாம் தெரிந்துகொள்ள வேண்டியது ஏதோ ஒன்று இருக்கும் சமாசாரம் என்பது ஒன்றுமேயில்லை என்றும் நினைத்துவிடாதே. இப்படி செய்வதுகூட மதியீனம். ஒருவிஷயத்தை நம்பத்தகாதது என்று நினைத்துக்கொள்ளலாம். ஆனால் முடியாததென்று சொல்லுவதில் குற்றமிருக்கின்றது. காமலோகத்திலிருந்து சொல்வதை மரியாதையுடனே கேள். ஆனால் உனக்குத் தகுந்த முகாந்திரமிருந்தாலொழிய உனது சுபாவத்தன்மையை எவ்வளவாயினும் அதனால் அசைக்கவிடாதே. ஒருவன் விதரணையோடு தீர்மானித்ததன் பயன் செயலாய் விளையவேண்டியதே தவிர இன்னான் என்று தெரியாத ஒருவன் சொன்னதால் வருவதல்ல.

அநேகருக்கு காமலோகத்திலிருந்து அசரீரி வாக்குகள் கிடைக்கின்றன. இவர்கள் இவைகளைக்கொண்டு உலகை திருத்திவிடலாம் என்று எண்ணுகிறார்கள். இவைகள் சாதாரணமாய் வெகு நல்லவைகளாயினும், விசேஷமானது ஒன்றுமில்லை. மேலும் அவைகள் ஓர் வகையில் தெளிவில்லாதிருப்பது மல்லாமல் நிச்சயமில்லாத போதனைகளாயிருக்கக்கூடும். அவைகளிலிருக்கும் கருத்துகள் சாதாரணமாய்க் குறுகி கட்டுண்ட மதப்பிடிவாத கொள்கைகளுக்கு கொஞ்சம் மேலானதாக விருக்கும். இவைகளில் 'தியாசொபி' கருத்துகளும், 'நியூதாட்' கருத்துகளும்சேர்ந்திருக்கும் தியாசொபிஎன்கிறபாலுடன் ஜலம் சேர்த்திருக்கும். ஜலம் அதிகமாயிருக்கும். இவைகள் வெகு நல்ல எண்ணத்துடன் சாதாரணமாய் காமலோகத்திலுள்ள எவனோ ஒருவன் வாழ்க்கையின் விசாலமான நிச்சயங்களை மரணமடைந்

பிற்பாடு தெரிந்துகொண்டு, பின்னால் விட்டு வந்திருக்கிறவர்களுக்கு சொல்ல விருப்பங்கொண்டு கொடுக்கப்பட்டவைகள். இவை மேலான கருத்துகளென்றும் உலகினர் இவைகளை ஒத்துக்கொள்வார்களானால் உலகம் வெகு நல்ல மாதிரியாயிருக்கும் என்றும் இவன எண்ணி அவைகளை யாரேனும் ஒருவருக்குத் தெரியும்படி செய்ய, (Dives) 'டைவிஸ்' என்கிறவருடைய கொள்கைபடி அதாவது "மரணமடைந்தவன் எவனாவது ஜனங்களிடத்திற்குத் திரும்பி வந்தானானால் அவர்கள் பச்சாதாபப் படுவார்கள்" என்று நினைக்கிறான், என்றாலும் 'ஆப்பிரஹாம்' சொன்னபடி "மோஸஸையும், ஞானிகளையும் கேளாதவர்கள் மரணத்தினின்று திரும்பிவந்தவன் சொன்னால் கேட்பார்களா?" என்பதை மறந்து விடுகிறான.

அப்பேர்ப்பட்டவன் உயிருடனிருக்கும்போது அசரீரி வாக்குகளைப் (Spirit Messages)பற்றிதான் கொஞ்சமாவது கவனிக்கவில்லை என்பதை மறந்திருக்கிறான். அப்பேர்ப்பட்ட சமாசாரம் நமக்கு வருமானால்—நாம் மருள் பிடித்தவராயிருக்கும் பக்ஷத்தில் (Psychic) நிச்சயமாகவேவரும்—அவைகளை மரியாதையுடன கேட்கவேண்டும். ஆனால் அப்போது அநாவசியமான அதிசயக்கிளர்ச்சிகள் உண்டாக்கிக் கொள்ளாமலிருக்க வேண்டும். மருள் சமாசாரங்களைக் கேட்டு அநேகர் பூமண்டலத்தை முற்றும் மாற்றிவிடப்போகிறதாக நினைக்கின்றார்கள். ஆனால் அது சுலபமாய் முடிவதல்ல. அவைகள் நமக்கு வந்தால், அவசியமாயிருக்கும் பக்ஷத்தில், அவைகளுடைய உண்மையையும் நியாயத்தையும் சோதிக்கின்றோம். அநேகருக்கு சோதிக்கும் முறை தெரியாது. ஆனால் அவர்களுக்குவரும் மருள் சமாசாரங்களை சாதாரண விதரணையோடு பார்ப்பார்களானால் அநேகமாய் அவைகளை நன்றாய்த் தெரிந்துகொள்ளமுடியும். சாதாரணமாய் ஜனங்கள் எடுக்கும் நோக்கம் இரண்டு உண்டு (1) கண்மூடி அவைகளை ஏற்றுகொள்ளுவது அல்லது (2) அதைப்பழித்து பரிகாசமாகப்பேசுவது. இவ்விரண்டும் அத்தியந்த அறிவீனம். இவ்விஷயங்களைப்படித்த ஒவ்வொருவருக்கும்இவைகள் வருவதாகத்தெரியும். ஆனால் அவைகளில் முக்காலே மூன்றுவீசபாகம் புதிதாய் முன்பின் சரிவரச்சொல்லத் தெரியாதவர்களிடமிருந்து வருகின்றன. இறந்தவனுக்கு கூடுமான அளவு புத்திசாலியாய்ச்சொல்லத்திறமை இருக்கும்பக்ஷத்தில் அவன்

உயிரோடு இருக்கும்போது தெரிந்துகொள்ளக்கூடாத சில விஷயங்களைக் கற்றிருக்கமுடியும். ஆனால் மரணமடைந்தபிறகு எல்லாரும் கற்கும்படியான சந்தர்ப்பங்களை கைசோர விடுகிறார்கள். பூமியில் இருந்தபோது வைத்திருந்த மதிமயக்கங்களுடனும் பிடிவாதக் கருத்துகளுடனும் திருப்தி அடைந்திருக்கினறார்கள்.

மேல்லோக வர்த்தமான அநுபவங்கள் இப்போது அதிகரித்துகொண்டே வருகின்றன. ஏனெனில் லோககுரு வருகை நெருங்கியிருக்கின்றது. இது சங்கதி எல்லாலோகங்களிலும் விசாலமாய் தெரிந்திருக்கின்றது. பூலோகத்தில் தியாசொபிகல் சங்கத்தை விட்டு இதர இடங்களிலிருந்து அநேகர் அவர் வருகையை ஆவலோடு எதிர்பார்த்து வருகிறார்கள். அவர் வ்ருகை சமீபித்திருப்பதைத் தெரிந்தவர்கள் அநேகர் இருக்கின்றனர். ஆதலால் அவ்வித சமாசாரங்களை கேட்கத்தக்கவர்கள் முன்னைவிட அதிகமாயிருப்பார்கள். எதிர்பார்த்திருக்கும் நோக்கம் அவைகளைக் கூவி அழைக்கிறது போலிருக்கும். ஆதலால் பகவான் வருகையைப்பற்றி ஏராளமான சமாசாரங்களுடன் தவறானவைகளும் பரவிவரும்என்பது நிச்சயம். அவரும் வெகு காலத்திற்கு முன்னமே அநேக போலி கிருஸ்துக்கள் வருவார்கள் என்று சொல்லியிருக்கின்றார். சாதாரண கிருஸ்துவன் போலி கிருஸ்துவை, ஜனங்களை மனதார ஏமாற்றுவதற்காக வரும் (Anti christ) 'ஆன்டிகிரைஸ்டு' என்று நினைக்கின்றான். ஆனால் அப்படிவருபவர்களில்அநேகர் முற்றிலும் நல்ல எண்ணமுடையவர்களாயிருப்பார்கள். இவர்கள் கிருஸ்துபகவானுடைய சாயை தங்கள் பேரில் தாக்கும்படியாய் உண்மையில் பிரார்த்தித்தவர்கள். நல்லெண்ணமுடையவர்கள எனபது நிச்சயமாயிருப்பதால்தான இவர்கள் மெத்த அபாயகரமான வழியில் ஜனங்களை கொண்டு போய்விடுவார்கள். ஏனெனில் ஜனங்கள் இவாகளுடைய ஊக்கத்தை மாத்திரம் தெரிந்துகொண்டு தலைகீழாய்ப் போவார்கள்.

போலி கிருஸ்துவைப்பற்றி திவ்யஞான நோக்கம் எப்படியிருக்கிறதெனறால்:—சாதாரணமா யிருக்கும் ஒருவனை லோககுருவென்று தவறுதலாய் ஜனங்கள் நினைப்பது பரிதாபமானதே! எனறாலும் அவன் கொடுக்கும் போதனைகள் நல்லவைகளாயிருந்து

ஜனங்கள் அவைகளைக் கண்ணியத்துடனும் ஊக்கத்துடனும் கைகொண்டு நடப்பார்களானால் அவர்களுடைய வாழ்க்கை சீர்பட்டு வரும். சில விஷயங்களில் தவறான கருத்துடையவர்கள் என்பதால், அவர்களுடைய நன்னடக்கையால் வரும் நற்கர்மத்தைத் தடுக்கமுடியாது. அவர்கள் உண்மையைத் தெளிவாக பார்த்தார்களானால் மிக நல்லதாயிருக்கும். ஆனால் உண்மையாகிய சில முக்கிய விஷயங்களில் தவறுதலான கருத்துடனிருக்கின்றவர்கள் என்பதால் மற்ற விஷயங்களிலும் பிழைபட்டிருப்பார்கள் என்று நாம் நினைக்கக்கூடாது. ஏனெனில் அவர்கள் அப்படியில்லை.

என்றாலும் திவ்யஞான மாணாக்கரான நாம இவ்விதமான பிழையிலிருந்து விடுபட்டவராக இருப்போம் என்று நம்புகிறேன். ஏனெனில் அவர் வருகையைத் தெளிவாயும் உறுதியாயும் எதிர்பார்க்கின்றோம். இதைப்போல நோக்கம் அநேக மதத்தாருக்கு இல்லை. வரும் காலம் கிட்ட நெருங்கிவரவே நம்முடைய விதரணையை முன்னைவிட தீவிரமாய் உபயோகித்து, சம்பவிக்கக்கூடிய எதையும் மறுத்து சொல்லாமலிருக்க வேண்டும். ஆனால் எப்போதும் விவேகத்தையும் புத்தியையும் உபயோகிக்கவேண்டும். (Gamaliel) 'காமலில்' என்பவருடைய நோக்கத்தைபோல எடுத்திருக்கவேண்டியது. அதாவது "இந்த புத்திமதி அல்லது காரியம் மனிதனுடையதா யிருந்தால் அழிந்துபோகும் ; கடவுளுடையதாயிருந்தால் நீங்கள் அதைத் தடுக்கமுடியாது. தடுத்தால் கடவுளுக்கு விரோதமாக போர் செய்வதாக நீங்கள் காணப்படுவீர்கள்" எவ்வழியில் வரும் நல்லவை எவையும் எடுப்போமாக.

ஜனங்களில் அநேகரைத் தூண்டி தட்டிகொடுப்பதற்காக மாஸ்டர்கள் பொழியும் சக்தியை பாய்ச்சும் கருவியாக சிலரை உபயோகப்படுத்தி வருகிறார்கள். இவர்கள் அதை தெரிந்திருக்கிறார்களா அல்லது இல்லையா என்பது அவருக்கு அநாவசியம். ஆதலால் திவ்யஞான சங்கத்திற்குப் புறம்பாகவுள்ளவர்களின் வழியாய் மற்றவித சக்திகள் இதே மகா கருத்துடன் புகுந்து வேலை செய்வதை காணசித்தமாயிருக்கவேண்டும். நமது வழியின்படி நடந்துகொண்டும், நமது சங்கத்தின் வழி சரிதான் என்று தெளிவாயிருக்கிறபடியால்

அதற்கு விசுவாசத்துடனும் பக்தியுடனும் திட உறுதியுடனும் உழைத்து கொண்டிருந்தபோதிலும் இதற்கு வெளிப்புறம்பாயிருக்கும் மற்ற சங்கங்களிடமிருந்து வெளியாகுபவைகளுக்கு விரோதமாகப் பேசவாவது, அவைகளை கண்டனஞ்செய்யவாவதுகூடாது. அவைகளும் அமே்த நோக்கத்துடனிருக்கக் கூடும். ஆனால் அவ்வித விளக்கங்களை முற்றிலும் சுத்தமாயிருக்கும் அல்லது பூரணமாயிருக்கும் என்று நினைக்கக்கூடாது. எல்லா வழிகளிலும் தெய்வ அருள் சக்தி இப்போதிருந்தே அவர் வருகிறவரையில் பொழிந்துகொண்டேவரும். வெள்ளியம்பலத் திருக்கூட்டமும் உலகின்மேல் பிரவாகம் போல சக்தியை ஊற்றிவருகின்றனர். இது ஒருக்கால் உலக விஷயங்களில் உழன்றிருக்கும் மானிடனைக் கிஞ்சித்துதான் தட்டும். என்றாலும் உணர்ச்சி நுட்பமாயுள்ளவருக்கு இது ஏராளமானதென்று தென்படுகிறது. இதனால் பிரயோஜனப்பட சித்தமாயிருப்பவருக்கு வானமும் பூமியும் புதியதாயுண்டானதாக அமையும்.

அபூர்வமான சம்பவங்கள் வரும் என்பது திண்ணம். "லைட் ஆப் ஏசியா" என்கிற நூல்—புத்தமத புஸ்தகங்களில் வெகு விசுவாசத்துடன் எழுதியது. இதில் புத்தபகவானுடைய பிறப்பைப் பற்றி சுட்டிக் காட்டும்போது அவர் வருகையை அநேகவித பூதகணங்கள் தெரிந்துகொண்டு கொண்டாடினவென்றும், எங்குமுள்ள தேவர்களும் இயற்கை கணங்களும் அவர் வருகையின் அற்புத காந்தவளத்தை உணர்ந்து, அவரைப்பற்றிய ஏதாவது ஓர் முக்கியமான பெருத்த சம்பவம் நேரும்போதெல்லாம்—அதாவது அவர் ஜனன காலத்திலும், அவர் புத்தஞான தீக்ஷை பெற்றபோதும், அவர்முதல் முதல் உபந்நியாசம் செய்தபோதும், அவரைச் சூழ்ந்து வந்தனர். அக்கருத்தில் அதிகமான உண்மையிருக்கின்றது. பெரியார்களுடைய பெருத்த அவதாரம் வரும்போதெல்லாம் மானிடவர்க்கத்தைவிட உணர்வில் கூர்மையாயுள்ள மற்ற வர்க்கங்கள் உணர்கின்றன. ஏனெனில் மானிடவர்க்கம் அநேகமாய் கீழ்மனதை (புறமுகமாயுள்ள மனதை) விருத்திசெய்து வருவதாலும் வெகுகாலமாய் அந்தரங்க விஷயங்களை கைசோரவிட்டுத் தங்களுடைய காமியத் தன்மையிலே முற்றிலும் கட்டுண்டிருப்பதாலும், இப்போது சாதாரணமாய் தாழ்ந்தபடியிலிருக்கும் சில ஜந்துக்களைவிட உணர்ச்சியில்

குறைவாய் இருக்கின்றனர். மனிதனைவிட நாய்களும், பூனைகளும் மேலான சக்திகளை அதிகமாய் உணருவது எனக்குத்தெரியும். சக்தி களிலிருந்து இவைகளுக்கு அதிகமாய் ஏதோ கிடைக்கும் என்பதாக வல்ல. மற்று ஜந்துக்களுக்கு தெரிந்திருக்கிறதை,மானிடர்கள் அறிய வில்லை.

பகவானுக்காக அவரவர் செய்த காரியங்களையெல்லாம் அவர் வரும்போது எடுத்து நிறைவேற்றுவார். வெகுவாய் அவர் வரும் போதிருந்த நிலையினின்று உலகைப் பலவகையில் வேறாக மாற்றி விட்டுப்போவார். அவர் தமது மதத்தை உபதேசிப்பது மாத்திரமல் லாமல் அவருடைய போதனைகளின் ஏதுவாக இதரவிதமான சீர் திருத்தங்களையும் நியமித்து வருவார். முன எதிர்த்ததுபோல இப் போதும் எதிர்ப்பவர்கள் வரக்கூடும். ஆதலால் திருத்தங்களை நிச்சய மாய் ஒருவராலும் சொல்லமுடியாது.

அவர் இருக்கும்போதே உலகினரைச் சேர்த்து நடத்திகொண் டுப்போவார் எனறு நாம் நினைத்துகொள்ள முடியாது. அநேகமாய் அவருடைய போதனை கருத்துகள் சாதாரணமாய் உலகினர் ஏற்று கொண்டு ஒழுகிவருமுன் அநேக ஆசாரியர்கள் வரும்படி நேரிடும். இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன் அவர் வந்தபோது ஜனங்கள் அவருடைய போதனைகளை கேட்க போதாதபடி யிருந்தனர். லோக குருவின் வாழ்க்கையும் அவரை சுற்றியிருப்பவர்களுடைய வாழ்வும் சுகமில்லாதபடி ஏதோ ஒருவகையில் தான் இருக்குமென்று நாம் எதிர்பார்க்கவேண்டும். வெளி உலகத்தார் எப்போதும் தகாத பழி களை எடுத்துத் தூற்ற சித்தமாயிருக்கின்றனர். ஆதலால் அதிக கெடுதி யில்லாவிட்டாலும் அநேகவித சிற்சிறு அருவருப்புகளுக்கும், சங்க டங்களுக்கும் எதிர்பார்த்திருக்கவேண்டும். அவர் எடுத்துகாட்டும் சீர் திருத்தங்கள் வெவ்வேறுவிதமான காமிய நோக்கங் கொண்டவர்க ளுக்கு ருசியில்லாத வகையில் காணும். முந்தின தடவையில் காமிய நோக்கமுள்ளவர்கள் அவருடைய மூன்று வருஷகொலுவிற்கு பிறகு அவரைக் கொலை செய்தார்கள். இப்போது எப்படியிருக்கும் என் பது நமக்குத் தெரியாது. ஆனால் ஒவ்வொரு தேசத்திலும் அவரை ஆதரிக்க சிலராவது இருந்து மூன்று வருஷத்திற்குமேல் அவர் நம்

மிடையிலிருந்துசீர்திருத்தஞ் செய்யும்படி பிரயோஜனப்படுத்துவார் கள் என்று நம்புகிறோம். தாரகசங்கம் அவர் வரும் கருத்தைகொண்டு அவர் போதனை எவ்வழியில் செல்லும் என்பதை முழுமையும் தெரிந்துகொண்டு, அவருக்குச் சித்தப்படுத்தும் வேலைகளைச் செய்ய திட்டமாய் நடத்திவருகிறது. இதே வழியில் வேலைசெய்ய அருள் உற்சாகம்பெற்ற மற்றவர்களும், மற்ற சங்கங்களும் இருக்கக்கூடும். ஆனால் சமாசார விவரம் நமக்கு கிடைப்பதுபோல் அவர்களுக்கு இருக்காது. நமது சேவகம் முந்தி கைகூடாததை இப்போது கூட்டிவைக்குமென்று நம்புகின்றோம். நம்புகினறோமே தவிர சொல்ல முடியாது. நம்மால் கூடியதை மாத்திரம் செய்யமுடியும்.

அருளே உருவமாயுள்ள பகவானுடன சேவகம் செய்ய கர்மானுசாரமாய் அதிர்ஷ்டமுள்ளவர்கள் இப்போது அவசியமாகவே பிறந்து வருவார்கள். ஆதலால் அற்புதமான குழந்தைகள் பிறந்து வருவதை கேள்விப்படுகிறோம். பகவான் வரும்போது யௌவன வயதாயிருக்க இப்போதே அவர்கள் பிறந்திருக்கவேண்டியது. இவர்கள் மற்ற குழந்தைகளைவிட சில விஷயங்களில் வித்தியாசமாயிருக்கக்கூடும். ஆதலால் முந்திய ஜனமங்களைப்பற்றியாவது அல்லது மேல் உலக அனுபவங்களைப்பற்றியாவது உள்ள அறிவைக்கொண்டு வந்திருக்கும் சிறுவர்களென்று கேள்விப்பட்டால் ஆச்சரியபடாதீர் கள். இவைகளெல்லாம் வெகு சாதாரணம். நாம் இருக்கும் காலம் குறிப்பிட்ட லோகநாதர் வருங்காலமானதால் இவ்விஷயங்களை எதிர்பார்க்கக்கூடியவை. நம்முடைய கண்பார்வைக்குள் வருபவர் களை எவ்விதம் பாதுகாப்பது என்று டாக்டர் பெஸண்டு அம்மையார் சொல்லி கொடுத்திருக்கின்றார். அவர் சொன்னதாவது:—

"அவ்வித விஷயங்களைக் குறித்து ஆத்திர கிளர்ச்சி கொள்ளாதே, அப்பேர்ப்பட்ட குழந்தைகளை இன்னார் இன்னார் என்று சொல்ல உடனே துவக்காதே; ஏனெனில் முந்திய ஜன்மத்தில் இவர் யாவர் என்று தெரிந்தவர் வெகு சிலரே; அப்பேர்பட்ட குழந்தைகள் சாதாரணத்திலில்லாத உணர்ச்சி யுடையவர்கள். ஆதலால் நீ அவர்களிடத்தில் மிக பக்ஷமாயிருக்கவேண்டும். அவர்களுடன் மிக சாந்தமாய் விவகரிக்கவேண்டும். எவ்வித கடின வார்த்தையாவது, கோபச்சாயலாவது காட்டக்கூடாது. அவர்களை

திடுக்கிட்டுப் போடும்படியாவது பயமுறுத்தலாவது செய்யக் கூடாது. ஏனெனில் அவர்கள் மற்ற குழந்தைகளைவிட வெகு கூர்மையாய் உணருகிறவர்கள். அவர்களை கூட்டத்திலாவது தகாத வர்களுடைய அருகிலாவது கொண்டு போகாதபடி காக்கவேண் டும். அவர்களுக்கு கொஞ்சம் மனுஷாளைதான் தெரியும்படி செய்யவேண்டும். அவர்களைச் சுற்றி சௌக்கியமான நற்காந்த முடையவரால் சூழ்ந்திருக்கச் செய்யவேண்டும். இவர்களை அடிக் கொருதரம் மாற்றக்கூடாது. அவர்களை பள்ளிக்கூடத்திற்கு அனுப் பக்கூடாது. ஆனால் அவர்கள் பக்ஷமுள்ள வீட்டாருடன் சூழ்ந் திருக்கச் செய்யவேண்டும்.''

A. B.:—ஒருவன் ஏன் சித்துகளைப்பெற ஆசைப்படக்கூடாது என்பதற்கு இன்னொரு காரணம் மாஸ்டர்கள் இங்கே கொடுக் கின்றார். அவைகளை பெறவேண்டி கழித்த காலத்தையும் முயற் சியின் பலத்தையும் மற்றவர்களுக்கு உதவி செய்வதில் உபயோகித் திருக்கலாம். மாஸ்டர்கள் சொல்லும் ஒவ்வொரு போதனை யிலும் சதா பரோபகார சேவகத்தையும் விதவிதமாய் வரும் காமியத்தன்மையை நிவர்த்திப்பதையும் காட்டுவதை கவனியுங்கள். நீ சித்துகளையடைய காலத்தையும் பலத்தையும் கழிப்பதைவிட்டு உன் சுற்றிலுமுள்ளவர்களுக்கு உழைக்க பாடுபடு. நீ உன்னிடத் திலிருக்கும் வல்லமையைக்கொண்டு மற்றவர்களுக்கு இவ்விதமாய் சேவகஞ்செய்வதை மாஸ்டர் பார்ப்பாரானால் இன்னும் அதிக பலமும் சாமர்த்தியமும் உன்னிடத்தில் ஒப்புவிக்கும்படி வரும். ஏனெனில் இவைகளையும் நிஷ்காமியார்த்தமாய் நீ உபயோகிப் பாய் என்று நிச்சயமாகிறது. அப்போது உன்னுடைய உதவிக்கு அவர் வருவார். உன்னிடத்திலிருக்கும் திறமை ஒவ்வொன்றை யும் உபயோகப்படுத்துகிறதாக நீ மனதாரச்சொல்லுவாயானால் அப் போது புதிய சக்திகளை உன்னிடத்தில் அவர் ஒப்புவிக்க நீ சித்த மாயிருக்கின்றாயென்பதைத் தெரிந்திரு. ஆனால் அப்படி சொல்லு வோர்கள் வெகு சிலரே. அவர்களில் நீ ஒருவாராக இல்லாதிருக் கும் பக்ஷத்தில் அந்த நிலைக்குவர பிரயத்தனப்படுவது மிக நல்லது.

இதுதான் திறமையைப்பற்றிய உவமைகதையின் கருத்து. திறமை எனும் பதத்தை தற்கால அருத்தத்தில் எடுத்தாலுஞ்சரி

அல்லது ஆதிகாலத்தில் உபயோகித்தபடி ஒரு நாணயமாக அதை கொண்டாலுஞ் சரி, கருத்து ஒன்றுதான். ஒரு மகராஜன் தன வேலையாட்களிடத்தில் கொஞ்சம் பணத்தை கொடுத்துவிட்டு பிரயாணம போனான. ஒரு வேலைக்காரனுக்கு ஐந்து நாணயங்களைக் கொடுத்தான். இன்னொருவனுக்கு இரண்டும் மற்றொருவனுக்கு ஒன் றும் கொடுத்தான். எஜமானன திரும்பிவந்தவுடன் பணத்தை எவ விதம் உபயோகப்படுத்தினீர்கள் என்று கேட்டான. ஐந்தையும், இரண்டையும் வாங்கின இரண்டு பேரும் அவைகளை கொண்டு வியாபாரஞ்செய்து வட்டியும் முதலுமாய் திருப்பி கொடுத் தார்கள். ஆனால் ஒரு நாணயத்தை வாங்கினவன் மாத்திரம் அதை புதைத்து வைத்திருந்து இப்போது எடுத்துவந்து கொடுத்தான். பிறகு எஜமானன் அதை இவனிடமிருந்து திருப்பி எடுத்துக் கொண்டார். மற்றிரண்டு வேலைக்காரரும் சிறு விஷயத்தில் விசுவாசத்துடனிருந்ததால் அவர்களை அநேக காரியங்களுக்கு அதிபதியாக்கினார். மேலும் அவர் சொன்னதாவது "உபயோ கித்து ஆண்டுவரும் ஒவ்வொருவனுக்கும் மேன்மேலும் கொடுக்கப் படும். மேலும் இவன ஏராளமாய்ப் பெறுவான; ஆனால் உபயோகப் படுத்தாதவனிடமிருந்து இருப்பதையுங்கூட எடுத்துவிடப்படும்" இது போலி பொய்போல் காணும். ஆனால் வார்த்தைகளில் குப்த கருத்துத் தெளிவாயிருக்கின்றது. எவனொருவன் தனது சாமர்த்தி யத்தை முற்றிலும் உபயோகிக்கின்றானோ அவனுககு இன்னும் அதிகம் வரும். எவனொருவன் உபயோகிக்கிறதில்லையோ அவன் குப்தகருத்தின்படி அவைகளை பெற்றவனல்லன். அதை பிர யோகிக்கும் திறமையைக்கூட மறந்துவிடுவான். அவைகள் சுருங்கி காய்ந்துபோம்.

மாஸ்டர்களிடமிருந்து தனக்கு வரவேண்டிய உதவி அவ வளவும் கிடைக்கவில்லை எனபதாக யாவரும் குறை கூறக் கூடாது. பெரிய ஆசாரியர்களிடத்தில் நீ நெருங்கிவர வேண்டு மெனகிற இச்சையை திருப்தி செய்யும் வழி ஒன்றுதான இருக் கின்றது. அது எதுவெனில் தன்னினத்தாராகிய மானிடர்களுக் குப் பிரயோஜனப்படுதல். இந்த உரிமை ஒனறைத்தான மாஸ்டர் கவனிக்கினறார். ஒருவருடைய திறமையைபற்றி, அவர் நோக்குவ

தில்லை ஆனால் அவன் பிரயோஜனப்பட்டு வருவதை கவனிக்கின்றார். நான் இந்த ஜன்மத்தில் மாஸ்டர் இருப்பதைத் தெரியாமலே அவருக்கு அருகில் வந்துவிட்டேன். ஆதலால் உண்மையில் அவர் அருகில் சேரவேண்டுமென்ற நினைப்பு எனக்கில்லை. அவருடைய சிஷ்யராக அநேக ஜன்மங்களிலிருந்தேன் என்பது வாஸ்தவந்தான. ஆனால் அவர் எனக்குப் பிரசன்னமாகித் தரிசனம் காட்டினது அதுவல்ல காரணம். என்னைச் சுற்றிலும் உள்ள எளியவர்கள், கஷ்டப்படுகிறவர்கள், மிதியுண்டு கீழே ஆழ்ந்திருக்கிறவர்கள், இவர்கள் ஒவ்வொருவருக்கும் உதவிபுரிய நரம்பு தளர நான வேலைசெய்துகொண்டு வந்திருந்ததாலும், அவருடைய பலத்தை ஆயிரக்கணக்கானவருக்கு பாயவிட்டு கொடுத்தபோது அவர் அதை எனக்குப் பொழிய அவருக்கு சாத்தியமாய் இருந்ததாலும் அவர் என்னை அணைத்துகொண்டார.

ஆதலால் உங்களுடைய தியானத்தில் மாஸ்டரை காட்சி கொடுக்கும்படி கூக்குரலிடுவதை விட்டு உன்னுடைய ஊரிலோ கிராமத்திலோ செய்யவேண்டியிருக்கும் நல்ல வேலையைத் தேடி அதைப்போய் செய். மாஸ்டருடைய கருவியாயிருக்கும் உன்னை அவர் உபயோகிக்கின்றார் என்பது உனக்குத் தெரிந்தாலும் அல்லது தெரியாவிட்டாலும் அவருக்குப் பாதகமில்லை. மாஸ்டர்களால் அருட்பெற்றும், உதவிபெற்றும் ஜனங்களுக்கு ஒத்தாசை புரிகின்ற அநேகர் உலகெங்கும் சிதறி இருக்கின்றனர். திவ்யஞான சபையின புறம்பாயுள்ள அநேகர் இவ்விதமாப் அருட்பெற்று வருகின்றனர்.

"பக்குவத்திற்கு வரும் முறையில் அவைகள் வரும்—வந்தேதீரும், அதற்கு முன்னமே வந்தால் உனக்கு உபயோகப்படுமென்று குருநாதன் எண்ணுவாராகில் அவைகளை அபாயமின்றி சித்தியாகும் வழியை உனக்குக் காட்டிகொடுப்பார். அதுவரையில் அவைகளில்லாமலிருப்பதே உனக்கு நல்லது."

C, W. L.:—ஜனங்கள் பலகாலும் சித்திகள் "அற்புதமானவை கள், அவைகளை பெற்றிருப்பவரை மிகப்பிரயோஜனப்படும்படி செய்கிறதாம், நான்பிரயோஜனப்பட இச்சிக்கின்றேன், அவைகளைபெற இஷ்டப்படுகிறேன" என்று சொல்லுகிறார்கள். இதில் குற்றம் ஒன்றும் கிடையாது. என்றாலும் இவ்விடத்தில் கொடுத்திருக்கும் புத்திமதியை கைக்கொண்டு அவைகள் தாமாகவே வருகிறவரையிலும் அல்லது அவைகளை பெறும்படியான வழியை மாஸ்டர் காட்டிகொடுக்கிறவரைக்கும் காத்திருப்பது நல்லது. அவர் அப்படி செய்வாரா? ஆம். நீ சித்தமானபோது சொல்லிகொடுப்பார் என்னுடைய அநுபவம் அதை சுட்டிக்காட்டுகிறது. ஆரம்பத்தில் சித்துகள் யாதும் எனக்கிருக்கவில்லை. மேலும் அவைகளைப்பற்றி நான் நினைக்கவுமில்லை. ஏனெனில் நம்முடைய சபையின் ஆரம்ப காலத்தில் ஏதோ கொஞ்சம் பிறவியிலேயே அமையப்பெற்றிருக்கிறவர்கள்தான் அதை துவக்கி விருத்தி செய்யக்கூடும் என்று நாங்கள் நினைத்திருந்தோம். அப்படி எனக்கு ஒன்றும் அமையவில்லை. என்றாலும் ஒருநாள் மாஸ்டர் அடையாற்றிற்கு எழுந்தருளியபோது அதைப்பற்றி ஒரு குறிப்பை காட்டினார், ஓர்வகை தியானத்தை அப்பியசிக்கும்படி போதித்து "இதனால் உனக்கு நல்ல பலன்கிடைக்கும்" என்று சொன்னார். நான முயற்சித்தேன நல்ல பலன் கிடைத்தது" மாஸ்டருக்கு சேவகம் செய்யும் ஒவ்வொருவருக்கும் சரியான காலம் வரும்போது இதையேதான் சொல்லிக்கொடுப்பார்; இது மெத்த நிச்சயம் என்று எடுத்துக் கொள்ளலாம். அவருடைய விருப்பத்தை எவ்விதம் தெரிவிப்பார் என்பது முந்தியே சொல்லமுடியாது. ஆனால் அவர் அதை ஏதோ ஒருவகையில் குறித்துக் காட்டுவார்.

இவ்வித முயற்சிக்கு சித்தஞ்செய்து கொள்ளும் உன்னதமான வழியாதெனில் ஒருவனிடத்திலிருக்கும் எல்லா சக்திகளையும் கூடிய அளவுமுழுவதும் சேவகத்திற்கு உபயோகப்படுத்துவதுதான் திடமானது. காமிய நோக்கமில்லாது எவனொருவன் உபயோகப்படுத்துகிறானோ அவன சில புதிய சக்திகளை பெறக்கூடும்.

மறுபடியும் நாணயத்தைப்பற்றிய பழைய உவமைக்கதைதான். நாணயத்தை உபயோகப்படுத்தினவர்களை அதை உபயோகித்து

கொண்டு இருக்கச் செய்தும் தவிர அவர்களுக்குப் பெருத்த வேலை யில் அதிகாரம் கொடுத்தார்கள். அவர்களுக்கு "சில விஷயங்களில் விசுவாசமாய் இருந்தீர், உங்களை அநேக விஷயங்களுக்கு அதிபதிக ளாக்குகிறோம். உனது பிரபுவின ஆநந்தகளிப்பில் சேரவாருங் கள்" என்று சொன்னார்கள். இதன கருத்து யாதென்பதை நிதா னித்து கவனிப்பவர் வெகு சிலரே—கடவுளின ஆநந்தமே மாஸ் டர்களின களிப்பு என்று அருத்தம்—இது வெறும் சுகமல்ல, ஆநந்தமல்ல, மோக்ஷமடைவதுமல்ல, உவகை உண்டாக்குவது அவருக்கு களிப்பு "கிரிக் மிஸ்டரியில்" (Bacchus) என்பதிலிருக் கும் விளையாட்டு, இந்துக்களுடைய கிருஷ்ணலீலை. கடவுள் விகாச முறையின் பெருத்த கைங்கரியத்தைச் செய்ய தாமே இச்சிததார். இது அவருக்கு ஆநந்தம் பிரபஞ்சத்தில் அவருடைய அருளை பொழியும் ஆநந்தத்தில் சேரவேண்டுமானால் அவருடைய கைங்கரி யத்திலும், அதனால் வரும் களிப்பிலும் சேர்ந்து இருக்கவேண்டி யது. நம்மிடத்திலுள்ள எல்லா சக்திகளையும் உபயோகப்படுத்தா விட்டால் மற்றவைகளை பெற மாஸ்டர் ஒத்தாசை கொடுக்கமாட் டார், நாம் வைத்திருப்பதை முற்றிலும் உபயோகப்படுத்துகிற வரையில் காத்திருப்பார். இதை எப்போதும் ஜனங்கள் தெரிந்து கொள்ளுகிறதில்லை. அவர்கள் அந்தரங்க (தெரியாத) உபகாரஸ்தர் களாக விருக்கவேண்டுகிறார்கள் "நீங்கள் முதலில் தெரியும்படியான பகிரங்க உபகாரிகளாகவிருக்க வேண்டியது. நீங்கள் முழு ஜாக்கி ரதையிலிருக்கும் இப்பூலோகத்தில் உபகாரத்தன்மை உங்கள் வாழ்க்கையில் முழுதும் நிறைந்து வருமானால் அப்போது மற்ற லோகங்களிலும் நீங்கள் உபயோகப்படுவீர்கள் என்பது நிச்சயம்" என்றுசொல்கிறோம்.



## 16-வது அத்தியாயம்

### சிற்றுசைகள்.

"தின வாழ்க்கையில் சாதாரணமாயிருக்கும் சில சிற்றுசைகளையும், எழவிடாமல் காத்துக் கொள். மேம்பட்டு விளங்கவாவது சாமர்த்தியனுகக் காட்டவாவது, ஒருபோதும் இச்சியாதே."

C.W.L.:—கெட்டிக்காரராகக் காட்டவேண்டுமென்றும், மெத்த மேம்பட்ட தரத்திலிருப்பவராகப் பாராட்டவேண்டுமென்றும் அநேகருக்குப் பிரியமுண்டு. ஆனால் மாஸ்டரை முகத்துக்கு முகம் தரிசித்தவனெவனும் தன்னை பிரக்கியாதியாய்க் காட்ட ஒருபோதும் நினைக்கவேமாட்டான். மாஸ்டரவர்களுடைய மகிமையைப் பார்த்தவன் தனக்கிருக்கும் எவ்வித புகழ்ச்சியையும் சூரியனுக்கெதிரில் ஓர் தீவட்டி வெளிச்சம்போல் இருப்பதை ஒரு நொடியில் அறிவான். ஆதலால் அப்பேர்ப்பட்ட கருத்து அவனுக்குத் தட்டுகிறதில்லை அல்லது முந்தியே அது இருந்திருந்தபோதிலும் அவரை பார்த்த பிறகு கரைந்துவிடும். உலகில் தனது சிறுவெளிச்சம் (அறிவு) பெருத்தகருத்துகளைத் தருமென்று நினைக்கிறவன மேலான ஜோதியை இன்னும் பார்க்காதவன; ஆதலால் தனனுடையதை ஒத்துப் பார்ப்பதற்குத் தகவல் இல்லாமலிருக்கிறுன.

என்றாலும் மாஸ்டருடைய சேவகத்திற்காக விருக்கும் எல்லாவித வழிகளிலும் நமக்கிருக்கும் திறமை ஒவ்வொன்றையும் உன்னதமானவகையில் உபயோகப் படுத்தவேண்டும். நமக்கிருக்கும் வெளிச்சத்தை (அறிவை) மரக்காலுக்குள் வைத்து மறைக்கக் கூடாது. தற்காலம் வேண்டியதாயிருப்பது லோகதருவின் வல்லமையுள்ள துறை தீபம் மாத்திரமல்ல; மற்று கரையோரமுள்ள தாழ்ந்த விளக்குகளைபோல நம்முடையதும் உபயோகப்படவேண்டியிருக்கின்றது. பெருத்த வெளிச்சம் மிகப் பிரகாசிக்கிறதால் சிலரை கண்கூசச்செய்கின்றது. மற்றவர்களோ கண்ணேந்தி வெளிச்சத்தைப் பார்க்கிறதேயில்லை. அது இருப்பதாகவும் அவர்களுக்குத் தெரியாது.

அவர்கள் கிரகிப்பதற்குத் தக்கபடி அருகிலுள்ள சிறு வெளிச்சங்கள் தான்இவர்களைப் பார்க்கச்செய்யும். பெரியோர்களுடைய உதவியை கைகொள்ள இன்னும் சித்தமில்லாதபடி இருக்கும் அநேகருக்கு நாம் உதவி கொடுக்கக்கூடும். ஆதலால் ஒவ்வொருவனுக்கும் ஒரு இடம் இருக்கிறது. ஆனால் உன் சாமர்த்தியத்தைக் காட்டவேண்டும் என் கிறவிருப்பம் எப்போதும் வைக்காதே. அது மதியீனம்.

"வார்த்தையாட விரும்பாதே; சொற்ப பேச்சுடனிருப்பது நல்லது; ஆனால் சொல்லப் போகிறது உண்மையாகவும், அன்புள்ளதாகவும், உபயோகமுள்ளதாகவும், உனக்கு நிச்சயமாய்த தெரிந்தாலொழிய பேசாமலிருப்பது, இன்னும் உத்தமம். பேசுமுன் நீ சொல்லப்போகிற விஷயம் இம்மூன்று குணங்களை யுடையதாவென்று கவனித்து யோசி; இல்லாவிடில் அதைச் சொல்லாதே."

A. B.:—சதா பேசிகொண்டிருக்க இஷ்டப்படுகிறவர்களுக்கு எப்போதும் அறிவோடு பேசப் போதுமான விஷயங்கள் இல்லை. ஆதலால் அவர்கள் கேட்கத்தகாத விஷயங்களைச் சொல்லுகிறார்கள். இந்தப்படிக்கு உலகில் பலத்த ஆறுபோலிருக்கும் புறங்கூறை பெருக்குகிறார்கள். இவர்கள் தங்கள் நாவை அடக்குவதை விட்டு அதை இவர்களுக்கு எஜமானனாக விட்டிருப்பதால் இவ்வகையான அளவிடக்கூடாத தீங்கை உண்டாக்குகிறார்கள். மாஸ்டர்களிட மிருந்து நான் அடிக்கடி கேட்ட போதனை ஒன்று பிறகு கொடுத்திருக்கின்றது. நீ பேசுவதற்குமுன் சொல்லப்போகிறது உண்மையா, பக்ஷத்தோடு இருக்கிறதா, பிரயோஜனப்படுகிறதா வென்று யோசி. இம்மூன்று இலக்ஷணங்கள் இல்லாதிருக்குமானால் அதைச் சொல்லாதே. இது உன்னுடைய சம்பாஷணையை நிதான மாக்கிவிடும். நாளடைவில் நீ கொஞ்சமாக பேசுவதை காண்பாய். இது ஒரு நல்ல விஷயம்.

வாயாடிகள் தங்கள் பலத்தைப் பிரயோஜனமுள்ள காரியத்திற்கு உபயோகப்படுத்தாதபடி சிதறவிட்டு விடுகிறார்கள். அதிகமாய்ப்

பேசுகிறவன் எவனும் சாதாரணமாய் அல்பவேலைக்காரன். நான் சதா பிரசங்கம் செய்து வருவதால் என்னையும் ஒருக்கால் இவ்விதம் நீங்கள் சொல்லக்கூடும். ஆனால் நான் எனது வேலைக்கு அப்புறம் அதிகம் பேசுவதில்லை. சிறு பேச்சுகளின் திறமை எனக்குப் போய் விட்டது; ஆகையால் ஜனங்கள் எனது மௌனத்தைப்பற்றி குற்றங்கொள்ளுகிறார்கள். மேற்கு தேசங்களில் பலகாலும் சம்பாஷிக்க வேண்டி என்னையே நான் வற்புறுத்த வேண்டியிருக்கின்றது. ஏனெனில் அங்கே பேசாமலிருந்தால் கடுகடுப்பை அல்லது கர்வத்தை அல்லது இஷ்டமில்லாததை காட்டுவதாக தவறாக அடிக்கடி எண்ணுகிறார்கள். சுபாவமாகவே நான் சொல்லவேண்டிய விஷயம் ஏதோ ஒன்று திட்டமானதாயும் பிரயோஜனமுள்ளதாயும் இருந்தாலொழிய எனக்குச் சொல்வளம் அதிகமாகஇல்லை. உனக்குப் பேசத்தகுந்த முகாந்திரம் இருக்கும்போதும், உனக்கு சொல்லவேண்டியது ஒன்று இருக்கும்போதும், மற்றவருக்கு பக்ஷத்தோடு ஏதோ ஒன்றை நீ செய்யும்போதும் தடையில்லாது பேசு. நிறுத்தவேண்டிய வார்த்தை அதுவல்ல. மற்று உபயோகமில்லாத பேச்சுகளை நிறுத்தவேண்டும். உபயோகமற்றவார்த்தை ஒவ்வொன்றும் மாஸ்டருடைய அருகில் உன்னை போகாவண்ணம் தடுக்கும் சுவருக்கு ஓர் செங்கல்லாயிருக்கிறது. அவரை அடைய வேண்டுமென்கிறவர்களுக்கு இது ஓர் பாரமான சிந்தனை.

அதிகமாய்ப் பேசுகிறவன் எவனும் மெய்பேசுபவனாக இருக்க முடியாது. அவன் தெரிந்தே வேணுமென்று மெய்யற்றதை சொல்லுவான் என்று நான் சொல்லவில்லை. ஆனால் அவன் எப்போதும் உள்ளவாறு சரிவர சொல்லமுடியாது. சரிவரயில்லாதது மெய்யற்றது. தவறான பேச்சால் உண்டாகும் மேகம்போல் எண்ணங்கள் உன்னை சுற்றிலும் சூழவைத்திருப்பதைவிட கொடியது யாதும் கிடையாது. உதாரணமாக ஒரு சமயம் ஏதோ ஒரு சிறிய பருப்பளவு உண்மை நடுவில்வைத்து, வாக்கு விஸ்தார குவியலாக இருக்கும் கடிதங்கள் எனக்கு அடிக்கடி வருகின்றன. வாழ்க்கையிலிருக்கும் சாதாரண விவகாரங்களில் சொல்லுவதில் எல்லாம் மிகைப்பட்டிருப்பதைத் தள்ளி கேட்கக் கற்றிருக்கின்றோம். அப்படியே மற்றொருவன் பேரில் குற்றங்குறை கூறின கடிதம் வரும்போது—

இப்பேர்ப்பட்டவைகள் அநேகம் வருகின்றன—அநேகமாய் எனக்கு தெரிந்தவரையில் எழுதினவனுடைய குணத்தைகொண்டும் இன்னும் அதை எழுதும்போது இருந்த நிலையை உணர்ந்தும் எழுதினதற்கு எவ்வளவு இட (ஆதாரம்) மிருப்பதை மதிக்கின்றேன்,

எவனொருவன் நாவை அடக்கி ஆள்கின்றானோ அவன் எல்லாவற்றையும் அடக்கினவன் எனறு மநு சொன்னார். மேலும் ஒரு கிருஸ்துவ ஆசாரியர் "நா ஓர் சிறிய அவயவம் பெருத்த விஷயங்களில் பெருமை பாராட்டுகின்றது. சிறு நெருப்பை மூட்டுவதால் எவ்வளவு பெரிதாகும் எனபதைக் கவனித்துப்பார். 'நா' ஒரு நெருப்பு, படு பாபம் இதிலடங்கியிருக்கிறது. நம்முடைய அவயவங்களில் 'நா' அவ்விதமாயிருக்கின்றது. இது தேகமுழுவதையும் கெடுக்கின்றது" எனறு சொன்னார். நாவை அடக்குதல் கீழான சுபாவங்களை அடக்குதல் என்று பொருள். மனிதர்களுடைய சிற்சிறுச் சங்கடங்கள் அநேகமாய் அவர்களுடைய சோம்பேறிப் பேச்சுக்களின்பலனாய் வருகின்றன. அவைகளிலிருந்து சிற்சிறு தலைவலிகள் சுகமில்லாதிருத்தல், மனவாட்டாம் ஆகிய இவைகள் இவ்விதமாய் உண்டாகின்றன. இவ்விதமாய் உபத்திரவப்படுகிறவர்கள் பேசாமலிருக்கும் தன்மையைக் கற்றார்களானால் கூடிய சீக்கிரத்தில் அவர்களுடைய திரேகம் சௌக்கியமாகிவரும். ஒரு பகுதி பேசுவதால் சிதறிப்போகும் பிராணபலத்தை போகவிடாம லிருப்பதாலும், ஒரு பகுதி சோம்பேறிப் பேச்சால் வரும் சதா சிறு கர்மகடனுக்குப் பாத்திரனாகாததாலும் சௌக்கியம் ஏற்பட்டு வரும். பைதோகாரஸ் என்கிற ஆசிரியர் தனது சிஷியர்களுக்கு இரண்டுவருடம் மௌனம் ஆக்ஞாபித்திருந்தனர் என்பதைக் கவனிக்கவேண்டியது. ஏனெனில் இவர் நமக்கு இப்போது தெரிந்த மாஸ்டர் குதூமி என்பவர்; ஆல்கியூனிக்கும், பிஷப் லெட்பீடருக்கும் ஆசிரியர் (குரு).

இந்தியாவில் முனிகள் என்ற பெயர்கொண்ட யோகிகள் அநேகரிருக்கின்றனர். இவர்கள் தங்களுடைய பெயரின் பொருள்படி மௌனவிரதம் எடுத்திருக்கின்றனர், அதனுடைய சிலாக்கியம்அத்தேசத்தில் எப்போதும் தெரிந்திருக்கின்றது, ஒருவர் பத்து

வருஷம் இந்த வைராக்கியத்தோடிருந்தது எனக்குத் தெரியும். அது அவருக்கு பெருத்த சாந்தமும், கம்பீரமும் கொடுத்தது. அதனால் அவர் வைதீக வாழ்க்கையை மென்மேலும் கைகொண்டு நடக்கின்றார். அப்படி இல்லாதிருந்தால் இப்படி நடக்கவராது. நாம் உலகில் வாழ்ந்து கொண்டு அதில் அநேகவித வேலைகளைச் செய்துகொண்டிருக்கும் போது அவ்வித விரதம் நம்மால் எடுக்கமுடியாது. ஆனால் அதனுடைய கருத்தைக்கவனித்துச் சமயம் வாய்த்தபோதெல்லாம் வருத்தம் கொடுக்காதபடி மௌனமாயிருந்து நடக்கக்கூடும்; நடக்க வேண்டும்.

தன்னை இடைவிடாமல் விழிப்புடன் பரீக்ஷித்து வருவது தன்னைத்தான் என்று உற்று அறியும் சாதனமாயிருக்கின்றது, நீ ஏதாவது ஒன்றைச் சொல்லவேண்டிவரும்;அப்போது குப்த விதியின்படி அனபிற்கும், உபகாரத்திற்கும் வேண்டிய அளவிற்குமேல் அதிகமாய் எதையும் சொல்லாதிருக்க உறுதிசெய்ய வேண்டியிருக்கிறது. ஒரு தடவையில் ஒரு நாளைக்கு மாத்திரம் இந்தப்படி நிச்சயித்து அப்பியாசிப்பது ஒரு நல்ல சாதனம். தினமுழுதும் வீண் வார்த்தையொன்றையும் பேசமாட்டேன் என்று காலையில் உறுதி செய்துகொள். அப்படி செய்தால் குறைந்தபக்ஷம் நல்லவழியில் கூட்டும் ஒருநாளாகும். நமது ஜெயின சகோதரர்கள் விழிப்புடன இருப்பதற்கும், தன்னைத்தான் என ஞாபகப்படுத்தி கொள்ளுவதற்கும், இவ்வித சாதனங்களைக் கையாளுகின்றனர். ஒரு விஷயத்தை நாள் முழுதும் செய்யமாட்டேன் என்று காலையில் உறுதி கூறுகின்றார்கள்.அதுவொன்றை மாத்திரம் எடுத்துப் பார்க்கில்சுத்தமாய்முக்கியமில்லாததாயிருக்கலாம்.என்றாலும்அவ்விஷயத்தை அவர்கள் செய்கிறதில்லை. இவ்வித பழக்கத்தால் வரும் விழிப்பு, அஜாக்கிரதைத்தன்மையை விலக்கிவிடுகின்றது. பால்மாறிக்கை, அதாவது அக்கரை யில்லாத தன்மை, மனிதர்களை அநேகவித குற்றங்களைச் செய்ய ஆளாக்கிவிட்டதைப்பற்றி புத்தபகவானும் வெகு கண்டிப்பாய் சொல்லியிருக்கிறார்.

C. W. L:—எல்லா வேளையிலும் வாயாடுகிறவர்கள் எப்போதும் அறிவோடாவது பிரயோஜனமோடாவது பேசமுடியாது.

மேலும் அவர்களால் மெய் பேசமுடியாது. பிடித்தமில்லாமல் வள வளவென்று ஜனங்கள் சதா பேசினால், சொல்லும் சில விஷயங்கள் பொய்யாக மனதார அவர்கள் சொல்லா விட்டாலும், கண்டித மாய் மெய்யாயிருக்கமாட்டாது. அநேகவித திட்டமில்லாத சமா சாரங்களை சொல்லியபிறகு "நான் தவறான கருத்து வைக்கவில்லை. ஆதலால் பாதகமில்லை" என்று சொல்லுவார்கள். நீ என்ன கருத்துகொண்டாய் என்பதால் யாதும் விளைவதில்லை; மற்று நீ என்ன சொன்னாய் என்பது பலனைத்தருகின்றது. நீ ஒரு அறி வீன விஷயத்தை செய்தால் உன்னுடைய கருத்து நல்லதாயிருந் தாலும் அது அறிவீனத்தை மாற்றப்போகிறதில்லை. அல்லது அதன் கர்மத்திலிருந்து உன்னை விடுவிக்கப்போகிறதுமில்லை. நல்ல எண் ணம் கறாரா யிருக்குமானால் உனக்குப் பிரயோஜனப்படும்; ஆனால் அறிவீன விஷயம் உனக்குப் பூவுலகுக்கேற்ற கெட்ட கர்மம் விளைவிக்கும். ஒருவன் ஏதோ ஒன்றை சொல்லுவான, பிறகு "தப்பிதம் செய்தேன் என்று தெரிகிறது. அது முற்றிலும் அப் படியல்ல" என்று அதை திருத்திகொள்வான். அவன் ஒரு பொய்யைச் சொன்னான. அவன அப்படி நினைக்கவில்லை. எனறா லும் மெய்யில்லாததை வற்புறுத்தினான். அவன் அக்கருத்து கொள்ளவில்லை எனபது அகஸ்மாத்தாய் யாரோ ஒருவனைச் சுட நேரிட்டபோது, துப்பாக்கியில் குண்டும் மருந்தும் இருந்ததாக எனக்குத் தெரியாது என்று நியாயம் சொல்வதுபோலிருக்கிறது. அவன் அதில் இல்லையென நிச்சயமாய் தெரிகிறவரையில் குண் டும் மருந்தும் இருப்பதாக கொள்ளவேண்டியது கடமை.

உண்மையல்லாததும், பக்ஷமில்லாதும், பிரயோஜனமில்லாதது மான எதையும் பேசாதிருக்க குறைந்த பக்ஷம் ஒருநாளைக்கு நாம் உறுதியாய் இருப்போமானால் நல்ல விஷயமாயிருக்கும். அந் நாள் வெகுவாய்ப் பேசாத நாளாயிருக்கும். ஒருக்கால் உலகத்திற்கு அதிக நஷ்டம் வராது. என்றாலும் நமக்கு மெத்த அநுகூலமாயிருக் கும். நிச்சயமாய் சரேலென்றும் தடதடவென்றும் உல்லாச சம்பாஷணைகள் செய்யமுடியாது. ஏனெனில் நாம் நிறுத்தி கவ னிக்கவேண்டியிருக்கிறது. இவ்விதிகள் மேலான வைதீக வாழ்க் கையின் நியதிகளை ஒட்டியிருக்கின்றன. ஒருவனுக்கு அதிசீக்கிர

மாய் விருத்திபெற வேண்டுமென்கிற விருப்பமுண்டானால் அவன் இவ்வித மேல்படிகளின் விதிகளை ஒட்டிநடக்க பிரயத்தனப்பட வேண்டும். அவைகள் சாதாரண வாழ்க்கைக்கும அதன் வழிகளுக்கும் விரோதமாய்க் கொண்டுபோய் விடுவதாக இருந்தபோதிலும் அவைகளை ஒத்துநடக்க உன்னை நீ திருத்திகொள்ளவேண்டும். ஒருக்கால் அவை கஷ்டமானதாகத் தோன்றலாம். ஆனால் அதை கருத்தோடு கவனித்தபிறகும், மேல்படியின் வாழ்வுக்கு மிகக் கடினமானதாகத் தெரியும்பக்ஷத்தில், உண்மையில் விருத்திக்கு வரவேண்டிய முயற்சி எடுக்க ஒன்று அல்லது இரண்டு ஜனமம் காத்திருக்க வேண்டும். நாம் இரண்டு வேலையை ஏக காலத்தில் செய்யமுடியாது. அதாவது முயற்சியில்லாமலும், கஷ்டமில்லாமல் சுகமாயிருந்துகொண்டு விரைவாக விருத்தியடைவது இவ்விரண்டும் ஏக காலத்தில் முடியாது. ஆனால் ஒன்றைச் செய்யமுடியும். தனக்கு கஷ்டப்பட இன்னும் சக்தியில்லை என்பவன்பேரில்யாதொரு குற்றமும் கிடையாது.

> "பேசுவதற்குமுன் கருத்தோடு யோசிக்க இப்போதே பழகிக்கொள்வது நல்லது. ஏனெனில், நீ ஞானதீக்ஷை பெற்றபோது சொல்லக் கூடாததைத் தவறிச் சொல்லாதபடி, ஒவ்வொரு வார்த்தையையும் நீ காத்துகொள்ள வேண்டியிருக்கிறது."

C. W. L:—ஞானதீக்ஷையைப்பற்றிய விஷயங்கள் ஒருவனுக்குத்தெரியாதிருந்தால் ஒருக்கால் இதை தப்பர்த்தஞ் செய்யக்கூடும். எவனாவது ஒருவன தீக்ஷயின் பரம இரகசியங்களை வெளிப்படுத்த எண்ணுவானானால் அவன் வாயைத் திறந்து சொல்லுமுன்னமே விஷயத்தை மறந்துவிடுவான். ஆதலால் வாஸ்தவமான இரகசியங்கள் கண்டிதமாய்ப் பந்தோபஸ்தோடு இருக்கின்றன. அவைகள் ஒருபோதும் வெளியாகவில்லை. அப்படி வெளியாகமாட்டாது. என்றாலும் தீக்ஷைபெற்றவனுக்கு அஜாக்கிரதை வருமானால் அவனுக்கு அதிக கெடுதியிருக்கின்றது. அவன் உண்மையில் வகையில்லாத நிலையை வருவித்துகொள்ளக்கூடும். எனக்கு அநேகவித சமாசாரங்

கள் தெரிந்திருக்கின்றன. இவைகளை தினசமாசார பத்திரிகை களில் வெளிப்படுத்துவதால் குற்றம் யாதும் உண்டென்பது எனக் குத் தோன்றவில்லை. என்றாலும் அதை மறுபடியும் சொல் லாதிருக்கும்படி உத்தரவாயிருக்கிறது. ஆகையால் நான சொல்ல வில்லை. அது ஏன் சொல்லக்கூடாதென்பது எனக்குத் தெரி யாது. வாக்கு கொடுத்தது ஒரு ஆணை; அதை பக்தியோடு வைத் திருக்கவேண்டும். அதைப்பற்றி கௌரவமாக நினைக்காதவர்கள் இருப்பார்களானால் அவர்கள் குப்தவிருத்திக்கு வரவேண்டும் எனும் எண்ணத்தை உடனே விட்டுவிடவேண்டியது.

“வழக்கமான சம்பாஷணைகள் பெரும்பா லும் அநாவசியமானவையே; அறிவீனமானவை யே; அது புறங்கூறுக விருந்தால் கொடியதே.”

C. W. L.:—நாம் அநாவசியமான பேச்சுகள் என்று தெரிந் திருந்தும் பலகாலும் ஒருவருடன் சுகமாய்க் காலத்தை கழிப்பதற் காகப் பேசிவருகிறோம். ஒருக்கால் இப்படி பேசிக்கொண்டே வெகு காலத்தை கழிக்கும்படியான அற்பலமான நமது தற்கால வழக்கம். இப்படி கழிக்கும் காலத்தை நிச்சயமாகவே அதிகப் பிரயோஜன மாகும்படியான யோசனை செய்வதில் உபயோகப்படுத்திகொள்ள லாம். நாம் பிடிவாதமாய்ப் பேசாமலிருந்தால் குறறமாக கொள்ளு கிறவர்களை, திருப்தி செய்வதற்காக அவசியமில்லாத விஷயங்களைச் சொல்லும்படி சமயங்கள வருகின்றன. எனறாலும் இப்பேர்ப்பட்ட சந்தர்ப்பங்களுக்கு அப்புறமாயும் அநாவசியமான பேச்சு ஏராளமா யிருக்கின்றது. இது மேற்சொன்ன நோக்கப் படிக்கில்லாது மற்று ஏதோ ஒன்றை சொல்லவேண்டியது என்கிற எண்ணத்தோடு சொல்லிவருகிறது. இது தவறு. உண்மையான சிநேகிதர்கள் பேசாமல் சும்மாயிருந்துகொண்டே ஒருவருக்கொருவர் சகவாசத் தைச் சுகிக்கமுடியும். மேலும் அவர்கள் மனதில் ஒற்றுமையை நீக்கமற உற்றுணரமுடியும். ஆனால் மானிடர்கள் சம்பாஷணையை நிறுத்தி சும்மா இருப்பதற்கு அஞ்சிப் பேசவேண்டியதெனகிற மன நிலையுள்ளவர்களானால் பிறகு துரதிர்ஷ்டத்திற்கு ஏற்றபடி சொல் லும்படி அநேகம் வரும். இவைகளை சொல்லாமலிருந்தால் மெத்த

நலமாய் இருக்கும். வாயாடிகள் அறிவாளிகளல்ல. சாதாரணமாய் அவர்கள் யோசனையோடு பேச பேர்பெற்றவர்களல்லர்.

> "ஆகையால், பேசுவதைவிட உற்றுகேட்டுக் கொண்டிருக்க வழக்கப் படுத்திகொள். நேராய் உன்னை கேட்டாலொழிய எதைப்பற்றியும் அபிப்பிராயங்களை முன்னின்று கொடாதே."

C. W. L.:—தமக்குச் சரியல்லவென்றாவது, அறைகுறை என்றாவது, படும் விஷயங்களை கேட்டபோது உடனே அதை மறுத்து வாதாடி வழக்கு உண்டாக்காமலிருக்கச் சிலருக்கு முடிகிறதில்லை. அபிப்பிராயங்களைத் திருத்தவாவது, அல்லது தப்பிதஞ்செய்த எவரையும் சரிபடுத்தவாவது, நமது அலுவலல்ல என்பதை நாம் அறியவேண்டும். அமரிக்கையுடன் நம்மால் கூடியவரையில் ஜனங்களுக்கு உதவிபுரிந்து வருவது நம்முடைய வேலை. ஏதோ ஓர் விஷயத்தைப்பற்றி நமது அபிப்பிராயத்தை கேட்டபோது அதை எதிர்க்கும் தன்மை இல்லாதபடி சாந்தத்துடன் மிக நிதானமாய்ச் சொல்லுவது நமது வேலை. மற்றவன் எவனுக்கும் நமது அபிப்பிராயம் வெகு ருசியாயிருக்கும் என்று நாம் பாவிக்கக்கூடாது. சில சமயங்களில் பிரியப்படமாட்டார்கள். அப்போது அதை மற்றவர்கள்பேரில் போட்டு திணிப்பது தப்பிதம். ஒருவன் ஒரு விஷயத்தைப்பற்றி இன்னின்ன விதம் என்று வெகு நிச்சமாயிருக்கக் கூடும். அது அப்படியல்லவென்று நமக்கு நன்றாய்த் தெரிந்ததாயிருக்கலாம்; என்றாலும் அவனைப் பேசவிடுவது மிக நல்லது. வெகுவாய் அது அவனுக்குச் சுகமாயிருக்கலாம். நமக்கு யாதொரு தீங்கும் செய்யாது. அவன் பூமியை தட்டையாயிருக்கின்றதென்றாவது, சூரியன் அதை சுற்றுகிறான் என்றாவது நம்பிகொண்டிருக்கலாம். அது அவனுடைய அலுவல். ஒருவனைப் பள்ளிக்கூட உபாத்தியாயராகச் சில சிறுவர்களுக்கு கற்றுகொடுக்கும்படி நியமிக்கப் பட்டால் அப்போது அவர்களை மெதுவாய்ச் சாந்தத்தோடு திருத்தலாம். ஏனெனில் அது உபாத்தியாயருடைய கடமை. ஆனால் பொது ஜனங்களுக்கு உபாத்தியாயராக என்னையும் உன்னையும் ஏற்படுத்தவில்லை.

ஒருவனுடைய குணத்தைப்பற்றி தூஷணையாகக் கேட்டால் "மன்னியுங்கள் நீங்கள் சொல்வது முற்றிலும் சரியல்ல, அது உண்மையல்ல" என்று சொல்வதுத் தடையில்லாத நமது கடமை. ஜனங்களுக்குச் சரியானபடி ஒழுகவேண்டிய நடத்தையை சொல்ல வேண்டியது. தூஷணை நிராதரவான ஒருவரைத்தாக்கும் விஷயமாகின்றது—அப்பொழுது அவனைக் காப்பது ஒருவருடைய கடமை.

> "சாதன இலக்ஷணா விளக்கத்தில் அவைகளை அறிதல், துணிதல், இச்சித்தல், மௌனமாதல் என்று சொல்லப்பட்டிருக்கின்றது. இந் நான்கில் கடைசியாகவுள்ளது எல்லாவற்றிலும் மிக்க கடினமானது."

C. W. L.:—எவனொருவனகுப்தமார்க்கத்தில் விருத்தியடைய வேண்டுமென இச்சிக்கிறானோ அவன அறிந்துகொள்ளவும் துணிவாயிருக்கவும், திட இச்சையோடிருக்கவும், பேசாதிருக்கவும், உறுதி செய்யவேண்டும், என்கிற கொள்கையை "ரோஸிக்ரூஷியன்" எனும் சங்கத்தார் வைத்திருந்தனர். இயற்கையிலுள்ள உண்மைகளை அறிந்திருக்கவேண்டும். அதை பிரயோகிக்கத் துணிவோடிருக்கவேண்டும். முக்திமார்க்கத்தில் நமக்கு வரும் பெருத்த சித்திகளை உபயோகிக்கவேண்டியதால் அவைகளையும் இன்னும் நம்மையும் அடக்கியாளும்படியானத் திடச்சித்தம் நமக்கு இருக்கவேண்டும். பிறகு இவ்விஷயங்களைச் செய்கிறபோது அவைகளைப்பற்றிப் பேசாமலிருக்கப் போதுமானது தெரிந்திருக்க வேண்டும்.



# 17 - வது அத்தியாயம்.

## உன்வேலையைப்பார்.

" நீ கண்டிப்பாய் அடக்கவேண்டிய மற்றொரு சாதாரண இச்சை எதுவெனில், பிறருடைய அலுவலில் தலையிடப் பிரியப்படுதல். எவனென்ன செய்தாலும், என்னசொன்னாலும், என்ன நம்பினாலும், உனக்கென்ன ? அது உன் அலுவலல்ல; இஷ்டப்படி நடக்க நீ அவனை சும்மா விடக் கற்றுக்கொள். மற்றவனெவனுக்கும் இடர் செய்யாமலிருக்கும் வரையில், தடையில்லாமல் நினைக்கவும், பேசவும், செய்யவும் அவனுக்கு முழு சுதந்திரமிருக்கின்றது. உனக்குச் சரியெனப்படுவதைச்செய்ய சுதந்திரம் வேண்டுமென்று நீ மாத்திரம் உரிமையாடுகின்றாய்; அதே சுதந்திரத்தை நீ மற்றவனுக்கு கொடுக்கவேண்டும். அவன் அதைப்பாராட்டும்போது, அவனைப் பற்றிப் பேச உனக்கு நியாயமில்லை."

C. W. L.:—மற்றவர்களுடைய காரியங்களால் எவ்விதத்திலும் உலகத்திற்கு பொதுவான தீங்கு இல்லாதிருக்கும்வரையில் அவர்களுடைய நம்பிக்கையிலாவது கொள்கையிலாவது காரியங்களிலாவது யாரும் தலையிடப்படாது. அண்டைவீட்டுக்காரர்களுக்கு இடராக ஒருவன் நடப்பானுனல் ஏதோ ஒருவழியில் புத்திமதி சொல்ல நம்முடைய கடமையாக சில சமயம் இருக்கலாம் ஆனால் அப்பேர்ப்பட்ட சந்தர்ப்பங்களிலும் விஷயங்கள் தானகவே திருத்தி கொள்ள விடுவது அநேகமாய் மெத்த நல்லது.

ஆங்கில ஜாதியாராகிய நமக்குத் தடையில்லாத சுதந்திரம் மெத்த இருப்பதாக மெத்த பெருமை படைத்திருக்கிறோம். ஆனால்

உண்மையில் கொஞ்சங்கூட அப்படியில்லை. ஏனெனில் அநேக மாய் நாம் வழக்கம் என்கிற (தோல்வார்) கயிற்றால் மன திற்கு எட்டாதபடி கட்டுண்டிருக்கின்றோம். நம்மிஷ்டப்படி உடை உடுக்கவாவது வெளியே போகவாவது முடிகிறதில்லை. ஒருவன் பண்டையநாளின் கிரீக்தேச உடையை இஷ்டப்படக் கூடும். இது உலகிலுள்ள உடைகளில் வெகு நேர்த்தியானது. ஆனால் அதை தரித்துத் தெருவில் போவானானால் அவனைச் சுற்றி வெகுவாய்க்கூட்டங் கூடிவிடும், தெருவின் போக்குவரவைத்தடுத்த தற்காக அவனைப் பிடித்துக்கொள்வார்கள். சுதந்திரமுள்ள எந்த தேசததிலும் மற்றவர்களுக்கு இடைஞ்சலாக இல்லாதிருக்கும் வரையில் தன்னிஷ்டப்படி உடுக்கவும் நடக்கவும் ஒருவனுக்குச் சுதந்திரமிருக்கவேண்டும். ஆனால் உண்மையில் எவ்வகையிலும் சுதந்திரம் கிடையாது; மறற ஜனங்களுடைய வழக்க வழியை விட்டு வேறாக நடக்கக்கூடாது. குறைந்தபக்ஷம் கொஞ்சம் வித்தி யாசப்படலாம். நடந்தால் பெருத்த சங்கடமும் கலகமும் உண் டாகும். இது பரிதாபம், ஏனெனில் உண்மையான சுதந்திரம் எல்லோருக்கும் வெகு நலமாயிருக்கும் முக்கியமாய் மற்றவர்களிடம் தலையிடுபவர்களுக்கு அனுகூலமாயிருக்கும்.

A. B.:—ஊக்கமும் விடாமுயற்சியுமுள்ள நம்மில் அநேக ருக்கு தாம் கற்றுக்கொண்டதின் பிரயோசனம் அவ்வுளவு நிச்சய மாயிருப்பதாலும், அதன் பரமசிலாக்கியத்தை அவ்வளவு ஐயம் திரிபற திருப்தியோடு தெரிந்திருப்பதாலும், மற்றவர்களை அவ் வண்ணம் தெரிந்துகொள்ளச் செய்யவேண்டுமென்று பிரியப்படுகி றார்கள் என்று நான நினைக்கிறேன. மேலும் சில சமயங்களில் நாம் பார்க்கின்ற வண்ணம் அவர்களையும் பார்க்க பலவந்தஞ் செய்யலாம் என்கிற விருப்பமும் இருக்கலாம். அதீத அபிமானமுடைய தன் மைக்கு அநேகமாய் இது ஒரு குறை. ஆனால் ஒருவன் தன்னுடைய மூளையறிவில் தெரிந்திராவிட்டாலும், தனக்குள்ளிருக்கும் ஆத்துமா விற்கு முன்னமே எவ்வளவு தெரிந்திருக்கின்றதோ அவ்வளவு தான்களிப்புடன் தெரிந்து கொள்ளமுடியும். ஆதலால் மற்றவை களை இன்னும் தானாய் தெரிந்துகொள்ள சக்தியில்லை. இந்தப்படி உள்ளே தெரிந்திருக்கும் முதல்படிக்கு வந்திருந்தாலொழிய அவ

னுக்கு வெளியிலிருந்து அவன்முன் எடுத்துக்காட்டும் உண்மையை ஏற்றுக்கொள்ளும் நிலையில் அவனில்லை. பிரயாசையோடு அவன் பேரில் ஏற்ற எத்தனிப்பது நல்லதைவிட்டு மெத்த தீங்கைத் தருகின்றது.

இவ்விதமாகவே மனச்சாக்ஷி என்பதை வெளியிலிருந்து உண்டாக்க முடியாது. இதுமுன் அநுபவத்தின பலனாகும். ஆகையால் போதனைகளையும் புத்திமதிகளையும் அங்கீகரித்தல், தெரிந்து கொள்ளல், என்பது எதிரில் எடுத்துக் காட்டினவுடன அது அவனிடத்தில் முன்னமே உள்ளிருக்கும் அறிவைத் தூண்டிவிட்டது எனறும் பிறகு அது மூளையறிவிற்கு மின்னலைப்போல கீழ் தாக்கி விட்டது எனறும் அருத்தம். ஆகையால், இவ்வழியில் ஆசாரியர் (உபாத்தியாயர்) செயயவேண்டியது யாதுயெனில் இவனுக்குமற்ற லோகங்களில் முன்னமே தெரிந்திருக்கும் அறிவை இவனுடைய பூலோக மனதிற்கெதிரில் கொண்டுவந்து விடவேண்டியது ஒனறு தான். அநேகமான ஜனங்கள் தூங்கும் சமயத்தில், தூல தேகத்திலிருந்து அப்புறமாயிருககும்போது அவர்களுக்கு திவயஞான கல்வியை மெத்தகொடுத்து வருகின்றது எனறு ஓர் பெரிய ஆசிரியர் சொல்லியிருக்கினறார். வாஸ்தவ புருஷன் அப்போது கறகிறான. இவ்விதம் கறற அறிவை பூலோக ஆசாரியரால் இன்னொரு முறை கொடுத்து வருகிறது. இவருடைய வார்த்தை அவன்முன் கற்றதைத்தன மூளை நினைவிற்கு கொண்டுவர உதவி செய்கின்றது. இவ்வளவுதான பூலோக ஆசரியன செய்யக்கூடியது.

அடிக்கொருதரம் நமக்கு விக்கினம் வருவதைக்கொண்டு, ஒருவனுக்கு நடக்க இனனும் இஷ்டமில்லாத வழியில் உதவிபுரிய முடியாது எனபதை நாம எல்லோரும் கறகவேண்டியிருக்கின்றது. இவவிதமாய் நாம்வெகு அமரிக்கையை அடைகிறோம். உதவி கொடுத்தால் பிரயோஜனப்படும் என்று பார்த்தபோது உதவிகொடுக்க சித்தமாயும், இன்னும் நம்முடைய ஒத்தாசை எவவகையிலும் பிரயோஜனப்படாது என்றிருக்கும்போது அதாவது நாம் சொல்லுவதால் மற்றவன் பிரயோஜனப்படுத்திக்கொள்ள மாட்டான என்றிருக்கும்போது, ஒதுங்கி நின்று காத்திருக்கவும் சித்தமாயிருக்கின்

றேம். நாம் இவ்வித நோக்கத்தோடிருப்பது அக்கறை இல்லாததாக அறிவீனர்களுக்கு புலப்படுகின்றது. உண்மையாவெதனில் எவவி டத்தில் உதவிபுரியக்கூடும், எவவிடத்தில் கூடாது என்பது மெத்த தேர்ச்சியடைந்தவனுக்குதான திட்டமாய்த் தெரியும்.

எவ்விடத்தில் உதவி கொடுக்கவேண்டியது எனபதை கண்டிப் பாய் பார்க்கத் தெரியாதவர்கள் உபாயமாய்ச்சோதிக்கவேண்டும். ஒரு கருத்தை எடுத்துசொல் அதைத் தட்டி விட்டாலும் அல்லது லக்ஷி யஞ் செய்யாவிட்டாலும் அந்த வழியில் நீ எடுத்துரைத்தவனுக்கு உதவிபுரிய முடியாது என்பதை நீ காண்பாய். அப்போது நீ பொறுத்திருக்கவேண்டும் அல்லது இருக்கும் சந்தர்ப்பத்திற்கு தக்க படி வேறுவழியில் எத்தனிக்கவேண்டும். உனக்குத்தெரிந்த எல்லா வழியிலும் அவனே பலவந்தப் படுத்துவதைவிட இது வெகு மேலா னது. உனக்கு தெரிந்த கல்வியை எல்லாம் அவன பேரில் பொழிந் தும் அல்லது அவனுக்குள் போட்டு கெட்டிபடுத்த எத்தனித்தும் அவன மனதை திக்கு முக்கலாட செய்யாதே; அல்லது அதில் அவனே முழுகிப்போக வைக்காதே. ஜனங்கள் அநேகமாய் தங்க ளுக்கு சுதந்திரம் வேண்டுமென்று உரிமையாடுகிறார்களே தவிர அதை மற்றவர்களுக்கு கொடுக்க விநோதமாகவே விருப்பமில்லா திருக்கின்றனர். இது கனத்த பிழை. ஏனெனில் நமக்கு இருப்ப தைப்போலவே மற்ற ஜனங்களுக்கும் தங்களுடைய கருத்துகளுக் கும் அவைகளை வெளிப்படுத்துவதற்கும் உரிமை முற்றும் இருக் கின்றது.

சில சமயங்களில் தப்பிதம் இன்னொரு புறத்திலிருக்கும். மற்ற வர்களுடைய அபிப்பிராயங்களை கட்டாயம் நீஏற்றுக்கொள்ளவேண் டியது என்கிற மந்த புத்தியோடு மற்றகோடிக்குப்போகாதே ஒத் துக்கொள்ளாதிருப்பதற்கும் உனக்கு முழு சுதந்திரமிருக்கின்றது. நீ பகிரங்கமாய் "நான் அத்துடன்ஒப்பமாட்டேன்" என்று சொல்ல லாம், அல்லது சும்மா பேசாமலிருக்கலாம். ஆனால் நீ செய்யத்தகா தது எதுவெனில் தன் சொந்த அபிப்பிராயத்தில் அபிமானிதிருக் கும் மற்றவனே எதிர்க்கக்கூடாது. ஒருவன் ஒருவிஷயத்தை சொல் லும்போது முதலில் உனது பகுத்தறிவை உபயோகப்படுத்து. நீ

கேட்கும் ஒவ்வொருசமாசாரத்திலும் எப்போதும் உனது புத்தியை செலுத்து. மற்றவர்களை தடையில்லாதிருக்க விடு. ஆனால் நீ உன்னை அடிமை படுத்திக் கொள்ளாதே.

"அவன் செய்கிறது தகாததென்று நீ நினைப்பாயாகில் ஒரு சந்தர்ப்பத்தை உபாயமாய் தேடி நீ ஏன் அவ்விதம் எண்ணுகிறாய் என்பதை அவனுக்குத் தனியாய் வெகு மரியாதையுடன் சொன்னால் அதை அவன் மனதிற் கொள்ளும் படி செய்யக்கூடும். ஆனால் இப்படி செய்வதுகூட அக்கிரமமான தலையிடுதலாகிவிடும் சந்தர்ப்பங்கள் அநேகமிருக்கின்றன. யாது நிமித்தமாயும் இவ்விஷயத்தைபற்றி மூன்றாவது மனிதன் எவனிடமும் போய் தூற்றக்கூடாது. ஏனெனில்இது மிக கொடிய பாபகாரியம்."

A. B.:—நெறி தவறி கெடுதி செய்து வருவதாக தெரிந்த ஒருவனுக்கு சில சபயம் நீ உதவி கொடுக்கக்கூடும். ஆனால் இவ விடத்தில் நீ மிகவிழிப்புட னிருக்கவேண்டும். ஏனெனில் இவ வித விஷயங்களில் நன்மையைவிட்டு மிகத்தீங்கைச் செய்வது மிக சுலபம். மாஸ்டர் காட்டுகிறபடி இவ்வித சந்தர்ப்பத்தில் கொடுக் கும் உதவியை இரகசியமாயும் முற்றும் சிநேகிதத்தோடும் கொடுக்க வேண்டும். அவன தன சொந்த அபிப்பிராயத்தால் பிடிபட்டிருப் பவனானால் அவனை அநுபவத்திற் கற்கும்படி விடத்தான வேண் டும். அநுபவம், அதிருஷ்டானுசாரமாய், வெகு பெரிய ஆசான் (கற்றுகொடுப்போன).

ஒருவன் ஏதோ ஒரு தவறான கருத்தை பற்றிக்கொண்டு உன் னிடத்தில் வந்து சொல்லிக்கொண்டால், அவன் உன்னுடைய கருத் தில் அதிக விசுவாசம் வைத்திருந்தாலொழிய அல்லது குறைந்த பக்ஷம் நீ சொல்வதை திரயோசிக்க சம்மதப் பட்டிருந்தாலொழிய அதை தப்பு என்று சொல்லவேண்டிய அவசியமில்லை. அநேக சந்தர்ப்பங்களில் அவனே அவன் தப்பிதத்தை கட்டாயம் கண்டு

பிடிக்கக்கூடும். அப்போது அப்படி அவனை கண்டுபிடிக்க விவேகது மெத்த நல்லது. ஜனங்கள் என்னிடத்தில் வந்து அவர்களுடைய நம்பிக்கையின்படி என்ன நேரிடும் எனபதாக சிலபெருத்த பிரசித் தத்தை கூறுகிறார்கள். சாதாரணமாய் நான் அதை சாந்தமாயும் மரியாதையுடனும் கேட்கினறேன. என் அபிப்பிராயத்தை கொடுக்கிறதில்லை. சொனன ஆருடம் சம்பவிக்காவிட்டால் அதை சொன்னவனுக்கு தான் செய்த தப்பிதம் தோன்றுகிறது. அவனுகவே அதை கண்டு கொள்ளும்படி விடவேண்டும். அநேக ஜனங்கள் குப்தமுறையில் வழிபடும்போது இவ்வித விஷயங்கள் தடுக்கமுடியாமலே நேரிடும். சில சமயங்களில் இவர்கள் மதிமயங்கி போகின்றனர். ஏனெனில் அவர்கள் முன்மதித்து வைத்திருந்த கருத்துகள் அநேகமாய் விட்டுப்போய் நூதன விஷயங்கள் வருவதால் அவர்கள் மதிப்பதற்காக வைத்திருக்கும் கருத்துகள் எல்லாம் துண்டு துண்டுகளாய் உடைந்து போகுமோவென்று ஆச்சரியப்படுகிறார்கள்; இவ்வித சந்தர்ப்பங்களில் செய்யவேண்டியது ஒன்று யாதெனில் அவசரப்படாமல் சாந்தமாயும், குளிர்ந்த நிலையோடும் ஸ்திரமாயும் இருக்கவேண்டும். காலகிரமத்தில் விஷயங்கள் தெளிவாகி வரும். பொய்யானதும், தவறுதலாய் கொண்டதும் போய் விடும். உண்மையான விஷயங்கள் நிற்கும்.

> "குழந்தையையாவது, மிருகத்தையாவது துன்பப்படுத்துவதைக் கண்டால் தலையிட்டு தடுப்பது உன்கடமை."

A. B.:—குழந்தையையாவது மிருகத்தையாவது துன்பப் படுத்துகின்ற விஷயத்தில் தலையிடுவதுகடமை. ஏனெனில் பலமுள்ளவர்கள் தம்மை உயர்வாக மதித்து பலஈனர்களை இளப்பமாக பாவித்து மிதிக்கின்றனர். அது சரியல்ல. பலஹீனமுள்ளவர் தம்மை காப்பாற்றிக்கொள்ள சக்தியில்லாததால் அவர்களை எப்போதும் பாதுகாக்க வேண்டியது முறை. ஆதலால் எப்போதாவது, குழந்தையையாவது, மிருகத்தையாவது துன்பப்படுத்துவதைக் கண்டால் பலசாலியாயுள்ளவன் இடையில் புகுந்து அதனுடைய உரிமையாகிய ஆதரவை நீக்கிவிடாமலும் மற்றவனுடைய சுதந்தரத்

யைத் தடுக்காமலும் செய்வது கடமையாயிருக்கின்றது. ஆதலால் குழந்தைக்கு துன்பஞ் செய்வதை கண்டபோதெல்லாம், நீ தலையிட வேண்டியது. மேலும் நீ தலையிடுவதால் சரிபட்டு வரும்படி எத்தனிக்க வேண்டியது.

"தேச சட்டத்திற்கு விரோதமாய் எவனாவது நடப்பதைக் கண்டால், அதிகாரிகளுக்கு நீ தெரிவிக்கவேண்டும்."

C. W. L.:—இந்த வாக்கியத்தைப்பற்றி அதிகமாய் வியாக்கியானஞ் செய்யப்பட்டிருக்கின்றது. அநேகர் இதற்கு ஆக்ஷேபனை எடுத்திருக்கிறார்கள். இது ஆச்சரியமானது. ஏனெனில், நிச்சயமாகவே, நீ ஒரு குற்றத்தை மறைத்தால் அதைச் செய்வதற்கு முந்தியானாலுஞ்சரி, அல்லது செய்த பிந்தியானாலுஞ்சரி, சமயோசிதமாய் நீ அக்குற்றத்திற் சம்மந்தப்படுகின்றாய். சட்டம் உன்னை அவ்விதம் பாவிக்கின்றது. ஜனங்கள் "மற்றவர்கள் சட்ட விரோதமாய் நடக்கின்றார்கள் என்பதற்கு நாம் கோள் குத்தும் தூதனாக ஏற்பட்டிருக்கின்றோமா" என்று சொல்கிறார்கள். வாஸ்தவமாக இல்லை. ஜனங்கள் சட்டத்திற்கு விரோதமாய் நடப்பதைப்போய் கண்டு பிடிக்க நீ அமைக்கப்படவில்லை.

சட்டமானது தேசத்திற்கு ஒற்றுமை கொடுக்கின்றது. எல்லோருடைய நன்மைக்காக கிரமத்தை ஏற்படுத்துகின்றது. ஆதலால் அதை சீர்தூக்குவது ஒவ்வொருவருடைய கடமை. என்றாலும் ஒருவன் தன்னுடைய விவேகத்தை உபயோகப்படுத்தவேண்டும். காலம் கடந்த சட்டங்கள் இன்னும் சட்ட நிரூபணை போலேயிலிருந்தபோதிலும் அவைகளின்படி நடக்க எவரும் எதிர்பார்க்கவில்லை. தன் வேலையைவிட்டு சிற்சிறு குற்றங்களை முறையிடப்போக எவனுக்கும் அவசியமில்லை. உதாரணமாக மற்றவனுடைய வளவில் பிரவேசிப்பதை எடுத்துக்கொள்வோம். ஒருவன் மற்றவனுடைய தோட்டத்தின குறுக்கே போவதை நீ பார்த்தால் அதைப்போய் அதிகாரிகளுக்கு சொல்ல நீ கட்டுப்பட்டவன் என்று நான் நினைக்கவில்லை. அதைப்பற்றி உன்னை கேட்டால் அப்போது கட்டாயம் நீ சொல்லவேண்டும். அல்லது சுங்கத்திற்காக ஏற்பட்

டிருக்கும் துறைவரி சட்டத்தை எடுத்துக் கொள்வோம். நல்ல நகர பிரபு எவனும் சட்டத்தை அநுசரிப்பான; எவ்வித சரக்குகளை சொல்லவும் கள்ளத்தனமாய் ஏற்றுமதி, இறக்குமதிச் செய்யவும் நினைக்கமாட்டான் என்று சொல்லலாம். எனறாலும் தன்னோடிருக்கும் சில வழிபிரயாணிகள் சுருட்டுகளையாவது அப்பேர்ப்பட்ட இதர வஸ்துக்களையாவது கள்ளத்தனமாய் கொண்டு போகிறதைக்கண்டால் அதிகாரிகளுக்குக் கட்டாயமாய்தெரிவிக்க வேண்டும் என்பது எனது அலுவல் அல்லவென்று எனக்கு தோன்றுகிறது. ஏனெனில் இது மற்றவன் எவனையும் உபத்திரவப்படுத்தும் விஷயமல்ல.

நான் அச்சட்டத்திற்கு விரோதமாக நடக்கமாட்டேன. ஏனெனில் ஒரு சட்டம் ஏற்பட்டபோது அதனபடி நடக்கவேண்டும் என்று நினைக்கின்றேன். அது ஒரு கெட்ட சட்டமாயிருந்தால் அதை மாற்றுவதற்கு இராஜநீதியை தழுவிய வழிகளில் எத்தனிக்க வேண்டியது. சில விஷயங்களில் இருக்கும் சட்டங்களினபடி நடக்கக் கஷ்டமாயிருக்கின்றது.சில இடங்களில் கட்டாயம் அம்மைகுத்த வேண்டுமென்கிற சட்டமிருக்கின்றது. என்மட்டில் அம்மை குத்திக்கொள்ள ஆக்ஷேபிப்பேன். என்னுடைய பலத்திற்கு மேற்கொண்ட பலத்தோடு குத்தினுலொழிய நான் இடங்கொடேன். அதை குத்த இடங்கொடுப்பதைவிட சிறைச்சாலைக்குப் போக நேர்ந்தால் போகச் சித்தமாயிருப்பேன். ஏனென்றால் அது ஒரு கொடிய விஷயம். இவைகளிலெல்லாம் ஒவ்வொருவனும் தனனுடைய சொந்த யூகத்தைப் பிரயோகிக்க வேண்டும்.

இந்தியாவில் முக்கியமாய் எவ்வித குற்றங்களை கண்டால் தெரிவிக்க வேண்டுமென்பதாக சட்டம் ஏற்படுத்திருக்கிறது:— அவைகள் நிச்சயமாய் வெகு கொரமான குற்றங்களைப் பற்றியிருக்கிறது. ஒருவன் கொலை செய்வதையாவது, கொள்ளை யடிப்பதையாவது கண்டால் அதை தெரிவிப்பது எவனுயிருந்தாலும் அவனுடைய கடமை. ஆனல் திரளாயிருக்கும் சிற்சிறு விஷயங்களைப் பற்றி தெரிவிக்காமல் போவதால் ஒருவன் இந்தியாவில் நியாயப்படிக்கு அவைகளுக்கு சம்பந்த பட்டதாக வருகிறதில்லை.

A. B:—சட்ட விரோதமாய் நடப்பதை பார்க்கும்போதெல்லாம் அக்குற்றத்தை தடுப்பது ஒவ்வொரு நகர பிரபுவுக்கும் கடமை.

இது நகரபிரபுவின் அந்தஸ்த்திற்குரிய கடமைகளில் ஒன்று. என்றாலும் அன்றையதினம் இந்த போதனைக்கு ஓர் ஆக்ஷேபனை உண்டாயிற்று. ஒரு மாணுக்கன் என்னிடம் வந்து சொன்னதாவது "இதோ ஒரு விஷயம் புத்தகத்திலிருக்கின்றது, இதை நான் ஒத்துக்கொள்ள முடியாது. இது மற்றவர்களுடைய அலுவல்களில் சாதாரணமாய் தலையிட்டு பார்க்கும்படியாகவும், கள்ளதூதனுக விருக்கும்படியாகவும் இருக்க சொல்லுகிறது" என்றான். நிச்சயமாய், அவ்விதமான கருத்து ஒன்றும் அதிலில்லை. ஆனல் சட்ட விரோதமாய் நடப்பதை நீ பார்த்தபோது தலையிடவேண்டும். ஏனெனில் சட்டம் என்பது தேசத்தாரை ஒன்றுசேர்கும் பசை. கிரமத்தை ஏற்படுத்தி அவர்களை பரிபாலிக்கின்றது. ஜனங்களை ஒன்றாய்ச் சேர்த்துக் கட்டுகின்றது. ஆகையால் அதை நிலை நாட்டுவது ஒவ்வொரு நகர பிரபுவின் கடமை. ஒரு குற்றம் நடக்கப்போகின்றது என்பது தெரியுமானல் அதை மறைக்க எவனுக்கும் சுதந்திரமில்லை. அப்படிச் செய்தால் அக்குற்றத்திற்குச் சம்பந்தப்பட்டவனுகிறான். குற்றத்தைத் தெரிந்து அதைத் தெரிவிக்காதவன் நியாயப்படி அவன் அதில் சம்மந்தப்பட்டவன என று சட்டப்படி தண்டனைக்குட்படுகிறான் என்பது சாதாரணமாய்த் தெரிந்த விஷயம். என்னிடத்தில் ஆக்ஷேபித்தவன் அவன் சொல்லியதை யோசிக்கவில்லை என்று நான் பாவிக்கிறேன். ஏனெனில் அந்த சொல்பமான கடமையை யோசித்து அதன்படி நடவாத நகர பிரபுக்களிருக்கும தேசமானது கீழ்நோக்கி போகின்றது. ஏனென்றால் தேசாபிமானம் இல்லாத குறை.

> "நீ கற்றுக்கொடுக்கும் பொருட்டு உன்னிடத்தில் ஒருவனை ஒப்பிவித்திருந்தால் அப்போது அவனது குற்றங்களை எடுத்து அவனுக்கு மெதுவாய்ச் சொல்லுவது உனது கடமையாகும்."

C. W. L-:—இது தெளிவாயிருக்கின்றது. நாம் வயதில் மூத்தவரானதாலும், அறிவுடையவரானதாலும், ஒரு குழந்தையையோ, மாணுக்கனையோ அல்லது வேலைக்காரனையோ நம்முடைய கைகீழ் வைக்கப்பட்டு வருகின்றனர். இவர்கள் செய்கின்ற குற்றங்களை நாம் சொல்லாதிருந்தால் நம்முடைய அறிவாலும் அநுபவத்தாலும் வரும்

அநுகூலத்தை இவர்கள் இழந்து விடுவார்கள். ஆதலால் நமக்காக ஏற்படுத்தப்பட்டதை செய்யாது கைசோரவிட்டதால் இவர்களுக்கு செய்யவேண்டிய நம்முடைய கடமையில் தவறி விட்டோம்.

"இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில்மட்டுமே யல்லாமல், மற்றபடியுன் சொந்த அலுவலைப் பார்; மௌனமென்கிற விரதத்தைச் சாதிக்கக் கற்றுக்கொள்."

A. B.:—இதைச் சாதித்து வந்தால் ஜனசமூகம் எவ்வளவு வித்தியாசமாயிருக்கும் என்பதை யோசியுங்கள். அயலான் விஷயத்தில் அவனுக்கு சதா காவலாக இருப்பதைவிட்டு ஒவ்வொருவனும் தனது வாழ்க்கையில் யாதொரு தடையில்லாமலும் பகிரங்கமாய் வாழலாம். ஏனெனில் ஜனங்கள் ஒருவருக்கொருவர், அவரவர் இஷ்டப்படி நடக்க விடுபட்டிருப்பார்கள். தலையிடுவதும் குற்றஞ் சொல்லுவதும் போய் அன்னியோன்னிய பொறுமையோடு நல்லெண்ணம் நிறைந்திருக்கும். இப்போது உலகையாளும் நமது ஐந்தாவது வம்சம் ஆக்கிரமிப்பதிலும், போரிடுவதிலும், குற்றங் கூறுவதிலும், அமைந்திருக்கின்றது. ஆனல் நாம் இனிமேல் வரும் ஆருவது வம்சத்தின் வாழ்க்கையை கையாண்டு புழங்க எத்தனிக்க வேண்டியிருக்கின்றது. இதை பொறுமையாலும், சுறுசுறுப்புள்ள நல்ல எண்ணத்தாலும் பெறவேண்டியிருக்கின்றது. இது ஆருவது வம்சத்திற்கு அஸ்திபாரமாயிருக்கும் பொதுவான சகோதரபாவ கருத்தில் கொண்டுபோய் விடும்.

C. W. L.:—தன் வேலையை கவனித்திருக்க கஷ்டமில்லாததாக தோன்றுகிறது, ஆனல் கவனிக்கிறவர்கள் வெகு சிலரே. இவ்விடத்தில் தற்காலத்தில் சாதாரணமாய் வருத்த படுத்திக்கொண்டிருக்கும் தலையிடும் தன்மையையும், குற்றங்கூறும் தன்மையையும் விட்டு பொதுவான பொறுமையோடும்நல்லஎண்ண நோக்கத்தோடும் இருக்கவேண்டும் என்பது கருத்து. சாதாரணமாய்ச்செய்யாதஒன்றை ஒருவன் செய்தானனல் அவன் அவ்விதஞ் செய்வது ஏதோ ஓர் கெட்ட எண்ணத்தைக்கொண்டு செய்கிருன் என்கிற தீர்மானஞ் செய்ய ஜனங்கள் துணிகின்றார்கள். அது அப்படி இருக்

காது. அவனுக்கு தெரிந்திருக்குங் காரணமிருக்கக் கூடும். என்றா லும் அவன் குற்றமாகிய ஒன்றை, அல்லது மற்றவர்கள் இடைஞ் சலாக இருக்கும் ஏதோ ஒன்றை, செய்கிறானென்று தெளிவாய் தெரிந்தாலொழிய அவனை அவன் போக்கிலேயே விட்டு அவ னிஷ்டப்படிச்செய்ய விடவேண்டும்.

தற்காலத்தில்சாதாரணமாய் குற்றங்கள் சிலஇருப்பனபோலவே இவை பெரும்பாலும் நமது ஐந்தாவது வம்சத்தின் ஐந்தாவது கிளை வம்சத்திற்குரிய இலக்ஷணக் குறிகள் மேலிட்டு வந்ததால் உண் டாகின்றன. நமது வம்சம் கீழ்மனதின் தன்மையாகிய விசாரணை அதாவது இது வல்ல அது, அது வல்ல இது, என்று பிரித்து பார்க்கும் திறமையை விருத்திசெய்து வருகின்றது. இதை அதிக மாகவளர்த்திவிட்டால் ஆக்கிரமிக்கும் அதிகாரத்தையும், எதிர்க்கும் தன்மையையும், வாதாடும் வளமையையும் கொடுக்கின்றது, என்றா லும் குப்த விருத்தியை நோக்குகின்றவர்கள் அடுத்த வம்சத்தின் இலக்ஷணமாகிய புத்தியை,—ஐக்கிய படுத்தும் குணத்தை, பிரித்து பார்க்காமல் சேர்த்துபார்க்கும் தன்மையை, வித்தியாசங்களை விட்டு ஒற்றுமையாகும் குறிகளைப் பார்க்கும் திறமையை,—ஓங்கி வளரச்செய்ய வேண்டியிருக்கின்றது. இதை விருத்தியாக்குவது ஆறாவது மூலவம்சத்தின் அலுவலாயிருக்கின்றது. மேலும் சகாயத் திற்குஏற்றாப்போல் இப்போது அமரிக்காவிலும், ஆஸ்ட்ரேலியா விலும் இன்னும் இதர இடங்களிலும் பிறந்திருக்கும் ஆறாவது கிளை வம்சத்தாருடைய வேலையாகவும் இருக்கின்றது.

திவ்விய ஞான சபையில் நாம சகோதரபாவ கருத்தை நிலை நாட்டுகின்றோம், அதை அநுசரிக்கும் வழி இது ஒன்று. அதாவது குற்றம்பாராதுபுகழத்தக்க ஏதோ ஒன்றைகண்டு பிடி. நீகண்திறந்து பார்த்தாயானல் ஒவ்வொருவரிடத்திலும் ஒவ்வொரு பொருளிலும் குற்றங்குறையுள்ளவை சிலவற்றையும் புகழக்கூடியவை சிலவற்றை யும் பார்க்கமுடியும்.குற்றமான விஷயங்களை விட்டு நற்குணங்களின் பேரில் நமது கவனத்தை ஏன் நாட்டவேண்டும் என்பதற்கு முழு காரணமிருக்கின்றது. இவ்விதமாய் நமது திராசை கொஞ்சம் சரிப் படுத்தி கீழ் கொண்டுவர நாம் பிரயத்தனப்படுவோம். குற்றங்குறை

களை கண்டுபிடிக்க உலகிலுள்ள மற்றவர்களுக்கு விட முடியும்.இவர்கள் பழிபோடும் தொழிலை நிச்சயமாய் கவனித்துக்கொண்டிருப்பார்கள். மேலும் அதை அவர்கள் நம்மைவிட மிக ருசியுடன் செய்வார்கள். நல்லதை பொறுக்குவது ஓர் பிரயோஜனமான பயிற்சி. ஏனெனில் நாம் அவைகளைத்தேட ஆரம்பிக்கும் வரையில் ஒவ்வொருவரிடத்திலும் எவ்வளவு நல்ல விஷயங்கள் இருக்கின்றன என்பது நமக்கு உண்மையில் தெரியவராது. நாம் இவ்விதம் செய்கிறபோது நாம் இதுவரைக்கும் நியாயமில்லாதவகையாய் மதித்திருந்தவர்களிடத்தில் விதவிதமான அநேக நேர்த்தியான குணங்கள் இருப்பதை பார்க்க ஆரம்பிப்போம். நமக்கு நன்றாய் தெரியாதவர்களின பேரில் இரண்டொரு விஷயத்தைக்கொண்டு வேற்றபிப்பிராயப்படுவது வெகு சுலபம். அவர்கள் கோபப்பார்வையோடிருந்ததை பார்த்தோம்; ஆகையால் அவர்களை மூர்க்க முடையவர்கள் என்று நினைக்கினறோம்; அல்லது அவர்கள் ஒருநாள் திருப்தியில்லாதிருப்பதை கண்டோம் ஆதலால் சாதாரணமாய் அப்பேர்பட்டவர்கள் என்று குறித்துவைத்துக்கொள்கிறோம். ஒருக்கால் நாம் அவர்கள் வகையில்லாதிருக்கும் சமயத்தில் அவர்களை எதிர்ப்பட நேரிடலாம்.சாதாரணமாய் அவர்களுடைய வாழ்க்கை நாம் பாவித்துகொள்ளுகிறமாதிரி சுத்தமாய் இல்லாதிருக்கலாம்.

தப்பிதம் அப்போதைக்கப்போது செய்யநேருமானால் அதுநன்மைசெய்யும் பக்கமாகஇருக்கட்டும். ஒருவனுக்கு சேரவேண்டியதைவிட கொஞ்சம் அதிகம் விட்டுகொடு. அது அவனையாவது,நம்மையாவதுதுன்பப்படுத்தாது. மாஸ்டர் ஒருவர் ஒருகாலத்தில் சொன்னதாவது,ஒவ்வொருவனிடத்திலும் நன்மையும் இருக்கின்றது, தீமையும் இருக்கின்றது. ஒருவனை கெட்டவன் என்று நினைக்க ஜாக்கிறதையாயிரு; ஏனெனில் நீ அவனை கெட்டவழியில் நடக்கும்படி எதிர்பார்க்கக்கூடும். பிறகு அவன் அப்படி நடவாதபோது உன் எண்ணம் பலிக்காமல் போய்விடும். அப்போது உன்னுடைய மதிப்பு தப்பென்று அதுகாட்டும். ஒருவன்பேரில் பொல்லாங்கு நினைப்பதைவிட நூறுபேருடைய மிக்க க்ஷேமத்தை நினைப்பது மெத்த நல்லது.குறைந்தபக்ஷம் நம்மால்கூடியஅளவு கெடுதி என்பதைபார்க்காது நன்மையைபார்க்கும் வண்ணம் நாம்புத்திலோக வாழ்க்கையின்

படி வாழ்த்திருப்போமாக. இப்படி வாழ்வது சத்தியத்தைப்பற்றியும் நியாயத்தைப்பற்றியு மாத்திரமல்ல. பின்னே நமது எண்ணம் பலப்பட்டிருப்பதால் மற்றவனே கெட்டவனென்று எண்ணுவதால் அவனே அவவிதமாகஆக்க பலம் தருகின்றது. அவனிலிருக்கும் நன்மையை பார்ப்பதால் தீமையை குறைத்து நன்மையை வளரச்செய்கிறது.

நமது கீழ்மனது நம்மை எடுத்து ஓடிப்போகாதபடியும், நம்மை மற்றவர்களினபேரில் துர் அபிப்பிராயங்களை சாட்டச்செய்ய விடாதபடியும் நாம் கற்கவேண்டியது முக்கியமான விஷயங்களில் ஒன்று. மனிதனுடைய சுபாவம் தவறக்கூடியது என்றும், ஜனங்கள் எப்போதும் நிஷ்காமிய யோசனையில் நிலைபெற்றிருக்கமாட்டார்கள் என்றும் நமது அநுபவத்தில் தெரிகிறது. ஆகையால் நோக்கத்தை யோசிக்கும்போது மேலானதைவிட்டு காமியத் தன்மையான ஏதோ ஒன்றைப் பார்க்க சுபாவமாய் ஏற்பட்டிருக்கிறது. சமுசயப்பட்டு அருவருப்பைக்காட்டும்படியில் நம்மை இழுத்துக்கொண்டுபோக விடப்படாது. நம்மைப்பற்றிமாத்திரம் அல்ல, மற்றுமற்றவர்களுடைய க்ஷேமத்திற்காகவும் நாம் முதலில் மேலான நோக்கத்தைப் பார்க்க வேண்டியதவசியமாயிருக்கின்றது. மேலும் அதைபார்க்காதபோதும் கூட நல்ல கருத்துடனபார்த்து அவனுக்குயோக்கியதைத் தரவேண்டியது. கெட்ட கருத்தை நினைத்தபோது அதை நமது எண்ணத்தால் பலப்படுத்துகிறோம். ஏனெனில் மனது எதற்கும் மிகவும் இடங்கொடுக்கத்தக்கது. ஒருவன் தவறி, பின்னுக்குப் போவானுனல் நாம் நல்ல நினைப்புடன் கொஞ்சம் அவனுக்கு யோக்கியதைக்கொடுத்தால் அவன் சீக்கிரத்தில்தாழ்ந்த கருத்துகொண்டதற்காக வெட்கப்பட்டு அதை விட்டு மேலான கருத்துகொள்வான். அன்றியும் நம்முடைய சிநேகிதர்களுக்கு எல்லாம் நம்மால் கூடிய நல்ல அபிப்பிராயங்களை கொடுப்பதில் பத்தில் ஒன்பது சந்தர்ப்பங்கள் சரியாயிருக்கும் என்பது திண்ணம். இவ்விதம் செய்பவனே வெளி உலகத்தினர் உதாசீன வகையில் நீ ஒரு கள்ளங்கபடற்றவன் (அறிவில்லாதவன்) என்று சொல்லுவார்கள். எவனேயும் க்ஷேமகரமில்லாத வகையில் நினைக்கும் நிபுணனு யிருப்பதைவிட இவ்வழியில் நல்லதைச்செய்யும் கள்ளங்கபடற்ற மூடனுயிருப்பது நல்லது.

அநுபவத்தில் எவனும் வேணுமென்றே கெட்டவனாகவிருக்கிறதில்லை. நாம் பிழை என்று சொல்லுபவைகளை செய்பவர்கள் கெட்ட அபிப்பிராயத்தால் அவ்வகையில் செய்கிறார்கள் என்று நினைக்கும் சாதாரண பிழையை தவிர்க்கவேண்டும். பாவிப்பதால் உண்டாகும் அநியாயத்தை வரவிடாமல் காக்கவேண்டியது. உதாரணமாக மாமிசம் புசிப்பவர்கள் தங்களுக்குள் பிழை என்று தெரிந்தும் புசிக்கின்றார்கள். சாதாரணமாய் அவர்களுடைய மேலான தன்மைக்கு விரோதமாய் அவர்கள் நடக்கிறார்கள் என்பதால் அதைப் பற்றி நினைக்காமலே வழக்கத்தை தழுவி புழங்கி வருகின்றனர். அப்பேர்பட்டவர்கள் மிக்க நல்லவர்கள் தான் வாஸ்தவத்தில் நல்ல ஜனங்கள் வேறு நினைவு ஒன்றும் இல்லாமலே ஒருவருக்கொருவர் மத்திய காலத்தில் கொளுத்திக்கொண்டார்கள். ஆனால் மாஸ்டர்களில் ஒருவர் சொன்னதாவது "ஜனங்கள் நல்லவர்களாக வேண்டுமென்கிற கருத்து எங்களுக்கில்லை ஆனால் நன்மைக்காக மகத்தான பரமார்த்த சித்தர்களை உண்டாக்கவேண்டுமெனபது எங்கள் கருத்து."


நிராசைப் படலம்

முற்றிற்று.

தத்துவ அனுபோகந்தான் சாதித்தல்
　　　கேட்டல் என்பார்,
எத்துள பொருளுகத்தால் உசாவல்
　　　சிந்தித்தல் என்பார்,
சித்தம் ஏகாந்தமான தரிசனம்
　　　தெளிதல் என்பார்,
நித்தம் இப்படி செய்தக்கால்
　　　நிர்வாணம் பெறுவாய் நீயே.

(*கைவல்லியம்*)

# 18 - வது அத்தியாயம்.

## மனதடக்கம். (சமம்)

"ஒழுக்கத்திற்கு முக்கியமாயுள்ள ஆறு அங்கங்களை குருநாதன் அருளிய திவ்வண்ணம்:—

1. மனதடக்கம்.
2. செயலடக்கம்.
3. பொறுமை.
4. களிப்பு.
5. ஒருமன நிலைநாட்டம்.
6. விசுவாசம்.

சாதனங்களை வேறு பெயரிட்டு சொல்வதுபோல் இவைகளிற் சிலவற்றை வேறு விதமாய் பல முறைகளில் மொழி பெயர்க்கப்பட்டிருப்பது எனக்குத் தெரியும். ஆனால், குருநாதன் எனக்கு போதிக்கும்போது பிரயோகித்தபெயர்களையே யானும் எல்லா சந்தர்ப்பத்திலும் உபயோகித்து வருகின்றேன்."

A. B.:—ஆல்கியூனி சொல்கிறபடி மாஸ்டரவர்கள் செய்த மொழிபெயர்ப்பில் இந்த ஆறு அங்கங்களிற் சில நமக்கு பழக்கத்தி லிருக்கப்பட்டவைகளினின்று கொஞ்சம் வித்தியாசப்பட்டிருக்கின் றன. முதல் மூன்றும் நான் அநேக வருஷங்களாக உபயோகித்து வந்த பெயர்களாக இருக்கின்றன. ஆனால் கடைசி மூன்றும் ஒரு விதத்தில் பேதப்பட்டிருக்கின்றன. என்றாலும் அவைகள் முக்கிய கருத்தில் மாறுபடவில்லை. நல்லொழுக்கத்தில் மூன்றா வது அங்கத்தை நான் எப்போது மாஸ்டர் செய்ததுபோலவே "பொறுமை" என்று மொழி பெயர்த்திருந்தேன். ஆனால் அப்படி

செய்தது அநேகருக்குப் பிடியாதென்பது எனக்கு தெரியும். இதன் வடமொழிவார்த்தை "உபரதி". இதன்பொருள் "விடல்"; அதாவது திருப்தியில்லாத தன்மை, குற்றங்குறை கூறும் தன்மை, முதலிய குணங்களை விடுதல் என்பதாக எடுத்துக் கொள்ளுகிறோம். ஆதலால் விடல் என்பதற்கு ஆதாரமாயிருப்பது பொறுமை.

நான்காவது அங்கமாகிய "திதிக்ஷா" என்பதை நான் எப்போதும் 'சகித்தல்' என்று சொல்லி வந்தேன். வாஸ்தவத்தில் 'களிப்பு' எனும் கருத்து அதில் இருக்கின்றது. ஏனெனில் சகித்துக் கொண்டிருப்பவன் இன்றியமையாமையாகவே களிப்புடனிருக்கவேண்டும். மாஸ்டர் மிக மலர்ச்சியுடன் விளக்குபவராதலால் இவ்விடத்தில் அக்குணத்தின் அழகை இம்மொழிபெயர்ப்பில் காட்டுகின்றார். எல்லோரும் அதைப்பற்றி கவனத்தோடு யோசித்தல் நல்லது. பிறகு "ஒருமனப்பாடு" வருகின்றது. இதை சமிஸ்கிருதத்தில் "சமாதான" என்று கூறியிருக்கின்றது. இதை நான் "நடுநிலை" என்று மொழிபெயர்த்து கொடுத்தேன். இவ்விரண்டிலும் கருத்து ஒன்றே; ஒருமனதாயுள்ளவன் நடுநிலையிலிருப்பான், நடுநிலையுள்ளவன் ஒருமனப்பாட்டிலிருப்பான் என்பதே. கடைசிஅங்கம் "சிரத்தை" இதைநான் நம்பிக்கை என்று எப்போதும் கூறிவந்தேன். இதை விசுவாசமென்று சொல்லிவருகிறது. ஆனால் கருத்து மாறவில்லை. ஏனெனில் நான் எப்போதும் கடவுளிடத்திலும் மாஸ்டர்களிடத்திலும் வைத்துள்ள நம்பிக்கை என்கிற கருத்தை விளக்கினேன். எங்கே வித்தியாசப்படுகின்றது, எவ்விதம் ஒற்றுமைப்படுகின்றது என்பதை கவனிப்பது நல்லது. அப்போதுதான் அருத்தத்தை கண்டுபிடிப்பது எளிதாகவிருக்கும்.

> "நிராசை என்னும் படலத்தில் ஆசையமயதேகத்தை அடக்கவேண்டியதென்றுசொல்லியிருக்கிறது. இவ்விடத்தில் மனோமயதேகத்தை குறித்தும் அடக்குவதையேதான் காட்டுகின்றது. அதாவது கோபப்படாதபடியும், ஆத்திரப்படாதபடியும், நீயுன் பதைப்புத் தனத்தை

அடக்கு என்றும், எண்ணமானது அலைதலின்றி எப்போதும் சாந்தமாயிருக்கும்படி மனதையும் அடக்கு என்றும், மனதின்மூலமாய் நாடி நரம்புகள் கூடியவரையில் துடிக்காமலிருக்க அவைகளையும் அடக்கு என்று இதற்கு அருத்தம்.''

C. W. L:—ஆத்திரத்தை யடக்குவது கண்டிதமாய் கஷ்டமான விஷயங்களில் ஒன்று. ஏனெனில் நாம் உலகவாழ்க்கையிலிருந்துகொண்டே விகாசமுறையினமேல்படிக்குபோக புதியமுயற்சியொன்றை அப்பியசிக்கப்பார்க்கிறோம். அதனால் நமது கோசங்கள் மெனமேல் நட்பமாகி, உணர்வில் வெகு கூர்மையாக ஆகுமென்பது அதன பொருள். இது கஷ்டமாயிருப்பதால் அடக்கியாளுவது எவ்வளவோ மேலானது. இப்படி வெல்லுவதால் உலகவாழ்க்கையிலில்லாத பரதேசிகளுக்கும் சந்நியாசிகளுக்கும் இருக்கும் அடக்கியாளும் சித்ததிறமையைவிட அதிகமாய் நமக்கு வருமென்று காட்டுகின்றது.

சில சமயங்களில் மானிடர்கள் கோபாவேசத்தை காட்டாதபடி அடக்கியிருக்கிறார்கள். என்றாலும் தேகத்தினுடைய அதிர்ச்சியை முற்றிலும் அடக்க கஷ்டமாக இருக்கின்றது. உண்மையில் கோபமூட்டின தாப உணர்ச்சி சுத்தமாய் போய்விட்டபிறகும் அதன் அதிர்ச்சி இன்னும் இருக்கும். காட்டாதபடி கோப உணர்ச்சியோடிருப்பது கெட்டதல்ல. ஆனால் அதைகூட விட்டொழிக்கவேண்டும். ஏனெனில் இது கோபங்கொண்டவனைப்பற்றி தவறாய் எண்ணச்செய்விக்கின்றது. ஒரு சாதாரண மனிதனுடைய ஆசைமய தேகத்தை சூக்ஷமக்கண்ணில் பார்த்தால் அதுமுழுவதும் சுழல்களால் திரண்டு இருப்பதைக் காணலாம். மேலும் சிக்கெடுத்த வாரினவரிகளோடும் தெளிவான வர்ணங்களோடும் எப்போதும் பம்பரம் போல் சுற்றோடிக்கொண்டு, இருப்பதைவிட்டு அதன் வெளிப்புறத்தில் வெகுவிசையுடன் அதிர்ந்து சுற்றும் ஐம்பது அல்லது அறுபது சிறு சுழல்களாலும், அல்லது சுழற்குமிழிகளாலும் நிறைந்திருக்கும். குமிழி ஒவ்வொன்றும் அதிவேகமாய் சுழலுவதால் காய்காய்த்தாப்போல் கெட்டியான முடிச்சுகளாக தோன்றும். இவைக

ளைச் சோதித்தால் இவைகளெல்லாம் இவனுக்கு 48 மணி நேரத்திற்குள் உண்டான கோபம், சிறு கவலைகள், மனவருத்தம், பொறாமை, வயிற்றெறிச்சல், இன்னும் ஒருசமயம்வெறுப்பு, இவைகளால் கிளம்பி உண்டாயிற்றென்பதை காணலாம். நீடித்திருக்கும் பெரிய சுழல்கள் ஒருவனைப்பற்றியே பற்பலதடவைகளில் மாறிமாறி எண்ணும் ஒரே வித தாபத்தால் உண்டாகிவருகின்றன.

ஒருவன இந்த ஸ்திதியிலிருக்கும்போது தெளிவாயும், திட்டமாயும் யோசிக்க அவனால் முடியவேமுடியாது. அவன ஒரு விஷயத்தைப்பற்றி யோசிக்கவாவது எழுதவாவது பிரயத்தனப்படுவானானால் இந்த நிலையை உண்டாக்கின தாபாவேசங்களை இவன மறந்துவிட்டிருந்தபோதிலும், இவனுடைய கருத்துகள் இந்த சுழல்களால் முறுக்குபட்டு மாறிப்போகும். ஜனங்கள் தங்களுடைய கோபஉணர்ச்சியை மறந்து விடுகிறார்கள். அதனுடைய வேக அதிர்ச்சி இன்னுமிருப்பதாக அறிகிறதில்லை. அநேகர் பொக்கிஷமாகவே சுழல்களை அளவில்லாது வைத்திருக்கின்றனர்.

துர் அபிப்பிராயங்கள் இவவிதமாக சூக்ஷ்மக்கண் பார்வைக்கு மிகத் தெளிவாய்த் தோன்றுகின்றன. அளவில்லாத மனோமய தேகத்திலுள்ள விதவித அணுக்கள் வேகமாய் சுற்றோடிகொண்டிருக்கவேண்டியது. அத்தேகமுழுவதும் ஒரேவித அணுக்களால் சுற்றோடுவதல்ல. மற்று அவைகளுக்கு ஏற்பட்டிருக்கும் அந்தந்த (zone) வட்டத்தில் சுற்றவேண்டியது. கிரமமாக பேசுமிடத்தில் அததனுடைய அடர்த்திற்கு தக்கபடி தானாகவே படிந்துஓடுகிறது. அதெப்படியெனில் அணுக்கள் தேக முழுவதும் பரவி ஓடிக்கொண்டிருக்கும்போது அவைகளில் கனமானவை அடியில் படியும். அதாவது முரணான அணுக்கள் அண்டவடிவமாயுள்ள மனோமய தேகத்தின் கீழ்பாகத்தில்படியும். இப்படியிருப்பதால் சுயகாமிய எண்ணங்களும் உணர்ச்சிகளும் அதிகமாயுள்ளவர்கள் மனோமய தேகத்தில் முட்டைகளைபோல அடிபக்கம் பெருமனாக காணப்படுகின்றார்கள். அப்படியே நிஷ்காமிய தன்மையில் படிந்து குப்த மார்க்கத்தில்விருத்தியடைந்தவர்களை முட்டையை தலைகீழாய் பார்ப்பதுபோல் நுனிபக்கம் பெருத்திருக்கின்றதைக் காணலாம். மூளை

யில் வித விதமான எண்ணங்களுக்கு பாகங்கள் இருப்பதுபோலவே மனோமய தேகத்திலும் நான்கு வட்டங்கள் உண்டு. (அல்லது பில்லைகள் உள.)

மதவிஷயமாய் வெகு விசாலமில்லாது பிடிவாதமுள்ள ஒருவனுடைய மனோமயதேகத்தை கவனித்துப்பார்ப்போம். அதில் அணுக்கள் அதனதன் வட்டத்தில் தடையில்லாது ஓடுவதைவிட்டு ஒரு இடத்தில் புடைத்து குவிந்துகொண்டு அழுக ஆரம்பிக்கின்றது. மதத்தை குறித்த அவனுடைய எண்ணங்கள் மனோமய தேகத்தின் இந்த பகுதியின் வழியாய்போக வேண்டியிருக்கிறபடியால் அது ஒருபோதும் யதார்த்தமாக இருக்கமுடியாது. ஏனெனில் அதனுடைய கருத்துகளை அங்கிருக்கும் மனோவியாதி தாக்கி மாற்றி விடுகிறது. அவன் மனதை திட்டமாய் அடக்கி சுத்திசெய்ய ஆரம்பித்து புடைத்திருக்கும் அழுகலை சொஸ்தபடுத்தும் வரையில் அவனுடைய கருத்துகள் முறுக்கக்கொண்டிருக்கும். சொஸ்தப்படுத்தின பிறகு தான அவன உண்மையாய் யோசிக்க கற்றுக்கொள்வான்: அதாவது ஈசுவரன தனது மண்டலத்திலுள்ள எல்லாவற்றையும் இருந்தது இருந்தபடி அறிவதுபோல் விஷயங்களைப் பார்க்க கற்றுக் கொள்ளுவான.

ஜனங்கள் பேரிலாவது விஷயங்கள் பேரிலாவது பிரதிகூலமாயிருப்பவைதான் பக்ஷபாதங்கள் என்பதல்ல. அநேக சமயங்களில் அநுகூலபக்ஷபாதங்கள் இருக்கின்றன. எப்படி இருக்கினும் அவைகள் ஒருவகையான மெய்யற்றவைகள்; மேலும் அவைகள் தேகத்தை சூழ்ந்திருக்கும் சூக்ஷ்ம மயதேஜசில் (Aura) இருக்கும் குற்றங்களை எடுத்து காட்டுகின்றன. வெகு சாதாரணமான உதாரணம் யாதெனில்—உலகம்ஆரம்பித்ததுமுதல் தன்னுடைய குழந்தையைப் போல் வேறு குழந்தை ஒரு காலமும் இருந்திருக்காது என்கிற நம்பிக்கையுள்ளதாய் ஒருவள்; தன்னுடைய சித்திரக்கூடத்தைவிட்டு மற்ற கூடத்தில் நல்லதை பார்ப்பதறிதெனும் சில்பி ஒருவன் மற்றொரு உதாரணம்

இவ்வித விஷயங்களைப்பற்றி மனோசக்தி ஓடும் வழியைப் பார்க்கும்போது அவைகள் மனோமயதேகத்தில் திறந்த புண்களை

போலிருந்துகொண்டு, அவைகளின் வழியாய் மனிதனுடைய சித்தசக்தியை சீழ் வடிவதைப்போல சதா ஒழுகவிட்டுக்கொண்டிருக்கின்றன. சாமானியனுடைய நிலையே இப்படி இருந்தால் சுபாவத்தில் கவலைப்பட்டுக்கொண்டே இருப்பவனுடைய மனோமய தேகத்தை நீ, கண்டால் அது இன்னும் கொடுமையான ஸ்திதியிலிருப்பதை காணலாம். சித்த சக்தியெல்லாம் புண்கள் வழியாய் சிந்திபோய் விடுகிறபடியால் அவனுடைய மனோமய தேகமெல்லாம் ஒரே புண்ணாக இருக்கும். மனவுறுதி சற்றும் இல்லாதவனாய் இருப்பான். நாம் குப்தமார்க்கத்தில் நடப்பவர்களாதலால் நம்முடைய சக்திகளை சேர்த்து அவைகளைக் கொண்டு நல்லவேலை செய்யவேண்டி இருக்கிறது. ஆதலால் நாம் முதன் முதல் செய்யவேண்டிய வேலையாதெனில் வீணாய்ச்சிந்திப்போகவிடும் வழிகளை எல்லாம் அடைக்க வேண்டியது. எரியும் வீட்டை நாம் தணிக்கவேண்டியதாக வைத்துக்கொள்வோம்; தண்ணீர் தாரை உயரமாய் போவதற்காக அதி வேகமாயிருக்கவேண்டியது.அதை வெகுபலமுள்ளஜலயந்திரத்தால் (Pump) உயர்த்தி மேல்நோக்கி அடிக்கவேண்டியது.மேலும் யந்திர குழாயிலாவது நீர்தாரை குழாயிலாவது ஒழுக்கவில்லாம லிருக்க வேண்டியது. நாம் இந்தப்படி இருக்கவேண்டுமென்றால் மனதை சாந்தமாய் அடக்கி வைத்திருக்கவேண்டுமென்பது கருத்து.

சாதாரண மனிதனுக்கு மன உறுதி சொற்பமாயிருக்கின்றது, அல்லது சுத்தமாயில்லாததாக தோன்றுகிறது. கஷ்டம் வரும்போது தன்னுடைய சித்ததைரியத்தால் அதை தாங்கி திட்டமாய் சரிபடுத்துவதைவிட்டு அவன் திகைத்து அழுது முறையிட்டுக்கொண்டிருக்கிறான், இவ்வித சித்தயீனத்திற்கு இரண்டு காரணங்கள் உள. எல்லோருக்கும் ஆன்மாவிடமிருந்துதான் சித்தசக்தி கீழ் இறங்கிவருகின்றது. அது அவன் ஆன்மாவை உற்றறிந்த அளவிற்கு தக்கபடிவரும். அதாவது ஏகமாய் இருக்கும் ஈசுவரன் அவனுக்குள் மலர்ந்திருக்குமளவு வரும் என்று பொருள். மூல சுபாவத்தில் நாம் எல்லோரும் கடவுளுடைய பீஜமானதால் ஒரே நிறையான சித்தசக்தியுடையவர்கள். என்றாலும்ஜனங்கள் அவரவர்களுக்குள் வெளியாகி வந்திருக்கும் தெய்வீக தன்மையின் அளவிற்குத் தக்கபடி வித்தியாசப்படுகிறார்கள். சாதாரணமானவன் அதை விருத்

திக்குகொண்டுவருகிறதில்லை. மேலும்வைத்திருப்பதைக்கூட அவன் வீணுகசெலவழிக்கின்ருன்.

மாஸ்டரை முற்றும் உற்றறிந்து மனக்கண்ணெதிரில் அவரை வைத்திருக்கவும், சூக்ஷ்மலோகத்திலிருந்து அநேக நல்ல கிருபாகடாக்ஷவல்லமைகளை கீழ்ஜடமான மூளைக்கு கொண்டுவரவும் நம்மில் அநேகருக்கு பிரியமுண்டு. அவ்வித கிருபா வல்லமைகள் (Influences) கிரமபடிகோசங்கள் ஒவ்வொன்றின் வழியாய்இறங்கி வரவேண்டியதாயிருக்கிறது. ஒன்றிலிருந்து ஒன்றுக்கு தாக்கிவர வேண்டி இருக்கிறது. ஏரியிலாவது ஆற்றிலாவது ஜலத்தில் பிரதி பிம்பிக்கும் மரங்களின் சாயையைப்பாருங்கள். ஜலம் அலையாது கண்ணுடிபோல் இருந்தால் சாயைமுழுவதும் குறைவில்லாது தெரியும். ஒவ்வொரு இலையையும் இதழ்இதழாய் பார்க்கலாம். ஆனுல் அலையால் ஏதோ கொஞ்சம்அசையுமானுல் பிரதிபிம்பம் அழிந்து விடும்; புசல் காற்றிருந்தாலோ அதை முற்றிலும் அழித்துவிடும். ஆசைமய தேகத்திலும் மனேமய தேகத்திலும் இந்தப்படிதான். அவைகளின மூலமாய் கிருபாபல வல்லமைகளை பிரயோஜனப்பட வேண்டி கீழ் இறக்கிக்கொண்டு வரவேண்டுமானுல் தேகங்களை சாந்தமாயும் அசைவற்றும் வைத்திருக்கவேண்டியது. "தூங்கும்போது செய்கிறவையெல்லாம் நாம் ஏன் ஞாபகத்திற்குகொண்டு வருகிறதில்லை" என்று அநேகர் கேட்கிருர்கள். இதே காரணந் தான்: கோசங்கள் போதுமான அளவு சாந்தமாய் வைக்காதத ுல் வருகிறதில்லை. எப்போதாவது ஒரு தடவை கூடியவளவு சாந்தமாக்கி ஏதோ சிலவற்றை கொண்டுவரக்கூடும். ஆனுல் அப் போதுகூட ஞாபகத்திற்கு வருவது சாதாரணமாய் முறுக்'மூ' கொண்டு துண்டு துண்டாய் ஒன்றுக்கொன்று ஒவ்வாததாயிருக்கும். ஏனெனில் இது போகும் வழி முற்றிலும் சுத்தமாயில்லை. அது எப் படி இருக்கிறதென்ருல் நல்ல சுத்த பளிங்கு கண்ணுடியில் பார்ப் பதைவிட்டு வாட்லோடு கண்ணுடியில் பார்ப்பதுபோலிருக்கின்றது. இது விஷயங்களின் தொடர்பை முற்றிலும்மாற்றிவிடுகிறது.

நாம் சாந்தமானபோது கஷ்டத்தின் மத்தியிலும் இடைஞ்சலுக் கிடையிலும் இருந்துவேலை செய்யமுடியும். என்றுலும் நிச்சயமாய்

இவ்வித ஸ்திதியில் தேகங்களை அமைதியுடன் வைப்பது எப்போதும் பிரயாசை. அது அவ்வளவு பிரயாசையாயிருப்பதால் சிலர் அதிலும் சுத்தமாய் வேலைசெய்ய முடியாது. ஆனால் அவர்கள் நாளடைவில் பலப்பட்டு வரவேண்டியிருக்கிறது.

(குப்த) முத்திமார்க்கத்திலுள்ளவன் தன்னை அடக்கி ஆளும் பிரயத்தினத்தில் இரண்டுலோகத்தில் ஏககாலத்தில் வேலைசெய்ய கற்கின்றான். அதாவது பூலோகத்தில்வேலைசெய்துகொண்டிருக்கும் போதே தேகத்தைவிட்டு கொஞ்சம் வெளியேபோக கற்கிறான். அதாவது எழுதிக்கொண்டும் அல்லது பேசிக்கொண்டிருக்கும் போது தனது ஆசைமய தேகத்தைக்கொண்டு இதர விஷயங்களை செய்துகொண்டிருக்கக்கூடும். உதாரணமாக நான பிரசங்கம்செய்து கொண்டு இருக்கும்போது, புவர்லோகத்திலிருக்கும் ஜனங்கள் மேடையில் நின்றும், என் கிட்டேவந்தும், என்னோடு பேசியிருப்பதை அநேகர் பார்த்ததாக சொல்ல நான் கேட்டிருக்கின்றேன். அவ்வளவு வரையில் அதை சரியாய் பார்த்திருக்கிறார்கள். பிரசங்கம் செய்து கொண்டிருக்கும்போதே கேள்விகளை கேட்கவும், அல்லது ஏதோ ஒன்றை செய்யவேண்டுமென்கிற இச்சையோடும் அவர்கள் வருவது சகஜம். இது ஒரு சிறிய சாதாரண உதாரணம். ஆனால் அநேக தடவைகளில் கடுமையாய் செய்யவேண்டி வரும் வேலைகள் அதிக மிருக்கின்றன. இவைகளைச் செய்யும்போது குப்தன் அவனது பிரக்ஞையை வெகு சிக்கான விதத்தில் உபயோகிக்கின்றான்.

இந்த இரட்டை அவதானம் சாதாரண வாழ்க்கையிலும் அநேக முறைகளில் சுமாராய் செய்யப்பட்டுவருகிறது. அநேக ஸ்திரீகள் கழுத்துப்பட்டை மேஜோடுகள் இவைகளை பின்னிக்கொண்டிருக்கும்போதேபேசுகின்றார்கள். ஏனெனில் பின்னும் தொழில் அவர்களுக்கு ஓர் தேக பழக்கமாய் விட்டது. லண்டன் நகரத்து ஓர் பெரிய பாங்கியில் (Bank) ஒரு காலத்தில் செய்யவேண்டியவேலை எனக்கு மெத்த இருந்தது. அவ்விடத்தில் அந்த வேலையில் பழக்கமுள்ளவர்கள் நெடுங்கோட்டிலிருக்கும் எண்களை தடுமாற்றமில்லாமலும் சுறு சுறுப்பாயும் கூட்டிக்கொண்டிருக்கும்

போதே தங்களோடு வேலை செய்பவர்களுக்கு விநோதமான பாட்டு களையும் பாடுவதை நான் கண்டேன். அது என்றால் ஆகாது; என்று லும் அதை மென்மேலும் செய்து வந்ததை பார்த்திருக்கின்றேன.

A. B:—கிராசைப் படலத்தில் மாஸ்டர் ஆசைமய தேகத்தை யும் அதனது திரண்ட ஆசைகளையும் அடக்குவதைப்பற்றி சொல்லி யிருக்கின்றார். பகுத்தறிவுப் படலத்திலும் மனோ மயதேகத்தை சுத்திசெய்ய இன்றியமையாதிருக்கும் உண்மைத் தன்மையைப் பற்றி அதிகமாய் கூறியுள்ளார். இப்போது மனதை அடக்கவேண் டியதைப்பற்றியும், இன்னும் தாப விகாரங்களை அடக்குவதையும் எடுத்துச்சொல்லுகின்றார். தாபம், விகாரம் என்பது எண்ணமும் ஆசையும் சேர்ந்த ஒரு திரிபு. விகார தாபங்கள் என்று சொல்லப்படு வன ஆசைகளோடு மனதும் சேர்ந்திருப்பன. திருப்பிச்சொன்னால் எண்ணத்தோடு சேர்ந்த ஆசைதான் விகாரதாபம். மாஸ்டர் இவ் விடம் பதட்டத்தனத்தை அடக்கு என்றுசொல்லுவதால் தாபத்தை குறிக்கின்றார். ஏனெனில் ஆத்திரம், இன்னும் இதுபோன்ற இதர தாப உணர்ச்சிகள், ஆசைமய தேகத்தினின்று ஒரு பகுதியாயும், மனோமயதேகத்தினின்று ஒரு பகுதியுமாய் புறப்பட்டுவருகின் றன. முத்திமார்க்கத்தில் வரக்கூடியவன் ஆத்திரத்தால் தலைகீழாய் போகக்கூடாது. ஏனெனில் தன்னை கவிழ்த்துவிடாவண்ணம் அவைகளை அடக்கியாளுகிற வரையில் எவ்விஷயத்தையும் தெளி வாயும், விளக்கமாயும் பார்க்க அவனால் முடியாது. தாபத்தின் அதிர்ச்சிகள் மனோமய அணுக்களையும் தூண்டிக் கிளரிவிடுவது மன்றி அவனுடைய எண்ணங்களையெல்லாம் கலைத்துத் தாறு மாறாக்குவதால் விஷயங்களைச் சரியாக பார்க்க அவனால் முடியாது.

மாஸ்டர் பிறகு, எண்ணங்கள்கூட சாந்தமாய் அலைதலின்றி யிருக்க வேண்டுமென்று சொல்லுகின்றார். இது அவசியமானது. ஏனெனில் அந்த நிலையிலிருந்தால் மாத்திரம் கடாக்ஷபலம் மேலிருந்து கீழ்மனதிற்கு இறங்கி போகச்செய்ய முடியும். "The Occult World" என்கிற புத்தகத்தில் 'சின்னட்' என்பவர் இதே ஆசாரியருடைய கடிதத்தை குறித்திருந்தார். அதில் இவருக்கு சொன்னதாவது: எழுதுவது பிரயோஜனப்படவேண்டிய தானால் மனதை சாந்தத்தோடு வைத்திருக்கவேண்டும். அப்போது

மேல் மனதிலிருப்பவைகள் அவைகளாகவே அலையில்லா ஏரியில் குன்றுகள் காண்பதுபோல பிரதிபிம்பிக்கும். ஒரு கனத்த விஷயத்தைப்பற்றி கடிதம் எழுதவேண்டுமொனால்—உதாரணமாக திவ்ய ஞானத்தைப்பற்றியாவது அல்லது ஒரு வியாசத்தையாவது எழுத ஆரம்பிக்குமுன் சில நிமிஷம் வரையில் சும்மா உட்கார்ந்து உன்னை ஸ்திரப்படுத்திக்கொள்வது ஒரு நல்ல முறை. இது வீண் காலப்போக்கல்ல; ஏனெனில் நீ எழுத ஆரம்பித்தபோது உன னுடைய எண்ணம் பிரயாசையில்லாமல் அமைதியுடன் திரண்டு வருவதைக் காண்பாய்; மேலும் எவ்விதம் எழுதவேண்டியதென்று கவனிக்க மத்தியில் நிறுத்தும்படி நேரிடாது. அது அப்படி பெருகும். ஏனெனில் மேல்மனதானது, கீழ்மனது அசைவற்று கண்ணாடி போலிருக்குஞ் சமயத்தில் பிரதி பிம்பிக்கின்றது. இடைஞ்சலான வெளி விஷயங்கள் வாராதபடி தன்னிச்சைப்படி அவைகளை தடுக்கமுடியாதவர்களுக்கு இச்சாதனம் முக்கியமாய் வேண்டியது.

மனம் ஓர் நிலையில் நாட்டுவதற்காக சாதனஞ்செய்ய வெளி இடைஞ்சல்களை (தொந்தரவுகளை) ஒருபடியாக எவனும் உபயோகித்துக்கொள்ளலாம். நான் சிறு குழந்தையாயிருந்தபோது வெவ்வேறுபாடங்களை கற்கும் மற்றபிள்ளைகளுடன் வாசிக்கும்படி என்னை விட்டார்கள். அந்தப்படி நாள்தோறும் வெவ்வேறு காரியங்களைச் செய்துகொண்டிருப்பவர்களுக்கு இடையிலிருந்துகொண்டே என்னுடைய சொந்த வேலையைச்செய்ய சாமர்த்தியம் எனக்கு வந்தது. அப்பழக்கத்தைக்கொண்டு என்னைச்சுற்றிலும் என்னநடந்துகொண்டிருந்தபோதிலும் என்வேலையை யாதொரு தடையின்றிச் செய்ய சக்தி எனக்கு இருக்கின்றது. என்றாலும் அவ்வித நிர்பந்தங்களின் மத்தியிலிருந்துகொண்டு கணக்குபார்க்க எனக்குக்கஷ்டமாயிருக்கின்றது. எனது உபாத்தியாயராகிய "மிஸ் மாற்றியட்" அம்மாளுக்கு இதற்காக நான் எப்போதும் நன்றியறிகின்றேன. அநுபவத்திலிருந்து சாமர்த்தியம் வருகின்றது. பிறகு அது அநேக வழிகளில் பிரயோஜனப்படுகின்றது. உதாரணமாக நான் ஆல்கியூனியின் முன் பிறப்பொன்றை எழுதுகையில் தேகத்தை விட்டு கொஞ்சம் வெளியே வந்திருக்கும்போது கூட இவ்வித சாமர்த்தியத்தை உபயோகிக்க முடிந்தது.

இந்தியர்கள் இல்லறவாழ்க்கையில் இந்த திறமையை வழக்கமாய் விருத்தியாக்கி வருகிறார்கள். ஏனெனில் ஒரே இடத்திலிருந்துகொண்டே விதவித வேலையைச் செய்ய ஜனங்களுக்கு பழக்கமிருக்கின்றது; சாதாரணமாய் குழந்தைகள் சுற்றி ஓடிக்கொண்டிருப்பார்கள். இனனும் இதர சில்லரை விவகாரங்கள் அநேகமாய் அவ்விடத்தில் நடக்கும். கிராம பள்ளிக்கூடத்திலும், வீட்டிலுங்கூட, அநேக பிள்ளைகளுக்கு ஏககாலத்தில் அநேக விஷயங்களைக் கற்று கொடுக்கின்றனர்; எல்லோரும் உரக்கவாசிக்கின்றனர். ஒவ்வொருவனும் தன்னுடைய பாடத்தை வாசிக்கின்றான். உபாத்தியாயர் எல்லாவற்றையும் கவனித்து பிழைகளை திருத்துகினறார். ஒரு முக்கிய விஷயத்தைக்கற்று கொடுக்க இந்த வழியை பிரதானமென்று நான் நினைக்கவில்லை, என்றாலும் பிள்ளைகள் மனதை தமது பாடத்தில் நாட்டும் விதத்தை கற்று வருகின்றனர். இது அவர்களுக்கு பினனுக்கு மெத்த பிரயோஜனப்படும்.

உனக்கு மனதை அசையவிடாமல் ஒரு விஷயத்தில் நாட்டும் சக்தி வருமானால் அவ்வளவும் மிக நல்லது. ஆகையால் நீ சந்தடியாயிருக்கும் இடத்தில் வசிக்கும்படி நேரிட்டால் அதைப் பற்றி முறையிடாதே. பின்னை அதனால் வரும் பிரயோஜனத்தை எடு. முத்திமார்க்கத்திலிருக்கும் மாணாக்கன் செல்கின்ற வழி இது தான். நான் இதை முக்கியமாய்ச் சொல்லுகினறேன. ஏனெனில் இவ்வித வாழ்க்கையால்தான் முக்திமார்க்கத்திற்கு தக்கவர்களாக ஆகுவது; கஷ்டமான நிலையிலிருந்து வேலைசெய்ய கற்பது விருத்திக்கு வருவது என்று அருத்தம். நம்மில் சிலர் விருத்திக்குவந்த காரணங்களில் இது ஒன்று. மற்ற காரணங்கள் அவ்வளவாக இல்லை; எனக்கு வரும் ஒவ்வொன்றைப் பற்றியும் வருத்தமாய் முறையிடுவதை விட்டு, அதை வந்தது வந்தபடி எடுக்க எப்போதும் எத்தனித்தேன். இவ்வித சாதனத்தால் ஒருவன எல்லா சந்தர்ப்பங்களையும் தாவிப்பிடிக்கிறான்.

“இதில் கடைசியிற் சொன்னது கஷ்டமானது; ஏனெனில் மார்க்கத்திற்கு உன்னை நீ சித்தப்படுத்திக் கொண்டிருக்குங் காலத்தில்

உனது தேகத்தில் உணர்ச்சி உன்னையறியாமலே அதிகப்பட்டு வரும். அப்படி வருவதால் நாடி நரம்புகள் சத்தத்தாலும் அதிர்ச்சியாலும் எளிதில் திடுக்கிட்டு நடுங்கும். அல்ப தொந்தரவையும் வெகு கடுமையாக கொள்ளும்படி செய்யும். ஆயினும், உன்னால் கூடியவரையில் அடக்கத்தான் வேண்டும்.''

A. B. நாடி நரம்புகளை அடக்குவது கஷ்டமென்று மாஸ்டர் சொல்லுகிறார்; அது அப்படிதான், ஏனெனில் தூலதேகத்தின் பேரிலிருக்கும் சித்த அதிகாரம் வெகு குறைவாயிருக்கின்றது. காமமய தேகத்தையும், மனோமய தேகத்தையும் அதிகாரஞ்செய்ய முடியும். ஏனெனில் அவைகள் நுண்ணியமான அணுக்களால் சேர்க்கப்பட்டிருக்கின்றன. எண்ணத்தால் ஆடுகின்றன. ஆனால் கனமாயுள்ள ஸ்தூல அணுக்கள் எண்ணத்திற்கு வெகு மெதுவாய் இசைந்து வருகின்றன. ஆகையால் தூலதேகத்தை அடக்க கஷ்டம், எனினும் நாளாவட்டத்தில் இசைந்து வரச்செய்து ஆளவேண்டும்.

மாணக்கன் உணர்ச்சி கூர்மையுள்ளவனா விருக்கவேண்டும்; மேலும் தேகமும் நாடிகளும் முற்றிலும் அவனுக்கு அடங்கியிருக்க வேண்டும். உணர்ச்சி கூர்மை ஆக ஆக தேகத்தை அடக்க கஷ்டம் அதிகரித்துவரும், சாதாரணமான ஒருவனுக்கு உறைக்காதிருக்கும் சந்தடிகள், உணர்ச்சியுள்ளவனுக்கு சகிக்கமுடியாத உபத்திரவமாயிருக்கும். நாடிகளின் உணர்ச்சியை அதிகரித்து விடும்படியான சில வியாதிகளிருக்கின்றன. அப்பேர்ப்பட்ட நிலையிலிருக்கப்பட்டவன் நாய் குலைத்தலாலே மூர்ச்சையாய் விழும்படி நேரிடும். நாடிகள் எவ்வளவு கூர்மையாகும் என்பதை காட்ட இந்த உதாரணம் போதுமானது.

குப்பதமாணாக்கனுடைய நரம்புகள் வியாதிப்பட்டவையல்ல; அப்படியிருந்தால் அவன் பயிர்ச்சியில் வைக்கப்படமாட்டான். ஆனால் அவன் தொட்டவுடன் நாதம் பேசும் முடிக்கின தந்தியைப்போலிருக்கின்றான்; அவனுடைய நரம்புகள் மெத்த கூர்மையாய் உணர்

வதால் ஆத்திரத்தை அடக்க சித்த திடத்தை மெத்த உபயோகிக்க வேண்டியிருக்கின்றது. இவ்வித சந்தர்ப்பங்களில் தேகத்திற்கு ஆயாசம் பிளாவட்ஸ்கி அம்மையாருக்கு இருந்ததுபோல, சிலருக்கு மெத்த அதிகமாயிருக்கும். அப்போது தேகம் முற்றிலும் தளர்ந்து கெட்டுப்போகாமலிருக்க சில சமயம் அதனிஷ்டப்படி அதை விடுவது நல்லதாயிருக்கின்றது. அந்த அம்மையாருக்கு செய்யவேண்டிய வேலையிருந்ததால் தேகத்தை வைத்திருக்க அவருக்கு அவசியமாயிருந்தது. ஆதலால் தேகம் விழுந்து போகுமளவு ஆயாசம் அதற்கு விடவில்லை; எனினும் இவர் விதிக்கு புறம்பாக ஒழுகவேண்டிய சந்தர்ப்பங்களில் இதுவொன்று. ஆனால் மாஸ்டருடைய போதனையினபடி நடக்க வாஞ்சையுள்ளவன அவர் இங்கே சொல்கிறபடி நடந்து நாடிகளை அடக்கக் கூடிய அளவு பிரயத்தினப்பட வேண்டும். அதில் மாறிமாறி தவறக்கூடும், அதைப்பற்றி பாதகமில்லை. இவ்விஷயத்தைப்பற்றி மாஸ்டருடைய கடைசி வார்த்தை யாதெனில் "உன்னால் கூடிய அளவு செய்" இவ்வளவு தான் அவர் கேட்கின்றது. ஆகையால் தவறிப்போவதால் நீ அதைரியப்படக் கூடாது. ஆனால் உன்னால் கூடியதைச் செய்துகொண்டே போக வேண்டியது.

அதிதீவிர ஊக்கமுள்ளவர்கள் மகா எச்சரிக்கையோடு மனச் சாக்ஷிக்கு ஒத்து நடக்க சில சமயங்களில் மனதைத் தீவிரமாயநாட்டுகிறதால் இவ்வித இடைஞ்சலான நிலை உள்ளிருந்தே (தனனிடமிருந்தே) உண்டாகிறது. வாஞ்சையுள்ளவர்களிடத்தில் இரண்டு வித சுபாவமுண்டு. அஜாக்கிரதை ஒன்று; தன்னை உபத்திரப்படுத்திக் கொள்வது மற்றொன்று ; இரண்டாவதில், அதிகவேலையால் ஆயாசமடையும் நாடிநரம்புகளைப் போல மனச்சாக்ஷியும் ஒரு ஆயாச நிலைக்கு வருகிறது; சிறந்த மாணக்கர்களையும் இவ்விதமாய் சிற்சிறு பிழைகளை பலகாலும் மலையாகப் பாவிக்கும்படிச் செய்கின்றது. சிறு பிழைகள் ஒருவனைத்த குற்றமாகத்திரண்டுவரும் வரையில் உட்கார்ந்து கொண்டு கவலையோடு அவைகளை சிந்திக்காதே. (மனோராஜ்ஜியம் செய்யாதே) இவ்விரண்டு அதீத சுபாவதன்மைக்கு இடங்கொடாமல் இவைகளுக்கு இடையில் ஓர் வழியை எற்படுத்திக்கொள். ஒரு விஷயம் எற்படுமுன் அதைப்பற்றி எச்சரிக்கையோடு இருக்கமுடி

யாது. அப்படி இருப்பாயானால் அப்புறம் வெகு சடுதியில் மிகவும் சுகமில்லாத வகையில் உன்னை நீ வைத்துக்கொள்வாய். உனது பிழைகளைப்பற்றியும், நிறைவேறாத விஷயங்களைப்பற்றியும், கவலையோடிருக்காதே; நீ தவறிவிட்டதற்கு காரணம் யாது என்பதை கண்டுபிடிக்க யோசி. பிறகு மறுபடியுஞ் செய்ய பிரயத்தினப்படு. அப்படிச்செய்தால் உன்னைப்பிழைபடச் செய்விக்கும் சுபாவங்களுக்கு ஊட்டமின்றி அவைகள் வறண்டுபோகும். அப்படிச்செய்யாமல் அவைகளைப்பற்றி நினைத்துக கொண்டிருந்தால் அவைகள் பலப்பட்டு வரும்.

C. W. L.:—ஸ்தூலதேகத்தின் பேரில் சித்தத்தின் அதிகாரம் வெகு குறைவு. ஜனங்கள் சொல்கிறதாவது: "ஆம், ஸ்தூலதேகத்தைக்கொண்டு ஒருவிஷயத்தைச் செய்ய கற்றுக்கொள்ளலாம் உணர்ச்சிகளை கூட அடக்கலாம், ஆனால் எண்ணங்களை அடக்குவது கஷ்டமான விஷயம்" என்கிறார்கள். எல்லா விஷயங்களிலும் இது மிக்க கஷ்டமானதென்றும், சாதாரண கருத்தென்றும் எனக்குத் தெரியும். ஒருவகையில் கஷ்டமாகத் தானிருக்கிறது. ஏனெனில் மனோமய அணுக்கள் வெகு சூக்ஷ்மமாயும் சலனத்தில் வெகு வேகமாயுமிருக்கின்றன. ஒருவித வேகத்தை அடக்குவதிலும் புதிதாய் ஒன்றைத் தொடங்குவதிலும் கஷ்டம் அதிகமிருக்கிறது. மற்றபடி மனோமய தேகமானது உள்ளிருக்கும் ஜீவான்மாவுக்கு வெகு அருகிலிருக்கின்றது. ஆதலால் அதனுடைய ஆளுகைக்கு அதிகமாய் வசப்பட்டது. மேலும் மனோமய அணுக்களை சேர்த்து பிடிப்பதற்கும் அதனோடு விவகரிப்பதற்கும் இங்கே (கீழ) பூலோகத்தில் இருப்பதைவிட பலமான சக்திகள் அதனிடத்தில் உண்டு. மேலும ஸ்தூல அணுக்களுக்கு தமோகுணம் அதிகமாயிருப்பதால் இசைந்து வரும் தன்மை குறைவு. ஜனங்களுக்கு ஸ்தூலதேகத்தை அடக்கும் வழக்கம் இருப்பதினாலும், மனோமய தேகத்தை அடக்கும் வழக்கம் இல்லாததாலும், சுலபமென்று நினைக்கின்றார்கள்.

ஸ்தூல தேகத்திலுள்ள நோவை அடக்கிக்கொள்ளலாமென்றும், ஆனால் மனதிலுள்ள வருத்தத்தை நிவர்த்திக்கமுடியாதென்றும் அடிக்கடி சொல்வதுண்டு. வாஸ்தவத்தில் இதற்கு எதிரிடையாக

இருக்கின்றது. மனவருத்தத்தையாவது தாப வெப்பத்தையாவது ஒருவன் கைக்கொண்டு அதை சற்று அப்புறப்படுத்தினல் அது இல்லாமல் போய் விடுகிறது. ஆனல் ஸ்தூல தேகத்தில் கடுமையாயுள்ள வலியை அதனிடத்தில் ஊன்றியிருக்கும் மனதை அப்புறப்படுத்தினல் பெரும்பாலும் குறைக்க முடிந்தபோதிலும், அதை நிவர்த்திப்பது மெத்த கஷ்டம். Christian Scientists என்கிற வைத்திய மாந்திரீகர்கள் நோயேஇல்லை என்று திடஞ்சொல்லி மனதைப் பிரித்து வருத்தத்தைக் குறைக்கின்றார்கள். ஆனல் ஸ்தூல தேகத்திலிருக்கும் வருத்தத்தை மாத்திரம் விட்டுவிடுகிறார்கள். அது சராசரியாய்ப்பார்க்கில் கொஞ்சமே.

நாம் மனதை அடக்க கற்கவேண்டியது. அப்படி செய்தால் ஸ்தூல தேகத்தில் பற்றிக்கொண்டிருக்கும் மனேமய பாகத்தை நீக்க முடியும். ஏனெனில் மாஸ்டருடைய மாணுக்கராகும் விருப்பத்தினல் நம்மை வெகு கூர்மையுடன் உணரும்படி செய்துகொள்ளவேண்டியது. பிறகு குடியன அருகிலாவது, சுருட்டு பிடிப்பவனருகிலாவது, மாமிசம் புசிப்பவன் அருகிலாவது, உட்கார வருத்தமாகி விடும். பட்டண ஸ்தலத்தில் பலவித முழக்கமான சந்தடியுள்ள கடை வீதிகளில் போவது நிச்சயமாகவே வேதனைத் தரும். இது தூலதேக முழுவதும் பாய்ந்து அதை நடுங்கச் செய்யும். ஆனல் ஒருவன் அதைப்பற்றி யோசித்தானுனல் அது இன்னும் கஷ்டம் கொடுக்கும். அதை கவனிக்காதிருந்தால் குறைந்தபக்ஷம் அது கொஞ்சமாகத் தெரியும். மேல் லோகங்களில் விவகரிக்க எத்தனிக்கும் மாணுக்கன வருத்தத்திலிருக்கும் மனதின பாகத்தை தள்ளிவிடவும், வருத்தத்தை பலப்படுத்தும் யாதொரு எண்ணத்தையும் எடுக்காமலிருக்கவும் கற்க வேண்டியிருக்கின்றது.

தியான சாதனம் செய்து வருபவர்களுடைய உணர்ச்சி செய்யாதவர்களைவிட மிகக் கூர்மையானதைக் காண்பார்கள். அப்படியிருப்பதால் சில சமயங்களில் தூலதேகத்தின் ஆயாசம் அதிகமாகின்றது. பிளாவட்ஸ்கி அம்மையார் சில சமயங்களில் கோபாவேசங்கொண்டிருந்ததாக கேட்டிருக்கிறோம். அதற்கு வெகு

நல்ல காரணம் இருந்தது; வாஸ்தவமாய் துரதிருஷ்டமான தேகம் அவருக்கு இருந்தது; வெகுவாய் ஏதோ ஒரு கடுமையான தேக நோயில்லாது ஒரு மணியாவது அவர் இருக்கவில்லை. தேகம் மூப்படைந்து தளர்ந்து இளைத்துப் போயிருந்தது; என்றாலும் அவர் செய்யவேண்டிய முக்கியமான வேலைக்கு அந்த தேகம் ஒன்றுதான் தகுந்ததாயிருந்தது. அதை அவர் வைத்திருக்கவேண்டியதா யிருந்தது. நம்மில் அநேகர் விடுவதைப்போல அதை எறிந்து விடமுடியவில்லை. அவ்விதம் விட ஒரு சந்தர்ப்பங் கொடுக்கப்பட்டது. ஆனால் அவர் சொன்னதாவது "இல்லை சீக்ரெட் டாக்டிரின் (Secret Doctrine) என்கிற நூலை முடிக்கிற வரைக்கும் நான தேகத்தை வைத்திருப்பேன" என்றார். இந்நூலை எழுதுவதில் அப்போது அவர் கருத்தாயிருந்தார். அப்போது தூலதேகம் கடுமையான பிரயாசையில் இருந்ததாக தெரியவருகிறது. சில சமயங்களில் அதை தீர்ப்பதற்காக தேகத்தின இஷ்டப்படி செய்ய அதைவிட்டு விடுவார். நிச்சயமாய் இதை அநேகர் தெரிந்துகொள்ளவில்லை. ஆனால் அவரைச் சுற்றியுள்ள நாங்கள் இவ்விஷயங்களைத்தெரிந்துகொண்டதினால் அதை அதிகமாகக் கவனிக்கவில்லை. அதைக்காட்டும் விநோதமான சந்தர்ப்பங்கள் அநேகமிருந்தன. உதாரணமாக ஏதோ ஒரு சிறு விஷயத்தைப்பற்றி கோபாக்கினி மூண்டதைப்போல மூர்க்காவேசத்தில் இருப்பார். ஆனால் புதிதாய் வந்தவர்கள் தெரியாததனால் பயந்து அவரிடம்போக மயங்கினார்கள். நாங்கள் அந்த ஆவேசத்தின் மத்தியில் சாஸ்திரயுக்தமாய் ஏதோ ஓர் கேள்வியை திடீரென்றுகேட்ட போது அதுபோய் விடும். ஒரு கயிற்றை கத்திரியில் கத்தரித்ததுபோல் அறுந்து விழுந்துவிடும். உடனே கோபம் தணிந்துவிடும். அந்த கேள்விக்குப்பதில் சொல்லப் பிரயத்தினப்படுவார். சாதாரண கோபத்திலிருக்கும் ஒருவன் அவ்விதம் செய்யமுடியாது. அநேகர் மனஸ்தாபப்பட்டுக்கொண்டு விலகிப்போய் விட்டார்கள். ஆனால் அவர் தன்னுடைய தேகத்தை அதன் இஷ்டப்படிவிட்டு களைப்பு தீர்த்துக் கொள்வதுண்டு. இல்லாவிடில் தேகம் நாசமாகி போய் விட்டிருக்கும். இது எனக்கு நன்றாய்த் தெரியும்.

"சாந்தமனம் என்பதற்கு தைரியம் என்றுங் கருத்து; அதனால் மார்க்கத்திலுள்ள கஷ்டங்களையும், பரிசோதனைகளையும் அச்சமில்லாமல் எதிர் நோக்கி நீ தாங்கக்கூடும்".

A. B.:—இந்த சாஸ்திரங்களில் தைரியமெனகிற குணத்தின் பேரில் மெத்தவற்புறுத்தி இருக்கின்றது. இதனுடைய மூலவேர் ஆன்ம ஐக்கியத்தை ஒட்டி இருக்கிறது "ஆன்ம தரிசனம் செய்தவனுக்கு என்ன பயம், என்ன தியக்கம் உண்டாகும்" என்று கேட்கப்படுகிறது. "பயமற்ற பிரம்மன" எனகிற வார்த்தையை உபயோகப்படுத்தி வருகிறது. ஸ்ரீ கிருஷ்ணபகவான கீதையில் 16 வது அத்தியாயத்தில் கொடுத்திருக்கும் சில குணங்களைப்பற்றி தியானம் செய்யும்படி மாணுக்கர்களுக்கு 'ஔடர் கோர்ட்டு' (Outer Court) எனகிற புத்தகத்தில் எடுத்துக்காட்டி இருக்கிறேன. அதில் அவர் சொல்லிய முதலாவது குணசீலம் யாதெனில் "பயமில்லாமை" அதாவது தைரியம். வருத்தப்பட்டுக்கொண்டு உனது பகுதியாயிருக்கும் தேகங்களை நான என்று கருதாது, உள்ளிருக்கும் ஆனமாவை நான் என்று நீ உற்றுஉணரும் வகையால் தைரியம் பெருகிவருகின்றது. ஜனங்களுககு இருக்கும் அதிகார பலம உள்ளிருக்கும் ஆனமா மலர்ந்து வந்திருக்கும் படியைக்கொண்டு வித்தியாசப்பட்டு தாரதம்மியம் ஏற்படுகினறது. மூலஸ்தானத்திலிருந்து பார்த்தால் நாம் எல்லோரும் பலத்தில் ஒரே தாத்திலிருக்கினறோம். ஆனால் விகாச முறையில் படிகள் ஏறபட்டிருக்கினறன. நீ கடவுளென்று நீயே உற்றறியுங்கால், உனக்குள்ளிருக்கும் ஆனமாவின் சக்தியை வெளிப்படுத்தியிருக்கும் அளவை ஒட்டி பலவீனம் அல்லது பலம் உனக்கு இருப்பது தெரியும்; ஆகையால் உனக்கு பயம்வரும்போது உன்னுள்ளிருக்கும் பலத்தை வெளிவர செய்வது தான் உனது அடைக்கலம்.

நீ தியானஞ்செய்வதால் வரவேண்டிய பலன்களில் ஆனமா நீ தான் என்கிற இந்த உற்றுணர்வு ஒன்று காலையில் தியானஞ் செய்பவர்கள் ஆன்மாவை உற்று உணரும் சாதனத்தையும் சேர்த்து செய்யவேண்டியது. அவ்வித முயற்சியால் வரும் கொஞ்ச பலத்தைக்கொண்டு நாள் முழுவதிலும் அவர்கள் தைரியமாயிருக்க

முடியும். அது அவர்களுக்கு முத்திமார்க்க விருத்திக்கு வேண்டிய தைரியத்தை கொடுத்து உதவும். அதில் (மார்க்கத்தில்) மனோதிடத்துடன் சகிக்கவேண்டிய அநேக கஷ்டங்கள் இருக்கின்றன. அவைகளைத்தாங்கி கடந்துபோனால் நல்லொழுக்கங்கள் இந்த தைரியத்தின பல உருவங்களாயிருக்கின்றன. மார்க்கத்தில் இருக்கும் விஷயங்களில்கூட ஒரு அற்புதமான புதுமையிருக்கின்றது. அதற்கும் தைரியம் வேண்டியது. ஆனமாவை உற்று அறியும் வழியில் அல்லாது மற்றபடி இக்குணத்தை பெற வேறு வழியாதும் எனக்குத் தெரியாது.

C. W. L.:—மார்க்கத்திற்காக பயிற்சிக்கும் எல்லா வழிகளிலும் தைரியம் அவசியம் என்பதை மெத்த வற்புறுத்தியிருக்கிறது. மார்க்கத்தில் போன பிறகு தன்னைப்பற்றி பொய் வார்த்தைகளையும் பழிபாவத்தையும் மனஸ்தாபங்களையும் கேட்கவேண்டி வரும். சாமானியர்களைவிட பரிபக்குவத்தில் மேல் போக பிரயத்தினப்படுபவர்களுக்கு எப்போதும் இவ்விதமாய்தான் வருகினறது. அப்படிக் கேட்டால் தனனுடைய நிலையில் தடுமாடாதபடி ஸ்திரமாயிருக்கவேண்டும். தனக்கு சுற்றிலுமுள்ளவர்கள் என்ன நினைத்தாலுஞ் சரி, சொன்னாலுஞ்சரி, செய்தாலுஞ்சரி, தனக்குச் சரியென்றுதான் நினைத்ததைச் செய்ய மனோதிடம் அவசியம். இந்த புஸ்தகத்தில் கொடுத்திருக்கும் போதனையின்படி நடக்க அவ்வித திடம் அவசியம். இன்னும் மெத்த சகிக்கும் துணிவும் நேர்மை உறுதியும் வேண்டியதே.

உள்ளபடி வெளிதைரியமும் வேண்டியது. மார்க்கத்தில் யதார்த்தமாகவே அநேக கஷ்டங்களும் அபாயங்களும் இருக்கின்றன; வெறும் குறிப்புகளல்ல. அல்லது மேல் லோகப்படியில் மாத்திரம் வருவதல்ல. இவை விருத்திக்கு வரும் வழியில் நமக்கு சகிக்கும் திறமை இருக்கின்றதாவென்று சோதிக்க வருகின்றன. அவைகளுக்கு நாம் சித்தமாய் இருக்கவேண்டியது. அதைரியமுள்ளவன் முத்திமார்க்கத்தில் விருத்திக்கு வரமுடியாது. இவ்விடத்தில் வெறும் நல்லவனாக மாத்திரம் இருந்தால் போதாது. எதிர்பாராத சந்தர்ப்பங்களாலும் பயப்படத்தக்கவைகளாலும், அசையாதிருக்கும் திடம், உறுதியாகவிருக்கவேண்டும்.

இங்கிலாந்தில் ஓர்லிக பிசாசுகளை (யாதனுதேகிகளை) வர வழைக்க பல வாரங்களாய் அநேகவித உபாயங்களில் பிரயத்தினப் பட்டுக்கொண்டிருந்த ஒரு இரகசிய சபை இருந்தது எனக்குத் தெரியும். கடைசியாய் ஏதோ ஒன்று கிளம்பிவந்தது. ஆனால் அது என்னவென்று பார்க்க அவர்கள் அங்கு நிற்கவில்லை; பயந்துபோய் விட்டார்கள். இவ்விதமாக ஜனங்கள் மேல் லோகத்திலிருக்கும் விஷயங்களை கைக்கொள்ள பிரயத்தினப்படுகிறார்கள். ஆனால் கிடைத்த உடனே அவர்கள் பயப்படுகிறார்கள். ஒருவன் (ஜாக்கிரதையோடு) விழித்திருக்கும்போது தன் தேகத்தைவிட்டுப் பிரிய முதல் முதல் பிரயத்தினப்படும்போது, கொஞ்சம் பயப்படுவான். மேலும் தான் திரும்பி தேகத்திற்குள் வரமுடியுமோ முடியாதோ என்று கிஞ்சித்து வியப்படைந்திருப்பான். அவன் திரும்பி வருவதைப்பற்றியாவது வராததைப்பற்றியாவது பாதகமில்லையென்பதாக தெரிந்திருக்கவேண்டும் அவன் சில வழக்கங்களால் கட்டுண்டிருக்கிறான். அவைகளை திடீரென்று எடுத்துவிட்டபோது தனக்கு நிற்க நிலையாதுமில்லாததாக உணரும்படியான வகையில் கொண்டு வந்துவிடும். நாம் இன்னும் தைரியம் என்பதைப்பற்றி அதாவது சுத்தமான நேர்மையோடுள்ள வீரியத்தைப்பற்றி பேசிக்கொண்டு போகப்போக, அது முக்கியமாய் வேண்டிய விஷயமாய் இருக்கின்றதைப் பார்ப்போம். எல்லாவித சக்திகளுக்கிடையில் தாங்கி நிற்கவேண்டியிருக்கிறது. இது குழந்தை விளையாட்டல்ல.

நாம் கடவுளோடு ஒன்று என்பதை உற்றுணர்ந்து ஞாபகத்தில் வைத்திருந்தால் எதற்கும் பயப்படமாட்டோம். ஆனால் சில சமயங்களில் திடீரென்று அபாயம் வரும்போது ஜனங்கள் திடுக்கிட்டு அதை மறந்து போகின்றார்கள். நமக்குள்ளிருக்கும் ஆன்மா, விஷயங்கள் எதாலும் கண்டிப்பாய் பாதிக்கப்படுவதில்லை அவஸ்தைப்படுவதில்லை. ஆகையால் ஆத்துமா நாம் என்றும், வெளிகோசங்கள் நாம் அல்லவென்றும் உற்றுணரக் கூடுமானால் பயம் என்பதே நமக்கு இருக்காது. எப்போதாவது எவ்வகையான அச்சம் உண்டாகுமானால் வெளியிலிருக்கும் எவரையாவது உதவிக்கு முறையிட்டு கூப்பிடுவதைவிட்டு உள்ளிருந்து அதிக

மான தைரியத்தை வருவித்துக்கொள்வதுதான செய்யவேண்டிய விஷயம். இதைப்பற்றி கிருஸ்துவர்களுடைய போதனை வெகு துற்பலமானது. அவர்கள் ஜனங்களுக்கு பிரார்த்தனையை கைக்கொள்ளுங்கள் என்று எப்போதும் சொல்கிறார்கள். அதன் பொருள் கெஞ்சிகேட்பது. இதை பலகாலும அருத்தம் கொள்வதுபோல அதிதீவிர வாஞ்சையாக எடுத்துக் கொள்ளக்கூடாது. (Prayer) பிரார்த்தனை என்கிற பதம் லாடின் பாஷையில் *Precuri* அதன அருத்தம் கேட்பது. அதைத்தவிர வேறு பொருள் இல்லை. எல்லா நன்மையையும் அளிக்கக் கூடியவர் என்று நாம் கடவுளை கொள்வோமானால் புத்தபகவானுடைய புத்திமதியைக் கைக்கொள்ளவேண்டியது. "முறையிட்டுக்கொண்டும் அழுதுகொண்டும் பிரார்த்தித்துக்கொண்டு இருக்காதே. உனது கண்களை திறந்துபார். உன்னைச் சுற்றிலும் ஜோதியாயிருக்கின்றது. நீ உன கண்களை கட்டி மூடிக்கொண்டிருக்கும் துணியை அவிழ்த்து விட்டுப்பார். அது அவ்வளவு அற்புதமானது; அவ்வளவு நேர்த்தியானது; மானிடன் நினைவுக்கு எட்டாதது; பிரார்த்தனைக்கு எட்டாதது; அது எப்போதுமே உள்ளது."

கஷ்டத்திலிருக்கும்போது மாஸ்டர்களுடைய உதவியை வழக்கமாக அநேகர் கேட்கின்றார்கள் என்பது எனக்குத் தெரியும். மாஸ்டர்களுடைய எண்ணம் எப்போதும் நம்மேலிருப்பதுந் தவிர சந்தேகமின்றி அவரிடமிருந்து உதவிவரும் என்பது நிச்சயம். ஆனால் நாமாகவே செய்யக்கூடியதைப்பற்றி அவரை என தொந்திரவு செய்யவேண்டும்? இஷ்டப்பட்டால் அவருடைய உதவியை நாம் கேட்டுக் கொள்ளக்கூடும் என்பது உண்மைதான. ஆனால் வாஸ்தவமாய் நமக்குள் இருக்கும் கடவுளை கேட்டு அவருடைய பாகத்தை இழுத்து அதிகமாக வெளிப்படுத்துவோமானால், நாம் மாஸ்டர்களை உதவிக்குக் கூப்பிடுவதைவிட அவரை நெருங்க முடியும். இப்படிச் செய்வது சரிதானென்று எவனும் கேட்கப்போகிறதில்லை. மாஸ்டர்கள் உலகசேவகத்தில் எப்போதும் வேலையாயிருப்பது தெரிந்திருந்தும் வாஸ்தவமாய் ஒரு விஷயத்தை நாமாகவே எவ்விதத்திலும் செய்ய நமக்கு கிஞ்சித்தளவு

வசதியிருக்கும் வரையில் அவருடைய உதவியை கேட்கப் பிரியப் படப்படாது. இப்படிச் செய்யத் தவறினால் விசுவாசத்தில் குறை என்று அருத்தம். நம்மில் மாத்திரம் விசுவாசம் இல்லாதிருப்பது மன்றி கடவுளின் வல்லமையிலும் விசுவாசமில்லை.

அவசரமான சந்தர்ப்பங்களில் தடுமாடாதபடி அவைகளை நிருவகிக்கவேண்டிய சாமர்த்தியம் ஒருவனுக்கு தியான சாதனத்தால் வரவேண்டும். அந்தரங்க நியதிகளை தெரிந்தவர்கள் தங்களுக்கு என்ன நேரிட்டபோதிலும் அவர்கள் சாந்தமாயும் அமைதியுடனிருக்கவேண்டும். இது வாஸ்தவமாய் விருத்திக்கு வரவேண்டிய ஒருபடி என்பதையும், அவைகளால் அதிர்ந்து கோபாக்கினி பொங்கிவருமானால் சிஷ்யனுடைய சூக்ஷ்மதேகங்களில் புண்வடுகள் உண்டாகி அவைகள் வெகுநாள் வரையில் நீடித்திருக்கும் என்பதையும் தெரிந்திருக்கிறார்கள்.

> "இன்னமும் அதற்குத் தளராவுறுதியென்றுங் கருத்து; இதனால் தினவாழ்க்கையில் ஒவ்வொருவனுக்கிருக்கும் வருத்தங்களை நீ இலேசாகச்செய்யவும் செய்துகொள்ளவும் தவிர, அநேகர் தங்கள் காலத்தின் பெரும்பாகத்தை அற்ப விஷயங்களில் ஓயாக்கவலையால் கழிக்கிறதை நீ தவிர்க்கக்கூடும்."

A. B.:—மாஸ்டர்கள் சொல்லுகிற அவசியமான அடுத்த ஒழுக்கம் யாதெனில் ஸ்திரம் என்பது. மாணாக்கனுக்கு வரும் ஒவ்வொரு தொந்தரவு என்கிற காற்றடித்து மனங்கலங்கி போகாமலிருக்க இந்த குணம் அவசியமானது. வெளி விஷயங்களை ஆதாரமாய் பற்றி பிடித்து, ஸ்திரமாயிருப்பதற்காக அவைகளை சார்ந்திருப்பது முடிவில்லா வியாகூலத்தில் கொண்டுபோய் விடுகின்றது. ஏனெனில் அவன் அப்போது தன்னுடைய சொந்த அலைச்சல்களை அடக்கி ஆள்பவனல்லன். ஆதலால் திட்டமான வகையில் வேலை செய்வதற்கு திடஞ்செய்யமுடியவில்லை. அவனை தளரச் செய்கிறது, ஆயாசப்படுத்துகிறது, வியாகூலம்—கவலை; கவலை

என்பது ஒருவருத்தமான எண்ணத்தை படிப்படியாய் மாறிமாறி சிந்தித்தல். ஏதோ ஓர் வகையில் இவ்வித வழக்கத்தில் விழாதபடி தடுத்துக்கொள்ள அச்சமுள்ளவனுக்கு கஷ்டம்.

நடந்த சம்பவத்தை நாடகமாக மனோராஜ்ஜியஞ்செய்து பிறகு தானாக செய்த இந்த நாடகத்தை மனதால் நடித்துக்கொண்டிருக்கும் பழக்கம் சிலரிடத்திலிருக்கின்றது. இந்த வழக்கம் எனக்குங் கொஞ்சம் இருந்தது. இதையும் இதைப்போன்ற எனது சொந்த அநுபவங்களை நான் சொல்லுகின்றேன; ஏனெனில் கருத்தை சுருக்கமாக சொல்லுவதைவிட இவைகள் மெத்த உபயோகப்படுவதாயும் வாழ்க்கைக்கு கொண்டுவரக்கூடியதாயுமிருக்கும். வாஞ்சையுடைய அநேகர் அவ்வித, மனோநாடகத்தை வெகுவாய்செய்திருப்பார்கள். ஏனெனில் நாமெல்லோரும் அநேகமாய் அவ்விதமாய் அமையப்பட்டிருக்கிறோம். எனது வார்த்தையாலும் அல்லது செயலாலும் சிநேகிதர்களில் எவராவது ஒருவர் வருத்தமடைந்ததாக நினைப்பது எனக்கு வழக்கம்; பிறகு அவரை ஒருவேளை மறுபடியும் சந்திக்க நேரிடுமானால் அவரோடு இன்னின்ன விதம் பேசவேண்டியதென்று முதல் வார்த்தையிலிருந்தே கடைசிவரையில் சம்பாஷணையை மனதில் நினைத்துக்கொள்வேன். ஆனால் வாஸ்தவமாய் அவரை சந்தித்தபோது நான் நினைவில் வைத்திருந்த வண்ணம் நிறைவேற்ற முடியவில்லை. ஏனெனில் சிநேகிதனிடத்தில் நான் முதல் முதல் சொன்ன வார்த்தையானது நான் நினைவில் வைத்திருந்ததைவிட்டு எப்போதும் வேறு ஒன்றாய் வந்தது, சில வேளைகளில் ஜனங்கள் இன்பகரமில்லாத காட்சியை இவவிதமாக பாவித்துக்கொள்கின்றார்கள். மேலும் அவர்களே ஜோடித்த நிற்பந்தங்களிடையில், எவ்விதம் நடந்துகொள்வதென்று மனோராஜ்ஜியஞ் செய்கிறார்கள். கடைசியாய் வெகு வருத்தயான மனோ நிலைக்கு வந்து அதன்பேரில் மெத்த வருத்தத்தோடும் தாபத்தோடும் காலங் கழிக்கின்றனர். மனோராஜ்ஜியஞ் செய்தபடி யாதும் இதுவரையில் நடந்ததில்லை.மேலும் வெகுவாய் இனிமேலும் நடக்கபோகிறதில்லை. சக்தியை வீணாய் கழித்தகாரியம்.

இம்மாதிரி காரியமெல்லாம் வீண் அநாவசியமான தொந்தரவு. மேலும் இது மனோ சுபாவத்தையும், தாபசுபாவத்தையும் பலஈனப்

படுத்துகிறது. இந்த வழக்கத்தை நீக்க வழியாதெனில் நாடக காட்சிக்கு வெளியில் உன்னை நீ நிறுத்தி ஒதற்கு ஆதாரமாயிருக்கும் முதல் எண்ணத்தை அடக்க உனக்கு சாமர்த்தியம் உண்டா இல்லையா என்பதை கவனி. இருந்தால் அதை அடக்கு; இல்லாவிடில் அது நிகழும்வரையில் அதைப்பற்றி சிந்திப்பது பிரயோஜனமில்லை என்றிரு; மேலும் முடிவாய் பார்க்கில் அது ஒருபோதும் நிகழாது. இனிமேல் நேரிடக்கூடியதை குறித்து கவலையோடு சிந்திக்க மனதை விடுவது பிரயோஜன மற்றது. நேர்ந்த விஷயத்தைப்பற்றி மாறிமாறி மனதை ஓடவிடுகிறதும் அதைப்போலவே பிரயோஜன மற்றது. நீ உனது கடந்த சம்பவங்களை மாற்றமுடியாது. ஆதலால் அவைகளைப்பற்றி கவலைப்படுவது வீணான நிஷ்பிரயோஜனம்

அநேக நல்லவர்கள் சென்றதைப்பற்றி வியாகூலப்பட்டு, ஒருக்கால் இப்படி அல்லது அப்படி செய்திருந்தால், அல்லது செய்யாதிருந்தால் சங்கடம் வந்தே இருக்காது'' என்று சிந்தித்துக்கொண்டு தங்களுடைய வாழ்க்கையை கஷ்டமாக்கிக் கொள்கிறார்கள். உண்மையாகவே ஒரு காரியத்தை ஒருவகையில் செய்ததால் சங்கடம் வந்ததாக வைத்துக்கொள்வோம்; அவ்விஷயம் செய்தாயிற்று. சென்றதை நினைப்பதால் மாற்றமுடியாது. ஜனங்கள் மாற்றமுடியாத கழிந்த விஷயங்களைக்குறித்தும் அல்லது இனி வரக்கூடிய சம்பவங்களைப்பற்றியும் நினைத்துக்கொண்டு இரவில் விழிப்புடன் படுக்கையில் பிரண்டுகொண்டும், பகல்முழுவதும் கவலைகொண்டு மிருக்கின்றனர். இவ்விதமாயிருக்கும் மனதானது சாதாரண தடைகளில்லாதிருக்கும்போது ஓடும் இஞ்சின் அல்லது இருதயம் (Heart) போலிருக்கின்றது. இஞ்சினுக்கும் இதயத்திற்கும் வேலையால் உண்டாகும் கெடுதியைவிட இது மனதிற்கு அதிகமான கெடுதியுண்டாக்குகின்றது. இவ்வித நிஷ்பிரயோஜனமான தொந்தரவை வரவழைத்துக்கொள்ளும் மனோ ஓட்டத்தை கவனித்து அதை நிறுத்தவேண்டும். மேலும் அப்படி வீணே போவதைவிட்டு உன்னுடைய மனோ பலத்தை பிரயோஜனப்படுத்த கற்றுக்கொள்வாய். கவலைப்படுவது சுத்தமான மடத்தனம். அது மடத்தனத்திற்குதான் கொண்டுபோய் விடுகின்றது. என்றாலும் ஒவ்வொருவரும் செய்

யும் விஷயமாயிருக்கின்றது; ஆனால் செய்யத்தகாதது. மேலும் சிஷ்யனாக வருபவன் அதைச் செய்யவேகூடாது.

C. W. L.:—மனோநிலையிலிருக்கும் அடக்கவேண்டிய கஷ்டங்கள் எல்லாவற்றிலும் கவலை மொத்த பிரயாசை கொடுக்கின்றது. அது விருத்திக்கு வரவேண்டிய வழியைத் தடுக்கும் கனத்ததடை இந்த ஸ்திதியிலிருந்துகொண்டு தியானஞ் செய்யமுடியாது. சிலர் சென்றதைக் குறித்து கவலைப்படுகின்றனர்; மற்றவர்கள் வருவதைப் பற்றி வியாகூலப்படுகின்றனர். ஒரு கவலையை விட்டொழித்தவுடனே இன்னொன்றை எடுத்துக்கொள்கின்றனர். இந்தப்படி சாந்தமான நிலைக்கு எப்போதும் வருகிறதில்லை; கைக்கூடும் என்கிற தைரியத்துடன் தியானஞ் செய்ய நம்பிக்கை இல்லை.

இதை யொழிக்கவேண்டி சரியான மாற்று யாதெனில் கஷ்டந் தரும் விஷயத்தைவிட்டு மாஸ்டருடைய கவனத்தைத் தொடுக்க வேண்டும். ஆனால் இதைச்செய்ய மகா திடம் வேண்டும். அந்நிலையிலிருக்கும்போது ஆசைமயதேகத்தையாவது, மனோமய தேகத்தையாவது அமைதியுடனிருக்கும்படிச் செய்ய எத்தனித்தால் அது புசலடிக்கும்போது கடல் அலைகளை ஓர் பலகையைக்கொண்டு அடக்க எத்தனிப்பது போலிருக்கும். எழுந்து காரியம் ஏதோ ஒன்றை எடுத்துச் செய்வதுதான் எப்போதும் உன்னதமான வழி. அதாவது தோட்டத்தைச் சீர்திருத்தபோ; அல்லது பைசைகில்ஏறிக்கொண்டு உலாவபோ; கோசங்களெல்லாம் ஒருமிக்க ஒத்து நடக்கிற வரையில் அமைதி ஸ்திரமாயிருக்கவே இருக்காது. சாந்தமான பிறகு எந்த சாதனத்தையும் கைகூடும் என்கிற நம்பிக்கையுடன் கையாளக் கூடும்.

பலகாலும் ஜனங்கள் தங்களுடைய சொந்த குறைகளைப்பற்றி கவலைப்படுகிறார்கள். ஒவ்வொருவரும் தன் தப்பிதத்தையும், அடிக்கொருதரம் தவறுவதையும் தாங்களே கவனிக்கின்றார்கள். அப்படி கவனிக்காமலிருந்தால் வெகு நல்லதாயிருக்கும். ஆனால் அப்படி குற்றங்குறையில்லாதிருக்க முடியாது. ஏனெனில் குறைகளும்தப்பிதங்களும் இல்லாதிருக்குமானால் நாமெல்லோரும் முத்தர்களாயிருப்போம். என்றாலும் இவ்விஷயங்களைப்பற்றி அஜாக்கிறதையாயிருப்பதும்,

இவைகள் பாதகமில்லை என்று நினைப்பதும், சந்தேகமின்றி தப்பிதந்தான்; ஆனாலும் அவைகளைப்பற்றி அநாவசியமாய் வியாகூலப்படுவதுகூட குறைவில்லாத தப்பிதந்தான். வியாகூலப்படுவதில் மனதானது பயித்தியங்கொண்டு சுற்றிச் சுற்றி நிஷ்பிரயோஜனமாய் ஓடுகின்றது. காற்று காலங்களில் நீ, நீராவிக்கப்பலில் இருந்திருப்பாயானால், அங்கே யந்திரம் ஒன்று தண்ணீருக்குள் சுழலுவதைப்பார்த்திருப்பாய்; இது அடிக்கடி தண்ணீர் மட்டத்திற்குமேல் வந்து, அளவிலா விரைவில் சுற்றுவதை ஞாபகத்திற்கு கொண்டுவரலாம்; கிரமப்படி அதிக வேலையில் உண்டாகும் கெடுதியைவிட இப்படி சுற்றுவது யந்திரத்திற்கு மெத்த கெடுதியுண்டாக்குகின்றது. இவ்விதந்தான கவலையும் இடைகுறையாது கெடுதியைக் கொடுக்கின்றது.

அப்போதைக்கப்போது நமது சொசைடியில் சங்கடங்கள் ஏற்படுகின்றன. என்னுடைய காலத்தில் அவைகளை அநேகமாய் பார்த்திருக்கின்றேன். 1884 வருஷத்தில் 'குலூம்பு' விஷயமாய் வந்த கொந்தளிப்பு எனக்கு நன்றாய் ஞாபகமிருக்கின்றது. அதைப்பற்றி எத்தனை தியாசொபிஸ்டுகள் (மெம்பர்கள்) குழப்பமடைந்து கவலைப்பட்டார்கள். மேலும் சிலருக்கு தியாசொபிமேலிருந்த விசுவாசத்தை ஒருங்கே கெடுத்துவிட்டது. ஏனெனில் மாடம் பிளாவட்ஸ்கி அம்மையார் அவர்களிடத்தில் கபடமாக காட்டினார் என்று அவர்கள் நினைத்துகொண்டார்கள். உண்மையில் அப்படி ஒன்றுமில்லை. தியாசொபியின் பேரில் நமக்கிருக்கும் விசுவாசம் மாடம் பிளாவட்ஸ்கி அம்மையார் அல்லது இதரார் சொன்னார்களே என்பதால் ஏற்படவில்லை. ஆனால் தியாசொபி பூரணமாயும் திருப்திகரமாயும் உள்ள சித்தாந்தமானதால் இதை ஒட்டியிருக்கிறது. மாடம் பிளவட்ஸ்கி அம்மையார் ஒருவேளை மோசம் செய்துவிட்டிருந்தபோதிலும்—உண்மையாய் அவர் அப்படி செய்யவில்லை—கொடுத்த போதனை உண்மையாய் இருப்பதால் நமது விசுவாசம் நிலையாயிருக்கின்றது. ஜனங்கள் தங்களுடைய நம்பிக்கைகளை ஆட்களின் ஆதாரத்தைக்கொண்டு நம்புவார்களானால் அதை சுலபமாய் உதறிவிட முடியும். ஆனால் நமதுநம்பிக்கை உண்மையைச் சார்ந்திருக்குமானால், நம்மை வழி நடத்துகிறவர்கள் திடீரென்று கழுவினபோதிலும் அது அசையாது, ஸ்திரமாயிருக்கும்.

"ஒருவனுக்கு வெளியிலிருந்து என்ன நேரிட்டாலும் அது அவனை சற்றேனும் பாதிக்க கூடாதென்றும் துக்கஙகள, வருததஙகள, நோய்கள், நஷ்டங்கள் இவைகளெல்லாம் அவனுக்கு ஒன்றுமில்லாதது போலிருந்து அவன் மனதின் சாந்தத் தன்மையை அசைக்காதிருக்க வேண்டுமென்றும், குருநாதன் உபதேசிக்கின்றார். அவைகள், முன்செய்த வினைப்பயனாய் வருகின்றன; அவைகள் வரும்போது கஷ்டமெல்லாம் நீடித் திருக்காதென்றும் நீ எப்போதும் சந்தோஷமாயும், சாந்தமாயும் கலக்கமற்று இருக்கவேண்டியது உனது கடமை என்றும் ஞாபகபடுத்திக்கொண்டு, அவைகளை களிப்போடு சகித்துக்கொள்ள வேண்டும். அவைகள் உனது பூர்வ ஜென்மங்களைச் சேர்ந்தவை; இந்த ஜென்மத்தியவையல்ல; நீ அவைகளை மாற்றமுடியாது ஆகையால் அவைகளைப்பற்றி வருத்தப்படுவது பிரயோஜனமில்லை."

A. B.:—இவ்விடத்தில் மாஸ்டர் கவலைப்படாமல் இருப்பதற்குக் காரணங் கூறுகின்றார். அதாவது, வெளியிலிருந்து ஒருவனுக்கென்ன நேரிட்டாலும் அது கொஞ்சங்கூட பாதகமில்லை என்று சொல்கிறார். இதை அநேக ஜனங்கள் ஏற்றுக் கொள்ளமாட்டார்கள் என்று தெரிகிறது. இவ்விதமாய் நமக்குவரும் சம்பவங்கள் சுத்தமாய் நம்மால் அடக்கி ஆளமுடியாதவைகள்; ஏனெனில் அவைகள் பூர்வகாலத்தில்நாமே செய்தவை; அவைகள் நம்முடைய கர்மம்.

என்றாலும் நாம் இப்போது அதைப்பற்றி செய்யவேண்டியது யாதுமில்லை என்று அதற்கு அருத்தமல்ல; அதற்குப் பதிலாக எவ்வளவோ செய்யக்கூடும். உதாரணமாக அவைகளைச் சரியான வகையில் எடுத்தால், நமக்குவரும் கஷ்டத்தை மெத்த குறைக்கக்

கூடும். நேராய் அடிக்கும் அடியை தட்டிவிடுவது போலிருக்கிறது. அடியின வேகம் ஒருவனை கீழே தள்ளவேண்டிய பலத்தோடிருந்தாலும் அதை இலேசாக உராய்ந்து போகும்படியாக மாற்றலாம். அடியை நீ வாங்கிக்கொள்ளும் வகையில் அதன் வேகத்தை மாற்றிக்கொள்ள இடமிருக்கின்றது. உனக்கு வரும் ஒவ்வொரு கஷ்டத்தையும் "இது நான கொடுக்கவேண்டிய ஒரு கடன், தீர்த்துவிட்டால் நல்லது" எனகிற நினைவோடு ஏற்றுகொண்டால் அப்போது துக்கம் உனக்கு குறைந்துபோகும் வாழ்க்கையை நிருவகிக்கும் விதத்தை தெரிந்தவன கஷ்டங்களின் மத்தியிலிருந்துகொண்டு சாந்தமாயும் களிப்போடும் இருப்பான். தெரியாதவனே பாதி மனதோடு வேக்காட்டால் கஷ்டங்களை அதிகப்படுத்திக்கொண்டு கஷ்டப்படுவான.

உனக்கு வரும் தொந்தரவும், வருத்தமும் வாஸ்தவத்தில் மனதால் உண்டாக்கப்பட்டது. அது எவ்வளவு எனபதைஉனதேகத்தில் நோய்கண்டிருக்கும்போது நீயே அதை சோதித்துகொள்ள முடியும்; அப்போது, அதற்கு வெளியில், இருப்பதுபோல் நீ நிற்பாயானல், அந்த வருத்தம் மிகக் குறைவுபட்டுவருவதைக் காண்பாய். இந்த உண்மையை வேறு வழியில், அதாவது மிருகங்கள் இருக்கும் நிலையை கவனித்துத் தெரிந்துகொள்ள முடியும். கால் ஒடிந்த மிருகம் ஒன்று உடைந்தகாலை இழுத்துக்கொண்டே மிக சுகத்துடன மேய்ந்துகொண்டிருக்கும். இப்படி மனிதன் செய்யமுடியாது. என்றாலும் குதிரை செய்கின்றது. (தேக பரீக்ஷை சாஸ்திரிகள் நமக்கு சொல்லுகிறபடி) குதிரையினுடைய நாடி நரம்புகள் உணர்ச்சியில் மனிதனுக்கிருப்பதைவிட அதிக கூர்மையுள்ளதாயிருக்கிறதாம்; ஆதலால் அதற்கு வருத்தம் மனிதனைவிட அதிகமாய் இருக்கின்றது. மிருகங்கள் வருத்தப்படுகிறதில்லை, எனறுவது அவைகளுக்கு வரும் வருத்தம் பாதகமில்லை, என்றுவது நான சொன்னதாக தப்பர்த்தம் செய்யாதீர்கள். அதற்கு எதிர்மாறன அருத்தம் கொள்ளவேண்டும். ஆனல் வருத்தத்தை நினைப்பதால் ஒருவன் உபத்திரவத்தை அதிகப்படுத்தி அதை நீடித்திருக்கச் செய்கிறன.

உன்னுடைய ஆசைமயதேகத்தில் தாக்கும் உபத்திரவத்தின்கடுமையை நிறுத்த நீ கற்றுக்கொண்டாயானல் வலியை மெத்தகுறைக்

கும் விதத்தை அறிந்துகொள்வாய் "கிருஸ்தவ சயன்டிஸ்ட்" என்பவர்கள் இவ்விதமாக வலியைக் குறைக்கிறார்கள். ஏனெனில் சாதாரணமாய் அதிகப்படுத்தும் மனதினுடைய வன்மையை அதிலிருந்து எடுத்துவிடுகிறார்கள். என் தேகம் வெகு தீவிரமாக நோயால் வருத்தப்பட்டுக்கொண்டிருக்கும்போது நான்பிரசங்கம்செய்யநேரிட்டது. அப்போது அந்த விஷயத்தின் அநுபவம் கொஞ்சம் எனக்குவந்தது. நான் பிரசங்கஞ் செய்கின்ற வரையில் எனக்கு வலிதோன்றவில்லை. ஏன்? எனது மனம் பிரசங்கத்தில் முற்றும் மூழ்கியிருந்தது. தேகத்தின்மேலிருக்கும் கவனத்தை நீ பிரசங்கஞ் செய்யும்போது நீக்குவதைப்போல மனதைநீக்கி முற்றும் அப்புறபடுத்தினுயானுல்,உனக்கிருக்கும் தேக வருத்தங்கள் பெரும்பாலும் தோன்ருது. உன்னுடைய மனதை முற்றும் அடக்கும் திறமை உனக்கு இருக்குமானுல் நீ அப்படிச் செய்யலாம். அப்படியே வெளி விஷயங்கள் தேகத்தை தாக்கிக்கொண்டிருக்கவிடலாம். ஜனங்கள் இதை போதுமான ஊக்கமிருக்கும்போதுதான் செய்கினருர்கள். சிலசமயங்களில்போர்க்களத்தில் பட்ட காயம் படைவீரனுக்கு சண்டை கிளர்ச்சி முடிகிறவரையில் தெரிகிறதில்லை. நிச்சயமாகவே மதத்திற்காக பிராணங்கொடுத்தவர்கள் அவர்களை நெருப்பில் கொளுத்தும்போது சுற்றியிருக்கும் நெருப்பின் தீயைஉணரவில்லை. அவர்களுடைய சுவாமிக்காக அவர்கள் படும் வருத்தத்தில் பக்தியோடு இருந்துகொண்டே பரவசமானுர்கள்.இவ்விதமாகவே குழந்தைக்கு ஏதோ ஒரு அபாயம் நேரிடுமானுல் அதைக் காப்பாற்ற அதன் தாயார் ஓடும்போது, தான் நோய் கொண்டிருக்கும்வருத்தத்தை யெல்லாம் மறந்து விடுவாள்.

வெளி தூண்டுதலில்லாமலே இவ்விதம் அடக்குவதை கற்க முடியும்: பிறகு உன்னுடைய ஆசைமய,மனோமய தேகங்களைத் தாக்கும் வருத்தத்தின் வன்மையை அநேகமாய் இல்லாதபடி செய்ய முடியும். இப்படிச் செய்வது சுலபமென்று நான் சொல்லவரவில்லை; ஆனுல் செய்யமுடியும். வெறும் தூலதேக வலியை நிறுத்தும் ஓர் அற்பவிஷயத்திற்காக அதிகமான சக்தியை பிரயோகிக்கவாவது அல்லது வெகு முக்கிய முயற்சி எடுக்கவாவது பிரயோஜனமானதென்று நான் நினைக்கவில்லை. அநேகர் செய்வதைப்போல் தேக சேவைக்கு உன்னுடைய மனதை ,விடாதபடி திருப்பி பிர

யோஜனமான ஏதோ ஒருவிஷயத்தைச் செய்ய விடுவது மிகவும் நல்லது. வாழ்க்கையின் சரியான நோக்கத்தை எடுப்பாயானால் வெளி விஷயங்கள் முக்கியமானவைகளல்லவென்பதைக் காண்பாய். உனது வெளிப்புறத்தில் மாத்திரம் தாக்கும்படி அவைகளை விட்டு விடுவாய். அவைகளை பட்டுதான் ஒழிக்கவேண்டும் அவைகளை அநுபவிக்கும்போது உனக்கு வரும் சகிக்குந்திறமை ஒன்றுதான் பிரயோஜனம். இவ்விதமாய் அவைகளை நோக்கினால் மனதின் பெருத்த சாந்தத்தை நீ அடைவாய்.

தீங்கெல்லாம் நீடித்திருக்காது; ஜென்மாந்திர சக்கிரத்தில்இருக்கும் உனது பெருவாழ்க்கையைப் பார்த்து, கழிந்த ஜெனமங்களிலிருந்த உனதுபோக்கையும் நோக்கத்தையும் சுருககமாய் தெரிந்துகொள்வாயானால்,இதுஅப்படிதான் நிலையில்லாதிருப்பதைநீஅறிந்துகொள்வாய். இதற்குமுனபு இவ்வித கஷ்டங்களிலும் துக்கங்களிலும் அவையாவன-சிநேகிதர்கள் இறநதுபோவதாலும் நோயாலும், நஷ்டங்களாலும் எததனை தடவைகளில் கஷ்டப்பட்டதை ஒருவன தெரிந்துகொள்வானானால், கஷ்டங்களெல்லாம் ஒருவகையில் அதனதன் பிரயோஜனத்திற்கு தக்கவாறு அமைந்து நிற்கும். இந்த முயற்சியை எடுப்பது முக்கியமானது. ஏனெனில் நிகழும் சம்பவங்கள் விடாது தாக்குகிறபடியால் அவைகளால் வரும் சிறு கவலைகள் ஆழ்ந்திருக்கும் அறிவை மூடுகினறது. உனனுடைய கழிந்த ஜென்மங்களின் சம்பவங்களை தெரிந்து கொண்டால் அது உன்னை தைரியசாலியாக்கிவிடும். பிறகு ஏதோ ஒரு அதிர்ஷ்டம் நேர்ந்தபோது "ஏன் தொந்திரவு படுகிறது இது போய்விடும்"; என்று நினைப்பாய்.

எனககு நேர்ந்த ஸதிதியை கவனித்து அதன் சந்தர்ப்பத்திற்கு தக்கபடி இணங்க நான் இடங்கொடுத்திருந்தால் எனக்கு இப்போதிருக்கும் வாழ்க்கை நிலைக்குவர கொஞ்சமேனும் முடிந்திராது என்று எனக்கு தெரிகிறது. ஒவவொரு நாளும் விதவிதமான கஷ்டங்கள் மெனமேலும் எனக்கு வந்தன. இவைகளுக்கு இடங்கொடுத்திருந்தால் நான் ஒரு வாரததிற்குள் இறந்துபோயிருப்பேன். இப்போது நான் சேர்ந்திருக்கும் திவ்யஞான சபையைப்போல அநேக சபைகளின் அநுபவங்கள் எனக்கு சென்ற ஜென்மங்களில் இருந்தன.

அவைகள் எப்போதும் கஷ்டங்கொண்டு வந்துவிடுவதை கண்டிருக்கிறேன். கஷ்டத்தை எதிர்பாராமலிருப்பது நல்லது, ஆனால் வரும்போது அதை கவனி, பிறகு அதை அப்புறப்படுத்தி அதை முற்றிலும் மறந்துவிட வேண்டியது.

எப்போதும் களிப்புடனும் சாந்தமாயும் இருப்பது உனது கடமை என்று மாஸ்டர் சொல்லுகிறார். சிஷ்யத்வம் என்கிற தங்கமூசை (C.ucible)யில் மட்டபொடிகளை போடாமலிருக்கவேண்டுமென்று எச்சரிக்கை ஒரு தடவை கொடுக்கப்பட்டது. அடையார் போன்ற இடங்களில் அப்படிச்செய்வதால் வரும் அபாயமும், தீங்கும், தீவிரமாய்ப் போகும்; மட்டபொடிகளான சமுசயம், கவலை, சந்தேகம், இவைபோன்ற மற்றவைகளை நினைத்தவன் அவைகளுக்கு கொடுத்தபலத்தைவிட அவைகள் இவ்விடத்தில்மிக்க பலங்கொள்ளுகின்றன; சில சமயங்களில் உனக்கிருக்கும் மனவாட்டமாவது கோபமாவது அல்லது தகாததான எவ்வித உணர்ச்சியாவது உடனே தடுக்க உன்னால் முடியாமல் போனாலும் அதை உனக்குள்ளே மாத்திரம் வைத்துக்கொள், வெளியில் காட்டாதே. அது வெளியில் கொதித்து வழிந்து, காற்றின் வழியாய் தொத்தி மற்றவர்களுக்கு கஷ்டங்கொடுக்காதபடி காத்துக்கொள். இவ்விதமாய் நீ பழகின பிறகு, முந்தி உனக்கிருந்த நிலையை ஆச்சரியத்தோடு கண்டு சிற்சிறு விஷயங்கள் உன்னை தொந்தரவு செய்து வந்ததை பார்த்து அதிசயப்படுவாய்,

C. W. L.:—தெரிந்தவன எவனும் மெத்த கஷ்டங்களுக்கு மத்தியிலிருக்கும்போது சாந்தமாய் களிப்புடனிருப்பான். தெரியாதவனோ கஷ்டத்தை நோக்கும் வகையால் ஒடுங்கிப்போவான். நம்முடைய கஷ்டத்தோடு நம்முடைய மனோபாவம் விசேஷமாயிருக்கின்றது. வாஸ்தவத்தில் கர்மத்தால் கஷ்டப்படவேண்டியது கொஞ்சந்தான். ஆனால் தவறாய் எடுப்பதனால் ஜனங்கள் அடிக்கடி கஷ்டத்தை ஒரு மடங்கு அதிகமாக்கிக் கொள்கிறார்கள்; அல்லது பதின் மடங்கு செய்து கொள்கிறார்கள். இவையெல்லாம்பண்டைய நாள் கர்மத்தினது என்று பழிபோடுவது சரியல்ல. ஏனெனில் அது தற்கால மதியீன செய்கையால் விளைகின்றது; 'சின்னட்' என்பவர் சொன்ன "கைப்பணக் கர்மா" விளைகின்றது.

கர்ம கடன் தொகையை (அளவை) மாற்ற முடியாது. வரும் கர்மம் நமக்கு கஷ்டம் இவ்வளவு கொடுக்கவேண்டுமென்பதை குறிக்கின்றது; ஆனால் அதைஅதிகப்படுத்துவதைப்போலவே குறைக்கவும் முடியும், நம்முடைய யூகத்தால் வேறுவித சக்தியை பிரயோகித்து, அதாவது நமது பிரசிடென்டு சொல்வதைப்போல், நேராய் தாக்குவதை தட்டி உராய்ந்து போகும்படி செய்வதால் மெத்த குறைவாகும்படி செய்யலாம். இவ்விதமாக பிரயோகிப்பது ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் புதிய சக்தியை, வேகத்தை சேர்க்கின்றது. ஆதலால் அதில் அநியாயமென்றாவது நியதியில் தலையிடுவது என்றாவது இல்லை. மற்றபடி உலக விஷயத்தில் பிரயோகிக்கும் சக்தியை இப்போது நேராய் தாக்குவதை குறைக்க உபயோகப்படுத்தினோம்.

தீங்கெல்லாம் கட்டாயமாகவே நிலைத்திருக்காது, "இது கூட நீங்கிவிடும்" என்பதை நீதிவாக்கியமாகக்கொண்ட பார்ஷி இராஜன் ஒருவன் இருந்தான். இது நல்ல வாக்கியம்; ஏனெனில் இது சுகத்திற்கும், துக்கத்திற்கும் சமயத்திற்கு தக்கபடி நல்லதற்கும் துரதிர்ஷ்டத்திற்கும் சரியாகவே ஒத்திருக்கின்றது. அழியாத நிலையிலிருப்பது யாதெனில் வாஸ்தவத்தில் வரும் விருத்தி; உள்ளிருந்து எழும்பும் களிப்பு; இவைகள் எப்போதும் இருக்கப்பட்டவைகள். இப்போது இருக்கப்பட்ட கஷ்டம் அது எப்பேர்ப்பட்டதாயினும் போய்விடும்; "சென்ற ஜன்மங்களில் நாம் கஷ்டப்பட்டோம்; அவைகளிலிருந்து மீண்டு வந்தோம்," என்று யோசிப்போமாகில் மெத்த அநுகூலந்தரும். நமது வாழ்நாளில் வெகு காலத்திற்குமுன் தொந்தரவு கொடுத்த விஷயங்கள் முக்கியமானவையல்லவென்று இப்போது தெரிகின்றது. "ஆமாம்! அவ்விஷயங்கள் முக்கியமானவையல்ல, அவைகளைப்பற்றி நான் அவ்வளவு கவலைப்பட்டது அதிக ஆச்சரியமாயிருக்கின்றது" என்று சொல்கிறோம் அறிவுள்ளவன் சென்றதைப்பார்த்து கற்றுக்கொள்கிறான். "என்னை இப்போது கஷ்டப்படுத்துகிற விஷயங்கள் இதோ இருக்கின்றன. நிச்சயமாகவே அவைகள் முக்கியமானவைகள் அல்ல" என்று சொல்லுகிறான். நிச்சயமாகவே அவைகள் அப்படித்தான். என்றாலும் அவ்விதமாய் மதிக்க புத்திசாலிக்குதான் கூடும்.

" நீ இப்போது செய்துகொண்டு வருவதை கவனித்தால் மேலானது. இது உன் அடுத்த ஜென்மத்தின் சம்பவங்களைச் சீர்திருத்தும்; ஆகையால் இவைகளை நீ மாற்றமுடியும்."

C. W. L.:—உனது மறு பிறப்பின் சீர் பெரும்பாலும் இப் பிறப்பில் நீ செய்யும், கர்மத்தை யொட்டியிருக்கின்றது. அதற்கு இன்னம் சீர்பெறும் காலம் உண்டு. லோகதரு சீக்கிரம் வருகின்றார். சம்பவங்கள் இப்போது வேகமாய் செல்லுகின்றன. பொழிந்து வரும் அருட் கடாக்ஷபலம் ஏராளமாயிருக்கின்றது; இவைகளெல்லாம் நம்மை சுற்றிலும் சூழ்ந்து தாக்கிக்கொண்டிருப்பதால் அவருடைய வருகைக்கு சித்தப்படுத்தி கொண்டிருக்கும் நாம் நம்முடைய மறு பிறப்பின் வாழ்க்கை மாத்திரமன்றி இப்பிறப்பில் இனி இருக்கும் பாகத்தையும் சீர்திருத்தலாம்.

இந்த வேலையிலிருக்கும் சீஷனுடைய கர்மம் பெரும்பாலும் மற்றவர்களுடையதைக் காட்டிலும் மிக்க தீக்ஷண்யமானது. சாதாரணமானவன் செய்துவரும் விஷயங்கள் வெகுவாய் அநேகமிருக்கின்றன. எவ்வகையிலும் மெத்தசங்கடமில்லாமலே செய்துகொண்டிருக்கலாம்; ஆனால் மார்க்கத்திற்கு நெருங்கிவரும் ஒருவன் இவைகளைச்செய்வானானால் கண்டிப்பாய் தீங்குவிளையும்; அவன் சிஷியனாயிருப்பானானால் அவனுக்கு நேரும் ஒவ்வொன்றும் மாஸ்டருக்கு நேரும்; ஏனெனில் அவர் அவனை தனனில் ஒருபாகமாக ஆக்கிக்கொண்டார். "எவனும் தனக்காகவே வாழ்வதில்லை, எவனும் தனக்காக சாவதில்லை" இவ்வாக்கியம் ஒவ்வொருவருக்கும் உண்மையாய் பொருந்தி யிருக்கின்றது. ஆனால் மாஸ்டருடைய பாதாரவிந்தத்தை அடைந்தவர்கள் இரண்டத்தனை ஜாக்கிரதையா யிருக்கவேண்டியது. அனை மாணாக்கனுடைய வழியில் சங்கடங்களை தரும் எதுவாயிருந்தபோதிலும் அவ்விஷயம் கனத்த கர்மத்தை உண்டாக்குகின்றது.

" மனம்வாடி சோர்ந்திருக்காவாவது, துக்கப்படவாவது, நீ யொருபோதுமிடங்கொடாதே

மனவாட்டமானது பிசகு. ஏனெனில் அது மற்றவர்களைத் தொத்திப் பிடித்து அவர்களுடைய உயிர் வாழ்க்கையை மிக கடினமாக்கி விடுகிறது; இப்படிச் செய்வது உனக்கு நியாயமில்லை. ஆகையால் எப்போதாவது உனக்கு மனவாட்டம் வருமானல் அதனையுடனே உதறித் தள்ளிவிடு.''

C. W. L.:—கடுமையான மனவாட்டத்திலிருந்து அவஸ்தைபடுகிறவன எவனும் வெகுவாய் தலையை அசைத்து "ஒருவன் இதை எடுத்து கொண்டாலல்லவோ இது வெகு நல்ல புத்திமதி" என்று சொல்லலாம். ஆனல் நான முந்தி சொன்னதைப்போல் மனவாட்டத்தை உதறித்தள்ள மற்ற காரணம் யாதும் பலம் கொடுக்காதபோது மற்றவர்களை தாக்கும் எனகிற எண்ணமானது ஒருவனுக்கு பலம் கொடுக்கும். மனவாட்டமானது பிசகு. ஏனெனில் அது அவனுடைய துணை மாணுக்கர்களையும் மற்றவர்களையும் தாக்கி அவர்களுடைய வழியை கடினமாக்கி விடுகிறது. நம்மிடமிருந்து, அதாவது நம்முடைய கழிந்த ஜென்மங்களிலிருந்தும், நமது சொந்த கர்மத்திலிருந்தும் வராதது யாதும் நம்மை தாக்கமுடியாது. என்றுலும் நம்மால் மற்றவர் வருத்தமடையாதபடி வெகு ஜாக்கிரதையாய் தைரியமாயிருக்க அதனுல் ஒருவன் கற்கலாம், தகாததேதோ ஒன்றை யாராவது சொனனுலுஞ்சரி செய்தாலுஞ்சரி "இதை மற்றவர்களிடத்து போகவிடமாட்டேன, மற்றயாரோ ஒருவருக்கு இந்த நாளை கடினமாக்கும் விஷயத்தை, நான செய்யவும் மாட்டேன், சொல்லவும் மாட்டேன்", என்று நாம் நினைக்கவேண்டியது. மேலும் மற்றவர்களுடைய கொடிய கர்மம் நிறைவேறும் பொருட்டு நாம் அதற்கு ஓர் கருவியாக வாராதிருக்கும்படி உறுதி செய்துகொள்ளக் கூடும். ஒருவன மற்றொருவனை துனபஞ் செய்தாலுஞ்சரி: அல்லது மனவருத்த படுத்தினுலும்சரி அவன் மற்றவனுடைய கருமவினைக்கு கருவியாக வருகிறது உண்மைதான். ஆனல் அது வெகு தயான மற்ற வகையாயிருக்கின்றது நாம் ஜனங்களுக்கு உதவவும் அவர்களுக்கு கடாக்ஷமும் சுகமும் கொடுக்கும்படியான நல்ல கர்மவினைக்கு

கருவியாக அமையவேண்டியது. கொடிய கருமவினை மற்றவர் களைக்கொண்டு நிறைவேற்றிக்கொள்ளட்டும். நம்மூலமாய் விடப் படாது.

"மற்றொரு வகையிலும் உன்மனதையடக்க வேண்டும்; நீ அதை அலையவிடாதே; நீ எதைச் செய்து கொண்டிருந்தாலும், அதைமுற்றிலும் சீராய் செய்துமுடிக்கும்படி அதன்பேரிலுன் கவனத்தை நாட்டு."

C. W. L.:—நாம் எதைச் செய்துகொண் டிருந்தபோதிலும் அதை சரிவா செய்து முடிக்க அதன்பேரில் மனதை நாட்ட சுலபமாயிருக்கவேண்டும். உதாரணமாக நாம் ஒரு கடிதம் எழுதிக் கொண்டிருந்தால் அதில் மனதை நாட்டவேண்டும்; அது ஓர் குப் தன் எழுதக்கூடிய கடிதமாக கம்பீரமாயிருக்கவேண்டும். சாதா ரணமானவன் தன்னுடைய கடிதங்களை அஜாக்கிரதையுடனும் கவனமற்றும் எழுதுகிறான். தான் சொல்லவேண்டியதை சீராய் சொல்ல பிரயத்தினப்படாமலே சொல்லுகிறான். சாதாரண சிறு விஷயங்களை மேல் சொன்னதுபோல் நன்றாய்ச் செய்ய சிலருக்கு வெகு நூதனமாக தோனறுகின்றது. எனக்கு அநேக கடிதங்கள் வருகின்றன. அவைகளில் அநேகம் நான் அவைகளை எழுதியிருப் பேனேயானால் அனுப்பியிருக்கமாட்டேன்; பலகாலும் அவைகளில் சொற்குற்றங்களிருக்கின்றன. பலமுறையில் எனது காலத்தை வீணாய் கழிக்கும்படியான தெளிவில்லாவகையில் எழுதப்பட்டு வருகின்றன

இதுபோன்ற அஜாக்கிரதைத் தன்மை குப்தமார்க்கத்திலுள்ள வர்களுக்காவது அல்லது அதில் வருபவருக்காவது கண்டிப்பாய் கூடாது. குப்தனுடைய கடிதம் வெகு ஜாக்கிரதையுடன விளக்க வேண்டும். நன்றாய் எழுதியிருக்கவேண்டும். அல்லது டைபில் சீருடன் அடித்திருக்கவேண்டும். பார்ப்பதற்கு ஓர் நேர்த்தியான தாயும் வாங்கி வாசிப்பவருக்கு உற்சாகம் கொடுப்பதாயும் இருக்க வேண்டும். நாம் எதைச் செய்தபோதிலும் அதை உசிதமாயிருக்கச் செய்வது நமது கடமை. ஒவ்வொரு எழுத்தையும் அச்சைப் போல் அல்லது சித்திரம்போல எழுத, ஒருவனுக்கு எப்போதும்

நேரமிருக்கும் என்று நான் சொல்ல வரவில்லை; இந்த நாளில் இவ்விதம் செய்யமுடியாது. ஆனால் குப்தமுறையைவிட்டு சாதாரண சமாசாரம் தெரிவிக்கவேண்டுமானால் ஒருவன் மரியாதைக்காக தெளிவாயும் படிக்கக்கூடியதாயும் எழுதவேண்டும். கொஞ்ச நேரத்திற்கு பால்மாறிக்கொண்டு நீ அவசரப்பட்டு கிறல் கோணலாய் எழுதினால் அதை படிக்கும் மற்றவன் தன் காலத்தை நான்கு மடங்கு அதிகமாக கழிக்கவேண்டிவரும்,என்பதை ஞாபகத்தில் வை. அப்படிச் செய்ய நமக்கு நியாயமில்லை.

நாம் அனுப்பும் ஒவ்வொரு கடிதமும் ஓர் தேவதூதனாகவிருக்க வேண்டும். அது மாஸ்டர்களுடைய செய்தியாக விருக்கவேண்டும். அது ஒரு காரியத்தைப்பற்றியாவது அல்லது ஒரு சாதாரண விஷயத்தைப்பற்றி யாவதிருக்கலாம். எனாலும் அதில் நல்ல எண்ணத்தை நிறைத்து அனுப்பவேண்டும். இதை ஒரு நிமிஷத்தில் செய்யக்கூடும் ; நாம் கடிதம் எழுதும்போதே நம்முடைய மனதில் அன்பை பலமாய் வைக்கவேண்டும். இது பிரயத்தினமில்லாமலே கடிதத்தில் தங்கிநிற்கும். ஆனால் கையெழுத்து போடும்போது நல்ல எண்ணத்தின் வேகம் அதற்குள்தாக்கும்படி ஒரு நிமிஷம் தியானித்துப் போடவேண்டும். ஒரு சிநேகிதனுக்குக் கடிதம் எழுதிக் கொண்டிருந்தால் பக்ஷத்தை அதில் பொழியவேண்டும். அதை அவன் திறக்கும்போது பக்ஷமாகிய சகோதரபாவவனமைஅவனிடத்தில் விரைந்து ஓடும். சகோதரனை தியாசொபிஸ்டுக்கு எழுதுவதாயிருந்தால் அதில் மேலான விஷயங்களின் கருத்தையும் மாஸ்டர்களின் நினைவையும் பதியவை. மேலான எண்ணங்களை எப்போதும் வாஞ்சையோடு ஆதரிக்கும் தியாசொபிஸ்டை அது தூண்டி நினைப்பூட்டும். ஏதோ ஓர் நற்குணக் குறைவென்று நமக்குத் தெரிந்த ஒருவனுக்கு எழுதும்போது, அந்த சந்தர்ப்பத்தை கைக்கொண்டு அக்குணத்தை அதில் பொழியவேண்டும். ஆகையால் ஒவ்வொரு கடிதமும் நன்றாய் எழுதிவரும் வண்ணம் நாம் பார்ப்போமாக ; மேலும் அது இட்டவேலைசெய்யும் ஓர் உயிராக ஆக்குவோமாக.

நாம் மற்றவர்களை நேராய் சந்திக்கும்போது இதே மாதிரியான உதவியைக் கொடுக்கக்கூடும். நம்மில் சிலர் நாளடைவினில் அநேக

ஜனங்களோடு விவகரித்து வருகின்றோம். அவர்களோடு பேசும்படி வருகிறது, சில சமயங்களில் கைகொடுத்து நேசம் பாராட்ட வேண்டியிருக்கிறது. நேராய் கைகொடுத்து வந்தனஞ் செய்யும் சந்தர்ப்பத்தை நாம் கவனித்து, சௌக்கிய பலத்தையாவது, தைரியத்தையாவது,பக்ஷத்தையாவது,மேலான எண்ணத்தையாவது தகுதியானதாய் இருக்கும் எதையாவது, விரைவாக கைவழியாக செலுத்தமுடியும். மேற்சொல்லிய விதங்களில் எதையாவது ஒன்றை கொடுக்காதபடிக்கு எவனோடும் கைகொடுத்து ஒருபோதும் நேசம் பாராட்டாதே. அது ஒரு சந்தர்ப்பம். மாஸ்டர்களின் சிஷ்யனாக வரவேண்டி ஆவல் நமக்கு இருக்குமானால் உதவிசெய்ய சந்தர்ப்பங்களுக்காக எதிர்பார்த்திருப்பது நமது வேலை. ஏதோ ஒரு விதத்திலாவது தன் சுற்றுமுற்றுமுள்ள ஜனங்களுக்கு பிரயோஜனமில்லாதவன் எவனும் சிஷ்யனாக அங்கீகரிக்கத்தக்க வழியிலில்லை; சாதாரணமானவன் புதிதாய் சிநேகிதம் செய்யும்போது பெரும்பாலும் அவனுடைய கருத்து யாதெனில்: "எந்தவிதத்தில் இவனிடமிருந்து என்ன பிரயோஜனம் நான் அடையக்கூடும்" என்பது. இப்படி சொல்லுவதால் சாமானியனுக்கு தப்பிதம் ஒன்றுமில்லை என்று நான் நினைக்கின்றேன். அது பணத்தைப்பற்றி இருக்காது; கேளிக்கை விளையாட்டைப்பற்றி இருக்கலாம், அல்லது நட்புக்குரிய விருந்து முதலியவைகளிலிருக்கலாம்; என்றாலும், எப்படியும் அவன் ஏதோ ஒன்றை கிரகிக்க நினைக்கின்றான். நம்முடைய நோக்கம் அதற்கு நேர்எதிராக "இதோ எனக்கொரு புதிய சந்தர்ப்பம் வந்திருக்கின்றது. நான் என்ன கொடுக்கட்டும்?" என்று இருக்கவேண்டும். ஒரு அன்னியினிடத்தில் பரிச்சயம் எனக்கு கிடைத்தால் அவனை உற்றுபார்த்து நல்ல எண்ணமாக ஏதோ ஒன்றை நான் போடுகிறேன. இது அவன்மேல் ஒட்டிக்கொள்ளும். சமயம் வாய்ந்தபோது அவனுக்குள் செல்லும். மாஸ்டர்களுடைய சிஷ்யர்கள் தெருவில் நடந்துகொண்டிருக்கும்போதும் டிராம் வண்டியிலும், ஓடங்களில் ஏறிப்போகும்போதும் இவ்விதஞ் செய்து வருகிறார்கள். நல்ல எண்ணம் கொடுக்கத்தகுந்த சந்தர்ப்பங்களுக்காக கண்ணும் கருத்துமாய் இருந்து கொடுக்கிறார்கள்.

ஒருநாள் காலையிலாவது மாலையிலாவது ஒரு தடவை பிரயாணத்தில் ஒருக்கால் நூறுதரம் கூட கொடுக்கிறார்கள்.

ஒருவனுக்கு வந்தனம் செய்யும்போது வெறும் வார்த்தையாய் சொல்லாமல் உண்மையாகவே செய்யவேண்டியது. உதாரணமாக மகம்மதியர்களுக்குள் வழக்கமாய் இருக்கும் கடவுளுடைய நாமத்தை குறிக்கும் வந்தனங்கள் சில சமயங்களில் லோகசாரமாக இருக்கின்றன. ஆனால் சில சமயங்களில் அவைகள் அன்பார்ந்த உபசாரத்துடன் கடவுளுடைய ஞாபகமும் அவைகள் உண்மையாகவே இருக்கின்றன. "குட்பை" (good-bye) என்று சொல்லுகிறோம். இது கடவுள் உன்னோடு இருப்பாராக என்கிற வாக்கியத்தின் சுருக்கம். இது சிலருக்கு தான தெரியும். ஆனால் நாம் அதை தெரிந்து கொண்டு அக்கருத்தோடு செய்யவேண்டும். இவைகள் சிறு விஷயங்களாக காணலாம். என்றாலும் தினவாழ்க்கையில் சிறு விஷயங்களில் தான வித்தியாசத்தை காட்டக்கூடும். இவைகள் குணத்தை காட்டுகின்றன; குணத்தை சீர்படுத்துகின்றன; இந்தச் சிறு தினசரி விஷயங்களையெல்லாம் நாம் அக்கரையோடும் சீராயும் செய்வோமானால் நாம் கூடிய சீக்கிரத்தில் நம்மிடத்தில் கருத்தோடிருக்கும் தன்மையும், அடக்கி ஆளவல்ல திறமையும், சிறு விஷயங்களானாலும், பெரியவைகளானாலும் எல்லாவற்றிலும் ஏறத்தாழ இல்லாத திட்டமாய் இருக்கும் திறமையையும், நாம் விருத்தியாக்கிக்கொள்வோம். பெரு விஷயங்களில் ஜாக்கிரதையோடும், சிறு விஷயங்களில் ஜாக்கிரதை யற்றும் இருக்கும்படியான தன்மை எவனுக்கும் இருக்கக்கூடாது. அப்படியிருக்குமானால் நாம் சில சமயங்களில் மறந்துவிடுவோம்; தப்பிதம் செய்யுஞ் சமயத்தில் அஜாக்கிரதையாய் இருக்கும்படி வாய்க்கும்; ஆனால் நாம் முற்றிலும் ஜாக்கிரதையாய் இருக்க கற்கவேண்டியது. இன்னும் அநேக சிறு விஷயங்களை ஒன்றாய்ச் சேர்த்தால் பெரியதாய் வளர்ந்து வருகிறது; மேலும் கொஞ்சம் பழக்கத்தால் கையால் தொடுவதாலும், கடிதம் எழுதுவதாலும், ஒருவனுக்கு கொஞ்சமல்ல ஏராளமான உதவியை கொடுக்கக்கூடும்.

"நீ எதை செய்துக்கொண்டிருந்தாலும் அதன்பேரில் உன் மனதை நாட்டு" என்று மாஸ்டர்கள் சொல்லுகிறார். இது நமது

மனதை ஆரோக்கியப்படுத்துகிறதற்காக, நாவல், கதை புஸ்தகங்களை யும் பத்திரிகைகளையும் படிக்கும்போதும், இதைபோன்ற இன்னு மிதர விஷயங்களில்கூட அப்படி நாட்டவேண்டி யிருக்கிறது. தூக்கத்தையும், யோசனையோடு செய்யும் ஆரோக்கிய தேகதளர்ச்சி யையும், விட்டு உன்னதமான களையாறுதல் எதுவெனில், சாதாரண மான வேறு ஏதோ ஒன்றை செய்வது. ஆதலால் விநோதத்திற் காகவாவது, இளைப்பாறுவதற்காகவாவது ஏதோ ஒன்றை படிக்கும் போது கூட மனது உனக்கு அடிமைப்பட்டிருக்க வேண்டியதே தவிர, நீ மனதிற்கு அடிமைப்பட்டிருக்கப்படாது. நீ ஒரு கதையை படித்துக்கொண்டிருப்பாயானால் மனதை அதன்பேரில் நாட்டு; அதை கிரகித்துக்கொள்ளவும் கிரந்தகர்த்தாவின் கருத்தை தெரிந்து கொள்ளவும் முயற்சிக்கவேண்டும். ஜனங்கள் பலகாலும் கவனிக் காமல் படிப்பதால் அக்கதையின் முடிவிற்கு வந்தபோது, ஆரம் பத்தை மறந்துவிட்டிருக்கிறார்கள். அவர்கள் முற்றிலும் கருத்தில் லாமலிருப்பதால் அக்கதையின சுருககத்தையாவது அதிலிருக்கும் புத்திமதியையாவது அவர்களால் சொல்லமுடியாது. ஆனால் நாம் மனதை பயிலவேண்டுமானால் விநோதத்திற்காவது, அல்லது ஆரோக்கியத்திற்காவது நாம் படிக்கும்போதும் மனதை நன்றாய் நாட்டவேண்டியது நமது கடமை. அதேபிரகாரம் நாம் இளைப் பாறும்போது கூட செய்யவேண்டியது. சீராய் படுக்கவும் இளைப் பாறவும் தெரியாதவர்கள் உலகில் கோடிக்கணக்காய் இருக்கின்றார் கள். பத்து நிமிஷம் மனதை தளரவிட்டிருப்பது என்றால் விறைப் புடன் பிரயாசையோடு இரண்டு மணிநேரம் படுத்திருப்பதற்கு சமானமாய் இருக்கின்றது. இளைப்பாறுவதற்குகூட மனதை சுத்த மாய் அடக்கி வைத்திருக்கவேண்டியதாயிருக்கிறது. மற்ற ஒவ் வொரு விஷயத்தைப்போல அவ்விதமாய் அடககுவதும் பழக்கத் திற்கு வருகின்றது. அதை அப்பியாசிப்பவர்கள் பழையபடி அஜாக் கிரதையோடு விஷயங்களை செய்யமுடியாமலிருப்பதை காண்பார் கள். அவர் இளைப்பாறினால் கிரமப்படி இளைப்பாறுவார்கள்.

"மனஞ் சோம்பலாயிருக்க இடங்கொடா
தே; ஆனால் சும்மாவிருக்கவருஞ் சமயமெல்

லாம், உடனே நல்ல நினைவை ஊட்ட வுன் மனதி
ெறாரு புறத்தில் நல்ல எண்ணங்களை எப்போ
துஞ் சித்தமாய் வைத்துக்கொள்.''

A. B.:—சாதாரண இந்துக்களுக்கு அதைச் செய்ய வெகு சுலபமாகவிருக்கவேண்டியது. ஏனெனில் அவனுக்கு சிறு வயது முதற்கொண்டு வேலையில்லாதிருக்கும் சமயமெல்லாம் நல்ல வாக்கியங்களை சொல்லிக்கொண்டிருக்க கற்றுக் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்தியாவில் சுத்தமாய் படிப்பு தெரியாதவர்கள்கூட அப்படி சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். ஒருவன் வேலையை முடித்த உடனே "ராம் ராம் சீதாராம்" என்று மேன்மேலும் சொல்லுவதை நீ அடிக்கடி கேட்டிருக்கலாம். இது தெய்வீக வாக்கியமே தவிர வேறு அல்ல. இப்படிச் செய்வதை புத்தியில்லாத விஷயமென்று சிலர் நினைக்கக்கூடும். ஆனால் அது அப்படியல்ல. ஏனெனில் சொல்லிக் கொண்டிருக்கிறவனுக்கு அதில் வாஸ்தவமான பலன் இருக்கிறது. அது அவனுடைய வேலையில்லா மனதை சாந்தமாயும் உயர்வாயுமுள்ள எண்ணத்தை கொண்டு நிலைநிறுத்துகிறது. பயலாருடைய விஷயங்களை மேல் போட்டுக்கொண்டு வீண்வம்பு பேச்சுகளுக்கும் அதனால் வரும் சொல்லமுடியாத தீங்குகளுக்கெல்லாம் மனதை இஷ்டப்படி போகவிடாமல் இப்படிச் செய்வது எவ்வளவோ நல்லது. நிச்சயமாகவே ஒன்றையும் சொல்லிக்கொண்டிருக்காமலே மனதை நீ அடக்குவாயானால் நல்லது தான்; ஆனால் அநேகர் இப்படியாவது அப்படியாவது செய்வதேயில்லை.

காலையில் ஓர் வாக்கியத்தை எடுத்து பாராயணம் செய்கிறது நல்ல வழக்கந்தான். இதை அநேக மதங்களில் சொல்லியிருக்கிறதைக் காணலாம். அது நாள்முழுவதும் தானாகவே மனதிற்கு வரும். மேலும், மனது சும்மாயிருக்கும் சமயங்களில் மற்ற கலைக்காகாத எண்ணங்களை துரத்திவிடும். ஏதாவது ஒரு நல்ல புஸ்தகத்திலிருந்து ஒரு வாக்கியத்தை பொறுக்கி எடுக்கலாம், அதை காலையில் ஒருசமயம் நீ உடை உடுக்கும்போது உனனுடைய மனதை அதில் நாட்டி சிலதரம் உச்சரிப்பதால் நாள் முற்றும் அது தானாகவே

வரும். ஒருவன் ஒரு இராகத்தின் சுவரத்தை தற்செயலாகபிடித்து மனதில் அதைக்கொண்டதினால் கைப்பிடியாய் பிடித்து மேன மேலும் அதைப்பாட ஆரம்பிப்பது எவ்விதம் என்று ஞாபகப்படுத்திக்கொண்டால், மேலும் மேலும் உச்சரிப்பது மனதிற்கு எவ்வளவு சுலபம் என்று ஒருவன் காணலாம். அநேகவருஷ காலமாய் எனது மனதின் பின்புறத்தில் மாஸ்டர்களின எண்ணத்தை வைத்திருக்கிறேன். அது அங்கே எப்போதுமிருக்கின்றது. அப்படி இருப்பதால் ஏதோ ஒரு வேலையிலிருந்து மனது விடப்பட்ட க்ஷணமே அவர்களினபேரில் கவனம் நாடுகிறது.

C. W. L.:—நமது மனதின பின்புறத்தில் மாஸ்டர்களின் எண்ணம் எப்போதும் இருக்கவேண்டும். அப்படியிருந்தால் வேலை இல்லாதிருக்கும்போது அவை கண் முனவந்து நிற்கும். ஏதோ வேலை ஒன்றைச் செய்துகொண்டும் அல்லது கடிதம் எழுதிகொண்டும் ஒருவன் இருந்தால் மாஸ்டர்களைப்பற்றி சுறுசுறுப்பாய் நினைத்துக் கொண்டிருக்கிறதில்லை. ஆனால் துவக்கத்திலேயே "இதை மாஸ்டருக்காகவே நன்றாய் செய்வேன", என்று தீர்மானஞ்செய்து விட்டிருக்கவேண்டியது. அப்படி செய்த பிறகு வேலையைப்பற்றி நினைக்கினறோமே தவிர அவரையல்ல. ஆனால் வேலை முடிந்தவுடன் மாஸ்டருடைய எண்ணம் மனதின முன் திரும்பிவந்து விடுகினறது. அவவித எண்ணமானது மனதை நல்ல விதத்தில் பிரயோகிக்க நிச்சயமாக்குவது மாத்திரமல்லாமல், இன்னும் மற்ற விஷயங்களை மெத்த தெளிவாயும் ஊக்கமாயும் நினைக்கச் செய்கினறது.

சில சமயங்களில் ஜனங்கள் மனதின் பின்புறத்தில் நல்லெண்ணம் வைக்க கடவுளின் பெயரை பலமுறை உச்சரித்து வருகின்றார்கள். இந்தியாவில் ரைல்வே ஸ்டேஷனில் வண்டிக்காக காத்திருக்கும்போதும், தெருவில் போய்க்கொண்டிருக்கும்போதும், ஜனங்கள் மிணு மிணுத்துக்கொண்டிருப்பதை நீ அடிக்கடி பார்க்கலாம். சில சமயங்களில் கடவுளின் பெயரை மென்மேலும் சொல்லுவதை கேட்கலாம். பாதிரிமார்கள் முக்கியமாய் மற்ற மதஸ்தரை "வீணாய் பிதற்றுகிறார்கள்" என்று குற்றங் கூறுகின்றனர். மகம்மதி-

யர்களும் வேத வாக்கியத்தை சொல்லிக்கொண்டு போகின்றார்கள். அவர்கள் எப்போதும் "அல்லா" என்கிற சொல்லை சொல்லிக் கொண்டிருக்கிறார்கள், அவரைப்பற்றி அதிகமாய் நினைக்காத சமயமும் இருக்கலாம், என்றாலும் அது அவர்களுக்கு ஏதோ ஓர் கருத்து கொடுக்கின்றது. வெறும் வழக்கத்தால் அவ்விதமான வாக்கியங்களை ஒருவன் சொல்லிக்கொண்டே கவனிக்காமலிருக்கலாம் என்பது வாஸ்தவந்தான். கிருஸ்தவன் பிரார்த்தனை சொல்லிக்கொண்டிருக்கலாம், அந்த வேளை முழுவதிலும் அவன் எண்ணம் எங்கெங்கும் அலைந்து திரிந்துகொண்டிருக்கலாம். பாதிரிமாருங்கூட மணிகணக்கான ஆராதனைகளை அதன்பேரில் எண்ணம் வைக்காமலே செய்யக் கூடும். ஏனெனில் அவருக்கு அது முற்றிலும் கண்டாபாடமாய் விட்டிருக்கின்றது. அவன் "Ave Marias & Paternosters" என்னும் வார்த்தைகளை மேரியையாவது பிதாவையாவது ஒருபோதும் நினைக்காமலே சொல்லிக்கொண்டிருக்கக் கூடும். எந்த மதத்திலும் உபகார ஒழுக்கமாகவே உள்ளிருக்கும் சத்தை பெரும்பாலும் விட்டு வெளி ஓட்டை பிடித்துக்கொண்டு நிற்கமுடியும். ஆனால் இப்படி செய்வது கிருஸ்தவ மதத்தைவிட மற்ற இந்து மதத்திலாகிலும் பௌத்த மதத்திலாகிலும் அதிகமாகவில்லை. அவ்வளவுகூட இருப்பதாக நான் நினைக்கவில்லை. 'ராமா' ராமா, என்கிற பெயர்களை அடிக்கடி உச்சரிப்பதனால் மனதில் அந்த சுவாமியின் எண்ணத்தை வைக்க உதவுகிறது உண்மைதான். அது அப்படி உதித்தால் நிச்சயமாகவே நல்லது தான். மாஸ்டருடைய பெயரை உச்சரிக்காமலே பிரயோஜனப்படும் வண்ணம் சரேல் என்று அவரை நினைக்க நமக்கு வருமானால் அது இன்னும் நல்லதாகும். ஆனால் எண்ணம் இல்லாமலிருப்பதைவிட வாயால் உச்சரிப்பது எவ்வளவோ மேலானது.

இவ்விதமான பக்திபாராட்டும் உணர்ச்சிகளுக்கு தகுந்தபடி ஆடும் அதிர்ச்சி மனோமய தேகத்தில் இருக்கின்றது. நாளடைவில் அதன் வேகம் வழக்கத்திற்கு வருகிறது. அப்படி வருவதால் பக்தி சுலபமாய் கிளம்பி அது ஓர் நற்குணமாக அமைகின்றது. இந்த பழக்கம் கெட்ட எண்ணங்களை விலக்கிவைக்கிறது. மனது வேலை இல்லாது சும்மாயிருந்தால் அதில் தானாய்போய்க்கொண்டிருக்கும்

மற்றவர்களுடைய எந்தெந்த எண்ணமும் நுழைந்து தூண்டும். மேலும் அப்படி நுழையும் எண்ணம் அநேகமாய் கெட்டதாய் இருக்கலாம். அல்லது உபயோகமில்லாததாக விருக்கலாம். தேசத்தின் சாமானிய படியை காட்டும் எண்ணங்கள் ஏராளமாய் நம்மை சுற்றிலும் தேங்கி மிதந்துகொண்டிருப்பதிலிருந்து, இவை வருகின்றன. ஆனால்நாம் இதைவிடமேலான படியைநோக்குகின்றோம். சாதாரணத்திலுள்ள நமது சகோதரர்களை மேலே தூக்கும்படியான நிலையில் இருக்க இச்சிக்கின்றோமல்லவா? ஆதலால் நாமே முந்தி மேல்படிக்கு வருகிறவரையில் அவர்களை தூக்க நம்மால முடியாது.

"ஒவ்வொரு நாளும் உன் மனோசக்தியை விஷயங்களிற் பிரயோகிக்க வேண்டியது. உலக அபிவிருத்திக்கு ஒரு பலமான துணையாய் சார்ந்திரு."

C. W. L. :—நல்லவனாய் இருக்கவேண்டிய தவசியம் என்பது ஒன்றை கற்பனையார்த்தமாக கற்று வந்திருக்கிறோம். ஆனால் பக்தியோடிருந்துகொண்டு கெட்ட விஷயங்களை மாத்திரம் செய்யாமல் இருப்பது போதாது; நல்ல தனத்தோடும் பக்தியோடும்போய் ஏதோ ஒன்றைச்செய்து கொண்டிருக்கவேண்டும். நாம் ஏன் இப்பூமியில் இருக்கின்றோம். ஏதோ ஒன்றைச் செய்துக்கொண்டு இருக்காமல் பூமிக்கு பாரமாய் ஏன் இருக்கவேண்டும். உட்கார்ந்துகொண்டு நல்லவனாய் இருப்பது வெறுமையான அபாவமான தன்மை. (உட்கார்ந்து கெடுதிசெய்வதைவிட மேலானதுதான்.) கடவுளின் அருள்வன்மை இறங்கிவர வாய்க்காலாக இங்கே நாம் இருக்கிறோம். ஞானன்மாவான (Monad) நாம் தேவாக்கினி பொறிபோல வெகு காலத்திற்குமுன் பரமேஸ்வரனிடமிருந்துவெளிப்பட்டிருக்கிறோம். வாஸ்தவமாய் "சீக்கிரட்டாக்டரின்" நூலில்சொல்லுகிறதைப்போல "பொறிமங்கலாய் எரிகின்றது" அநேகருக்குள் தாழ்ந்துதான் எரிகின்றது; ஆனால் நாம் அதை நமது ஊக்கத்துடனும் விசுவாசத்துடனும், அன்புடனும், தூண்டி அது மற்ற ஜனங்களுக்கு அருள் வெப்பம் கொடுக்கும்படியான உயிருள்ள ஜோதியாக செய்யவேண்டும்.

"துக்கத்திலாவது, சங்கடத்திலாவது, ஒத்தாசைக் குறைவிலாவது வருத்தப்படுகிறதாகவுனக்குத் தெரிந்தவரில் ஒருவரைத் தினந்தோறும் நினைத்து, அவர்பேரில் உன்னன்பு நிறைந்த எண்ணத்தை செலுத்து."

C. W. L.:—கையிலிருக்கும் பணத்தைப்போலவும், அல்லது கூஜாவிலிருந்து டம்ளரில் ஊற்றும் தண்ணீரைப்போலவும் மனோ சக்தியானது வாஸ்தவமாய் வரையறையுள்ளது. அதை மனோதாரையாக ஒருவன் பேரில் நாம் பாய்ச்சினால் நமக்கு அது தெரியாமற் போனாலும் அது அவனிடம் திட்டமாய்போய்சேருமென்பது திண்ணம். யாராவது ஒருவர் துக்கத்திலாவது சங்கடத்திலாவது இருப்பதாக நம்மில் அநேகருக்கு தெரியும். இவர்களுக்காக அனுப்பும் எண்ணம் பாய்ந்து அதிகமான உதவி கொடுக்கும். இவ்வித உதவி வேண்டியவர்கள் ஒருவரையும் நமக்கு தெரியாதிருந்தபோதிலும் சாதாரணமாய் அனுப்புவதுபோல நமது எண்ணத்தை அனுப்பலாம்; அது வருத்தப்பட்டுக்கொண் டிருப்பவரை கண்டுகொள்ளும்.

உதவியற்று துக்கத்தில் இருக்கும் அநேகரை தெரிந்திருக்கும்படியான (உதாரணமாக டாக்டர் பெஸன்ட் அம்மையாரைப் போல) ஒருவருக்கு பக்திதரும் எண்ணங்களையும் அனுப்பக்கூடும். அப்படி செய்தால் அவர் பொழிவதற்கு கொஞ்சம் அதிகமாக அவரிடத்தில் சேரும். மாஸ்டாகளைப்பற்றியும் இப்படியே தான். அவர்களுக்கு பக்தியோடு ஒரு எண்ணத்தை அனுப்பினால் கடாக்ஷ ஸ்வரூபமாய் இருக்கப்பட்ட மாஸ்டர்களுடைய எண்ணம் நம்மேல் திரும்பி பொழிகின்றது. இதுவுமன்றி மாஸ்டர்களுடைய சக்தி களஞ்சிய இருப்பில்சேர்ந்து அதை கொஞ்சம் அதிகமாக்குகிறது. அதை அவர் மற்றவர்களுடைய நன்மைக்காக உபயோகப்படுத்துகின்றார்.

A. B.:—இதை வாசிக்கிறவரையில் இவ்விதமாய் மற்றவர்களுக்கு மனதால் உதவி கிரமமாய்செய்யும் சாதனம் எனக்கு தோனறவில்லை. இது நிச்சயமாகவே வெகு நல்ல சாதனம். நாளடைவில்

வேலையில்லா சந்தர்ப்பங்களில் எவராவது ஒருவருக்கு உதவி கொடுக்க காலையிலேயே திடஞ் செய்துகொள். (பரிதாபத்திற்கு தக்கபடி உதவியை வேண்டியவர்கள் எப்போதும் ஏராளமாய் இருக்கின்றார்கள்) அப்புறம் அனறைய தினசரிவாழ்க்கையில் உன்னுடைய மனது வேலையிலிருந்து விடுபட்டு சும்மா இருக்கும்போதெல்லாம் அதில் சத்திரத்தை போல இடையூறான சகல எண்ணங்களையும் புகவிடாமல், பலத்தை கொடுக்கத்தக்கதும், ஆதரிக்கத்தக்கதும், உற்சாகத்தை கொடுக்கத்தக்கதும் அல்லது அச்சமயத்தில் கொடுக்கவேண்டியது யாதோ ஒரு எண்ணத்தை ஒருவனுக்கு அனுப்பிக்கொண்டிரு. இந்த பயிற்சி ஓர் நல்ல வாக்கியங்களை (ஜபிக்கும்) சாதனத்திற்கு மேல் இருக்கிறது.

இவ்வித சாதனம் வேண்டாதபடி உன்மனம் பலப்பட்டு வருகிறவரையில் தகாத எண்ணங்கள் உன் மனதில் வராதபடி ஏதோவொரு வழியில் தடுக்கவேண்டும். மாஸ்டர்களுடைய எண்ணத்தை எப்போதும் மனதில் வைத்திருக்கவேண்டும் ; இது எப்போதும் உதவிகொடுக்கும் தனமையுள்ளது ; மேலும் இது மனதினுடைய மேலான பிரயத்தினங்களை தடுக்கிறதில்லை. மற்ற விதங்களில் உதவி கொடுப்பதையும் தடுக்கிறதில்லை. ஆனால் அவைகளுக்கு பலம் கொடுக்கின்றது. சிலநாள் கழிந்தபிறகு உனது மனோமய விஸ்தீரண மண்டல முழுவதிலும் அது நிறைந்துவிடும். பிறகு நீ செய்வதெல்லாம் வெகு நன்றாய் இருக்கும்: மேலும் அப்படி இருப்பதால் பலமுடன் செய்யமுடியும்.

> "உன் மனதைக் கர்வப்படாதபடி பின்னுக்கு இழுத்துப்பிடி ; ஏனெனில் கர்வம் அறிவீனத்திலிருந்து உதிக்கின்றது."

C. W. L.:—குப்த மாணுக்கருக்குள் குப்தமான இறுமாப்பு அதிகமாயிருக்கின்றது. வாழ்க்கையின் உண்மை விஷயங்களை வாசிக்காதவர்களை விட இவர்களுக்கு கொஞ்சம் அதிகம் தெரியும் என்பதை தெரிந்திருக்கிறார்கள். இவ்வுண்மை தெரிந்திராதிருந்தால் மடத்தனந்தான். ஆனால் இவ்விஷயங்களை அவமதிக்காதபடி ஜாக்கிரதையாயிருக்கவேண்டும். இந்த முக்கியமான விஷயத்தில் குப்த

மாணுக்கர்கள் சாதாரணமானவர்களைவிட தேர்ந்திருக்கின்றனர். ஆனால் சாதாரணமானவர்கள்கூட மற்ற விஷயங்களில் இவர்களைவிட தேர்ந்திருக்கக்கூடும். உதாரணமாக காவியம், பூதபௌதிகம், விசித்திரம் இவைகளை முற்றும் தெரிந்தவன, நாம் தியாசேரபியை கற்றதைவிட இவன் அதிக காலத்தையும் கஷ்டத்தையும் எடுத்திருக்கின்றான். நிச்சயமாகவே அவன கஷ்டப்பட்டதற்கும் நிஷ்காமியார்த்தமாய் கற்றுவந்ததற்கும் கௌரவம் அவனுக்குண்டு. மற்றவன் செய்த வேலையைப்பற்றி அவமதிக்கின்றது அறிவுடையோனுடைய இலக்ஷணமல்ல. ஆனால் எல்லோருமே விருத்தியாகிக்கொண்டு வருகினறோமென்பதை தெரிந்துகொள்வது அவனுடைய குறிப்பு.

தங்களைப்பற்றி நல்லதென்று சொல்லத்தக்க பெருமையை படைத்தவர் அநேகரிருக்கிறார்கள். அவர்கள் எப்போதும் சரியாய் நடப்பதாலும் வெகு நல்லவர்கள் என்றும் அநேக வகையில் நினைத்துக்கொள்ள விரும்புகிறார்கள். ஆனால் அவர்களாக மதித்து மகிழும் கருத்துகளை ஸ்ரீவான்மா சாதாரணமாக எவ்வகையிலும் மதிக்கத்தக்கவையல்ல. ஸ்ரீவான்மாவில் இருக்கும் குணம் எப்போதும் சுத்தமாயிருக்கும். உதாரணமாக பக்ஷம் என்கிற குணம் இருக்குமானால் அதில் பொறாமையாவது வயிற்றெரிச்சலாவது, அல்லது காமியதன்மையாவது சற்றும் இல்லாததாயிருக்கும். அது தன்னுடைய படியில் தெய்வ அருளை காட்டும் கண்ணாடியைபோல் கூடியவரையிலிருக்கும். சில சமயம் கொஞ்சம் சுமாராய் விருத்தியடைவதைப் பற்றி நாமே கர்வங்கொள்ளுகிறோம். அது நான்கு வயதுள்ள சிறு குழந்தை தான நன்றாய் வளர்ந்து வருவதைக் கண்டு கர்வப்படுவதுபோல் இருக்கின்றது அந்த வயதிற்கு அது அப்படியிருக்கக் கூடும். ஆனால் 21 வயதான ஒருவனோடு ஒத்துப்பார்த்தால் வேறுபட்டுதானிருக்கும். நமக்கிருக்கும் அறிவும் திறமையும் பக்தி பிரேமை, தயை இருக்கவேண்டிய அளவை பார்த்தால் கொஞ்சமாய் தானிருகின்றது. ஆதலால் நம்மை நாமே முதுகில் தட்டிகொடுத்திருப்பதைவிட்டு அந்த குணங்களை அதிகரிக்கச் செய்ய எத்தனிக்கவேண்டும்

இந்த பிரயத்தினத்தில் தியானம் பெருத்த உதவிகொடுக்கும். பிரேமையை திடமாய் விருத்திசெய்ய உறுதி செய்தவன அதைப் பற்றி தியானஞ்செய்து அதை உணரும் வண்ணம் நாளடைவில் அப்பியாசித்தால் கொஞ்சகாலத்திற்குள் அக்குணம் பலப்பட்டு மேலிட்டு வருவதை கண்டு ஆச்சரியப்படுவான.

கர்வம் அறிவீனத்திலிருந்து எப்போதும் வருகின்றது என்று மாஸ்டர் சொல்கிறார். எவ்வளவுக்கெவ்வளவு அதிகம் ஒருவன் தெரிந்து கொள்கிருனே அவ்வளவுக்கவ்வளவு கர்வம் குறைந்துவிடும். ஏனெனில் அவனுக்கு தெரியாததை அதிசயமாய் பார்க்கமுடியும். நமது மாஸ்டர்களோடு சேர்ந்திருக்க பாக்கியம் பெற்றவனுக விருக்கும் பக்ஷத்தில் இந்த உண்மை விசேஷமாக தெரியும். அப்பேர்ப்பட்டவன இனி எப்போதும் கர்வப்படமாட்டான். மாஸ்டரண்டை நெருங்கியிருக்கும் விஷயத்தாலும் கர்வமடையமாட்டான; ஏனெனில் தான் யாதாவது ஒன்றைச் செய்ய நினைக்கிறபோதும், அல்லது ஏதோ ஓர் குணம் தனக்கிருப்பதாக நினைக்கிறபோதும் "அக்குணத்தை மாஸ்டரிடத்தில் பார்த்தேனே, அவருடையதைக் காட்டிலும் எனது எம்மாத்திரம்" என்று அவன் மனதில் உதிக்காமல் போகாது.

அவர்களிடத்திலிருக்கும் சீல ஒழுக்கம் எவ்வளவோ மகத்துவத்தோடு சீர்பெற்றிருப்பதால் அவர்களில் ஒருவரை அறிந்துகொண்டால் கர்வமென்பது உடனே எடுபட்டுபோகும, கண்டிப்பாய் போய்விடும். என்றாலும் மாஸ்டர்களிடமிருந்தால் அதைரியம் என்பது ஒருபோதும் வராது. சாதாரண வாழ்க்கையில் ஏதோ ஒன்றைச் செய்ய நினைத்துக் கொள்வாய், ஆனல் அந்த வேலையில் தேர்ந்தவனை பார்த்தாயாகில் நீ செய்வது எவ்வளவு அல்பம் என்று நீயே உடனே தெரிந்து கொள்வாய். அவன் செய்வதை பார்க்க உன்னல் முடியாததாக தலைகுனிந்து கொள்வாய். ஆனல் மாஸ்டர்களுடைய சந்நிதியிலிருக்கும்போது ஒருவனுக்கு வருவது அவ்விதமல்ல; உனது திறமையின்மையையும், சிறுமையையும் தீவிரமாய் தெரிந்து கொள்வதோடு அவருடைய சந்நிதியிலிருக்கும்போதே உன்னுள் அடங்கியிருக்கும் சாத்தியத்தையும்

அறிந்து கொள்வாய். கடக்கமுடியாத பாதாளமான பிரிவு இருப்பதாக நினைத்து அதைரியப்படுவதை விட்டு நான் இதைச்செய்வேன், அவரைப்போல செய்ய எத்தனிப்பேன் என்று உணருவாய். மாஸ்டரவர்களுடைய எவ்வித சம்பந்தமும் எப்போதும் இவ்வித ஊக்கந் தருகின்றது. அவருடைய சந்நிதியிலிருக்கும் போது அபோஸ்டல் (Apostle) சொன்னபடி நான் கிருஸ்துநாதன் மூலமாய் எல்லா விஷயங்களையும் செய்யக்கூடும், அவர்எனக்கு பலம் கொடுக்கின்றார் என்று அறிகிறான். மாஸ்டர்கள் கொடுக்கும் இந்த பலத்தால் ஒருவன் அச்சமயத்தில் "நான் இனி எப்போதும் மனம்வாடியிருக்க மாட்டேன், இனி நான ஒருபோதும் விசனப்படமாட்டேன், நேற்று மூடத்தனமாய் கோபித்துக் கொண்டதைப்போல தப்பிதத்தில் இனி ஒருபோதும் விழமாட்டேன். நான் திரும்பி பார்த்த போது சில விஷயங்கள் என்னை மனங்கலக்கின; எவ்வளவு அவமானம்! என, எனனை, எதுவும், எப்போதாவது கவலைப்படுத்தும்?" என்று நினைக்கிறான். அவருடைய தெய்வீக கடாக்ஷசந்நிதியிலிருந்து வெளியில் வந்த பிற்பாடு,நேருக்குநேர் காணுமலிருக்கும்போதும்கூட அக்கடாக்ஷம் முனபோலவே யிருக்கும் என்பதையும், நாம் மாஸ்டர்களுடைய ஜீவஒளி வரம்பிற்குள் (Aura) எப்போதும் இருக்க இஷ்டப்பட்டால் அப்படியே வசிக்கமுடியும் என்பதையும், மறந்து பின்னுக்கு நழுவி விடுகிறோம்.

> "தெரியாதவன் இதைச் செய்ததாகவும், அப்பெரிய விஷயத்தை முடித்ததாகவும், தான் தான் பெரியவனென நினைக்கிறான். தெரிந்தவனே, கடவுள் ஒருவர் தான் பெரியவர், எல்லா நற்காரியங்களும் அவரால் தான் முடிந்து வருகின்றன வென்று அறிகிறான்."

A. B:—இவ்விடத்தில் கீதையின் பெருத்த நீதி வாக்கியமிருக்கின்றது,அதாவது நம் எல்லோருடைய மூலமாய் வேலைசெய்கின்றது திருவுளம் ஒன்றே. வேலை எல்லாம் ஏகமாகிய மானிடவர்க்கத்தால் செய்துவருவதே தவிர ஒருவனுலல்ல. நம்மில் எவரும் பெரும்பாலும் செய்யக்கூடியது யாதனில், ஒப்பிலா தெய்வீக செய

லுக்கு வேண்டிய நல்ல கருவியாக நம்மை அமைத்துக்கொள்ள வேண்டியதுதான். கை ஒருவிரல் ஒன்று மற்றவையோடு பெருமை பாராட்டுவதுபோல் பெருமைகாட்டுவது நமக்கு மதியீனம். திருவுள்ளத்திற்கு சௌகரியமான கருவியாக உங்களை செய்துகொள்ளுங்கள். அப்போது (ஏக) கர்த்தா ஒருவனே உன்னை உபயோகபடுத்துவதாக நீ பார்ப்பாய். ஏனெனில் உபயோகிக்கப்பட நீ சௌகரியமாயிருக்கின்றாய்.

நாம் துவக்கின இடத்திற்கே திரும்பி வந்து விட்டோம். ஆன்மாவை உற்றுணர்ந்தால் பயம் எடுபட்டு போவதை பார்த்தோம். இப்போது அது கர்வத்தை நீக்குவதைக் காண்கிறோம். இது ஒரு பெருத்த மூலாதார உண்மை; பல்வேறு விஷயங்கள் எல்லாம், ஒரே உண்மைக்கு எல்லா ஜீவன்களிலும் ஒரே நிறையாய் வீற்றிருப்பது ஒரே ஜீவிதம்''—என்பதற்கு திருப்பிக்கொண்டுபோய் விடுவதைப் பார்க்கிறது நல்லதுதான்.

C. W. L.:—கடவுள் ஒவ்வொருவரிலும் இருக்கின்றார் ஒருவனிடத்தில் இருக்கப்பட்ட நல்லதாகிலும் பெருமை வாய்த்ததாகிலும் எதுவாகிலும் அது அவனுள் இருககப்பட்ட கடவுள், அவன் மூலமாய்வெளிப்படுத்தும் குணங்கள். நாம் செய்வது எல்லாம் அவர் நம் மூலமாய் செய்கினறவேலை. இதை நூதனமாக காணலாம். நான் எனும் உணர்ச்சியை இது எடுத்து விடுகிறது என்று நீ சொல்லக்கூடும். அது ஏன் என்றால் தமது தூலமாக விருக்கப்பட்ட மூளையானது உண்மையான சம்பந்தத்தை கிரகிக்க முடியாது. மத்தியகாலத்து கிருஸ்தவன் "பெருமை கடவுளுக்கே என்று" சொன்னது காரணமில்லாததாக வில்லை. செய்த எந்த விஷயத்தைப் பற்றி கர்வங் கொள்வது எப்படி இருக்கிறதென்றால் ஒருவன் பியானோ வாசிக்கும்போது அவனுடைய ஓர் விரல் இந்த கீதத்தை எவ்வளவு நன்றாய் நான் செய்தேன், அதை நேர்த்தியாய் செய்தது நான்தான் எனச் சொல்வது போலிருக்கும். முடிவில் பார்த்தால் எல்லாவிரல்களும் அதனதன் பகுதியை செய்தன. எல்லாம் ஒருங்கே சேர்ந்து செய்தன அவைகளின் இஷ்டப்படியல்ல; மற்று அதற்குப் பின்நியிருக்கும் மூளையின் கருவியாக அமைக்

திருந்தன· நாம் எல்லோரும் அவருடைய கை விரல்கள். அவர் வெளிப்படுத்திய தோற்றங்கள். இது முற்றிலும் உற்றுணரும் அநுபவம் வருவது கடினம் என்று எனக்கு தெரியும், மேலான பிரக்ஞையை விருத்தி செய்யச் செய்ய அதிகூர்மையாக தெரிந்து கொள்ளக்கூடும் சில சமயம் தியானத்திலும் பரவசமாகியிருக்கும் சமயங்களிலும் அந்த ஐக்கியத்தை ஒரு க்ஷணநேரம் கைப்பற்றி பிடித்திருக்கக்கூடும்,





# 19-வது அத்தியாயம்

## செயலடக்கம் (தமம்.)

"உனது எண்ணம் எப்படி யிருக்கவேண்டுமோ அப்படி நீ யதை வைத்திருந்தால் (அதன் பின்னேடும்) செய்கையில் உனக்குக் கிஞ்சித்துங் கஷ்டமிருக்காது."

A. B.:—இந்த வாக்கியத்தில் செயலைவிட எண்ணம் வெகு முக்கியமானது என்று குப்த மாணுக்கனுக்கு சகஜமாயுள்ள உண்மையை வற்புறுத்துகின்றது. இது சாதாரண நோக்கத்திற்கு நேர் எதிரிடையாக விருக்கின்றது. என்றாலும் அது உண்மைதான; ஏனெனில் எண்ணம் எப்போதும் செயலுக்கு முந்தி செல்கின்றது. நினைக்காமலே தானுக உண்டானதென்று சொல்லக்கூடிய செயல் இருக்கக்கூடும். ஆனுல் அதன் முந்திய எண்ணத்தை கண்டுபிடிக்க நீ பிந்தி வெகு தூரம் போய் ஆராயவேண்டியிருக்கும். வெகுவாய் முந்திய ஜென்மத்திற்குக் கூடபோக வேண்டியிருக்கும், என்று அருத்தம் அதில் ஏற்படுகினறது.

ஏதோ ஒரு வழியில் எண்ணத்தின் வலிமை போதுமான அளவு மனதில் சேர்ந்தபிறகு, வெளியாகும் படியான சந்தர்ப்பம் கிடைத்ததும் அந்த எண்ணம் அடக்கமுடியாமலே செயலாக ததும்பிப் பாய்கின்றது. ஒருவழியில் எண்ணும் எண்ணத்திற்கு ஒவ்வொரு தடவையிலும் எண்ணும்போதெல்லாம் கொஞ்சம் கொஞ்சமாய் பலம் அதிகரித்து வருகின்றது. கடைசியாய் நிரம்பிவந்ததும் அதன் கருத்தின்படி ஒருவனை காரியஞ்செய்யகொண்டுபோய் விடுகிறது. இந்துக்கள் செயலை அதாவது கர்மத்தை சரியாகவே எண்ணம், ஆசை, காரியம் என மூன்றுபாகங்களாகப் பிரித்திருக்கிறார்கள். அது வாஸ்தவந்தான். ஆதலால் ஒவ்வொரு ஜென்மத்திலும், ஒரு காரியம், சமீபகாலத்தில் யோசிக்காததா யிருக்கலாம்; சமயம் நேர்ந்த க்ஷணம்தற்செயலாகவே செய்யும்காரியமாக வந்திருக்கலாம்; யோசனையை முந்தியே செய்துமுடித்துவிட்ட காரியமாகும் இது. செயல் என்பது காரியத்-

தில் கடைசிபாகம். இது சந்தர்ப்பத்திற்காக காத்திருக்கின்றது. அது கிடைத்தவுடன செயலாய் பரிணமிக்கும். இவ்விதமாய் ஏதோவோர் வகையில் யோசனை செய்துகொண்டு இப்படிச் செய்யலாமா அப்படிச் செய்யலாமாவென்று முடிவு செய்வதில் களைத்து போகும்படி நேரிடும். அப்புறம் நீ சாமர்த்தியத்தோடு முற்றிலும் உன்னை அடக்கியிருக்கும்போதே சந்தர்ப்பம் கிடைத்தவுடன் உனது எண்ணம் செயலாக வெளியாகும். அதற்கு சந்தர்ப்பம் கிடைக்காவிட்டால் வெகு நாள்வரையில் அது சும்மா தூங்கிக் கொண்டிருக்கும். ஆனால் எப்போதாவது சந்தர்ப்பங் கிடைத்த உடன செயலாய்ச் செய்துமுடியும்.

ஆதலால் எண்ணத்தின் நடவடிக்கையை தெரிந்து கொள்வது வெகு முக்கியமானது. உன்னுடைய எண்ணத்தை பாதுகாத்து அதை நல்லவழியில் விடு. ஏனெனில் அது செயலாகும் சமயம் எப்போது வரும் எனபதையும், உனது அடுத்த எண்ணம் அதை செயலாக முடிக்காது எனபதையும் நீ சொல்ல முடியாது. உலகி லுள்ள பெரிய ஆசாரியர்கள் எல்லாம் எண்ணம் முக்கியமானது என்று வற்புறுத்தி சொல்லியதற்கு காரணம் இது ஒன்று. இந்த புஸ்தகத்திலும் அதை மறுபடியும் மாணக்கனுக்கு ஞாபகப் படுத்தியிருக்கிறது. இவ்விடத்தில் மனது, மனசு, எனபவை கூட செய்கையாக பாவித்திருப்பதை ஞாபகப்படுத்திக்கொள்வது நல்லது. பிரத்தியேகான்மாவில் (Monad) இச்சா ஞானம் கிரியை, என மூன்றுவித முகச்சாயல்களிருக்கின்றன. இவைகள் ஒருங்கேஆன்மா, புத்தி, மனசு எனகிற நிலையில் அமைந்திருக்கின்றன. ஆகவே மனசு கிரியையில் இருப்பதை தெரிந்து கொள்வாய்.

C. W. L.:—செயலுக்கு முந்தி எண்ணம் என்று சொல்வது வாஸ்தவம், நினைவில்லாது நாம் காரியத்தை செய்கிறோம் என்று சொல்லும்படியான சமயங்கள் இருக்கின்றன. ஆனால் அப்படி இருக்கும்போதுகூட அது முந்திய எண்ணத்தின் காரியமாகும். நாம் சில விஷயங்களில் அல்லது ஓர் வழியில் நினைக்கும் வழக்க மிருக்கின்றது. சுபாவமாகவே அதுடன் ஒத்து நடக்கிறோம். ஒரு வன் ஒன்றைச் செய்து அப்புறம் "அதைச் செய்யும்படி நேர்ந்து

விட்டது, நான் நினைக்கவேயில்லை", என்று சொல்கிறான். ஆனால் அதன் உண்மையாதெனில், இவன் வெகுவாய் முன்பிறப்பில் எண்ணின எண்ணத்தை நிறைவேற்றுகின்றான். சாதாரணமாய் முன் பிறப்பிலிருந்த மனோமய தேகம் அவனுக்கு இப்போது இல்லாதிருந்தபோதிலும், அப்போதிருந்த அதே மனோ பௌதிக அணு அவனிடமிருக்கின்றது. இது அவனுடைய மனோமய தேகத்திற்கு மூளையாகவும், பெரும்பாலும் அதனுடைய விவகாரங்களை எல்லாம் வைத்திருக்கும் பீஜமாகவும் இருக்கின்றது. இதில் ஒருவனுக்கு வழக்கமாக விருக்கும் எண்ணத்தின் போக்குகள் பதிந்து பிறப்புகள் தோறும் போகின்றன.

மனிதன் பிறவிகள் தோறும் தன்னுடைய காரண சரீரத்தில் * நற்குணங்களை மாத்திரம் கொண்டுபோகிறான, என்று பலமுறை சொல்லியிருக்கிறது. இது கண்டிதமாய் உண்மைதான். காரண சரீரமானது மனோமய லோகத்தின் மேல் மூன்று அடுக்குகளிலுள்ள (அதாவது முதல், இரண்டு மூன்றாவது) அணுக்களால் கட்டப்பட்டிருக்கின்றது. அந்த அடுக்குகளிலிருக்கும் அணுக்கள் தாழ்ந்த குணங்களையாவது அல்லது தகாத குணங்களையாவது காட்ட முடியாது, ஆகையால் ஒருவன் தன்னுடைய நல்ல குணங்களை மாத்திரம் அதில் சேர்த்துவைக்க முடியும். இப்படியிருப்பது நமக்கு மெத்த அதிர்ஷ்டந்தான்; ஏனெனில் அப்படியில்லாதிருக்கும் பக்ஷத்தில் நற்குணமல்லாத அநேகமானவைகளை நாம் அதில் சேர்த்து விடுவோம். இது நமக்கு உதவுவதை விட்டு விருத்தியை கெடுத்துவிடும். ஆனால், அந்தந்த லோகங்களுக்குரிய தேகத்திற்கு பீஜமாய் எப்போதும் அவனோடு சாசுவதமாயுள்ள அணுக்களை சூத்ராத்மா ஜன்மஜன்மமாய் எடுத்து வருகிறது. ஆதலால் அதற்குரிய நடவடிக்கைகள் (அதிர்ச்சிகள்) அவனுடைய அந்தந்த பிறப்பிற்குரிய புதிய தேகங்களில்சுபாவ குணங்களாய் வருகின்றன.

இவ்விதமாகவே உள்ளபடியிருக்கும் குணங்களைக் காட்டிலும் இனிமேல் குணங்களாகும் வாசனை விஷயங்கள் மற்ற ஜன்மங்களி

* இதை ஹம்சம் என்று சொல்லுவார்கள்.

விருந்துவருகின்றன. மாடம் பிளாவட்ஸ்கி இவைகளைப்பற்றி சொல்லும்போது "ஊட்டமற்றது" என்றார். அதாவது குணங்களை காட்டக்கூடிய அணுக்கள் இருக்கும்போது மாத்திரம் அவைகளை காட்டும். தவிர, ஜீவான்மாவிடம் அணுக்கள்வந்து சேரும்வரையில் வாசனுகுணம் சும்மா தூங்கிக்கொண் டிருக்கும். ஆதலால் ஒருவன் யோசிக்காமலே யொன்றைச் செய்வானுனல் அது பழய எண்ணங்களின் வேகத்தால் செய்கிறன். நாம் நம்முடைய எண்ணத்தை ஜாக்கிறதையுடன் ஏன் காக்கவேண்டியது என்பதற்கு இது ஓர் காரணம். அது எப்போது காரியமாய் ஓடும் என்பது நமக்குத் தெரியாது; கெட்ட காரியஞ்செய்ய தான் ஒருபோதும் இடங்கொடுக்க மாட்டேன் என று எண்ணிக்கொண்டு ஏதோ வொரு கெட்ட எண்ணத்திற்கு இடங்கொடுப்பவன் பெரும்பாலும் அவன் தெரிந்து கொள்ளுவதற்கு முன்னமே அது காரியமாய் முடிவதை ஒரு நாளைக்கு காண்பான்.

குழந்தைகளுக்கு உதவிகொடுக்க இந்த அறிவை அதிகமாய் பிரயோகப்படுத்தி கொள்ளலாம். ஜீவான்மா பிறந்து புதிய தேகங்களை எடுத்துவரும்போது தாய் தகப்பன்மாரும் சிநேகிதர்களும், குழந்தைகள் காட்டும் நல்ல குணங்களை தட்டிகொடுத்து, கெட்டவைகளுக்கு சந்தர்ப்பம் கொடாதபடி செய்வது, குழந்தைகளுக்கு மெத்த உபகாரஞ்செய்ய முடியும். குழந்தையின நற்குணங்களை யெல்லாம் ஒழுக்கமாக்கி, கெட்ட குணங்கள் தலை எடுப்பதற்கு முன்னேயே குழந்தையை நற்பழக்கத்திற்கு கொண்டுவந்தால் குழந்தைக்கு நாம் செய்வது பெருத்த உபகாரம். கெட்ட குணங்கள் சீக்கிரத்திலாவது அல்லது மெதுவாயாவது வெளியாகும். வெகுவாய் வெளி உலகம் இவைகளைத் தூண்டிகிளரும். ஆனுல் நற்குணங்களின் வேகபலம் அதிகமாய் முந்தியே இருந்தால் கொடியவைகளுக்கு இடங்கிடைக்க கஷ்டமாய்விடும். ஜீவானமாவின் சுய இச்சையும் கோசமூலமாய் துற்குண தூண்டுதல்களை அடக்கும். அப்படி செய்ய முடியுமானல் அந்த பிறப்பிலேயே அவைகளை முற்றும் களைந்தெறிய முடியும். அப்படியாகுமானுல் அடுத்த ஜென்மத்தில் ஜீவான்மா துற்குணத்தின் அடையாளம் கொஞ்சமும் இல்லாமல் வர முடியும்.

"ஆயினும் ஜனங்களுக்குப் பிரயோஜனப் பட வேண்டுமானால், எண்ணம் (எண்ணமாய் நிற்காதபடி கீழோடி) காரியமாய் முடிய வேண்டிய தென்பதை ஞாபகத்தில்லை. சோம்பலென்பது கூடாது. ஆனால் நற்காரியங்களில் சதா கையாடிக்கொண்டிருக்க வேண்டும்."

A. B.:—இங்கே ஒரு வெகு முக்கியமான நினைவூட்டுதலிருக்கின்றது. எண்ணம் உபயோகப்படவேண்டுமானால், அது காரியமாய்ப் பலிக்கவேண்டும். நம்மில் அநேகருக்குள்ள குறை இந்த விஷயத்தில்தான். நம்முடைய மனதில் செயலாக விளையாத எண்ணங்கள் அநேகமிருக்கின்றன. அவைகளெல்லாம் துற்குணத்திற்கு ஆதாரம் கொடுப்பவைகள். மாஸ்டர் மோரியா சொன்னதாவது. "நல்லெண்ணம் ஒன்றைக் காரியமாக கொண்டுவராவிட்டால் அது மனதில் ஓர் (புத்.க) புண்போல் அரித்து தின்கிறது." என்பதாக. இது ஒரு விளக்கமான உபமானம். இது, அப்பேர்ப்பட்ட எண்ணத்தை வெறும் குற்றமற்றதாக நினைப்பதைவிட்டு நேராக தீங்கை விளைவிக்கின்றதை நம்மை உற்றுணரச் செய்கின்றது. நற்காரியங்களைச் செய்யாமல் நல்லவையென்று தீர்மானித்து வைப்பதால் நமது ஒழுக்கத்தை ஹீனப்படுத்திக் கொள்ளக்கூடாது. அப்படி செய்வது நமக்கு ஓர் தடையாகும்; இன்னொருதரம் அந்த எண்ணம் உதித்தால் அக்காரியத்தை நிறைவேற்ற அதிக கஷ்டங் கொடுக்கும். ஆகையால் தாமதிக்காதே; விஷயங்களை நாளைக்கு என்று காலதாமதஞ் செய்யாதே; முடிக்காமல் விட்டுவிடாதே; நம்மில் அநேகர் நல்ல உறுதிபாடுகளை அநுபவத்திற்கு கொண்டுவராததனால் அவர்களுடைய விருத்தியை குறைக்கின்றார்கள். ஆங்கிலப் பழமொழி "நரகத்திற்கு போகும் வழி நல்லெண்ணங்களால் பதிந்திருக்கின்றது." என்று இருக்கின்றது.

நல்லெண்ணம் ஒன்றை நிறைவேற்றாவிட்டால், அது அபினி மருந்து மூளையை மந்தப்படுத்துவதுபோல் மந்தவியாதியை உண்டாக்குகிறது. உன்னுடைய எண்ணத்தை கிரமப்படுத்தி ஜாக்கிரதை

யோடிரு. உனது ஜீவான்மாவிடமிருந்து உபகாரஞ் செய்யும்படி ஒரு தூண்டுதல் வரும்போது போய் அதை நிறைவேற்று; அதை நாளைக்கென்று விட்டுவைக்காதே. இவ்விதம் தாமதிக்குங் காரணத்தைக்கொண்டு நல்லவர்களில் அநேகர் உலகில் இருந்த இடத்திலேயிருந்துகொண்டு விருத்திக்கு வாராமல் இருக்கின்றார்கள். ஓர் நல்லவனை பத்துவருஷத்திற்கு முன பார்த்தது போலவே இப்போதும் பார்ப்பது சாதாரணமான விஷயம். இவ்விதம் ஜனங்கள் அதேவிதமான கஷ்டங்களிலும் மதிமயக்கங்களிலும், குற்றங்களிலும், சாமர்த்தியத்திலும் வருஷக்கணக்காக யிருக்கின்றனர். திவ்வியஞான சபையின் அங்கத்தினர் ஒருபோதும் அப்படி யிருக்கக்கூடாது. ஏனெனில் நம்மில் எல்லோருக்கும் இந்த நியதிகள் போகும் வழியை ஏதோ கொஞ்சமாவது தெரிந்திருக்கவேண்டியது.

அப்படி யிருப்பதை சில சமயங்களில் பார்த்தோமானால் அது நல்ல ஊக்கங்கொடுத்த எண்ணங்களை காரியமாக கொண்டு வராததால் அவைகளே தடைகளாக வருகின்றன என்பதை அறிந்துகொள்ளாததனால் ஏற்படுகின்றது. உனக்கு மனதில் தட்டுபவைகளை காரியமாக கொண்டுவந்தால் மேலும் மேலும் அவை அதிகமாக வரும். அனுகூலமாயிருக்கும் வெளி சந்தர்ப்பங்களாவது அல்லது வெளிஞானம் வெளிக் கல்வி அதிகமாய் வருவதிலாவது உள்ளிருந்து வராத வீரியத்தையும், உறுதிபாட்டையும், இன்னும் உனக்கு முன்னமே தெரிந்திருப்பதை காரியமாக செய்ய தவறிவிட்டதையும் சரிப்படுத்தமுடியாது. உன்னுடைய எண்ணம் எப்போதும் காரியமாக வரவேண்டும். அது ஓர் விதியாக செய்துகொள். நீ உன்னுடைய எண்ணத்தை எப்போதும் உடனே கையாளக்கூடுமென்று நான் சொல்லவில்லை. ஏனெனில் அதற்கு சந்தர்ப்பம் இல்லாமலிருக்கலாம். ஆனால் உடனே சந்தர்ப்பங்கள் வரும். அப்பேர்ப்பட்ட சமயங்களில் (சமயம் வரும் வரையில்) உன்னுடைய எண்ணத்தை வைத்திரு; மறந்துவிடாதே. அப்போது, அது பழுத்துவரும் பழத்தைப்போலிருக்கும். நீ அப்படிச் செய்தால் வைத்திருக்கும் எண்ணம் உனனை தொந்திரவு செய்யாது. தகுந்த காலம் வந்தவுடனே நீ அதை நிறைவேற்றுவாய்.

"ஆனால் நீ செய்வது உன் சொந்தக் கடமை வேலையாக இருக்கவேண்டுமே தவிர மற்றவனுடைய சம்மதத்தின்பேரில் அவனுக்குச் சகாயஞ்செய்யுஞ் சந்தர்ப்பத்தில் மட்டுமேயல்லாது, மற்றபடி அதைச் செய்யக்கூடாது. அவரவர் சொந்த அலுவலை அவர்கள் செய்யும் போக்கிலேயே செய்யவிடு. ஒத்தாசை வேண்டுமென்ற போது கொடுக்க எப்போதுஞ் சித்தமாயிரு; மற்றப்படி எவருடைய வேலையிலும் ஒருபோதுந் தலையிடாதே. தங்கள் சொந்த அலுவலைக் கவனித்திருக்கும்படி கற்றுக்கொள்ள அநேகருக்கு இவ்வுலகில் மிக கஷ்டமான பாடமாயிருக்கின்றது. ஆகையால் அதைத்தான் நீ திட்டமாய் கவனிக்கவேண்டும்."

A. B.:—இராசதகுண சுபாவத்தோடு வேலையில் அதிக சுறுசுறுப்பாயிருப்பவர்களுக்கு வேண்டிய எச்சரிக்கை இப்போது கொடுத்திருக்கின்றது. நாம் இப்போது கத்திகூர்போனற மார்க்கத்தின் இன்னொரு புறத்தை கவனிக்கவேண்டியிருக்கின்றது. அதாவது சோம்பலை ஒருபக்கம் தள்ளவேண்டியிருக்கிறது. மறுபக்கம் பிறர் வேலையில் தலையிடுதலை நீக்கவேண்டியிருக்கிறது. மிக சுறுசுறுப்பாயுள்ளவர்கள் பழமொழியின்படி ஒவ்வொருவனுடைய பணியாரத்தையும் தொட்டு தொட்டுபார்க்க இச்சிக்கிறார்கள். ஆனால் மற்றவர்களுடைய பலகாரம் மற்றவர்களுக்கு சொந்தம்; நீ அதில் உன் கையை வைக்கக்கூடாது. கர்மசாஸ்திரமாயிருக்கும் பகவத்கீதையில் அடிக்கடி சொல்லியிருப்பதை ஞாபகப்படுத்திக்கொள்ளலாம். அதாவது "வேலைசெய் வேலைசெய்" என்றிருக்கிறது, அதில் தவறான வேலையைப்பற்றி எச்சரிக்கை கொடுத்திருக்கின்றது. மற்றவனுடைய தர்மமாயிருக்கும் கடமை தொழிலில் அபாயம் நிறைந்திருக்கின்றது என்று அதில் சொல்லுகிறது.

அதன் காரணம் தெளிவாயிருக்கின்றது. நீ உனது எண்ணத்தின்படி ஓர்வழியை வைத்துக்கொண்டு மற்றவனுடைய வேலையில் கலந்தாயானால், அவனும் அவனுடைய சொந்த எண்ணத்தின்படி ஓர் வழியை வைத்திருப்பான்; அது உன்னுடையதைவிட வேறாயிருக்கும்; ஆதலால் நீ அவன் செய்வதைக் கெடுத்துவிடுவாய். அவனுடைய வேலை அவனுடைய எண்ணத்தின்படி நடைபெற்று வந்திருக்கின்றது. அது உன் எண்ணத்தின்படி சீராகவும் சரியாகவும் வந்ததல்ல, அப்படி வரமுடியாது. அருதுருப்பாயுள்ளவன் மற்றவனுடைய அலுவலில் கைவைப்பதினால் குழப்பத்தைத்தான் உண்டாக்கமுடியும் எனபதை கற்கவேண்டியது. நான சரியென்று எண்ணியபடி மற்றவர்களை திருத்தவேண்டும் என்கிற இச்சை எனக்கிருந்தது. வாஸதவத்தில் அது நான் செய்ய வேண்டிய என்னுடைய உரிமை. ஆனால் சிஷ்யத்வ வழியில் வேலைசெய்வது அவவிதமல்லவென்று கற்றுக்கொண்டேன்.

கருத்தோடு பார்க்கில் மற்றவன் செய்யும் வகை உன்னதமாயில்லாதிருந்த போதிலும் அது அவனுக்கு உன்னதமாயிருக்கலாம். அதன் பின்னோடே அவனுடைய குறைகள், சாமர்த்தியங்கள் அதிகமாயிருக்கலாம். அவை அபிவிருத்தியில் அவனிருக்கும் படியைக் குறிககின்றன. ஒருவன் எழுதும்போது, பேனாவை சரியில்லாதவகையில் பிடிப்பதாக வைத்துக்கொள்வோம். நீ அதில் தலையிட்டு அவனை வேறுவிதமாக பிடிக்கும்படிச் செய்தால், அவனை நீ நன்றாய் எழுதச் செய்வதைவிட்டு, இன்னும் கெடுதியான வகையில் செய்ய விடுவாய். அவனுக்கிருந்த பழைய அநுபவமெல்லாம்போய்விடும். அதைச்சரிப்படுத்தஅவனுக்குவெகுநாள் பிடிக்கும், கஷ்டமும் உண்டாகும். வாஸ்தவத்தில் அவனாகவே வேறு வழி ஒன்றை நல்லதென்று தெரிந்துகொண்டு, தான் எழுதும் விதத்தை மாற்ற வேண்டுமென்று உன்னுடைய உதவியைக் கேட்டானானால் அதுவேறு விஷயம். அவனிஷ்டப்படிச் செய்ய அவனுக்குசுதந்திரமிருக்கின்றது. அப்போது அவனுடைய செயலுக்கு பின்னோடே அவனுடைய சொந்த இச்சையின் பலமிருக்கின்றது.

பலமுள்ளவன் மற்றவனை கொஞ்சநேரம் சுலபமாக அதிகாரத்தோடு ஆளமுடியும் என்பது தெளிவாயிருக்கின்றது. முன்காலத்

தில் கீர்த்திபெற்றவர்கள் வாழ்ந்து வந்தபோது தங்களைச் சுற்றிலுமுள்ளவர்களை எல்லாம் அவர்கள் ஆண்டுவந்ததாக அநேக திருஷ்டாந்தங்கள் சரித்திரத்தில் இருக்கின்றன. என்றாலும் அவர்கள் இறந்துபோனவுடனே அவர்களுடைய காரியங்களெல்லாம் நாசமாய்விட்டன. அவர்கள் இறந்துபோகக்கூடியவர்கள் ஆகையால் அவர்கள் இறந்தபிறகும் வேலைக்கு விக்கினம் வராதபடி ஏற்படுத்தி வைக்க மறந்துவிட்டார்கள். துரதிர்ஷ்டத்திற்குத் தக்கபடி அவர்களுடைய பிழையாலும் அவர்களுடைய சுயகாமிய தன்மையாலும் உண்டான கர்மம் அவர்கள் போனவுடன் காரியங்களைச் சின்னபின்னமாக்கிவிட்டது. அழியாதிருக்கும்படியாக வேலையின் நிமித்தங்களை அவர்கள் அறிந்துகொள்ளவில்லையென்று இதனால் சட்டென தெரியவருகிறது. வேலைக்காரனும் அதிகாரஸ்தனுமுள்ளவர்கள் தகுந்த ஜனங்களைச் சேர்த்துக்கொண்டு அவர்களிடத்தில் நம்பிக்கை வைத்து அவரவர் செய்யவேண்டிய பகுதியை அவரவர்களிடத்தில் அவரவர் வழியின்படி செய்யவிடவேண்டியது. வேலையின் ஒவ்வொரு விவரத்தையும் தானாய்ப் போய் சோதிக்க எத்தனிக்கக்கூடாது. மேலும் அப்படிச் செய்யவும் முடியாது.

உலகம் ஆழ்ந்த ஆதார ஐக்கியத்துடன் பல்வேறு ஜீவராசிகளால் அமைந்திருக்கின்றது. தாழ்ந்த படியிலிருக்கும் ஜந்துக்கள் சுபாவமாகவே நியதிக்குக் கீழ்ப்படிந்து நடக்கின்றன. ஏனெனில் உண்மையை அவைகளாகவே தெரிந்துகொள்ள முடியவில்லை. ஆதலால் அநுசரிக்க அவைகளை நியதி நிர்ப்பந்தஞ்செய்து வருகிறது. ஆனால் மனிதன் கூடியமட்டில் விடுபட்டவனாயிருக்கின்றான். அநேக நியதிகளுக்கு இடையில் தன்னிஷ்டப்படிச் செய்ய விடுபட்டவனாயிருக்கிறான். ஆனால் அவைகளுக்கு அப்புறம் அவனால் போகமுடியாது. ஆனால் அவைகளுக்குள் அவனிஷ்டப்படிச் நடக்க முடியும். அவன் வேலையை அவனிஷ்டப்படி செய்வதால் அவனுடைய விருத்தியிருக்கின்றது. மனிதன் விருத்திக்கு வரவர அதிகமான சுதந்திரம் கொடுக்கப்படும். அதை புத்தியுடன் உபயோகப்படுத்துவான் என நம்பிக்கை வைக்கப்படும். இதுதான் தெய்வீகத்தின் முறை. அப்படியிருந்து கொண்டு கொஞ்சங் கொஞ்சமாய் படிப்படியாய் நாம் பூரணசுதந்திரத்தை அடைகிறோம். அடிப்

படியில் இருக்கும் மிருகம் தனக்கு தெரியாமலே முற்றிலும் கீழ்ப் படிந்து வருகிறது. உச்சிபடியிலிருக்கும் மாஸ்டர்களோ முற்றிலும் தெரிந்து கீழ்ப்படிந்து வருகின்றனர். நாமோ இவ்விரண்டிற்கும் இடையில் எங்கேயோ நிற்கினறோம்.

தலையிடுவது (தூலதேகத்தோடு நிற்காமல்) மனது வரையில் எட்டியிருக்கின்றது என்பதையும், தலையிடப்படாது என்கிற விலக்கு முந்திசொல்லிய ஒழுக்கமாகிய மனதடக்கத்தில் சேர்ந்திருக்கிறது எனபதையும், நாம் ஞாபகத்தில் வைக்கவேண்டியிருக்கிறது. எண்ணத்தால் தலையிடுதல் வெகு வலிமையுள்ளது. உதாரணமாக பின்வரும் சந்தர்ப்பத்தை எடுத்துக்கொள்வோம். நம்மில் யாரோ ஒருவனுக்கு ஏதோ ஒரு கஷ்டமிருக்கின்றதாகவும் அதை தீர்த்து வெல்ல அவன் பிரயத்தினப்படுவதாகவும் வைத்துக் கொள்வோம். ஒருவேளை இது அவனுக்குள்ள ஏதோ ஒரு குறைவால் வரலாம்; ஒருவேளை அது அவன் வழக்கமாய் போகும் பழைய பழக்கத்தின் வலிமையால் தகாததானவகையில் நினைப்பதாயிருக்கலாம், அல்லது செய்வதாயிருக்கலாம். அது எதுவாயிருந்தபோதிலும் அதைவெல்ல அவனால் கூடியமட்டில் பிரயத்தினஞ் செய்கின்றான். பிறகு யாரோ ஒருவர் வந்து அக்குறையைப்பற்றியாவது, கஷ்டத்தைப்பற்றியாவது சந்தேகிக்கிறார்—சந்தேகப்பட்டுவிட்டு, அதனால் தான் ஒருவனை தீங்கு செய்ததாக நினைக்காமலே அவர் வழி போகிறார்.

இப்படி சந்தேகித்துப்போன இரண்டாவது மனிதன் தன்னுடைய சகோதரனை ஒரு முட்டுமுட்டி தள்ளினதாகத் தெரிந்து கொள்ளவில்லை. சந்தேகித்தபடி குறையுள்ளவன் மனதை திருப்பி தவறான வழியில் அவனை கொண்டுபோகக்கூடும். பழக்கம் என்கிற வளமையும், முயற்சி என்கிற ஊக்கமும்,இவ்விரண்டும் அவனை இப்படி திருப்பலாமா, அல்லது அப்படி திருப்பலாமாவென்று திராசைப்போல் ஒன்றுக்கொன்று போராடிக்கொண்டிருக்கும் சமயத்தில், சந்தேகப்பட்ட எண்ணம் அவனை தட்டினவுடனே ஒரு தட்டை இறக்கிவிட்டது. இதனால்தான் சந்தேகப் படுவது பிழை. அது எப்போதும் தப்பிதம். சந்தேகப்பட்ட விஷயம் உண்மை

யாயிருக்குமானல் சந்தேகித்தவனை அது தவறான வழியில் இன்னும் போக முட்டித்தள்ளுகின்றது. அது உண்மையற்றதாகவிருக்குமானல் பின்னுக்கு ஏதோ ஒரு சமயத்தில் அவனை அக்குற்றத்தில் சுலபமாக விழச்செய்யும். எப்படியிருக்கினும் அது அவன்பேரில் ஓர் கெட்ட எண்ணத்தை அனுப்புவதாயிருக்கிறது; ஆதலால் எந்த விதத்திலும் பிழை. ஜனங்களுடைய நடத்தையிலிருப்பதைவிட அவர்களைப்பற்றி நம்முடைய எண்ணம் நல்லதாகவே மதித்து அவர்களை எப்போதும் நல்லவிதமாக நினைக்கவேண்டியது. அப்படி செய்வதால் அவர்களுக்கு நல்லதைச் செய்ய நினைப்பூட்டும் எண்ணத்தை நாம் அனுப்புகிறோம்.

இந்த உண்மைகளை ஞாபகப்படுத்திக்கொள்ளுவது முக்கியமானது. ஏனெனில் முத்திமார்க்கத்தில் விரைவாய்ப் போகும் ஒவ்வொருவன் பேரிலும், தந்திரீக அசுரர்கள் சீக்கிரத்திலோ அல்லது தாமதப்பட்டோ மேகம்போன்ற கெட்ட எண்ணங்களை தாக்குவார்கள். உன்னை தவறுதலான செயலைச் செய்யும்படி உன்பேரில் கெட்ட எண்ணதிரளைப் போடுவார்கள். சந்தேகமாகிய எண்ணஞ் செய்யும் தீங்கைத் தெரிந்துகொண்டு உன்னுடைய எண்ணங்களைப் பற்றியும், காரியங்களைப்பற்றியும் நீ இன்னும் வெகு ஜாக்கிரதையாகயிருக்கவேண்டும். உனக்கு நேரிடும் விஷயங்களைப்பற்றி கோபமாவது, அருவருப்பாவது, இல்லாமல் சும்மா கவனிக்கவேண்டும். எப்போதாவது உனக்கு வெறுப்பு தாபம் கிளம்பிவருவதைக் கண்டால் உனது மனதின இடுப்பை இறுக்கிக் கட்டி கொடிய குணத்தை ஒழிக்க அதற்கு எதிரான நல்லொழுக்கத்தை சாதாரணமாய் கையாண்டுவா என்று சொல்லும் பைபிள் வாக்கியத்தை நீ ஞாபகப்படுத்திக்கொள்ளவேண்டும். அப்படிச்செய், உன்மேல் சொரிந்த கெட்ட எண்ண மேகத்திரள் உனக்குத் தீங்கைச்செய்யாது. அதற்குப்பதிலாக அதிலிருந்து உனக்கு அநுகூலம் வரும். அது உன்னுடைய குறைகளை நீயே பார்க்க உதவிக்கொடுக்கும்; அவைகளை வெளிக்கு விசிரி கொண்டுவந்துவிடும். இல்லாவிடில் அவை உனக்குத் தெரியாமலே மறைந்திருக்கும். மேலும் தாக்கிக்கொண்டிருக்கும்போதே உன்னுடைய மனோதிடம் உனக்கு பலத்தைக் கொடுத்து, இவ்விஷயங்களெல்லாம் தாக்குவதால் விளையும் தீங்கு

கொஞ்சங் கொஞ்சமாய் குறைத்துக்கொண்டே உன்னை விருத்திக்குக் கொண்டுபோகும்.

ஆகையால் உன்னுடைய வேலையை குற்றமற சீராய்ச் செய்ய வேண்டும். மற்றவர்கள், உதவிக்கு உன்னை கூப்பிட்டாலொழிய அவர்களுடைய வேலையில் தலையிடாதிருக்கவேண்டும். உன்னுடைய சொந்த வேலையை உன்னால் கூடிய சாமர்த்தியத்துடன செய். மற்றவர்களுடைய வேலையை உன்னால் கூடியளவு தொடாமல் தனியே விட்டிரு.

C. W. L.:—மற்றவர்களிடத்தில் தலையிடுவது பெரும்பாலும் மதக்கொள்கையை தவறுதலாய் சொல்வதிலிருந்து வருகின்றது. பிடிவாதமுள்ள கிருஸ்தவமதம் ஒவ்வொருவரிடத்திலும் தலையிடுவது ஓர் தொழிலாக வைத்திருக்கின்றது. தன்னை ரக்ஷிக்க தன்னுடைய ஆன்மாவைவிடுவது ஒவ்வொருவனுடைய அலுவல் என்று கவனிப்பதைவிட்டு, மற்றவர்களுடைய ஆன்மாக்களை ரக்ஷிக்க தொடங்குகிறது. சந்தேகமின்றி கண்டிதமாய் எவனுக்கும் எவ்வித சந்தர்ப்பத்திலும் மற்றவனுடைய ஜீவான்மாவிற்கும், தேகான்மாவிற்கும், இடையில் போய் தலையிட நியாயமேயில்லை. மத்தியகால கொடும்வேதனை (Inquisitors) செய்தவர்கள் ஒருவனுடைய ஆன்மாவைக் காப்பாற்ற அவனுடைய உடலைப் பயமுறுத்தி இதையாவதுச்சொல் அதையாவதுச்சொல் என்று வருத்தத்தை கொடுப்பது சரிதான என்றுநினைத்தார்கள். எனக்குத் தெரிந்த வரையில் அப்படி நம்பும்படிச் செய்ய முடியுமா எனபதும், அவனது உடல் ஓர் விஷயத்தை நம்பினதாக அதைச் சொல்லச் சொன்னால் அது பொய்யாயிருந்தாலும் ஆன்மாவை காப்பாற்றுமா என்பதும் அவர்களுக்கு தட்டுப்படவில்லை. இந்த ஜனங்கள் அதை உண்மையில் நம்பியிருந்தார்களானால் அவர்கள் செய்த பிரமிக்கத்தக்க கொடூரத்திற்கு நியாயமாயிருக்கக்கூடும். ஏனெனில் துரதிஷ்டமான உடலை சில மணிநேரமோ அல்லது சில நாள் வரையிலோ எவ்வித துனபத்திற்கு உட்படுத்தியிருந்த போதிலும் அது அவனுடைய ஜீவான்மாவை ஓயா நரக வேதனையிலிருந்து காப்பாற்றுமானால் வெகு அல்பந்தான். அப்படியிருக்குமானால் உனது அயலானை வருத்தப்படுத்துவது வெகு மகி

ழுத்தக்க வேலையாயிருக்கும். இந்த நோக்கத்தை எவனும் கொள்வான் என்பது நமக்கு நம்பக்கூடியதாயில்லை எனறாலும் மத அதிகாரத்தை ராஜரீகத்தில் செலுத்தி வருபவர்களை தள்ளிப்பார்த்தாலும் அநேக கணக்கான ஜனங்கள் இந்த கொள்கைக்கு உட்பட்டிருந்தார்கள் என்று தோன்றுகிறது.

"நீ உயர்வான காரியத்தைச் செய்ய முயலுகிறதினுல் உனது சாதாரண கடமைகளை நீ மறக்கக் கூடாது. ஏனெனில் அவைகளை முடிக்கும் வரையில் மற்ற சேவைகளுக்கு நீ விடுப்பட்டவனல்ல. புதிதாக இலௌகீகத் தொழில்களை எடுத்து மேல் போட்டுக் கொள்ளாதே. ஆனுல் முந்தியே எடுத்துக் கொண்டவைகளை நீ செய்து சாதிக்கவேண்டும். அவைகள் நியாயப்படி நீயே சந்தேகமின்றித் தெளிவாய்த் தெரிந்த கொண்ட கடமைகளாயிருக்க வேண்டுமே தவிர, பிறர் உன் மேல் சாட்டி சுமத்த எத்தனிக்குங் கற்பனை வேலைகளாக இருக்கக்கூடாது. நீ அவருடைய அடியானுக இருக்கப்பெற்றுல் சாதாரண வேலையை மற்றவர்களைக் காட்டிலும் மேன்மையானதாகச் செய்யவேண்டுமே தவிர கேடானதாகச் செய்யக்கூடாது. ஏனெனில் அவைகளையும் அவர் பொருட்டென்றே நீ செய்யவேண்டும்"

A. B:—ஒருவன் குப்தவழியில் வந்தபோது அவன் சாதாரண வேலைகளை முனனைவிட நன்றுய்ச் செய்யாமல் கெடுதியாய்ச் செய்துவருவதை நாம் சில சமயங்களில் பார்க்கினறேம். அது முற்றிலும் பிசகு. புதிய வாசிப்பால் தத்திததும்பிவரும் ஊக்கத்தாலும் மேலான விஷயங்களை பெறவேண்டும் என்கிற முயற்சியாலும், பிரயோஜனமிருந்தபோதிலும் அவைகளுடன் அபாயமும் இருக்கின்

றது. உலகத்திற்குரிய வேலை முக்கியமானதல்லவென்று மதிப்ப தில் அபாயம் கணடிப்பாயிருக்கின்றது. இக்கருத்தில் உண்மை யிருக்கின்றது. அந்த உண்மையில்தான் அபாயம் (மறைந்து) இருக் கின்றது. பிழைகள் எல்லாவற்றினுடைய அஸ்திவாரத்தில் உண்மை தங்கியிருப்பதால் தான் அவைகள் அபாயமானவையாக விருக்கின் றன. பிழையில், உண்மை கொஞ்சம் இருப்பதால் அதற்குபலம் வருகிறதே தவிர அவ்வுண்மையை சுற்றியிருக்கும் பெரும்பொய் போர்வையாலல்ல.

உலகில் செய்யவேண்டிய காரியங்களை (கடமைகளை) குற்ற மற நிறைவேற்றவேண்டிய வகையில் செய்வது தான் மேல்லோகத் திலிருந்து வரும் சக்தியை சரியான வழியில் திருப்பிவிடுவதை காட்டுகின்றது "யோகம் எனபது வேலையில் திறமை" ஒருவன் மேல் லோகத்தில் விகசிக்க பயின்றிருப்பானுனல் அவனுக்கு கீழ் உலகத்தின காரியங்கள் நனருயிருக்கும். இல்லையாளுல் நன்ரு யிராது. எனருலும நனருயில்லா திருந்தாலுங்கூட மேலான விஷ யங்களை கவனிக்காமல் வேலைசெய்வது மெத்த நல்லது. இந்நிலையி லிருந்துகொண்டு காரியத்தை மதியீனமாய்ச்செய்தாலும் அது வெகு அற்பகால திங்கைத் தருமேதவிர நீடித்ததீங்கை தராது. ஏனெனில் காரியத்திற்கு பிந்தியிருக்கும் நோக்கத்தின வலிமை நல்லதாயிருக் கின்றது.

சிஷ்யன் பூலோக நடவடிக்கைகளை மற்றவர்களைவிட நன்ருய் நிறைவேற்ற வேண்டியிருக்கின்றது. அநேக முறை அவன் மதி யீனமாய் செய்யும்போது மாஸ்டர் அவனுடைய செயலைச் சரிப் படுத்த வேண்டி யிருக்கின்றது. சிஷ்யனைச் சோதனைப் பருவத்தில் வைக்கவேண்டிய காரணங்களில் இது ஒன்று. சிலசமயம் பரு வம் நீடித்திருப்பதும் இதைப்பற்றிதான். சாதாரணமாய் ஊக்கத் தையும், முயற்சியையும், முன யோசனையுடனும் அறிவுள்ள நிதா னத்தோடும் சரிவரப்படுத்த, ஜனங்களுக்கு சுமாராகவே நீடித்த காலஞ்செல்லுகிறது.

சிஷ்யத்வத்தினுடைய முதல் சோதனை யாதெனில் மற்றவர் களுக்கு எவவளவு தூரம் பிரயோஜனப்படுகிருன் என்பது. வாஞ்

சையுள்ளவன் தனது வைதிக (Esoteric) அலுவல்கள் லௌகிக (Exoteric)வேலைகளை விட மிக முக்கியமானவை என்று ஒருபோதும் நினைக்கக் கூடாது. தியாசொபிஸ்ட்டா யிருந்துகொண்டு தன்னுடைய சபையின் (Lodge) வேலையையாவது, சொசைடியின் அலுவலையாவது தான் இஸோடரிக்(Esoteric)விஷயங்களில்விருத்திக்கு வரும்பொருட்டு சோரவிடுவது தப்பு. மற்றொரு உதாரணம் யாதெனில் வாசிக்கிறதற்காக வெளிவேலையை கை நழுவவிடுபவன் முற்றிலும் தப்பிதஞ் செய்கின்றான். வாசிப்பு நல்லது; ஆனால் பிரயோஜனப் படுவதற்காக அநுசரணையாக விருக்கவேண்டும். நீ அதிகமாக பிரயோஜனப் படுவதற்காக நீ வாசிக்கவேண்டும். வாசிப்புக்காக நீ பிரயோஜனப் படுவதை நிறுத்தவேண்டுமென் றல்ல. எப்போதாவது அவ்வித வாசிப்பிற்கும் வெளிவேலைக்கும் (எதை விடவேண்டியது, எதை எடுக்கவேண்டியது என்கிற) சங்கடம் வரும்போது வெளி வேலையைத் தான முந்தி கைக்கொள்ள வேண்டியது.

இவைபோன்ற விஷயங்கள் எல்லாவற்றையும் நடத்தும் குப்த மார்க்கமானது க்ஷவரகத்தியின் கூர்மைபோல் வெகு அபாயமானது என்பதை எப்போதும் மறக்கக்கூடாது. ஒருவன் விழித்திருக்கும் போதுள்ள ஒவ்வொரு நிமிஷத்திலும் மற்றவர்களுக்கு சிற்சிறு வேலைகளில் உதவிசெய்யக்கூடும். ஆனால் அப்படி செய்வோமானால் வேலைகளில் அநேகமாய் நன்றாயுள்ளதை பொறுக்கி யெடுக்கமுடியாது. மேலும் அவைகளை எல்லாம் நன்றாய்ச் செய்ய முடியாது. எப்படி ஒருவனுக்கு வேலைசெய்ய பலம் வருவதற்காக உண்ணவும் உறங்கவும் காலத்தை கழிக்கவேண்டியிருப்பதைப்போல ஒருவன் வாசிப்பிலும் தியானஞ்செய்வதிலும், மேலும் என்னவேலை செய்வது, அதை எப்படிச் செய்வது, என்பதை சிந்திப்பதிலும், காலத்தைக் கழிக்கவேண்டியிருக்கிறது. பகுத்தறிவுப் படலத்தில் மாஸ்டர் இதைப்பற்றி சொல்லி யிருக்கிறார். அவருடைய போதனை ஒவ்வொன்றும் சிஷ்யனை நடுநிலை மார்க்கத்திற்கு திரும்பி திரும்பி போகச்செய்கின்றது. ஏதோ ஒரு புத்திமதியில் வரம்பை கடந்து போவானானாலும் அவன் மறுபடியும் திரும்பிவருவான். சிறந்த கப்பல்போகும் வழி ஒரே நேர் வழியல்ல. மற்றப்படி ஆயிரம் கணக்கான இந்தப்புறமும்,அந்தப்புறமும் ஒதுங்கி ஒதுங்கிப் போகும்

சிறு சிறு வளைவுகளால் சேர்ந்தது என்று சொல்லியிருக்கிறது. சிஷியனுடைய வாழ்க்கையும் அப்படித்தான். கப்பலில் மேல்தள பாலத் தண்டை நிற்கும் காப்டன்போல மாஸ்டர் இருந்து, சிஷியனுக்கு தன் (கப்பலை)வழியில் நடப்பதற்கும், அந்த நேர் பாதைக்கு தன்னால் கூடியளவு அருகிலிருப்பதற்கும், ஒத்தாசையாக வானத்தின் நக்ஷத் திரத்தைக் காட்டுகின்றார். ஏதோ ஒருநல்ல கருத்தை கைப்பிடித்துக் கொண்டிருப்பவர்கள் அநேகரைக் காண்கிறோம். பிறகு அது அவர்களைப்பிடித்துஅவர்களின்பேரில்சாகிறபரியந்தம்சவாரிசெய்கின்றது.

வேறு நூதன உலக விஷயங்களை எடுத்து மேல் போட்டுக் கொள்ளாதே என்று மாஸ்டர் தனது சிஷியனுக்கு சொல்லுகிறார். மாஸ்டருக்கு எந்த இடத்திலும், எவ்வகையிலும் அவருடைய வேலைக்காக பிரதிக்ஞை செய்தவன் எப்போதும் சேவகஞ்செய்ய சித்தமாயிருக்க வேண்டுமென்கிற முக்கிய கருத்தை கவனிக்க வேண்டியது. என்னுடைய சொந்த அநுபவத்திலிருந்து தைக்கும்படியான உதாரணத்தை உங்களுக்கு கொடுக்க முடியும். நான சிறியவளாயிருக்கும்போது என்னிடமிருந்து என்னிஷ்டத்திற்கு விரோதமாகவே எனது குழந்தைகளை எடுத்து போயினர். சட்டத்திற்கு அநுசரணையான வழியோடு எல்லாவிதத்திலும் குழந்தையைபிரித்ததைப்பற்றி வியாஜ்ஜியஞ்செய்தேன்.என்றாலும் தோற்றுப்போனேன.சட்டமானது எனது பாசத்தை உடைத்து குழந்தையை ஆதரிக்கவேண்டியதென்று தாயாருக்கிருந்த உரிமையை என்னிடமிருந்து நீக்கிவிட்டது. எனது குமாரத்திக்கு வர சுதந்திரம் வந்தவுடன் என்னிடம் வந்தாள். பத்து வருடம் அவளை பார்த்ததுமில்லை. கடிதம் எழுதினதுமில்லை. என்றாலும் என்னுடைய செல்வாக்கின் பிடிப்பு இருந்ததால் அவள் நேராக என்னிடம் வந்தாள்.அப்போது நான் மாடம்பிளாவட்ஸ்கி அம்மையாரோடு வசித்துக்கொண்டிருந்தேன். அவர் எனக்கு "கர்மம் உனக்காக உடைத்த பற்றை (பாசத்தை) மறுபடியும் கட்டாதே" என்று எச்சரிக்கை கொடுத்தார். நான மாஸ்டர்களுக்கு சத்தியம்செய்து கொடுத்த பிறகு என்னுடைய பழய வாழ்க்கையை எடுத்திருப்பேனானால் நான தப்பிதஞ்செய்திருப்பேன். வாஸ்தவத்தில் நான் எனது பெண்ணை கவனிக்கக் கூடாதென்று அதில்

அருத்தமில்லை. அவள் கலியாணஞ்செய்து கொள்ளுகிற வரையில் வந்து எங்களுடன் சேர்ந்திருந்தாள். என்றாலும் அவளைக்காப்பாற்று வது இரண்டாவதே தவிர முதல்வேலை அல்ல (முதல் மாஸ்டருடைய வேலை.)

நீ நிறைவேற்றவேண்டிய தொழில்களுக்கு நீ தான் உத்தரவாதியே தவிர மற்றையாரும் அல்ல. நீ உனது மாஸ்டருக்கு உத்தரவாதியே தவிர மற்றெவருக்குமல்ல. நீ நினைக்காத வேலையை ஜனங்கள் உன்னுடைய தென நினைத்துக்கொண்டு அவைகளை செய்யும்படி உன்னை பலவந்தம் செய்வார்களானால் நீ மரியாதையுடன், கண்டிப்பாய் அவர்களுக்கு ஒத்துக்கொள்ளாதே. அதை நீயே தீர்மானிக்கவேண்டியது. நீ செய்வது சரியாயிருக்கலாம் அல்லது பிழையாயிருக்கலாம்; பிழையாயிருந்தால் நீ அவஸ்தைப்படுவாய் என்றாலும் தீர்மானம் உனனுடையதாயிருக்க வேண்டியது. தனக்காகவும், தனனுடைய மாஸ்டர்களுக்காகவும் ஒருவனுக்கிருக்கும் உத்தரவாதத்தில் எவரும் தலையிடப்படாது. உன்னுடைய மாஸ்டருக்கு நீ உத்தரவாதி. அவருக்காக உன்னுடைய சாதாரண வேலைகளை மற்றவர்களைவிட நல்லதாய்ச் செய்ய வேண்டியது.

C. W. L:—குப்தமார்க்கத்திலுள்ள சாதாரண வேலையை நன்றாய்செய்யவேண்டியது எனும் கருத்து பழைய மதங்களில் நன்றாய் தெரிந்திருந்தது சாதாரணமாக **புத்தபகவா**னுகி வந்த இளவரசசித்**தார்த்த**ருடைய சரிதையில் அவர் படிப்பதிலும் தியானஞ்செய்வதிலும் ஊக்கமாயிருந்ததாகச் சொல்லி இருக்கிறது. என்றாலும் சுயம்வரத்தில் அநேக வித தேகபராக்கிரமத்தைக்காட்டி, தனது பத்தினியைப் பெறவேண்டி வந்தபோது, அவர் அவைகளையும் இன்னும் மேலானவைகளையும் இஷ்டப்படிக் காட்டினார். பகவத்கீதையில் யோகம்என்பதுசெய்யும் திறமை என்று சொல்லியிருக்கின்றது. சரியானதை ஜாக்கிரதையோடும் சாமர்த்தியத்தோடும் மரியாதையுடனும் செய்வது. ஆகையால் மாஸ்டர்களுடைய சிஷ்யர்கள் தங்களுடைய வாழ்க்கையில் நடு நிலையை கற்கவேண்டும். கீழானவைகளை எப்போது அப்புறப்படுத்தி பத்திரமாய் வைத்திருக்கவேண்டும்; எப்போது வைக்கக்கூடாது என்பதை தெரிந்திருக்கவேண்டியது.

மாஸ்டர்களுடைய சேவகத்திற்கு தன்னையும் தன்னுடைய காலத்தையும், தன்பலத்தையும் ஒப்புவித்தவன் வாஸ்தவத்தில் அவருடைய வேலையாயில்லாத யாதொரு புதிய வேலையை எடுத்துமேல் போட்டுக்கொள்ளக்கூடாது. தன்னுடையதல்லாத தொழில்களைச்செய்ய மற்றவர்கள் இவனை பலவந்தப்படுத்த விடப்படாது. உதாரணமாக ஜனங்கள் சில சமயங்களில் சொசைடி மெம்பர்களை அநேக தேசாசார காரியங்களில் வரும்படி எதிர்பார்த்திருப்பார்கள் என்று எனக்குத் தெரிகிறது ஒரு அங்கத்தினர் சிநேகிதத்திற்காக நியாயமானளவு கொஞ்சம் நேரம் கழிக்க இஷ்டப்படுகிறேன என்று சொல்லக்கூடும். ஆனால் அவன் சொசைடிக்காக எடுத்த வேலையைச் செய்ய அவனுடைய காலத்தை பெரும்பாகம் கழிக்க அவனுக்கு நியாயமிருக்கின்றது.

வேலையைப்பற்றிய இப்போதனைகள், ஆல்கியூனிக்கு அப்போது அடையாற்றிலிருந்த வாழ்க்கையைக் குறித்து மாஸ்டர் முக்கியமாய் போதித்தவைகள். உதாரணமாக ஒரு விசேஷ சந்தர்ப்பத்தில் அவருக்கு தூரபந்துவின சிராத்தசடங்கைச் செய்ய நாள்முழுவதும் பலவந்தஞ் செய்யப்பட்டது. இது சங்கதி மாஸ்டருக்கு அறிக்கை செய்தபோது அவர் சொன்னதாவது. ஆம் அக்குடும்பத்திலிருக்கும் மற்றவர்கள் திடுக்கிட்டுப்போகாமலும் அல்லது தன்னை கஷ்டப்படுத்திக்கொள்ளாமலும் இந்திந்த காலத்தில் ஒருமணி காலம்வரையில்போகலாம். ஆனால் அந்தக்காலத்தில் நீ தெரியாத (அருத்தமாகாத) ஒன்றையும் உச்சரிக்காதே. குருட்டுத்தனமாய் புரோகிதருக்குப் பின்னோடே ஒருபோதும் சொல்லாதே. மேலும் நீயாகசெய்யக்கூடியதை மற்றவர்களைச் செய்யவிடாதே. அதாவது சடங்குகளையும் ஆசீர்வாதமும் செய்யும் வகையில் மற்றவர்களைச் செய்யவிடாதே.



## 20-வது அத்தியாயம்

### பொறுமை (விடல்).

"எல்லோரிடத்திலும் பொறுமை நிறைந்த ஸ்மரணையோடு நீ இருக்கவேண்டும்; உன் சொந்த மதத்தைப்போலவே மற்ற மதங்களின் கொள்கைகளில், அன்பார்ந்த அபிமானம் வைக்க வேண்டும். ஏனெனில், உன்னுடைய மதம் எப்படியோ அப்படியே அவர்களுடைய மதமும் மேலான நிலையிற் சேர்ப்பிக்கு மோர்வழி. எல்லாருக்கும் உதவி செய்ய நீ எல்லாருடைய கொள்கைகளை அறிந்திருக்கவேண்டும்."

A. B.:—தற்காலத்தில் பெரும்பாலும் அதிகமாய்ப் பேசிக் கொண்டே அநுபவத்திற்கு சற்றும் கொண்டுவராத ஒழுக்கங்களில் பொறுமை எனபது ஒன்று. மேலும் பெறுவதற்கு மிக கஷ்டமானது இது. ஏனெனில் ஒரு கொள்கையை உறுதியாய்ப் பிடித்து பெருமையாக கொண்டிருக்கிற ஜனங்கள் சுபாவமாகவே மற்றவர்களை நம்பும்படிச் செய்யும் தன்மையோடிருக்கிறார்கள். அந்த ஆக்கிரமத்தால் எல்லாவித மதப் போர்களும், துவேஷத் துன்பங்களும், பொதுப்படையாகவும், தனிப்படையாகவும்,விளைந்து வருகின்றன. ஆனல் அவ்வித அக்கிரம தன்மையானது அசட்டைத் தனத்தோடு ரோஷமற்ற விரக்தியோடிருப்பதைவிட மேலானது. விரக்தியை பொறுமையோடு சேர்த்து பலகாலும் குழப்பி வருகின்றது விரக்தி பொறுமையல்ல: அதை அதாக ஒருபோதும் தவறி எடுக்கப்படாது.

தற்காலத்தில் மதவிஷயமாக இராஜாங்க தண்டனை கொஞ்சமேனுமில்லை. என்றாலும் இன்னும் தேசாசாரங்களிலும், குடும்பங்களிலும் மதத்துவேஷ துன்பங்கள் இருக்கின்றன. உலகாயதர்கள் அதிகாரத்திலிருக்கும் சில தேசங்களில் மதத்தை கண்டிக்கும் இராஜ தண்டனை இருக்கின்றது. உலகாயதர்களை முன்காலத்தில் மதஸ்தர்

கள் எவ்வளவோ வேதனை செய்திருப்பதால் அவர்களுக்குபழிக்குப் பழி வாங்கும் மயக்கம் பலமாயிருக்கின்றது. என்றாலும் அவர்களும் நிச்சயமாகவே தங்களுடைய கொள்கைக்கு நேர்விரோதமாகச் செய்கின்றனர். அவர்களுக்கு மதாபிமானிகள் செய்த கொடுஞ்செயலின் பிரதிபலனாக மாத்திரம் இருந்து சீக்கிரத்தில் நின்று விடும் என்று நினைக்கிறேன்.

வேதனைச் செய்யவேண்டுமென்கிற எண்ணத்தைக்கொடுக்கும் கருத்து இன்னும் உலகில் அதிகமாயிருக்கின்றது. சில சமயங்களில் இந்தியாவிலிருப்பதைப்போல, கலகங்களும், சச்சரவுகளும் வராதிருக்கும்படி இராஜ அதிகாரத்தால் அதை தணிக்க வேண்டியிருக்கிறது. அநேக மதங்கள் இருக்கும் தேசங்களில், மதஸ்தர்கள் ஒருவருக்கொருவர், சரிவர சகித்துக்கொண்டு இருப்பது பெரும்பாலும் பரஸ்பர பயத்தைக்கொண்டே. அந்தப்படிக்கிருக்கும் பொறுமையானது எறக்குறைய அல்பமான ஏதோ ஒரு நோக்கத்தைக்கொண்டு சாதாரணமாய் ஏற்பட்டு வருகின்றது.

ஒவ்வொருவனுடைய ஆன்மா தனக்குரிய மார்க்கத்தைக் கண்டு கொள்கின்றது, என்பதை கவனிப்பதால் வரும் அன்பு குப்தமானுக்களுக்கிருக்க வேண்டும். இதுதான் சரியான நோக்கம். இதை கவனிக்காத எதுவானாலும் அது பொறுமையை விசாலமான ஒழுக்கமாக்காது. மேலானதைத்தேட ஒவ்வொருவனுக்கும் உகந்த வழி இருப்பதை நாம் கவனித்து அதை அநுசரிக்க அவனைத் தடையில்லாது விடவேண்டியது. ஒருவனை, உன்னுடைய மதத்திற்கு இழுக்க எத்தனிக்கப்படாது என்பது மாத்திரமல்ல, மற்று அவன் பேரில் உன்னுடைய நியாயங்களையும் அபிப்பிராயங்களையும் போட்டு பலவந்தஞ்செய்ய எத்தனிக்கக் கூடாதென்றும், அவனுக்கு உதவி தருவதாய் யோசித்து அவன் வைத்திருக்கும் கொள்கைகளை உடைக்க எத்தனிக்கக்கூடாதென்றும், அதனுடைய கருத்து. அவ்விதபூரணப் பொறுமையைத்தான் நீ நோக்கவேண்டியதாக யிருக்கின்றது. உலகினர் அநேகமாய் கருதும் பொறுமைக்கும்—அதாவது மதவிஷயங்கள் அதி முக்கியமானவையல்லவென்றும், ஆனால் அவைகள் ஜனங்களை சும்மா ஒரு கிரமமாக வைக்

கும் ஒருவகை போலீஸ் பந்தோபஸ்துபோலிருந்து உபயோகப்படு கின்றது என்கிற அரைகுறை அருவருப்புக்கும்—உண்மையான பொறுமைக்கும் துருவதிசை வடகோடிக்கும் தெனகோடிக்கும் உள்ள அவ்வளவு வித்தியாசமிருக்கின்றது. ஆனால் ஒருவனுடைய மதம் அவனுக்கு பூஜிக்கத்தக்கதாயிருப்பதால் உனக்கும் அதுபூஜிக்கத் தக்கதாயிருக்கவேண்டும் இந்த நோக்கத்தை விருத்திக்கு அதிகமாக கொண்டுவராதவன் எவனும் வெள்ளியம்பல சகோதர சங்கத்தில் ஏற்றுக்கொள்ளப்பட மாட்டான்.

C. W. L.:—ரோம் மகாராஜ்ஜியத்திற்கு பிறகு,ஒருக்கால் இக் காலத்தில்தான் பொறுமை அதிகமாயிருக்கின்றது. இது, அப் போது இருந்ததைப்போல பெரும்பாலுமிருக்கின்றது. ஆதி கிருஸ் தவர்களை ரோமன் தேசத்தார் கடுமையாக நடத்தினதாக ஆச்சரிய மான விஷயங்களை நாம் கேட்கின்றோம். கருத்தோடு ஆராய்ச்சி செய்ததில், சொல்லிவரும் பெருத்த வதைகள் எதுவும் நடக்கவே யில்லை என்றுதெரிகிறது.ஆனால் கிருஸ்தவர்கள்அடிக்கடி தாங்களே தொந்தரவில் சிக்கிக்கொண்டது வாஸ்தவந்தான். அப்போதிருந்த நிலைமை ஏதோ ஒருவிதமான இரக்கமில்லாத முரட்டுத்தனமாக இல்லைஎன்று நான் சொல்லவரவில்லை ஆனால்பூர்வீக கிருஸ்தவர்கள் இராஜ வெறுப்புடனிருந்தனர்; அதிகாரஸ்தருடன் எதிர்த்தது அவர்களுடைய மதத்தை குறித்தேயல்ல; மற்று அவர்கள் வாயா லும், செய்கையினாலும் சங்கடப்படுத்திக் கொண்டனர். ஆதி கிருஸ் தவர்கள் போதித்த சகோதரபாவம் உரோமர்களுக்கு பிடிக்கவில்லை. சில சந்தர்ப்பங்களில் ராஜ விசுவாசத்தைக் காட்டும் சிற்சிறு மரி யாதைகளை கிருஸ்தவர்கள் செய்யவில்லை; இவர்கள் பூஜை மேடை யில் ஒரு விரற்பிடி தூபத்தூள் போடவாவது சக்கரவர்த்தியின் பெய ரைச்சொல்லி ஒரு துளி திராக்ஷ ரசத்தை ஊற்றவாவது செய்ய வில்லை. இச்செய்கை லண்டன் நகரத்தில் இராஜன் போகும் போது அவருக்கு தொப்பி எடுத்து மரியாதை செய்வதுபோ லிருந் தது. மற்ற தேசங்களைவிட ரோம் ராஜ்ஜியத்தில் மதங்களைப்பற்றி உன்னதமான பொறுமை இருந்தது. பூஜிக்கும் கடவுள் எப்பேர்ப் பட்டது என்பதை அவர்கள் கவனிக்கவில்லை. ஏனெனில் அவர்கள் கடவுள் இருப்பதாக நினைக்கவில்லை. ஓர் சபாமண்டபத்தில் சர்வ

கொள்கைகளுக்குரிய தெய்வங்களை வைத்திருந்தார்கள். அவ்விடத்தில் ஒவ்வொருகொள்கைக்கும் ஓர் கோவில் கட்டியிருந்தார்கள்; கிருஸ்துவை பூஜிப்பதாக தெரிந்துகொண்ட உடனே அவருக்காகவும் ஓர் சிலையை நாட்டினார்கள். அவர்களுடைய பொறுமை அசட்டையான தன்மையாயிருந்தது.

இப்போது பழையகாலத்தில் ரோமன் தேசத்தாராயிருந்தஅநேகர் ஆங்கில ஜாதியில் பிறந்திருக்கின்றார்கள். ஆகையால் அநேகவித கொள்கைகளுக்கு பொறுமையோடு இருப்பவர்கள் அநேகரிருக்கின்றார்கள். ஏனெனில் இவர்களுக்கு யாதொன்றிலும் பிடித்தமில்லை. இவர்கள் மதம் என்பது, ஸ்திரீகளை மகிழ்ப்படுத்தும் ஓர் சுகமான கதையென்றும், ஆனால் வாஸ்தவத்தில் மனிதனுக்கு அது ஒரு பிரமாதமானவிஷயமல்லவென்றும் எண்ணுகிறார்கள். நாம் நோக்குவது அவ்விதமான பொறுமையல்ல. மற்றவர்களுடைய கொள்கைகளும் மேலான பதவிக்கு கொண்டுபோகும் வழிகளென்று, அறிவதனால் நமக்கு பொறுமை வரவேண்டும். தன்னுடைய மதத்திலில்லாதவர்களுடைய கோயிலுக்காவது சர்ச்சுக்காவது ஒருவன போனால் உண்மையில் பொறுமையுள்ளவன, அவ்விடத்துள்ள வழக்கத்திற்கு ஒத்திருப்பான். அது வழக்கம் எனபதினால் மாத்திரமல்ல மற்று தன்னைவிட வேறாயிருப்பவர்களிடத்திலும் தன்னுடையதைவிட வேறான மதத்திலிருப்பவர்களிடத்திலும் மரியாதையோடிருப்பான். சர்ச்சுக்கு போய் பிறகு சந்நிதிமுன வணங்கமாட்டேன் என்கிறவர்கள் சிலரிருக்கிறார்கள். மேலும் அவர்கள் முதுகை அங்கே காட்டி வேண்டுமென்றே திரும்புகிறார்கள். மகம்மதிய மஜீதில் பாதரக்ஷைகளை கழட்டாமல் பிரவேசிக்க எத்தனிப்பவர்களையும் எனக்குத் தெரியும்; மற்ற மதஸ்தர்களுடைய கோவிலில் ஒருவன தக்கபடி மரியாதையுடன நடந்து அவவிடமுள்ள பக்தர்களுடைய மனதை வருத்தப்படுத்தாதபடி நடக்க சித்தமாயில்லாதவனுக்கு கோயிலிலாவது, சர்ச்சிலாவது போகவேண்டிய காரியமில்லை. காதொலிக் சர்ச்சு சந்நதியினமுன் மண்டிபோடுவது தப்பிதமெனறு நீ நினைப்பாயானால் நீ எப்போதும் வெளியிலிருக்கலாம். பாதரக்ஷயை கழட்டுவது கொடியது என்று நீ எண்ணுவாயானால் நீ மஜீதிக்கு போகக்கூடாது.

மனிதரெல்லாம் ஏகமான ஒரே கடவுளின் வெளித்தோற்றம். ஆகையால் மற்றவன் பக்தியோடு பாராட்டுவதை மரியாதைப்படுத்த வேண்டி யிருக்கின்றது. பலகாலும் குழந்தை விளையாட்டுப்போலுள்ள வெளித்தோற்றத்தைக் காணலாம். என்றாலும் நல்லவன் எவனும் அவைகளை இகழவாவது அதற்கு விரோதமாக ஜனங்களை தூண்டவாவது செய்யமாட்டான். ஏனெனில் தேர்ச்சியில் குறைவாயுள்ளவனுடைய அறிவானது அதிகமாய்த் தேறியுள்ளவனுடைய நோக்கத்தின்படி இருக்கமுடியாது. பொறுமையானது பழையகாலத்து ரோம் தேசத்தார் சொன்னதுபோல "நான் மனிதனானபடியால் மனுஷ்யத்தனமாயிருப்பது யாதும் எனக்கு புதுமையல்ல" என்று நாம் சொல்லும்படியும் மற்றவனுடைய நோக்கத்தை தெரிந்துகொள்ள எத்தனிக்கும்படியும் தூண்டும். அப்படிச் செய்வது நமக்கு அப்பியாசமாயிருந்தால் கூடிய சீக்கிரத்தில் உண்மையென்பதின் கிரணங்கள் மனிதனுடைய மனதிலிருந்து பிரதிபிம்பித்து போகும் வழிகள் அநேகம் இருக்கின்றன என்று நமக்குக் காட்டும். எல்லா விஷயங்களையும் ஒரே விதத்தில் செய்து வந்தால் அது உற்சாகமில்லாத வகையாயிருக்கும் ஒவ்வொருநாளும் அந்தந்த வேளையில் அதேவழியில் ஒவ்வொன்றையும் செய்யும் சிறைச்சாலையைப்போலிருக்கும்.

உதாரணமாக நீபார்க்கும் காதொலிக், பிராடஸ்டெண்டு ஜனங்கள மனதிலிருக்கும் பிரிவைப்போல விரிவான பிரிவுகள் சில இருக்கின்றன. இவர்கள் ஒவ்வொருவரும் கிருஸ்துமதத்தை தங்களுடைய கொள்கையின் கருத்தைக்கொண்டு தழுவுகின்றனர். இவ்விருதரத்தாரில் அநேகர் மற்ற தரத்தாரை முற்றிலும் அறிந்து கொள்ள முடியவில்லை. காதொலிக் இனத்தார் தமது ஆராதனை முறையில் அநேகவித சடங்குகள் இருக்கவேண்டிய தெனறும். இவைகளை தான் பூஜிக்கும் கடவுளுக்கு மகிமைப்படுத்த ஒவ்வொரு விதத்திலும் நேர்த்தியாய்ச் செய்ய வேண்டுமென்றும், மேலும் ஜனங்களுக்கு பக்திஊட்டும்படி செய்யவேண்டுமெனகிறகருத்தோடு இருக்கிறார்கள். ஆராதனை சடங்குகள், சூழ்ந்திருக்கும் சிங்காரம் இவையெல்லாம் பக்தி பாராட்டுவதற்கு மெத்த உதவுகின்றன என்று வெகு கூர்மையாய் உணருகிறார்கள். மற்ற தரத்திலிருக்

கும் பிராடஸ்டெண்டோ, இவை எல்லாம் உள்ளே நாடியிருக்கும் மனதைக் கவரி வெளிக்கு இழுப்பதனுல்கொடியவைஎன்றும் பயப் படத்தக்கவை என்றும் நினைக்கிருர்கள்.ஒருக்கால் இந்தசடங்குகளை எல்லாம் கவனித்தால் அந்தரங்க விஷயங்களை கவனித்திருக்கமுடி யாதென்று பிராடஸ்டென்டு மனதில்படுகின்றது. காதொலிக்கைப் போல் மனதுடையவனுக்கு எது மிக பக்தியாயிருக்கின்றதோ அது இவனுக்கு உள்ளிருக்கும் பக்தியைக் கலேக்கும் தடையாகவும் தொந் தரவாகவும் இருக்கின்றது.

முன்னிலேயில் ஒன்றுமில்லாது தியானமாய் பூஜிக்கும்போது அவர்களுடைய பக்தியும் வாஞ்சையும் திருப்தியில்லாததாகவும் அநிச்சயமானதாகவும், அறிகின்றவர்கள் அநேகர் இருக்கின்றூர்கள். அவர்களுக்கு வெளி ஆடம்பரிக்கும் சடங்குகள், சௌரியமும் உத வியும் அதிகமாய்த் தருகின்றன. அப்படியிருக்க அவைகளை ஏன் அவர்கள் எடுக்கக்கூடாது? சடங்கு, விக்கிரகம், படம் முதலிய பூலோக சின்னங்களில் தீவிரதிருப்தியும் அருள் உற்சாகமும் காண் பவர்கள் மானிடர்களில் பெரியவகுப்பாயிருக்கும் எழுவகை கிரணங் கள் ஒன்றில் சேர்ந்தவர்கள். மனிதப்பிரயத்தினத்தின்படி கடவுளின அடிகளுக்கு கொண்டுபோய்விடும் எழு வழிகளாகிய ஒன்றில் சேர்ந் தவர்கள். இவைகள் யாவையும் இச்சியாதவர்களும்,இவைகளை கஷ்ட மென்றும் மனதைக் கலேக்கத்தக்கவையென்றும் காண்பவர்கள்,இவர் களுக்குரிய வேறு வழியில் போய்க் கொண்டிருப்பவர்கள். அவர்கள் அதில் சுகிக்கட்டும். நாமேன் அவர்களை தொந்தரவு படுத்தவேண் டும்.

நம்மில் ஒவ்வொருவருக்கும் பேசுவதற்குப் பிறந்த தாய்ப் பாஷை யொன்று இருப்பதைப்போல பூஜிப்பதற்கு மதபாஷையென்று சொல்லும்படியான மதம் ஒன்றுண்டு—அதாவது அதன் வழி யாய் அவனுடைய எண்ணங்களும், உணர்ச்சிகளும் மனோ ஊக்கங் களும் சுயமாகவே லேசாகவிளக்கிக் காட்டும். பிரான்சுக்காரன் ஒருவனே அவனது பாஷை வித்தியாசமாயிருப்பதால் அவனே என ன்ஞ்செய்வது முழுமுட்டாள் தனம். ஒருவனுடைய மதம் நம்மு டையதை விட வேருகயிருப்பதால் அவனைப் பழிப்பதும் அந்தப் படிக்கே மூடத்தனம். பிரான்சுக்காரன் "வீடு,"என்பதற்கு "மெய்

ஸன்" என்று சொல்கிறான். இரண்டும் ஒன்றையே குறிக்கிறது. ஒன்றைவிட மற்றொன்று நல்லதென்று தர்க்கமாடுவது மதியீனம். நெப்போலியன் சண்டைசெய்யுங் காலத்தில் ஒரு கிழவியைப்பற்றி ஓர் கதை உண்டு. இவள் ஆங்கிலர் ஜயமடைய வேண்டுமென்று பிரார்த்தித்து வந்தாள். அப்போது சிலர் வந்து "அக்கரையிலுள்ள பிரான்சுக்காரர்களும் ஜயமடைய வேண்டுமென்று பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறார்கள் என்று ஞாபகப்படுத்தினதற்கு, அவள் சொன்னதாவது "அதனால் என்ன பாதகம்! அவர்கள் பேசும் மதியீனவார்த்தையை கடவுள் எப்படி அறிந்துகொள்வார்?" என்றாளாம்.

கடவுள் அடிகளில் சேர தனக்கு மெத்த நல்லதென்று தோன்றும் நேர்வழியில் ஏன் ஒவ்வொருவனும போகக்கூடாது என்பதற்கு தக்க காரணம் ஒன்றும் இல்லை. சாந்தமும், சமாதானமும், பெற வேண்டியதற்கு காதொலிக், பிராடஸ்டென்டு ஆகிய இவ்விருவரும் இவ்வுண்மையைத் தெரிந்திருக்கவேண்டும், ஒவவொருவனும் "நான் என் வழியில்போக பிரியப்படுகின்றேன்; ஆனால் இவவித உரிமை மற்றவனுக்கும் இருக்கவேண்டும்; மற்றவனும் நல்லதாக அவனுக்குத் தெரிந்த வழியை எடுக்கவேண்டும் என்பது எனக்கு மனப்பூரணமாக இஷ்டம்" என்று சொல்லவேண்டும். இதில் கேட்கவேண்டியது அதிகமில்லை. என்றாலும் ஒத்துவருபவர் வெகு சிலர். ஒவவொருவனும் தனக்கு உன்னதமாயிருப்பதை மற்றவருக்கும் உன்னதமானது என்று நினைக்கிறான். பெருந்தன்மையான மனதுடையோர், அநேக வழிகள் இருப்பதையும், எல்லாம் ஒரே சரியாகவே மலையுச்சிக்கு கொண்டுபோவதையும், உன்னதமான ஊக்கம் கொடுப்பது எதுவோ அதைக் கைக்கொள்ள ஒவ்வொருவருக்கும் சுதந்திரம் இருக்கவேண்டும் என்று காண்கிறார்கள்.

ஒருவிதமாய் பக்தி பாராட்டும் தன்மையை நானே அறியக்கூடவில்லை; அதாவது சிற்றின்ப செய்யுள்களிலும், கதைகளிலும், இருக்கும் அநேகவித காதல்கொள்ளும்பதங்களைக்கொண்டுகடவுளைக் கூவிக் கொண்டாடும் பக்திபாராட்டுதல். அது மனதார நல்ல நோக்கத்தோடு செய்கிறார்கள் என்று எனக்குத் தெரிந்தபோதிலும், என்னை திடுக்கென்று எடுத்து போடுகிறது. வணக்கமின்மையாகவும் மரியாதை

யற்றதாகவும் எனக்குப் படுகிறது. வெகுவாய் அதில் இஷ்டப்படுகிற வர்கள் என்னை "அவமதிக்கிறான், சொல்லத் தெரியாதவன்" என நினைக்கக்கூடும். ஏனெனில் ஒவ்வொன்றையும் பொது நோக்கத் தோடு பார்த்து அதைப்பற்றி விசாரித்துத் தெரிந்துகொள்ள முயற் சிப்பது எனது தன்மை

ஜனங்களுக்கு ஒவ்வொரு மதத்திலும் உயர்ந்தபடியில் எழுதி யிருக்கும் பக்திநூல்கள் அதிசயிக்கததக்கதாகவே இப்படித்தான் இருக் கின்றன. உதாரணமாக ரோமன் காதோலிக்காருக்கிருக்கும் விஷ யங்களை ஸ்ரீ ராமானுஜாசாரியாரை அனுசரிப்பவர்களுக்கிருப்பவை களோடு ஒத்துப்பார்த்தால் மிக ஒத்திருப்பதை ஒருவன பார்க்கலாம். நல்ல கிருஸ்தவனுடைய வாழ்க்கையானது நல்ல ஹிந்து, பௌத் தன் முகம்மதியன் அல்லது உண்மையில் எந்த மதத்திலுள்ள நல்ல வனுடையதைப்போல் தான இருக்கிறது. அதே சீல ஒழுக்கங்களை எல்லோரும் பழகுகிறார்கள். அதே நோக்கத்தோடு முயற்சிக்கின்றார் கள். அதே தீங்குகளை தவிர்க்கின்றார்கள்.

> "ஆனாலிப்பூரண பொறுமையை அடைவ
> தற்கு உன்னிடத்திலுள்ள பிடிவாதத்தையும்
> மூட நம்பிக்கையையும் நீ முதலில் விட்டொழிக்க
> வேண்டும்."

A. B.:—பிடிவாதமுடையவன் தனனுடைய அபிப்பிராயங் களைத் தவிர மற்ற எவருடையதையும் கவனிக்காதவன். மிகப் பிடி வாதமுள்ள சங்கத்தைச் சேர்ந்த ஒரு நல்ல பெருமாட்டி, "உன் சொந்தமதக் கருத்துடன் எழுதாத எந்தப் புத்தகத்தையும் படிக் கக்கூடாது" என்று எனக்குச் சொன்னாள். இதுதான் பிடிவாத முடையவனுடைய நிலே. அதாவது மற்ற நோக்கத்தைப்படிக்காதே, அது உனனுடையதைக் கலைத்துவிடும். உண்மைப்பொருளைத் தேடு கிறவனுடைய நோக்கத்திற்கு இது எதிரிடையானது. மேலானவாழ்க் கையை விரும்புகிறவனுக்கு விரோதமானது. குப்தன், ஒரு விஷ யத்திலிருக்கும் உண்மையானது மானிடமனதில் புகுந்து ஒவ்வொரு வரிடமிருந்துவித வித சாய்வுடன் வளைந்து வெளிவருவதைப் பார்க் கவும், அதைப்பற்றியுள்ள எல்லா கருத்துகளை, வாசிக்கவும் எத்தனிக்

கின்றான். நீ உண்மையை அறியவேண்டுமானால் வெவ்வேறு கோட்பாடுகளின் கருத்துகளையும் அபிப்பிராயங்களையும் வாசித்த பிறகு அவைகளிலிருக்கும் உண்மையை மாத்திரம் கொஞ்சமோ அதிகமோ அதைக் கிரகிக்கவேண்டியது.

ஜனங்களுடைய விபரீத(மூட) கொள்கைகளைத்தெரிந்துகொள்கிறது நல்லது. ஏனெனில் உபநிடதம் "உண்மைதான் ஜெயிக்கும். பொய் ஜெயிக்காது". என்று சொல்லுகிறது. விபரீத கொள்கைகளிலிருக்கும் கிஞ்சித உண்மையால் அவைகளுக்குப்பலம் வருகிறது. அந்த கிஞ்சித உண்மையை நீ கண்டுபிடிக்கவேண்டும் பிடிவாதியானவன் வாஸ்தவத்தில் அதிலிருக்கும் பொய்யை மாத்திரம் பார்ப்பான்; ஆனால் நீ எல்லா மதங்களைப்பற்றி ஏதோ கொஞ்சம் தெரிந்திருக்க வேண்டும். ஆனால் அதை பாதிரிமார்கள் படிப்பது போலல்லாமல், சமரசமாகவாசிக்க வேண்டும். இவ்விதமே தேசீய, இராஜரீக விஷயங்களிலும் தொடரவேண்டியது.

நீ உன்னிடத்திலிருக்கும் விபரீதத்தை தொலைத்துவிட வேண்டும். இது அன்பிற்கு விரோதமாய்ப்பாபம்செய்வதால் இதை உலகிலிருக்கும் மூன்று மகாபாதங்களில் ஒன்று என்று இப்புத்தகத்தில்முன்னுக்கு சொல்லியிருக்கிறது. மதக் கொள்கையும் விபரீதமும் சேர்ந்து உலகில் மெத்த குழப்பம் உண்டாக்கியிருப்பதால், அவைகளை நம்மனதில் வெகு தெளிவான வகையுடன் பிரிக்கவேண்டியது அவசியம். நான் அநேகமாய்க்காட்டும் அதன் இலக்ஷணக் குறிப்பு யாதெனில்—இது அதன் கருத்து முழுவதையும் விளக்காது.—முக்கிய மல்லாததை முக்கியமாகக் கொள்வது. ஜனங்கள் மதவாதங்களில் ஏதோ ஓர் முக்கியமில்லாத விஷயத்தைப்பற்றி சச்சரவு செய்கிறார்கள். ஒவ்வொரு தரத்தாரும் உண்மையின் தவறான அபிப்பிராயங்களை எடுத்துப் பேசுவது வழக்கம்

விபரீதத்திலிருக்கும் இன்னொரு கருத்து யாதெனில் விவேகமில்லாத நம்பிக்கை. அதாவது உண்மைகளை நம்பவேண்டியதற்கு நல்ல காரணங்களை அறியாமலே ஜனங்கள் நம்பிக்கொண்டிருப்பதால் அவைகள் விபரீதக்கொள்கைகள். ஒரு விஷயம், உன்னுடைய புத்திக்கும் யூகத்திற்கும் ஒத்து அதை நீ, எனக்குத்தெரியும் என்று

சொல்லும் வகையிலிருந்தால் மாத்திரமே, நம்பத்தக்கது என்று **புத்த பகவான்** சொன்னார். இதைக்கொண்டு ஜனங்களுடைய மதக் கொள்கையை சோதிப்போமானால் அவைகளின் பெரும்பாகம் விபரீதம் என்கிற தலைப்பில் தான் வைக்கவரும். இது அவர்களுக்குப் பாதகமில்லை. ஆனால் மார்க்கத்தை சேரப் பிரயத்தினப் படுபவர்கள், புத்திக்கும், யூகத்திற்கும், ஒத்து வராதவைகளை எல்லாம் ஒருபுறம் தற்காலம் ஒதுக்கி வைக்கவேண்டியது. உண்மையை பார்த்தவுடன் தெரிந்துகொள்ளும் உயர்ந்த அறிவு உன்னிடத்திலிருக்கிறது; அது மலர்ந்ததும், நீ உண்மையை அதிகமாய்க் கிரகிக்கமுடியும். அப்போது ஆழ்ந்த தெளிவு உன்னில் உண்டாகி வரும். ஒரு உண்மையைக்கண்டவுடனே அது உண்மை என்று உனக்குத் தெரியும். இந்தப்படி தெரியும் அறிவு தூலக்கண்பார்வையோடு ஒத்திருக்கின்றது. இது சுத்த புத்திதத்துவத்தின வலிமையின் திறமை. இதைக்கொண்டு நமது நம்பிக்கைகளை சோதிக்க நாம் எல்லோரும் பிரயத்தினப்படவேண்டும். ஏனெனில் கொள்கைகளில் அநேகம் நமக்கு பாத்தியமாக (பிதிரார்ச்சிதமாக) கொண்டுவந்திருக்கிறோம். ஆதலால் இவைகள் நமக்கு விபரீதங்களாக இருக்கின்றன. நாம் இப்படி சோதித்துக்கொண்டே வர வர இந்த நோக்கம் நம்மனதில் படியும். பழக்கத்திற்குத் தக்கபடி நாம் விபரீதத்தை ஒழித்து பொறுமையை விருத்திசெய்வோம்.

C. W. L:—விபரீதம் என்பது பலகாலும் உண்மையாகவே மாந்தர்களின மனதை வெகு பலத்தோடு பிடித்திருப்பதால் இதை விட்டு மதக்கொள்கைகளை அநுசரிக்கமுடியாது என்று சில சமயங்களில் சொல்லப்பட்டு வருகிறது. மதவிசாரங்களில் அதிக குழப்பமிருக்கின்றது. அதின் பெரும்பாகம் நியாயத்திற்கு ஒத்தில்லாததாகவும் இருக்கிறது வாஸ்தவந்தான. ஆனால் நம்பிக்கை ஒன்று விரிவாக அநேகரைப் பற்றியிருக்கும்போது அதற்குப் பின்புறமாய் எங்கேயோ ஒரு துண்டு உண்மை வெகுவாய் இருக்கும். சாதாரணமாய்ப் பேசுங்கால் விபரீதங்கள் வெறும் கட்டுக்கதைகளல்ல. மற்று முறுக்கிவிட்ட அல்லது பெருக்கிக்கூறிய நிச்சயங்கள். நமது பிரசிடெனடு ஒருதரம் விபரீதம் என்பதற்கு இந்தியாவில் நடந்த ஓர் சிறந்த உதாரணத்தைச் சுட்டிக் காட்டினார். ஒரு காலத்தில் ஒரு

புண்ணியவான் ஒரு பூனையை வளர்த்திருந்தான். அது அவனிடத்தில் வெகு பிரியமாயிருந்ததால் அவர் யக்ஞ யாக முதலிய நித்திய நைமித்திய கருமங்களைச் செய்யும்போது அது அவரைத்தொந்தரவு செய்யாதிருக்கும் பொருட்டு கட்டிலின்காலில் அதைக் கட்டிவைப்பது வழக்கம்.ஜனங்கள் இதைப் பார்த்து இது கருமத்திற்குவேண்டிய ஒரு பகுதிஎன்று எடுத்துக்கொண்டார்கள். பிறகு நாளாவட்டத்தில் மற்ற சடங்குகளின் முறைகள் எல்லாம் நழுவி, பூனையை கட்டிலின் காலில் பக்தியுடன் கட்டுவது ஒன்றுதான் ஐதீகமாய் நின்றது.

கிருஸ்து பகவான வஞ்சகர் என்றும் வெள்ளையடித்த பிணக்குழி என்றும் இறக்கிக்கூறின "ஸ்க்ரைப்ஸ்" "பாரீஸிஸ்" எனபவர்களும் இவ்விதமான விபரீதத்தைக் காட்டினார்கள். அவர்கள் வைத்திருந்த பலசரக்குகளில் பத்தில் ஒரு பாகம் கட்டணமாகக்கொடுக்கச் சொன்னார்கள். ஏனெனில் அவர்கள் வைத்திருக்கும் ஆஸ்திகளில் பத்தில் ஒரு பகுதிகொடுக்கும்படி உத்தரவாயிருக்க, உப்பு, மிளகு, இவைபோன்ற சிறு சிறு பொருள்களில் வெகு நுட்பமாய்க் கணக்கிட்டார்கள். ஆனால் அவர்களுடைய தரும சட்ட போலையில் இருக்கும் கனமான விஷயங்களான—நியாயம், கருணை விசுவாசம் இவைகளை முற்றிலும் மறந்துவிட்டார்கள்.

கிரேட்பிரிடன் இராஜ்ஜியத்தின், பெரும்பாகங்களில் முக்கியமாய் 'ஸ்காட்லாண்டில்' ஞாயிற்றுக்கிழமை தினத்தின் விபரீதம் மெத்த கஷ்டப்படுத்துகின்றது. இவ்விடங்களில் அத்தினத்தை சொல்லத் தகாத சிரமமாக வைத்திருக்கின்றது. அந்த நாளில்செய்ய வேண்டிய சாதாரண லௌகிக வேலைகளைக் குறைத்து வைதிக விஷயங்களில்பக்தியாக இருக்கவேண்டுமென்பது அதன் கருத்து. என்றாலும் தெய்வீக ஆராதனை என்கிற பகுதியை பின்னுக்கு வைத்துவிட்டிருக்கிறது. மற்ற நாளைவிட ஞாயிற்றுக்கிழமையில் குடியும் மற்ற சகஜமான அனுசாரங்களும் அதிகரித்து இருக்கின்றன.உண்மையில் முக்கியமில்லாததை முக்கியமாகக்கொண்டதற்கு இது ஒரு உதாரணம். ஏனெனில் ஜனங்களுக்காக பக்தியாயிருக்க குறைந்த பக்ஷம் ஒரு நாள் வைத்திருக்கிறபடியால் மற்றநாளில் மதாசாரங்களையும் கருத்துகளையும் ஒருவன் எடுக்கத்தவறினால் அவ்வளவு

பாதகமானதல்ல வென்ற கருத்துடன் ஜனங்கள் இருக்கிறார்போ லிருக்கின்றது. ஞாயிற்றுக்கிழமையை அநுசரிக்காத இந்துக்களேயும் பௌத்தர்களேயும் இன்னும் இதர மதஸ்தர்களேயும் அவர்களுடைய வாழ்க்கையில் மதாசாரம் ஊறியிருப்பதை நான் பார்த்திருக்கின் றேன். அந்தப்படி கிருஸ்தவர்களில் காணவில்லே. இவர்கள், கிருஸ்த வர்களேவிட நல்லவர்கள் என்று நான் சொல்லவில்லே. என்றாலும் இவர்களுக்கு மதம் என்பது சாதாரண கிருஸ்தவனேவிட அதிகமா யிருக்கின்றது. கிருஸ்தவனுக்கு வாரத்திற்கு ஒருநாள் கோயிலுக்குப் போனல் அவனுடைய மதக்கடனே கழித்து விட்டதாக எண்ணு கிறான்.

விபரீதம் யாதெனில் தகுந்த காரணம் அறியாது ஒரு கொள் கையை நம்பியிருத்தல் என்று நமது பிரசிடெண்டு விளக்கி யிருக் கின்றார். பூமி சுற்றிவருகிறது என்பதிலும் நாம் பார்க்காத அந்நிய தேசங்களிருக்கின்றன என்பதிலும்,ஸ்தூலக்கண் பார்வைக்குத்தெரி யாத அணுக்களேயும் அணுவின் நுண்ணிய கருக்கள் (Electrons) வாஸ்தவத்தில் இருப்பதையும் நம்புவது யுக்தியானுசாரமானதே. ஏனெனில் இவைகளுக்கெல்லாம் நம்பத்தகுந்த நல்ல முகாந்திர மிருக்கின்றது. ஆனல் பொதுஜன கொள்கைகளில் அநேகம் இந்த வகுப்பைச் சேர்ந்தவைகளல்ல.கிருஸ்தவனுடைய அவியா நெருப்பு, தீரா நரக தண்டனே, எனும் சாதாரண கொள்கையானது ஓர்வித கொடுமையான விபரீதம் என்பதே தவிரவேறல்ல. இதற்கு நியா யம் என்கிற அஸ்திபாரமே கிடையாது. என்றாலும் இதைச் சாதா ரண கிருஸ்தவனுக்குச் சொன்னல், அவன் உன்னே உலகாயதன், அவனுடைய மதத்தைப் பழிப்பதாகச் சொல்வான். இதை முதன் முதல் ஆரம்பித்துக் கற்றுக்கொடுத்தவன் இதை நம்பியிருக்கவும் கூடும் நம்பாமலிருக்கவும் கூடும். என்றாலும் கோடானுகோடி ஜனங்கள் வெகு நிச்சயமாகவே இவ்விபரீதத்திற்கு உடன்பட்டிருக்கிறார்கள்.

கிருஸ்தவநோக்கப்படி கிருஸ்துபகவான், தானே இதைப்பற்றி சொல்லியதுதான் முக்கியமாயிருக்கவேண்டும். இந்த தீரா நரக தண் டனையைப்பற்றி இவர் சொன்னதாக, பிரமாணங்கள் எட்டு வாக்கி யங்களில் இருக்கின்றன என்றுநான் நினைக்கிறேன். சாதாரணமாய்க் கொள்ளும் தீரா நரக கருத்துகள்யாதும் இவைகளில் ஒன்றிலாவது

ியில்லை என்று காட்டக்கூடும். இவ்விஷயத்தைப் பற்றி Salvator Mundi என்கிற விலையுயர்ந்த நூல் ஒன்று (Rev. Samuel Cox) எனும் பாதிரியாரால் எழுதப்பட்டிருக்கிறது. இவர் கிருஸ்துபகவான் பேசியதாக மூல கிரீக் பாஷையிலிருப்பதை வெகு ஜாக்கிரதையோடு ஆராய்ச்சிசெய்து உடனுக்குடன் தீரா நரகத்திற்குச் சாஸ்திர ஆதாரம் இல்லையென்று உறுதியுடன் காட்டுகிறார். நிச்சயமாகவே நியாயப்படி ஆதாரம் இல்லை. ஏனெனில் கடவுள் அன்பார்ந்த பிதாவானால் அது முற்றிலும் கூடாதது.

உலகில் அளவிலாதத் தீங்கை உண்டாக்கும் இந்த பயங்கரமான விபரீதத்தை தற்கால கிருஸ்தவர்கள் விட்டிருக்கவேண்டியது. என்றாலும் கோடானுகோடி ஜனங்கள் விடாமலிருக்கிறார்கள். மேலும் இதை இன்னும் போதித்துவருகின்றது. நான் கொஞ்ச காலத்திற்கு முன ஒரு உரோமன காதொலிக் சிறுவர்களுக்காக செய்த வினாவிடை என்ற புத்தகத்தைப் பார்த்தேன். அதில் பண்டையநாளின் நரகக் கருத்துகளை முன்போலவே தீரா நரக தண்டனைக்கு இடமென்று சொல்லியிருக்கிறது. சிறுவர்களுக்கு கொடுத்த போதனைகளைக்குறித்து நாம் இன்னும் மத்திய காலத்து மிருகத்தன்மையோடிருந்த பயங்கரமான நாளில் வாசித்திருப்பதாக யிருக்கிறது. இது பரிதாபமான விஷயம். இதை நீக்கிவிட்ட அநேக கிருஸ்து (சங்கங்கள்) கூட்டங்கள் இருக்கின்றன. என்றாலும் அவைகளில் புராதனமாயும், பெரிதாயும், உள்ளது இன்னும் அந்த நடுகால போதனையை பற்றியிருக்கின்றது. நாம் விவரிக்கும் வகையாய் அதை முற்றும் இல்லையென்று விளக்கிச் சொல்லும், தனிபாதிரிமார்கள் இருக்கிறார்கள். ஆனால் அச்சிட்டு சிறுவர்களுக்குப்போதிப்பதுமுற்றும் கொடுமையான தெய்வநிந்தனையாக விருக்கிறது. ஏனெனில் இது கடவுளைப் பற்றித் தவறான கருத்துகளைக்கொண்டு அவர்கள் வாழ்க்கையைத் துவக்கிவிட்டு, அவர்களுடைய வாழ்விலும் மனதிலும் பயங்காரத்தையும், கொடுமையையும் நிறைப்புகிறதால் அவர்களுடைய குணத்தையும் முன்னேற்றத்தையும் தடுக்கின்றது.

நான் முன்னமே நம்பிக்கையைப்பற்றியும், யூகத்தைப்பற்றியும் உதாரணமாக எடுத்துக் காட்டின புத்தபகவானுடைய போதனைகள்

வெகு நேர்த்தியானது அவர்காலமான உடன், அப்போதுள்ள அநேக சித்தாந்தங்களில் எது அவருடைய வார்த்தைகள் என்று நிர்ணயிப்பதற்காகக்கூடின முதல் சங்கத்தில் "புத்தியூகத்திற்கும் பொது விவேகத்திற்கும் விரோதமானவைகளெல்லாம்புத்தருடையபோதனைகள் அல்ல" வென்று விதி ஏற்படுத்தினார்கள். இந்தக் கருத்தின்படி ஒத்துவராதவைகளை எல்லாம் "இது சுத்தமாய்ப் பொது விவேகத்திற்கு ஒத்துவரவில்லை; இதை அவர் சொல்லியிருக்கமாட்டார்" என்று சொல்லி நீக்கிவிட்டார்கள். ஒருக்கால் அவர்கள் தெரிந்துகொள்ளக்கூடாமையாயிருக்கும்படியான ஒன்று அல்லது இரண்டு விஷயங்களைத் தள்ளிவிட்டிருக்கக்கூடும். ஆனாலும் அளவற்ற விபரீதங்களிலிருந்து அவர்களுடைய மதத்தைக் காப்பாற்றிக்கொண்டார்கள். மகம்மத் என்கிற பெரியாரைத் தவிர மற்ற பெரிய மதகர்த்தாக்கள் தங்களுடைய போதனைகளை உலகினருக்கு எழுத்து மூலமாய்க் கொடுக்கவில்லை. என்றாலும் புத்தபகவான் ஓர் புத்தகத்தை எழுதினதாக சொல்லப்பட்டிருக்கிறது. அதை பிரசுரிக்கவில்லை. முக்தர்களிடத்திலிருக்கும் புத்தகக் களஞ்சியத்தில் வைக்கப்பட்டிருக்கிறது. போதனைகளை எழுத்தால் எழுதிவர சாதாரணமாய் மூன்று நான்கு தலைமுறை செல்லுகின்றது. அப்புறமும் அநேக மூலங்களிலிருந்து எடுத்து எழுதினதோடு சேர்க்கப்பட்டு வருகிறது. உதாரணமாக "இசைஷயா புத்தகம்" இதில் ஒருவருக்குப் பின் ஒருவராக மூன்று இசைஷயாக்களும் பிறகு ஓர் கூட்டமும் இப்படியாய் எட்டு வித ஐதிகங்கள் சேர்ந்திருக்கின்றனவாக பாஷா நிபுணர்கள் கண்டு பிடித்தார்கள். தங்களுக்குத் தெரிந்ததைவிட்டு கேள்விப்பட்டதை ஜனங்கள் எழுதியபோது மதத்திற்கு கெடுதி ஏற்பட்டது. பிறகு சிறு குறிப்புகளைப்பற்றிச் சண்டையுண்டாயிற்று.

குழப்பத்திற்கு இன்னும் வேறொரு காரணமிருக்கின்றது. அதாவது ஓர் புதிய மதத்தை ஏற்படுத்தியபோது அது இருக்கிற மதங்களை வெட்டித்தள்ளிக்கொண்டு வெற்றிக்கொடி கொண்டுபோவதுபோல் பரவுகின்றது; என்றாலும் அவைகளை துடைத்து விடுவதில்லை. ஓர் புதிய தேசத்தைப் பிடித்தவுடன அறிவுள்ள படைவீரன் கஷ்டம் குறைக்கவேண்டித் தன்னுடைய சட்டங்களை ஜனங்களுக்குத் தகுந்தபடி இசைந்து கொடுக்கமுயலுகிறான். இப்படித்தான்

மதங்களும் இவைகளைத் தழுவிய பல ஜாதியாருக்கு இசைந்துவந்தன. இவ்விதம் சீனக்காரர்களும், ஜப்பான்காரர்களும் பழைய "ஷிண்டே" வழக்கத்தின்படியே நடந்துகொண்டு தங்கள் முன்னோர்களை கும்பிட்டு வருகிறார்கள். ஆனால் அதனுடன் புத்தர்களுடைய நீதிகளைச் சேர்த்துக்கொண்டார்கள். ஆனால் சிங்கள தேசத்தில் உலகாயதவகையில் மதத்தைக் கைப்பிடித்திருக்கிறார்கள். மேலும் அவர்கள் ஒருவனுடைய கர்மத்தைத்தவிர மனிதன் என்று சொல்லப்பட்டயாதும் ஒரு பிறப்பிலிருந்து இன்னொரு பிறப்பிற்குப் போவதில்லை என்று சொல்கிறார்கள், என்றாலும் அவர்களுடைய முந்திய ஜென்மங்கள் என்று பேசிக்கொண்டும் இனி ஒருஜென்மத்தில் நிருவாணம் ஏதோ ஒன்று அடைவதாகச் சொல்கிறார்கள். கிருஸ்தவர்களும் இவர்களுடைய மதம் பரவிய தேசங்களிலிருக்கும் பண்டிகைகளைத் தழுவினார்கள். ஆனால் சமயோசிதப்படி அந்த திருநாள்களுக்கெல்லாம் கிருஸ்தவ ஞானிகள் பெயரைக் கொடுத்தாகள்.

இவ்விதமாய்ப் புராதன ஐதீகங்களின அடையாளங்களாக சிங்களத்தில் பேயாட்டம் என்றும், இந்தியாவில் காளி கொள்கை என்றும் இப்படியே அநேகம் எங்கெங்கும் காணலாம். மேலும் சிலசமயங்களில் இவைகள் உண்மையான விஷயமென்று கொள்ளப்பட்டு வருகின்றன; இந்தப்படி விபரீதம் அதிகரிப்பதற்கு ஏதுவாயிருக்கின்றன.

ஒருவிஷயத்தை யோசனையில்லாமலேஅது உண்மையென சிலசமயங்களில் ஒருவன் யூகித்துக் கொள்ளக்கூடும். இது வேறு விஷயம். ஜீவான்மாவிற்குத் தெரிந்திருக்கிறது. அறிவதற்கு அதற்கு நல்ல காரணம் இருக்கின்றது. ஆனால் சில சமயங்களில் தனக்குத் தெரிந்த விஷயத்தின் அறிவு மூளையின் மூலமாய் கொண்டுவந்தாலும் அதனுடைய நியாயங்களை ஸ்தூலமாகிய மூளைக்குத் தாக்க முடிகிறதில்லை. ஆனபடியால் ஒரு புதிய உண்மையை நமக்குத் தெரிவித்தபோது அதை ஏற்றுக்கொள்ளலாமா அல்லவா என்று உடனே நமக்குத் தெரிகிறது. இது விபரீதமல்ல. மற்று அதிதீவிர அந்தரங்க தெளிவு. நரகம் இருப்பதாக அவ்வித ஆழ்ந்த தெளிவுடன் இருப்பவரை எவரையாவது எப்போதாகிலும் காணுவோம் என்று நான் நினைக்கவில்லை. அவர்களுக்கு அவ்விதமாய்க் கற்றுகொடுத்தால் நரகத்-

தில் எப்போதுமே (நெருப்பினால்) எரிக்கப்பட்டு வருவார்கள் என்று நினைக்கிறார்கள். ஒருவேளை இதையும் நியாயப்படி யோசிப் பதைத்தள்ளி யூகமாய் வருவதாகத் தெரியலாம். ஆனால் அப்போது நாம் யூகம் என்று மொழிபெயர்க்கும் புத்தியை இந்தியாவில் சுத்த புத்தி என அறிந்திருக்கிறார்கள். இது ஜீவான்மாவின் விவேகம், இது கீழ்லோகங்களில் நாம் வைத்திருப்பதைவிட மிக உயர்வானது மாஸ்டர் இந்த விபரீதத்தைப்பற்றிய உதாரணங்களைக் கொடுத்துச் சொல்கின்றார்.

> "மதாசாரச் சடங்குகள் அநாவசியமென்று நீ தெரிந்திருக்கவேண்டும். இல்லாவிடில் அவை களைச் செய்யாதவர்களைவிட எப்படியோ மேலா னவனென்று நீ நினைத்துக்கொள்வாய். ஆயினும் மதாசாரச் சடங்குகளில் இன்னுமொட்டி நடப்ப வர்களை நீ கண்டனஞ் செய்யக்கூடாது. தங்க ளிஷ்டம்போல் அவர்கள் நடக்கட்டும். ஆனால் உண்மையை நீயறிந்திருப்பதால் உன் ஜோலிக்கு மட்டும் அவர்கள் வராதிருக்கவேண்டும். இவை களைக் கடந்து மேற்படியிலுள்ள உன்னை அவர் கள் பலவந்தப் படுத்தக்கூடாது. ஒவ்வொரு விஷயத்திலும் விட்டுகொடு. ஒவ்வொரு விஷயத் திற்கும் அநுகூலமாக நடந்துகொள்."

C.W.L.:—ஆசார கருமகிருத்தியங்களைப்பற்றி மாஸ்டர் அவ்வ ளவுகெட்டியாய்ச் சொன்னதுயாது காரணம் என்றாலோ, ஆல்கியூனி பிறந்த உயர்குல பிராமண வாழ்க்கையில் அவருக்கு அப்போதிருந்த வயது தொடங்கி கருமகிருத்தியங்கள் முற்றும் துவக்கப்படுகின்றன. அச்சமயத்தில் பையனுக்கு அவைகளைப்பற்றி தன்னை முக்கியமான வனாக எண்ணிக்கொள்ளும்படியான நோக்கம் இருக்கின்றது; ஏனெ னில் உபநயனம் என்பது பிராமண குலத்தின் முழு உரிமைக்குஉகந் தவனாக ஆக்கவேண்டிய சடங்காதலால் அங்கிருப்பவருடையகவனம் அநேகமாய் இவன்பேரில் வைக்கப்பட்டு வருகிறது. வைதீகமாயுள்ள

பிராமணனுடைய வாழ்க்கை முழுவதும் கிரிகைகளால் நிறைந்திருக்கின்றன. காலையில் எழுந்திருக்கும்போதும் குளிக்கும்போதும், சாப்பிடும்போதும், அநேகமாய் ஒவ்வொரு காரியத்திலும் பாவனைகள் முத்திரைகள் இவைகளைச் செய்வதுடன், மந்திர உச்சரிப்பும் சொல்ல வேண்டியிருக்கிறது. ஆல்கியூனியைச் சுற்றியிருந்த சிலர் இவரை இவைகளை முற்றும் செய்யும்படி வெகுவாய்த் தொந்தரவு செய்திருக்கக்கூடும். ஏனெனில் இவருக்கிருக்கும் ஐரோப்பியருடைய சிநேகிதத்தாலும், தற்கால வாசிப்பாலும், இவர் தன ஜாதியாருடைய பண்டைய நாள் பிராமணரீதியிலிருந்து திரும்பிப்போவார் என்று பயப்பட்டார்கள். ஆகையால் மாஸ்டர் தனது சிஷ்யனைக் காப்பாற்ற இவைகள் சுத்தமாய் அவசியமானவைகள் அல்லவென்றும், அவைகளைச்செய்யும்போதாவது சரி, அல்லது விட்டுவிட்டிருக்கும்போதாவது சரி, இவ்விஷயத்தின்பொருட்டுத் தன்னை மேலானவனாக நினைக்கும் பேதமையிலும் பிழையிலும் விழாதபடி அவருக்கு எச்சரிக்கை கொடுத்தார்.

கிருஸ்தவர்களுடைய கிரியைகள் சாதாரணமாய் ஜனங்கள் கூட்டமாய்க் கூடி அவைகளைச் செய்வதனால் இந்துக்களுடையவைகளிலிருந்தும் பௌத்தர்களுடையவைகளிலிருந்தும் வித்தியாசப்படுகின்றன. இந்துக்களுக்கும் புத்தர்களுக்கும் இருக்கும் பூசை எப்போதும் ஒவ்வொருவருக்கும் தனிப்படையாயிருக்கின்றது. ஆனால் கிருஸ்தவ தேசங்களில் முக்கியமாய்ச்சமுதாயமான கூட்டத்திற்குரியது. கிரியைகள் அநாவசியமாயிருந்தபோதிலும் இவைகளெல்லாம் பக்திவாஞ்சையோடு இருப்பவருக்கு இவையில்லாமலிருந்தால் உண்மையில் அவர்கள் சுகமாயிருக்க முடியாததால் அவர்களுக்கு இவை தேவை. இவைகள் அந்தரங்க உலகில் இயற்கையாகவேயுள்ள சக்திகளை சாஸ்திரப்படி திட்டமாய்ப் பிரயோகித்து வெளியாக்கும் வழிகள்.

உலகின்பேரில் (பரமார்த்த) தெய்வீக சக்தியைப் பொழியும் வழிகள் அநேகமிருக்கின்றன. "மாஸ்", "ஹோலி கம்யூனியன்", அல்லது "ஹோலி யூகரிஸ்டு" எனும் பூஜைகிரிகையில் வரும் சாதாரணமாய் "டிவைன்கிரேஸ்" என்று சொல்லப்பட்ட தெய்வஅருளை

(இது மேலுலகத்திலுள்ள அருள் சக்திகளில் ஒன்று)—கிருஸ்துமத கர்த்தர் தமது சர்ச்சின்மூலமாய் வெளியுலகிற்கு பரவச்செய்ய தாமே ஏற்படுத்தினது—இவைகள் நிச்சயமாகவே இயற்கைக்கு அப்புறமானதல்ல. மற்று ஸ்தூல பூவுலகிற்கு மேற்படியிலுள்ளது, இதை ஹோலியூகரிஸ்டு நடத்தும் பாதிரியானவர் எப்பேர்ப்பட்டவராயிருந்தபோதிலும் இந்த சக்தியை இறக்கிப் பாய்ச்ச ஓர் வாய்க்காலாக இருக்கும்படி ஏற்படுத்தியிருக்கிறது. பாதிரியார் உண்மையில் நல்லவராகவும், பக்தி, கைங்கரிய எண்ணங்களால் நிறைந்திருக்குமவரானல் அது இன்னும் நல்லதாயிருக்கும். ஆனல் அவர் எப்பேர்ப்பட்டவராயிருப்பினும் ஆராதனை செய்யும்போது ஜனங்களுக்கு உபயோகப்படும் வண்ணம் பலித்து சக்திபெருகி வரும்படி அதை ஏற்படுத்தியிருக்கிறது. சாதாரண கிருஸ்தவ ஸ்தாபன முறையாதெனில் சர்ச்சுகள் தேசமெங்கும் அங்குமிங்கும் ஸ்தாபிப்பதால் பொழிந்து வரும் அருள் அலைபோலப் பரவி ஒவ்வொருவருக்கும் போகும் என்பது. இந்த ஆராதனைக்கிரிகை கோடானுகோடி ஜனங்களுக்கு ஏராளமான நன்மையைத் தருகின்றது. ஆனல் அது மோக்ஷத்திற்கு அவசியமானது என்று சொல்வது விபரீதம்.

வெவ்வேருன ஆராதனைகளில் வெவ்வேறுவித அருள் சக்திகளைத் தருவிக்கமுடியும். இவைகளெல்லாம் எவ்வளவோ பரமார்த்தமாக விருந்தபோதிலும் இயற்கையின் நியதியின்படி நடந்துவருகின்றன. ஆதலால் பூவுலகத்தில் அவைகள் பிரயோஜனப்பட வேண்டுமானல் அவைகள் வரும்படியான பூலோகக்கருவி ஒன்று அமைக்க வேண்டியிருக்கிறது. இது மின்சாரத்தைப்போல ஒத்திருக்கிறது. மின்சாரசக்தி நம்மைச் சுற்றிலும் எல்லாக்காலங்களிலும் இருக்கின்றது; எப்போதும் வேலை செய்துகொண்டே இருக்கிறது. ஆனல் அதை ஓர் இடத்தில் ஒருவகையில் முக்கிய வேலையை செய்விக்க வேண்டுமானல் (அது வேலை செய்யும்பொருட்டு) அதற்குப் பூலோகக்கருவி ஒன்று வேண்டியிருக்கிறது.

A. B:.—கிரியா கருமங்கள் யாதும் அநாவசியம் என்று மாஸ்டர் சொல்லுகின்ருர். எல்லா மதங்களும் இந்த உண்மையை அங்கீகரிக்கின்றன. இந்தியாவில் எல்லாரிலும் மேலானவன், வெகு

மரியாதைப் பெற்றவன், எவனென்றால் சந்நியாசி; இவனுக்கு சுத்தமாய் யாது கருமமும் இல்லை. அவன் பூநூலை பிச்செறிந்துவிடுகிறான். அவன் சிறு பையனாயிருக்கும்போதே அவனை ஜாதியில் சேர்த்தற்குப் போட்ட குறி. அவன் இதை ஓர் பூஜிக்கும் சின்னமாகக்கொண்டு அவன் ஆயுள்பரியந்தம் அல்லது சந்நியாசியாகும் வரையில் தரித்திருக்கவேண்டியிருக்கிறது.

ஒருவன் உற்றுணர்வையும் உண்மையறிவையும் அடையாதிருக்கும் வரையிலும், அவனுக்கு வேண்டிய பக்திதாபங்களையும் அமரிக்கையான எண்ணங்களையும், பெருந்தகையான ஆவல்களையும் கொடுக்கின்றவரையில் அவைகள் அவசியம். மாந்தர்களில் பெரும்பாகத்தவர்கள் இன்னும் தேர்ச்சி அடையாதவர்கள். கொடுக்க வேண்டிய விதவித ஒத்தாசைகளுக்குப் பாத்திரராயிருப்பவர்கள். ஆகையால் பூஜாகிரியைகள் தனக்கு வேண்டாமெனறிருந்தபோதிலும் அறிவுள்ளவன எவனும் அவைகளைக் கண்டனஞ் செய்யமாட்டான். "கீதை"யானது சந்நியாசியினஒழுக்கநூல்; எனறாலும்அதில் "கருமத்தை, பற்றி பிடித்திருக்கும் மதியீனர்களுடைய மனதை அறிவுடையோன் எவனும் கலக்காதிருப்பானாக; ஆனால் என்னோடு ஒத்து எல்லா கருமங்களையும் கவாச்சேய்; என்று எழுதியிருக்கிறது. நடக்க ஆரம்பிக்கும் குழந்தை தன காலால் தன்னை தாங்கவேண்டியதற்கு உதவியாக உறுதியாயிருக்கும் நாற்காலியோ மேஜை கால்களோ, சுவர்களோ எதையும் பற்றி பிடித்துக்கொள்கிறது. அவ்விதமே தன்னைத்தான தாங்க பலமில்லாதவனுக்காக கருமங்களை வைத்திருக்கின்றன. மனிதன் விருத்தியாகி வரவர அவனுடைய கிரியாகருமங்கள் சுத்தப்பட்டு வெகு நோத்தியானவையாகவும், ஓர்கருத்தை குறிக்கும் சின்னங்களாகவும் ஆகிவிடுகின்றன. கடைசியாகத் தனக்குப் பிரயோஜனமற்றதென்று பார்க்கும்போது இவன் இவைகளை விட்டுவிடுகிறான்.கருமங்களைச் செய்யாதவர்கள் இருவகையானவர்கள்—அவைகளைக் கடந்தவர்கள் ஒன்று அவைகளுக்கு கீழ்ப்படியிலுள்ளவர்கள் மற்றொன்று.

ஒருவன் கருமங்களைவிட்டு ஒழிப்பது எப்போது என்று தெரிந்துகொள்ளுவது முற்றிலும் அவனைத்தான் பொறுத்தது. ஒவ்

வொருவனும் அவனுகவே இதை நிச்சயிக்கவேண்டும். ஒருவன் "யோகி"யாக வேண்டியது எப்போது என்று எவரும் கேட்க மாட்டார். அப்படித்தான் கிரியாகருமங்களிலும். ஒருவன் அவை களைக் விட்டுவிட்டபோதாவது அல்லது அவைகளைக்கையாளும்போ தாவது எவரும் அவனை தோஷங்கூறக்கூடாது. ஒருவன் தனக்கு இனி அவசியமில்லை எனறு அறிந்திருந்தபோதிலும்அவனுக்குத்தன் ஜாதியாருடனிருக்கும் நிலைமையைப்பற்றிச்சில சமயங்களில்சடங்கு களுக்குக்கட்டாயம் போகவேண்டியதாக வரும். அவனுடைய இஷ் டத்திற்கு அவன்தான உத்தரவாதி. ஆதலால் சடங்குகளைச் செய்ப வர்களைக் கண்டனம்செய்யலாகாது.மற்றும் செய்யாதவர்களையும் அவ மதிக்கக்கூடாது.

கருமங்கள் உதவிக்கொடுத்தாலும் கொடுக்கும். அபாயத்தில் கொண்டுபோய்விட்டாலும் விடும். கூட்டத்தில் சில மந்திரத்தை உச்சரிக்கக்கூடாது எனகிற கண்டிப்பானவிதி இந்துமதத்தில் பண் டையநாளிலிருந்தே ஏற்பட்டிருக்கிறது. ஜனங்களிடமிருந்து யாது நனமையும்வரவொட்டாதபடி தடுப்பதற்காக ஏற்படுத்தவில்லை. என் ருலும் இப்போது சிலசமயங்களில் மதியீனமாய் நினைக்கவருகிறது. ஆனல் சில மந்திரபலத்தால் சிலருக்கு கெடுதி உண்டாகாதிருக்கும் படி ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இதை கவனித்துத்தான் மநுவான வர் கற்றறிந்து நல்ல நடவடிக்கையுள்ள பிராமணர்களை சிரார்த்தம், கருமாதிகளைச் செய்ய வரவழைக்கவேண்டுமென்று நீதிநூல் ஏற் படுத்தினர். மந்திர சக்தியுள்ளவன் ஒருவன் அதை எப்போது உபயோகிக்கவேண்டியது என்பதையும், எப்போது கண்டிப்பாய் நிறுத்தவேண்டியது என்பதையும் தெரியாதிருந்தால், இவன் கருமாதிகளுக்குச் சகாயஞ் செய்யவரும் பக்ஷத்தில் மந்திரத்திற்கு பலம் கொடுத்துவிடுவான; இது அங்கு இருக்கப்பட்டவர்களுக்கு கெடுதியை உண்டாக்கிவிடும். இந்த காரணத்தைக்கொண்டு இப் பேர்ப்பட்ட சக்தியைப் பெற்றவனை அப்புறப்படுத்திவைப்பது நல் லது. உதாரணமாக "கயா"வில் சிரார்த்தகருமத்திற்கு நான் போயி ருந்தபோது, நான அவைகளுக்கு ஏதாவது பலம் கொடுத்திருப் பேனேயாகில், புரோகிதர்களுக்கு கெடுதிஉண்டாயிருக்கும். ஏனெ னில் அவர்கள் உச்சரித்திருந்த சில மந்திரங்கள் மெத்தபலமானவை

கள். என்றாலும் அவர்கள் அறியாமையாலும் சுத்தமான வாழ்க்கை அவர்களுக்கு இல்லாததாலும் சக்தியை பலிக்கும்படி செய்ய முடியவில்லை.மாடம் பிளாவட்ஸ்கி அம்மையார் மாணுக்கர்களுக்கு சுத்தமாய்ப் பூரண இரக்கம் இல்லாதிருக்கும் பக்ஷத்தில் கூட்டத்தில் போகக் கூடாதென்று போதித்திருந்தார்; இவர்களுடைய (Aura) தேஜஸுக்கு ஏதாவது கெடுதிநேரிடும் என்பதாகவல்ல, மற்று இவர்களுடைய சக்தியானது ஊட்டம் கொடுப்பதினுல் மற்றவர்களுக்கு நல்லதைவிட்டு மிக்க கெடுதியை யுண்டாக்கும். இப்பேர்ப்பட்ட சந்தர்ப்பங்களில் அறிந்தவன் எவனும் சில கருமங்களுக்குப் போகாமலிருப்பது நல்லதாக சில சமயங்களில் காண்பான். சக்தியைக் கொண்டுவர மந்திரத்தை என்னவிதம் உச்சரிக்கவேண்டியது என்பது தெரியாதவனே அங்கிருக்கும் ஜனங்கள் எப்பேர்ப்பட்டவர்களா யிருந்தபோதிலும் சரி அவர்களுக்கு சற்றும் கெடுதியொன்றும் வராதபடி போயிருக்கலாம்.

"இப்பொழுது உன் கண்கள் திறக்கப்பட்டன, உன் புராதன நம்பிக்கைகளிற் சிலவும், உன் பண்டைய கிருத்தியங்களும், மதியீனமானவையென வுனக்குத் தோன்றலாம்; ஒருவாறு அவைகள் உண்மையாகவே அப்படித்தானிருக்கின்றன. ஆயினும், இனிமேல் நீ அவைகளைச் செய்யப்போகாவிட்டாலும் அவையின்னும் முக்கியமாயிருக்கும் அந்த உத்தம ஆத்துமாக்களுக்காக நீ அவைகளை கௌரவப்படுத்து. அவைகளுக்கெல்லாம் பிரபஞ்சத்தில் இடமிருக்கிறது, அவைகளாற் பிரயோஜனமு மிருக்கிறது. கோடில்லாமல் மிகவிரைவாயும், செம்மையாயும் எழுதத் தேறுகிறவரையில், எப்படி உனக்குச் சிறுவயதில் ஒழுங்காயுஞ் சமமாயும் எழுத துணையாகவிருந்த (காபி புத்தகத்திலுள்ள) இரட்டை வரிகளைப்போல் அவைகளிருக்கின்

றன. ஒருகாலத்தில் அவைகள் உனக்கு வேண்டி இருந்தன. ஆனால் இப்போது அச்சமயஞ் சென்று விட்டது."

A. B.:—நாம் வயதில் முதிர்ந்து அறிவில் பெருகி வரவர விவேகமில்லாமலே நாம் இதுவரையில் நம்பிக்கொண்டிருந்த விஷயங் களில் சில உண்மையற்றவையாயும் இன்னும் மதியீனமானவையாயும் இருப்பனவாகத் தெரியவரும். என்றாலும் சிறுபிள்ளை கந்தைத்துணி யைச் சுற்றிக்கொண்டு அதை ஓர்குழந்தையாகப்பாவித்து, ஆதரித்து வருவதைப் பார்ப்பதுபோல் அவைகளை இரக்கத்தோடும் பரிதாபத் தோடும் நாம் நோக்கவேண்டும். ஒருவிதமாகப் பார்த்தால் பிள்ளைக ளுடையவேலை விகாரமானதாக விருக்கலாம்.என்றாலும் அது அதற்கு உண்மையில் அநுபவ உதவி தருகின்றது. ஏனெனில் அது சிறு பெண்ணாயிருக்கும்போதே தாயின் குணத்தை வளர்க்கின்றது, பெண்பிள்ளைகள் கந்தலை கந்தலாகப் பார்க்கிறதில்லை, குழந்தையாகப் பார்க்கின்றார்கள். தான் பாவித்த குழந்தையை ஆதரித்து அன்பு பாராட்டும்போதே,அவள் தாயின் தயாளகுணத்தையும், பலஹீனர்க ளையும், ஆதரவற்றவர்களையும் கவனித்து ஆதரிக்கும் தன்மையையும் அப்பியசிக்கிறாள்.ஆதலால் அச்சிறு பெண்ணைப் பார்த்து புன்சிரிப்பு கொண்டால் அது வெகு இரக்கமுள்ளதாயும் சாந்தமாயுமிருக்கிறது. நம்முடைய புராதன நம்பிக்கைகளும், கருமங்களும் இப்படித்தான். அவைகளுக்கு இடமும் இருக்கிறது. அவைகளால் பிரயோஜனமும் உண்டு.

மதியீனமானதென்று நாம் மதிக்கும் கிருத்தியங்களை நாட்டுப் புறத்து ஜனங்கள் செய்கிறதைப் பார்த்தபோதும் அல்லது நமக்கு இந்தியாவில் தென்படுகின்றமாதிரி கிராமங்களில் ஓர் மரத்தில் கந் தலைக் கட்டி பூஜிக்கிறதை நாம் பார்த்தபோதும் காட்டாள்களுடைய பக்தியையும் கிராமவாசியின் பக்தியையும் காட்டும் பேதமையான வெளி கிருத்தியத்தைப் பழிக்கக்கூடாது. இவர்களுக்கிருக்கும் ஆழ்ந்தபக்தியை கவனிக்கவேண்டும். நமக்குமெத்த செலவுகொண்ட பூஜை எவ்வளவோ அவ்வளவு அவர்களுடைய சொல்ப ஆராதனை (நைவேத்தியம்) யும்; இதற்கு அடியிலிருக்கும் நோக்கம் எல்லோருக் கும் ஒரேமாதிரிதான்.

வெளி ஆராதனைகள் எல்லாம் அநாவசியம், ஏற்றுக்கொள்ளப் படுவது இதயம் (மனது) ஒன்றே. எவ்விடத்தில் ஆராதனையுடன் இது (மனது) இருக்கின்றதோ அது ஒரு சிறியதாயினும் ஏற்றுக் கொள்ளத் தக்கதாகின்றது. ஆகையால்தான் "கீதையில்" ஒரு இலை புஷ்பம், பழம், அல்லது கொஞ்சம் ஜலம் கூட பக்தியுடன் படைத் தால், அது கடவுளுக்கு ஏற்கும் என்று சொல்லியிருக்கிறது. இவ் விஷயங்களை ச்செய்பவர்களை அதைரியப்படுத்தும்வகையில், மரத்தில் கட்டியிருக்கும் கந்தலை சில சமயங்களில் பிச்சிப்போடுவது கடினமா னது, சகோதரத் தன்மையல்ல. இதனால் நாம் எல்லோரும் ஐக்கியம் எனும் உணர்ச்சியை முற்றும் இல்லாததாக காட்டுகிறது.

C. W. L.:—பிள்ளைப் பருவத்திற்கு நீ எப்போதும் சாந்தமா யும், அன்பாயும் இரு. அதாவது (குழந்தை) பிள்ளைகளிடத்திலும், தற்காலத்தில் பிள்ளைத் தனமையில் இருக்கும், மானிடர்களிடத்தி லும், என்பது. சிறு பிள்ளை கந்தைத் துணியை பொம்மை என்று பாவித்துத் தாலாட்டி பால்கொடுப்பதாக நமது பிரசிடென்ட் சொல்லியிருக்கிறார். நிச்சயமாகவே அது விபரீதம்; என்றாலும் அதைப்பார்த்த எவனுக்கும் குழந்தையை கோபத்துடன் அதட்டி மிரட்ட தட்டுகிறதில்லை. பூலோகத்தில் அது துணிகந்தைதான், ஆனால் குழந்தையின் பாவனையில் அது பெரும்பாலும் எல்லாவித இலக்ஷணங்கள் பொருந்திய உயிருள்ள குழந்தை. அது கொடுக்கும் நல்ல உற்சாகத்தால்வரும் வளர்ச்சியைக்கெடுக்காதபடி குழந்தையின் மனதிலிருக்கும் எண்ணத்தை எவராலும் கலைக்க முடியாது.

இந்தியாவில் சாமானிய ஜனங்கள் தெய்வத்திற்கென்று பிரார்த் தனையாக ஓர் கந்தலை ஓர் மரத்தில் கட்டும் வழக்கமென்று பிரசி டென்ட் சொல்லியிருக்கிறார். சாதாரண கிருஸ்தவ பாதிரி அதைப் பார்த்தால் அதைப்பற்றி மெத்த கோபித்துக்கொள்வார். நல்ல விசு வாசத்துடன்செலுத்திய இந்த பிரார்த்தனையைப்பற்றி இவா தன்னு டைய பேதமையைக் காட்டுவார். நம்மைவிட மெத்த தாழ்ந்த குழந்தைத் தன்மையுடைய ஜீவாத்துமாக்கள் இதை பக்தியோடு மதித்திருக்கிறார்கள். இதை குழந்தையின் கந்தைத்துணி பொம்மை போல் நாம் கொள்ளவேண்டியது. அவர்கள் கொஞ்சம் தண்ணீரை

வார்த்தாவது அல்லது ஒரு புஷ்பத்தை போட்டாவது நைவேத்தி யஞ் செய்கிறார்கள். இது வெகு சிறிய நைவேத்தியந்தான். ஆனல் அதை ஏன் பழிக்கவேண்டும்? கிருஸ்துபகவானும் "அவர்பெயரால், அவருக்காக ஒரு கோப்பை தண்ணீர் கொடுப்பவருங்கூட, அவர்க ளுடைய பரிசை (வெகுமதியை) ஒருக்காலும் இழக்கமாட்டார்கள்" என்று சொன்னார். ஒருக்கால் கற்சிலையையாவது அல்லது எந்த கிருத்தியத்தையாவது எவரும், காட்டு மனிதனுங்கூட, உண்மை தெய்வமென்று நினைக்கமாட்டார்கள். ஆனல் அதைக் கொண்டு எல் லோரும் சுவாமியை நினைக்கிறார்கள் என்பதை ஞாபகத்தில் வைக்க வேண்டும்.

"ஓர் மகா ஆசாரியர் ஒருகாலத்திலிவ் வாறு எழுதியுள்ளார்:—

"நான் குழந்தையா யிருந்தபோது குழந் தையைப்போல் பேசினேன், குழந்தையைப் போல் தெரிந்துகொண்டேன், குழந்தையைப் போல் நினைத்தேன், ஆனல் நான் பெரியவனான பிறகு சிறுபிள்ளைத் தன்மையை விட்டுவிட் டேன்." என்பதாக. ஆயினும் ஒருவன் தன்குழந் தைப்பருவத்தை மறந்து குழந்தைகளிடத்தில் இரக்கமில்லாதவனானல், அவன் அப்பிள்ளைகளுக் குக் கல்வி கற்றுகொடுக்கவாவது, உதவி செய்ய வாவது உற்றவனல்லன். ஆனபடியால் எல்லோ ரையும் பக்ஷத்தோடும், சாந்தத்தோடும், பொறு மையோடும் நீ பார்ப்பதுடன் பௌத்தனாயினும், இந்துவாயினுஞ்சரி, ஜைனனாயினும் யூதனாயினுஞ் சரி, கிறிஸ்துவனாயினும் மகம்மதியனாயினுஞ் சரி, இவர்களை எல்லாம் ஒன்றுபோல் சமமாகப் பாவித்துப் பார்."

A. B.:—இவ்விடத்தில் குப்தனிருக்கவேண்டிய நிலையைக் குறிப்புடன் விவரித்திருக்கிறது. அவன், தனது குழந்தைப் பரு

வத்தை மறக்காதவன். பெரியவனுகிவிட்டான் என்றாலும், அவன் வளர்ந்து வந்த பருவத்தில் நடந்ததை யெல்லாம் ஞாபகத்தில் வைத்திருக்கிறான்' ஆதலால் எல்லாருக்கும் உதவி புரியமுடியும். எல்லோரிடத்திலும் தயவோடு (இரக்கத்தோடு) இருந்து எல்லோருக்கும் உதவிபுரியும் திறமையை நீ பழகவேண்டுமானால் உனனுடைய மதத்திற்குரிய கருத்துகளைக் வேறு முக்கிய மதங்களின் பாஷைகளில் மொழிபெயர்த்து, உன்னுடைய கருத்தின்படி அச்சமய முறைகளை விளக்குவது, நல்ல பழக்கம். எவரிடத்தும் பேசும் படியான பொது பாஷையொன்று ஏற்படும் வரையில் நம்மெல்லோருக்கும் நமக்குள் விவகரிக்கத் தகுந்த சொந்த பாஷையுண்டு. மானுக்கன் தனதல்லாத வேறு பாஷையொன்றை, அல்லது சொல்லும் வகையைக் கற்கிறது நல்லது. கிருஸ்துவர்கள் இந்துக்களுடைய ரீதியாய்ப் பேசவும், சிந்திக்கவும் பழகினார்களானால் அப்போது இந்துக்களுடைய நிலையிலிருந்து அறியும் விஷயங்கள், அவர்கள் முந்தி பாவித்திருந்ததைவிட எவ்வளவோ வேறாக இருப்பதை தாங்களே பார்த்து ஆச்சரியப்படுவார்கள், இந்துக்களும் இவவிதமே கிருஸ்துவ வழியில் சிந்தித்துப் பேச கற்கலாம்.

சுவாமி விவேகாநந்தருடைய குருவாகிய **ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர்** இவ்விதமாய்த் தன்னைப் பழகினார். அவர் பல மதங்களை ஒன்றன்பின் ஒன்றாய் எடுத்து அந்தந்த சமயத்தில் அந்தந்த ஒழுக்கங்களை எடுத்து அப்பியாசித்தார். அவர் கிருஸ்துவ மதத்தை எடுத்தார. கிருஸ்தவர்கள் பிரார்த்தனைசெய்வதுபோல பிரார்த்தனைச்செய்தார். கிருஸ்தவர்கள் நோக்கத்தைப்போல சிந்தித்தார். இன்னும் கிருஸ்தவர்கள் உடையையும் உடுத்தார். இவவிதமாய் ஒவவொரு மதத்திலும் ஒனறன்பின ஒன்றாய் எடுத்து ஒவவொன்றிலும் தான் அதிலிருப்பதாக பாவித்து அதைக் கற்றுவந்தார். இவவித முயற்சியில் உதவி பெறும் பொருட்டு தன்னால் இயன்ற அளவு வெளி நடை உடை பாவனைகளை உபயோகித்தார். மேல்நாட்டார் **வர்ஜின்மேரி** எனறும், இந்துக்கள் சக்தி என்று கொண்டாடும் இயற்கையில் உள்ள தாய் தன்மை உற்றறிய வேண்டி தான் பெண்ணைப்போல உடுத்தி பெண் என்று பாவித்திருந்தார். அவருடைய விஷயத்தில் இவவித பழக்கத்தின் பலன் உண்மையில் வெகு நேர்த்தியாயிருக்

தது; ஏனென்றால் மதங்களின் வெளி வித்தியாசங்கள் அவரை முற்றிலும் பாதிக்கவில்லை.

அநேகமாய் ஜனங்கள் நடக்கும் வழியைவிட இது எவ்வளவு வித்தியாசப்பட்டிருக்கிறது என்பது தெரிகிறதா? என்றாலும் சுற்றிலும் உள்ளவை எல்லாவற்றோடும் தன்னை அதுவாக பாவிக்கக் கற்றால் மாத்திரம் ஒருவன் சிஷியத்வத்திற்கு சித்தமாகி வரக்கூடும். ஸ்ரீ ராமகிருஷ்ணா பிறவி பக்தர். அவர பக்தியைக்கொண்டு இவ் வழியில் கற்றார்.

அப்படியிருக்க, வாஞ்சையுள்ளவனதான் இந்துவாகவும் அல்லது பௌத்தனாகவும் அல்லது பெண்பாலாகவும் தானல்லாத ஏதோவொன்றை கொஞ்சகாலம் வரையில் அதுவாகபாவித்திருக்கப்பிரயத்தினப்படவேண்டும். ஆண்மக்கள், பெண்மக்களாக உணர்ந்திருக்கவும் அவர்களைப்போல நினைக்கவும் அவள் பார்க்கிற வண்ணம் பார்க்கவும் எப்போதாவது பிரயத்தினப்படுபவர்கள் எவ்வளவு கொஞ்சம்! பெண்மக்களில் உண்மையில் ஆண்மக்களுடைய நிலையின்படி விஷயங்களைப்பார்க்க எத்தனிப்பவர்கள் அநேகமாயில்லைபோலும்.ஆனால் தான் எனும் தனமை ஆண்மக்களுக்குள் வெகு விமரிசையாயிருக்கிறது. தான எப்போதும் தன்னை "அவன்" என்று (ஆண்பாலாக) அறிந்திருக்க விரும்புகிறான். தியாசொபிஸ்டுகளுக்குள் ஆண்பால் பெண்பால் எனகிற வித்தியாசமில்லாத சகோதரத்வமாயிருக்கினும் சில சமயங்களில் மறந்து விடுகிறார்கள்.

உனக்குப் பழக்கமில்லாத வகையிலிருக்கும் விஷயங்கள் உனக்கு எவ்விதம் படுகின்றது என்பதை அறிய கற்றுக்கொள். குப்தமுறையினபடி யல்லாமல் உனனுடைய சொந்த கருத்தின்படி, விஷயங்களை யோசிக்கும் பழக்கத்தை விட்டுவிட வேண்டியது. இதைச் செய்; உலகம் உன்னை நிந்திக்கும். உனனிடத்திலிருக்கும் பக்ஷபாதமில்லாத தனமையையும், இரக்கப்படுந்தன்மையையும், அக்கரையில்லாமை என்பார்கள்; அதைப்பற்றி கொஞ்சமேனும்பாதகமில்லை. என்னை மேல் நாட்டார் இந்துவென்றும், கீழ் நாட்டார் கிருஸ்தவன் என்றும், குறையாடுகிறார்கள். ஏனெனில் நான் மேல் நாட்டில் மேல்நாட்டு மதத்தின்கிரமப்படி பேசுகின்றேன். இதை இந்தியாவி

லுள்ளவர்கள் பிரியப்படுகிறதில்லை. கீழ்நாட்டில் இங்குள்ள மதக் கிரமப்படி பேசுகிறேன்.இதை மேல்நாட்டார்இஷ்டப்படுகிறதில்லை. இவ்விதமாய் (Complaints) குறை சொல்லுகிறவர்களுக்கு யான் ஜனங்கள் தெரிந்து கொள்ளும்படியான மதபாஷையில் சொல்லு கிறேன் என்று எப்போதும் பதில் சொல்லுகிறேன்.

இவ்வித குறைகள், இவ்வகைபழிகள், விஷயங்களை மேலிருந்து பார்ப்பதைவிட்டு கீழிருந்து பார்ப்பதால் வருகின்றன. பல தேசங் களுக்கு திவயஞான போதகராக போகுபவருக்கு அநேக மதபாஷைகளில் (மத கிரமப்படி) பேசக் கற்பது அவசியமான பாட மாயிருக்கின்றது. இது புதிய உண்மையல்ல. அப்படி ச்செய்வதால் வரும் பழிகூட புதியதல்ல.'செயின்ட்பால்' எனபவரை பழிகூறின தும் இப்படித்தான்; அவர் எல்லோருக்கும் எல்லா விஷயங்களாக இருந்தனர் என்று பழிகூறினார்கள். அவர் எழுதினார் "நான் எல்லா ஜனங்களிடமிருந்து விடுபட்டவனாக இருந்தபோதிலும் எனக்கு இன்னும் அதிக சுதந்திரம் கிடைக்கும் பொருட்டு, நான் எல்லோரு டைய ஊழியனாகவிருக்கச் செய்துகொண்டேன். யூதர்களை வழிக்கு திருப்பும் பொருட்டு யூதனானேன்;நியதிக்கு உட்பட்டிருப்பவர்களை திருத்தும் பொருட்டு நியதிக்கு உட்பட்டவனாகயிருந்தேன். நீதி யில்லாதவரிடத்தில் அவர்களை பெறும்பொருட்டு நீதியில்லாதவனாக யிருந்தேன்.(கடவுள் நீதியில்லாதபடியல்ல ஆனால் 'மோசஸ்' சட்டத் தின்படி கிருஸ்துவுக்கு) குறையுள்ளவர்களிடத்தில் நான் அவர்களை பெறும்பொருட்டு குறையுள்ளவனாக விருந்தேன். சிலராவது எவ் வகையிலாவது இரக்ஷிக்கப்படும் பொருட்டு நான் எல்லோருக்கும் எல்லா விஷயங்களையும் செய்தேன். வெகு கடினமான பிடிவாத முள்ள அவர் மெத்த தாராளமான தயாளராகினார். அவர் யூதர்களில் கடுமையான கக்ஷியைச் சேர்ந்தவர். என்றாலும் (ஜன்டைல்) என்ப வர்களுக்கு அபோஸ்டல் ஆனார்—மெச்சக்கூடிய திரிபு.

குப்தன் ஒரு மதத்திலும் சேர்ந்தவனல்லன் என்று சொன் னாலும் சொல்லலாம். அல்லது அவன் எல்லா மதங்களிலும் சேர்ந் துள்ளவன் எனலாம்—அவன் தனித்து ஒரு மதத்திலும் இல்லை.ஒரு மித்து எல்லாவற்றிலும் உண்டு.இதற்குக் குறைந்தது பெறுமையல்ல.

தர்க்கவாதங்களுக்குப் போகாமலிருப்பதற்குக் காரணம் யாதெனில் ஒரு சமயம் அவனுக்கு பொறுமையில்லாது போய்விடும். ஒரு பக்க நியாயங்களை எடுத்து வாதிக்கும்போது பக்ஷபாதமில்லாதிருக்க மெத்த கஷ்டம். உண்மையை பிரிவுபடியிலிருந்து கொடுக்காதபடி ஒற்றுமை படியிலிருந்து எப்போதும் எடுத்துச் சொல்லவேண்டும். அப் போது தான் எல்லோருக்கும் ஒரேவிதமாக உதவமுடியும். அப் போது தன் குறையைப் பார்க்காமலே அவைகளின் மூலமாய் ஒவ் வொருவரிடத்திலும் இருக்கப்பட்ட நன்மையைப் பார்க்கமுடியும்.

C. W. L:— திவ்யஞான சபையோன் ஜாதி, மதம், வர்ணம், பால், முதலிய பேதமின்றி சகோதரபாவனையை நோக்குகிறான். நாம் மற்ற ஜாதியாருடையவும், மதத்தாருடையவும், பாலாருடைய வும், எண்ணங்களிலும் உணர்ச்சிகளிலும் புகுந்து, சேர்ந்திருக்க முடியும்போது அப்பேர்ப்பட்ட சகோதர வாழ்க்கையை வாழமுடி யும். பெண்பிறப்பில் அநேக தரம் பிறந்து வந்திருப்பதை புருஷன் மறந்து விடுகிறான. ஸ்திரீயும் தான் புருஷதேகத்தில் அநேக ஜென்மங்கள் எடுத்து வந்ததை மறந்து விடுகிறாள். சகோதர வாழ்க்கை சுலபமாகவில்லாதிருந்த போதிலும் வாழ்க்கையில் புரு ஷன் தன்னை மனதில் ஸ்திரீயாக பாவித்து, அவள் பார்க்கும் வகை யைத் தெரிந்துகொள்ள முயலுவது நல்ல அப்பியாசந்தான். அந்தப் படியேஸ்திரீயும் புருஷன் எவ்விதம் பார்க்கிறான் என்பதைப்பார்க்கப் பிரயத்தனப்படவேண்டும். இவ்விரண்டுநோக்கங்களும் அநேகவிதத் தில் ஆச்சரியமானதாய் வேறுபட்டிருக்கும். எவனொருவன் தனது பிரக்ஞையை ஸ்திரீ பிரக்ஞையுடன் ஒத்துப் பார்க்கிறானோ, அவன் பால் எனும் தடையைக்கடந்து சகோதரபாவத்திற்குப்போகஒருபடி கடந்தாய்விட்டது. தன் சகோதரிகளுடையவும், தாயாருடைய வும், பெண்ஜாதியுடையவும், நோக்கக் குறிப்பைத் தெரிந்துகொள்ள எத்தனித்த பிறகு, இந்த அப்பியாசத்தைக்கொண்டு தன் ஜாதி மதத் திலில்லாத மற்றவர்களுடைய நோக்கத்தை தெரிந்து கொள்ள போவான். இது மெத்த அநுகூலமான அப்பியாசம். ஏனெனில் மற்றவனுடைய நோக்கத்தை உண்மையாகவே தெரிந்துகொண்டு அதோடு முற்றிலும் ஒத்துவருவானானால் அவன தன்னுடைய நோக்கத்தை அவ்வளவுக்கும் விசாலமாக்கிக் கொள்ளுவான்.

பொறுமையை குறித்து ஆப்ரஹாம் என்பவரைப்பற்றி 'டால்மட்' என்பதில் ஒரு நல்ல கதையிருக்கிறது. "ஒரு நாள் ஒருவழி பிரயாணி அவரிடம் வந்தான். அந்த நாளில் உள்ள வழக்கத்தின்படி அவனுக்கு ஆகாரமும், பானமும், கொடுக்கப்போனூர். விருந்துக்கு வந்தவனை ஆப்ரஹாம் சாப்பிடுவதற்குமுன் கடவுள் பெயரைச் சொல்லி வந்திக்கும்படிகேட்டார். அவன் கடவுளைப்பற்றி எனக்கு யாதும் தெரியாது என்று சொல்லி புகழவில்லை. ஆப்ரஹாம் கோபத்தோடு அவனுக்கு உணவுயாதும் கொடுக்காதபடி அவனைத் தனது இடத்திலிருந்து துரத்திவிட்டாராம். பிறகு அந்நாளிலிருந்த வழக்கப்படி கடவுள் அவரிடம் வந்து அவனை ஏன் அனுப்பிவிட்டாய் என்று கேட்டதற்கு ஆப்ரஹாம் கடுங்கோபத்தோடு "கடவுளே அவன் தங்களை இலக்ஷியஞ்செய்யவில்லை. அவன் கெட்டவகையான அஞ்ஞானி" என்றார். அதற்கு கடவுள் "ஆம். ஆனல் அவனை நான் அறுபது வருஷங்களாகப் பொறுத்துக்கொண்டிருக்கிறேன். வாஸ்தவமாகவே ஒரு மணி நேரம் நீ அவனுடன் பொறுமையுடன் இருக்கக் கூடவில்லையா?" என்றாராம்.

திவ்யஞான சபையாரான நம்மில் சிலருக்கு தொத்திப்பிடித்திருக்கும் வெளிமதம் ஒன்று இன்னுமிருக்கிறது. என்றாலும் தனிப்பட எந்த மதத்திற்கும் சேர்ந்தவரல்லவென்றும் ஆனல் எல்லா மதத்திலும் ஒருமைபட்டவரென்றும் சொல்லவேண்டும். உதாரணமாக நான் கிருஸ்தவபிஷப், மேலும் பௌத்தன். ஏனெனில் புத்தபகவானை எனது துணையாகக்கொண்டு சரணத்தையும் சீலத்தையும் பெற்றுக்கொண்டேன். இதில் சேரும்போது மற்ற மதங்களை விட்டு விடும்படி என்னைக்கேட்கவில்லை. இந்த விஷயத்தில் பௌத்தமதம் எல்லாமதத்தைவிட மெத்த பெருந்தன்மையானது. இதில் நீ என்ன நம்பி இருக்கின்றாய் என்பதை கேட்கிறதில்லை. ஆனல் புத்தபகவானைபின்பற்றி அவர் போதிக்கும் வழியில் உன்னல் கூடியளவு நடப்பாயாவென்று கேட்கிறார்கள். கிருஸ்தவனுவது மகம்மதியனுவது "போதனை நல்லது நான் அதன்படி நடப்பேன்" என்று சொல்லிதன்னுடைய மதத்திலிருந்துகொண்டே பௌத்தனுகலாம். இந்தமதங்களுக்கெல்லாம் மூல பீடமாயிருப்பது தியாசொபி என்கிற உண்மை. நாம் இதர மதங்களின் கொள்கைகளை வாசிக்கிறோம்,

அந்த மதங்களில் திவ்யஞான உண்மையிருக்கிறதா வென்பதை வெறுமையாகப் பார்ப்பதற்காக வல்ல. பின்னை உண்மையை வெவ்வேறுவிதமாய் எடுத்து விளக்குவதைத் தெரிந்துகொண்டுஅந்த வழிகளின்படி உதவி கொடுப்பதற்காக வாசிக்கின்றோம்.

நமது பிரசிடென்ட் இதனுடைய (வாசிப்பினுடைய) பிரயோஜனத்தை நமக்குக் காட்டுகிறார். இந்துக்களுக்கு இந்துவாக பேசுகிறார், அவர் சொல்லவேண்டியதற்கு அனுசரணையாக இந்துக்கள் வேதத்திலிருந்து சமஸ்கிருத வார்த்தைகளை எடுத்து உபயோகிக்கின்றார்.சமஸ்கிருதபாஷை உரோமன காதொலிக்காரருக்கு லாடின் எப்படி ருசிகொடுக்கிறதோ அப்படி இந்துக்களைக் கவர்ந்து இழுக்கிறது. பௌத்தர்களுடன் பேசும்போது இதே விஷயங்களைத்தான் சொல்லுகிறார். புத்தபகவானுடைய மொழிகளையும், புத்தமத சம்பிரதாயத்தின் பதங்களையும் உபயோகப்படுத்துகிறார். மேல்தேசங்களில் அவர் கிருஸ்துவர்களுக்கு அவர்கள் மதத்தின்படி பேசுவதை கேட்பீர்கள். இதனால் தனனுடைய நம்பிக்கைகளையும் கொள்கைகளையும் மாற்றிவிட்டார என்பதல்ல. மறறு அவரவர்களின மதத்திலிருக்கும்பரிபாஷைபடிக்குப்பேசுகிறார்.வாஸ்தவத்தில் அவர் எல்லா மதங்களையும் கற்றறிந்தவர், நாம் அறிவிலும் சொல்வளத்திலும் அவரைப்போல் இல்லாவிட்டாலும் எல்லா மதங்களுக்கு அந்தரங்கமாகவிருக்கும் உண்மையை நாம்தெரிந்துகொண்டபோது, நம்மில் அநேகர் வேறு ஒரு மதத்திற்குரிய சிறு புத்தகங்களைக் கொஞ்சம் வாசித்து தெரிந்துகொண்டு, அதனுடைய வழியின்படி எடுத்துக்காட்டவும், மற்றவர்களுக்குத் தெரியாத கருத்துகளை விளக்கிக்காட்டவும் கூடும். கர்னல் ஆல்காட் இதைஅடிக்கடி செய்ததை கேள்விப்பட்டிருக்கிறேன. அவர் மாணுக்கனைப்போல வாசிப்பவரல்ல. ஆனால் பிரசங்கத்தில் அனுபவஸ்தர். அவர இந்துக்களுக்கும், பார்ஸிகளுக்கும், புத்தர்களுக்கும் உருக்கமாக எடுத்துச் சொல்லுவார. பண்டிதர்கள் எல்லோரும் அவரவர் மதத்திலிருக்கும் புது கருத்துகளைக் கொடுக்கின்றார் என்று ஒத்துக்கொண்டார்கள். இதனால் தியாசொபி என்பது எல்லா மதஸ்தர்களுக்கும் திரவுகோலா யிருக்கிறது. அடையாரில் நடக்கும் மஹாஜன சபையில் இதே உண்மை மற்றொரு விதத்தில் வெளியாகிறது. ஏனெனில் வெவ்வேறு

மதஸ்தர்களும் ஜாதியாரும் ஒன்று சேர்ந்திருக்கிறார்கள். அதற்குவரும் ஒவ்வொருவரும் ஒருவருக்கொருவர் காட்டும் வெறும் பொறுமை யால் மாத்திரமல்லாது, நேசவிசுவாசத்தைப் பாராட்டி நடப்பதால் இவ்வுண்மை ஆழ்ந்து தைப்பதைத் தவறாமல் காண்பார்கள்.



# 21-வது அத்தியாயம்.

## களிப்பு. (சகித்தல்)

"உன விதிபபய ஞனது எபபடிபபட்ட தாயினுஞ் சரி, கஷ்டம் வருவது உனக்கு வோர் கீர்த்தியென்று மதித்து நீ யதைக் களிப்புடன் சகித்துக் கொள்ள வேண்டும்; ஏனெனில் கர்ம தேவர்களுடைய உதவிக்கு நீ தகுந்த பாத்திர னென அவர்கள் எண்ணுவதை அது காட்டு கிறது."

A. B:—நான முந்தியே எடுத்துக் காட்டியபடி, இந்த சீல ஒழுக்கத்தை முனனுளில் 'சகித்தல்' எனகிற பெயரால் வழங்கி வந்தது. சகித்தல் என்பதால் சும்மா பொறுமையோடிருக்கும் வெறும் தன்மையைக் காட்டுகின்றது. எல்லாவித கஷ்டங்களேயும் புன்சிரிப் புடன் ஏற்றுக்கொண்டு, அவைகளைக் களிப்புடனும் சந்தோஷத்துட னும் எடுக்க சாத்தியப்படாதபோது, வெறும் சகித்தலோடு மாத்திரம் இருப்பதல்ல. களிப்பு என்கிற பதம், பெரிய ஆசாரியர்கள் கருத் தின்படி அடையவேண்டிய ஒழுக்கத்தின் முழுகருத்தை கொடுக் கின்றது. அநேகர் சகித்துக்கொள்ளுகிருர்கள். ஆனுல் அவர்கள் விசனத்துடன் பொறுத்துக்கொள்கிருர்கள். உன்னுடைய சோத னேகளேயும், கஷ்டங்களேயும், முகமலர்ச்சியோடு கொள்ளவேண் டும். சில இந்து சாஸ்திரங்களில் இக்குறிப்பைப்பற்றி, மெத்த வற் புறுத்தியிருக்கிறது. விஷயங்களே சந்தோஷத்துடன் எடுத்துக் கொள்ளவேண்டும்.

எவனொருவன் மாணுக்கன், மார்க்கத்தில் முன்னிட்டுப்போக வரு கிருனே, அவனுடைய கர்மம் மெத்த துரிதப்பட்டுவருவது வாஸ் தவந்தான் என்பதைக் குறிப்புடன் சொல்லியிருக்கிறது. முதலில் என்ன நேரும் என்பதை ஜனங்களுக்கு முந்தியே எச்சரிக்கை கொடுப்பதற்காகவும், இரண்டாவது அதுவரும்போது, வெறும்

வார்த்தை மாத்திரமில்லாதபடி வாஸ்தவத்தில் கஷ்டங்கொடுக்கும் போது அவர்களைத் தட்டிக்கொடுத்துச் சந்தோஷப்படுத்துவதற்காக வும், கொடுத்து வருகின்றது. ஏனெனில் வார்த்தையாக கேட்பதற் கும் வாஸ்தவத்தில் அனுபவிப்பதற்கும் எவ்வளவோ வித்தியாச மிருக்கின்றது.

கர்மம், பிரபஞ்ச நியதியாயிருப்பதால் அதை சற்று விலக்கியும் வைக்கலாம், அல்லது அதை உடனே வரும்படியாகவும் செய்யலாம். அதாவது, அது உன்னை தாக்கும்படியான நிலையில் உன்னை வைத் துக்கொள்ளலாம். அல்லது தற்சமயத்தில் உன்னை தாக்காதபடி பதுங்கி இளைப்பாற ஒரு நிலையில் உனனை வைத்துக்கொள்ள லாம். பிரபஞ்ச நியதிகள் சட்டவிதிகளைப்போல இல்லை என் பதை அடிக்கடிச் சொல்லவேண்டியிருக்கிறது. அவைகள் எதையும் செய்யென்று அதிகாரஞ்செய்கிறதில்லை. சாதாரண உவமை ஒன்றை எடுத்துக்கொள்வோம். காந்த சக்தி நம்மைச் சுற்றிலும், எங்கும், எப்போதும் சுறுசுறுப்பாய்த்தான் இருக்கிறது. ஆனால் ஒரு இடத்தில், ஒரு குறித்த காலத்தில் அதனுடைய வேலையைப் பார்க்க வேண்டுமானால், அதை வெளிப்படுத்தக்கூடிய இயந்திரங்கள் நமக்கு வேண்டியதாயிருக்கிறது. அதே பிரகாரம், கர்மம் பிரபஞ்சத்தி லுள்ள நியதி. ஒருவனுடைய வாழ்க்கையிலிருக்கும் கர்ம வேலைகளை துவக்க யந்திரம் யாதெனில் அவன் பிறப்பு என்கிற வழியாய்ப் பூலோகத்திற்குத் தேகமெடுத்து வரவேண்டியிருக்கிறது. அவனது வாழ்க்கை கொஞ்சம் வேறாக இருந்தால் அதுகர்மத்தைப்பலப்படுத்தி துரிதப்படுத்தும். உதாரணமாக சீக்கிரம் தேர்ச்சியடையும்பொருட்டு நீ ஒரு மாணாக்கனாக இருக்க வேண்டிக்கொள்ளும்போது, கர்மத் திற்கு அதிகாரிகள், நீ கொடுத்த உனது வேண்டுகோளின சம்மதத் தின்பேரில் அந்த யந்திரத்தை (தேகத்தை) கொஞ்சம் திருத்தி அங்கிருக்கும் கர்மத்தை அதிகமாக வெளிப்படுத்தி, அதிசீக்கிரத் தில் உன்னுடைய பாகத்தை முடித்துக்கொள்ளும்படி செய் கிறார்கள். உன்னுடைய இச்சை தான் யந்திரத்தை திருத்தின தற்கு முக்கிய காரணம்.

அதிசீக்கிரம் பரிபக்குவம் அடையவேண்டும், ஆதலால் தனது தீவினைகளைச் சீக்கிரம் ஒழிக்கவேண்டும், என்கிற இச்சை வாஸ்தவ

மான விருப்பமாக இருந்து, அவனுடைய ஜீவான்மா அந்தப்படி நோக்கியிருந்தால், அப்போது அவனுடைய ஆவல், கர்ம அதிகாரிகளுக்கு எட்டும். அவர்கள் இவன் முன் செய்தவினையைத் தூண்டி இவன் பேரில், இறங்கிவரும்படி செய்வார்கள். கர்மம் அங்கே சஞ்சிதமாய் இருக்கிறது; புதிதாய்ச் சேர்ப்பது என்றல்ல. ஆனால், அவன் சேர்த்து வைத்திருப்பதை ஒழிக்க எத்தனிக்கிறார்கள்.

என்னவிதமாய் கர்மம்நடத்துகின்றது என்பதை நீ தெரிந்திருப்பாயாகில் உனக்கு நேரிடும் எதைக்குறித்தும், நீ ஆச்சரியப்படமாட்டாய். ஆல்கியூனியின் முற்பிறப்புகளை வாசித்து யோசித்துப் பாருங்கள். அவைகளில் பயங்கரமான கஷ்டங்கள் எத்தனையோ அவருக்கு உண்டாயிற்று. ஒரு பிறப்பில் அவருடைய குழந்தையை கொலை செய்யப்பட்டது. இன்னொன்றில் தான் செய்யாத குற்றம் ஒன்றால் சாட்டப்பட்டு மரணதண்டனைக்கு உட்பட்டார். இப்படி அநேகம், நேர்ந்தன. நீ அவைகளைக் கதையைப்போல வாசிக்கும்போது இந்தக் கஷ்டங்களை நீ தெரிந்துகொள்ள முடியாது. ஆனால் இந்த ஜென்மத்தில் அவைகளில் ஏதாவது ஒன்று உனக்கு நேரிடுமாகில் நீ அப்போது அவைகளை வெகு கடுமையென்று நினைப்பாய். இவ்வித துரதிர்ஷ்டங்கள், துக்கங்கள், எல்லாம் தீவினையை அகற்றும் வழிகள்.

கஷ்டங்கள் மேலும் மேலும் உனக்கு நேரிடுமானால், கர்ம அதிகாரிகள் உன்னுடைய பிரார்த்தனையைக் கவனித்திருப்பதாக அது காட்டுகிறது. அது ஒரு நல்ல சகுனம். விஷயங்கள் வெகு சௌகரியமாகப் போய்க்கொண்டிருக்குமானால் கர்ம தேவர்கள் இன்னும் கவனிக்கவில்லையென்று அருத்தம். ஆகையால் இந்த விஷயத்தில் உலகினர் மதிக்கின்றதை குப்தநோக்கம் தலைகீழாய்ப் பார்க்கின்றது. கெட்டவை என்று உலகினர் சொல்லும் விஷயங்கள் குப்த முறையின்படி நல்லவை.

உனக்கிருக்கும் வருத்தத்திற்கும் நஷ்டத்திற்கும் அதிகமாய் உனது சுற்றியுள்ளவரிடமிருந்து கண்டனமும், பழியும், வருமானால் அப்போது தான் எல்லாவற்றைவிட உன்னதமான கர்மம் உனக்கு வந்திருக்கின்றது என்று காட்டுகிறது. சில கஷ்டங்கள்

மற்றவர்களை உடனே பரிதவிக்கச் செய்கிறது. கஷ்டப்படு பவனைப்பற்றிய பரிதாபமெல்லாம் அவனுக்கு மெத்த உதவி தரு கின்றது. ஆனால் சில கஷ்டங்கள் பழியைத் தூண்டுகிறது. உன்னால் கூடியவரையில் நீ செய்திருக்கக்கூடும். எனஞலும் கடுமையான கஷ்டம் உனக்கு வரலாம். இதோடு உலகம் உன்னை எதிர்த்துப் பழிகூறும். இந்தப்படி நேருமாகில் பழைய வினையின பெரும் பாகத்தை நீ ஒழிக்கினறாய். பிரியப்படாத பழிவந்தால் ஒருவனை அவனுடைய வினையை சீக்கிரமாயும் முற்றும் அநுபவித்துத் தீர்க்கச் செய்கிறது.

இவ்விஷயங்களைக் காதால் கேட்டுக்கொண்டிருக்கும் வரையில், அல்லது வாயால் வாசித்துக்கொண்டிருக்கும் வரையில் நியாயப்படி வாஸ்தவமென்று பார்க்க சுலபந்தான. ஆனால் நீ செய்யவேண்டியது யாதெனில் கஷ்டந்தரும் சந்தர்ப்பத்தில் அவைகளை ஞாபகப்படுத்திக்கொள்ள வேண்டியது. ஜனங்கள் சாதாரணமாய் செய்வது யாதெனில் அவர்களாகவே கஷ்டப்படாதிருக்கும் வரையில், வாஸ்தவந்தான் என்று ஒத்துக்கொண்டிருந்து, கஷ்டம் வந்த உடனே அந்த நியாயத்தை மறந்து விடுகிறார்கள்; இவ்வுண்மைகளை உன்மனதில் மறக்காமலிருக்கும்படி திடமுடன் வைக்கவேண்டியது. அப்படி வைத்திருந்தால்,வருத்தம் வரும்போது தட்டிக்கொடுத்து தாங்க பலம் உனக்கு வரும். மற்றவர்கள் கஷ்டப்படும்போதும், அவர்களுக்கு உதவிபுரிய உனக்குத் துணிவு கொடுக்கும். உனது சுற்றிலுமுள்ள நல்லவர்களைப்பற்றி நாம் அடிக்கடி கேட்கிறோமல்லவா? அவர்கள் இப்பிறப்பில் கண்ணியமாயும் உபகாரத்தன்மையாயும் வாழ்கிறார்களே தவிர, வேறொரு கெடுதியாவது செய்யவில்லை; அப்படியிருக்கும்போதே, அவர்களுக்கு கஷ்டங்கள், அடிக்கடி வருகின்றன. இதைக் கவனித்துப் பார்த்தால் உண்மையை கொஞ்சம் தெளிவாய்த் தெரிந்துகொள்ளமுடியும். நம்மைவிட நல்ல அதிர்ஷ்டமுள்ளவர்களுடன நம்மை ஒத்துப்பார்ப்பது நமது வழக்கம்; அதைவிட்டு நமக்கு வந்திருக்கும் நன்மையைப்பற்றி நன்றியோடிருக்க வேண்டுமானால் நம்மைவிட அதிர்ஷ்டக் குறைவிலிருப்பவருடன் ஒத்துப்பார்ப்பது நல்லது.நாம் நன்றியறிய நம்முடைய நிலையில் எவ்வளவு அனுகூலம் இருக்கின்றது என்பதை நாம் மறந்துவிடுவது சகஜம். ஏனெனில்

நாம், நமக்கு வரும் கஷ்ட நஷ்டங்களைப்பற்றியே எப்பொழுதும் யோசித்துக் கொண்டிருக்கின்றோம்; அப்படிச் செய்யப்படாது.

C. W. L.:—கர்ம நியதியின் உண்மையை, தெரிந்திருக்கிற வன் எவனும், களிப்புடனிருக்கத் தவறமாட்டான். கர்மம் என்பது மேலே எறிந்த கல்லைத்திரும்பி தரையில் விழும்படி இழுக்கும் பூமிக் கிருக்கும் சக்தியைப்போல் அது ஒரு நியதி,என்பதைச்சுத்தத்தெளி வாய்த் தெரிந்திருக்க வேண்டியது.அது எப்போதும் வேலையாயிருக் கிறது. அது எப்போதாவது, ஒரு சமயம், ஏதாவது செய் யும்போது, வந்து தாக்குவதாக ஜனங்கள் பேசிக்கொண்டும் நினைத் துக்கொண்டு மிருக்கிறார்கள். இது உண்மையல்ல. நாம் அதன (நிய தியின்) எல்லைக்குள் ஒவ்வொரு நிமிஷத்திலும் இருக்கின்றோம். ஒருவன் ஏதோ திட்டமானதை நினைக்கும்போதும், பேசும்போதும் அல்லது செய்யும்போதும், கர்ம நியதியின் வேலைக்காக சந்தர்ப்பங் களை அவன் ஏற்படுத்துகிறான். இந்த க்ஷணம் கர்ம நியதி களஞ்சியத் தில் நம்முடைய நற்செய்கைகளுடையவும் துற்செய்கைகளுடைய வும் மொத்த கணக்கு ஒனறு ஒவ்வொருவனுக்கும் இருக்கினறது. ஏனெனில் நாமெல்லாம் காட்டுமிராண்டி நிலையிலிருந்து வந் திருக்கின்றோம். அப்போது அடக்கமுடியாத அநேக விஷயங்க ளைச் செய்து வந்திருக்கின்றோம். அவைகளை யெல்லாம் கழிக்க அநேக ஜன்மங்கள் எடுத்திருந்தாலொழிய, நம்மெல்லாருக்கும் தீவினையின் மூட்டைகொஞ்சம் இருக்கத்தான் இருக்கும். நமக்கு கஷ்டம் வரும்போது அதை கழிப்பதற்காகவும், ஒருக்கால் அது கடைசி பாகமாயிருக்கலாம் என்றும் வகித்துக்கொள்ளவேண்டும். பெருத்த அடியார்களுடைய சரித்திரத்தைப் படிக்கும்போது, அவர் கள் படாத கஷ்டத்தைபட்டுப்தேறிவந்ததை நாம் காணலாம்.உலகத் திற்குஉதவிசெய்யப்பிரயத்தினப்பட்ட எல்லோரும் கடுமையாகவே கஷ்டப்பட்டவர்கள். தீக்ஷைக்கு இது ஒரு சாதனம். ஆனுல் அது எப்போதும் கண்டிப்பாய் நியாயப்படியிருப்பதே. ஏனெனில் பயிற் சிப்பதற்கென்றுகூட அநியாயமாய் யாதும் நடக்காது.

கர்ம அதிகாரிகள் கர்மத்தை முறைப்படி பகுத்துக் கொடுக்கிற வர்கள். ஒரு விதத்தில் அதிகாரிகள் என்கிற பதம், சரியான கருத்

தைக் கொடுப்பதில்லை; கர்மத்தை நடத்தி ஆள்பவர்கள் என்கிற கருத்தைத் தருகிறது. கீழே இழுக்கும்படியான பூமியின் நியதியை நிறுத்தி ஆளமுடியாது. ஆனால் சில இடங்களில் சிலவகையில் அதை உபயோகப்படுத்திக்கொள்ள, ஒழுங்கு படுத்திவைக்கலாம். அப்படியேதான் கர்ம நியதியிலும். அதில் வேலை செய்பவர்கள் அதை நிருவாகஸ்தர்கள். ஒருவனுடைய சஞ்சித களஞ்சியத்திலிருந்து ஒருபகுதியைப்பிராரத்வமாகப்பொறுக்கியெடுத்து, அதை அடுத்த ஜன்மத்தில் அநுபவித்துக்கழிப்பதற்காக கொடுப்பது அவர்களுடைய வேலையில் ஒன்று. அவனுடைய கர்மக் களஞ்சியத்திலிருப்பதைவிட அதிகமாய் நல்லதையாவது, கெட்டதையாவது கொடுக்க முடியாது. ஆனால் இவனால் சமாளித்துத் தாங்கமுடியுமென்பவைகளை கர்மதேவர்கள் யோசித்து அதிலிருந்து பொறுக்குகிறார்கள். என்றாலும் மனிதனுடைய சித்தம் கட்டுப்படாதது. பொறுக்கிக் கொடுத்த கர்மத்தை அவர்களால் ஏற்படுத்திய காலத்திற்குள் சீக்கிரமாய்க் கழித்துவிட்டால்இன்னும் கொஞ்சம் அதிகம் கொடுப்பார்கள். "கடவுள் எவர் பேரில் அன்பு பாராட்டுகிறாரோ அவரைக் கண்டிக்கிறார்" என்கிறவாக்கியத்தின் பொருள் இது. நேரிடுபவைகளை நியாயப்படி எடுக்காமல் கஷ்டத்தோடும் இன்னும் மூடத்தனத்தாலும் எடுப்பதால் தங்களது வினைமூட்டையில் இல்லாத கஷ்டத்தை தாங்களாகவே வருவித்துகொள்கிறார்கள். ஆனால் கர்ம அதிகாரிகள் இதற்கு உத்தரவாதிகளல்ல.

"எவ்வளவு கடினமானதா யிருந்தபோதிலும், இதைவிடக் கடுமையாயில்லாமல் நின்றுவிட்டதே யென நீ நன்றியுள்ளவனாக இரு."

C. W. L:—கஷ்டப்படுபவா சௌகரியமாயிருந்த காலத்தை நினைத்து இது எவ்வளவு கடினமானதென்று சொல்லுவது ஒவ்வொருவருக்கும் வழக்கம். நாம் அதை இன்னொரு வகையில் எடுத்து "கஷ்டம் இதைவிட கடினமாயிருந்திருக்கக்கூடும்" என்றும் "இந்த கர்மக்கடன் தீருகின்றதைப்பற்றி சந்தோஷம்;இன்னும்தீர்க்க வேண்டி அதிகமாயும் வரக்கூடும், குறைந்தபக்ஷம் இதை அநுகூலமாக்கிக்கொள்வேன்" என்றும் சொல்லலாம்.

"உனது கொடிய கன்மத்தை யனுபவித்துத் தீர்த்து நீ அதன்சிக்கிலிருந்து விடுபட்டிருந்தாலொழிய நீ குருநாதனுக்குப் பிரயோஜனப்படமாட்டாய் என்பதை ஞாபகத்தில் வை."

A. B.:—மாஸ்டருடைய கருத்தின்படி பின்தங்கி யிருக்கும் கெட்ட கருமம் ஒன்றை ஒருவன் அநுபவித்து ஒழித்து விடுவது மெத்த நல்லது. ஏனெனில் மாஸ்டர்களுக்கு ஊழியஞ் செய்பவர்களுடைய கொடிய கர்மத்தால் அவருக்குத்தடை ஏற்படுகின்றது,என்பதை ஞாபகப்படுத்திக் கொள்ளவேண்டியது. இது ஊழியஞ்செய்பவர்களை உபயோகப்படுத்திக்கொள்ளத் தடுக்கின்றது; இல்லாவிடில் தாராளமாய் உபயோகித்துகொள்ளமுடியும். மாடம் பிளாவட்ஸ்கி அம்மையார், எப்போதும் தான் உள்ளும்புறமும் உண்மையாய்இருப்பதைப் பகிரங்கமாய்ச் சொல்லுவது வழக்கம். அவருக்கு,"குலூம்ப்" கஷ்டம் வந்தபோது இது இப்போது யான் அனுபவிக்கதக்கதல்ல; என்றாலும் முன் ஊழ்வினை என்றார். அந்த கர்மத்தை கழிக்கவேண்டியிருந்தது. ஆதலால் அந்த விஷயத்தைப்பற்றி அவரைப் பழிகூறி வெட்கக்கேடான வழியில் நடத்தியது அவருக்கு ஓர் பெருத்த ஆசீர்வாதம்.இதை அவர் நியாயப்படிபார்த்தபோது தெரிந்துகொண்டிருந்தார்;ஆனால் சில சமயங்களில் மேலாகக் கொஞ்சம் வருத்தம் அவருக்கிருந்தது.

இந்த எண்ணத்தைக்கொண்டு வாஞ்சையுடையவர்கள் உதவி பெறவேண்டியது. தங்களைவிட்டு மாஸ்டர்களை நோக்கி "பட்டுக் கொண்டிருக்கும் இந்தக் கஷ்டங்கள் என்னை அவருக்கு மெத்த பிரயோஜனப்படச் செய்கின்றன" என்று நினைக்கவேண்டும்.

நீ உன்னுடைய கர்மத்தை துரிதப்படுத்தக் கேட்டிருந்தாயானால், அந்த வேண்டுகோளின்படி கொடுத்தபோது, அதைப்பற்றி முறையிடுவது நியாயமல்ல. "நான் கர்மத்தினின்று விடுபட்டவனானால் மாஸ்டர்களுக்கு மெத்த உபயோகப்படுவேன்" என்கிற உற்சாக கருத்தை எப்போதும் வை. வெகுமதி ஒன்றை கொடுத்தபிறகு, திருப்பி எடுத்துக்கொள்ளக் கூடாது. இக்கருத்து சில பழைய இந்திய சாஸ்திரங்களில் வெகு சாதாரணமாயிருக்கின்றது. அவை

களிலிருக்கும் உவமான கதைகளில் அடிக்கடி வருகிறது. ஒருதரம் கொடுத்த வெகுமதியையாவது அல்லது கொடுத்த வார்த்தையொன்றையாவது, திருப்பி எடுக்கமுடியாது. கொடுத்த வெகுமதியொன்று ஏதோ வொரு சந்தர்ப்பத்தால் உன் கைக்கு திரும்பி வருமாயின் அதை நீ மறுபடியும் கொடுக்கவேண்டும். அது உன்னுடையதல்ல. வைத்துக்கொள்வது களவு. ஆகையால் உன்னை நீயே அர்ப்பணமாக கொடுத்த இந்த வெகுமதி எல்லாவற்றைவிட மேலானது, கண்ணியமானது. இதைத் திருப்பி எடுத்துக்கொள்ளக் கூடாது. ஜனங்கள் மாஸ்டர்களுக்கு வார்த்தையாலே தங்களை அர்ப்பணஞ் செய்கின்றார்கள். ஆனால் மாஸ்டர்கள் அதிக கடுமையாக போவார்களானால்கொடுத்ததை திரும்ப இழுத்துக்கொள்ள அந்த வெகுமதியின் பேரில் ஒருவிரலை வைத்துக்கொண்டே இருக்கிறார்கள். இது அவ்விதமாய்த் தானிருக்கிறது. சொன்ன வார்த்தையின்படி அவர்களை மாஸ்டர் எடுத்துக்கொண்ட பிறகு, அவர்கள் பின்னுக்கு இழுத்துக் கொள்வார்களானால், இவர்கள் தங்களையே ஏமாற்றிக்கொள்வதையும், சாதிப்பதற்குமேல் வாக்கு கொடுப்பதையும் தாங்களாகவே பார்க்கும்படி அவர் சிலசமயம் சோதனை செய்வதுண்டு.

C. W. L.:—ஒருவனுடைய கொடியகர்மத்தை எல்லாம்கழித்துவிட்டால் அப்போது மாஸ்டருடைய ஊழியத்திற்காக அவன் காலமுழுவதையும், பலத்தையும் கொடுக்க தடையில்லாதவனாக இருக்கிறான். நம்முடைய கெட்ட கர்மத்தால் மாஸ்டர்களுக்கு தடை ஏற்படுகிறதென்று முந்தியே விவரித்திருக்கின்றது. ஆதலால் அதை சீக்கிரம் ஒழித்துவிடுவதால் அவருக்கு சேவகம் செய்ய நம்மை தக்கவர்களாக ஆக்கிக்கொள்கிறோம். 1884 வருஷம் சென்னையில் 'மாடம் பிளாவட்ஸ்கி' அம்மையாரபேரில் 'மாடம் குலூம்ப்' என்பவரும், மற்றவர்களும் பழி கூறினபோது, அந்த அம்மையார் இவ்வித கருத்தைதான் வெகு பலமாக கொண்டிருந்தார். அவ்வித பழிகூறி எதிர்த்ததைப்பற்றி கோபமாய் இருந்தபோதும், அவர்கள் காட்டின நன்றியற்ற தனத்திற்காக விசனப்பட்டுக்கொண்டிருந்தபோதும், இது சொஸைடியின்பேரில் தாக்கி அதற்கு ஏதாவது இடையூறு வந்துவிடுமோ என்கிற மனக்குழப்பம் இருந்தபோதும், சொன்னதாவது "குறைந்தபக்ஷம் இந்த கஷ்டங்களெல்

லாம் அவருக்கு ஊழியஞ்செய்ய மிகத் தகுதியாக என்னை ஆக்கிவிடுகிறது என்பதை ஞாபகத்திற்கொள்ள வேண்டியது என்றார்.

இக்கருத்தை சொசைடிக்குவரும் கஷ்டத்திற்கு மாத்திரமன்றி நமக்கு வரும் சொந்த கஷ்டங்களுக்குகூட நாம் பிரயோகிக்கலாம் சொசைடி, ஏதாவது ஒரு கெட்ட கர்மத்தை ஒழித்துக்கொண்டிருக்கும்போது, மாஸ்டர்களுடைய சேவகத்தை எப்போதும் நினைத்துக்கொள்; ஏதோ ஒரு கஷ்டத்தைக் கடந்த தக்ஷணம், அது முன்னுக்குப் போகின்றது. ஏனெனில் சில கெட்ட கருமத்தைக் கழித்துவிட்டபடியால் மெத்த உபயோகமாய்விடுகிறது. அதைபோஷித்திருக்கிறவர்களுக்கு நல்ல கருவியாய்விடுகிறது.

அதனுடைய கர்ம பகுதியைக் கழித்தபிறகுசொசைடி பெருத்த விஷயங்களைக் குறித்து மேல் நோக்கிப்போகும். அப்பேர்ப்பட்ட கர்மம், சொத்தை சரக்குகளாயுள்ள மெம்பர்களை உலுக்கித் தள்ளிவிடுகிறது; மாடம் பிளாவட்ஸ்கி அம்மையார் சொல்லுகிறபடி, இதற்கு மேல் உண்மையை அறியமாட்டாதவர்கள், அதாவது இப்போது இருக்கிற நிலைக்குமேல் போகமாட்டாத பதர்களை உதறித் தள்ள வேண்டி இருக்கிறது. இவர்கள் முந்தி பெருத்த உதவிகொடுத்திருக்கக்கூடும்; என்றாலும் இனிவரும் விருத்திக்கு ஓர் தடையாக நிற்கின்றார்கள். என்றாலும் நம்மில் அநேகர் அந்த சிநேகிதர்களை இழக்க மெத்த விசனப்பட்டார்கள். கடைசியாக வந்த கஷ்டத்தில் என்னைச் சுற்றிலும் என்னைப்பற்றி சுழல்காற்று ஒன்று ஏற்பட்டது. இதை தவறுதலாககொண்ட அநேகருக்காக மன்னிப்புகேட்க நல்ல இடமிருந்தது. ஆகையால் மஹாசோஹனை முறையிட்டுக் கேட்க நான் பிரயத்தினப்பட்டேன். இந்த சோதனை அவர்களுக்கு மெத்த கஷ்டமென்று சொல்லி அவர்களுக்காக தயவுசெய்யும்படி அவரைக் கேட்டுக்கொண்டேன். என்னுடைய துணிவுக்காக அவர் அன்புடன் புன்சிரிப்புகொண்டு "இவர்கள் 'மிஸிஸ் பெஸன்டை' பிரசிடென்டு ஆக்கவிடாது தள்ளிவிடுவார்களானால் அப்போது உனக்குத் திருப்தியாகுமா" என்றார். "ஆம்" என்றேன். அவர்கள் அவ்விதம் செய்யமாட்டார்கள் என்று எனக்குத் தோன்றியது. சிலமாதங்களுக்குப் பிறகு அவர்கள் அந்த அம்மாள்பேரில் விரோதங் காட்டினார்கள். மஹாசோஹன் அப்போது அதேவித

புன்சிரிப்போடு "பார்த்தாயா இந்த ஜென்மத்தில் அவர்களுடைய சூரியன் அஸ்தமித்துவிட்டது; ஆனால் இதர ஜென்மங்கள் இருக்கின்றன, சூரியன் மறுபடியும் உதயமாகும்" என்றார்.

இந்தியாவில் சபையொன்று, ஒரு செல்வாக்குடைய மெம்பரால் தழைத்தோங்கி வந்து, அவர் அந்த இடத்தைவிட்டுப் போனபோது மங்கிவிடுகிறது; இப்படி சிலசமயங்களில் நேரிட்டாலும் சொஸைடிக்காக முக்கியமாய் வேண்டியது ஒருவரே என்பதல்ல. மாடம் பிளாவட்ஸ்கி அம்மையார் இறந்துபோனபோது அவருடைய உற்சாக போதனைகளுக்கு வழக்கப்பட்டவரில் அநேகர், எல்லாம் இருளடைந்துபோம் என நினைத்தார்கள். மற்றொரு பெருத்த ஆசாரியரான நமது பிரசிடென்டு அந்த இடத்திற்கு கிளம்பி வந்துவிட்டார். என்றாலும் இவர் விட்டுப்போக தருணம் வரும் போது சொஸைடியைப்பற்றி எவரும் கவலைப்பட வேண்டியதில்லை என்று முதலில் சொல்லுவார் என்று எனக்கு நிச்சயம். கருவிகள் தங்கள் தேகங்களை மாற்றிக்கொள்ளுகின்றன. அறிவீனர்கள் கண்ணுக்கு அவர்கள் இறந்துபோகிறதாகக் காணப்படுகின்றனர். ஆனால் இதற்கு மூலாதாரமாய் நிற்கின்ற மாஸ்டர்கள் மாறுகிறதில்லை. இவர்கள் அந்த இடத்தில் இருக்கிறவரையில் இவர்கள் வேலையைச் செய்ய யாராவது ஒருவரை எப்போதும் காணலாம்.

> "அவருக்கு உன்னை நீ கொடுத்துவிட்டதனாலேயே, உன் கன்மவினையைத் துரிதப்படுத்தும்படி நீயே கேட்டுக்கொண்டாய்; ஆகவே, மற்றபடி நூற்றுக்கணக்கான பிறவிகளில் பரவக் கூடிய கர்மவினையை இப்பொழுது, இரண்டொரு ஜென்மங்களில் அனுபவித்து நீ கழிக்கப்போகின்றாய். அப்படி கழிக்கும்போது அதிலிருந்து கூடிய அளவு பிரயோஜனம் அடையும் பொருட்டு நீ அதனை முகமலர்ந்து சந்தோஷத்துடன் சமாளித்துக் கொள்ளவேண்டும்.

A. B.:—பழைய கடனைத் தீர்க்கும் வகையில் புதிய கடனுக்கு விதை ஏற்படுகின்றது. இதை ஒருபோதும் மறக்கக்கூடாது. கெட்ட

கர்மமாக இருப்பதை உன்னால் கூடியவரையில் உபயோகப்படுத்திக் கொண்டால், நல்லதைச் செய்ய புதியதிறமைக்கு ஊட்டங்கொடுக் கின்றாய். அப்படிக்கின்றி கெட்ட கருமத்தை அருவருப்புடன் முறுமுறுத்துக்கொண்டு கடனைக் கழித்தால், நல்லதைவிட்டு கெடு திக்குபலம் வருகிறது. கிருஸ்துபகவான மலைமீது கொடுத்த பிர சங்கத்தை கவனி:—"உன்னுடைய மாற்றானோடு வழிபடும்போது அவனுடன் சீக்கிரம் ஒத்துநட" உனக்குவரும் துரதிர்ஷ்ட கஷ்டங் களில் நடந்துகொள்ள இதுவொரு நல்ல புத்திமதி. உனனுடைய கஷ்டங்களும், நஷ்டங்களும், பகைவரைப்போல உனனிடத்தில் வருகின்றன, அவைகளைத் தைரியத்துடன் எடு. சீக்கிரம் அவைக ளோடு ஒத்துக்கொண்ட பிறகு, அவைகள் தாமாகவே கழிந்து போகின்றன. பழைய வினைக்கதிரை அறுக்கும்போது புதியநாற்றை நடாதிருந்தால் நம்முடைய கெட்ட கருமத்தை மெத்த சீக்கிரமாகத் தொலைத்துவிடலாம்.

C. W. L.:—தங்களை மாஸ்டர்களுக்கு ஒப்புவித்து கொடுப்ப தாக ஜனங்கள் சில சமயம் பேசுகிறார்கள், பிறகு மாஸ்டர் அதிக மாக கேட்பாரோ என்று பயப்படுகிறார்கள். "அனனியஸ்" "சாப் பிரா" என்பவர்களுடைய மனோநிலையைப் போலிருக்கிறது. அந்த துர்பாக்கியமுள்ள புருஷனுக்கும் பெண்ஜாதிக்கும் அவர்களுடைய ஆஸ்தியில் இஷ்டப்பட்ட பகுதியை வைத்துக்கொள்ள முழு சுதந் திரமிருந்தது. ஆனால் அவர்கள் எல்லாம் கொடுத்துவிட்டதாக பாசாங்கு செய்தபோது தப்பிதஞ் செய்தார்கள். "நான் இதை கொடுக்கமுடியும்; அவருக்காக இவ்வளவு தான் செய்யமுடியும், ஆனால் என்னிடத்தில் இருப்பதெல்லாம் கொஞ்சம்" என்றுசொல் லுவது நாம் போகும் நிலையின் அந்தஸ்தைக் காட்டுகின்றது. ஆனால் ஒருவன் தன்னை மாஸ்டர்களுக்கு தத்தம் செய்கிறபோது, மற்ற கொடையை கொடுப்பதுபோலவே மனப்பூர்த்தியுடன் செய்ய வேண்டும். அதை எப்படி உபயோகிக்கவேண்டும் என்பது கொஞ் சங்கூட நிபந்தனையில்லாமல் அதை கொடுக்கவேண்டும். அதில் எதையாவது திருப்பி எடுக்க பிரியமிருக்கக் கூடாது. அவர் அதிக மாய்க் கேட்பாரோவென்று எவரும் அதைரியப்பட வேண்டிய தில்லை. நாம் மாஸ்டர்களுக்கு நம்மை ஒப்புவித்துக்கொண்டால்

திடீரென்று கஷ்டம் நமக்கு வந்தால் ஆச்சரியப்பட்டுக்கொண்டு வருத்தப்படக்கூடாது. கொடுத்த கொடையில் ஒருபகுதி ஏற்றுக் கொள்ளப்பட்டது என்று அது காட்டுகிறது. உலகினர் கெடுதி என்றும், கஷ்டமென்றும் சொல்லும், அநேக விஷயங்கள், விரைவான தேர்ச்சி வருவதைக் காட்டும் குறிகள் என்று எடுக்கவேண்டியது. நம்மோடு பரிதாபப்படுவதை விட்டு ஜனங்கள் நம்மை பழி கூறுவார்கள் ; ஆனால் இது சாதாரணமாய் எல்லாவற்றைவிட மெத்த நல்ல கருமம். துரபிப்பிராயங் கொள்ளுவதும் நம்முடைய நல்லதை கெட்டதாகச்சொல்லி பழிபோடுவதும்,இவைகள் ஜனங்களுக்கு முடிவாயுள்ள வீட்டிற்கருகில் நெருங்கிவரும்போது சம்பவிக்கின்றன. பெருத்த ஆசாரியர்கள், மகான்கள், ஒவ்வொருவருக்கும் இவ்விதம் நேர்ந்ததை சரித்திரத்தில் காணலாம். இதை களிப்புடன் சகித்துக் கொள்வதிலிருந்து நல்ல கருமம் விளைந்துவருகிறது. இன்னும் சாந்தம், வீரியம், சகித்தல் கஷ்டம்தாங்கல் திடம், முதலிய நற்குணங்கள் நம்மில் ஏற்பட்டு வருகினறன. ஆதலால் முன்னுளிலிருந்து வந்தகொடிய ஊழ்வினையிலிருந்து நல்லதை கொண்டு வரமுடியும்.

"இன்னுமொரு குறிப்பு:—எனது என்னும் மமகார ஸ்மரணையை (என்னுஸ்தி, என் பொருள் என்று உரிமைகொண்டாடும் உடைமையுணர்ச்சியை) நீ பற்றற விட்டொழிக்க வேண்டும். நீ மிகப் பிரியப்படுகிற பொருட்களையெல்லாம், கன்மம் உன்னிடமிருந்து போகச் செய்யும். இன்னும் பக்ஷத்தோடு நேசிக்கும் பந்து மித்திரர்களையும உன்னைவிட்டுப் பிரியச் செய்யும், அப்பொழுது கூட நீ முகமலர்ச்சியோடிருப்பதும் தவிர, எல்லாப் பொருளையும், எதுவாயிருந்தபோதிலும் அதைத் துறந்து கைவிட நீ சித்தமாயிருக்க வேண்டும்."

A. B.:—முன்னதைவிட எவ்வளவோ கஷ்டமான விஷயத்திற்கு இப்போது நாம் வந்திருக்கின்றோம். ஊழ்வினையைச் சகித்தல் இதைவிட மெத்த சுலபம். என்னுடைய உரிமை, எனது சொந்

தம் என்கிற எல்லாவித உணர்ச்சியை நீக்கவேண்டும். முதலில் பொருள்களின்மேலிருக்கும் உரிமையை ஒழிக்கவேண்டும். பிறகு உற்ளுர் உறவினரைப்பற்றிய உரிமையை நீக்கவேண்டும். பிந்தியது வெகு நுட்பமான கஷ்டம். உனக்கு மெத்த பிரியமாயிருப்பவரிடத்திலிருக்கும் சொந்த உரிமை நினைவை ஒழித்திருக்கின்ருயா ? ஜனங்கள் ஒழித்துவிட்டதாக நினைத்திருக்கும்போதே அவர்களை சோதிக்கச் சந்தர்ப்பங்கள் வருகின்றன. அப்போது அவர்கள் ஒழிக்கவில்லை என்று காட்டுகிறது. உன்னுடைய உயிரைக்காட்டிலும் மெத்த பிராணனுயிருக்கும் ஒருவரை உன்னிடமிருந்து பிரிந்து போக சகிப்பாயா ? மாஸ்டர்களிடத்தில் உனக்கிருக்கும் பக்தியை, மெத்த கஷ்டமாகவிருக்கும் இந்த சோதனையைக்கொண்டு சோதிக்கலாம். பரிசோதிக்க சந்தர்ப்பம் வருமுனனே வாஞ்சையுடையோர்கள் தாங்களாகவே சோதித்துக்கொள்ளவேண்டிய குறிப்பு இது. ஏனெனில் முந்தியிருந்தே சோதித்துவருவதால் அது வந்த பிறகு கொடுக்கும் கஷ்டத்தை குறைத்துக்கொள்ளலாம். ஒருவர் பேரிலிருக்கும் அனபை எடுத்துவிட எத்தனிக்காதே. இப்படி செய்வது மாந்திரியருடைய வேலை. அனபைப் பாராட்டிக்கொண்டே இதை (பற்றை) எடுக்க அப்பியாசிக்கவேண்டும். ஆனுல் அவனிடமிருந்து கொஞ்சகாலத்திற்கு விலகியிருந்து உன்னுடைய வாழ்வை உற்சாகப்படுத்திக்கொள்ள வேண்டிய ஏதோ ஒரு வேலையைச் செய்து வரவேண்டியது. அவ்விதமாய் ஏதாவது ஒனறைச்செய். அதை, களிப்புடனும் சந்தோஷத்துடனும் உன்னுல் செய்யக்கூடுமானுல் அப்போது, கூப்பிட்டவுடன் வருகிறேன் என்று பதில் சொல்லும் நிலைக்கு வருவாய். எல்லாவற்றையும் துறந்து மாஸ்டர்களைப் பின்பற்றி வரும்படி அழைக்கப்படும் நிலையிலிருப்பாய்.

'பாலஸ்டைனில்' மைத்ரேயபகவான் இருந்தபோது, நடந்த வரலாற்றில் நமக்குத் தெரிந்தவரையில் இதைப்பற்றி வற்புறுத்துவதை ஞாபகப்படுத்திக்கொள்ளுங்கள். கூப்பிட்ட ஒவ்வொருவரும் சந்தர்ப்பத்தைத் தழுவி எடுக்க எழுந்திருக்கவில்லை. ஆனுல் சிலர் வந்தார்கள். எல்லாவற்றையும் துறந்து, அவரைப் பின்பற்றினவர்கள் அவர் போனபிறகு ஆசாரியர்களானுர்கள். மற்றவர்களோ எங்கிருக்கின்ருர் என்று கேட்கவேயில்லை. பணக்காரவாலிபன் விசனப்பட்

டுப்போனதைக் கவனியுங்கள். என்றாலும் பணத்தை (ஆஸ்தியை) மாத்திரம் துறக்க அவனுக்குச் சொன்னது. அந்த வாலிபனுக்குக் கிடைத்த சந்தர்ப்பம் நமக்குக் கிடைத்திருந்தால் உடனே பின் தொடர்வோம் என்று ஜனங்கள் நினைக்கின்றார்கள்; என்றாலும் பெருத்த ஆஸ்திகளைவிட்டு நாடோடியாயிருந்த ஆசாரியரைப் பின் பற்றுபவர்கள் அநேகரிருப்பார்களென்று நான் நினைக்கவில்லை. கிருஸ்துபகவான் அப்படித்தான் தன்னைச் சுற்றிலும் அறைகுறை வாசிப்புடையவருடன் ஊரூராய்த் திரிந்துகொண்டிருந்தார். என்றாலும் நீ பிரியப்படும் ஒவ்வொரு விஷயத்தையும் நீ மெத்த நேசிக்கும் ஒவ்வொருவரையும், எல்லாவற்றையும், துறந்து மாஸ்டர்களைத் தொடருவதற்காக சிஷ்யத்வபடியிலிருக்கும் சோதனை இது.

C. W. L.:—சுயகாமியத் தன்மைபடி நம்முடைய சொந்தமெனபது யாதுமில்லை எனறும், நமக்கு இருக்கப்பட்டயாவும் பிரபஞ்ச விருத்திக்காக நம்மிடத்தில் ஒப்புவித்திருக்கிறது என்றும், நாம் அறிந்திருக்கவேண்டும். ஒருவனுக்கு பணமிருந்தாலுஞ் சரி, அல்லது அதிகார செல்வாக்கிருந்தாலுஞ்சரி அது வேலையை அதிகமாய்ச் செய்வதற்காக கொடுத்திருக்கும் சந்தர்ப்பம். பிரத்தியேகமாய் நமக்காக உபயோகப்படுத்திக்கொள்ள நமது என்று யாதும் நமக்கில்லை. ஒருவன் ஒரு வணிகசாலையில் காரியகர்த்தாவாகி அல்லது அதிகாரியாகயிருந்து அதன் பணத்தை கையாடும் அந்தஸ்தில் இருக்கலாம். ஆனால் அவன் அதனுடைய ஒவ்வொரு தம்பிடி விஷயத்திலும் தன் சொத்தைப்போலவே ஜாக்கிரதையாயிருக்கலாம். ஒவ்வொரு பணக்காரனும் ஒவ்வொரு அதிகாரஸ்தனும் இவ்வித நோக்கத்துடனிருக்கவேண்டியது கடமை.

மானிடவர்க்கத்திற்கே ஒரு பிரதிநிதியாக வாழவேண்டிய நோக்கத்தைபற்றி மாஸ்டர்கள் வெகு அற்புதமாயும் நேர்த்தியாயும் கூறியிருக்கின்றார். அவர்களுக்கிருக்கும் மகத்தான சித்திகளையெல்லாம் மணியக்காரரைப்போல அவைகளை வைத்திருக்கிறார்கள். இப்படியிருப்பதால்தான் மாஸ்டரவர்கள் நன்மைக்காகிலும், தீமைக்காகிலும், மானிட நிலைக்குள் பந்தப்படுத்தும் கர்மம் யாதொன்றும் செய்கிறதில்லை. பெருத்த காரியஸ்தர்களான இவர்கள், கர்த்தாக்

களான இவர்கள், சுத்தமாய்ச் சுயகாமியமில்லாதபடி நிஷ்காமியமாய் எல்லாம் செய்வதனால் இவர்களைப் பந்தப்படுத்துவது யாதுமில்லை. போர்களத்தில் படைவீரன் கொல்லும்போது பகையாளி இன்னவன் என்று எண்ணாமலும், தான் ஒரு நியாயத்திற்கென்கிற உணர்ச்சியுடன் ஓர் யந்திரத்தைப்போல் போர் செய்வதுபோல இவர்கள் (மேலோர்) வேலை செய்கின்றார்கள். ஆகையால் இவர்கள் சகோதரபாவ மஹாசங்கத்தின பகுதியாகவும், வெள்ளியம்பலத்தின் பகுதியாகவும், மானிடவர்க்கத்தின பகுதியாகவும், வேலை செய்து வருகிறார்கள். அவர்கள் செய்யும் எல்லா நன்மையும் மானிடவர்க்கத்திற்கு வந்து அதை சீர்தூக்க உதவுகின்றது.

பொருள்களைப் பற்றி சொந்தம் என்கிற உணர்ச்சியை முதலில் விடவேண்டும். பிறகு பந்துமித்திரர்களைப் பற்றியதைவிடவேண்டும். இது இன்னும் மெத்த கஷ்டம். இவர்கள் மரணத்தால் பிரிக்கப்படுவார்கள். ஒரு சமயம் மானிடவர்க்கத்திற்கு ஊழியஞ்செய்ய தூரதேசம்போவதற்காகப் பிரிக்கப்படும். நடந்த பெருத்த சண்டையில் அநேக ஆயிரம் பேர்கள் பிரிந்தது உண்மைதான். நியாயத்திற்காகச் சண்டைசெய்யப்போக பெண்ஜாதி புருஷனை கொடுத்தாள், தாயார் பிள்ளையைக் கைவிட்டாள். நாட்டுக்காக அநேக ஆயிரம் பேர்களை கொடுத்ததுபோல நாம் மாஸ்டர்களுடைய பணிக்கு கொடுக்க தாமதிக்கின்றது நமக்குத் தகுதியல்ல. நம்முடைய பிராணனுக்குமேல் பிராணனா யிருக்கப்பட்டவரை விடுவது கஷ்டந்தானா; என்றாலும் அநேகர் செய்தார்கள். சிலர் வெகு துக்ககரமான நிலையிலிருந்தும், மற்றவர்கள் தெய்வீகமாக அர்ப்பணமாக நோத்தியான நிலையிலிருந்தும் கொடுத்தார்கள்,

பிரபஞ்சத்திலுள்ள இந்த கஷ்டங்களிலிருந்து தப்பித்துக் கொள்ள அன்பை, பக்ஷத்தை, சுத்தமாய் நீக்கிவிடுவது தந்திரவாதிகளுடைய வழி. ஆனால் சகோதரபாவ மஹாசங்கத்தில் சேர பிரியப்பட்டவர்கள், தங்களுடையபிரேமையை எப்போதும், அதிகமாக்கிக் கொண்டே,அதைத்தடுக்கும் சுயகாமிய தன்மையை நீக்கிவிடவேண்டும். நமது பாக்கியவதி வர்ஜின்மேரி அம்மாளுடைய இருதயத்தில் அம்பு தைத்ததை கவனியுங்கள். தனது அருமை மகன் ஞாபகத்தை,

இதயத்திலிருந்து முற்றும் எடுத்துவிட்டு,அவரைச்சுத்தமாய் மறந்து விட்டிருந்தால் அந்த அம்பு தைக்காதபடி தப்பித்திருக்கலாம். அநேக சந்தர்ப்பங்களில் கிருஸ்துபகவான தனேப்பற்றி "நான் உலகத்திற்கு சமாதானம் கொண்டு வருவதாக நினைக்காதீர். நான் சமாதானம் கொண்டுவரவில்லை. வாளை கொண்டுவந்தேன்" என்று சொன்னதுபோலிருக்கின்றது. அவருடைய புதிய போதனையை அங்குமிங்கும் இருக்கப்பட்ட குடும்பங்களில் ஒருவர் எடுத்துக் கொள்வார். அதை மற்றவர்கள் ஆக்ஷேபிப்பார்கள். ஆதலால் பிரிவு ஏற்படும். அல்லது ஒருவன் தான செய்யக்கூடிய ஏதோ ஓர் முக்கிய வேலை செய்வதற்காகத் தன்னுடைய வீட்டையும் நாட்டையும் விடவேண்டிவரும், என்பது அவருடைய கருத்து. அவவிதமே திவ்யஞான உண்மைகளை ஒருவர் தெரிந்துகொள்ள மற்றவர்கள் தெரியாதவர்களாய்க் கஷ்டத்தையும் பிரிவையும் உண்டாக்கின குடும்பங்கள் இருக்கின்றன. தற்காலத்தில் ஒருவன் பணம் சம்பாதிக்கும்பொருட்டு, குடும்பத்தைவிட்டு சமுத்திரந்தாண்டி வேறு தேசத்திற்குப் பலகாலும் போவதுண்டு. இதை எவரும் ஆக்ஷேபிக்கிறதில்லை. ஆனால் மானிடவர்க்கத்திற்கு நன்மை செய்யப் போவதாக சொல்லுவார்களானல் உடனே அதை மறுத்து வாதஞ் செய்கிறார்கள். நம்முடைய நாளில் விருத்திக்கு வராத நோக்க மிப்படியிருக்கின்றது.

இளவரசர் **சித்தார்த்தர்** மதவிஷயவாழ்க்கையில் தன் காலத்தை உபயோகிக்கப் பிரியப்பட்டபோது 'சுத்தோதன' ராஜன் உண்டாக்கின கஷ்டங்களை ஞாபகப்படுத்துங்கள். தனது பிள்ளைக்கு ஏற்பட்டிருக்கும் அதிர்ஷ்டவழியில்அவரைபோகவிடாதுதடுக்க,ஏராளமான திரவியத்தைச் செலவழித்து தன்வாழ்நாளைக் கழித்தார். ஜோசியர்கள் சொன்ன இரண்டுவிதத்தில்: உலகத்திற்கு ஆசாரியராக வருவதைவிட்டு, இந்தியாவில் மகாராஜனுக வரும்படி எத்தனித்தார். மதாசாரியர் என்றால் தனதுபிள்ளை வறுமையையும் சந்நியாசத்தையும் தழுவவேண்டியதென்று இராஜனுக்குத்தெரியும். ஆனால் உண்மையில் இராஜனைவிட ஆசாரியர் உயர்ந்த அந்தஸ்து என்பதைத் தெரிந்து கொள்ளவில்லை. தேச சரித்திரத்தில் வெகு தூரம், வெகு காலம் வரையில் போகக்கூடியது,பெருத்த ராஜனுடைய பெயரல்ல

மதாசாரியாருடையதே. இணையில்லா வல்லமையும் கீர்த்தியும்தனது பிள்ளைக்கு வரவேண்டு மென்பது சுத்தோதனராஜனது பிரியம். ஆனால் அவர் கோரினவண்ணம், செய்துவைத்த கிரமப்படி நடக்கவில்லை. புத்தபகவானுடைய வல்லமை பூலோகாதிபதியை விட அதிகம். அவருடைய கீர்த்தி உலகெங்கும் பாவிற்று.

கிருஸ்துபகவான் ஜனங்களுக்கு "எல்லாவற்றையும் துறந்து என்னைப் பின்பற்றி வாருங்கள்" என்று சொன்னார். நமது கிருஸ்தவ நண்பர்கள் இதை வாசிக்கும்போது அதை அப்போதே செய்து விட்டதாகத் தெரிந்து கொள்கிறார்கள். அது அவ்வளவு நிச்சயமல்ல. அக்காலத்திலிருந்த ஜனங்களின் நிலைமையில் நாம் நம்மை வைத்துப் பார்ப்போம். மெத்த ஆஸ்தியையும் பொருளையும் உடைய வாலிபன் அவரிடத்தில் வந்ததை கவனியுங்கள். அந்த ஆஸ்திகளோடு கூட அவனுக்கு செய்யவேண்டிய வேலைகள் இருந்தன. இவைகளை அவன விடமுடியவில்லை. அச்சமயத்தில் தேச அபிப்பிராயமும், யோக்கியதை அந்தஸ்து உடையவர்களும், மத அதிகாரிகளும் எல்லாரும் கிருஸ்துபகவானை எதிர்த்து நின்றார்கள். அவர் வறுமையோடுதிரிந்துகொண்டிருந்த ஆசாரியர் கீழே தலைவைக்க இடமில்லாதிருந்தவர்பினசெல்லுவோமா?பெரியமனுஷாளும் மதகர்த்தாக்களும் இன்னுமுள்ள மதாபிமானிகளும், பித்தம் பிடித்தவன எனறு சொல்லப்பட்டவர் பினசெல்ல எல்லாவற்றையும் விட்டுப்போயிருப்போம் என்பது நிச்சயந்தானா? முடிவாய்ப்பார்த்தால் சத்தைவிட்டு சக்கையைப்பறறினோம் என்ற ஓா ஐயம் வராதிருக்குமா? அது அவ்வளவு நிச்சயமாகவில்லை. தற்காலத்தில் அதைப்போல் இன்னும் பார்க்கப்பட்டவர்கள் ஒருக்கால் இருக்கலாம். மேலோரை பின்பற்றுவதற்காக மற்ற விஷயங்களை எல்லாம் விட்டுவிட்ட நம்மில் அநேகர் அதைப்பறறி ஒரு நிமிஷமாகிலும் விசனமுறவில்லை.

"பலசமயங்களில் குருநாதன் அவரது அடியானின் மூலமாய் உலகத்தாருக்குக் கடாக்ஷபலத்தைப் பாய்ச்சவேண்டியிருக்கிறது; அடியானவாடிவருந்திச்சஞ்சலத்திறகுட்பட்டிருக்குங்கால் அப்படியவர் அவனை உபயோகிக்க முடியாது. ஆகையால் களிப்புடனிருப்பதே ஒழுங்கு."

C. W. L.:—இந்நூலில் செய்யவேண்டிய ஒவ்வொரு விஷயத்திற்கும் அடிக்கடி இதே காரணம், அதாவது மாஸ்டர்களுடைய சேவகத்திற்காகவென்று காட்டியிருக்கிறது. மனவாட்டத்தை எடுக்க இதர காரணங்களை நாம் எதிர்பார்த்திருக்கக்கூடும். அவனுக்கு கெடுதியாயிருக்கிறதென்றும் மற்றவர்களுக்கும் சுகமில்லாத வகை கொடுக்கிறதென்றும்நினைக்கக்கூடும்ஆனால்இவ்விடத்தில்வற்புறுத்தியிருக்கும்குறிப்பு யாதெனில் நாம்அதற்கு இடங்கொடுத்தால் மாஸ்டரவர்கள் நம்மை ஒருவாய்க்காலாக உபயோகப்படுத்தமாட்டார்.

A. B.:—இவ்விடம் களிப்பு, கிரம ஒழுக்கமாயிருக்கவேண்டியது என்பதற்கு காரணம் இது. ஏனெனில் மறுபடியும் மாஸ்டர்கள் உனது உதவியைக் கோருகின்றார். நீ அவருக்கு உபயோகப்படுவாய் என்கிற உற்சாகக் கருத்தைக் காட்டியிருக்கிறது. அவருடைய சக்தியானது களித்திருக்கும் தன்மையோடு நிறைந்தது. ஏனென்றால் அது ஈசுவரனுடைய பகுதியாயிருக்கின்றது. ஆகையால் அதை மனவாட்டத்தால் அடைந்திருக்கும் குழியின் வழியாய் ஊற்றமுடியாது.

மாஸ்டர்கள் இதையாவது அதையாவது செய்யமுடியவில்லை என்று சொல்வது ஒவ்வாதுபோலத் தோன்றும், என்றாலும் உண்மையாய் முடியாதுதான. மாஸ்டர்கள் ஏதோ ஒரு விஷயத்தைப்பற்றி அதை செய்யமுடியவில்லை என்று சொல்லுவதை அடிக்கடி கேட்கிறோம். அவர்கள் இங்கே பூலோகத்திலிருக்கும் நிலையிலிருந்து வேலைசெய்ய அவர்களுடைய சக்திக்குத் தடை ஏற்படுகிறது. பூலோகத்திலுள்ள எவனாவது ஒருவனை மற்றொருவன் மூலமாய் அல்லாமல் நேராய் அவரால் எட்டமுடிகிறதில்லை. ஆதலால் அவர்களுக்கு உதவிதேவையாயிருக்கிறது. அதை நீ ஒருவேளை கொடுக்கமுடியும்; அவ்வித உதவி இல்லாவிடில் விஷயங்கள் செய்யாமலே இருக்கப்படும். பிந்தி இதை எடுக்காததால் ஏற்பட்ட தடைகளைக் களையவேண்டி வரும். இத்தடைகள் அங்கே இருக்கவேண்டிய அவசியமேயில்லை.

## 22 - வது அத்தியாயம்.

### ஒருமன நிலைநாட்டம் (சமாதானம்.)

> "உன் முன்னிலையில் வைத்திருக்க வேண்டியதொன்று யாதெனில் குருநாதனுடைய சேவையைச் செய்ய வேண்டுமென்பதே. செய்ய வேறெது வந்துநேர்ந்தாலும் குருநாதனுடைய வேலையை மாத்திரம் நீ மறக்கக்கூடாது."

C. W. L.:—சாதாரண வாழ்க்கையிலும் உண்மையாகவே சீர் பெறவேண்டுமென்றால் ஒருமனப்பாடு வேண்டியதாயிருக்கின்றது. ஒருமனப்பாடுள்ளவன அடைவினில் கோரினதைப் பெறுகின்றான். ஏனெனில்அவனுடைய சாமர்த்தியமெல்லாம் ஒருமிக்க வேலையில் இருக்கின்றது. மற்றவர்களோ அநேகவித நோக்கங்களை வைத்திருக்கின்றனர். அவைகளை அடிக்கடி மாற்றுகின்றனர். உதாரணமாக பணம் சம்பாதிகக வேண்டுமென்றவன் தன்னுடைய நினைவு இச்சை எல்லாவற்றையும் அந்த வேலையில் பிரயோகித்துச் சதா விழிப்புடனிருந்து கொண்டு சம்பாதிக்கும் உபாயங்களை கையாண்டு கொண்டிருப்பான். கோரின கோரிக்கை முற்றிலும் நிறைவேறும் என நிச்சயமாயிருப்பான். சாமர்த்தியம்அதிகரித்துக்கொண்டு வரவர, எல்லா வேளையிலும் மாஸ்டர்களுக்கு சேவகஞ்செய்ய ஒருவன் உறுதி செய்துகொண்டானுனல், அதற்காக மற்றவைமெல்லாம் ஒதுக்கிவைக்க சம்மதிப்பானுனல் அவனுடைய விருத்தி உண்மையில் விரைவாயிருக்கும்.

> "ஆனல் உன் வழியில் அதைத்தவிர வேறொன்றும் எதிர்ப்படமாட்டாது. ஏனெனில் நிஷ்காமியமான உபகார வேலை எல்லாம் குருநாதனுடைய சேவையே. அதை அவருக்கென்றே நீ செய்யவேண்டும். மேலும் அதை செய்யும் போது, அது உன்னுடைய உன்னதமான வேலை

யாயிருக்கும்படி, அதன் ஒவ்வொரு பகுதியிலும்
உன் முழுகவனத்தை நாட்டவேண்டும்.''

C. W. L.:—இனிமேல் மாஸ்டர்களுக்காக மெத்த உத்தர வாதியான வேலை எடுக்க சிஷ்யன் சித்தப்படுத்திக்கொள்ள வேண்டி யிருக்கின்றது. அவைகளில் சில, மாஸ்டருடைய தற்கால வேலைக்கு நேராக உபயோகப்படாவிட்டாலும்—உதாரணமாக ஒரு பள்ளிக் கூடத்து பையன் 'லாடின்' கற்றுக்கொள்ளும்போது உபயோகமுள் ளது ஒன்றையும் செய்யாவிட்டாலும்—இனிமேல் பிரயோஜனப் படவேண்டியதற்கு மனதின் சக்தியையும்,ஒழுக்கத்தையும் விருத்தி செய்துகொண்டு வருவதுபோலிருக்கின்றது. சாதாரண வாழ்க்கை யிலிருக்கும் வேலைகள் அநேகமாய் இவ்விதமாக இவ்விரண்டையும் தருகின்றன. ஏனெனில் அவைகளை நன்குய்ச் செய்பவர்களுக்கு கல்வியையும், பயிற்சியையும் தருகின்றன. மேலும் குணத்திலும், கருத்திலும், விருத்திக்குவரவேண்டி மற்றவர்களுக்கும்உதவிகொடுக்க அநேக சந்தர்ப்பங்கள் தருகின்றன. இவையெல்லாம் கண்டிப்பாய் மாஸ்டர்களுடைய வேலை. மாஸ்டர் பொருட்டே அவர் பெயரால் எல்லாவற்றையும் செய்யக் கற்றுக்கொண்டபோது நாளடைவி லிருக்கும் எவ்வித வேலைகளும் ஒருமன நாட்டத்தோடு அவருடைய ஊழியப் பிரயத்தினத்திற்குள் அமையும். மாஸடர்களுடைய வேலை யானது நம்முடைய தோழர்களுக்காக இருப்பதைவிட்டு தனித்து வேருய் ஒன்றுமில்லை. அவருக்கு முறைப்படி சேவகஞ்செய்ய ஒரு குடும்பத்தைச் சித்தப்படுத்தவும்,அவருடைய பணிக்காசப் பணம் சேகரிக்கவும், அவருடைய வேலைக்குதவ அதிகாரம் பெறவும், இவை எல்லாம் மாஸ்டருடைய வேலையின பகுதி. எனருலும் இவ் விஷயங்களில் அதிகாரத்தை பாராட்டுவெதிலும், பணத்தை கையாடு வதிலும், சுயகாமிய தன்மையைப் பாராட்டி அதை மாஸடருடைய பெயரால் என்று பக்தியோடு மூடி தாருக ஏமாந்து போகாதபடி ஜாக்கிரதையோடிருக்க வேண்டும்.

''முன் சொல்லிய ஆசிரியரே இன்னும்
எழுதியிருக்கிருர்; ''நீ யாது செய்யினும் அதை

மனிதருக்காக அல்ல; கடவுளுக்காக வென்று மனோகரத்துடன் செய்." நீ செய்யும் வேலை யொன்றைக் குருநாதன் வந்து பார்க்கப்போகின் றனென உனக்குத் தெரிந்திருந்தால் அதை நீ எவ்விதம் செய்வாய் என்பதை யோசி. அவ் விதமே உனது வேலை எல்லாவற்றையும் நீ செய் யவேண்டும். அந்த வாக்கியத்தில் அடங்கிய அருத்தமவ்வளவும், எவரெவ்வளவு அதிகமறி வுளரோ, அவ்வளவதிகம் அவருக்குத் தெரிய வரும். இன்னுமிதைப்போல், இதைவிட புரா தன வாக்கியமிருக்கிறது:—"செய்யவேண்டி யுன்கையில் வாய்த்ததெதுவாயினும் அதை முழு சாமர்த்தியத்துடன் செய்."

C. W. L.:—உலகத்திலிருக்கப்பட்டவை எல்லாம் உலகத் திற்கு இறைவனும் தீக்ஷைக்கு கர்த்தரான ஒருவருடைய பிரக் ஞையில் அடங்கி இருக்கின்றன. ஆகையால் நாம் செய்யும் ஒவ் வொன்றும் அவருடைய கண்ணெதிர செய்துவருகின்றோம். இவ் வுண்மையிலிருந்து தான், கடவுளை சர்வக்ஞானி, சர்வவியாபி என் கிற கிருஸ்தவ கருத்துகள் எடுத்திருக்கின்றன. அதில் கடவுளைப் பற்றி "அவரில் நாம் வசிக்கின்றோம், உலாவுகின்றோம் நம்முடைய நிலையை பெற்றிருக்கினறோம்" எனறு சொல்லியிருக்கிறது. இது கவிஞனுடைய மனோபாவனையல்ல; நம் உலகத்தின ஞான இறை வனுடைய பிரபை தேஜஸுக்குள் நாம் எல்லோரும் வசிக்கின்றோம் என்பது கண்ணால் பார்க்கும்படியான உண்மை. சந்தேகமினறி ஏககாலத்தில் எல்லா உலகையும் தெரிந்துகொள்ளும் பிரக்ஞை எப் பேர்ப்பட்டதென்று நாம் தெரிந்துகொள்ள முடியாதது; எட்டா தது; என்றாலும் ஒருநாளைக்கு அந்தபடிக்கு நாம போவோம்.

கடவுள் சர்வ வியாபியாயிருப்பதைப்பற்றி ஓர்பெருத்த பயங்கர மானவிஷயமாய் நினைத்தார்கள். கடவுள் எப்போதும் குற்றங் கண்டு பிடிக்க விழித்திருப்பதாயும் ஆக்ஞைகளை மீறி நடந்து குற்றஞ்

செய்யும் துர்பாக்கியமுள்ள வரின்பேரில் தன் கோபத்தைக் காட்ட வெகு ஊக்கத்துடன் பார்த்துக் கொண்டிருப்பதாகவும் நினைத்து கொண்டிருந்தார்கள். தாம் செய்கிற ஒவ்வொன்றையும் கடவுள் பார்க்கின்றார் என்கிற கருத்தால் அநேக குழந்தைகள் கடுமையோடு வருத்தப்பட்டார்கள். மறைவு யாதுமில்லையென்றும், இது சரியல்ல வென்றும் உணர்ந்தார்கள். மிரண்ட குழந்தை முக்கியமாய் தான் செய்ததைச் சொன்னால் தன்னுடைய உபதேசி எவ்விதம் எடுத்துக்கொள்வாரென்று தெரியாததால் வருத்தப்பட்டது. ஆனால் அதைவிட்டு மகத்தான தெய்வீக கருணையைத் தெரிந்துகொண்டால் அப்போது அவர் சர்வவியாபியாயிருப்பது நமக்கு அடைக்கலமாகவும் பெருங்கடாக்ஷமாகவும் இருப்பதை பார்க்கமுடியும்.

A. B.:—மாஸ்டரவர்கள் கொடுக்கும் இந்த உரைகல்லை எடுத்து நம்முடைய வேலையிலெல்லாம் உரைத்துப் பார்க்கவேண்டும். நீ ஒரு கடிதம் எழுதிக்கொண்டிருப்பதாக வைத்துக்கொள்வோம்; மாஸ்டர் வந்து அதைப்படிப்பதாக உனக்கு தெரிந்திருக்குமானால் அதை நடையிலும் சங்கதியிலும் வெகு ஜாக்கிரதையுடன் எழுதுவாய். நீ செய்யக்கூடிய உன்னதமான வேலை எதுவாயிருந்தபோதிலும் அது அவருடைய வேலை. ஏதோ ஒரு அவசர நிமித்தம் ஏதோவொன்றை மாஸ்டரவர்கள் உன்னை செய்யச்சொல்லலாம். அல்லது இனிமேல் செய்யவேண்டிய வேலைக்கு உன்னை சித்தப்படுத்திக்கொண் டிருக்கலாம். நாம் அவருடைய அடிமையாயிருந்தால், எல்லாம் அவருடையதே. மற்ற எவருடையதாக விருக்கமுடியாது, உனக்கு சாதாரணமாய் எப்போது மிருக்கப்பட்ட மனோநிலையாக இதை வைத்துக் கொள். அப்போது ஒருமனப்பாடு திடமாகிவரும் சௌகரியத்தை செய்து கொள்வாய்.

நமக்கு வாஸ்தவமாகவே ஒரு மனப்பாடு இருக்குமானால் ஒவ்வொரு விஷயமும் எவ்வளவோ நேர்த்தியாய் போய்கொண்டிருக்கும். அவருடைய வேலையாயிருப்பதால் எல்லாவற்றையும் செய்ய வேண்டும் என்கிற எண்ணம் எனக்கு இளைய சிஷியர்களைவிட மெத்த உதவிதரும் பழக்கமாக இருந்தபோதிலும், அவர்கள் வைத்திருக்கக்கூடியதைப்போலவே அதை என்னுடைய மனதில் வைத்·

திருக்கின்றேன். இக்கடிதத்திற்கு "நான் என் பதில் கொடுக்கவேண்டும்" என்று நானே சில சமயங் கேட்டுக்கொள்கிறேன். என்னுடைய கேள்விக்குப் பதில் கொடுக்கும்படி என்வழியில் வந்திருக்கிறது. ஆதலால் அது மாஸ்டர்களுடைய வேலை என்று என்மனதிற் படுகின்றது.

நீங்கள் சிஷ்யராயிருக்கும் காலமெல்லாம் உங்கள் மனதில் இந்த எண்ணத்தை கண் முன் வைத்துகொண்டிருங்கள். இந்தப் பழக்கத்தை எல்லோரும் செய்யவேண்டியிருக்கிறது. பிறகு அதை பலப்படுத்திக்கொண்டே போக வேண்டியது. நமக்கு என்னவேலையிருந்தபோதிலும் இதைக் கூடியமட்டில் செய்ய கருமம் நமக்கு உதவிக்கொடுக்கும். இந்தவேலை கடவுளின் வேலையில் ஒருபகுதியாயிருப்பதாலும், இது நமது ஒழுக்கத்தை சீர்படுத்தி வருவதாலும், நாம் இதை நம்மால் கூடியவரையில் செய்யவேண்டும். உனது வேலையை சுத்தமாய் உண்மையான வேலையாக செய்து அதில் அறைகுறையில்லாதபடிப்பார்த்துக்கொள்.

> " ஒருமன நிலைநாட்ட மென்பதற்கு, நீ இப்போது பிரவேசித்திருக்கிற மார்க்கத்தினின்று, ஒரு க்ஷணங்கூட எந்த விஷயமும் எக்காலத்திலும், உன்னைத் திருப்பமுடியாம லிருக்கவேண்டுமென்று அருத்தமுண்டு. மதிமயக்கங்கள், உலகசிற்றின்பங்கள், பந்துத்துவ நேசப்பற்றுகள் கூட, உன்னை அசைத்து அப்புறப்படுத்தி இழுக்க இசையாதிருக்கவேண்டும். ஏனெனில் நீ மார்க்கத்துடன்சேர்ந்திழைந்து ஏகமாகவிருக்க வேண்டும். உனக்கு அதைப்பற்றிக் கவலையில்லாமல் அதன் வழியே தொடர்ந்து நடக்கவும், அதைவிட்டுத் திரும்பமுடியாமலு மிருக்குமளவு அது உன் சுபாவமாகப் படிந்திருக்கவேண்டும். கூடஸ்தனுகிய நீ, மார்க்கத்தில் நடப்பதாக நிச்

சயஞ் செய்துவிட்டாய்; அதை விட்டு விலகிக் கொள்வது உன்னைவிட்டு நீயே விலகிப்போவது போலாகிறது.''

C. W. L.:—ஒருவன் மார்க்கத்தோடு ஒன்ருக வேண்டுமென்று இதில் சொல்லியதுபோலவே மற்ற சாஸ்திரங்களிலும் சொல்லி யிருக்கிறது. கிருஸ்துபகவான் தமது சிஷியர்களுக்கு "நான் வழி யாயிருக்கின்றேன" என்று சொன்னுர். ஸ்ரீ கிருஷ்ணபகவானும் "பக்தாள் நடக்கவேண்டியவழி நானுயிருக்கிறேன," என்று இதே மாதிரி சொல்லியிருக்கின்ருர். மௌனவாக்கிலும் இக்கருத்தை கொடுத்திருக்கிறது. அதில் "நீ மார்க்கத்துடன் ஒன்று படாதபடி நீ அதில் நடக்கமுடியாது" என்று சொல்லியிருக்கிறது. உண்மை யில் என்ன ஆகுதென்ருல் ஒருவன் தனது உண்மையான தானே தனுகிருன். பதஞ்சலி முனிவர் யோகத்தை விளக்கியதில் "ஒருவ னுக்கு மனதை அடக்கமுடியும்போது அவன் தன்னுடைய உண்மை நிலையில் (நிற்பான்) வீற்றிருப்பான" என்கிருர். பிரத்தியேகான்மா -தான் (Monad) உண்மையான நாம், மனிதரிலிருக்கும் கடவுள். ஆனல் அவர் தன்னுடைய பிம்பத்தை ஜீவானமாவாகாக்கி கீழ்அனுப் பியிருக்கிருர். ஜீவான்மாவும் இன்னெருமுறை தேகான்மாவாக பிறந்து வந்திருக்கிறது. ஒருவன் மெத்த தேறிவரும் வரையில் ஜீவான்மா தேகான்மாவை சமாளிக்க முடியாது. இதற்குமுன் தன் கையிலாகாத தருணத்தில் யாதும் செய்ய எத்தனிக்காமலே அதை பார்த்துக்கொண்டிருந்தது. பிறகு முதல் தீக்ஷை பெற்றவுடன் மறந்த வேளையில் தவிர, தேகான்மா தனக்கு என்கிற ஆசையை விட்டு மேலிருக்கும் ஜீவான்மாவுக்கு உழைக்க, தான் இருப்பதாக வகித்துக்கொள்கிறது. ஜீவான்மா அதன் மூலமாய் கீழ் உலகங்க ளில் கருத்தாயிருப்பதோடு தனக்குமேல் பிரத்தியேகான்மா ஒன்று இருப்பதாக தெரிந்து அதனுடைய இச்சைப் பிரகாரம் வாழ ஆரம் பிக்கிறது. ஜீவான்மா விருத்திக்கு வரவேண்டிய மார்க்கத்தை பிரத் யேகான்மா திடஞ்செய்து விட்டிருக்கிறது. அது வேறு எதையும் எடுக்க முடியாது.. ஏனெனில் தெய்வீக லோகங்களிலிருக்கும் கட்டு களிலிருந்து விடுபட்டு தான் தானுகி இருந்துகொண்டிருக்கின்றது.

மார்க்கத்திலிருக்கும்போது மாணக்கனை அந்தப்பக்கமும் இந்தப்பக்க மும் அடிக்கடி ஆட்டிவைக்கும். ஆனால் அவன் ஒரு மனப்பாட்டை பெற்றிருப்பானானால் நேர் வழியில் திரும்பிவந்து நிற்பான்.

A. B.:—ஜனங்கள் தாம் பிரத்தியோகான்மாவினுடைய தோற் றம் (விளக்கம்) என்பதை பலமுறை மறந்து விடுகிறார்கள். உண்மை யான நீ, பிரத்தியேகானமா. ஆகையால் நீ இங்கே கீழே செய்யும் ஒவ்வொன்றும் உன்னுடைய சொந்த உண்மையான இச்சையின் படி செய்கின்றாய். மற்று மற்றவனுடைய இச்சைப்படி வெளி பலவந்தத்தால் செய்வதல்ல. பிரத்தியேகான்மாவினுடைய இச்சை உனது இச்சை. ஆசைகள் எவ்விதத்திலும் உனது இச்சையல்ல. ஆனால் உன்னுடைய தேகங்களில் ஒன்று ஏதோ வொரு இன் பத்தை பெறும்பொருட்டு வெளி விஷயங்களில் உன்னை இழுக்கின் றது. இனபத்தில் பிரியப்படுகிறது நீயல்ல, ஜீவபூதம். இது ருசி பார்க்கவேண்டு மெனகிறது. அனுபவிக்க வேண்டுமென்கிறது. இந்த வர்த்தமானங்களை எதிர்த்து "நான்" ஆகிய"நீ" தடுக்கவேண் டியது. "நான" எப்போதும் பிரளாமல் மேலானதற்கே நோக்கி யிருப்பேன.நீ திக்குகாட்டும் (Compass) முள்ளைப்போல்அது அங்கு மிங்கும் திரும்பினாலும் தன் திக்குக்கு திரும்பிபோவது போல் நீ இருக்கவேண்டும். உன்னை யாதும் எந்தப்பக்கமும் இழுக்க முடி யாவண்ணம் நீ பலப்படும் வகையில் நீ ஒரு இச்சைக்கு உன்னை திருப்பிகொண்டு வர அப்பியாசிக்க வேண்டியது.

நீ ஜடமல்ல; ஜடமாயுள்ளதை உனது கருவியாக செய்யவேண் டும். உனனுடைய உபயோகத்திற்காக நீ பொறுக்கி எடுத்த ஒரு துண்டு ஜடத்திற்கு நீ அடங்கி போகிறது, புத்திக்கு ஒவ்வாதது. கையில் வைத்திருக்கும் சுத்தியானது தச்சன் இச்சைப்படி அடிக்கா மல் அது இஷ்டப்பட்ட இடத்தில் அடித்து, ஆணியை இருக அடிக் காதபடி, விரலை நசுக்குகிறதைப் போலிருக்கிறது. ஒருவன தனது விரல்களை தனது கருவியால் சில சமயம் நசுக்கிக்கொள்ளும்படி நேரிடுகிறது. ஆனால் வேலையில் திறமையில்லாததனால் அவன் அப் படி நசுக்கிக்கொள்ளுகிறான். உன்னுடைய கருத்தில் விசுவாசம் வைக்க கற்றுக்கொள். உனது உண்மையான இச்சைக்கு விசுவாசத்

தோடிருக்க கற்றுக்கொள். இதிலிருந்து திரும்பமுடியாமலிருக்கும் கவனம் உனக்கு வரும்.

ஒருமனப்பாட்டை ஒருநிலைத் தியானத்தாலும் விருத்திசெய்யலாம். ஒரு குறித்தகாலத்தில் ஒரு சிறியஇடத்தில் உனது கவனத்தை நாட்டு. நன்றாய் செய்யும்வண்ணம் அதிலிருக்கும் வஸ்துக்களை ஒவ்வொன்றாய் கவனி. நீரை ஒருகுழாயின் வழியாய்விட்டால் நீர் தாரை வேகமாய் போகும். அப்படிக்கின்றி பரவவிட்டால்தங்கி நிற்கும். இதைப்போல தான் உனனுடைய சக்திகள். வேலையை ஒன்றின்பின் ஒன்றாய் எடுத்துச் செய். எல்லாவற்றையும் ஏதோ ஒருவகையில் எடுப்பதைவிட்டு ஒவ்வொன்றாய் எடுத்துத் திட்டமாய் சாமர்த்தியத்தோடு செய். இந்த புத்திமதியை கிரமமாய் எடுத்து அனுஷ்டிப்பாயானால் ஏதோ கொஞ்சம் திட்டமான பலனை சீக்கிரம் பார்க்கமுடியும்; ஒவ்வொரு வாரத்திலும் கொஞ்சம் கொஞ்சமாய் வரும்; ஆனால் வாரங்கள் போகப் போக பலன் ஒரு மிக்க சோர்ந்து சீக்கிரத்தில் செய்த வேலை மெத்த அதிகரித்து வருவதும் தவிர பலமும் அதிகரித்துவரும்.



## 23-வது அத்தியாயம்.

### விசுவாசம் (சிரத்தை).

"நீ உன் குருநாதனை விசுவாசிக்கவேண்டும்; உன்னை நீ நம்பவேண்டும். குருநாதனை நீ தரிசித்திருந்தால், ஜன்மஜன்மங்களிலும் அவரை அதிதீவிரத்துடன் விசுவாசிப்பாய்; இன்னும் அவரைப் பார்த்திராவிட்டால், உன்னந்தரங்க அநுபவத்தில் அவரை உற்றறிய எத்தனித்து, அவரை விசுவாசிக்கவேண்டும்; ஏனெனில் நீ விசுவாசிக்காவிடில் அவராலும் உனக்குச் சகாயஞ்செய்ய முடியாது."

C. W. L.:—இவைகளில் ஒருபகுதி ஆல்கியூனியினுடைய சொந்த வார்த்தைகள். இவர் தனது மாஸ்டரைப் பற்றி இவ்விடம் பேசுகின்றார். ஆனால் மாஸ்டரும் அவருக்கு மேலாயிருக்கப்பட்ட பெரியார்களைப்பற்றி, இவ்விதமாகச் சொல்லியிருக்கின்றார். ஏனெனில் நாம் மாஸ்டரைப்பற்றி பக்தி விசுவாசத்தோடு பேசுவதைப்போலவே, நினைப்பதைப்போலவே அவர்களும் அவர்களுக்கு மேலாகிய புத்தபகவானைப்பற்றியும் மைத்ரேய பகவானைப்பற்றியும் முறையே நினைக்கிறார்கள், பேசுகிறார்கள்.

வாஸ்தவத்தில் நாம் மாஸ்டரை உற்றறிந்துகொள்ள நம்மால் முடியாது. தெரிந்துகொள்ளப் பிரயத்தனப்படலாம். நமக்குத் தெரிந்த உன்னதக் கருத்துக்களை நினைத்துகொள்ளலாம். ஆனால் நம் மனதிற்கு எட்டாத அநேகவித சிறப்புகளோடு அமைந்திருக்கின்றார். அவரைப்பற்றி நாம் ஏற்படுத்தும் உன்னதமான கருத்து மிக கீழ்ப்படியில்தானிருக்கிறது. அப்படியிருக்க அவருடைய ஞானத்தில் தீவிர விசுவாசத்துடனிருப்பது வெறும் சகஜமானதெளிவு.

மாஸ்டரிடத்தில் ஒருவன் வைக்கும் பூரண விசுவாசம் அநேகமாய், அவனுடைய பூர்வ ஜென்மத்தைபற்றி யிருக்கிறது. ஆல்

கியூனியின் முன் பிறப்புகள் ஒவ்வொன்றையும் வாசித்தால் அவர் இந்தப்படி வந்ததைப் பார்க்கலாம். சென்ற அநேக ஜென்மங்களாக இவர் தனனுடைய மாஸ்டருடைய சொந்த குடும்பத்துடன் இருந்தார். அந்த பிறப்புகள் ஒவ்வொன்றிலும் உதாரணமாக, நானும் என்னுடைய மாஸ்டருடன் அநேகமாதிரி சம்பந்தப்பட்டு வந்திருக்கின்றேன். அப்படியே மற்றவர்களும் வந்திருக்கின்றார்கள். நான் மாஸ்டரைப்பற்றி முதன்முதல் வாசித்தபோது அந்த க்ஷணமே அவர்பேரில் அதிதீவிர பக்தி உண்டானதற்குக் காரணம், அந்த முன் தொட்ட சேர்க்கையாகத்தான் இருக்கவேண்டும். அவரை நேரில் தரிசிக்க பாக்கியம் நான பெறறபோது, அவரைச் சந்தேகிக்கும் நினைவு ஒருக்ஷணமாவது தோன்றவில்லை. அப்பேர்ப்பட்ட சந்தர்ப்பங்களில் ஜீவான்மா, மாஸ்டரை நேராக மேல் லோகங்களில் தெரிந்து கொண்டிருக்கலாம். அல்லது அவரை அறிந்திருந்த பழைய ஞாபகத்தால் தெரிந்துகொள்ளலாம். சில சமயங்களில் ஜீவானமாவுக்குத் தெரியும். ஆனல் அந்த அறிவை தேகான்மாவுக்குத தெரிவிக்கமுடிகிறதில்லை. சில சமயங்களில் அதை அறைகுறையாய் அல்லது சரியில்லாதவகையில் தெரிவிக்கின்றது. இன்னும் இதர சமயங்களில் ஜீவான்மாவிற்கும் தெரியாமலே இருக்கலாம். ஜீவான்மா பிழையாக ஒன்றையும் அறிவதில்லை. அது எதைப்பற்றியாவது ஏமாந்து போவதில்லை. ஆனல் சில விஷயங்கள் அதற்குத் தெரியாதிருக்கின்றன என்பது தெளிவாயிருக்கின்றது. உண்மையில் ஜெனமம் எடுப்பதன் கருத்து அந்த அறியாமையைக் களையத்தான.

மாஸ்டர்கள் இருக்கின்றார்கள் என்பதைத்தெளிவாகத் தெரியாதவர்கள், மனிதன் விருத்தியாகிக்கொண்டு வரும் வழியில் கடந்து வந்தபடிகள் அநேகமிருப்பதால் முன்னுக்கும் அப்படியே யிருக்கவேண்டும் என்கிற நிச்சயமான கருத்தின் நியாயத்தை யோசிப்பார்களானல் நல்லது. கல்பமுடிவிலிருக்கும் முடிசூட்டின மன்னர்களென்று நம்மை நாம் நினைத்துக்கொள்ளக் கூடாது. அவர்களிருப்பதாக நிரூபித்து சொல்ல அவர்களை நேராய்த் தரிசித்தும், அவர்களோடு சம்பாஷித்தும் வந்தவர்கள் அநேகர் இருக்கின்றார்கள். (அவர்களுடைய ஆசிரமத்திற்குப் போனல் நேராய்த் தரிசிக்கலாம்.)

மாஸ்டர்களை நேராய்ப்பார்த்தவர்கள், சிலர்இருக்கின்றனர். அப்படியிருந்தும் அவர்கள் பிற்பாடு மாஸ்டரவர்களிடத்தில் முழு விசுவாசமில்லாது நழுவி தூரப்போய் விட்டிருக்கிறூர்கள். இது மனதிற்கு எட்டாத விஷயம். உதாரணமாக லண்டன் நகரத்து 'மிஸ்டர் ப்ரௌன' என்பவரைப்பற்றி எனக்கு நன்ருய் ஞாபகமிருக்கின்றது. இவர் தன்னுடைய வரலாற்றை விளக்கி ஒரு சிறு புத்தகமாக எழுதியிருக்கிறூர். ஆகையால் அவரைக் குறிப்பதில் தோஷமில்லை. அநேக வருஷங்களுக்கு முன, அவர் இந்தியாவுக்கு வந்தபோது, தியாசொபிகல் சொசைடிக்கு மூல கர்த்தரான மாஸ்டர்கள் இருவரில் ஒருவரை தூல தேகத்தில் நேராகப்பார்க்கும் பாக்கியம் கிடைத்தது. இப்பெரியார்கள் திபேத்திலிருக்கும் தங்களுடைய ஆசிரமத்தை விட்டு வருவது அபூர்வம். ஆனல் இவ்விரு மஹான்களும் வெகு நாளைக்குமுன் நான சொசைடியில் மெம்பரான பிறகு இந்தியாவிற்கு வந்திருககிறூர்கள். 'ஆக்கல்ட் வொர்ல்ட்' என்கிற புத்தகத்தில், மாஸ்டர் குதூமி அவர்கள் அமிரிட்சார் நகரத்திலிருக்கும் ஷிக்மதஸ்தர்களுடைய பொன சோயிலுக்கு வந்த சங்கதியை எழுதியிருக்கிறது. அதில் "நம்முடைய ஷிக்மதஸ்தர்கள் அவர்களுடைய கோவிலில் குடிமயக்கத்தால் தரையில் வீழ்ந்திருப்பதைக் கண்டேன். நாளையதினம் ஊருக்குத் திரும்புகிறேன்" என்று இருக்கிறது. தங்களுக்கிருக்கும் சக்திகளை மேல் உலகங்களில் அநேகமாய்ப்பிரயோஜனப்படும்படி உபயோகப்படுத்தி கொள்ளலாமென்று உலகத்தில் இப்போது அவர்களை கொஞ்சங்கொஞ்சமாய்ச் சூழ்ந்து வரும்சிஷியர்களுக்கு கீழ் இருக்கப்பட்டவேலையை ஒப்புவிக்கலாம் என்று வரவர காண்கிறூர்போலும்.ஆகையால் அவர்கள் ஆசிரமத்தை விட்டு வருவது அபூர்வம். வாலிபனை ப்ரௌன், மாஸ்டர் குதூமீ அவர்களின்உருவத்தை சூக்குமதேகத்தில் முதல் ஒரு தடவை பார்த்திருக்கிறுன்.பிறகுஇவன் கர்னல் ஆல்காட் துரைக்கு செக்கிரிடரியாக வடஇந்தியாவில் அவருடன் சுத்திக்கொண் டிருக்கும்போது மாஸ்டர் கர்னலை பார்க்க தூலதேகத்துடன் வந்தார். அப்போது ப்ரௌன் அதே கூடாரத்தில் வேறு அறையில் படுத்துக்கொண்டிருந்தான். மாஸ்டர் கர்னலோடு சிறிதுநேரம் பேசினபிறகு கூடாரத்தின் மறு அறைக்கு வந்தார். ப்ரௌன் தனது முகத்தை படுக்

கைத் துணிகளால் மூடிக்கொண்டான். மாஸ்டருடைய முகத்தை பார்க்கப்பயப்பட்டான் ஏன் இப்படி செய்தான் என்பது தெரிய வில்லை. சாதாரணமாய்க் குற்றமுடைய நெஞ்சு மெத்த கடுமையாய்ப் பட்டுக்கொண் டிருக்கவேண்டும். ஆனால் நெருப்புக்கோழி செய்வ தைப்போலஇவன் தன் தலையை படுக்கை துணியில் மூடிக்கொண் டது எதுக்காவது உதவுமென்று எனக்குத் தோன்றவில்லை. ஏனெ னில் படுக்கைதுணிகள் மாஸ்டருடைய தேவப்பார்வையை மறைக்க முடியாது. மாஸ்டர்பொறுமையுடன் "உன் தலையைபடுக்கைதுணிகளி லிருந்து வெளியில் எடு" என்று சொல்லி "நீ சூக்கும தேகத்தில் பார்த்ததுஎன்னைத்தானஎனபதை நீ பாரக்க நான்பிரியப்படுகிறேன்" என்றார். கடைசியாய் மாஸ்டர் சொல்லியும் கேட்காததால் ஒரு சிறு கடிதம் அவர்கையில் வைத்துப்போனார்.அப்புறம் ப்ரௌனுக்கு தன் சுயபுத்திவந்தது. அவனுக்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது. இதற்கு, அநேகர் எதைக்கேட்டாலும் கொடுப்பார்கள். இந்த தரிசனம் கிடைக்க பாக்கியவானாயிருந்தான். ஆனால் அவன், அதை எடுத்துக் கொள்ளவில்லை. பிறகு மாஸ்டர் இருப்பதைச் சந்தேகித்தான். மாஸ்டர்களைப்பார்க்க பாக்கியம் பெற்ற இன்னும் மற்றவர்கள் இருந் தார்கள். இவர்களும் எப்படியோ நழுவி விட்டார்கள்.

சில ஜனங்கள் முன் ஜென்மத்திய பழக்கத்தால் சந்தேகிக்கும் தன்மையை கொண்டுவந்திருக்கின்றார்கள். இன்னும் சிலரோ சொன்னதை எல்லாம் யோசிக்காமலே நம்புகிறவர்களாயிருக்கிறார் கள். மனிதனுடைய விருத்திக்கு இவ்விருவகை அதீதங்கள் நன் மையைத் தருபவையல்ல. இரண்டும் நியாய கிரமத்திற்கு ஒத்து வருபவைகளல்ல. ஒவ்வொருவனும் அவனவன் மனதில் விஷயங் களைப்பற்றி பொதுவான கருத்துகளை வைத்திருக்கிறான். ஏதோ ஒரு புதிய விஷயத்தை அவனுக்குச் சொன்னவுடன் அது அவைக ளோடு ஒத்திருந்தால் நிரூபிக்கும்படி கேட்காமலே சரியாயிருக்கும் என்று கொள்ள சித்தமாயிருக்கிறான். அப்போது "ஆம் அது மெத்த ஒத்திருக்கிறது நன்றாய் தோதுபட்டிருக்கிறது, அது அப் படி இருக்கலாம்" என்று சொல்கிறான். ஆனால் மற்றப்படி ஏதோ வொன்றைச் சொன்னால், அது அவனுக்குத் தெரிந்தவரையில் எதற் கும் சம்மந்தப்படாவிட்டால், அதை முற்றிலும் ஒத்துக்கொள்ளாத

படி தட்டி விடுகிறுன். ஒருவன் விஷயங்களின் அந்தரங்க கருத்தை வாசித்து அநுபவமுள்ளவனுனல் தனக்குத் தெரிந்ததற்குள் வராத எதையும் தள்ளிவிடும் நோக்கத்தை விட்டுவிடுகிறுன். தான் உத்தேசமாய் அபிப்பிராயப்படுவதை விட்டு, ஒத்துக்கொள்ளாமலும், இன்னும் அதை தள்ளாமலும் நிறுத்திவைக்க கற்கிறுன். "நான் பார்த்ததற்குள் அப்படியிருக்குமென்று எனக்குத் தோன்றவில்லை. ஆனல் அது அப்படியிருக்காது என்று எனக்கு சொல்ல முடியவில்லை; ஆனல்ஒருபக்கம் வைத்திருக்கிறேன் இன்னும் அதைப்பற்றி தெரிந்துகொள்ளும் வரையில் காத்திருப்பேன்" என்று சொல்லுவான் ஒருவிஷயம் ஒருவனுடைய அனுபவத்தில் வந்திராவிட்டால் அதை இல்லை என்று சொல்லுவது வீண்வாதம். இது அறிவீனத்தின் பழக்கம்.

சாதாரணமாய்ச் சொல்லுமிடத்து ஜனங்களுக்கு பூலோகத்தில் எவ்வளவுக்கெவ்வளவு அறை குறையாய்த் தெரிந்திருக்கின்றதோ அவ்வளவுக்கவ்வளவு அதிக நிச்சயமாயிருக்கின்றனர். சாதாரண இரசாயனவழியில் திடவாதத்துடன சொல்லுகிறவர்கள் எப்போதும் வாசித்துக்கொண்டிருக்கும் மாணுக்கர்கள். பெருத்த ரசயான சாஸ்திரிகளோ "அவவித விஷயங்களில் எனக்கு அனுபவமிருக்கிறது. ஆனல் அதை ஒரு நியதியாக எடுத்துக் காட்ட எனனல் முடியாது" எனறு சாதாரணமாய்ச் சொல்லுவார்கள். Lord Chancellor எனபவர் "இளைய பாரிஸ்டருக்கு இருக்கும் திடநிச்சயம் எனக்கு இருக்கிறது" என்று ஒருதரம் சொனனர். அவனுக்கு என நிச்சயமாயிருக்கின்றது என்றுலோ, ஒரு நிச்சயமாக சொல்லக் கூடாதபடி அநேக விஷயங்கள் இருக்கின்றன. அவன் அவைகளை எல்லாம் கற்கவில்லை. வருஷங்களாகப் பழகிக்கொண்டிருப்பவர்கள் எதையாவது சொல்லும்போது மெத்த யோசனையோடிருக்கிறுர்கள். நமக்கு இன்னும் தெரியாத உண்மைகள் எத்தனையோ இருக்கினறன. இப்போது நமக்கு சாதாரணமான வாழ்க்கையில் இருப்பவைகளை ஒரு தலைமுறைக்குமுன் முற்றும் முடியாதவையெனறு அநேகர் பரிகாசம் செய்திருப்பார்கள். முதலிலிருந்தே இந்த உண்மையைத் தெரிந்துகொண்டு வரக்கூடிய புதிய விஷயங்களுக்குச் சித்தமாயிருப்பது நல்லதுதான்.

அந்தரங்க விஷயங்களைக் கற்கும் மாணுக்கரான நாம் உத்தேச மாய் வைத்திருக்கும் கருத்துக்களால் கட்டுண்டிருக்காதபடி எத்த னித்தல் வெகு நல்ல பிரயோஜனமானது. நமக்கு ஒவவாத உண் மைகளாக விருந்தபோதிலும் அவைகளுக்கு நல்ல நியாயமிருக்கும் போது ஒத்துக்கொள்ள போதுமானஅளவு இணங்கும் மனமுடையவ ராக நாம் இருக்கவேண்டியது. அப்படி இருக்க முடியாவிடில் அவை ஒருபுறம் ஒதுக்கிவைத்து எனக்கு இன்னும் தெரியவில்லை என்று சொல்லவேண்டியது. அவைகளையாவது அல்லது அவைகளை நம்பி கொண்டிருப்பவர்களையாவது கண்டனம் செய்யக்கூடாது. உண் மை என்பதற்கு அநேக முகங்கள் இருக்கின்றன. அதை எல்லா முகங்களிலிருந்தும் ஏககாலத்தில் பார்க்க ஒருவராலேயாவது அல் லது பலபேர் சேர்ந்த கூட்டத்தாராலேயாவது சதாரணத்தில் இசை யாது. ஆனதுபற்றி நமக்கு தற்காலத்தில் நியாயப்படியல்ல வென்று சொல்லும் விஷயத்திலும் ஏதோ கொஞ்சம் உண்மை எப்போ தும் ஒட்டிக்கொண்டிருக்கலாம்.

ஒரு பெருத்த கஷ்டம் யாதெனில் ஒரு விஷயத்தைப்பற்றி சுத்தமாய் ஒன்றும் தெரியாதவர்கள் அதைப்பற்றி யெல்லாம் தெரிந்ததாக துணிகிறார்கள். முக்கியமாய் மதவிஷயங்களில் அவர் களுடையமனதில் புகுந்துகொண்டிருக்கும் ஏதோ ஒரு மதியேக் கத்தை மற்றவர்களை நம்பும்படி செய்ய இரைச்சலுடன் வாதஞ் செய்கிறார்கள். சில சமயங்களில் "மனச்சாக்ஷி எங்களை அப்படி செய்யச் சொல்லுகின்றது" என்று சொல்லுகிறார்கள். அப்படியிருந் தபோதிலும் சில விஷயங்களில் நாம் எப்போதும் நம்முடைய மனச்சாக்ஷியின்படி நடக்கக்கூடாது. ஏனெனில் ஜீவான்மாவிற் கிருக்கும் அறிவு கொஞ்சம்.எல்லாம் இன்னும் அதற்குத் தெரியாது. மனச்சாக்ஷி பேச்சைக்கேட்டு ஜனங்கள் மற்றவர்களைத் தகித்தும் சங் கடப்படுத்தியுமிருக்கிறார்கள். இதை சரித்திரத்தில் காணலாம்.இப் பேர்ப்பட்ட கருத்துகளை ஓர் புத்திமதியாக போதிக்கும் ஜீவான் மாவிற்கு முக்கியமான விஷயங்கள் தெரியாமலிருக்கலாம். ஒரு வன் தன்னுடைய மனச்சாக்ஷி சொல்லுவது வாஸ்தவந்தான் என்று நிச்சயமாய்த் தெரிந்தபோது,அதற்கு சந்தேகமின்றி காது கொடுக்க வேண்டும். ஆனால் 'பிஷப் சௌத்' என்பவர் அவரை மறுத்து

வனுக்கு கொடுத்த பேர்பெற்ற உத்தரம் யாதெனில் "தடையின்றி மனச்சாக்ஷியின்படி நட, ஆனால் உன்னுடைய மனச்சாக்ஷி முட்டாளுடைய மனச்சாக்ஷியாக இல்லாதபடி ஜாக்கிரதையாக வைத்துக்கொள்" என்றார். இதை இப்போதும் ஞாபகப்படுத்திக்கொள்ள வேண்டும்.

விசுவாசத்தோடிருப்பது நல்லதாய் இருந்தாலும் நம்முடைய அன்பின் அளவிற்குமேல் கொண்டு நம்புவதற்கு இடங்கொடுக்கக் கூடாது. எப்படியெனில் நாம் ஒருவனுடைய நற்குணங்களை யோசித்தபிறகு, அவனை நேசிக்கும் காரணம் படிப்படியாய் ஏற்படுவதுபோலவே நம்பிக்கைக்கும் வேண்டிய ஞாயங்களை யோசிக்க முடியும்; ஒருவேளை படிப்படியாய் அதைப் பெறக்கூடும். எதையும் குறிப்போடு நம்ப கண்டிப்பாய்ப் பிரியப்படக்கூடாது. ஆனால் உண்மையானது எதுவாய் இருந்தபோதிலும் அதை நம்ப இஷ்டப்படவேண்டும். என்றாலும் அந்த உண்மை முன ஜென்மத்திலிருந்து கொண்டுவந்த திடநிச்சயமாய் இல்லாதிருக்கும் பக்ஷத்தில் அவ்விஷயத்தைப்பற்றி மெத்த வாசித்த பிறகுதான் நமக்கு வரும்.

நமக்கு ஒவ்வொன்றையும் சுலபமாக்கி வைப்பது போதக ஆசாரியர்களுடைய வழியல்ல. மாடம் பிளாவட்ஸ்கி அம்மையார் மூலமாய்க் குப்தவிஷயங்கள் முதன முதல் எனக்குக் கிடைத்தன. அவர் சிஷ்யர்களுக்கு எப்போதாவது ஒருதரம் ஏதோ ஒருதுண்டு உபதேசிப்பார். ஆனால் அவர் எல்லாவற்றையும் வெகு கண்டிதமாக அடிக்கடி சோதிப்பார். இது மெத்த கடினமாய்ப் பயிற்றும் வகை; ஆனால் வாஸ்தவத்தில் காரிய கருத்தாயிருந்தவர்கள் அவரோடு இருந்தனர்; மற்றவர்களோ சீக்கிரத்தில் விட்டுப் போய் விட்டனர். அவர் எங்களிடத்திலிருந்த வீண்மரியாதை வழக்கங்களை எடுத்துவிட்டார்; இவ்விதம் செய்ததால் அநேகர் அவருடைய மனதை சோதித்தார்கள். பெருத்த ஆசாரியரான இவர் செய்யத்தகாத விஷயங்களைச் செய்தாரென்று சொன்னார்கள். எனக்கு எப்போதும் இருந்த உணர்ச்சி இது. அதாவது "மாடம் பிளாவட்ஸ்கி அம்மையாருக்கு இந்த குப்த அறிவு இருக்கின்றது. அந்த அறிவை கொடுப்பாரானால் அவரிடத்திலிருந்து பெற்றுக்கொள்

ளப்போகிறேன். மற்றது அவர் எதைச் செய்தாலும் அது அவருடைய அலுவல். அவரைத் தோஷம் கூற நான் இவ்விடம் வரவில்லை ; அவருடைய குருவுக்கு அவர் உத்தரவாதியாய் இருக்கின்றார், எனக்கல்ல. அவர் செய்யும் விஷயங்களுக்கு அவருடைய சொந்த காரணங்கள் இருக்கக்கூடும். அதைப்பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. அவருக்கு இந்த ஞானம் இருக்கின்றது. மாஸ்டர்களைப்பற்றி சொல்லுகின்றார். இந்த அறிவை நான் பெற்றுக் கொள்ளலாம் என்று இருக்கிறேன். மனுஷனால் கூடுமானால் மாஸ்டர்களுடைய பாதாரவிந்தத்தை அடையலாமென்றிருக்கிறேன்'' என்பதாக, அவர் வழிகாட்டியபடி பின்தொடர நான் எல்லாவற்றையும் துறந்துவந்தேன். நான மாடம்பிளாவட்ஸ்கி அம்மையாரிடத்தில் வைத்த விசுவாசத்தைப்பற்றி நான ஒருபோதும் வருத்தப்பட்டதில்லை. ஒருவன் சுபாவத்தில் தோஷங் கூறுந் தன்மையோடு இருந்தால் அவன் நியாயமான விஷயங்களை ஒத்துக்கொள்ளசித்தமாய் இருப்பவனைவிட வெகு மெதுவாய்க் கற்றுக்கொள்வான். இது இவனுடைய கர்மம்.

குப்தவிஷயங்களில் நாம் விளையாடக்கூடாது என்பதை ஞாபகத்தில் வைக்கவேண்டும். அப்படிச் செய்வோமானால் அதிலிருந்து யாதொரு பிரயோஜனமும் வராது. நாம் நல்லதை செய்யமாட்டோம். வாழ்க்கைக்கு முதன்மையான பிரயோஜனம் இல்லாவிட்டால் உபயோகமில்லை. அநேக நல்லவாகள் செய்கினறபடி வாழ்க்கைக்கு இரண்டாவதோ, அல்லது மூன்றாவதோ, அல்லது பதினேழாவது இடத்தை அதற்கு கொடுக்கமுடியாது. அது வாஸ்தவத்தில் வாழ்க்கைக்கு முதல் விஷயமாய் இருக்கவேண்டும். மற்றவை எல்லாம் அதற்குப் பிந்திதான் வைக்கவேண்டும். மாஸ்டரிடத்தில் விசுவாசம் என்பதால், நாம் என்ன கண்டிப்பாய்ச் செய்ய வேண்டுமெனபதை அவர் அறிந்திருக்கின்றார் என்றும், என்ன செய்யவேண்டும் என்பதைத்தான் அவா சொல்லுகிறார் என்றும், நாம் நம்பி இருக்கிறோம் என்று அருத்தம். ஆதலால் இந்த புஸ்தகத்தில் சொல்லுவதுபோல, அவர் ஓர் திட்டமான புத்திமதியை கொடுக்கும்போது, நாம் அதை அநுஷ்டிக்க நம்மால் கூடிய முயற்சி எடுக்கவேண்டும். இது கஷ்டமென்று எனக்குத் தெரியும். இதை

தான் ஜனங்களை நம்பும்படிச் செய்ய வெகு கஷ்டமாய் இருக்கிறது. அவர்கள் "நல்லது, அதற்குக் கொஞ்சம் ஒத்து இருந்தால் போதும், அப்படி ஏதோ கொஞ்சம் இருந்தால் போதும்," என்று சொல்லுகிறார்கள். ஆனால் சொன்னது சொன்னபடி செய்ய வேண்டும் என்பது அவருடைய கருத்து; நாம் அப்படி அவரை நம்பிநடவாதபோது தவறிவிட்டால் நம்மையே நாம் நொந்துகொள்ள வேண்டியது. குப்தவித்தையில் உலகிலுள்ள திடமில்லா பொய் நிலையைத் தாண்டி உண்மையான வெளிச்சத்திற்குப்போகவேண்டி இருக்கிறது—நம்முடைய உலகைவிட்டுஅவருடைய உலகத்திற்குப் போகவேண்டி இருக்கிறது.

> " பூரண நம்பிக்கை யிருந்தாலொழிய அரு
> ளும் கடாக்ஷபலமும் தாராளமாய் ஓடிவராது."

C. W. L:—ஒருவன் மாஸ்டர்கள் இருக்கின்றார்கள் என்கிற உண்மையை சந்தேகிக்கும் நிலையில் இருந்தானானால், அல்லது அவருடைய பாதாரவிந்தத்தை சேரவும், அல்லது தான் விருத்திக்கு வரவும் தனது சொந்த திறமையை சந்தேகிப்பானானால், அப்போது அந்த சந்தேகக் கொள்கையானது இவனை தவறான வழியில் போகும்படி தட்டி தூண்டிவிடுகிறது. மேலும் அப்படி சந்தேகத்தால் குடிகொண்டிருப்பவனை வாய்க்காலாக மாஸ்டர்கள் உபயோகிக்கமுடியாது. ஆகையால் சிஷியன் மாஸ்டரிடத்தில் விசுவாசம் வைக்க வேண்டியது; தவிர அவரிடத்தில் அன்பு பாராட்ட வேண்டியது. என்றாலும் அதேசமயத்தில் நிஷ்காமியார்த்தமாய் மானிடவர்க்கத்திற்கு அன்பு பாராட்டவேண்டும். எல்லாம் வைத்திருக்கும் மாஸ்டர்களுக்கு எப்போதுமிருக்கும் ஒரு கருத்து யாதெனில்: செய்யக்கூடிய வேலையில் தம்முடைய சக்தியை சிக்கனமாக செலவழிக்கவேண்டும் என்பதே; அப்படி செய்தால் இதர வேலைகளுக்கு உதவி அவர்அதிகமாய்க் கொடுக்க முடியும். நான் விவரித்தபடி சந்தேகநிலையில் எவனொருவன் இருக்கிறானோ அவன் நல்ல வாய்க்காலாக இருக்கமாட்டான். ஆதலால் மாஸ்டர்களுக்கு உபயோகமற்றவன். நம்முடைய உதவி அவருக்கு வேண்டியிருக்கும்போது உபயோகப்படாமலிருப்பது வாஸ்தவத்தில்

விசனப்படக்கூடியது தான். நம்முடைய கோசங்களில் அவருடைய சக்தியை நுழைந்துபோக விடாது விலக்கும் விகாரங்களை வைத்திருப்பது விசனிக்கத்தக்கது.

மாஸ்டரொருவரிடம் சிஷியனாக வர மெத்த வாஞ்சையுள்ள ஒருவனுக்கு நேர்ந்த சந்தர்ப்பம் எனக்கு ஞாபகமிருக்கிறது. இவன் மாஸ்டருக்கு அநேக விதங்களில் சேவகம் முந்தியே செய்துவந்தவன. இவருக்கு மாஸ்டரைப் பார்க்கவேண்டுமென்று பெருத்த அபேக்ஷை இருந்தது. இவன் வசிக்கும் நகரத்திற்கு மாஸ்டர் ஸ்தூலதேகத்துடன வந்தபோது நானும் அவனுடைய வீட்டில் தங்கியிருந்தேன. நான் மாஸ்டரை வெளியில் கண்டு அவருடன் வெகுநேரம் பேசினேன். ஆனால் அவர் அவருடைய சிஷியனாக வேண்டுமென்று வாஞ்சையோடிருப்பவனைப் பார்க்க பிரியப்படவில்லை. ஏனெனில் அந்த சமயத்தில் அவனுடைய ஆசைமய தேகம் வெகு கடுமையாக ஏதோ ஒருதாழ்வான தாபத்தால் அலைபட்டுக்கொண்டிருந்தது. இவ்விதமாயிருந்ததால் ஆயுள் பரியந்தத்தில் அபூர்வமாகவரும் ஒரு சந்தர்ப்பத்தை இவன் இழந்துவிட்டான். ஒருக்கால் அநேக ஜென்மங்களிலிருந்த சந்தர்ப்பத்தையும் இழந்துவிட்டான். மாஸ்டர் எவ்வளவு அருகில் இருந்தார் என்பது அவனுக்குத் தெரிந்திருக்குமானால் அவனுடைய தாபமெல்லாம் ஒருநிமிஷத்தில் பறந்துபோயிருக்கும் என்பது எனக்கு நிச்சயம். என்றாலும் மாஸ்டர் தரிசனம் கொடுப்பதற்காக அதை நீக்க தன்னுடைய சக்தியை உபயோகித்தல் அவருக்கு அது வீணாய்க் கழித்தது போலிருக்கும்.

விசுவாசம் சிஷியனிடத்தில் இல்லாததைப்பற்றியும் அல்லது அவ்விதமான ஏதோ ஒரு நோக்கமில்லாததைப்பற்றியும், மாஸ்டர் கோபித்துக் கொள்வார் என்றாவது அல்லது சிஷியனாகவர வாஞ்சையுள்ளவனிட மிருந்து ஏதோ ஒரு குறையுள்ள தாபத்தை நீக்க தன் காலத்தை கழிக்க கல்நெஞ்சமுடையவரென்றாவது எண்ணக்கூடாது. முறைப்படி வேலைக்கு செம்மையாய் வேண்டியதைத்தான் அவர் செய்வார், யாதொரு மனோபாவனையின்படி ஊசலாடிச் செய்யமாட்டார். வாஸ்தவத்தில் செய்யவேண்டிய

வேலை ஒன்றிருக்கும்போது இருக்கப்பட்டவர்களுக்குள் கெட்டிக் காரனை, அவன் சினேகிதனுனாலுஞ்சரி அல்லது இல்லாவிட்டாலுஞ் சரி பொறுக்கி எடுக்கவேண்டியது. சினேகிதனென்று திறமை யில் குறையாய் இருப்பவனை எடுத்தாயானால் நீ உன்னுடைய தருமத்திலிருந்து தவறிவிடுகிறாய். உதாரணமாக பெருத்த சண் டையில் பட்டாளத்தை நடத்த சேனாதிபதி உத்தியோகமாவது அல்லது அதற்கு வேண்டிய ஏதோ ஒரு வேலையை நடத்தவாவது இருப்பவருக்குள் உன்னதமானவனை எடுக்கவேண்டியது. ஒருவர் பேரில் பக்ஷபாதம் காட்ட சமயம் அதுவல்ல. அதாவது பலான வனுடைய மைத்துனனை வேலைக்கு வைக்கலாமா என்று யோசிக்க அதுசமயமல்ல. வேலைக்கு மெத்த தகுதியானவனை எடுக்க வேண்டும். ஏனெனில் இது மற்ற வேலையைவிட வெற்றிபெறும் பொருட்டு எல்லோருக்குமே அக்கரையானது.

குப்தமார்க்கத்திலிருக்கும் வேலை எல்லாம் இப்படித்தான்; இதைச் செய்யவேண்டி இருக்கிறது. அதை நடத்துகிற மாஸ்டர் கெட் டிக்காரனை பொறுக்கி வேலைக்கு எடுப்பார். அவரிடத்தில் அநேக வருஷங்கள் வேலை செய்துவந்ததால், அது ஒரு உத்தியோகத்திற் காவது கிருபா நோக்கத்திற்காவது உரிமை என்பது ஒன்று மில்லை. வேலைசெய்ய திறமையுள்ளவனை எடுப்பது அவருடைய கடமை. ஒருவன் மாஸ்டரிடத்திற்கு அப்போதுதான் வந்திருந் தாலுஞ்சரி, அல்லது அவரிடத்தில் அநேக வருஷங்களாக வேலை செய்து கொண்டிருந்தாலுஞ்சரி, அதைப்பற்றி அக்கரையில்லை.

வேலையை முதலில் ஆரம்பித்தவன் எவனும் தன்னைவிட நன் ருய்ச் செய்யும் மற்றவனைப் பார்த்து சந்தோஷப்படாதிருக்கமாட் டான். வெகுநாளைக்குமுன் (Ruskin) 'ரஸ்கின' என்பவர் ஒரு வேலையைப்பார்த்து "அது என்னுடையதாக விருக்கட்டும், அல்லது உன்னுடையதாக விருக்கட்டும், அல்லது மற்ற யாருடையதாக விருக்கட்டும், இதுவும் நல்லது. நன்ருய்ச் செய்திருக்கிறது" என்று சொன்னார். நீயாகவே செய்திருந்தபோதிலுங்கூட, இதை நன்ருய்ச் செய்திருப்பதாக சொல்ல தாமதிக்கக்கூடாது. மற்றவனுடைய வேலைத் திறமையை மதித்துத் தெரிந்துகொள்ளத் தவறக்கூடாது.

ஏனெனில் அதை யார் செய்திருந்தபோதிலும் அவசியமில்லை. 'ரஸ்கின்'' எழுதிய நூலில் ஆச்சரியப்படத்தக்க வாக்கியங்களிருக்கின்றன; எனக்குத் தெரிந்தவரையில் அவருக்கு குப்த வாசிப்பு யில்லை; அல்லது நான் அவரை தெரிந்துகொண்டபோது எனக்கும் அந்த படிப்பில்லை; என்றாலும் அவருடைய நூல்களில் குப்த வாசிப்பின் உண்மைகருத்துக்கள் அதிகமாயிருக்கின்றன.

> "உன்னைப்பற்றி உன்னிடத்தில் நம்பிக்கையிருக்கவேண்டும். உன்னை நீ நன்றாய்த் தெரியுமென்று சொல்லுகிறாயல்லவா? அப்படி நினைப்பாயாகில் உன்னை நீ யறிந்தவனேயல்ல. சேற்றில் விழுந்து கிடக்குஞ் சக்தியற்ற வெளியோட்டைத்தான் நீ தெரிந்திருக்கின்றாய்; ஆனால் நீ,— கடவுளின் சுயஞ்ஜோதியிலிருந்து வெளிவந்த பொறி; மேலும் எல்லாவல்லமையுள்ள கடவுள் உனக்குள் ளிருக்கின்றார். அக்காரணத்தைக் கொண்டு நீ (மனதுவைத்து) நிச்சயித்தால் உன்னால் முடியாததொன்றுமில்லை. உனக்குள்ளிப்படிச் சொல்லிக்கொள்; ''மனிதன் செய்துள்ளதை மனிதன் செய்யக்கூடும், நான் மனிதன், இன்னும் மனிதனுக்குள் வீற்றிருக்குங் கடவுளும் நானே; இவ்விஷயத்தை நான் செய்யக்கூடும்; செய்வேன்.'' ஏனெனில் நீ மார்க்கத்தில் நடக்க வேண்டுமானால் உன் திடச்சித்தம் (Will) பதம் பிடித்த எஃகுபோலிருக்க வேண்டும்.''

A. B.:—நாம் யோசித்துக்கொண்டிருக்கும் அநேகவித போதனைகளைச் சில ஜனங்களுக்கு முன்வைத்து அவர்களுடைய பழைய மதியீனத்தையும், பிழை செய்வதையும் விடும்படியாக புத்திமதியை அவர்களுக்கு கொடுத்தபோது, அவர்கள் சில சமயங்களில் "நான் என்ன செய்யட்டும் அது என்னுடைய சுபாவம்'' என்று

சொல்லுகிறார்கள். அநேகர் இந்த சாக்கைக்கொண்டு இதையொரு மன்னிப்பாக வைத்துப் பதுங்க எத்தனிக்கின்றனர். நீ அப்படி செய்வாயானால் உண்மையில் நீ ஆவலுள்ளவனல்லன்; நீ வாஞ்சையுடையவனாக விருக்கவேண்டும். இந்தப்படி பாரமான முக்கிய விஷயங்களில் நீ விளையாட இயலாது. நீ செய்யத் தீர்மானித்த எதையும் ஒரு வேளை உடனே செய்யாவிட்டாலும், பிறகு நீ செய்யவேண்டும்.

"என்னால் முடியாது" என்று நீ சொல்வாயானால் சந்தேகமின்றி அது உன்னால் முடியாதுதான். ஏனெனில் நீ அந்த எண்ணத்தால் உன்னை துற்பலமாக்கிக் கொண்டாய். இது ஆபத்தான தப்பிதம். இது எல்லாவித விருத்தியைத் தடுத்து நீ இருந்த இடத்திலேயே மாதக்கணக்கானாலும், வருஷக் கணக்கானாலும், உன்னை இருக்கச் செய்கின்றது. ஒருவன் தன் கால்களை கயிற்றால் கட்டிக் கொண்ட பிறகு, என்னால் நடக்கமுடியாது என்று சொல்லுவது போலிருக்கிறது. இது வாஸ்தவமாய் அவன் வருத்தமெடுத்து தன்னைக் கட்டிக்கொண்டதால், நடக்கமுடியாதுதான். இருக்குமிடத்திலே உட்கார்ந்திருக்கப் பிரியப்படாவிட்டால் கயிற்றை அவிழ்த்து கொள்ளட்டும். பிறகு கூடுமான அளவு நன்றாய் நடக்கமுடியும். விஷயங்களை உன்னால் செய்யமுடியும்; உன்னை துற்பாக்கியனுக்கும் உன பொய்க் கருத்தை விட்டொழியச் செய்யக்கூடும்; செய்வேன் என்று உன் மனதை உறுதி படுத்திக்கொள். பிறகு உன்னுடைய தேர்ச்சியின் விரைவைப்பற்றி நீயே ஆச்சரியப்படுவாய். நீ இதை செய்யாவிடில் நீ வாஞ்சையுடையோனல்லன்; குறைந்த பக்ஷம் மாஸ்டரவர்கள் உன்னை எவவித மிருக்கச் சொல்கிறாரோ, அந்த வழியில் நீ ஆவலாக இல்லை. ஆவலாயிருக்க வேண்டுமென்று நீ சும்மா விளையாடுகிறாய்! நீ எத்தனிக்கிறதில்லை யென்று நான் சொல்லவில்லை, ஆனால் நீ பிரயோஜன மில்லாதவகையால் எத்தனித்துக் கொண்டிருக்கின்றாய்.

நான் என்ன சொல்லுகிறேன் என்ற கருத்தை நீ உலக விஷயங்களில் உனது பெண்சாதி பிள்ளைகளைப் பாதுகாக்கும்பொருட்டுள்ள வேலையில் பிரயோகித்துப்பார். அங்கே உன் வழியில் ஒரு விஷயம் குறுக்கே யிருந்தால் அதை நீக்க உடனே உனது மனதை

உறுதிப்படுத்திக் கொள்வாய். அப்படிச் செய்ய உன்னால் கூடிய வரையில் பிரயாசைப்படுவாய்; நீ உட்கார்ந்துகொண்டு "என்னால் முடியாது" என்று சொல்லமாட்டாயல்லவா? அந்த தீவிர ஊக்கத்தில் கொஞ்சம் இவ்விடம் உபயோகி. முக்கியமல்லாதிருக்கும் விஷயங்களில் எல்லாம் உனக்கு அந்த ஊக்கம் அதிகமாயிருக்கிறது. உனக்கு ஊக்கமென்பது எதில் மெத்த குறைவாயுள்ளதோ அது முக்கியமான விஷயமாக இருக்கிறது போலிருக்கின்றது.

உனக்கு நீயாகவே உதவி படுத்திக்கொள்ள முயற்சி யெடுக்காவிட்டால் மாஸ்டர்களுடைய உதவியைக் கோருவது பிரயோஜனமில்லை. நீ ஒரு கிண்ணத்தை கையால் கெட்டியாய் மூடி வைத்துக்கொண்டு தண்ணீருக்குப் பிரார்த்திப்பது போலிருக்கிறது. தண்ணீரை ஊற்றினால் அது மூடியிருக்கும் கைமேலோடி கிண்ணத்தைச் சுற்றி கொட்டிப்போகும். அதனால் உனக்கென்ன பிரயோஜனம்? இல்லையே. ஒருவன் ஒரு காரியத்தை தன்னால் கூடிய சாமர்த்தியத்தோடு செய்துகொண்டிருக்கும்வரையில் அவன் அதை குப்த முறையின்படி செய்கிறான். அவனுடைய பிரயத்தினத்தின் பலன் உடனே வெளியுலகில் காட்டாதிருக்கலாம். ஆனால் அவன் எல்லா வேளையிலும் தன்னுடைய சக்தியைச் சேர்த்து பிடித்துவருகிறான். அது கடைசியாய்க் காரியமுடிவிற்கு கொண்டுவந்துவிடும்.

நீ செய்யவேண்டிய விஷயங்கள் செய்யப்பட்டு வந்திருக்கின்றன; செய்யவும் முடியும். அவைகளைச் செய்ய முடியாதென்று நீ நினைத்துகொண்டிருக்கும் வரையில் உன்னால் முடியாது. ஆனால் "இந்த விஷயங்களைச் செய்யவேண்டியிருக்கிறது. நான் இவைகளைச் செய்வேன்" என்று நீ உனக்குள் சொல்லுவாயானால் அப்போது அவைகளைச் செய்யமுடியும். அப்படிச்செய், உன்னுடைய எண்ணம் உன்னை காக்கும் தேவதூதனாயிருக்கும். எப்போதும் கிட்டே இருந்து முடிக்கும்படி பலம் கொடுக்கும். அப்படிக்கில்லாவிடில் கிருஸ்தவர்கள் சொல்லுகிறபடி உன்னுடைய எண்ணத்தால் உண்டாக்கின பிசாசை உன்னருகில் வைத்திருப்பாய். அப்பேர்ப்பட்ட பிசாசுகளை நீ உண்டாக்க அவசியமில்லை. அவைகளைவிட்டு "என்னால் கூடும், நான் செய்வேன், என்ற பெருத்த எண்ண உருவமாகிய தேவதூதனை யுண்டாக்கு."

C. W. L.:—மனிதன் செய்யக்கூடாதது ஒன்றுமில்லை யென்பது மெத்த உண்மைதான். ஆனால் அதை உடனே செய்யமுடியுமென்று சொல்லவில்லை. சில சமயங்களில் இந்த கருத்தில்தான் ஜனங்கள் தப்பிதஞ்செய்கிறார்கள். இது எனக்கு நன்றாய்த் தெரியும். ஏனெனில் எனக்கு ஏதோ ஒரு அபாயகரமான கஷ்டத்திலிருப்பவர்களிடமிருந்தும், ஒருக்கால் குடியாலும், லாகிரி வஸ்துக்களாலும் அல்லது வேறு யாதோ வொருவகையில் பேய்ப் பிடிபட்டவர்போல் கஷ்டப்படுபவர்களிட மிருந்து கோடிக்கணக்காய்க் கடிதங்கள் எனக்கு வருகின்றன. இவர்கள் அடிக்கடி "எங்களுக்கு சுயஇச்சை யென்பதேயில்லை; எல்லாம் போய் விட்டது. எங்களுடைய கஷ்டத்தை நீக்கிக்கொள்ள எங்களால் முடியவில்லை, நாங்கள் என்ன செய்யட்டும்?" என்கிறார்கள். இப்பேர்ப்பட்டவர்களைப் பாராதவர்களுக்கு மனிதனைப் பிடித்து எவ்வளவு பயங்கரமாய் நிலையில் இவ்வழக்கங்கள் அவனை வைத்திருக்கின்றன என்பதையும், அவனுடைய சுயஇச்சை என்பதை முற்றிலும் உரிந்து விட்டிருப்பதையும், அவன் எவ்வகையிலும் ஒன்றும் செய்யமாட்டாதவனாக இருப்பதையும் அறியமாட்டார்கள்.

அப்பேர்ப்பட்டவர்கள் சில சமயங்களில் தற்கொலை செய்து கொள்ளச் சிந்திக்கிறார்கள். அது இன்னும் ஆபத்து, ஒருவன் ஆயுள் பரியந்தம் முடமாயிருந்தாலுங்கூட தன துன்பத்தை தீர்க்கவரும் சந்தர்ப்பத்தை எடுப்பான். இடுப்பை கட்டிக்கொண்டு தைரியத்தோடு சங்கடத்தை சகித்துக் கொண்டிருப்பான. தற்கொலை என்பது அதிலிருந்து தப்பித்துக்கொள்ள இனனொருதரம் தேடும்படியான ஸ்திதிக்கு போவதோடுகூட, தற்கொலை செய்துகொண்ட கர்மமும் சேர்ந்து இருக்கிறதெனறு அருத்தம். கஷ்டப்படுகிறவனுக்கு சுயசித்தம் இல்லையென்று எவ்வளவாக சொன்னபோதிலும் இருக்கின்றது எனபதை தெரிந்துகொள்ளட்டும். அவன் தானாக சுயஇச்சையை உண்டாக்கவேண்டியதாயிருந்தால் நம்பிக்கையற்றிருக்கலாம். ஆனால் இச்சை அங்கே யிருப்பதை ஞாபகப்படுத்திக்கொள்ளட்டும். ஒவ்வொருவரிடத்திலும் வெளிப்படுத்தி காட்டுவது கடவுளின் இச்சை. அது இன்னும் வளர்ந்து மலர்ந்து

வரவேண்டியிருக்கிறது. அது படிப்படியாய் தான் வரமுடியும். சில சமயங்களில் இவன்பேரிலிருக்கும் சிநேகிதனுடைய அல்லது பந்துவினுடைய பக்தி, அன்பாலும், சாந்தத்தாலும் நிறைந்து இப்பேர்ப்பட்டவர்களுக்கு கடவுள் அனுப்பியதைப்போல் வந்து உதவுகிறது.

அப்பேர்ப்பட்ட நிலையில் வந்திருக்க அவன் என்ன செய்தான்? வெகுவாய் இந்த ஜென்மத்திலும் ஒருக்கால் இரண்டொரு முந்திய ஜென்மத்திலும் இந்த ஆசை ஜீவபூதத்திற்குள்ள சுபாவ மயக்கங்களுக்குஇவன் யோசனையோடு நிதானமாய்த் தன்னை இணங்கிக் கொடுத்து வந்திருக்கிறான். தெரிந்தே தனனைப் பற்றி பிடித்துக்கொள்ள அதற்கு விட்டிருக்கிறான். முதலிலேயே இவன் அதோடு கட்டிப்போராடி இருக்கவேண்டியது. ஆனால் இவன் அதைக்கண்டிக்காததனால் இவனுடைய கொடிய பழக்கத்திற்கு பலம் அதிகரித்திருக்கிறது. அது அவ்வளவு அதிகமாயிருப்பதால் அவன் அதை உடனே தடுக்கமுடியவில்லை. ஆனால் தடுக்க ஆரம்பிக்கக் கூடும். ரயில்வண்டி யொன்றை ஒருவன் தள்ளிக்கொண்டுபோகும் விதத்தை பார்ப்போம். நாட்டுப்புறத்து சிறிய ஸ்டேஷன்களில் 'போர்டர்' ஆட்கள் வண்டியை ஒரு 'லைனி'லிருந்து மற்றொன்றுக்கு மாற்றிவிடுவதை நீங்கள் ஒருசமயம் பார்த்திருக்கலாம். அவன் எப்படி செய்கிறான் என்று கவனியுங்கள். வண்டி மெத்த பெரியது; எவ்வளவோ பாரமுள்ளது; ஒரே நிதானமாய் அதை முட்டி தள்ளுகிறான். முதலில் அசைக்கமுடியாது போலிருக்கும்; கொஞ்சநேரம் பிறகு அது மெதுவாய்நகரும்; அவன்தள்ளிக்கொண்டேபோகிறான். அதுவும்போகப்போக வேகமாய்ப்போகின்றது.பிறகு அதை நிறுத்த பிரயத்தினப்படுகிறான்.இப்போது அதை உடனேநிறுத்தமுடியாது. அவன் எதிர்த்து போகாமலிருக்க தடுத்தால், அது அவனை தள்ளி மேலோடி நசுக்கிவிடும். ஆகையால் அதை நிதானமாய் தடுக்க எத்தனிக்கிறான். விட்டு கொடுத்துக்கொண்டே அதை படிப்படியாய் நிறுத்தும் வகையில், சதா எதிர்த்து இழுத்து பிடித்துக்கொண்டிருக்கிறான்.அவன் அதற்கு ஓரளவு வேகத்தை கொடுத்தான்.அதை மறுபடியும் எடுக்கமுடியாது, ஆனால் அதற்கு மாறான அதே அளவு வேகத்தைக்கொண்டு அதை தாக்கி நிறுத்தமுடியும்.

ஆசைமய ஜீவபூதத்திற்குத் தன்னை இணக்கிக் கொடுத்தவன் இந்த நிலையில்தானிருக்கின்றான். அதில் தன்னுடைய பலத்தை வேகமாய்ச் செலுத்தியிருக்கிறான். அதை எதிர்த்து தாக்கத்தான் வேண்டும். "ஆனால் அது அவ்வளவு அதிகமாயிருக்கிறதே" என்று ஒருவன் சொல்லக்கூடும். ஆம் எனாலும், அதற்கு அளவுயிருக்கின்றது. அந்த விஷயத்தை கற்பனுபாவமா யல்லாமல் கணக்கோடே அதைப் பார்த்தால் "நான் ஒரு தாழ்வான கிருமிபோலிருக்கின்றேன். அதிலிருக்கும் வேகம் எனக்கு தாங்கமுடியாத மெத்த அதிகமாயிருக்கின்றது." என்று சொல்லமாட்டான். மற்று அதை தடுக்க போய்ப் பிரயத்தினப்படுவான். அவன அதற்குள் வைத்திருக்கும் வேகத்திற்கு அளவு இருக்கிறதை அறியக்கூடும். ஆனால் அவனிடத்தில் இப்போது அளவில்லா சக்தி—வேகம்—இருக்கிறது.நாம் கடவுளுடைய ஜீவாக்கினியின் பொறியாயிருப்பதால், நமக்குள் கடவுளுக்கிருக்கும் எல்லா வல்லமையும் உண்டு. ஒரு குறித்தகாலத்தில், வேலைக்காக கொஞ்சம் தான், அது நம்மூலமாய் வரக்கூடும். ஆனால் அது எல்லா வேளையிலும் வந்துகொண்டே இருக்கின்றது.

இவையெல்லாம் ஜீவான்மாவினுடைய நோக்கத்தைக்கொண்டு பார்க்கவேண்டும். இவவிஷயங்களை ஜீவாத்துமா செய்யக்கூடும். செய்து முடியும். குப்ததேர்ச்சியில் செய்யக்கூடிய யாதொரு காரியத்தையும் உடனே செய்ய முடியாது. தன் ஆத்துமாவில்மாத்திரம் சங்கீத ஞானத்தை வைத்திருப்பது போதாது. ஆனால் அந்தத் திறமையை வெளியாக்கும் தனது காதையும் கையையும் பயிற்சித்து அதற்கு கருவியாக வைக்கவேண்டியது போலிருக்கிறது. ஜீவான்மா தனது தேகங்களை இவ்விதமே சாந்தமாய்ப் பயிற்சிக்க வேண்டியிருக்கிறது.

ஜனங்கள் சில சமயங்களில் "இப்போது இந்த கெட்டவழக்கத்தை என்னால் நீக்க முடியாவிட்டால் மற்றொரு தேகம் எடுக்கும் வரையில் நான் காத்திருப்பேன்" என்று சொல்லுகிறார்கள். அப்பேர்ப்பட்டவன் தனது அடுத்த தேகம் இப்போதுள்ளதைப்போலவே குணத்திலும் வழக்கத்திலும் அமைந்திருக்கும். பிரயத்தினபட்டாலொழிய மாறாது என்பதை மறந்து விடுகிறான். வகையில்லா

இங்கிலே மறு ஜென்மத்திலும் அப்படியே தானிருக்கும். ஆனால் இப் போதிருந்தே அவைகளை துணிவுடன் எதிர்த்து போராடினால் இந்த ஆயுள் முடிகிறவரையில் அவைகள் தலையை தூக்கிக் கொண்டிருந்த போதிலும் மறு ஜென்மத்தில் இதைவிட நல்ல தேகத்தோடு ஆரம் பிப்பான். மேல்படியிலுள்ள சூக்குமதேகங்களிலும் இவ்விதமேதான். ஒருவன் தனது மனோமய தேகத்தை சிற்றின்பத்தால் மெத்த கெடுத்துவிட்டால் இந்த ஜெனமத்தில் அது தன்னுடைய உன்னத மான சீர்ப்படும் நிலைக்கு கொண்டுவர முடியாது என்றாலும் அந்த தீங்கை எதிர்க்கத் துணிவுடன் பிரயத்தினப்பட்டால் மறு ஜென்மத் தில் இப்போதுள்ள குறைகளை உண்டாக்காத மனோமய தேகத்தை பெறக்கூடும். இதிலும் இன்னும் மற்ற விஷயங்களிலும் மெத்த சங்கடம் ஆரம்பத்தில் தானிருக்கின்றது. விசுவாசம்மேலிட்டு பிறகு பலமாகிவிடும்.

அநேகர் தங்களுக்கு மாஸ்டர்களிடத்திலிருக்கும் சம்பந்தத்தில் கற்பனுபக்தி பாவனையைவைக்க இஷ்டப்படுவதுபோல் சிலர் பிர பஞ்ச நியதிகளின் நிர்ப்பந்தத்திலிருந்து தங்களை நீக்கி வைத்து கொள்ளப் பிரியப்படுகிறார்கள்; திடீரென்று அவர்களுடைய பாவத் தையும், துன்பத்தையும், எல்லாவற்றையும் நீக்கிவிட வேண்டு மென்று பிரியப்படுகிறார்கள். பக்தி ஆவேசமுள்ள கிருஸ்தவன் "ஏசுவின் இரத்தத்தால் இப்போது இங்கே இரக்ஷிக்கப்படுவாய். உன்னுடைய கஷ்டத்திலிருந்து நீ முற்றும் விடுபட்டு கஷ்ட டம் வராததுபோல் இருப்பாய்" என்று சொல்லுவான். இது ஒரு வகை வசியகாரமாயிருக்கின்றது. ஆனால் அது மெய்யல்ல. உண்மையாதெனில் நீ திரும்பி தெய்வீக கிரமத்தின்படி சரியான வழியில் போகும்போது, நீ அதற்கு விரோதமாய் நடக்காததால் சங்க டங்களிலிருந்தும் தொந்தரவுகளிலிருந்தும் உடனே விடுபட்டவனாய் விடுகிறாய்; ஆனால் நீ முந்தியே செய்தவினையால் விளையும் பிரதி பலன்கள் ஒழிந்து போகுமென்று அருத்தமல்ல. நீ வேறுபாட்டை ஏற்படுத்தினாய். உன்னுடைய மனது திரும்பிவிட்டது. நீ இப் போது சரியான வழியில் போய்க்கொண்டிருக்கின்றாய். என்றாலும் தவறாய்ப்போன பலன்களில் நீ கையாளவேண்டி யிருக்கின்றது;

நீ ஒரு நிமிஷத்தில் உன்னுடைய நோக்கத்தை மாற்றலாம்; சந்தேகமின்றி நீ மன்னிக்கப்படுவாய். தெய்வீக முறையின்படி உனக்கு விரோதமாய் நிற்பது ஒன்றுமில்லை. நீ பாவத்திலிருந்து தீர்க்கப்பட்டவன். ஆனால் பிடிவாத பாதிரியாரும் உனக்கு உடனே "நீ செய்த எல்லா பிழைகளின் பலனைச் சரிப்படுத்த என்னால்முடியும் என்று சொல்லிக்கொள்ளவில்லை. நீ சிற்றின்ப வாழ்க்கையில் வாழ்ந்திருந்தால், நீ உன்னுடைய தேக ஸ்திதியை கெடுத்து விட்டிருந்தால்,எனக்கு அதை சரிப்படுத்தமுடியாது.இந்த பலன்கள் அப்படியே இருக்கும். அவைகளை ஒழிப்பது உனக்கு வேரா விரதமாக இருக்கும். நான் சரிப்படுத்துவது யாதெனில்—மதத்தில் உபயோகிக்கும் பரிபாஷையாகச் சொன்னால்—குற்றங்குறை செய்யும் தன்மையோடு நீ கடவுளுக்கு விரோதமாய் நடந்தாய். அதை சரிப்படுத்தி நேராய் நடக்கச் செய்விப்பேன். நான் சுத்தி செய்வதால் ஏதோ உனக்கு கொஞ்சம் பலன் தரும். இதுமேல் லோகத்திலிருக்கும் தெய்வீக அருளின் வலிமை; கீழிருப்பதல்ல. நீ நடக்க வேண்டுமென்றபோது அது உன்னை நடத்தும். நேரானவழியிலிருக்க உனக்கு உதவி கொடுக்கும். ஆனால் பூலோக பிரதி பலன்களை தவிர்க்கமுடியாது" என்று சொல்லுவார். உன்னுடைய நோக்கத்தை நீ தான் மாற்றவேண்டும். மேல் உலகத்தில போக உனக்கு வகையில்லாதபோது உன்னை ஏற்றிவைக்க போதகர் கைகொடுப்பார். ஒருவன் தானாகவே இதை செய்யமுடியாது என்று நான் சொல்லவில்லை. அதை மெத்த பிரயாசையோடும், ஒழுக்கமில்லாமலும், அறமுறையின்றி செய்வான். பாவத்தை நீக்கி சுத்திசெய்தல் என்பதிலிருப்பது இந்த சக்திதான். ஆனால் அது அவனுடைய பாப காரியத்தின் பலனை அவனிடமிருந்து நீக்கமுடியாது—பிரபஞ்சநியதிகள் இவ்விதம் வேலை செய்வதில்லை.

இதுவரைக்கும் சொன்னதில் இன்னொரு யோசனை சேர்க்க வேண்டியிருக்கின்றது. ஒருவன் தனது சுய இச்சையை விருத்தி செய்து தன்னையாள திறமைவரும் வரையில், அவன்தன்னை மாஸ்டர்களுக்கு உண்மையில் ஒப்புவிக்க முடியாது. ஜனங்கள் "நான் என்னைமுற்றும் மாஸ்டருக்குக்கொடுக்கின்றேன்" என்று சொல்கிறார்கள். அவர்களுடைய ஒருபகுதி கெட்ட விஷயங்களில் அகப்பட்டுக்

கொண்டிருக்கும்போது முற்றும் கொடுக்க இயலாது என்பது தெளிவாயிருக்கின்றது. இக்காரணத்தைக் கொண்டு இச்சையை விருத்தி செய்யவேண்டும். இந்த இச்சையானது பதம் மிட்ட எஃகுபோலிருக்க வேண்டுமென்று மாஸ்டர் சொன்னார். அந்த சந்தர்ப்பம் எனக்கு நன்றாய்த் தெரியும். ஏனெனில் பதனிட்ட எஃகு என்கிற கருத்தை ஆல்கியூனி தெரிந்துகொள்ளவில்லை. அதைகாட்ட ஸ்தூலமாக விளக்கிக் காட்டவேண்டி வந்தது. அது வெறும் இரும்புபோல் இச்சையாகவில்லாது, பதனிட்ட எக்கைப்போல எந்தப்புறமும் மடியாத இச்சையாயிருக்கவேண்டும். இச்சை அங்கே இருக்கின்றது. தெய்வீக சக்தி நம்மிடம் இருக்கின்றது. நாம் அதை மலரச்செய்ய வேண்டியது. அப்படியே நமக்கு நாம் எஜமானாகவேண்டும். பிறகு மாஸ்டருடைய பாதாரவிந்தத்திற்கு அந்த இச்சையை சிறப்போடு அர்ப்பணஞ் செய்யக்கூடும்.



அன்பின் வழியது உயர்நிலை, அஃதிலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு.

# 24-வது அத்தியாயம்.

## நிருவாணம்—மோக்ஷம்

" சாதனங்கள் எல்லாவற்றிலும் அன்பு பிரதானமானது. ஏனெனில் ஒருவனிடத்தில் அன்புபோதுமளவு வலிமையுள்ள தாயிருக்கும் பக்ஷத்தில் மற்றவைகளை யெல்லாந் தேடும்படி யவனை பலவந்தப்படுத்தும். இது இல்லாமல் மற்றவை யாவும் ஒருக்காலும் போதாது. இச் சாதனத்தை பிறப்பு இறப்பு சுழலிலிருந்து விமோசனம் பெறவும், கடவுளோடு ஐக்கியப் படவும் எழும் தீவிரமான விருப்பம், (முமூக்ஷுத் வம்) என்று பலமுறை அருத்தஞ் செய்யப் பட்டிருக்கிறது. ஆனால் அப்படிக் கொள்வது சுயகாமியதைக் காட்டுகின்றது. தவிர, அதன் கருத்துக கிஞ்சித்து தான் வெளியாகிறது."

C. W. L.:—இந்த சாதனப் பெயர்களை சாதாரண மொழி பெயர்ப்பிலிருந்து வேறுகி பெயர்த்த அநேகம் இப்புத்தகத்திலிருக் கின்றனவென்று சொல்லியிருக்கிறோம். அவைகளில் இது—முமூ க்ஷுத்வத்தை அன்பு என்று எடுத்துக் காட்டுவது—மெத்த துணி வானது. இந்த வார்த்தை "முக்" விடுபடுவது, என்கிற பகு பதத் திலிருந்து எடுத்தது, பகுத்த அடி துண்டை இரட்டித்ததால் மற்ற திரிபு, முமூக்ஷு—அதாவது விடுபட இச்சை—என்று, உண் டாயிற்று. முமூக்ஷு என்பது பெயர்ச்சொல் அருத்தம், விடுபட இச்சை; முமூக்ஷுத்வம் என்றால் விடுபடவேண்டிய இச்சை வைத் திருக்கும் நிலை. "த்வா" என்கிற ஈறு ஆங்கிலத்தில் "நெஸ்" Ness என்கிறதை போலிருக்கிறது. இப்பகுபதத்திலிருந்தே மோக்ஷ—அதாவது விமோசனம், விடுதலை, விடுபடுதல்—என்கிற பத மும் வருகிறது.

மோக்ஷம் என்பது நிர்வாணந்தானு என்று அடிக்கடி கேட்ப துண்டு. இவ்விரண்டு வார்த்தைகள் வெவவேறு பொருள் கொடுக் கின்றன என்றாலும், இவைகள் ஒரே நிலைக்குரிய இலக்ஷணங்களாக எடுக்கலாம் "Nirvanic" நிர்வாணு என்பது "வா" என்கிற விகுதி யுடன் "நிஸ்" என்பதை தலைப்பில் சேர்ப்பதால் உண்டானது. 'நிஸ்' என்றால் "ஊதிவிடு" "அணை, அவி". ஆதலால் இதை அவித்து விடுவது என்று மொழிபெயர்த்திருக்கிறது. மோக்ஷம் எனபது பிறப்பு இறப்பிலிருந்து விடுபடுவது. நிர்வாணம் என்றால் கல்பத்தில் பந்தப்படுத்தும மானிடப்பகுதியைய அதாவது ஜனங் கள் சாதாரணமாய் மனிதன என்று சொல்லப்படுவதை அவித்து விடுவது. சில இந்துக்கள் மோக்ஷத்தை செயலற்று சும்மாவிருக்கும் நிலயென்று நினைத்து தனது ஆசைகளையும், மானிடவர்க்கத்துக் குரிய நோக்கங்களை யெல்லாம் ஒழிக்க சாதனஞ் செய்கிறார்கள். அதாவது பந்தப்படுத்தும் விஷயங்களாவது, சத்துருமித்திரர்க ளாவது, இவர்களை பிறப்பிற்கு இழுக்காதவண்ணஞ் செய்துகொள் ளுகிறார்கள். இந்தப்படிக்கு சாதித்தவர்கள் வெகுகாலம் வரைக் கும் பிறப்பிறப்பின் சக்கரத்தில் அகப்படாமல் விடுபட்டிருக்கின்ற னர். இப்பேர்ப்பட்டவருடைய கருத்து யாதெனில் நீ, நான், என பிரிக்கும் மாயைக்கு அப்பால் ஏகமாயிருக்கும் தனியை, கை வல்லியம் எனும் வர்ணிக்கக்கூடாத பேரின்ப நிலை என்று இதை கருதுகிறார்கள். சில புத்தர்கள் நிர்வாணத்தை மனிதன் என்பதை முற்றிலும் ஒழித்துவிடுவது என்று நினைக்கின்றார்கள். மற்றவர் களோ 'தான்' எனறும் 'அநுபவம்' எனறும் கருதியிருந்ததையெல் லாம் ஒழிந்த ஆநந்தத்தையும், அறிவையும் பெறுவது என்று நினைக்கின்றார்கள். ஏனெனில் இது வர்ணிக்கக்கூடாதது. ஆகை யால் புத்தமதத்தில் கூட ஜனங்கள் வெவ்வேறு கருத்துகளை வைத் திருக்கிறார்கள்.

திவயஞான சபையிலுள்ள நாம் நிர்வாணம் என்கிற பதத்தை சில சமயங்களில் ஆன்ம லோகத்திலிருக்கும் (State of Conscious-ness) பிரக்ஞையின் அறிவு நிலையைக் குறிக்கின்றோம். என்றா லும் நிர்வாணம் என்பது ஐந்தாவது தீக்ஷைபெற்ற முத்தர்களுக்கு ஏற்பட்டிருக்கும் ஓர் நிலை. அவர்களுக்கிருக்கும் ஏழு வழிகளுக்குள்

ஒன்று. தென் கிளைபுத்தர்கள் கூறும் "அணைத்து விட்டது" என்றல்லாத வடகிளை ஆதீனத்தார் புகழும் வர்ணிக்கக்கூடாத பேரின்பம், சாந்தம் என்பதான உண்மையான நிர்வாண நிலையைக் குறிக்கிறோம்.

தன்னுடைய பிரக்ஞையை நிர்வாண உலகிற்கு கொண்டு போகக்கூடியவன் அரஹட் நிலையிலுள்ளவன், அதாவது நானகாவது தீக்ஷைபெற்றவன். அவ்விடத்திலிருக்கும் திரண்ட வாழ்க்கையின் அனுபவத்தை "Inner Life & Masters and The Path" என்கிற நூல்களில் விவரித்திருக்கிறேன். அவ்விடத்திலிருக்கும் பிரக்ஞையானது நமக்கு இவ்விடத்திலிருக்கும் எவ்விதமான பிரக்ஞையைவிட மெத்த விசாலமாயிருப்பதால் அதை எவ்வகையிலும் எனது பிரக்ஞை என்று சொல்ல ஒருவன தாமதிப்பான். இவன் பெருத்த அகண்ட பிரக்ஞையில் ஒன்றாகிவிட்டான. தான் வேறு எனகிற உணர்ச்சி போய்விட்டது. அந்தக் கருத்துகளை வார்த்தையில் சொல்ல எவ்விதமாய் முயற்சித்தாலும் முடியவில்லை. ஏனெனில் அவைகளை சொல்ல வார்த்தைகள் இல்லை.

சமஸ்கிருத புத்தகங்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கும் போது அதற்குத் தக்க தெளிவான அருத்தம் கொடுக்கும்படி செய்வது பெருத்த கஷ்டமாயிருக்கிறது; ஆனால் நிர்வாண பிரக்ஞையில் அனுபவமுள்ளவருக்கு இந்த அனுபவத்தைத் தெரிந்து எழுதிய பழைய நூலாசிரியர்கள் நிர்வாணம் என்பதால் என்ன அருத்தங் கொண்டார்கள் என்பது தெரியும். சாதாரண அகராதி செயபவன் இவ்வித வார்த்தைகளுக்கு சரியான அருத்தத்தை கொடுக்க முடியாது. கிருஸ்துவ மதத்தைப்பற்றி ஒன்றும் அறியாதவன் அதில் வழங்கும் "கிரேஸ்" எனகிற பதத்தை தெரிந்துகொள்ள பிரயத்தினப்படுவதாக வைத்துக்கொள்வோம். அகராதிகளில் தேடி பார்த்தானுனல் இவைபோன்ற அநேகவார்த்தைகளில் சிக்கிக்கொள்ளுவான். வேறு ஏதோ ஒரு அருத்தத்தை எடுத்துக்கொள்ளுவான். அதைப்போலவே தான் பாதிரியார்கள் உபயோகப்படுத்தும் "டிஸ்பென்சேஷன்" என்கிற வார்த்தை சாதாரணமாய் வழங்குவதற்கு வேறான கருத்துள்ளது. பழக்கத்தால் ஓர் முக்கிய கருத்தைகாட்

டும் வார்த்தைகள் அநேகம் ஒவ்வொரு மதத்திலுமிருக்கின்றன. ஒரு வன் அந்த மதத்தில் வளர்ந்து அங்கிருந்தே யோசித்தாலொழிய அதிலிருக்கும் தெளிவான கருத்தை திட்டமாய் தெரிந்துகொள் வது சுலபமல்ல. திவ்யஞான சங்கத்தின் துவக்கத்தில் எங்களுக் குள் எவருக்கும் சமிஸ்கிருதம் தெரியாது. மாடம் பிளாவட்ஸ்கி அம்மையார் இந்தியாவிலுள்ள மதங்களைப்பற்றி ஏதோ கொஞ்சம் அறிந்திருந்தார். ஆனால் அவருககு பாலிபாஷையாவது சமிஸ்கிருத பாஷையாவது தெரியாது. அவருடைய வழியாதெனில் தான் பார்த்ததை தனால் கூடியமட்டில் விவரித்துச் சொல்லிய பிறகு அங்கிருக்கும் ஒரு இந்திய சிநேகிதனை "உனனுடைய வழிபடி இதை என்னவென்று சொல்லுவாய்" என்று கேட்பார். அநேக தடவைகளில் அவன் அவருடைய கருத்தை முற்றும் அறியாம லிருப்பான். எனாலும் தனால் கூடிய மட்டில் வார்த்தையை கொடுப்பான். மறுதடவையில் தனக்கு வார்த்தையொன்று தேவை யாயிருக்கும்போது மற்றொருவனை கேட்பார். ஆனால் முதல் கேட் கப்பட்டவன் இந்துவாயிருக்கலாம். இரண்டாந்தரம் புத்தனாயிருக்க லாம், அல்லது இந்துக்களுக்குள் இருக்கும் வெவவேறு சமயவாதியா (Diffirent Schools of Philosophy) யிருக்கலாம். இதைப்பற்றி அவர் கவனிக்கவேயில்லை.

இதைத்தவிர மாடம்பிளாவட்ஸ்கி ஓர் கருத்தை நிரூபிக்கக்கூடிய உபாயத்தோடும் உதாரணங்களோடும் இராசாயன உபாத்தியாயர் விளக்கிக் காட்டுவதுபோல நிலையில் இவர் இல்லை. ஏதோ ஒரு முறைப்படி ஒருவகைப் ப்ளான் வைத்து அதில் புதிய சமாசாரங் களை தக்க இடத்தில் அமைப்பதுபோல இவர் செய்யவில்லை. இவர் அநேக சமாசாரங்களை சொல்லுவார். இவைகளின வார்த்தை களைக்கொண்டு பார்த்தால் ஒத்திருக்காது. அதை விளக்கும்படி கேட்டால் "ஒன்றுக்கொன்று மாறுபாடாக தோன்றுகின்றதைப் பற்றி கவனியாதே. 'போய் சொன்னவைகளைப்பற்றி யோசனைச் செய்" என்று சொல்லுவார். அவருடைய கருத்துகள் ஆச்சரியப் படத்தக்கதாக தெளிவாயிருந்தன; அவருக்கு திட்டமாய் தெரிந் திருந்தது.

நம்முடைய நாளில் வார்த்தைகளை முதலில் வெகு ஜாக்கிரதை யோடு விளக்கி அதற்குத் தக்க அருத்தத்தை ஏற்படுத்துகிறது போலல்லாது இதற்கு நேர் எதிரானவழி இவருடையது. அநேக தடவைகளில் இது எப்படியாயிற்று என்றால், இராசாயன முறை யும், சாஸ்திரமுறையும், ஓர்வகை சதுரங்க ஆட்டம் போலாகி ஒவ்வொரு காயை ஆடுவதற்கும் ஒருசிரமம் ஏற்பட்டதுபோலா யிற்று. அவரிடத்தில் வார்த்தைகள் உயிருள்ளவைகளாயிருந்தன. பூலோகத்திற்குரிய எண்ணத்தின உருவங்களாகியிருந்தன. இவை களைக்கொண்டு தன்னிடத்திலிருக்கும் அறிவைப்போலவே கேட் பவர் மனதிலும் உதிக்கும்படி செய்யும் கருவிகளாயிருந்தன.

ஜீவான்மாவிற்கும் தேகாத்துமாவிற்கும் உள்ள சிக்கான சம்மந் தத்தையெல்லாம் நாம் அறிந்துகொள்ள பிரியப்படுவோமாகில், இவ்விரண்டும் எப்பேர்ப்பட்டவைகளென்று முதலில் நம்முடைய மனதில் தெளிவாய்த் தெரிந்து வைத்திருக்கவேண்டும். இவ்விஷ யத்தைப்பற்றி ஆதிகால புஸ்தகங்களிலும் தற்கால நூல்களிலும் விஸ்தாரமாய் விளக்கியிருக்கின்றது. "மாஸ்டர்களும் மார்க்கமும்' எனகிற நூலில் ஏதோ கொஞ்சம் எழுதியிருக்கிறேன். சுருக்க மாயும் உபாயமாயும் சொல்லுவோமாகில் "செயினட்பால்" வெகு காலத்திற்குமுன் உபயோகித்ததுபோல, மனிதனை Body தேகம், Soul ஆன்மா, Spirit கூடஸ்தன. என மூனறு பிரிவுகளிலிருப்ப தாக தெரிந்துகொள்ளவேண்டியது. அதற்கு சரியான திவயஞான சபையில் வழங்கும் வார்த்தைகள் தேகானமா, ஜீவான்மா,ஞானனமா, அல்லது பிரத்தியேகான்மா.பிரத்தியேகானமா சரியானபடியேதெய் வீகம்— பரஞ்ஜோதியின்பொறி—எல்லா கருத்திற்கும்விவகாரத்திற் கும் அது கடவுளுடைய அம்சம். ஓர்வகை உயர்வான கருத்தில் ஒவ் வொனறும் கடவுளுடைய பாகமாயிருப்பது வாஸ்தவந்தான. அவர் இல்லாதது ஒன்றுமே இல்லை. இது ஜடமாயிருப்பதைப்பற்றியும் ஜீவனைப்பற்றியும் உண்மைதான. என்றாலும் முக்கியமாய் பிரத்தி யேகானமாவை விளக்கிக்கொண்டு வரவேண்டிய கடவுளுடைய ஓர் பீஜமாக நினைக்கவேண்டியிருக்கிறது. பகுக்கக்கூடாததை பகுதி யெனறு சொல்வது நியாயமல்ல, சாஸ்திர யுக்தமாயில்லை; சரியல்ல வெனறு எனக்குத் தெரியும்.என்றாலும்மேல் உலகின் நிலையிலுள்ள

வைகளைச் சொல்ல வார்த்தைகள் இல்லை. ஆதலால் நாம் எந்த வார்த்தைகளில் சொன்னபோதிலும் அவை சுத்தமாய் தகுதியற்றவைகள். ஆதலால் கொஞ்சம் தவறுதலாய் நினைக்கவரும். சில நூலாசிரியர்கள் இந்த சம்மந்தத்தை விளக்க பிரத்தியேகான்மாவை ஈசுவரனுடைய பிரதிபிம்பம் என்றும், முறையே ஜீவான்மாவை பிரத்தியேகான்மாவுடைய பிம்பமென்றும், தேகான்மாவை ஜீவான்மாவின் பிம்பமென்றும், விளக்க எத்தனித்தார்கள். ஒருவகையில் அப்படிச் சொல்வதால் ஒரு கருத்திருக்கின்றது. என்றாலும் பிரத்தியேகான்மா கடவுளில் ஒருபாகம். ஜீவான்மா, பிரத்தியேகான்மாவின் பாகம், தேகான்மா ஜீவான்மாவின் பாகம் என்பதைவிட இது நிச்சய சம்பந்தத்தை கொஞ்சம் குறைத்துக் காட்டுகின்றது என்று எனக்குத் தோன்றுகிறது.

சந்ததமாய் மலர்ந்துவரும் விகாசமுறைப் பகுதியில் நம்முடைய மண்டல ஈசுவரன் தன்னிடமிருந்து திரளான பிரத்தியேகான்மா கூட்டங்களை வெளியாக்க இஷ்டப்பட்டார் போலும். வெகு மரியாதையுடன் ஒரு உவமையாக சொல்லுவோமானால் இவைகளெல்லாம் அவரிடமிருந்து பொறியாக பொறிந்து உதிர்ந்து வருகின்றன. இப்படி வந்து ஒவ்வொரு லோகத்திலும் புகுந்து வளர்ந்து திரும்பி அவரிடத்திற்கு போகும்போது ஒவ்வொன்றும் ஓர் சிறப்பான மண்டலாதிபதிகளாகி, பிராணனையும் பிரகாசத்தையும் கொடுக்கும் பெருத்த மகத்தான சூரியர்களாகி முறையே அவர்களிடமிருந்து அவர்களின் மூலமாய் லக்ஷக்கணக்கான பிரத்தியேகான்மாக்கள் கிரமமாக பொறிகளாக பொழிந்து போஷித்து வரக்கூடியவர்களாக ஆகின்றனர்.

நாம் பிரத்தியேகான்மாவென்று கூறும் தெய்வீக சிருஷ்டியின் மூலஆரம்பமானது பிரம்மாண்டமான உயர்விலிருந்து வருகிறது; நமக்குத் தெரிந்த எந்தலோக அளவைக்கொண்டு இதைக் குறிக்க முடியாது. ஆனால் வெளியாகி தோன்றக்கூடியது, இரண்டாவது லோகம், இப்படிவரும் காரணத்தைக்கொண்டு அந்த லோகத்தை அநுபாதக லோகமென்று கூறுகிறோம். நமது பிரசிடன்ட் பெயரிட்ட வரிசைப்படி எழுலோகங்களில் உயர்வானதை கடவு

ளிருக்கும்ஆதிலோகமெனறும்அதற்கு இரண்டாவதை அனுபாதக லோகமெனறும் (பிரத்தியேகான்மாக்களுடைய லோகம்), மூன்று வதை நிர்வாணலோகமென்றும், நாலாவதை புத்திலோக (சத்தியலோக) மெனறும் கூறப்பட்டிருக்கிறது. கடவுள் சித்தப்படி காரியத்தை முடிவிற்கு கொண்டுவர பிரத்தியேகான்மா இன்னும் கீழே இறங்கவேண்டியிருக்கிறது. பிரத்தியேகான்மாவிற்கு சுயமாகவே அனுபாதகலோகத்திற்குக் கீழ் இறங்க முடிகிறதில்லை. ஆனால் இறங்கக்கூடிய தனது பகுதியை மனோமயலோக மேற்பாகம் வரையில் இறக்குகின்றது. இந்தப்பகுதி இறங்கும வழியில் நிர்வாணலோகத்தில் திரிமுக (மும்முக) ஆத்துமாவாக விளங்குகிறது. இந்த மூன்று முகங்களில் முதல் முகம் அங்கேயே நினறுவிடுகின்றது. இரண்டாவது முகம் புத்திலோகத்திலிறங்கி அங்கிருக்கும் அணுக்கள் சேர்ந்த ஓர் கவசம் போட்டுக்கொள்ளுகிறது. மூன்றாவது அதைவிட்டு ஒருபடி கீழ் மனோலோகத்தின மேல்பாகத்தில் இறங்கி நிற்கின்றது. இஙகே இதை மேல் மனது என்று சொல்லுகிறோம். அகங்காரதத்துவ புருஷன் (Ego) எனறும் ஜீவாத்மாவென்றும் இதற்குப் பெயர். இதில் ஆத்துமா, புத்தி, மனசு இம் மூனறுமிருக்கினறன. இவைகளை ஆங்கிலத்தில் தெய்வ இச்சையெனறும், யூகஞானமெனறும், சுறுசுறுப்புளள அறிவென்றும், அறைகுறையாய் காட்டியிருக்கிறோம்.

ஜீவான்மாவும் முறையே தனது வெகு சிறிய பகுதியை மனோலோக கீழ்பாகத்திலும், காமலோகத்திலும் செலுத்தி கடைசியாய் பூலோகத்தில் தூலதேகத்தில் தோன்றுகிறது. முறையே இறங்கும் ஒவ்வொருபடியும், ஜீவான்மாவின் சக்திகளை, சொல்ல முடியாவண்ணம் மூடும் கவசங்களாய் ஏற்படுகினறன. அப்படி இருப்பதால் இவ்விடம் பூலோகத்தில் நாம் தினசரியில் பார்க்கும் மனிதன் எவ்வளவு மேன்மையாக இருந்தபோதிலும் அவன் பின்னத்தின் பின்னமாய் உண்மையிலிருக்கும் மனிதனை விளக்கிக் காட்டுவதற்கு தகுதியல்லாதவனாய், விகாசமுறையின் முடிவில் எவ்விதமிருப்பான் என்பதைகூட காட்ட முகாந்திரம் ஒன்றுமில்லாதவனைப்போல இருக்கின்றான்.

தினசரி வாழ்க்கையில் விவகரிக்கும் ஜீவான்மாக்கள் இந்த அளவிடக்கூடாமல், நீடித்திருக்கும் விகாசமுறையிலுள்ள வெவ்வேறு படிகளிலிருக்கின்றன. எல்லாருடைய விஷயத்திலும் ஜீவான்மா தனது லோகமாகிய மனோமயலோக மேற்பாகத்தில் முதன்மையாக வீற்றிருக்கிறது. இதனுடைய விளக்கமான (தோற்றமான) தேகான்மா இருப்பதைக் காட்டிலும் ஜீவான்மா தன்னிலையில் முந்தியே மிக விழிப்புடனும், தன சுற்றுமுற்றுள்ள இதர ஜீவான்மாக்களோடு வர்த்தமானஞ் செய்வதிலும் ஜாக்கிரதையோடு சுறு சுறுப்பாய் வாழ்ந்துகொண்டிருக்கலாம். அல்லது இன்னொருவகையில் தூங்குமூஞ்சாயிருந்து தனது சுற்றுமுள்ளவர்களை மறந்திருக்கலாம். இப்படி யிருக்கும்பக்ஷத்தில் சுறுசுறுப்பாக வாழ்க்கையின அனுபவங்களைப் பெற கீழ்லோகங்களிலுள்ள தேகான்மாமூலமாய் யல்லாமல் வேறுவகையில்லா திருக்கலாம். ஒருவன தனது பிரக்ஞையை படிப்படியாய் மேல் லோகங்களில் விரிவாக்கிக்கொண்டு போகும் போது ஒவ்வொரு லோகத்திலிருக்கும் வர்த்தமான முடுக்கு கீழுள்ளதைவிட மெத்த வேகமாயிருப்பதைக் காண்பான. ஜீவான்மா தனது லோகத்தில் பக்குவத்திற்கு வந்திருக்கின்றதென்றால் அது அந்த லோகத்திலிருக்கும் ஒவ்வொன்றிலும் முற்றிலும் விவகரிக்க முடியும் என்கிற அருத்தம். அவ்வளவு விழிப்பாயில்லாதிருக்கும் பக்ஷத்தில் அங்கிருக்கும் விஷயங்களின் வேகம் ஜீவான்மாவை தட்டாமலே போய்க்கொண்டிருக்கும். அதைத் தெரிந்துகொள்ள வேண்டியதற்கு தன்னை கீழே இறக்கி தான் விவகரிக்கவேண்டிய வழிகளை கற்க அந்த பூமியிலிருக்கும் அணுக்களால் ஒரு கவசம் போட்டுக்கொள்ளவேண்டி யிருக்கிறது. கீழ்லோகத்திலுள்ளசாதன பழக்கத்தால் அதனுடைய மேலான வேகமுள்ள விவகாரங்களை மெதுவாய் கிரகிக்கக்கூடும். பிறகு வெகு மெதுவாய், படிப்படியாய் இதற்குமேல் லோக வர்த்தமானங்களையும் எடுக்கமுடியும். இப்படி பிரக்ஞை படிப்படியாக மேலே போகவேண்டி யிருக்கிறது.

ஆகையால் தேகான்மாவிலிருக்கும் ஒருவனுடைய பிரக்ஞை ஜீவான்மாவை நோக்கி எல்லாவேளையிலும் மேலே போய்க்கொண்டிருக்கவேண்டும். இந்தப்படி ஜீவான்மாவின் பிரக்ஞை முற்றிலும் பக்குவமானபோது அதுவும் கிரமப்படி முறையே பிரத்தியே

கான்மா பக்கம் எட்டி மேலே போக ஆரம்பிக்கும். கீழ் இறங்கும் முறையை இந்தியாவில் பிரவர்த்திமார்க்கமென்றும், வெளியாகும் பாதையென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. அடிவாரத்தில் குறிப்பிட்ட இடத்திற்கு வந்தவுடனே மனிதன் நிவர்த்திமார்க்கத்தில் ஏறிபோகத் திரும்புகிறான். தன் ஒருநாளாகிய ஒரு ஜென்மத்தில் அறுத்த தனது அறிவாகிய கதிர்ச் சுமையை முற்றிலும் விழித்த பிரக்ஞையுடன் திரும்புகிறான். இப்படிவருவதால் இறங்கும்போது மேல் உலகங்களில் இருந்ததைவிட அவனுக்குத்திறமை எவ்வளவோ அதிகரித்து வருகின்றது. இப்படிவரும் வழியில் ஜீவான்மாவின் கீழ் பாகமாகிய தேகான்மா, தனது மேல்பாகமாகிய ஜீவான்மாவோடிருக்கும் சம்மந்தத்தை மறந்துபோய் உற்சாகமாய் கீழ் வர்த்தமானத்தில் தன்னைத்தான் என்று முற்றிலும் வேருகப் பாவித்துக்கொண்டு, மேல் பாகத்திலிருந்து தன்னை பிரித்துக்கொண்டு கீழ் உலகில் தானுகவே தனசுயகாரியத்தை ஏற்படுத்திக்கொள்ள மயக்கம் எப்போதும் இதற்கு உண்டாகின்றது. பிரத்தியேகான்மாவின் பகுதியாகிய ஜீவான்மாவும் இவ்வித மயக்கத்தி ...ு, இது இருக்கும் மேல்லோகத்திலும் துணியலாம். ஆனால் நாம் இப்போது ஜீவான்மாவிற்கும் தேகான்மாவிற்குமுள்ள சம்மந்தத்தைபற்றிப் பேசுகிறோம். மேலும் தேகான்மா பக்கமிருந்து மேலுக்கு ஜீவான்மாவை நோக்கி அதனோடு ஒன்றாக போக எத்தனிக்கிறோம்.

ஜீவான்மா தனக்கு உற்சாகமான அனுபவம் வேண்டியதற்காக பசியும் தாகமும்இருப்பதால் தேகான்மாவோடு சேர்ந்திருக்கின்றது இது (ஜீவான்மா) தன்னுடைய நிலையில் சிறு குழந்தையாயிருக்கிறது. அந்த லோகத்தின உயர்வான விவகாரங்களை தொடுக்க சக்தியற்றதாகயிருக்கிறது. கீழ் உலகங்களிலிருக்கும் தாழ்ந்த வர்த்தமானங்களில் தகுந்தபடி விவகரிக்கமுடியும். ஆகையால் அவைகளுக்குத் தகுந்த இடத்தில் அடிக்கடி ஜென்மமெடுத்து வருகின்றது. தான் வளரவளர பசியும் கொஞ்சம் கொஞ்சமாய் ஆறிவருகின்றது. சில சமயங்களில் தான் மெத்த பக்குவத்திற்கு வந்திருக்கும்போதும் தன்னுடைய நிலையிலிருக்கும் உற்சாகங்களுக்கும் வேலைகளுக்கும் ஜாக்கிரதை (விழிப்பு) வந்தபோது தலைகீழாய் போய் தனது தேகான்மாவை கைசோரவிடுகிறது. தேகான்மா காமசிக்கில் அகப்

பட்டுக்கொண்டு கஷ்டத்திலும், துக்கத்திலும் அமிழ்ந்திருப்பதாலும் தான் அந்நிலையைத் தாண்டி வந்திருப்பதாலும் இப்போது தேகான் மாவை கவனிக்கிறதில்லை.

கீழ் லோக விஷயங்களின்மேலிருக்கும் ஆசையானது தேகான் மா வளரவளரக் குறைந்து வருகின்றது. காமலோகத்தில் முழு பிரக்ஞையை பெற்றபோது,பூலோகவாழ்வு வெகுசுகமில்லாதவகையாகத் தோன்றுகிறது.மனோமயலோக கீழ்பாகத்திற்குப் போனபோது காம லோகமும் இருளடைந்து அருவருப்பாகத் தோன்றும்.வெகு ரம்மிய மான ஜோதியாகிய காரணசரீரத்திலிருந்து வாழ்க்கையை சுகிக்கும் போது கீழ் மூவுலகங்களுடைய ருசி போய்விடும். தூங்கும்போது காமலோகத்தில் அங்குமிங்கும்போய் விவகரித்து உபயோகமுள்ள வேலையை செய்யும்படியான நிலைக்கு அநேகர் வந்திருக்கின்றார்கள். குப்தமுறையிலிருக்கும் மாணாக்கர்கள் எல்லோருக்கும் காமமயதேகம் நன்றாய் வளர்ந்து உபயோகத்திற்கு தகுதியாயிருக்கின்றது. என்றா லும் அநேகர் அதை உபயோகப்படுத்த பழக்கமில்லாதவர்களாக விருக்கின்றனர். மனோமய தேகத்தின அடிபாகமும் ஒழுங்காகி வேலைக்கு சித்தமாயிருக்கின்றது. கிரமப்படி தியானஞ் செய்வதால் இது விருத்தியாகி தன் கைக்குப்படிந்து வருகின்றது.இந்த நிலையில் அந்த தேகத்தை உபயோகப்படுத்தும் விதத்தை கற்றுக்கொடுக்க முடியும். பிறகு அவன காமமய தேகத்தையும் தூங்கும்போது தூலதேகத்தோடு விட்டுவிடமுடியும்.இதைச்செய்யத் தேர்ந்தபோது முறையே இன்னொருதரம் காரண தேகநிலையிலும் செய்யலாம். அப் போது, ஜீவான்மா தன்னுடைய லோகத்தில் விழிப்புடன் சுறு சுறுப்பாயிருக்கும்.

கீழ் தேகங்களெல்லாம் அந்தந்த லோகங்களிலுள்ள சக்திகளைப் பெற்று அவைகளை உபயோகிக்கும் வகையை கற்றுக்கொள்ளநமக்கு சொறபகாலத்திற்கு தேவையாயிருக்கும் கோசங்கள். இவைகளை முற்றிலும் உபயோகிக்க திறமை வரும்; ஜீவான்மாவுக்கும் காரண தேகத்தில் பூரணமாய் வேலைச்செய்ய திறமைவரும்; நான்காம் தீக்ஷைபெற்ற பிறகு தான் இப்படி செய்யமுடியும். இனி அந்த லோகங்களுக்கு ஜென்மமெடுத்து போகவேண்டிய அவசியமில்லை.

இவைகளை ஜெயித்துத் தாண்டினபிறகு, ஒருவன் எந்த சமயத்தி லும் வேண்டுமென்றபோது காமமய,மனோமய தேகங்களை தற்சமயத் திற்கு உண்டாக்கிகொண்டு, அந்தந்தலோகங்களுக்குப்போய் வேண் டிய வேலையைச் செய்யக்கூடும். இந்த நிலையை யடைந்தவன சுக மில்லாத பிரயாசையுள்ள பிறப்பு இறப்பு சுழலில் போகவேண்டிய அவசியமில்லை. நமக்கு இந்த பூலோக வாழ்க்கையில் கொஞ்சம் சுகம் இருப்பதால் நாம் இதை அவ்வளவு சுகமில்லாததாக எப்போதும் நினைக்கிறதில்லை வாஸ்தவந்தான. ஆனல், ஜீவான்மாவின் நிலையி லிருந்து நாம யோசித்துப் பார்ப்போமானல், அடைக்கப்பட்டு கட் டுண்டு முடமையாக இந்த தேகத்திலிருந்துகொண்டு இதைச்செய்ய முடியாமலும் அதைச் செய்யமுடியாமலுமிருப்பது, சந்ததமாயிருக் கும் ஆன்மாவிற்குசொல்லக்கூடாத அல்லலாயிருப்பதை உற்றுணரக் கூடும். நாம் தேகத்திலிருக்கும்போது அது மெத்த பிரயோஜனப்பட உபயோகிக்கினறோம். ஆனல் அது தற்சமயத்திற்கு கற்கவேண்டிய தற்காக எடுத்ததேகம், பாடத்தை கற்றவுடன் அதை முற்றும் ஒழிக்க சந்தோஷமா யிருக்கின்றோம்.

காரணதேகமிருக்கும் நிலையில் ஏதோ கொஞ்சம் அனுபவம் பெற்றவன் கீழ்மூன்று உலகங்களிலிருக்கும் தடைகளை சங்கடமாக வெகு கூர்மையோடு உணருகிறான். இவன் அந்நிலையிலிருக்கும் சத்தியத்தையும் சிறப்பான சுதந்திரத்தையும், அனபையும் இழந்து விடுகின்றான. இந்த இருளடைந்த பூலோக நிலைக்கு இறங்குவதின் காரணந்தெரிந்துகொண்ட பிறகு அவன் தனக்குத்தானே "இந்த ஆசையை ஒழித்துவிடுவேன், இதுதான் என்னை பிறப்பிற்கு இழுத் துக்கொண்டுபோகும் மூலகாரணம், என்னுடைய கர்ம வினையை பற்றில்லாதிருந்து சரிப்படுத்திக்கொள்வேன்" என்றுசொல்லலாம். இப்படிச் சொல்பவன விருத்திக்கு வந்திருக்கப்பட்டவன், இவ்விஷ யங்களைப்பற்றி மெத்த யோசித்தவன், அவன் ஆத்மஞானி, தத்துவ சாஸ்திரி, இவன் உறுதியுடன் "நான் இந்த ஆசையை அடக்கிவிடு வேன். காமத்தை சரிப்படுத்திக்கொள்ளுவேன். பிறகு என்னை இழுத்துக்கொண்டு வர எதுவுமிருக்காது" என்று சொல்லுவான். இதைச் செய்யக்கூடும். இப்படி சாதித்துத் தேறுவானனல்—இப்ப டிச் செய்து சித்தியானவர்கள் அநேகரிருந்ததாக இந்திய சரித்தி

ரத்திலிருக்கின்றது—அவன் பிறப்பிறப்பு சுழலிருந்து தப்பித்து கொள்ளுகிறான். அவன் தெய்வலோகத்தில் வசிப்பான், அல்லது ஒருவேளை காரணதேக நிலைபரியந்தம் போகக்கூடும். ஆனால் கிரமப்படி அதற்குமேல் போவதில்லை. மோக்ஷம் என்று அவன் நினைத்ததைப் பெற்றான்.

அப்படி செய்பவன் தாழ்ந்த தாபங்கள், ஆசைகள் எல்லாவற்றையும் நிவர்த்தித்து தாண்டினவனாயிருக்க வேண்டும். இல்லாவிடில் அது அவனால் முடியாது. எப்படிக்கிருக்கினும் அவன் விகாச முறையின் கருத்தை மறந்துவிட்டவன். இவன் கர்ம நியதியின் கிரமத்தை பூரணமாய் தெரிந்துகொண்டவன். ஆதலால் அவன் தன்னை கர்ம சம்பந்தத்திலிருந்து விடுவித்துக்கொள்ள முடிந்தது. ஆனால் அவன் விகாசமுறையின் நியதியை பூரணமாய் அறிந்து கொள்ளவில்லை. ஆதலால் இவன் இதிலிருந்து விடுவித்துக்கொள்ளவில்லை. இவன் மற்றபிள்ளைகளைவிட முன்னுக்கு வாசித்துப்போய் பல பரீக்ஷைகளை கடந்தபிறகு மற்றபிள்ளைகள் அந்தப்படிக்கு வரும்வரையில் மூன்று நான்கு வருஷம் சும்மாயிருக்கும் பள்ளிக்கூடத்து பிள்ளையைப்போல் இவன் இருக்கிறான், மோக்ஷமென்பதை அடைந்தவனுக்கு இவ்விதமாய்தான் கண்டிப்பாய் உண்டாகிறது. மானிட வர்க்கத்திற்கு ஏற்பட்டிருக்கும் வீட்டை அடையவில்லை. ஏனெனில் மானிடவர்க்கத்திற்குரிய பரிபக்குவம் முத்தர் நிலையில் முடிகின்றது.

இப்போது முத்தர் நிலையிலிருப்பவர்கள் பிறப்பிறப்பிலிருந்து விடுபட்டவர்களாக மாத்திரம் இருப்பதன்று, இன்னும் இவர்கள் பிராண சக்தியைக் கொடுப்பவராகவும் இருக்கின்றார்கள். இவர்கள் பிரத்தியேகான்மாவுடன் ஒன்றுசேர்ந்திருக்கின்றார்கள். பிரத்தியேகான்மாவும் முறையேகடவுளின் ஒரு பொறி. ஆனால் கடவுளின் கிரமம் யாதெனில் தானாகவே கீழிறங்கி தன்னுடைய அமைப்பில் முற்றிலும் யக்ஞார்த்தமாக அருளை பொழிந்துவருவது. ஆகையால் கடவுளோடு ஒன்றுபட்டவர்களுக்கும் யக்ஞார்த்ததன்மை நிறைந்திருக்கவேண்டியது. பெருத்த பரோபகாரி செய்யக்கூடியதைவிட முத்தர்கள் மெத்த அதிகமாக நல்லவேலைகளைச் செய்கிறார்கள்.

இவைகளை எல்லாவேலைகளிலும் மேலுலகங்களிலிருந்து செய்கின்றார். மானிடவர்க்கத்தில் தானும் ஒரு பகுதியாகவிருப்பதால் அவைகளைச் செய்துகொண்டு வருகிறார்கள். ஆதலால் அதனால் வரும் கரும பலன் மானிடவர்க்கத்திற்கு சேருகின்றது. இவர்களுக்குச் சேருகிறதில்லை. ஆகையால் அவர்களை பிறப்பிற்குப் பலவந்தப்படுத்துவது ஒன்றுமில்லை. ஆனால் மானிடவர்க்கத்தை முழுதும் கொஞ்சம் தூக்கிக்கொடுக்கின்றது. இது பெருத்த ஏற்றமல்ல, அவ்வளவு நற்கருமத்தை உலகமுழுவதும் பரவுவதால் ஒருவனுக்கு அதிகமாக வருகிறதில்லை என்றாலும், எல்லோரையும் ஒரே சரியானவகையில் சீர்தூக்குகிறது. ஆகையால் ஒரு கருத்தில், ஒவ்வொருவருக்கும் வர வேண்டியதைவிட கொஞ்சம் அதிகமாய் கிடைக்கின்றது. இதில் அநியாயம் என்பது இல்லை. என்றாலும் பெய்யுமழை நல்லவருக்கும் பொல்லாதவருக்கும் ஒரே மாதிரியிருப்பதுபோல ஒவ்வொருவருக்கும் சரியாயிருக்கும்.

ஆகையால் ஆயிரமோ அல்லது லக்ஷக்கணக்கான வருஷங்கள் சென்ற பிறகு மோக்ஷமடைந்தவன் விகாசமுறையின் பெருக்கு அலை இவனிருக்கும் நிலைக்கு வந்ததும், இன்னொருதரம் இவனை சுற்றிக்கொள்வதைக் காண்பான். அவன் மறுபடியும் திரும்பிவர வேண்டியிருக்கிறது, பிறக்கவேண்டியிருக்கிறது விருத்திக்கு வர வேண்டியதை முயற்சிக்கவேண்டி யிருக்கிறது. மோக்ஷத்தை தேடுகிறவன் சாதாரணமாய் தனது விமோசனம் சதா இருக்காது என்று அறிகிறான். ஆனால் ஏதோ வெகுகாலத்திற்கு பிந்தி இவன் திரும்பி வரவேண்டியிருக்கிறது என்றும், தான் வரும்போது உலகம் மேன்மையான நிலையிலிருக்கும் என்று நினைக்கிறான். "இந்த நஷ்டம் பாதகமில்லை, நான் ஆயிரவருஷங்களுக்கு விமோசனம் பெறுவேன், அந்தக் காலமெல்லாம் தேவவுலகில் சுகித்திருப்பேன்" என்று சொல்லுகிறான்.

நமது கருத்து யாதெனில் நாம் போகக்கூடிய உயர்ந்த நிலையில் முழு பிரக்ஞையோடிருப்பது. வேறு எந்த நிலையிலும் திருப்தியடைந்து உட்கார்ந்து இளைப்பாற கருத்து கொள்ளவில்லை. ஆனால் இன்னொருவகையில் சிலர் செய்கிறபடி சாதாரண விழிப்புபிரக்

ஞைக்கு மேலுள்ள ஓர்படிக்கு நமது பிரக்ஞையை விட்டு பரவசமாய் மயங்கிப் போக நமக்கு இஷ்டமில்லை. சில சமயங்களில் "சமாதியில் போவதாக" பேசிக்கொள்ளுகிறார்கள். இன்னும் சமஸ்கிருதத்தில் உருளுகிறவர்களில் சிலர் தியானஞ் செய்யும்போதும், சமாதிக்குப் போவதாகச்சொல்லிக் கொள்ளுகிறார்கள். இவ்வார்த்தைக்கு அந்தந்த சமயத்திற்கு தக்க அருத்தமிருக்கின்றது என்று தெரிகிறவரையில் எங்களுக்கு மெத்த குழப்பமிருந்தது. சமாதி எனபது, சுத்ததெளி வான பிரக்ஞையோடிருக்கும் நிலைக்குக் கொஞ்சம் மேலுள்ளபடி. அதாவது ஒருவன் காம லோகத்தில் விழிப்பாயிருந்து மனோ லோகத்தில் இல்லாதிருந்தானானால், அப்போது அவனுக்கு அடுத்த படியாகிய மனோமய லோகம் சமாதியாயிருக்கும். ஒருவன் ஜாக்கிரதையோடிருப்பதற்குமேல் ஒருபடி போய் ஒருவகையாய் பரவசமாகி மெயமறந்து சிறந்த இனப உணர்வுடன திரும்புவது; ஆனால் சாதாரணமாய் தெளிவான ஞாபகத்தோடு வருவதில்லை; ஜனங்கள் தியானஞ் செய்யும்போது சமாதிக்குப் போகக்கூடாது. அவர்கள் தங்களுடைய பிரக்ஞையோடு விழித்திருக்கவேணடும்; இப்படியிருந்தால் திரும்பிவந்தபோது, அவர்கள் பார்த்ததை ஞாப கப்படுத்திக்கொள்ளக்கூடும். அநேகர் சமாதியில் போய் ஆநந்தத் தையும் பேரினப உணர்வையும் அனுபவித்தார்கள் என்பது எனக் குத் தெரியும். எனாலும் அது விருத்தியாகிவருவது என்று அருத்தமல்ல. ஏனெனில் அவர்கள் இருக்கும் பிடியைவிட்டு என்ன செய்கிறார் என்று அவர்களுக்கே தெரியாது. இதில் எப் போதும் அபாயமிருக்கிறது. தாம் திரும்பிவருவோம் என்பதும் அவர்களுக்குத் தெரியாது.

டாக்டர் பெசன்ட் அம்மையாரும், யானும் மேல் லோகங்களில் பிரவாகமாய் பொங்கிவரும் பிராணசக்திப் பெருக்கை கவனித்துக் கொண்டிருந்தோம். இது பெருத்த அலைகள்போல் சூரியபகவா னிடமிருந்து துடிதுடிப்பாய் வந்துகொண்டிருந்தது. "நாம் இந்த அலையோடு போனால் அது நம்மை எங்கே கொண்டுபோகும் என் பதை பார்ப்போம்" என்றார் பெசன்டம்மையார். மாஸ்டரவர்கள் செய்யக்கூடாதென்று தடுத்திராவிட்டால் நாங்கள் அதில் தாவிக் குதித்திருப்போம். பிறகு டாக்டர் பெசன்ட் அம்மையார் "நாங்

கள் அந்த அலையில் போயிருந்தால் எங்கே போயிருப்போம்" என்று அவரைக் கேட்டபோது அவர் "சிரியஸ்" என்கிற மண்டலத்திற்கு அல்லது இன்னொரு சூரியமண்டலத்திற்கு கோடிவருஷம் அடித்துக்கொண்டே போய் ஒதுக்கிவிடும்' என்றார். சந்தேகமின்றி இவ்விதமான பிராண அலைப்பெருக்கில் என்ன ஆகும்என்பது தெரியாமல் தாவிப்போவது அறிவுள்ளதல்ல. பிரக்ஞையை இழப்பது சரியான வழியல்ல. நமது தேகங்களை அடக்கி யாண்டுக்கொண்டு எங்கே போகிறோம் என்பது பார்ப்பது நல்லது. இல்லாவிடில் நமது தூலதேகத்தை இழந்து அற்பகாலத்திற்கு உபயோகப்படுவதையும் இழப்போம். நாம் போகக்கூடிய எந்த உலகத்திலும் முழு பிரக்ஞையோடிருந்து அந்த உலகில் உபயோகமாயிருப்பது தான் நமது வழி. நமது மாஸ்டர்கள் வெறுமையில் சும்மாயிருக்கும் தியானவழியை சொல்லிக் கொடுப்பதில்லை. எங்கேயாகிலும் நாம் உட்கார்ந்துகொண்டு சுகிப்பது நமது நோக்கமல்ல. ஆனால் மாஸ்டர்களுடைய வேலையில் எப்போதும் சுறுசுறுப்பாயிருப்பது தான் நமது கருத்து.

நான்காவது சாதனத்திற்கு மாஸ்டர்கள் கொடுத்த இக்கருத்து, அவருடைய விமரிசையான குணவிசேஷத்தைக் காட்டுகின்றது. இவர் வார்த்தைக்குப் பின்னிருக்கும் அதன் மூலத்திற்குப் போகின்றார், "நீ விமோசனம் பெறுவதற்குக் காரணமென்ன? மற்றவர்களுக்கு இன்னும் நல்லவகையுடன் உதவிசெய்ய விடுபட்டவனாக விருப்பதற்காக நீ கடவுளோடு ஒன்றாக வேணுமென்று முயற்சிக்கின்றாய். இந்தக் கடவுள் என்பது என்ன? கடவுள் என்பது அன்பு. நீ அவரோடு ஒற்றுமைப்பட வேண்டுமானால் அன்பைப் பெருக்கவேண்டியது. ஆதலால் இந்த சாதனம் உண்மையில் அன்பு" என்று சொல்கிறார். "மனிதன் எங்கிருந்து, எப்படி வந்தான்" எனும் புத்தகத்தை வாசித்தவர்களுக்கு மற்ற மண்டலங்களிலிருந்து ஜீவான்மாக்கள் கூட்டங் கூட்டமாக வந்ததையும், அதில் சில கூட்டத்தை சேவகக்கூட்டம் என்று விவரித்திருப்பதை ஞாபகமிருக்கலாம். உண்மையில் திவ்யஞான சபையிலுள்ளவர்கள் எல்லோரும் இந்தக் கூட்டங்களில் ஏதோ ஒன்றில் சேர்ந்தவர்கள். ஆகையால் சேவகம் என்கிற கருத்து நம்மில் இழைந்

திருக்கின்றது. நமக்கு பிறவியோடுவரும் ஏதோவொரு சுபாவ தன்மையை விட்டுப்போவது எவ்வளவு கஷ்டமென்று எனக்குத் தெரியும். உதாரணமாக நமது சுபாவத்தில் தவிர்க்கமுடியாத அநேக சிறு அமைப்புகள் இருக்கின்றன. இது தேகான்மாவைச்சார்ந்த ஜாதிரீதி. ஆனால் இவ்விடத்தில் சேவகத்தின் கருத்தோ, ஜீவான்மாவினுடைய ஜாதிரீதியாக சொல்லலாம். ஒருக்கால் பிரத்தியேகான்மாவினுடையதாகவும் சொல்லலாம். அந்த மச்சத்தோடு அவன் பிறந்திருக்கிறான். அப்போதிருந்து அதைப் பெருக்கி வந்திருக்கின்றது.

நாம் யோசித்துக்கொண்டிருக்கும் சேவக வகுப்பு ஜீவான்மாக்களைப்போல இதர வகுப்பிற்குரிய ஜீவான்மாக்கள் இவ்விதமாகவே நல்லவைகளாக விருப்பதை தெரிந்துகொள்ள கஷ்டம். சூரியபகவான் இச்சா, ஞானம், அன்பு என மூன்று முகமாக விளங்குகின்றார். இவ்விதமாய்த்தான இந்தப் புத்தகத்தில் கொடுத்திருக்கிறது. ஜனங்கள் இம்மூன்று மார்க்கங்களின் வழியாய் அவரைச் சேருகிறார்கள். ஒவ்வொருவனுடையசொந்தவழிதான் அவனுக்குஉன்னதமானவழி. ஆனால் மற்றவனுடையது மற்றவனுக்கு மெதத நல்லது. ஆனால் அடைவினில் எல்லாம் ஒன்றாய்ச் சேரும். இம்முகங்களின் வழி ஏககாலத்தில் பார்க்க சாமர்த்தியம்பெற்று உண்மையில் இவையெல்லாம் ஒன்றுஎன்பதை அறியவேண்டும். "அதநேசியன்க்ரீட்" எனும் கிருஸ்தவகருத்தில் இந்த திருமூர்த்திகளின் கருத்தை "மும்மூர்த்திகளை ஒருவரோடொருவரை கலக்காதபடிக்கும், சத்தை பிரிக்காதபடிக்கும் பாரக்கவேண்டும்" என்று சொல்கிறது. கடவுள் சந்ததமும் ஒன்றேஎன்றும் அவருடைய விளக்கம் மூன்று மூர்த்திகள் என்றும் கற்கவேண்டும்.

அன்பு போதுமானபடி பலமாயிருந்தால் மற்ற சாதனங்களைப் பெற இது பலவந்தப்படுத்துகின்றது என்று முதலில் சொல்லப்பட்டிருக்கிறது. ஜனங்களை அவரவர்களுடைய சக்தியானுசாரமாய் செய்யவிடுகிறது தாய் அன்பு, என்பதை வெகு நேர்த்தியான உதாரணமாக எடுத்துக்கொள்வோம். இது காட்டுமிராண்டி ஜனங்களிடத்தில் எப்படி வேலைசெய்கிறது என்பதை கவனிப்போம்.

காட்டு ஜாதியிலுள்ள தாயாருக்கு அதிகமாயொன்றும் தெரியாது, ஆனால் குறைந்தபக்ஷம் தனது குழந்தையை அபாயத்திலிருந்து காப்பாற்றமுடியும். அதற்காக சமயத்தில் தன்னுயிரை இழக்கவும் கூடும். நமக்குள்ளிருக்கும் நாகரீகமுள்ள தாயாரும் அவ்வித சந்தர்ப்பங்களில் அதேமாதிரி செய்வாள். எரிகின்ற வீட்டிலிருந்து குழந்தையைக் காப்பாற்றி தன்னுயிரை இழந்ததாகவும் அல்லது குழந்தை ஏதோ ஒரு தொத்து விஷநோய் கொண்டிருந்தால் அதை உபசரணை செய்ததால்தான் நோய்கண்டு இறந்ததாகவும் அடிக்கடி கேள்விப்படுகிறோம். நமக்கிருக்கும் சாதாரண வாழ்க்கையில் அந்தப் பலமான அன்பு, தாயாரை யோசிக்கச் செய்கிறது. குழந்தைமேலிருக்கும் அன்பால் சுகாதார விஷயங்களையும், ஆகாரத்திற்குரிய விஷயங்களையும், இன்னும் இதர விஷயங்களையும் வாசிக்கச் செய்கிறது. ஆகையால் அன்பு தேகத்தின் சுறு சுறுப்பையும் மனதின் சுறு சுறுப்பையும் அதிகப்படுத்துகிறது.

ஒருவன் மாஸ்டர்களை அடையவேணுமானால் அது அவருக்கு சேவகம் செய்யவேண்டுமென்கிற தீவிர விருப்பமாகத் தோன்றும் இந்த அன்பு அவனிடத்தில் இருக்கவேண்டியது. "செயின்ட்ஜான்" "நாம் சகோதரர்களை அன்பாய்ப் பாராட்டினதால் மரணதிசையிலிருந்து ஜீவிததிசைக்கு வந்திருக்கிறோம். எவனொருவன் தனது சகோதரனை நேசியாதிருக்கிறானோ அவன் மரணத்திலிருக்கிறவன்" என்றுசொன்னார். இன்னும் "அன்புபாராட்டாதவன கடவுளைப்பார்க்காதவன்" என்றார். இதுவெல்லாம் முற்றிலும் வாஸ்தவம். திவ்ய ஞானசபையில் வழங்கும் வார்த்தைகளைத் தெரிந்துகொள்ளவும் அதனுடைய நியாயக்கொள்கைகளையும் முறைகிரமத்தையும் அறிந்து கொள்ளவும் நல்ல விஷயந்தான. 2401 வகை ஜீவபூதங்களைப் பிரித்து அவைகளை உபயோகப்படுத்திக் கொள்வதும் உண்மையில் வெகு உபயோகமானது தான்.ஆனால் அன்புதான் அவனை உண்மையான திவ்யஞான அங்கத்தினனாக்குகின்றது.

வெகு நாளைக்குமுன் சிஷ்யா பாபு மோஹினி சட்டர்ஜி என்பவர் லண்டன் நகரத்திற்கு எங்களுக்கு போதனை செய்யவந்தபோது இந்த சாதனங்களைப்பற்றி முதலில் சொன்னார். இவைகள் 'சின்னட்'

புத்தகங்களிலாவது "ஐஸிஸ் அன்வீல்ட்" எனகிற பத்தகத்திலாவது விவரிக்கவில்லை. இவைகளைத் தவிர வேறு புத்தகங்கள் எங்களிடத்திலில்லை. இந்த நான்காவது சாதனம், அதாவது விமோசனமாவதற்கும், கடவுளோடு ஒன்று சேருவதற்கும அதிதீவிரமான வாஞ்சையில்லாதிருந்தால், ஆறு அங்கங்களான நல்லொழுக்கம் பாலைவனத்தில் பாய்ச்சும் நீரைப்போலிருக்கும் என்று தெளிவாய்ச் சொன்னார். நாம் கடவுளோடு ஒன்றுசேர்ந்து அவர் செய்வதுபோல நாம் செய்யாவிடில் இவைகள் (மற்றசாதனங்கள்) வரண்டு பிரயோஜனமில்லாதிருக்கும். நாங்கள் இப்போது முற்றிலும் தெரிந்துகொண்டிருக்கும் சேவகத்தின் கருத்து அப்போது எங்களுக்குத் தெரியவில்லை. என்றாலும் மாஸ்டர்கள் முதலிலிருந்தே "தாழ்ந்த பழிக்குட்பட்டமானிடவர்க்கத்திற்கு" அவர்களுடைய அன்பை வற்புறுத்திருந்தார்கள். நாங்கள் திவ்யஞான வாசிப்பை கற்றுக்கொள்ள பிரயத்தினப்பட்டுக் கொண்டிருந்தோம்; எல்லாம் எவ்வளவோ புதிதாயிருந்தன, அதிசயமாயிருந்தன, உற்சாகமாயிருந்தன. இப்படியிருந்ததால் எங்கள் காலம் அதில் செலவழிந்தது. ஒருவன் மற்றவனுக்கு உண்மையில் உபயோகப்படவேண்டுமானால் ஏதோ கொஞ்சம் கற்றிருக்கவேண்டுமென்பதால் சாதாரணத்தைவிட வெகுவாய் அதிக காலம் கழிந்தது.

> "திடச் சித்தம், திடத்துணிவு, திடத்தீர்மானம், என்கிற பதங்களிலடங்கிய அவ்வளவு விருப்பம் அதிலில்லை."

C. W. L.:—சித்தம் என்பது முதல் ரேகையின் குணமாகும் இதில் **மாஸ்டர் மோரியா** அவர்கள் இருக்கின்றார். **மாஸ்டர் குதூமி** அவர்கள் ஞானமும் அன்புமாகிய இரண்டாவது ரேகையில் இருக்கினறார். ஆனால் இவ்விடத்தில் இவர்முதல் ரேகையிலுள்ளவராகப்பேசியிருக்கின்றார்.ஒரு சமயத்தில் ஆல்கியூனி ஒருகுணத்தைப் பெறவேண்டுமென்று பிரியத்தைக் காட்டினது எனக்குத் தெரியும். அப்போது மாஸ்டர் சொன்னதாவது "ஒரு விஷயத்தை (Desire) ஆசைப்படாதே அது வெகு பலஹீனமானது. நீ கடவுளானபடியால் (Will) நீ அதை இச்சி. நீ ஒரு குணத்தைப் பெறவேண்டு

மானால் அப்படிச் செய்ய சித்தம் செய்துகொள். போய் அதைச் செய்'' என்றார். இதுதான் சத்சங்கத்தாருடைய முறை. மாஸ்டர்களுடைய நோக்கத்தையும் அவர்கள் விஷயங்களைப் பார்க்கும் விதத்தையும் தெரிந்துகொள்வது வாஸ்தவத்தில் வெகு முக்கியமாயிருக்கிறது. இதுதான் அவர் இருக்குமிடத்திற்கு அவரைக் கொண்டுவந்து விட்டது. அப்படியே அது நமக்கும் கைகூட்டிக் கொடுக்கும்.

''இதைப் பயன்படுவிக்க வேண்டுமானால், இந்த நிடச்சயமானது வேறெவ்வித உணர்ச்சிக்கு மிடங்கொடாதபடி உன் சுபாவமுழுதும நிறைந்திருக்கவேண்டும், அது, வாஸ்தவமாகப்பார்க்கில் கடவுளோடொன்றுபட வேண்டுமென்ற நிடச்சித்தந்தான்; ஆனால் தொல்லையினின்றும, வருத்தத்தினின்றும் தப்பியோடுவதற்காகவல்ல, பின்னை கடவுளிடத்தில் உனக்கு நிறைந்த பக்தியிருப்பதால், அவர் அருள்புரிவதுபோல், நீயும் அவரோடு ஒத்து அன்பு பாராட்டுவதற்காக. அவர் அன்பேயாதலால் நீ யவருடனொன்றாக வேண்டுமெனில் அவரைப் போல் பூரண நிஷ்காமியத்தாலும், அன்பினாலும், நீ நிறைந்திருக்க வேண்டும்.''

C. W. L:—மாஸ்டருடைய சிஷ்யன் ஒரே ஒரு ஆசையை வைத்திருக்கிறான். அதாவது சேவகஞ்செய்ய. இதற்காக அவன தன்னுடைய சொந்த சுகங்களையும் ஆவல்களையும் விட்டு, இப் பெருத்த திருப்பணிசெய்யும் யந்திரத்தில் ஓர் சிறு சக்கரமாகவிருக்க இஷ்டப்படுகிறான. சாதாரண மனிதனே மேலானவை எதையும் கண்டிதமாய் கவனிக்க இன்னும் எத்தனப்படவில்லை. தான் கண்டபடி வாழ்க்கையை எடுத்துக்கொள்கிறான். இதைவிட மேலாகவும் கண்ணியமான வாழ்க்கைக்குப்போக இன்னும் அவனுக்கு ஆசை வரவில்லை. ஆனால் அதிலேயே மாறிமாறி இருக்க இச்சிக்கின்றான்.

கீழ் ஆசைகள் என்று சொல்லுவதையெல்லாம் விட்டுவிடும்படி சொல்லுவோமானால் அவன "நான அப்படி செய்வேனுனால் என்னுடையது என்பது ஒன்றுமில்லாமல் போய்விடுமே" என்று கேட்பான. அப்பேர்ப்பட்டவனிடத்தில் வாஸ்தவமாகவே அவன் பார்க்கக்கூடிய வரையில் ஒனறுமில்லைதான். எனறுலும் உண்மையில் மெய்ப்பொருள் அவனில் முழுவதும் இருக்கினறது.

கடவுள் வாழ்க்கையில் (சம்பிரதாயத்தில்) கலந்துபோவது என்பதால், நாம் சொல்லும் கருத்தை அப்பேர்ப்பட்டவனுக்கு விளக்குவது கஷ்டந்தான. வடக்கில புத்தமதத்தை அதிகமாய் வாசித்திருக்கும் ஒரு நல்ல வித்துவானை எனக்குத் தெரியும். ஒரு நாள் அவர் என்னிடம் வந்து, "இதனால் எனக்கு ஒனறும் புரியவில்லையே, இதனபடி நடப்பதால் பிரயோஜனமில்லை எனறு தெரிகிறது. இதை ஒரு புராதன மதஆராய்ச்சியாக வாசிக்க விநோதமாகவிருக்கிறது. ஆனால் நமக்கு எடுத்துக்காட்டும் அதனுடைய கருத்து ஒனறு யாதெனில், புத்தபகவானோடு ஒன்முக வேண்டும் என்றிருக்கிறது. இது புத்தபகவானுக்கு என்ன பிரயோஜனமோ எனக்குத் தோன்றவில்லை. அது வாஸ்தவத்தில் என்னுடைய முடிவாயிருக்கும்" என்று சொனனர். இவ்வித கருத்தை தான் சாதாரணமானவன் இவ்விஷயங்களைப்பற்றி கொள்கிறுன. என்றுலும் இவைகளில் உண்மையான உற்சாகத்துடன் பிரகாசிக்கும் கருத்து இருக்கின்றது. அதை ஒருவன் கண்டுபிடித்தானுனல் அது அவனுடைய கருத்து முழுவதையும் மாற்றிவிடும். பிரக்ஞை விரிவானதால் தடையில்லா சுதந்திரம் போவதில்லை. அல்லது சற்று கூட தான் எனும் அகங்கார தத்துவம் அழிந்துபோகிறதில்லை. நான் பிரபஞ்சத்தில் முழுகிப் போவதில்லை. மற்று பிரபஞ்சமே நான் ஆகிவிட்டேன. ஜனங்கள் 'தத்வமசி' என்று சொல்லுகிறுர்கள். அது கீழ் நானுக்குச் சேர்ந்த மயக்கம், ஆனல் ஒருவன் "நான் கடவுள்" என்று உற்றுணரும்போது அப்போது கடவுள் கடவுளாக உணருவது சற்றும் மதிமயக்கமலல. நான் என்று நினைக்கும் நினைவு உண்மையில் அவருடைய விளக்கம், தோற்றம்; இது மாயையல்ல. எது ஒன்று அதற்கு வெளிப்புறமாகவிருக்கும், அல்லது ஏகவஸ்துவிலிருந்து பிரிந்திருக்கும் எனும் கருத்து மயக்கமானது.

இவ்விதமாய் சிறியதாக இருக்குமொன்று பெருத்ததில் சேரும் விதத்தை உதாரணமாகக்காட்டும் சில விஷயங்களை சாதாரண வாழ்க்கையில் காணலாம். ஒருபெருத்த வணிகசாலையில் ஒருவன் ஒரு சிறு குமாஸ்தாவாக சேருகிறான. முதலில் இவன் வணிகசாலையை தன்னிடத்தில் வேலை வாங்கும் அதிகார வீடாகவும், தான் மணி கணக்குப்படி வரவும் வேலைசெய்யவும், தனக்கு மெத்த தொந்திர வென்று நினைக்கிறான. ஆனல் இவன சிலவருஷகாலம் கழிந்த பிறகு, கொஞ்சம் அதிகாரப்படிக்கு வந்தவுடன, "நாங்கள் இவ்விதம் செய்கிறோம், நாங்கள அப்படி செய்கிறோம்" எனகிறான். பிறகு வணிகசாலையின வேலையை தனனுடையதெனகிற கருத்தோடிருக்க ஆரம்பிக்கிறான. இப்படியே அவன் மானேஜர் வேலை வரைக்கும் போகிறான. கடைசியாக முதலாளியுடன கூட்டாளியாகிறான. அப்போது அவன் எப்போதும் தன் சாலையைப்பற்றியே பேசுவான், அவன் எந்த வேலையை யோசித்தாலும் அவன் மனதில் முனனிட்டிருக்கிறது வணிகசாலையைப்பற்றித்தான். என்றாலும் அவன் எப்போதும்போல எந்த வழியிலும் வேலையை தொடுக்க தடையில்லாத சுதந்திரத்தோடிருக்கிறான. சரியான வகையில் தனது இச்சையை நடத்த இப்போது நிச்சயமாய் அவனுக்குத் தெரியும். வணிகசாலை இந்தநோக்கப்படிக்கு வாவென்றும் இப்படி செய்யென்றும் அவனை தூண்டவில்லை, ஆனல் அவன் தானே இதில் வந்துவிட்டான். இது ஒரு சிறிய திருஷ்டாந்தம். இது ஒருவன் பெருத்த அதிகாரத்தோடு சேர்ந்து வரும் வகையின் கருத்தை கொடுக்கினறது. எனறாலும் எப்போதும்போல தன னிச்சை சுயமாகவேயிருக்கும் கருத்தை தருகின்றது.

நாம் மார்க்கத்தோடு ஒனறாகவேண்டிய காலம் ஒரு நாளைக்கு நமக்கு வரும. அப்போது எந்த சாதனத்திலும் நாம் ஒருபோதும் தவற மாட்டோம். ஏனெனில் அவைகள் நம்மிடத்தில் வளர்ந்து நம்முடைய சுபாவமாகிவிடும். நாம் எப்போதும் கடவுளுக்கு அருகிலிருக்கிறோம். ஏனெனில் அவர் நம்மிலும்,நம்மைச் சுற்றிலும் நம்மோடும் எப்போதுமிருக்கிறார் என்றாலும் அவரை உற்றறியவும், நம் வழியில் வரும் ஒவ்வொரு உபாயத்தையும் உபயோகித்து படிப்படியாய் பிரக்ஞையை உயர்த்திக்கொண்டு போய் அக்கருத்தை

உண்மையில் தெரிந்து கொள்ளும் வரையில் நாம் கற்கவேண்டி யிருக்கிறது. நாம் கடவுளுடைய மேலான தோற்றத்தில் வெறும் வெளி உருவத்தில் மாத்திரமல்லாது உள்ளே இருக்கும் நிறைவில் அவரோடு ஒன்ருகவேண்டியது. நம்முடைய தேகத்திலிருக்கும் பஞ்சபூதங்களும் இன்னும் நம்மைச் சுற்றியிருக்கப்பட்டதும் அவ ருடைய வெளிப் போர்வை. ஆனல் போர்வையோடல்ல நாம் ஒன் ருகவேண்டியது. அவரோடு நாம் ஒன்ருனபோது அவர் தனது கருத்தோடு அதை கவனித்து தன சக்தியைப்பொழிய நம்மை ஓர் பிராண வாய்க்காலாக உபயோகப்படுத்துவார். நாம் இந்த கீழ் உலகங்களுக்கு தெய்வீக சக்திக்காக, ஓர் வாய்க்காலாக விருக்கின் ரேம். ஆனல் தேகாபிமானமானது ஒருதனியாக அவருக்கு எதிரி யாக இல்லாதிருக்கும் நிலைக்கு வகதபோது நாம் உபயோகப் படும்படியான வாய்க்காலாகின்ரேம். அவர் இவ்வகையில் எப் போதும் வேலை நடத்துகின்ருர். அவருடைய மந்திரிகளும், வெள்ளியம்பல சங்கத்தாரும் அவ்விதமே செய்கிருர்கள். ஜனங்க ளிடத்தில் நேராய் சக்தியை பொழிந்து வந்தார்களானல் அவர்கள் சந்தேகமின்றி அற்புதமான சித்திகளைச் செய்யக்கூடும். அது அநா வசியம். அவர்களுடைய சக்தி மெத்த வீணய்ப்போகும். ஆதலால் அவர்கள் அமைத்திருக்கும் முறைப்படி நடத்துகினருர்.

வாழ்க்கையின கருத்தை தெரிந்துகொள்ள சற்றும் எத்தனிக் காதவர்கள் பெரும்பாக ஜனங்களிருககிருர்கள். இயற்கை அவர் களுக்கு தலைகுனிய வேண்டுமென்று நினைக்கின்ருர்கள். இருக் கிறவிதப்படி விஷயங்களை ஏற்றுக்கொள்ள மாட்டோம் என்கிருர் கள். இவர்கள் தங்கள் இஷ்டப்படி இறந்தவர்களை ஏவலிட்டு கூப் பிடுவதை சோதிக்கிறவர்கள். தங்களிஷ்டப்படி நிபந்தனைகளை ஏற் படுத்தி இப்படித்தான் இறந்தவர்கள் வந்து தோற்றங் காட்ட வேணுமென்று சொல்லுகிறவர்களைப் போலிருக்கின்ருர்கள். இது மெத்த அறிவீன நோக்கம். ஏனெனில் அந்தப்படி சோதிக்கும் வழிகிடையாது. உனனிஷ்டப்படி வேலைசெய்யும் நியதி உலகில் எங்குமில்லை. காட்டுமிருண்டிக்கு மின்சார விஷயங்களை காட் டினபோது அவன் இவையெல்லாம் உன்னுடைய தந்திரமென்று சொன்னதை கேட்டிருக்கின்ரேம். காட்டுராஜா "இவையெல்

லாம் தந்திகளால கட்டுண்டிருக்கிறதைக் காண்கிறேன். நீ இந்த தந்திகளால் செய்கின்றாய். இதை அறுத்துவிடு. பிறகு உன்னை நம்புவேன்" என்று சொல்லுவான். காந்தசாஸ்திரி புன்சிரிப்புடன் "உனக்கு நியதி தெரியவில்லை. தந்திகள் காந்தத்தை போகவிடுகிறது. அவையில்லாவிடில் சக்திவராது என்று சொல்லுவார். பிறகு காட்டுமிராண்டி உன்னுடைய சூதை வெளிபபடுத்திவிட்டேன் என்பான. பாடுகிளப்பும் இடத்தில் (Seances இருந்தவர்களை வரவழைக்கும் இடம்) ஜனங்கள் இவ்விதமாய்த்தான செய்கிறார்கள். கிரமப்படியிருக்கும் வழியை ஒத்துக்கொள்ளமாட்டார்கள். ஆனால் மற்றோர் வழியில் செய்யச் சொல்லுவார்கள். தனனிஷ்டப்படி விஷயங்களை செய்யும்படி கடவுளை வற்புறுத்தும் கருத்தில், தான் எனும் அகங்காரத்வம் திட்டமான அளவு இருக்கின்றது. இது சிலமாதிரியான மனதிற்கு சிலாக்கியமாயிருக்கின்றது போலும்.என்றாலும் பிரார்த்தனையில் கடவுளை இப்படிச்செய் என்று கேட்கும் கருத்தைவிட அதிகமாயிருக்கிறதெனறு எனக்கு தட்டவில்லை. எனக்குமேல் அவருக்கு எவ்வளவோ அதிகமாக தெரியுமென்று நிரமாக எப்போதும் எனக்குத் தெரியும். நான் கேட்டதால் அவருடைய கருத்தை ஏதோ ஒரு வகையில் அகஸ்மாத்தாய் எனது இஷ்டப்படி மாற்றினாரானல் அவருடைய திருவுள்ளத்தினபடியல்லாத மெத்த இழிவானது எனக்கு வரக்கூடும் என்று எனக்குத் தெரியும்.

ஒருவன் கடவுளோடு ஒன்றாயிருக்க இச்சிக்கவேண்டுமென்கிற கருத்து நம்மில் அநேகருக்கு இல்லை. ஆனல் இந்தியாவிலிருக்கும் நமது சகோதரர்களுக்கு இது வெகு சாதாரணம். மாஸ்டர் கடவுளைப்பற்றி பேசும்போது அவ்வித வார்த்தைகளை அநேக தடவைகளில் உபயோகிக்கிறார். இவர் முற்பிறப்பு ஒன்றில் "நாகார்ஜுனு" என்கிறசிறப்புப்பெற்ற புத்தமத போதகர், அப்பிறப்பில் அநேக பிரசங்கங்களை செய்தார். கிரந்தங்களை எழுதினார். இப்போது பாதுகாத்து வைத்திருக்கும் அவருடைய புத்தகங்களில் கடவுள் ஒருவர் என்கிற கருத்தைப்பற்றி கண்டித்து எழுதியிருக்கின்றார். அந்த வார்த்தையையும், பெயரையும் உபயோகப்படுத்தக் கூடாதென்று ஆக்ஷேபிக்கின்றார். அதோடு கலந்திருக்கும் பஞ்ச

பூத விசாரணையில் வெகு ஆழமாய் போகின்றார். நாகார்ஜுன ருடைய நியாயத்தைத் தெரிந்துகொண்டு, இந்த சிறு புத்தகத்தில் நமது மாஸ்டர், கடவுளைப்பற்றி முன விரோதமாய் அவ்வளவு மும் முரமாய் பேசினவர், இப்போது கடவுளின் நாமதேயத்தை உப யோகிப்பது எவ்வளவு ஆச்சரியம். புத்தபகவானும் கடவுள் ஒருவர் என்பதைப்பற்றி வெகு பலமாய் கண்டித்து பேசியிருக்கின் றார்'' என்கிறார்கள். இந்த ஆக்ஷேபணைக்கு பதில் இது; இந்த புத்த கத்தில் நிற்குண பிரம்மத்தைப்பற்றி பேசவில்லை. அவர் சந்ததமாய் அவ்வியக்கத்திலிருப்பதைப்பற்றி பேசவில்லை. இவர் முதன்மையில் இந்தியவாலிபனுக்கு சூரியமண்டலத்தில் சகுணரூபமாயிருக்கும் ஈசு வரனைப்பற்றி சொல்லுகின்றார். சந்தேகமின்றி இக்கருத்தில் நமது மாஸ்டர் இவவிடத்தில் கடவுள் எனகிறபதத்தை உபயோகப்படுத்து கிறார். நாகார்ஜுனராயிருந்தபோது இந்திய வேதாந்தம், நியா யம் முதலிய சாஸ்திரங்களை தெரிந்திருந்தவருக்கு சொன்னது அது. ஆகையால் நம்முடைய கிருஸ்தவ சகோதரர்கள் அநேகர் கடவுளின கருத்தை ஏதோ ஒரு பெரியவராகவைத்து தாழ்வாகக் எத்தனிப்பதை கண்டித்துப் பேசினார்.

பிறகு நீ அவரைப்போல ஆக்கிக்கொள்ள வேண்டுமென்றார். இது அவரை எவ்விதம் தெரிந்து கொண்டிருக்கிறோம் என்கிற கேள்வி வருகின்றது. அவர் மூன்று அம்சங்களாக விளங்குகின்றார் என்று நமக்குத் தெரியும். ஒவ்வொருவரும் இதில் ஏதோ ஒரு அம் சத்தின் மூலமாயும் அவரைச் சேருகிறார்கள். நம்முடைய வழியோ சுறுசுறுப்புள்ள அன்பின் வழி. ஏனெனில் இது நம்முடைய மாஸ் டர்களின் வழி. தெய்வீக வாழ்வில் ஏழு ரேகைகள் இருக்கின்றன. ஆகையால் ஏழுவகை ஜனங்களிருக்கின்றனர். ஒன்று பக்தியின் வழி; மற்றொன்று இச்சா (கர்ம) வழி, மூன்றாவது ஞான வழி. மனி தர்கள் கடவுளைப் பலவழிகளில் தேடுகிறார்கள். ஆனால் நமது மாஸ் டர் சுறுசுறுப்புள்ள அன்பின் வழியிலிருப்பதால் அவர்களைப் பின் பற்ற விரும்புகிறவர்கள் தங்களிடத்தில் முக்கியமாயிருக்கும் சாமர்த் தியத்தை கடவுளுக்காகவும் மனிதனுக்காகவும் அன்புடன் வேலை செய்ய உபயோகிக்கவேண்டும். உதாரணமாக பக்திமார்க்கத்தை எடுத்துக்கொள்வோம். இது மூன்று விதமாக இருக்கக்கூடும். ஒரு

வன் தனது இஷ்டதேவதைக்கெதிரில் வீழ்ந்து அதோடு ஒன்றாக வேண்டுமென்று பிரார்த்தித்து கொண்டிருக்கக் கூடும். இவ்வித மானவர்கள் மேல்நாட்டிலும் சந்நியாசி, சந்நியாசினிகளிலிருக்கலாம். இவர்கள் கடவுளை சதா சிந்தித்துக் கொண்டிருக்க இச்சித்தவர்கள். அது வெகு சிறப்பானது. எப்படியும் தற்காலத்திற்கு இவனமற்ற வரைப்பற்றியும் நினைக்காது கடவுளோடு ஒன்றுபட வேண்டியதை மாத்திரம் நினைக்கின்றான். மற்றவர்களைப் பற்றி அவர்களைக் கேட்டால் "நான செய்வதுபோல அவர்களும் செய்யட்டும்" என்று சொல்லுவார். இந்தியாவில் ஒருவன—தனனிஷ்ட தேவதை சிலை முன பிரார்த்தனையோடு வீற்றிருந்து அவரோடு ஒருமைப்பட எத் தனித்திருந்தது எனக்குத் தெரியும். இதுதான் இவன் மனதில் வைத்திருக்கும் வீடு—மோக்ஷம். அவன இனிமேல் பெறவேண்டி யிருக்கும் பலன், முடிவு. இவன் தெய்வலோகத்தில் வெகுகாலம் வரையில், ஆயிரககணக்கான வருஷங்கள், ஒருவகை பரவச மயக் கத்திலிருந்து காலத்தைக் கழிக்கக்கூடும். அப்பேர்ப்பட்ட சுத்தபக்தி என்றால் அவனுடைய வெவ்வேறு கோசங்களை விருத்தியாக்குவ தென்றும், அவனுக்கும் கண்டிப்பாய் தேர்ச்சி இருக்கின்றதென்றும் அருத்தம்.

இரண்டாவது பக்தியை, பக்தியென்று சொல்லத்தகாது. அது தாழ்ந்த பக்தி; இது "எனக்கு இவ்வளவு பணமும் மேம் பாடும், பொது சௌகரியமும் கொடுப்பீரானால் இவ்வளவு பக்தி" என்று கடவுளை கேட்பது.

மூன்றாவது பக்தன் சொல்வதாவது "அப்பெரிய மஹானுக்கு அல்லது அந்த ஆசானுக்கு பக்திபாராட்டுகிறேன். ஏனென்றால் அவரை மற்றவர்கள் தெரிந்து கொள்ளும்படி ஏதோ ஒன்றைச் செய்யவேண்டும். நான அறிந்திருப்பதைப்போல அவர்கள் அறி யும்படி அவர் பேரால் நல்லவேலைகளை நான் செய்யவேண்டும்" இது வெகு கண்ணியமான அனுபவத்திற்குரிய பக்தி. பக்திரேகை யிலிருப்பவர்கள் சுத்தமாய் பக்தியிலேதான் இருக்கமாட்டார் கள். ஆனால் ஏதோ ஒன்றைச்செய்ய வெவ்வேறு வேலையில் சுறு சுறுப்பாயிருப்பார்கள். அப்படியே நம்மில் எவராவது

எல்லா விஷயங்களுக்கு மேல் தெரிந்து கொள்ளவேண்டும். அறிந்து கொள்ளவேண்டுமெனகிற விருப்பமிருந்தால் நமக்கு அதே சுபாவ குணமிருக்கும். வெறுமையாகவே தெரிந்துகொள்ளவும் கிரகித்துக்கொள்ளவும் வேண்டுபவர் சிலர் இருக்கின்றார்கள், அது மனிதனுக்கு ஆச்சரியப்பட வேண்டிய குணந்தான். இந்த வழியில் மெத்த விருத்திக்கு வருகிறவர்கள் அநேகரிருக்கின்றார்கள்; ஆனால் அவர்களில் சேவகர்களாயிருக்கின்றவர்கள் அவர்களை வெகுகாரிய காரியஸ்தர்களாக காண்பார்கள். "எனக்கு ஞானம் வேண்டும். ஆனால் அதை மற்றவருக்கு உண்மையில் உபயோகப்படுத்தும்பொருட்டு எனக்குத்தேவை" என்பார்கள். இப்பேர்ப்பட்டவன் மற்றவர்கள் செய்த பிழைகளை தெளிவாய்பார்க்கக்கூடும். இவர்கள் (மற்றவர்கள்) சேவிக்க முழுமனத்தோடு இச்சித்த போதிலும் அவர்களுடைய மடமையினால் நல்லதைவிட்டு கெடுதியைச் செய்கின்றார்கள். "எனக்கு பூரண அறிவு கிடைக்கட்டும். பிறகு உண்மையில் நன்றாய் சேவகஞ் செய்யமுடியும்" என்று அப்பேர்ப்பட்டவன் சொல்லுவான்.

நாங்கள் வெறுமையாக கடவுளோடு ஒன்றாகி அவருடைய சிறப்பில் வீற்றிருந்து ஆனந்திக்கவல்ல, மற்று அவர் செய்வதுபோல் நாமும் செய்யவேண்டி அவரோடு ஒன்றாக விரும்புகிறோம். நாம் எல்லோரும் உருவெடுத்து வரும்பொருட்டு அவர் மாயையில் அவர் சக்தியை யக்ஞார்த்தமாக பொழிவதே பெருத்த வேலையாயிருப்பதால் எவனொருவன் ஒன்றாயிருக்க விரும்புகிறானே அவன் அன்பே கடவுளாயிருக்கும் அவரைப்பற்றி செய்யவேண்டிய வேலையில் தன்னை முற்றும் மறந்து அவ்வித நோக்கத்தைக் காட்டவேண்டும். நீ அவரோடு ஒன்றாக வேண்டுமானால் பூரண நிஷ்காமியத்தாலும், அன்பாலும் நிறைந்திருக்கவேண்டும் எனும் வாக்கியம் மார்க்கத்தை சுருக்கிசொல்கிறது. இச்சா, ஞானம் அன்பு இவைகள் ஒவ்வொன்றையும் பூரணமாக்கி சேவகத்தில் உபயோகப்படுத்தினால் மற்றவைகள் எல்லாவற்றையும் கொண்டுவந்து விடுகின்றது. ஆதலால் அன்பு நியதியை நிறைவேற்றுவது என்று சொல்வது உண்மைதான்.

---

# 25-வது அத்தியாயம்

## தினசரி வாழ்க்கையில் அன்பு.

"இந்தப்படிக்கு இருக்கவேண்டுமானால், தினவாழ்க்கையில் கவனிக்கவேண்டிய விரதம் இரண்டு; முதலாவது உயிருள்ள எந்த ஜந்துவையும் துன்பப்படுத்தாமலிருக்க நீ ஜாக்கிரதையாயிருக்க வேண்டுமென்பது. இரண்டாவது உதவி கொடுக்க சமயமெப்போது கிடைக்குமென்று, எதிர்பார்த்திருக்க வேண்டுமென்பது."

C. W. L.:—இவைகள் ஒரே விஷயத்தின் (ஒரே வாழ்க்கையின்) இருபக்கங்களாய் இருக்கின்றன. அதாவது விதிவிலக்காய் இருக்கின்றன நீ துன்பம் செய்யாமல் இருக்கவேண்டுமென்பது விலக்கு; நீ நன்மை செய்து கொண்டிருக்கவேண்டுமென்பது விதி. கீழ்தேசத்து மதங்களை பரோபகார ஊக்கமில்லாது சும்மா இரு என்கிற (எதிர்மறையான) கருத்து கொடுக்கின்றவையாகவும், நாம் அவைகளுக்குள் கொண்டுவந்துவிடும் பரோபகாரசேவக கருத்தானது உண்மையில் கிருஸ்தவமதக் கருத்தென்றும் சொல்லுவதுண்டு. அது அப்படியல்ல; தற்கால கிருஸ்தவன் அதைப் பிந்தி தள்ளிவைத்திருந்தபோதிலும் மூல கிருஸ்துவமதத்தில் பரோபகாரத்தை வெகு பலமாய் வற்புறுத்தி யிருந்தது வாஸ்தவந்தான். "ஆனால் உங்களுக்குள் பெரியவனாக இருக்கின்றவன் எவனோ அவன உங்களுடைய வேலைக்காரன" என்றவாக்கியமிருக்கிறது. இதே கருத்து பழைய மதங்கள் எல்லாவற்றிலும் இருக்கின்றது.

புத்த சமயத்தை மெத்த எதிர்மறையான சும்மா விருக்கச்செய்யும் மதமென்று எப்போதும் சொல்வதுண்டு இதில் தவிர்க்கவேண்டிய விஷயங்களைப்பற்றி முக்கியமாய் கட்டளையிடுகின்றது. ஆனால் இதிலிருக்கும் பஞ்சசீலங்களும், யூதர்களுடைய பத்து கட்டளைகளை விட அதிக எதிர்மறையாகச் சொல்லவில்லை. புத்தமதத்தில் சில

விஷயங்களை தவிர்க்கும்படி பிரதிக்ஞை (வாக்குதத்தம்) செய்யும் படி ஜனங்களைக் கேட்டபோதிலும், "நீ செய்யக்கூடாது" என்று அது சொல்வதில்லை. அதிலிருக்கும் வார்த்தைகளாவன "கொலை செய்யாமலிருக்கவும், தன்னுடையதல்லாததை எடுக்காமலிருக்கவும் அதாவது திருடாமலிருக்கவும், மெய்யில்லாததை சொல்லாமலிருக்கவும் அதாவது பொய் சொல்லாமலிருக்கவும், லாகிரிமுதலான மயக்கந்தரும் வஸ்துக்களை (குடியை) உட்கொள்ளாமலிருக்கவும், மனைவியைத்தவிர மற்றவரை கவராமலிருக்கவும், இவ்வைந்து சீலங்களை நான அனுஷ்டிக்கிறேன." இதுதான் அதன்முறை. இது கட்டளையல்ல பிரதிக்ஞை.

**புத்தபகவான்** கொடுத்த சூத்திரம் ஒன்றில் அந்த மதத்தை சுருக்கமாக சொல்லியிருக்கிறார். அதில் சும்மாவிருக்கும் எதிர்மறையல்லாத சுறுசுறுப்பான அங்கத்தைக் காட்டுகிறது.

"1. தீங்கைத்தவிர். 2. நன்மையைச் செய்யக்கற்றுக்கொள். 3. உன்னிதயத்தை சுத்திசெய். இதுதான் புத்தபகவான் கொடுக்கும் சாசனம்."

இதே விஷயம் ஆரிய அஷ்டாங்கமார்க்கத்திலும் தெளிவாக கொடுத்திருக்கின்றது. அதில் **சரியான திருஷ்டி, சரியான எண்ணம், சரியான வசனம், சரியான நடத்தை, சரியான ஜீவிதம், சரியான முயற்சி, சரியான ஞப்தி, சரியான தியானம்** என்று இருக்கிறது. இவைகளில் அநேகம் வாஸ்தவத்தில் வெகு சுறுசுறுப்பாய் கவனிக்கவேண்டியவை.

பகவத்கீதை நூலானது உண்மையில் கோடிக்கணக்கான இந்துக்களுக்கு சாஸ்திரமாய் இருக்கின்றது. இதில் வெகு சுறுசுறுப்பாய் இருக்கும்படி சொல்லியிருக்கிறது. இந்நூலில் கடவுளை ஓர் பெரிய கர்த்தாவாக வர்ணித்திருக்கிறது. மேலும் எவனொருவன் அவர் காட்டியபடி நடக்காமலும், உலகத்தினுடைய யோகக்ஷேமத்திற்காக வேலை செய்யாமலுமிருப்பவன் வீணில் வாழ்கிறான் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதில் சொல்கிறதாவது: செயலற்று இருப்பது உண்மையில் ஓர் பெருத்த பாவம் என்று சொல்கிறது. மாடம் பிளாவட்ஸ்கி அம்மையாரும் செய்ய தவறின

நற்கருமங்கள், செய்த பாவங்களைப்போலவே பயப்படத்தக்கவை, என்று அடிக்கடி சொன்னதுபோல், இது ஜனங்களுக்கு எச்சரிக்கை கொடுக்கின்றது. சந்நியாசியைப்பற்றி, அதாவது பூலோகவாழ்வை துறந்தவனைப்பற்றி சொல்கிறபோது "அவன இடைவிடாமல் தர்மார்த்தமாகவும், யக்ஞார்த்தமாகவும், விரதமாகவும், காரியங்களைச் செய்யவேண்டும்" என்கிறது. இவ்விதமே இந்துக்களுடைய இதியாசங்களிலும் ஜனங்களுடைய க்ஷேமத்திற்காக உழைத்தவர்களைப் பற்றியும் நம்முடைய இனத்தாராகிய மானிடர்களுக்கு பரோபகார கைங்கரியத்தை கற்றுக்கொடுக்க அவதாரமாக வந்தவர்களைப்பற்றியும் இதர அநேக ஆசாரியர்களைப்பற்றியும் அநேகமாய் சொல்லப் பட்டிருக்கிறது.

இந்த மதங்களில் பரோபகார சேவகத்தைப்பற்றி வற்புறுத்தியிருப்பதைப்போல் எங்குமே இல்லை. என்றாலும் இவைகளிலும் தியானஞ் செய்துகொண்டிருக்கும் கூட்டங்கள் கிருஸ்தவமதத்தில் மத்தியகாலத்திலிருந்ததுபோல எப்போதும் இருந்தன. இப்போது தான் கொஞ்ச வருஷங்களாக ஐந்தாவது வம்சத்தின ஐந்தாவது கிளையில் நமது கருத்து பலப்பட்டதனால் சந்நியாசியையும், சந்நியாசினிகளையும் பழிக்கவும், வேலைசெய்பவனையும், சண்டை காலத்தில் வீரியங்காட்டிய போர்வீரனையும், க்ஷேமகாலத்தில் பிரசித்தமான இராஜனையும் மந்திரியையும் புகழவும், அந்தரங்கமாய் சார்ந்திருக்கின்றோம். நிஷ்டையோடிருக்கும் கூட்டங்களை ஏற்படுத்தின கருத்து முற்றிலும் வெகு நேர்த்தியானது. அதனுடைய முறையாதெனில் வேலையில் சுறுசுறுப்பாய் இருக்கும சந்நியாசிகளும் துறவிகளும் ஜனங்களுக்கு போதனைகள் கொடுத்து தர்ம காரியங்களைச் செய்துகொண்டிருப்பதற்காக ஏறபட்டிருந்தார்கள். மற்றவர்கள் தியானநிஷ்டை செய்ய ஏற்பட்டவர்கள். இவர்கள் கதவை மூடிக்கொண்டு தியானத்தையும், பிரார்த்தனையும் அநுஷ்டித்துவந்தார்கள். இவர்கள் நல்ல உயர்வான எண்ணத்தைத் தியானத்தில் உண்டாக்கி அதை ஜனங்களுக்கு உதவிகொடுக்கும் படியாக திடநோக்கத்துடன அனுப்பினார்கள். பிரார்த்தனையும், தியானத்தையும், சாமர்த்தியத்தோடு செய்வது இவர்களுடைய வேலையாய் இருந்தது. மற்ற சகோதரர்கள் அநேக காரணத்தைக்

கொண்டு தியானத்தை அவ்வளவு நல்ல திறமையோடு செய்ய முடியாததலால் அவர்களுக்காக இவர்கள் செய்துவந்தனர். ஒவ்வொரு மதத்திலும் இருந்த கருத்து யாதெனில் இவர்களும் மானிடவர்க்கத்தின் ஒரு பகுதியாக இருப்பதினால் அதற்கு வேண்டியதை கொடுத்துவந்தனர். இவர்கள் சுறுசுறுப்பான வேலைக்கு பின்வாங்கின வெறும் சோம்பலுள்ள சந்நியாசிகள் அல்ல. மற்றவர்கள் செய்யக்கூடாத கடினமான தியானத்தை இவர்கள் செய்துகொண்டிருந்தனர். மேலும் இவர்கள் அதை சாமானியர்களுக்கு மெத்த உருக்கமுண்டாகும்படி சாதாரணமாய் விரதத்தோடிருந்து தனது சௌக்கியத்தை வெறுத்து தியானஞ் செய்துவந்தார்கள்.

எனினும் அவ்வித திட்டமான விரதத்தோடு நடவாது சௌக்கியமாய் சோம்பலாகவிருக்க விரும்பின அநேகர் அதில் சேர்ந்தார்கள் என்பதும் வாஸ்தவம் தான். அப்பேர்ப்பட்டவர்கள் பொதுவான தங்களுடைய சாதாரண உரிமை வேலை செய்வதிலிருந்து தப்பித்துக்கொண்டார்கள். எனினும் அதற்குப் பதிலாக மேல் லோக வேலையை கையாளவில்லை. புத்தமத சந்நியாசிகளுக்குள்ளும் இவ்விதமாக சிலரிருக்கின்றார்கள். இவர்களை சோற்று சந்நியாசிகள் என்று இழிவாக பார்க்கிறார்கள். இவர்கள் இப்படி ஜீவிப்பதற்காகவே சந்நியாசிகளானார்கள். இவ்விதம வருவது வெகு சுகபோகமில்லாத போதிலும், அத்தேசத்தில் சாப்பிட ஆகாரம் எவரிடத்திலாவது இருக்கிறவரையில் இவர்களுக்கு குறைவுவராது. மத்தியகாலத்தில் ஐரோப்பாகண்டத்திலிருந்த சந்நியாசி மடங்களும் அப்படித்தானிருந்தது வாஸ்தவந்தான். ஒருக்கால்கொஞ்சம் அதிகமாயுமிருக்கலாம். அதிகாரத்திற்காகவும், செல்வாக்குக்காகவும், அநேகர் தமது உடைமைகளை ஆஸ்திகளை துறந்து அதில் சேர்ந்திருந்தார்கள். சந்நியாசியாய் இருக்கப்பட்டவனுக்கு ஆஸ்தி இல்லாதிருந்தபோதிலும் மடம் ஒருபொறுப்பான சம்பாத்தியமாக இருந்தது;இது அநேகமாய் மடாதிபதியாகிய சந்நியாசி கை வசப்பட்டு அவர் இஷ்டப்படி செய்ய வாய்த்திருந்தது.

"முதலாவது துன்பஞ் செய்யாமை:—
உலகில் பாவங்கள் எல்லாவற்றைக் காட்டிலும்
மிகத்தீங்கை விளைவிக்கின்ற பாவங்கள் மூன்

றுள. அவையாவன:—புறங்கூறல், இம்சை,
மூடநம்பிக்கை. ஏனெனில் இவைகள் அன்பை
யணுகவிடாமல் கெடுக்கின்ற பாவங்கள்.''

C. W. L.:--எல்லாவித பாபங்களைவிட மெத்த தீங்குசெய்யும் பாபங்கள் என்றபோது ஒருவன் கொலை, களவு முதலிய குற்றங்களை நினைத்துக்கொள்ளுவான் போலிருக்கிறது. ஒருக்கால் மெத்த சாதாரண குறைகளான புறங்கூறலையும், துன்புறுத்தலையும், விபரீதத்தையும் அட்டவணையின முதல் தலைப்பில் வைத்திருப்பதைக் கண்டு ஆச்சரியப்படக் கூடும். இந்த பாபங்களின அளவையும், வெகு தூரம் போகக் கூடிய கெடுதியையும், மாஸ்டர் யோசித்து எடுத்திருக்கின்றார். கொலை, களவு, இவைகள் சாதாரணமாய் பெருத்த குற்றங்களென்று தெரிந்திருக்கின்றன. ஆனது பற்றி மரியாதையுள்ள ஜனங்கள், கொலைகளுக்குப் படைச்சண்டை என்று சிறப்புப்பெயர்கொடுத்தாலொழிய, அவைகளைச்செய்யமாட்டார்கள். ஆனால் புறங்கூறலோ சகஜமாய் இருக்கின்றது. ஒருவனுடைய விஷயத்தில் இதுசெய்யும் கெடுதியையும், இது உண்டாக்கும், பெருதத மனோ வருத்தத்தையும், இது இழிவாக்கிவிடும் கருத்துகளையும், ஒருவன் மதித்து பிறகு அந்தத் தொகையை, ஆயிரக்கணக்கான ஜனங்களால் எப்போதும் செய்துகொண்டிருப்பதனால், இதை அதோடு பெருக்கினால் இது கொலை, களவுகளைவிட எவ்வளவோ அதிகக் கெடுதி உண்டாக்குவதைக் காணலாம். ஒருவனுடைய நற்கருததை அழித்துவிடுவதும், அதை அற்பமாக்கி தாழ்ப்படுத்துவதும், அவனுக்கு மனவருத்தம் வரும்படி செய்வதும், வெகு கொடூரமான விஷயம்; ஒருவன பக்தியோடு அருமையாக வைத்திருக்கும் கருத்தை உடைப்பது அவனுக்குச் செய்யும் ஓர் பெருத்த தீங்கு. நமக்குத் தாழ்ந்ததெனறும், இழிவானதென்றும், தெரிந்த ஏதோ ஒன்றை அவன் பிரியத்தோடு கருத்தில் வைத்திருந்தானால் அவனை அதைவிட ஒரு மேலான கருத்திற்கு நாம் ஒருக்கால் கொண்டு போகக்கூடும். ஆனால் அவனுக்கு அதைவிட மேலான கருத்து ஒன்றை கொடுப்பதை விட்டு இருப்பதை எடுப்பது, மெத்த தீங்கான விஷயம்; கெட்ட விஷயம். யாது காரணத்தை கொண்

டும் எவனுடைய தப்பிதங்களை தூற்றுவாவது,எவனையும் தாழ்ப்படுத்தவாவது நம்முடைய கடமையல்ல.

' டாக்டர் பெஸன்ட் அம்மையார் செய்த ஆச்சரியப்படத்தக்கதான நன்மையை வெகுவாய் நம்மில் அநேகருக்கு அநுபவத்தில் தெரியும். அந்த அம்மையாருடைய, பிரசங்கத்தாலும், புஸ்தகத்தாலும் ஆயிரக்கணக்கான ஜனங்கள் அறிவைப் பெற்றார்கள். என்றாலும் அந்த அம்மாளைப்பற்றி புறங்கூறி தூஷிவிட்டதால் அநேக ஆயிரக்கணக்கானவர்களை அவருடைய பிரசங்கத்தைக்கேட்க வொட்டாமலும், அவருடைய புத்தகங்களை படிக்கவிடாமலும் தடுத்துவிட்டது. "டாக்டா பெஸன்ட் அம்மையாரைப் பற்றி இன்னின்ன மாதிரி கேள்விப்பட்டேன் அப்பேர்ப்பட்டவருடைய புஸ்தகத்தை நான ஏன படிக்கவேண்டும்?" என்று அவர்கள் சொல்லுகிறார்கள். முக்கியமாய் இந்த ஜென்மத்தில் அவர்கள் சீர்ப்பட்டு வரும வழியைவிட்டு விலகி அநேகர் இவவிதமாய் போய்விட்டார்கள். ஆயிரக்கணக்கான ஜனங்கள் தங்களுக்கு உண்டாயிருக்கும அநேக கஷ்டங்களைப்பற்றி எழுதி அவரை புத்திமதி கேட்கினார்கள். அவரைப்பற்றி முற்றிலும் கெடுதியான பொய் சமாசாரங்களை பரவவிட்டதனால் அவருடைய போதனைகளை எடுக்க அநேகரைத் தடுத்துவிட்டது.

நமது பிரசிடென்டை இடைவிடாமல் மெத்த அசங்கியமாக எதிர்த்தது போல அதிகமாய் மற்றவர்களை தூஷித்திருப்பார்கள் என்று நான் நினைக்கவில்லை. அவர், தியாசொபிஸ்டாய் வருவதற்கு வெகு காலத்திற்குமுன் "Free Thought" என்கிற உலாயத சங்கத்தில் பகிரங்க போதகராக விருந்தார் முதலில் அவரை தூஷித்து இகழ்ந்தார்கள்; ஏனெனில் அவர் பாலைப்பற்றிய விஷயங்களை விவரித்த 'நோல்டன்' என்கிற சிறு நூலை பிரசுரித்தார். இதன் கருத்தை எடுத்து யோசிக்க வேண்டியதாயிருந்ததே தவிர போலி நாணத்துடன் ஒளித்து வைப்பதாகவல்ல. இச்சிறு நூல் இவர் பிறப்பதற்கு வெகு நாளைக்கு முன எழுதப்பட்டது. ஆனால் அதை பிரசுரஞ் செய்யக்கூடாதென்றும், செய்தால் இராஜதண்டனை ஏற்படும் என்கிற சட்டத்தால் தடுத்திருந்தது. நமது பிரசிடென்டு

இந்தக் கேள்வியை விஸ்தாரமாக்கி, எல்லோரையும் யோசிக்கச் செய்ய வேண்டுமென்றும், இந்நூலில் சொல்லிய விஷயங்களை எளியவர்களுக்கு தெரிவிக்க வேண்டுமென்கிற நம்பிக்கையோடும் இதை பிரசுரிக்க எடுத்துக்கொண்டார். இன்னொரு சிரேஷ்டமான காரணம் யாதெனில் உண்மையான விஷயங்களை அடக்கி வைக்காமல், சாதாரணமாய் பொது ஜனங்களுடைய நன்மையைப்பற்றியும், சௌக்கியத்தைப்பற்றியுமுள்ள ஒவ்வொரு விஷயத்தையும் தடையில்லாது பிரசங்கஞ் செய்யவும், பிரசுரஞ் செய்யவும் ஜனங்களுக்கு உரிமையிருக்கவேண்டுமென்று இதை எடுத்தார். கெட்டதென்று நினைத்த சட்டத்தை மாற்ற இந்நூலை திருப்பி பிரசுரஞ் செய்தார். இந்நூலை விற்பனை செய்வதாக முந்தியே போலீசாருக்குத் தெரிவித்து, அவர்களை ஓர் குறிப்பிட்ட நேரத்தில் வந்து சர்க்காருக்காக ஒரு பிரதியை வாங்கலாம் என்று தெரிவித்திருந்தார். அவர்கள் கேட்டுக் கொண்டபடியே வந்து சட்டத்திற்கு விரோதமாகவிருக்கும் புஸ்தகத்தை வாங்கி, சட்டப்படி இவர் பேரில் நியாயாதிபதி கச்சேரியில் வழக்குத் தொடுத்தார்கள். ஆனால் வியவகாரம் தள்ளிவிடப்பட்டது. இவர் அதை மறுபடியும் ஜாக்கிரதையுடன் வார்த்தைகளை திருத்தி எழுதினர். அவருக்கு அதன் வெகுமதி எப்படியும் இப்பூலோகத்தில் வெகு நிந்தனையாகத்தான் வந்தது. சிலநாள் கழிந்தது. தேசாசார கஷ்டங்களை நீக்க அதுவல்ல நல்லவழியென்று அவருக்குத் தெரிந்தகின பேரில் அவர் அந்நூலை விற்கவிடவில்லை. ஆனால் விஷயங்களின் உண்மை அவருக்கு அப்போது தெரிந்திருந்தபடி யாதுக்க வந்ததைப்பற்றி விசனப்படவில்லை. அப்பேர்ப்பட்ட நிஷ்காமியமும் தைரியமும் உலகில் காண்பது வெகு அபூர்வம்.

மாடம் பிளாவட்ஸ்கி அம்மையாரபேரிலும் பொறாமைப்பட்ட ஜனங்கள் ஏராளமாய் புறங்கூறினார்கள்; பைத்தியம் பிடித்து கடிப்பதைப்போல குற்றங்களை அவர்மேல் சாட்டினார்கள். அவரை நேராகத் தெரிந்திருக்கும் எங்களுக்கு மெத்த நகைப்புக்கு இடமாயிருந்தது; என்றாலும் திவ்யஞான உண்மைகளை வாசித்தெடுக்க அநேகருக்கு இது ஒரு இடையூறாகவிருந்தது. அவர் 1891 வருடத்தில் காலமாயினர். என்றாலும் இன்றைவரைக்கும் திவ்யஞான

சபையைப்பற்றி எடுத்துச்சொல்லுவோமாகுல் "ஆம். அது மாடம் பிளாவட்ஸ்கி ஏற்படுத்தியது. அவர் மோசக்காரி, ஏமாற்றும் போதனைகளைப்பற்றி எங்களுடைய காலத்தையும், பலத்தையும் கழிக்க எங்களுக்கு இஷ்டமில்லை. அதில் உண்மை இருக்குமென்று நம்பிக்கையில்லை" என்று சொல்லுவது சாதாரண அநுபவம். இவ்விதமாய் அநேகர் திவ்யஞான அறிவை இழந்துவிட்டார்கள். இது அவர்களுடைய வாழ்வை மாற்றியிருக்கும்.

இந்த திருஷ்டாந்தங்களைக்கொண்டு பகையாலும் அறிவீனத்தாலும் வரும் புறங்கூறில் அளவிடக்கூடாத கெடுதி வருவதைக் காணலாம். இவ்வகையான சுயகாமியத் தன்மையோடு எவனைப் பற்றி பேசுகிறோமோ அவனுக்கு இது மெத்த மனவருத்தமுண்டாக்குகின்றது. ஒருவன் வருத்தப்படுகிறவன் எனபதால் அவனுடைய குணத்தில் ஏதோ ஒரு விகற்பமிருப்பதாக காண்பிக்கின்றது. ஆனுல் அது புறங்கூறலாம் என்பதற்கு ஒரு பரிகாரம் அல்ல. அல்லது புறங்கூறின கெட்ட கருமத்திலிருந்து அவன் விடுபட்டவனுமல்ல. நமது பிரசிடெண்டு, இவரிடத்தில் அவரைப்பற்றிய புறங்கூறலுக்கு வருத்தங்கொள்ள இடமில்லை. என்றாலும் ஏதோ ஒரு விஷயமாக அவரை காலஅளவுக்குமேல் தூஷித்துபோனல் அவர் சிலசமயம் சொல்லுவதாவது "இது என்ன ஒரேமாதிரியிருக்கின்றதே அவர்களுக்கு வேறு யாதாவது யோசிக்க கிடைக்கவில்லையாவென்று சொல்வதுண்டு. என்னையும் அநேகமாய் தூஷித்தார்கள். ஆனுல் அது என்னை ஒருநாளாவது எனது தூக்கத்தை கெடுக்கவில்லை. இவ்விதமாய் எங்களுடைய கர்மம் எங்களை விட்டு விலகுகிறது. ஆனுல் புறங்கூறலை ஏற்படுத்தினவர்களுக்கும் அதைப் பரவவிட்டவர்களுக்கும் அதன் கருமபலனை கொடுக்கின்றது மற்ற யாரோ ஒருவனைப்பற்றி சொன்னதை கவனிக்காமலிருக்க மெத்த கஷ்டமாயிருக்கிறது. நமது பிரசிடெண்டைப்பற்றியாவது அல்லது மாஸ்டர்களைப்பற்றியாவது அவமரியாதை அவமதிப்புவார்த்தைகளை ஒருவன் சொல்லும்போது கோபமடையாமலிருக்க எனக்கு இன்னும் கஷ்டமாயிருக்கின்றது.

புறங்கூறல் உண்மையில் சீர்திருத்தும் பேச்சல்ல. துற்பாக்கியமாக Criticism என்கிற வார்த்தையானது ஒருவனது குற்றங்குறை

களை பழிப்பது என்று அருத்தம். இது கிரீக் பாஷையிலிருந்து (Krinein) அதாவது மதிப்பு, நியாயத்திற்குரிய நோக்கம் என்று அருத்தமாக வேண்டியது. ஆனால் இப்போது அப்படி தருவதில்லை. நியாயம்என்பது கடவுளது ஒரு தோற்றம் (அம்சம்), ஆதலால் ஒருவனுடைய வார்த்தையையாவது செயலையாவது அதற்கு அனுசாணையாயுள்ளதை விட்டு மதிப்பது பிசகு. மேலும் தீங்கில் கொண்டு போய்விடும். உலகிலுள்ள சாஸ்திரங்கள் யாவும் அவை எவ்வளவு நேர்த்தியாகவும் தெய்வீகமாயிருந்தபோதிலும் அவைகளில் சில வாக்கியங்களை பேர்த்து எடுத்து தனியாக வாசிப்போமானால் அதில் பழிக்குஇடமில்லாதிருக்காது. மற்றவர்களின எண்ணத்தைப்பற்றி நாம் இப்படித்தான செய்கின்றோம. ஒருவன் கோபமாயிருப்பதை பார்க்கின்றோம், அவன ஒரு முடுக்காயும் ஒருவேளை இரைச்சலோடும் சொல்லுவான்; நாம் உடனே அவன் இக்குணத்தை காட்டுகின்றான் என்று எடுத்துக்கொள்கிறோம். ஆனால் அவன் என் கோபப்பட்டான் எனபது நமக்குத் தெரியாது.அவன் காச்சல்கண்ட குழந்தையுடன இரவு முழுவதும் விழித்து உட்கார்ந்திருக்கலாம்; அல்லது வேறு யாரோ ஒருவன் அவனை ஏதோ ஒருவகையில்தட்டிவிட்டு கோபம் மூட்டிவிட்டிருககலாம். அவன நம்மேல் கோபித்துக்கொள்ளாதிருந்த போதிலும் அதனுடைய வேகத்தை நம்மிடத்தில் காட்டுகிறான அவன் ஒருபெரியமஹானாயிருந்தால் கோபித்துக் கொள்ளமாட்டான. என்றாலும் நாமெல்லோரும் இன்னும் மகான்களாகவில்லை. ஆதலால்தான் இவ்வித விஷயங்கள் ஏற்படுகின்றன.

நான் சிறுபிள்ளையாக இருந்தபோது இதை ஒரு கிழக் கோச்மானிடமிருந்து முதலில் கற்றுக்கொண்டேன. அவனிடத்தில் ஒருவன் வந்து வெகு மூர்க்கமாய் பேசும்போது நான் அவனண்டையிருந்தேன. இந்தக் கிழக் கோச்மான அவனுடைய முரட்டு குரலை கவனியாவண்ணம் அவனுக்குப் பதில் கொடுத்தான். அந்த மனுஷன் போய்விட்டவுடன் நான் "என்ன ஜான! அவன் அவ்வளவு கோபமாய் பேசும்படி நீ என்ன செய்தாய்" என்று கேட்டதற்கு "அவன் ஓ! ஒன்றும் செய்யவில்லை ஐயா; அவன் என் மேல் கோபித்துக்கொள்ளவில்லை" என்று சொல்லி "நான் அவனை கோபமூட்டவில்லை; வெகுவாய் அவன் பெண்ஜாதியோ மற்று

யாரோ ஒருவர் மூட்டியிருக்கிறார் என்று சொன்னான். இன்னும் "ஒருவன் வெகு கோப ஆவேசங்கொண்டிருக்கும்போது அவன் எதிரில் வரும் எவன்பேரிலும் அவனுடைய கோபத்தைக் காட்டக் கூடும்" என்று விவரித்து எனக்குச் சொன்னான்.

துர் அபிப்பிராயம் ஒருவனது மனதை கௌவிப்பிடிக்கிற விதமும், அந்த விஷத்தின் வேகமும் விடாது ஒட்டிக்கொள்ளும் தன்மையும் பிரத்தியக்ஷமாய் அடிக்கடி நமக்கு எதிர்படாதிருக்குமானால் நம்பமுடியாததாயிருக்கும். ஒருவன தவறான கருத்தை எடுக்கிறான்; பிறகு அவனுடைய நோக்கமுழுவதும் அதனால் மாறிவிடும். இந்த புஸ்தகத்தைப் பற்றி எடுத்த கருத்தைப் பார்த்திருக்கிறோம். இந்த புஸ்தகம் வெளியாகும் வெகு நாளைக்கு முந்தியே, புறங்கூறலைப் பற்றி ஆல்கியூனிக்கு கொடுத்த போதனையை நான் முதலில் கேட்ட போது அதனுடைய விசேஷ கருத்தை மேற்கொண்டு அநேக சந்தர்ப்பங்களில் எடுத்துச் சொன்னேன். புத்தகம் வெளியானவுடன சிலர் குதித்தெழுந்து, இவைகளெல்லாம் சிலமாதங்களுக்கு முந்தியே சொல்லியாயிற்று. ஆகையால் அதில் ஒரு பாகம் என்னுடையதாயிருக்கவேண்டுமென்று சொன்னார்கள்.

காமலோக அனுபவத்தின் ஞாபக தேர்ச்சியில் ஆல்கியூனிக்கு இரண்டு பருவங்களிருந்தனவென்று முந்தியே சொல்லி யிருக்கிறேன். அவர் முற்றிலும் ஞாபகத்திற்கு கொண்டு வராதிருந்த பருவம் ஒன்று. அப்போது மறுநாளைக்கு சாதிக்கவேண்டி, மாஸ்டர் அவருக்குக்கொடுத்த போதனையை நான் அவருக்கு ஞாபகப்படுத்திச் சொல்லுவேன். தானாகவே ஞாபகப்படுத்திக்கொள்ளும் பருவம் இரண்டாவது. இவ்விதமாகவே புஸ்தகமுழுவதையும் நானே அவருக்குச் சொன்னதாக ஒரு கட்டுகதை பம்பாயில் பரவினதைக்கேள்விப்பட்டேன். ஆனால் வாஸ்தவத்தில் புஸ்தகம் எழுதியது மாஸ்டர் சொன்னதை தானாகவே ஞாபகத்திற்கு கொண்டுவந்த இரண்டாவது பருவத்தில் அதை அவரே எழுதியது. ஏதோ வோர் முடக்கு கிடைக்குமானால் ஜனங்கள் எல்லாவற்றையும் திருப்பி முறுக்கி விடுகிறார்கள்; இவ்விதமாய் உண்மைகளை முறுக்கினதால் உண்டான பலவிதமான தவறான கருத்தாலும் அநியாயததாலும்

நான் வருத்தமடைந்தேன. அதை நான சற்றும் கவனிக்கவில்லே. ஆனல் ஓர் தவருன கருத்தைக்கொண்டு தவறுதலாய் எண்ணுவ தற்கு ஜனங்களுக்கு மெத்த சுலபமாயிருக்கிறதென்று அது தெளி வாய்க் காட்டினது. சிரிக்கத்தக்க தப்பிதங்களேச் செய்ததைப் பார்த் திருக்கின்றேன். இதில் வாஸ்தவமாயிருந்த விஷயத்திலும் தகவலில் லாத ஏதோ ஒரு கருதனைக் காட்டினர்கள். ஆனல் அது முதலி லிருந்து கடைசிவரையிலும் மனோராஜ்ஜியமாகவிருந்தது.

குப்தவழியில் பயிலும்போது சோதிக்கும் ஒருவகை சாதனே பாதெனில், சில மிருகங்களுடைய (நினைவுடன்) பிரக்ஞையுடன் சேர்ந்து ஒத்து அவைகள் பார்ப்பதுபோல பார்ப்பது. இது வெறும் பழக்கத்தை பொறுத்தது. இனிமேல் மேலான பிரக்ஞையோடு சேர்ந்து ஒத்து கிரகிக்கும் வண்ணம், சிஷியனுக்கு இப்போதிருந்தே இதைச்செய்ய விடுகிறது. நாம் மானிட வர்க்கத்திலிருப்பதால் மிருகத்தைக்காட்டிலும் மேலானவர்கள் என்று கருதுகிறோம். ஆகையால், மிருகத்தினுடைய மனதை தெரிந்துகொள்ள மெத்த சுலபமாயிருக்கவேண்டும். என்றாலும் அனுபவத்தில் மிருகங்களே கவனிக்கும் ஒவ்வொருவரும் எல்லா வேளையிலும் அவைகளுடைய நோக்கத்தையும் கருத்தையும் தவருக காட்டுகிறார்கள் என்று நினைக்க வருகிறது. நீ ஒரு மிருகம் நினைப்பதை நீ தெரிந்து கொள் வாயானல் அது நினைப்பதற்கு உனக்கு தட்டாத ஒரு காரணம் இருப்பதாக காணுவாய். எளிதாயும் கொஞ்சமாயுமிருக்கும்.மிருகத்தி னுடைய எண்ணத்தைநாம்தெரிந்துகொள்ளமுடியாவிட்டால்,நமது சுற்றுமுற்றிலும் உள்ள ஜனங்களைத் தெரிந்துகொள்வது இன்னும் குறைவாகத்தான் இருக்கவேண்டும். நாம் மானிடநிலேக்கு அருகி லிருக்கின்றோம். எனறாலும் நிச்சயமாய் ஒருவனேயொருவன எவ் வித மாயாவது எப்போதாவது அறிந்துகொள்கிறானு என்பது எனக் குச் சந்தேகம். நாமெல்லோரும் தனித்தனி கூட்டிலிருக்கினறோம் எனறு சொல்வது அகஸ்மாத்தான வார்த்தையாக இருந்தபோதிலும், ஒவ்வொருவனும் தானுகவே தனியே நிற்கிறான. நாம் எல்லோரும் ஓர் மகத்தான சகோதரபாவத்தில் இருக்கிறோம் என்கிறது உண்மை தான். இது மற்றொரு வகையிலிருக்கினறது. எனறாலும் மனதைப் பற்றியோசிக்குமிடத்து ஒவ்வொருவனும் தன்னுடைய கோட்டைக்

குள் குடியிருக்கின்றான். இவனுடைய மனதின் வெளிவரம்பு மற்றவனுடையதை ஒரே ஒரு இடத்தில்தான் தட்டுகிறது. அங்கேகூட நிச்சயமில்லா வகையிலும் சந்தேகமாயும் தட்டுகின்றது.

> "கடவுள் மேலிருக்கும் அன்பைத் தன்னிதயத்தில் நிரப்ப விரும்புகிறவன், இடைவிடாது இவை மூன்றையும் எதிர்த்துத் தடுத்துக் காக்க வேண்டியது."

C. W. L.:—சொல்லிய மூன்று பாபங்களைத் தவிர்க்க வெகு சுலபமென்று ஒருவன் நினைக்கக்கூடும். அப்படியல்ல; ஏனெனில் அவைகள் வெகு சாதாரணமாயிருக்கிறதாலும், அது அவ்வளவு பழக்கத்திற்கு வந்திருப்பதாலும், அவைகள் இருப்பதாக எவருக்கும் தெரியவில்லை. விகாசமுறையில் நாம் இப்போது இருக்கும் நிலையில் இவைகள் நமக்கு முக்கியமான கஷ்டங்களாக இருக்கின்றன. நாம் கீழ் மனதை விருத்தியாக்கிக்கொண்டு இருக்கிறோம். இது முதலில் வித்தியாசங்களை எடுத்துக் காட்டுகின்றது. இதனால்தான் ஜனங்களுக்கு கண் முன்வரும் எதுவாயினும் அதில்தங்களுக்கு பிரியமில்லாததை முதலில் கவனிக்கின்றார்கள். பிறகு அதைப்பற்றி விவரித்து தொடர்பாகவே தூஷணை செய்கிறார்கள். எவனொருவன் குற்றங்குறைகளை கண்டுபிடிக்கவும் வித்தியாசத்தைக் காணவும் தன் காலத்தை கழிக்கின்றானோ அவன் காலத்திற்குப் பிந்தினவன் தேற்றக்கூடாதவழு. இப்போது நாம்ஒற்றுமையையும் ஒவ்வொன்றிலும் உள்ள நல்லதையும் தெய்வீகத்தையும் கண்டுபிடிக்க எத்தனித்துக்கொண்டிருக்க வேண்டியது. ஏனெனில் நாம் புத்தியின் அம்சத்தை விருத்திக்குக் கொண்டுவர ஆரம்பித்திருக்கிறோம். நாம் நாளைக்காக வாழ்கிறோம். நேற்று கழிந்ததை எடுத்து வாழவரவில்லை. ஆகையால் இந்த அறிவீனதன்மையின் வெள்ளப் பெருக்கில் அடித்துக்கொண்டு போக நமமை விடக்கூடாது. ஆனால் சேரவிடாதிருக்கும்படி நாம் அடிக்கடி ஞாபகப்படுத்திக் கொள்ளவேண்டும். அப்படிக்கில்லாவிடில் வெள்ள ஓட்டம் நம்மை சுற்றிக்கொண்டு நம்மை அமிழ்த்தும்; ஒரு சமயம் நழுவ நேரிடும்.

## 26-வது அத்தியாயம்

### புறங்கூறல்—விலக்கு I.

"புறங்கூறல் விளைவதை கவனித்துப் பார். இது கெட்ட எண்ணத்தோடு துவக்குகிறது. ஆதலாலிதுவே ஓர் குற்றம். ஏனெனில் ஒவ்வொருவனிலும், ஒவ்வொரு பொருளிலும், நன்மையிருக்கிறது; அந்தப்படியே, ஒவ்வொருவனிடத்திலும், ஒவ்வொரு பொருளிலும் தீமையுமிருக்கின்றது. இவ்விரண்டில் எதுவொன்றைப்பற்றி நினைக்கின்றோமோ அதை நாம் பலப்படுத்துகிறோம். இவ்விதமாய் உலக விருத்திக்கு அனுகூலமாவது, அல்லது பிரதிகூலமாவது செய்யக்கூடும். கடவுள் திருவுள்ளததின்படி நடக்கலாம், அல்லது அவரை எதிர்த்து மறுக்கலாம். மற்றவன்பேரில் பொல்லாங்கு ஒன்றை நீ நினைக்கும்போதே மூன்று நெறிகெட்ட பாவங்களைச் செய்கின்றாய்."

C. W. L.:—கெட்ட எண்ணத்தை ஓர் குற்றமாக மாஸ்டர் சொல்லுகிறார். மாஸ்டருடைய சொல்லானது எப்போதும் எவ்வளவோ கருத்துடனும் ஏறத்தாழவில்லாது திட்டமாயுமிருப்பதை நாம் ஞாபகப்படுத்திக்கொண்டால், அப்போது இவர் எதினபேரில் கடுமையாக சொல்கின்றாரோ அது வாஸ்தவத்தில் தீங்காகத் தானிருக்கிறதை நமக்குக் காட்டுகின்றது.

மற்றவனுடைய அபிப்பிராயங்களைக் கண்டுகொள்ளவும், அவனுடைய மனோபோக்கை அறியவும், பிரயத்தினப்படுவது அநேகமாய்த்தவறான அபிப்பிராயத்தில் கொண்டுபோய்விடும். ஆகையால் குறைந்தபக்ஷம் நாம் செய்ய வேண்டியது யாதெனில் சந்தேகத்

தின் நற்பகுதியை அவனுக்குக் கொடுக்கவேண்டும். முடிவாய்ப் பார்க்கில் அநேகர் வெகு மரியாதையுள்ளவர்களாயும் நல்லெண்ண முடையோர்களாயு மிருக்கின்றார்கள். ஆகையால் நல்லெண்ணத் தின் யோக்கியதையை அவர்களுக்கு நாம் கொடுக்கவேண்டியது. நாம் நல்ல வகையில் எண்ணியது தவறாயிருந்தபோதிலும் அவ னைப்பற்றி கொஞ்சம் உயர்வானதாக இருந்தால் அது அவன் மேல் தாக்கி அவனை வாஸ்தவத்தில் நல்லவனாகச் செய்யும். மற்ற வனைப்பற்றி பிரதிகூலமான ஏதோ வொன்றை நீ கேட்டபோது அது உன்னுடைய மகனைப்பற்றியாவது அல்லது சகோதரனைப் பற்றியாவது இருந்தால் அந்தப் புறங்கூறலை நீ திருப்பிச் சொல்லு வாயா? அதைப் பரவச்செய்ய விடுவாயா? என்பதை நீயே யோசித் துக்கொள். இல்லை; கண்டிப்பாய் நீ சொல்லமாட்டாய். முத லில் அதை தடுத்துப் பாரப்பாய்; எவ்வகையாயினும் அதை பரவச் செய்யவிடமாட்டாய். மற்றவனுடைய மகனைப்பற்றியாவது சகோ தரனைப்பற்றியாவது நீ என் வேறுவிதமாய் நடக்கவேண்டும்?

> "1. உன்னுடைய அக்கம்பக்கங்களில் நற் குண எண்ணங்களைவிட்டுத் துற்குண எண்ணங் களால் நிரப்புகின்றாய்; ஆனதுபற்றி உலகி லுள்ள துக்கத்தை அதிகப்படுத்துகின்றாய்."

C. W. L.:—நாம் எப்படி நடக்கிறோமோ, நாம் எவ்விதம் நோக்குகிறோமோ அப்படித்தான் நமக்கு உலகமிருக்கும். ஒருவன் பிரதிகூல நோக்கத்தோடு தீங்கையும், குற்றத்தையும் பார்க்க கண் ணாய், மனஸ்தாபப்படவாவது வருத்தப்படவாவது சந்தர்ப்பத்தை தேடிக்கொண்டிருப்பானானால் அவன் அதைக் காண்பான். புத்தபக வான் குறிப்பாய் சொன்னபடி இந்த கீழுலகங்களில் மெத்த துக்க மிருக்கின்றது. உலகத்தில் கெடுதியிருக்கின்றது. இவைகளை மெத்த கடுமையான கஷ்டங்களாக பெருகச்செய்யலாம், அல்லது உலகத்தை அனுகூலநோக்கத்தோடு பார்த்து ஒவ்வொன்றிலிருக்கும் பிரயோஜனத்தை உற்சாக உறுதியுடன் எடுக்கப் போகலாம். பின் சொல்லியபடி செய்தால் சந்தோஷகரம் உலகத்தில் மெத்த அதிக

மாகும். மேலும் நம்முடைய எண்ணத்தின் வலிமையால் உலகை மற்றவர்களுக்கு மெத்த இன்பகரமாக்கலாம்.

அநேக வருஷங்களாக தினசரி கிரமமாக தியானஞ்செய்து கொண்டிருப்பவர்கள் அநேகரிருக்கின்றார்கள். இவர்கள் தியானஞ் செய்யாதவர்களைவிட தவறாமலே திட்டமாய் யோசிக்க கற்றுக் கொண்டிருக்கக்கூடும். ஆகையால் இவர்களுடைய எண்ணங்கள் மெத்த பலமானவைகள். இவர்கள் மற்றவர்களைக் குறித்து கெடுதியாய் நினைப்பார்களானால்,சாதாரணமானவன் செய்வதைவிட அநேக வழிகளில் மெத்த கெடுதியை உண்டாக்குவார்கள். ஏனெனில் முதலாவது இவர்கள் நன்றாய்த் தெரிந்தவர்கள். சர்ச்சில் சொல்லுகிற வாக்கியத்தின்படி "அறிவோடு எதிர்த்து பாவஞ் செய்கிறவர்கள்." இரண்டாவது இவர்களுடைய எண்ணம் திட்டமான உருவமாகி கொஞ்ச காலம்வரையில் நீடித்திருக்கும். இவைகள் ஆசைமய, மனோமயலோகத்தில் மெத்த வலிமை பெற்று சுற்றுமுற்றும் தாக்குகின்றன. ஆகையால் உலகை உற்சாகப்படுத்தும்பொருட்டும் சந்தோஷமாக்கும்பொருட்டும் உனது எண்ணத்தைப் பிரயோகி. வெறுமையாகிலும் துக்ககரமாயும் சுயகாமியமாயுமுள்ள எண்ணத்தை நீக்கி உன்னைச்சுற்றி வீசிக்கொண்டிருக்கும்படி அன்பின எண்ணத்தை உன்னில் நிறைத்துவைத்தால் எவ்வளவு நன்மைவரும் என்பது உனக்குத் தெரியாது.

> "2. நீ நினைக்கும் துற்குணம் அவனிடத்திலிருக்குமானால் அதற்கு ஊட்டங்கொடுத்து பலப்படுத்துகிறாய். ஆகையால் உனது சகோதரனை முன்னைவிட நல்லவனாக ஆக்குவதைவிட்டுக் கொடியவனாக ஆக்குகின்றாய். ஆனால் அநேகமாய் அத்துற்குணம் அவனிடத்திலில்லாதிருக்கலாம், இருப்பதாக நீயே பாவித்துக்கொண்டாய்; பின்னையுன் பொல்லாத எண்ணமானது உன் சகோதரனை அக்குற்றஞ் செய்யும்படி தூண்டுகிறது. ஏனெனில், அவனின்னும் பரி

பக்குவமடையாதிருந்தால் அவனைப்பற்றி நீ எப்படி எண்ணுகிறாயோ அதுபோல அவனை நீ ஆக்கக்கூடும்."

C. W. L:—ஒருவன் நினைக்கும் எண்ண உருவமானது மற்றவனிடத்திற்குப் போய் அவனைச் சுற்றி கொசுகூட்டத்தைப்போல ரீங்காரமிட்டுக்கொண்டிருப்பதை தேவப்பார்வையுள்ளவன் பார்க்கலாம். ஏதோ வோர் விஷயத்தில் மற்றவன் கவனமாய் யோசித்துக் கொண்டிருக்கும்போது அவனுக்குள்ளே நுழைய அதற்கு முடிகிறதில்லை. ஆனால் யோசிக்க ஒரு நிமிஷநேரம் தளர்ந்தபோதும், மனோராஜ்ஜியம் செய்யும்போதும், அல்லது அயர்ந்திருக்கும்போதும், அல்லது ஒரு க்ஷணம் தன்னை மறந்திருக்கும்போதும், அது இந்த சந்தர்ப்பத்தை எடுக்கின்றது. பிறகு எண்ணவுருவம் அவனுடைய தேஜஸின பிரபையில் ஓர் நெரிஞ்சல் முள்ளைப்போல் பொத்துக்கொள்கிறது; பிறகு அதனுடைய அதிர்ச்சி வேகத்தால் அது தைத்த இடத்தில் மெள்ளமெள்ள தன் வர்ணத்தை ஏத்துகின்றது. அங்கிருந்து அதனுடைய அதிகாரம் மெள்ள பரவுகின்றது. இவ்விதமாய் நல்லதையோ அல்லது கெட்ட கருததையோ அதற்குத் தக்கபடி அது அவனை தூண்டுகிறது. இதற்குத்தக்க ஏதாவது ஒருகுணம் சாதாரணமாகவே அவனிடத்தில் இருந்தால் அதைத் தட்டி எழுப்பிவிடுகிறது.

இது மற்றவனுக்கு கொஞ்சம்விரைவாகப் போக தட்டிக்கொடுக்கிறது. சில சமயங்களில் அவ்வளவாக பாதகமில்லாமலிருக்கலாம். ஆனால் சில சந்தர்ப்பங்களில் பிரமாதமானவித்தியாசத்தைக் காட்டும். பள்ளிக்கூடத்து பிள்ளைகள் ஓடிக்கொண்டே ஒருவருக்கொருவர் முட்டி தள்ளிக்கொள்வதுண்டு. ஒரு பையன் அறியாமலே மற்றவனை செங்குத்தானபாறை உச்சியிலிருந்து தள்ளிவிட்டதாக பலதரம் கேள்விப்பட்டிருக்கின்றோம். ஒருவனுடைய எண்ணம் ஏதோவோர் கெட்ட காரியத்தில் பிரவேசிக்கவேண்டி அவன் மனதிலிருந்து வெளிவர முட்டிக்கொண்டிருக்குஞ் சமயம் உனக்குத் தெரியமாட்டாது. அப்பேர்ப்பட்டவனை மற்றவனுடைய கெட்ட எண்ணம் ஒன்று நெட்டித்தள்ளி காரியமாக்கி குற்றஞ் செய்விக்கும்.

அல்லது ஒருவன் நல்லதற்கும் கெட்டதற்கும் மத்தியில் இப்படிச் செய்யலாமா அல்லது அப்படிச் செய்யலாமாவென்று ஊசலாடிக் கொண்டிருக்கும்போது ஒருபலமான நல்ல எண்ணம் அவனை நல்ல பக்கத்தில் திடமாய் தள்ளி நல்ல நடக்கையில் போகச்செய்யும். இது அவனுக்கு விரைவான தேர்ச்சியென்று அருத்தம்.

ஒருவனைப்பற்றிய ஒரு கெட்ட எண்ணமானது அவனைக் கெட்ட வழியில் போகவிட்டதால் வரும் கெடுதி, அநேக ஜென்மங்கள் வரையில் நீடித்துவருவதை பலதரம் பார்த்திருக்கிறேன. கெட்ட எண்ணம் ஒன்று வெளியில் தலைகாட்டிக்கொண்டிருந்தது. இனனும் காரியமாக ஓடத்தொடங்கவில்லை. அச்சமயத்தில் மற்றொருவனிடமிருந்து ஒரு கெட்ட எண்ணம் வந்து, இதற்கு வேண்டியிருந்த பலத்தை கொடுத்ததும், அது எண்ணத்திலிருந்து காரியமாகி அவனை ஒருபோக்கில் குற்றஞ் செய்வித்தது. இதை நீ தேவக்கண்ணால் பார்க்கும் வரையில் நீ அறிந்துகொள்ளமாட்டாய். ஆனல் ஒருதரம் பார்த்தாயானல் அந்த பயங்கரத்தால் வரும் கவனத்தோடு நீ எப்போதும் ஜாக்கிரதையோடிருப்பாய். இது உனக்கு புதியவிதமான எச்சரிக்கை கொடுக்கினறது. சில சமயங்களில் தேவப்பார்வை பொறுக்கமுடியாததாயிருக்கும். கவிராயன் ஷில்லர்' எனபவா இதைப்பற்றி எழுதியபோது, அந்தப் பார்வை வேண்டாமென்று பிரார்த்தித்ததை கவனியுங்கள். "உமது கடுமையான பரிசை எடுத்துக்கொள்ளுங்கள். இந்த பயங்கரமான வெகுமதியை எடுத்துக்கொள்ளுங்கள்" என்று அவர் கூவினார்.

"3. உன்னுடைய மனதிலேயே நல்லதை
விட்டு கெட்ட எண்ணங்களால் நிரப்பிவிடுகிறாய்;
ஆகையால் உன் விருத்தியை நீயே தடுத்துக்
கொள்ளுகிறாய் ; தவிர தேவக்கண்ணாற் பார்ப்
பவருககு சுந்தரமாய்ப் பிரியப்படத்தக்க வடிவ
மாயுமிருப்பதைவிட்டு விகாரமான பீடையுள்ள
உருவமாக உன்னை நீ ஆக்கிக்கொள்கின்றாய்."

C. W. L.:—அநேகர் தங்களுடைய தேகசாயலுச்குரிய நடையுடைபாவனைகளைப்பற்றி அழகு, அமரிக்கை மரியாதை இவைக

ளுக்காக மெத்த கஷ்டமெடுக்கின்றனர். பெருமைக்காகவே தாங்கள் நன்று புடுத்தி வெளிக்கு காட்டவேணுமென்றும் மற்றவர்கள் தங்களை நன்றாய் மதிக்கவேண்டுமென்றும், அவ்வேலாடிருக்கிறார்கள் என்றல்ல. மற்று சாதாரண தேசாசார நடத்தையில் இதுவொரு கடமையாக ஏற்பட்டிருக்கிறது. ஆதிகாலங்களில் சீரோடிருக்கவும், ஒவ்வொருவகையிலும் தன்னால் கூடியஅளவு நேர்த்தியாய் உடுக்கவும் ஒவ்வொருவனுக்கும் கடமையாக இருந்தது. உடுப்பதிலும், சாயலிலும், வசனத்திலும் காரியத்திலும் சரியுள்ளதையும், திவ்யமாயுள்ளதையும், ஒவ்வொன்றையும் சரியானபடி செய்யும் விதத்தை கற்கவேண்டியிருந்தது. தன்னுடைய தேகச்சாயலில் மாத்திரமல்லாது தன்னைச் சுற்றிலுமுள்ளவைகளை உபயோகமுள்ளவைகளாக வைப்பதோடு, அவைகளை அழகாயும் வைத்திருக்கவேண்டியிருந்தது, ஒருவன் வீடொன்றைக் கட்டினால் அதுவிலையுள்ளதாக இல்லாவிட்டாலும் தன்னுடைய அயலானைப்பற்றி கவனித்து, ரம்மியமாயும், அழகாயுமிருக்க அதை கட்ட கடமையாக அவனுக்கிருந்தது. அவனுடைய தட்டுமுட்டுசாமான்களும் பிரதிமைகளும், படங்களும், நல்லவைகளாயிருந்தன. இந்நாளில் வீட்டைக் கட்டவேண்டுமானால் அதன் விலை சரசத்தை கவனிக்கின்றார்களே தவிர, அதன் அவலக்ஷணங்களால் விளையும் வெறுப்பைக்கவனிக்கிறதில்லை. ஒருவன் அவலக்ஷணமான வீட்டையாவது யந்திரசாலையையாவது கட்டுகிறான். உணர்ச்சியுள்ள எவனும் அதைக் கண்டவுடன் பின்தாங்குகிறான். அதைப் பார்த்த எல்லோரும் அசங்கியப்படுகிறார்கள். அந்தக் கட்டடத்தைக் கட்டினதற்கு உத்தரவாதியாயுள்ளவன் வாஸ்தவத்தில் கொடிய கர்மத்தைவிளைவிக்கின்றான். சிலர் இவைகளைப்பற்றி பாதகமில்லையென்றுநினைக்கிறார்கள். அப்படியல்ல, அவைகளால் பாதகம் விளைகின்றது. நம்மைச் சுற்றிலுமுள்ளவைகள் வெகு முக்கியமானவைகளாயிருக்கின்றன. வீரியமுள்ள ஜீவான்மாவுக்கு இது சட்டை செய்யாது என்பது வாஸ்தவந்தான். ஆனால் நம்மை தடுப்பவைகளை விட்டு, அனுகூலமானவைகளை நாம் ஏன் வைக்கக்கூடாது. அழகான வீட்டை கட்டுகிற ஒவ்வொருவரையும் நகரத்தார் மெச்சுவார்கள். ஏனெனில் ஏதோவொன்றை கட்டினதால் அதைப் பார்த்தவர்களுக்கெல்லாம் கண்ணுக்கு ரம்மியம் கொடுக்கின்றது. நேர்த்தி

யான ஏதோவொன்றை பார்க்கும்போது வரும் உற்சாகம் அற்ப விஷயமன்று ; நல்ல வர்ணத்தோடு உடை உடுப்பவனுக்கு நன்றி பாராட்டவேண்டி உணர்வு எனக்கு எப்போதும் வருகின்றது. ஏனெனில் அந்த வர்ணம் நமது சாம்பலடைந்த பயங்கரமான நாகரீகத்தைவிட இது உற்சாகத்தை உண்டாக்குகிறது.

பூலோகத்து அழகைக் குறித்துச் சொன்ன உண்மையெல்லாம் மற்றவுலகங்களில் இன்னும் விளக்கமாயிருக்கின்றது. ஒருவன் தன்னுடைய ஆசைமய தேகத்தை அழகாய் பிரகாசிக்கச்செய்து அதை அன்பிலும், பக்தியிலும், நிறைத்து தன்னைச் சுற்றிலுமுள்ளவர்களின்பேரில் பொழிய வைக்கிறவன் தன்னுடைய நேயர்களுடைய நன்றியறிதலுக்கு பாத்திரனாகவிருக்கிறான். காமலோகத்தில் பார்க்கின்ற ஜனங்கள் பூலோகத்தைவிட மெத்த அதிகமாயிருக்கின்றார்கள். நாம் நம்மை காமலோகத்தில் கொடியவிதமாய் காட்டிக்கொள்ள ஏற்படுத்திக்கொண்டால் நம்முடைய அவலக்ஷணத்தால் பூலோகத்தைவிட அநேகருடையவசவுக்கு உட்படுகிறோம். அல்லது அநேகரை கோபப்படுத்துகிறோம். காமலோக வாசிகள் மாத்திரம் அதனுடைய அழகைப்பார்த்திருப்பது அல்ல, மற்று அங்கு பார்வையில்லாத ஒவ்வொருவரும் அதை உணருகிறார்கள். இதனுடைய வலிமை அவர்களைத் தாக்குகின்றது. அழகுள்ளதானால் ஜனங்களுக்கு அனுகூலமாகுகிறது. அசங்கியமான சுயகாமிய கொடிய எண்ணங்களுக்கு உடன்படுகிறவன், தன பயங்கரமான வெறுப்போடு ரீதியில்லாத காக்ஷி கொடுப்பதோடு தன்னைச்சுற்றிலும் உள்ளவருக்கு அருவருப்பைத்தந்து அதை பரவச்செய்கிறான். பூலோகத்திலுள்ளவர்களுக்கு தங்களுடைய அசங்கிய வியாதிகளை மறைக்கமுடியும். ஆனால் காமலோகத்தில் குஷ்டரோகி தன்னுடைய புண்களை மூடமுடியாமலே எல்லோரும் பார்க்கும்படி காட்டிக்கொண்டே போவான்.

"தனக்கும், தன்னால், கெடுபட்டவனுக்கும் தீங்கு விளைவித்தது போதாத குறைக்கு, புறங்கூறுவோன் மற்றவர்களையும் தன் பழிபாதகத்திற்கு கூட்டாளிகளாக்கத் தன்னால் கூடியமட்

டில் எத்தனிக்கின்முன். அவன் தன் பொல்லாத கட்டுக்கதையை நம்புவார்களென்று, அவனுடன் போய் அவர்களுக்குச் சொல்லுகிமுன்; அப்பாலவர்களும், அவதிக்காளான அந்த எளியவன் மீது கெட்ட எண்ணத்தைப் பொழிய இவனேடு சேருகிமுர்கள். இப்படித்தான் நாளுக்கு நாள் நடந்து வருகிறது; தவிர, இது ஒருவனுல் மாத்திரமல்ல, பின்னை ஆயிரக்கணக்கான பேர்களால் செய்யப்பட்டு வருகிறது. இது எவ்வளவு இழிவானது; எவ்வளவு கோரமானபாவமென்று பார்க்கத் தெரிகிறதா! நீ இதை முற்றிலும் விலக்க வேண்டும். எவரையும் ஒருபோதும் இகழ்ந்து பேசாதே; எவனுவது ஒருவன் மற்றவனைக் குறித்துத் தூஷணையாய்ப் பேசும்போது நீ காது கொடுத்துக் கேளாதே; ஆனல் சாந்தமாயிவ்விதஞ் சொல்லிக்கொள்; "ஒருக்கால் இது உண்மையல்லாததாக இருக்கலாம், உண்மையாயிருக்கினும் அதைப் பற்றி பேசாமலிருப்பது மிக்க வுபகாரம்."

C. W. L.:—இதைச் சொல்ல கொஞ்சம் தைரியம் வேண்டியதாயிருக்கிறது. என்முலும் புறங்கூறுவோனுக்கும், கூறப்பட்டவனுக்கும் அன்போடு இப்படிச் செய்யவேண்டி யிருக்கிறது. ஒருவன் தன்மையை பன்மையாக்கி மெதுவாய் "ஒருவேளை நாம் அதைப்பற்றி ஒன்றும் பேசாமலிருந்தால் நல்லது" என்று சொல்லிக்கொள்ள வேண்டியது. அப்போது நீ என்னமோ சிரேஷ்டம் பெற்றவனுக காண்பித்துக் கொள்ளவில்லை. காண்பிப்பது குப்த முறைப்படி சரியல்ல, கோபமூட்டிவிடும் (எரிச்சலையும் உண்டாகும்) வெகுவாய். அவன் உன்னேடு ஒத்துக்கொண்டு அவ்விஷயத்தை நழுவவிட்டு விடுவான்.

## 27-வது அத்தியாயம்.

### துன்புறுத்தல்—விலக்கு II.

"பிறகு இம்சையைப் பற்றி: இது தெரிந்து செய்தல், தெரியாமற் செய்தலென இருவகைப்படும். மற்றொரு ஜீவனை வேண்டுமென்றே வருத்தங்கொடுப்பது தெரிந்து செய்யும் இம்சை. இது பாவங்கள் எல்லாவற்றிலும் கனத்தது; இது பிசாசின் தொழிலே தவிர, மனிதர் செய்வதல்ல. இப்பேர்ப்பட்டதை எவனுஞ் செய்யமாட்டானென்று நீ சொல்லலாம்; ஆனால் மாந்தர்கள் இதை அநேகதரம் செய்திருக்கிறார்கள்; இப்போதும் பிரதிதினமும் செய்து கொண்டே வருகிறார்கள். கிருஸ்தவமத கர்த்தாக்கள் (Inquisitors) இதைச் செய்தார்கள். மதாபிமானமுள்ள அநேகர் தங்கள் மதத்தின்பெயரை சாட்டி செய்தார்கள்."

C. W. L.:—துன்பஞ்செய்தல் பேயின்வேலையே தவிர மனிதனுடைய செயலல்ல. இவ்விதமாய் தான மாஸ்டர்களுக்கு புலப்படுகிறது. தினவாழ்க்கையில் அநேக தடவைகளில் ஒருவன் மற்ற யாரோ ஒருவனுக்கு வருத்தமுண்டாக்கவேண்டி ஏதோவொன்றைச் செய்கிறான் அல்லது சொல்கிறான். அப்போது அவன் அந்த நிந்தனைக்குள்ளாகிறான். அவன் செய்கிற விஷயம் பிசாசுக்கு ஏற்றதே தவிர மனுஷனுடையதல்ல. இது நம்பத்தகாததாயிருக்கலாம். ஆனால் அப்படிச்செய்யும் ஜனங்களை பார்க்கமுடியும்.

மதத்தின்பெயரைச்சுட்டி பயங்கரமான துன்பங்களைச் செய்து வந்தனர். நமக்குத் தெரிந்ததற்குள் மெத்த புராதனமாயிருக்கும் வேதங்களை வாசியுங்கள். அதில் இவைகளுக்கு அத்தாட்சிகளை வெகுபலமாய்க் காணலாம். ஆரியர்கள் இந்தியாவின் சமபூமியில் குடி

யேற திரண்டுவந்தார்கள்; அங்கிருந்தவர்களை சம்ஹரிக்க தொடங்கி "இந்த ஜனங்களுக்கு என்ன செய்தாலும் பாதகமேயில்லை இவர்களை பூமியிலிருந்தே துடைத்துவிட வேண்டும் என்றார்களாம்" என்? ஒரே ஒரு காரணத்தால் தான். அவர்களுடைய குலாசார கிருத்தியங்கள் வேறாயிருந்தன. மகம்மதியர்களும் இப்படியே அவர்கள் வெற்றிகொண்டவர்களை ஒரு கையில் கோறானையும் மற்ற கையில்வாளையும் எடுத்து மகம்மதியர்களாக்கினார்கள். வாராதவர்களை கொலை செய்தார்கள். இந்தப்படி உலகில் பெரும்பாக ஜனங்களை துடைத்துவிட்டார்கள் கிருஸ்தவர்களும் இவர்களைவிட மேலானவர்களல்ல. இதே நோக்கத்தோடு மத்தியகால மத சர்த்தாக்கள் துன்பஞ் செய்தார்கள். தென் அமெரிக்கா இந்தியர்களை பாடுபடுத்தினதும், இன்னும் இவ்விதமான அநேக விஷயங்களைச் செய்ததும் இதே நோக்கத்தால் தான். நாம் இப்போது மெத்த நாகரீகமாகி வருகிறோம் என்று நினைக்கின்றோம். என்றாலும் இன்றைய தினத்திலும் சில இடங்களில் மதாபிமானம் மெத்தபலமாயும் கடுமையாயுமிருக்கின்றது. முன் நடந்ததைபோல் இப்போதும் நடத்த சட்டம் இசைந்து கொடுத்தாலும், நம்முடைய உயர்ந்த நாகரீகம் பண்டைய நாளின் பயங்கரமானவைகளைச் செய்ய ஒருபோதும் இடங்கொடுக்காது என்று பாங்குடன் சொல்லிக்கொள்ளலாம். ஆனால் அது நிச்சயம் என்று எனக்குப்படவில்லை இங்கிலாந்தில் சில இடங்களில் மதத்திற்கு ஒத்துவராத கருத்தையவனை தேசாசாரபொது நடவடிக்கைகளுக்கு வரத்தகாதவனென்று நினைத்தும் அவனைப்பற்றி அநேகவித கெட்டவிதமாய் சந்தேகப்படும் வருகிறது. நமது முன்னோர்கள் செய்ததுபோல் தொழுவில் மாட்டி பல்லை நாம் பிடுங்குவதில்லை. பிடிவாதிகள் கையில வரம்பில்லா அதிகாரம் கொடுப்பதைப் பார்க்க எனக்குப் பிரியமில்லை.

"பிராணிகளை உயிருடன் வகுத்துப் பரீக்ஷிப்பவர்கள் (Vivisectors) செய்கிறார்கள்."

C. W. L:—மனதார மிருகங்களுக்கு துன்பஞ் செய்யும் துஷ்டத்தனத்திற்கு மன்னிப்பேகிடையாது. மிருகங்கள் நம்முடைய இளைய சகோதரர்கள்; மனிதனை இன்னும் வராதிருந்தபோதிலும்

பல ஜென்மங்களுக்கு பிறகு மனிதராக வருபவன. மிருகங்களை ஏதோ ஒரு விஷயத்திற்காக (மருந்தின் உபயோகத்தை பரீக்ஷித்து) பார்க்கும் பொருட்டு சோதிக்கும் விதத்தில் துன்பங்கொடுப்பது பயங்கரமானது. உண்மையில் அதனால் வரும் அனுபவம் மனிதருக்கு ஒரு போதும் பிரயோஜனப்படாது. ஏனெனில் கர்மநியதியை மாற்ற முடியாது. எதை விதைக்கிறானோ அதைத்தான் அனுபவிப்பான். டாக்டர் பெசண்ட் அம்மையார் "இவ்விதமாய்ச் செய்த மருந்தைக் கொண்டு யாதொரு பிராணியைக் காப்பாற்றக்கூடாது என்று சொன்னதை நான் கேட்டிருக்கிறேன். ஒவ்வொரு மனிதனிலும், ஒவ்வொரு மிருகத்திலும் தன்னைத்தான் காப்பாற்றிக் கொள்ளும்சுபாவம் வெகு பலத்தோடிருப்பது நமக்குத் தெரியும். அப்படி வெகு முயற்சியோடு கஷ்டப்பட்டு எடுத்த தேசம் உள்ளிருக்கும் ஜீவனுக்கு கூடிய காலம் வரையில் உபயோகப்பட வேண்டி யிருக்கிறது. ஆகையால் மானிடவுயிரைச் சரியான வகையுடன வைத்தியஞ்செய்து அதைக் காப்பாற்ற வேண்டியதுதான். ஆனால் அப்படிக்காப்பாற்ற வேண்டியதற்கு எல்லா வழிகளும் நியாயமென்றல்ல. உயிரைக் கொல்லுகிற அவமதிப்பை காட்டிலும் மரணம் மேலென்று மடிகிறவரைப்பற்றி ஆச்சரியப்படுகிறோம். வாஸ்தவத்தில் இவ்வித கொடூர வழியால் கிடைக்கும் ஔஷதம் எதையும் கொண்டு அவர்களுடைய உயிரைக் காப்பாற்றுவது மானிடர்களுக்கு மெத்த மானக்கேடு. நமது பிரசிடெண்டு இவ்விதத்தில் தன்னை சொஸ்தப்படுத்திக்கொள்வதை விட செத்துப்போவது மேலென்று சொன்னார்.

இந்த விஷயத்தைப்பற்றி திவ்யஞான சபையோர்களிலும் வெவ்வேறு அபிப்பிராயங்கள் இருக்கின்றன. சபையிலிருக்கும் ஒவ்வொருவரும் தங்களிஷ்டப்படி நம்பிக்கைகளை வைத்திருக்க சுதந்திரமுடையவர்கள். ஆனால் மேலே கொடுத்த பிரமாணத்தின்படி மாஸ்டர்களுடைய அபிப்பிராயம் விளக்கமானது. உயிருடன் வகுத்து பரீக்ஷிக்கும் கொடுமையைப் பற்றி நமக்கு வெறுப்பு இருந்தபோதிலும், அநேக டாக்டர்களும் இதரர்களும் அதற்கு உடன்பட்டு செய்பவர்கள், விசனத்துடன் செய்கிறார்களே தவிர துன்பஞ் செய்ய வேண்டுமென்கிற உற்சாகத்துடனல்ல என்பதை கவனிக்கவேண்டும். நமக்கிடையில் அப்பேர்ப்பட்ட விஷயங்கள் இருப்பதால் மானிட

உருவத்தோடு பிணம்விழுங்கும் பிசாசுகளுக்கு சந்தர்ப்பம் கிடைத்திருக்கின்றது. இவர்கள் மானிட தேகங்களை நோயின் கஷ்டத்திலிருந்தும், மரணத்திலிருந்தும் தப்புவிக்க இதுதான் வழியென்று நினைக்கின்றார்கள். மேலும் முடிவில் அவர்கள் செய்யும் வழிதான் நியாயம் என்று அவர்கள் மனதார நம்பியிருக்கிறார்கள். ஆகையால் நாம் அவர்களுடன் எவ்வளவோ ஒத்துக்கொள்ளாதிருந்த போதிலும் பாவியை விட்டு பாவத்தை கண்டனஞ் செய்வோம். உயிருடன் பரீக்ஷித்துக்கொண்டு வருபவருக்கு கர்மம் மெத்த கஷ்டம் கொண்டு வந்துவிடும் என்பதற்கு சந்தேகமே இல்லை; இந்த உண்மையை அறிவோமானால் அதை அருவருப்பு கோபத்தோடு பார்ப்பதைவிட்டு அவர்களை இரக்கத்தோடு பார்ப்போம்.

உயிரோடு வகுத்து பரீக்ஷிப்பவர்களெல்லோரும் அந்தப்படி ஒரேதரமாய் துன்பப்படுத்துகிறதில்லை. உதாரணமாக நம்முடைய சொசைடியிலுள்ள ஒருமெம்பர்; இவர் பெரிய டாக்டர், இவர் ஓர்விதமான வகையில் மிருகங்களை வகுத்து சோதித்துவந்தார். மனிதனுடைய தேகத்தில், சில மெல்லிய இழைபோன்ற குழாய்கள் இருக்கின்றன; இவைகள் சில சமயங்களில் காயப்பட்டு அறுந்து போகின்றன. அவைகள் வெகு நுட்பமாய் இருப்பதால் அறுந்த முனைகளை சேர்த்தபோது அதனால்வரும் தளிம்பு அந்த குழாயை அடைத்து விடுகிறது. அறுந்த இடத்தில் ஒரு நீட்டகீரலை கீரிவிட்டால்,புண் ஆறுவதற்கு சாத்தியமாய் இருப்பதோடுகூட அந்த குழாயும் அடைபடாமலிருக்குமென்பது இந்த டாக்டருக்கு தெரிகிறவரையில் இவ்வித நிலையிலிருந்து ஜனங்களைக் காப்பாற்ற முடியாமலிருந்தது. அறுந்த குழாயின் ஒருபக்க முனையில் ஒரு கீரலும் மற்றதின்பக்கத்திலும் கீரிஅதை ஒன்றின்மேலொன்று படிந்து சொஸ்தமாகும்படி செய்தார். இவ்விதம் செய்வது சரிதானா என்று பார்க்க சில நாய்களைக்கொண்டு இதைபரிசோதித்தார். இந்த சோதனையை ஐந்தாறு தெருவோடி நாய்களின்பேரில் செய்ததாக எனக்குச் சொன்னார். அந்நாய்களை நன்றாய் போஷித்து சோதனைசெய்வதற்குமுன சுத்தமாய் அவைகளை சௌக்கியத்திற்கு கொண்டுவந்து நோய் தெரியாதபடி மயக்கத்தையும் கொடுத்தார். நாய்கள் சுத்தமாய் சௌக்கியமாகிறவரையில் வெகு ஜாக்கிரதையுடன் ஆதரித்

தார். இவ்வித சோதனையால் அனுகூலத்தைத் தெரிந்துகொண்டார். இதனுடைய பலன் யாதெனில் இதுவரைக்கும் முடியாது என்று விட்டுவிட்டதை இப்போது முடியுமென்று தெரிந்துகொண்டாயிற்று. இப்போது அவ்விதமாய் அறுபட்டதைசேர்க்கும் உபாயம் உலகெங்கும் பரவி அதைக் கண்டுபிடித்த டாக்டர் பெயரால் அது விளங்குகிறது. கருத்து என்னமோ பிழைதான. என்றாலும் இதற்கு சம்பந்தபட்ட நாய்களுக்கு வாஸ்தவத்தில் துன்பம் யாதுமில்லை. அவைகள் அந்த சமயத்தில் தக்கபடி மேன்மையாக ஆதரிக்கப்பட்டனவே தவிர குறைவில்லை. சாதாரணமாய்சோதனைசெய்து வருபவைகளைவிட இது மெத்த வித்தியாசப்பட்டிருந்தது. மிருகங்களை உயிருடன வருத்து சோதிக்கும் மற்றவர்களை பழிப்பதுபோல இந்த டாக்டரை பழிகூறுவது முற்றிலும் தகுதியானதல்லவென்று நான் நினைக்கிறேன்.

ஒருவன் பத்திரிகைகளில் வாசிக்கவரும் சோதனைகளில் சில மெத்தகடுமையாய் இருக்கின்றன. அவையாவன:—ஒருமிருகத்தை எவ்வளவு சூடுடன வேக வைத்தால் அதன் அவயவங்கள் வேலை செய்யாது நிற்கும் எனபதை பார்ப்பது; இவ்விதமாக பயங்கரமான நிஷ்பிரயோஜனமான தென்று தெளிவாயிருக்கும் இன்னும் அநேக வித சோதனைகளைச்செய்துவருகின்றனர். மேலும் வேண்டியில்லாத ஆயிரக்கணக்கான இதர சோதனைகள் மாணுக்கருக்கு கற்பிக்கும் பொருட்டு செய்யப்பட்டுவருகின்றன. இவைகளுடைய பலன் எப்பேர்ப்பட்டது என்றுபார்க்க சோதித்து வருகின்றனர். இவைகளில் அநேகம் பிரயோஜனமில்லாதவைகள். ஏனெனில் மனிதனுடைய தேக நிலை, மிருகங்களைவிட எத்தனையோ விதத்தில் வித்தியாசப்படுகின்றது. உதாரணமாக வெள்ளாடானது அதனுடைய உணவுக்கு அநேகவித இலைகளோடு ஊமத்த இலையையும் (Henbane) கொஞ்சங்கூட கஷ்டப்படாமல் சாப்பிட்டுவருகிறது. ஆனல்அதைமனிதன் சாப்பிட்டானுனல் அவன் பரலோகத்திற்கு போகவேண்டிவரும். இன்னும் ஒருமிருகம் மெத்தநோயாலும், பயத்தாலும் மிரண்டு இருக்கும்போதுஅதனுடைய தேகத்திலிருக்கும்ஜீவரசங்கள் வேறாக மாறிவிடுகின்றன. மேலும் சோதனையில் அவைகள் மெத்த வித்தியாசத்தைக்காட்டும், சரியாக இராது.

இவ்வித துன்பங்களில்லாமல் சோதனைசெய்வதற்குச் சரியான வழி யாதெனில் சந்தேகமின்றி தேவப்பார்வை ஒன்றுதான். மனிதனைவிட மெத்த வித்தியாசப்படும் உயிருள்ள மிருகத்தை வகுத்து, ஒருவிஷயத்தை கற்கிறதைவிட, மனிதனுடைய தேகத்தை வகுக்காமலே உள்ளே நடக்கும் விபரங்களை தேவப்பார்வையால் கண்டுகொள்வது டாக்டர்களுக்கு மெத்த நல்லது. வகுத்துத்தான பார்க்கவேண்டுமென தீர்மானித்து கொண்டிருப்பவர்கள் எல்லோரும்ஒருங்கேகூடி சம்மதித்துக் கொண்டு அதில் ஒருவருக்கொருவர் வகுத்து பார்த்துக் கொள்ளட்டும். இவ்விதமாய் செய்வார்களானுல் அவர்களுக்கு மெத்த உபயோகப்படும்படியான மானிடதேகம் பரீக்ஷிப்பதற்கு கிடைக்கும். மிருகங்களின தேகம் அவ்வித உபயோகத்தை கொடுக்கமுடியாது; மேலும் காப்பாற்றிக்கொள்ளமுடியாத பிராணிகளை பயங்கரமான துன்பத்திற் குட்படுத்தாமல் நீக்கக்கூடும். இவைகளை கடவுளுடைய உலகிலிருந்துகொண்டு துன்பஞ்செய்ய அவர்களுக்கு நியாயமில்லை. இது அநாவசியம்; எனமுலும், இவர்கள் பரிசோதனைக்காக எடுக்கும் கஷ்டத்திலும் படிப்பிலும் பத்தில் ஒரு பகுதியை பிரயோகித்தால் சரிவர பார்க்கும் தேவப் பார்வையுடையோர் ஒரு பட்டாளக் கணக்காய் திரண்டு ஏற்பட்டுவருவார்கள். வாஸ்தவத்தில் சாதாரண மர்னுக்கன தனது வாசிப்பிற்காக வெகுநாள் வைக்கும் கவனத்தை தேவப்பார்வையில் வைத்தால் அதை விருத்திசெய்ய சாதாரணத்தில் போதுமானது.

பிடிவாத வைத்திய கூட்டத்தார் ஆக்கிரமிக்கும் அதிகாரத்தால் விளையும் இன்னொருவகையான துன்புறுத்தலில் மெத்த அபாயமிருக்கின்றது. நம்முடைய முன்னேர்கள் சர்ச்கூட்டத்தாருக்கு அடிமைப்பட்டிருந்ததுபோல் நாம் இவர்களுக்கு அடிமையாயிருக்கக்கூடாது. இவர்கள் அநேகவித நன்மையைச் செய்திருந்தபோதிலும் இதனுல் அவர்களுடையகருத்துக்கு உடன்படாத பிரவிஷனுக்கு தண்டனைவிதித்து துனபுறுத்த, அவர்களுக்கு அதிகாரங்கொடுக்கவில்லை. நம்மை தண்டிக்கிறது சிவில் சட்டப்படி இருப்பது வாஸ்தவந்தான் ஆனுல் சர்ச்சு கூட்டத்தார் செய்ததும் இவ்விதந்தான்.—இவர்கள் போதித்ததை நம்பி கீழ்ப்படியாதவர்களை சிவில் அதிகாரி கையில் "இவர்களுடைய இரத்தத்தை சிதராதபடி கொல்

லுங்கள்" என்றுபாசாங்கு பிரார்த்தனைப் பாடு கொடுத்தார்கள். ஆத லால் அதிகாரிகளுக்கு தலைவெட்டமுடியவில்லை; அப்படிச் செய் வதைவிட்டு இவர்களை கொளுத்தினார்கள். அம்மை குத்தும் விஷயத் தில் பலவந்தப்படுத்தினால் சங்கடம் இருக்கின்றது. சிலதேசங்களில் அது இன்னும் பலவந்தப்படுத்தி வருகிறது. என்றாலும் அது நீக்கு மென்று நினைக்கும் நோயைவிட அது கொடியதா, அல்லவா, என்று இன்னும் பேசிக்கொண்டேதான் இருக்கிறார்கள். வைத்திய அபிப்பிராயம் இதைப்பற்றி அடிக்கடி மாறிக்கொண்டேதான் இருக்கிறது. என்றாலும் ஒருவித அபிப்பிராயக்காரர்கள் அதிகாரம் பெற்றிருக்கிற வரையில் அதை மூர்க்கத்தனமாய் பலவந்தப்படுத்து கிறார்கள். அதிகாரத்தோடிருக்கும் ஒரு கோட்பாடுஉடையவர்களால் ஜனங்களுக்கு விபரீத சங்கடம் உண்டாயிற்றென்று சரித்திரத்தில் அடிக்கடி வாசிக்கலாம். நமக்கு சாஸ்திர துன்பம் இல்லாமலிருக்கக் கடவது.

மிருகங்களைச் செய்யும் எவ்வித துன்பத்திற்கும் பண்டைய நாள் யூதர்கள்கொண்ட கொள்கையைப்போல மிருகங்களெல்லாம் மனிதனுக்காக சிருஷ்டித்திருக்கிறதென்கிற சாக்குபோக்கு சொல் லும் சிலர் இருக்கின்றார்கள். நமக்கு அவைகளைவிட அதிகமாய்த்தெரி யும். அவைகள் ஈசுவரனுக்காக இருக்கின்றன. அவருடையபிராணனால் வியாபித்து இளைய ஜீவனமா என பேர்பெற்று விகாசமுறையில் தேறி வரும் படிகளில் அவை இருக்கின்றன. என்றாலும் மிருகங்க ளுடைய முன்னேற்றத்தை தருகிறவரையில் அவைகளை நமக்காக உபயோகப் படுத்திக்கொள்ள நியாயமிருக்கிறது. அவைகள் மனித னோடு வந்து சேர்ந்திருப்பதால் அவைகளுக்கு பிரயோஜன மிருக் கிறது. காட்டுக் குதிரையை நாம் பிடித்தோமானால் அதனுடைய சௌக்கியத்திற்கு நாம் ஒரு இடையூறு தருவது வாஸ்தவந்தான், என்றாலும் மற்றவழிகளில் முக்கியமாய் அறிவில் அதற்கு மெத்த தேர்ச்சி வருகிறது.

சிலர் இன்னும் அந்த யூதர்களுடையபுராதன,அதே கருத்தோடு குழந்தைகளையும் நோக்குகிறார்கள்.குழந்தைகள் தங்களுக்காகத்தான் இருப்பதாகவும், வேலைக்காரரைப்போல் உபயோகப்படுத்தவும், ஓர்

இறுமாப்புஅடைந்திருக்கவும்,அந்தியகாலத்தில் சம்பாதித்துப்போட வும், இப்படி பலவிதமாக நினைக்கும் தாய் தந்தையர் இருக்கின்றார் கள். இவ்வித கொள்கையால் பிள்ளைகள் பூர்வஜென்மத்திலிருந்து கொண்டுவந்த முக்கிய திறமைகளையும் பரிபக்குவங்களையும் கவனிக் காதபடி, குழந்தையை தாங்கள் நினைக்கும்வண்ணம் ஆகும்படி பல வந்தப்படுத்தும் மனுஷ்யதனமில்லாத வகையில் கொண்டுபோய் விடுகின்றது. இது வெகு நுண்ணியமான அனபுறுத்தலுக்கு கொண்டு போகின்றது.

"அநேக உபாத்தியாயர்கள் வழக்கமாய்ச் செய்துவருகிறார்கள். இவர்களெல்லோரும் தங் கள் மிருகத்தன்மையை வழக்கம் என்று சாக்கு சொல்லுகிறார்கள். ஆனால் அநேகர் செய்யும் வழக்கத்தைக்கொண்டு ஒரு குற்றமானது குற்ற மில்லாததாக போகாது."

C. W. L.:—குழந்தைகளை அடிப்பது அநேகருடைய வழக்கமா யிருக்கிறது. ஆனால் வழக்கம் என்பது அடிப்பதற்கு ஓர்காரணமல்ல, என்றாலும் அந்த வழக்கம் உலகமுழுவதிலுமில்லை. இந்த விஷயத் தில் நாகரீகமடைந்த சிலதேசங்கள் இருக்கின்றனவென்று சொல்ல எனக்கு சந்தோஷம். 'ஜப்பான்' தேசம் ஒன்றெனறு நம்புகிறேன். 'இட்டலி' மற்றொன்றென்று என்னுடைய சொந்த அனுபோகத் தில் தெரியும். இட்டலியில் ஓர நகரத்தில் நான் சிலகாலம் வசித் திருந்தேன், நான் குடியிருந்தவீடு விஸ்தீரணமான பெரிய பள்ளிக் கூடத்திற்கு அடுத்திருந்தது; அவ்விடம் நடப்பதெல்லாம் பார்க்க முடிந்தது. அங்கே உபாத்தியாயர்களுக்கும், பிள்ளைகளுக்கும் இருந்த சம்பந்தத்தை வெகு கவனத்தோடு பார்த்துக்கொண்டிருந் தேன். அத்தேசத்தார்களுக்கிருக்கும் முன்கோப தன்மையும் தடை யில்லாத சுதந்திரத்திற்கும் இதை யோசிப்போமானால் நாம் பிள்ளை களை அடக்கி வைப்பதைப்போல அவாகள் வைக்கவில்லை. பிள்ளை களெல்லாரும் ஒருங்கே நின்று பாடம்படித்து கொண்டிருக்கும் சமயத்தில் ஒரு பிள்ளை திடீரென்று உபாத்தியாயரிடம் ஓடி அவர் கையைபிடித்து கொஞ்சிக்கொண்டே ஏதோ ஒன்றை கேட்

பான். உபாத்தியாயரும் சிரிப்புடன், அவன் தலையைத் தடவிக் கொடுத்து, அவன் கேட்டதை கொடுத்தோ அல்லது ஏதோ ஒன்றைச் சொல்லுவார். இவர்கள் எல்லோரும் மெத்த அன்னியோன்னிய சிநேகிதராய் இருந்தார்கள். இந்தப்பிள்ளைகள் உபாத்தியாயரை தெருவில் எப்போதாவது சந்தித்தபோது அவரிடத்திற்கு குதித்து குடுகுடுவென்று ஓடி அவர்கையைப் பிடித்து இழுத்துக்கொஞ்சுவார்கள். இந்தப்படி பள்ளிக்கூடத்திலில்லாத சமயத்திலும் இவர்கள் மெத்த சிநேகிதராய் இருந்தாரகள். இது ஒரு நல்லமாதிரியாய் இருந்தது. ஏனெனில் பிள்ளைகளால் பிரியப்படப்பட்ட ஒருவன் எப்போதும் நல்லவனுகவே இருப்பான். குழந்தைகள் சுபாவமாய் அறிந்து கொள்வதில் தவறுகிறதில்லை. அநேகமான இங்கிலீஷ் பள்ளிக்கூடத்திலிருக்கும் அநேககொடுமைகள் இட்டலியில் உண்டாகாது. ஏனெனில் இவர்களுடைய நடவடிக்கை வேறு. அந்த தேசத்தில் இன்னொருவன்பேரில் கையை வைப்பது மனனிக்கக்கூடாத பாவம் என்று நினைக்கிறார்கள். இதனுல் கத்திச்சண்டையும், குத்துச் சண்டையும் இவைபோல அநேகம் உண்டாகின்றன. ஆகையால் குழந்தைகள் முற்றிலும் காப்பாற்றப்பட்டு வருகிறார்கள்.

தண்டிப்பது வெகுநாள் பழக்கமாய் இருக்கிறது. ஆனுல் அது துன்புறுத்தலிலிருந்தும், பிரயோஜனமில்லாததிலிருந்தும் விடுபடவில்லை. முதலில் தண்டிப்பது நமது வேலையல்ல; கர்ம நியதி இவை எல்லாம் பார்த்துக்கொள்ளும். நாம் அடிக்கடி பிழைகளைச் செய்கிறபடி அது செய்யாது; இராஜரீக சட்டப்படி பயங்கரமான அனியாயங்கள் மென்மேலும் செய்துவருகின்றன. ஒன்று மறியாதவாகள் பேரில் கடுந்தண்டனையை விதித்துவருகிறது. குற்றவாளியானவன் மற்றவர்களுக்குத் துன்பம் செய்ததைக்காட்டிலும் தனக்கே அதிக துன்பஞ்செய்து கொள்ளுகிறுன். பழிக்குப்பழி வாங்குவதை விட்டு இயற்கையின் வழியே விடுவது நல்லது.

இதைத்தவிர, குற்றவாளி இனிமேல் குற்றஞ் செய்யாதிருக்கும்படியும், மற்றவர்களுக்கும் பயமிருக்கும்படியாயும் தண்டனை விதிப்பதுண்டு. குழந்தைகளை அடிப்பது சட்டப்படி குற்றவாளியை தண்டிப்பதுபோல் தானிருக்கின்றது. இவைகளில் பதிலுக்குப் பதில் என்கிற காரமிருக்கின்றது. இவைகளில் "நீ இன்

னின்னவைகளைச் செய்தால் நான் உன்னை மெத்த சங்கடமான வகையில வைப்பேன்'' என்று சொல்லுவதாக இருக்கின்றது. அநேகதரம் உபாத்தியாயர் கோபித்துக் கொள்ளுகிறார். அவர் கொடுக்கும் தண்டனைக்கு காரணம், அவர் கொண்ட கோபமே தவிர, குழந்தைக்கு மெத்த நல்லதென்று யோசித்து செய்யும் நியாயமானவகையிலில்லை. ஜனங்கள் குற்றஞ்செய்வதை தடுப்பதற்காக சட்டத்தினபடி தண்டனை ஏற்படுத்தியிருக்கிறது. ஆனால் அது அவ்விதம் தடுக்கிறதில்லை. நூறுவருஷங்களுக்கு முன் இங்கிலீஷ் துரைத்தனத்தார் சட்டப்படி கொடுத்த தண்டனைவெகு கொடூரமாயிருந்தது. உதாரணமாக ஒருவன முக்கால் ரூபாய் பொருும்படியான ஏதோ ஒன்றை திருடினுனல், அவனுக்கு மரணதண்டனை கொடுப்பதுண்டு. New Gate. சிறைச்சாலைக்குள் போகும் கதவண்டையிலும் கேட்டிலும் பலானபேர்வழியை இரண்டு மூனறு ஷிலிங் பொரும் படியான கை உறையை (Gloves) திருடினதற்காக தூக்குபோடப் பட்டது என்று சுவற்றில் பதிந்திருப்பதை பார்த்தஞாபகமிருக்கின்றது. மற்ற இடங்களிலும்இதேமாதிரிதான் இருக்கின்றது. அதாவது அப்பேர்கொத்த கடுந்தண்டனையை விதித்தபோது குற்றங்கள் இப்போதைவிட அதிகமாயிருந்தன. தண்டனை கொடுப்பதற்கும் குற்றம் நடப்பதற்கும் ஒன்றுக்கொனறு தகவலில்லாமல் இருக்கின்றது. இது முக்கியமாய் பொதுஜன கல்வியையும் நாகரீகத்தையும் பொறுத்தது.

பள்ளிக்கூட முறைப்படியாவது, அல்லது சட்டப்படியாவது, தண்டனை விதிப்பது சாதாரணமாய் குற்றஞ் செய்ததற்கு சம்மந்தமில்லாதிருக்கின்றது. ஒருவன் ஏதோ ஒன்றைத்திருடுகிறுன், பிறகு அவன் கொஞ்சகாலம் சிறையிலடைப்படுகிறுன். இவ்விரண்டிற்கும் உள்ள சம்பந்தமென்ன? திருடின பொருளின் விலையை இழந்தவனுக்கு கொடுக்க ஏதோவொருவேலையை செய்வித்தால் நியாயமாயிருக்கும். தண்டனை குற்றத்திற்கு ஒருவிதமாய் பொருந்தி இருக்க வேண்டியது. ஏதோ வொன்றை திருடினதற்காக ஒருவனை வெறுமையாய் அடைத்து வைப்பது ஒருவித பிராந்தி மயக்கம். ஒரு பாடத்தைப் படிக்காத பிள்ளையை அடிப்பதும் அப்படித்தான். இவ்விரண்டிற்கும் (படியாததற்கும் அடிப்பதற்கும்) உள்ள பொருத்தம் யாது? ''நீ பாடத்தை படிக்கவில்லை; உன்னுடைய வகுப்பில் மற்ற

பிள்ளைகளுக்குப் பிந்தி கடைசியாக இருப்பாய், ஆகையால் நீ விளை யாடும் காலத்தில் இங்கிருந்து பாடத்தை வாசிக்கவேண்டியது" என்று சொன்னால் ஏதோ கொஞ்சம் விவேகமிருக்கும். இம்மாதிரி யான விஷயங்களில் புத்தி என்பதேயில்லை. இது அடியோடே பிழை, வேணுமென்று வருத்தம் கொடுக்கும் கருத்து எப்போதும் பிழை. அதை வழக்கமானதென்று சொல்லுவதால் சரியாகாது. அநேகவித பேர்பெற்ற தகாத மூடவிஷயங்கள் வழக்கங்களாயிருந் தன. உதாரணமாக சைனாவில் காலைக்கட்டி குறுக்குவது ஒன்று. காலா காலங்களில் நமக்கிருந்த சில பழக்கங்கள் அப்படித்தானிருந்தன. ஒரு விஷயம் அது நூற்றாண்டு கணக்காய் வழக்கப்பட்டிருந்த போதிலும் அது நல்லது, அவசியமானது, என்கிற கருத்து வைக்கப் படாது. அநேகமாய் அவைகள் அப்படியில்லை.

வழக்கமாய் குற்றஞ் செய்பவருக்கு முன்காலத்தில் 'பீரு' தேசத்தில் சொன்னதுபோல—"நாம் நாகரீகமுள்ள ஜாதியார் வெகு பிரையாசையுடன இராஜரீகத்தை ஒரு விதமாய் ஒழுங்கு படுத்தி னோம். அதனுடைய சட்டப்படி நடக்கிறவர்களுக்குத்தான் ஏற்பட் டது. நீ இந்த சட்டங்களுக்கு உட்பட்டு நடக்க மனமில்லா விட் டால் வேறுதேசம்போய் மற்றயாருடனாவது குடியிருக்கலாம்" என்று ஒருதேசத்தார் நியாயத்துடன் சொல்லலாம். அங்கே அவர்களை ஊரைவிட்டு போகச் செய்வதுதான தண்டனை. காட்டு ஜனங்களு டன் போயிருக்க ஓட்டிவிடுவது மெத்த வெட்கக்கேடு; இன்னும் தேக அசௌக்கியம். அபாயகரமானவனை அடக்கிவைக்க நாட்டா ருக்கு உரிமையிருக்கின்றது. 'மலேயா' தேசத்தான் ஒருவன வெறி கொண்டு கொலை செய்ய அலையும்போது அவனைக்கொல்லவேண்டி நேர்ந்தாலும் சரி, அவனை தடுக்கவேண்டியதுதான், ஆனால் தவிர்க்க வேண்டிய அவசரமான அபாய விஷயங்களில்லாமல் அநாவசியமாய் கொல்ல நமக்கு நியாயமில்லை. துன்புறுத்துவதற்கு எவனுக்கும் ஒரு போதும் உரிமைகிடையாது. இது கண்டிப்பான நிச்சயம். பதிலுக்கு பதில் காரத்தோடு மரணதண்டனையை விதிப்பது இடக்காடக்க லாக அபிமான கோபத்தால் கொலையாளிகளைப்போல் நாமும் மிரு கத்தைப்போலானோம் என்று அருத்தம். அந்த மனிதனால் இனி கஷ்டம் வராதபடி தடுப்பது என்று கருத்திருக்குமானால், அதுவும்

தவறான கருத்து.ஏனெனில் இராஜாங்கம் ஒவ்வொரு நகரப்பிரபுவை பாதுகார்க்க (கடமை) உரிமை இருப்பது, சாதாரணமானவனுக்காக மாத்திரமல்லாமல், மற்று வெளிதேகத்தோடு கூட உள்ளிருக்கும் உண்மைமனிதனை ஆன்மாவைக்கூடகவனிக்கவேண்டியிருக்கின்றது. இந்தக்கஷ்டத்திலிருந்துவிடுபட அவனைக்கொல்லுவது உண்மையில் கொலை செய்வது. இது நன்மை யாதும் செய்கிறதில்லை. ஏனெனில் இது மெத்த கொடிய பாப தாபத்தை கிளரி விடுகின்றது. அவன இனிமேல் நம்முடன் சுகமில்லாத காம சம்மந்தத்தோடு வந்து பிறப்பான. உண்மையில் குற்றஞ்செய்பவன் வாஸ்தவத்தில் சௌக்கியமில்லா நோய் பிடித்தவன் ; சுபாவமாகவே குற்றவாளியாயிருப்பவன் வெகு அபூர்வம். ஏனெனில் அநேக குற்றவாளிகள் துரதிர்ஷ்டத்திற்கு ஏற்றபடி காலதேசவர்த்தமானம் எனும் சேர்க்கையால் பிடிபட்டவர்கள். இவனுக்கு வேண்டியது யாதெனில், இவனுடைய துஷ்டவாசனை பழக்கங்களைத் தூண்டும் தண்டனை எனும் மிருகத்தன்மையானகொடுமையைச்செய்வதைவிட்டு,அவனை நகரப்பிரபுவின் நிலைக்கு வரும்படியாய் அவனுடைய தேகத்தையும், மனதையும், விருத்திக்குக் கொண்டுவரும்படியான நல்ல நடத்தைக்கு அவனைக்கொண்டுவர வேண்டும்.இராஜாங்கத்தில் நோயாளிகளுக்காகவும், பயித்தியக்காரர்களுக்காகவும் கவலை எடுத்து ஏற்பாடுகள் செய்திருக்கின்றன. அதேவிதம் குற்றவாளிகளையும் கவனிக்க வேண்டியது. இவர்களுக்கு மனதிலோ அல்லது தாபஉணர்ச்சியிலோ சாதாரணமாய் குறை இருக்கினறது. அப்படிச் செய்வது மாஸ்டர்களின் நிலையின்படி அன்பின் நோக்கமாயிருக்கும்.

இந்தக் கருத்துகள் உண்மையானவை, மிகவும் தெளிவானவை, அனுபவத்திற்கு வரக்கூடியவை. குற்றவாளிகளுக்கும், குழந்தைகளுக்கும் கல்வி கற்றுக்கொடுத்து உதவவேண்டுமே தவிர, பயத்தால் விரட்டக்கூடாது. பிள்ளைகளை மிரட்டும் பழக்கமானது மெத்த கொடுமையை விளைவிக்கின்றது. இது அவர்களுடைய வாழ்வில் பயத்தையும், வருத்தத்தையும், கபடத்தையும் ஏற்படுத்துகிறது. மேலும் அது சாதாரணமாய் அவர்களை நல்லொழுக்கத்திற்கு வராதபடி, நல்ல நகரபிரபுவாகாதபடி கெடுக்கின்றது. இது சர்ச்சு கர்த்தாக்கள் சொல்லிய ஒருவகையான நரகம். ஆனால் நரகம் இவ்விட

மிருக்குமானால் ஒருவனபோதுமான அளவு தந்திரசாலியா யிருக்கும் பக்ஷத்தில் அதிலிருந்து தப்பித்துக்கொள்ளக்கூடும். மற்றவர்களை பயமுறுத்தி நல்லவர்களாக்கலாம என்று ஜனங்கள் நினைத்தார்கள், அக்கருத்தை இன்னும் வைத்திருப்பது விபரீதம்.தற்கால நாவல்கதை எழுதும் நூலாசிரியர் ஒருவர், சில காலத்திற்கு முன எனக்கு எழுதினார்.இவர் கடலோரத்தில் ஒருநாள் ஒரு வாலிபனைக்கண்டுஅவனுக்கு தியாசொபி கருத்துகளை கொடுத்தபோது இந்த நரககருத்தை விளக்கிக் காட்டி, இதை மதியீனக் கொள்கையென்று சொனனாராம். சிலநாள் கழிந்து, இவ்வாலிபனுடைய தாயார் இவரண்டை வெகு கோபத்துடன வந்து,"இந்தவொருவழியில் தான் எனனுடையபிள்ளையை சரியான வழியில் வைத்திருநதேன. அதாவது நரகபயத்தைக் காட்டி அவனை ஒவ்வொரு நாளும் நாள்முழுவதும் சீர்திருத்தி வந்தேன்.நீர் இப்போது நரகமில்லையென்று நமபச்செய்தீர்;நானஎன்ன செய்யட்டும்!" என்று கேட்டாளாம்.ஒருக்கால்அவளுக்குக் கொஞ்சம் அதிகமாய் தெரிந்திருக்குமானால் அவனுக்குமுதலிலிருந்தே விளக்கி இந்த சுகமில்லாதவகையில் பயமுறுத்தல் அவசியமிராது.

தடையிலா சுதந்திரம், அன்பு, இவவிரண்டும் ஜீவான்மாவை விருத்திக்குக் கொண்டுவரும் முக்கியமான கருவிகள். சொல்லுகிறபடி செய்கினறவர்களுக்கு சுதந்திரம் கொடுக்க மிகவும் பிரியப்படுகிறவர்கள் அநேகர் இருக்கின்றார்கள். ஆனால் உண்மையான சுதந்திரம் எனறால் தன்னுடைய வழியினபடி தடையில்லாது செய்வது என்று அருத்தம். சாதாரணத்தில் தலையிடுதல் மெத்த இருக்கின்றது. .வெளியிருந்து இப்படிச் செய், அப்படிச் செய்யெனறு மிதமிஞ்சி தலையிடுவது, தனனைக் காப்பாற்றிக்கொள்ளவாவது மற்றவருக்கு உதவி கொடுக்கவாவது இருக்கும் சுயமான வாழ்க்கையை குறுக்கிவிடுகின்றது. இதைப் பள்ளிக்கூடத்திலிருக்கும் பிள்ளைகளிடத்தில் பார்க்கலாம். இங்கே வளர்ச்சிக்கு வேண்டிய சந்தர்ப்பம் அவனுக்கிருக்கும் சுதந்திரத்தால் கொடுப்பதைவிட்டு அநாவசியமான அதிகார சட்டங்களை ஏற்படுத்தியிருக்கின்றார்கள். ஆங்கில இராஜாங்கத்திற்கும் இதர தேச இராஜாங்கத்திற்குமுள்ள பெருத்த வித்தியாசமிதுதான. ஆங்கில இராஜாங்கம் ஜனங்களை மொத்தத்தில் கூடியவரையில் தங்களிஷ்டப்படி செய்யவிட எத்தனிக்கிறது.

சில தேசங்களில் கஷ்டங்களையும் அபாயங்களையும் விலக்கவும் ஜனங்களுக்கு ஒத்தாசை கொடுக்கவும் அநேகவித நிர்ப்பந்தங்களை ஏற்படுத்திவருகிறது. இதர இராஜாங்க அதிகாரி ஒருவன் ஒரு காலத்தில் என்னிடத்தில் வந்து "நல்லது ஐயா, உண்மையில் நல்ல மாதிரி நடத்தும் தேசத்தில் எல்லாவற்றையும் தடுக்கப்பட்டிருக்கும்" என்று சொன்னது ஞாபகமிருக்கிறது. எனது தேசயாத்திரையில் சட்டங்களை விளக்கிக்காட்டும் வகைகள் விநோதமாய் விதவிதமாயிருப்பதைப் பார்த்தேன். ஒருதேசத்தில் கண்டிப்பான விலக்காயிருக்கும். இன்னொன்றில் ஒரு வேண்டுகோளாயிருக்கும். சிலர் மிலிடரி சட்டமுறையை உபயோகப்படுத்துகிறார்கள். இது சிறு குழந்தைகளாயிருக்கும் ஜீவானமாக்களுக்கு உபயோகமாயிருக்கும். ஆனால் மற்றதேசங்களில் மனிதர்களுடைய அறிவையும் நல்லதனத்தையும் வேண்டுகிறார்கள். உதாரணமாக சில வழக்கங்களை தடுக்க பலகையில் எழுதியிருந்தது எனக்குத்தெரியும், இதில் இன்னின்னதை நாகரீகமுள்ளவர்கள் செய்யார்கள்; மற்றவர்கள் செய்யக் கூடாது." என்று எழுதியிருந்தது. இது அமரிக்காவில் இருந்தது; இது புதிய தேசங்களில் ஒன்று. இதை சரிவர எழுதியிருக்கின்றது.

தேசத்தாருடைய நன்மைக்காக பலவந்தப்படுத்த வேண்டியதாய் சில சந்தர்ப்பங்கள் வருகின்றன. ஆனால் கூடியவரையில் ஜனங்களை ஒரு போக்கில் போகச்செய்து ஓட்டுவதைவிட, அவர்களுடைய இஷ்டப்படி போகவிடுவது நல்லது. கல்வி கற்றுக்கொடுக்கும் விஷயத்தைப்பற்றி தெரிந்திருக்கின்றது வெகு கொஞ்சம் என்று நான நினைக்கிறேன. ஒவ்வொன்றையும் சட்டமாக ஏற்படுத்திருக்கின்றது. எல்லாவேளையிலும் இதைச்செய் அதைச்செய்யாதே என்றிருக்கிறது. பிள்ளைகளுக்கு கற்றுக்கொடுக்கும்போதும் பிள்ளைகளுடைய பிரியத்தை கவனிக்கிறதில்லை, ஆனால் அவர்களுக்கு "இது ஒருபாடம் அதை வரப்படுத்தவேண்டும்" என்கிறார்கள்.

"மாடம் மான்டிஸ்ஸரி" ஏற்படுத்திய மாதிரி கல்வி கற்பிக்கும் புதிய வழிகளில் பாடத்தை உருசிகரமாகச் செய்வதால் சிறுகுழந்தையினுடைய மனது புஷ்பங்களைப்போல் மலருகின்றது. ஒரு குழந்தைக்கு உபயோகப்படும்படியாகச்சொல்லிகொடுக்கும் வழி இது

தான். அதாவது ஆரம்பத்தில் குழந்தையை உன்னை நேசிக்கச் செய்யவேண்டும். பிறகு நல்லதனமாய் வசப்படுத்த கொஞ்சம் பிரயத்தினப்படவேண்டும். ஏனெனில் அது தப்பிதத்தை செய்தால் அது உனக்கு வருத்தத்தையும் விசனத்தையும் கொடுக்கும். இப்படி செய்வது அறமுறைப்படியிருக்கிறது. ஏனெனில் உனக்கு உண்மையில் வருத்தம் தெரிகின்றது, நீ அன்பின் வகையில் சரிப்படுத்த துவக்கினுயானுல், நீ பிள்ளையை பிரியப்படுத்தி அதை எதையும் செய்விக்கலாம். குழந்தைகளுக்கு கற்பிக்கிறவன் மெத்த கெட்டிக்காரனுயிருக்கவேண்டும்; இதயத்தில் அன்பு நிறைந்திருக்க வேண்டும், சாந்தம் கடல்போல் படர்ந்திருக்கவேண்டும். குழந்தைகள் செய்யும் தப்பிதங்களை தெரிந்துகொள்ளவேண்டும்; விஷயங்களைச் சரியானபடிச் செய்யும்படி காட்டிக்கொடுக்க சாமர்த்தியமிருக்க வேண்டும். ஆனுல் அவர்களிஷ்டப்படி செய்யும்படி விடவேண்டும்; நீ ஆக்கிரமத்துடனும் முரட்டுத்தனமுமாக ஆரம்பித்தாயானுல் முரட்டுத் தனத்தைத் தவிர மற்றதுயாதும் வராது. பிறகு பிரயோஜனமுள்ள யாதும் செய்விக்கமுடியாது.

சாதாரண வாழ்விலும் இப்படித்தான். ஒரு வர்த்தகன மற்றவனிடம் பிரயோஜனத்தை பெறவேண்டுமானுல் அவன் அவனேடு வெகு உற்சாகமாய் பேசுகிறுன். தான் எடுத்திருக்கும் வேலை இருவருக்கும் பிரயோஜனமாவதைப் பற்றி அவனுக்குத் தெரியும்படி சொல்லுகிறுன. மற்றவனை விரட்டி நடத்தும்படி எத்தனிக்க வேண்டியதென்று அவனுக்குப் படாது. அப்படிச் செய்தால் எதிர்க்கச்செய்து சிநேகித சம்மந்தத்தை கெடுத்துவிடும். சிறுவர்களும் சிறுமிகளும் மானிடவர்க்கத்தை சார்ந்தவர்கள். அவர்களிடத்தில் விரோதமாய் ஆரம்பிப்பதைவிட அவர்களை வகையுடன் உன்பக்கமாய் கொண்டுவந்தால் அவர்கள் மெத்த கற்றுவருவார்கள். இவையெல்லாம் கல்வி கற்பிக்கின்றவர்களுடைய அனுபவம். உபாத்தியாயர் எவ்வளவு கெட்டிக்காரராக விருந்தபோதிலும், எவ்வளவு படித்தவராக விருந்தபோதிலும் அவர் குழந்தைகளைப் பிரியப்படுத்தி, அவர்களும் இவரை நேசிக்கச் செய்வித்தாலொழிய, அவர் அந்தக் கண்ணியமான வேலைக்குத் தகுந்தவரல்ல. இதுமுக்கியம், முந்தியே யிருக்கவேண்டியஇலக்ஷணம். மாஸ்டர்கற்பித்துக்கொடுப்பதுஇவ்விதந்தான்; பல்வஙீ

தத்தாலல்ல, அதிகாரத்தாலுமல்ல, ஆனல் சரியான வழியை காண்பித்து அவர்களைப்போல செய்ய தைரியங் கொடுத்து கற்றுக்கொடுக்கிறார்கள்.

"ஊழ்வினையானது வழக்கமென்பதை கவனியாது. இம்சையால் விளையும் கர்மம் எல்லாவற்றிலும் மிக கொடூரமானது. குறைந்த பக்ஷம் இந்தியா தேசத்தில் இப்பேர்ப்பட்ட வழக்கங்களைக் கையாட நியாயமில்லை. ஏனெனில அஹிம்சா தருமப்படி எல்லோரும் நடக்கவேண்டியதென்று நன்றாய்த் தெரிந்த விஷயம்."

C. W. L.:—பள்ளிக்கூட உபாத்தியாயராக வேலையை ஏற்றுக்கொள்பவன் பிழைப்பதற்காக ஒருவன் மற்றெந்த வேலையில் போவதைப்போல எடுக்கிறான். எனறாலும் கர்மத்திற்கு அதிகார நிலையிலுள்ள தேவர்கள் அதைஅப்படி நினைக்கினறதில்லை. அவர்கள் ஒருவனுக்குச் சிறந்த சந்தர்ப்பங்கொடுப்பதற்காக அவனை அந்த நிலையில் வைக்கிறார்கள். அவன் அதை ஏற்றுக்கொண்டு தன்னுடைய வேலையை கவனத்தோடும் சாமர்த்தியத்துடனும் அன்போடும் செய்வானானல், அது மறுபிறப்பில் வெகுவாய் மதவிஷயத்திற்கு ஓர் உபாத்தியாயராக அவனைக் கொண்டுபோய்விடும். அதிலிருந்து ஞானியாகவும், மானிடவர்க்கத்திற்கு இரக்ஷகராகவும் போகும் வழி அவனுக்குத் திறக்கும். உபாத்தியாயராயிருக்கும் நிலை கர்மதேவர்களின நோக்கத்தின்படி வாழ்விற்குரிய பெருத்த வெகுமதி, வீடு பெறும்படியான வழிக்கு நேராய் கொண்டுபோகக்கூடியது.

ஒவ்வொரு குழந்தையும் ஒரு ஜீவான்மாவென்று உபாத்தியாயர் தெரிந்திருக்கவேண்டும். அதனுடைய இலக்ஷணங்களை விருத்திக்குக் கொண்டுவர எல்லாவித உதவியைக் கொடுக்கவேண்டும். உபாத்தியாயருக்கு மெத்த சந்தர்ப்பமிருக்கின்றது. ஏனெனில் குழந்தைகள் அவருடைய கண்பார்வையில் கற்றுக்கொள்ளும் பொருட்டு இருக்கின்றனர். அவர் தன்னிஷ்டப்படி அவர்களை தேர்த்தமுடியும். இந்தசெல்வாக்கினுடைய வன்மையைக் குறித்து ஒரு பேர்பெற்ற 'ஜேசுயிட்'பாதிரி சொன்னதாவது "என்னிடத்

தில்பதினேருவயது வரையில், ஒரு குழந்தையிருக்கட்டும். அதற்கு அப்புறம் அவனிஷ்டப்படி எங்கேயாவது போகலாம்" என்று சொன்னார். உபாத்தியாயருடைய மனோசக்தி அவர் சொல்லிக் கொடுக்கும்போது சீர்திருத்துவதுபோலவே அவரிருக்கும் நிலையாலும் அவர் செய்யும் செய்கையாலும் பிள்ளைகள் சீரபட்டு வருகின்றனர். உபாத்தியாயர், இருக்கவேண்டிய நிலையிலிருந்தால், அன்பின் வளமையை சதா பலமாயும் வேகமாயும் தாக்கிக்கொண்டேயிருப்பார். அவருடைய நிலை மெத்த உத்தரவாதமான நிலை. ஏனெனில் தன் கைகீழிருக்கும் சிறுவர்களுடைய அன்பையும் நல்லொழுக்கத்தையும் எழுப்புவதைவிட்டு, பயத்தையும் கபடத்தையும் கிண்டிவிட்டால் அவர் அந்த ஜீவான்மாக்களுடைய விருத்தியை தடுத்து நிச்சயமாகவே மெத்த கெடுதியை யுண்டாக்குகின்றார்.

அப்பேர்ப்பட்ட சந்தர்ப்பங்களை வீணக்கினால் அவர் மெத்த கடுமையான கீழ்ப்படிக்குப் போவார். அப்பேர்ப்பட்ட சந்தர்ப்பங்களிலிருப்பவர்கள் தூனபஞ்செய்தால், பயங்கரமான கர்ம கஷ்டம் தருகிறது. சில சமயங்களில் அதேவிதமாய் துன்பப்பட வேண்டி வந்ததை நான் பார்த்திருக்கிறேன். ஆனால் மெத்த சாதாரணமாய் அதனுடைய பிரதிபலனாக பயித்தியம் பிடிக்கின்றது. அதற்கு குறைவானதாயிருந்தால் அநேக தேகநோய்கள் Hysteria, Neurasthenia எனகிற வியாதிகள் வருகின்றன. அநேகரை, அவர்களிருக்கும் நிலையைவிட்டு வியக்கத்தக்க தாழ்ந்தபடியில் கொண்டு போய்விட்டது. நல்ல ஸ்திதியிலிருந்தவன் மெத்த துன்பஞ்செய்த கொடுமைக்காக மெத்த தாழ்ந்த பாபிகளிடையில் தள்ளிவிடப்படுவதைக் காண்பான். உதாரணமாக குழந்தைகளைக் கொடூரமாய் நடத்தினதற்காக பிராமணர்கள் பறையர்களாகப் பிறந்ததை பார்த்திருக்கின்றேன். ஆகையால் கர்மதேவர்கள் பிரபஞ்ச நியதியை நிரூபித்துக்கொண்டே இவ்விஷயங்களைப்பற்றி மாஸ்டர்கள் எடுக்கும் நோக்கத்தை எடுக்கிறார்கள்.

பள்ளிக்கூட உபாத்தியாயர்களுக்கு சந்தர்ப்பங் கொடுப்பது போலவே, ஓர் யந்திரசாலை அல்லது எதோவோர் பெருத்த வேலைக்கு மானேஜராயிருக்கும் ஒருவனுக்கும் கொடுத்துவருகிறது. அப்பேர்ப்பட்ட அந்தஸ்தை ஒருவன் விரும்பத்தக்கதென்று நினைக்

கிருன். ஏனெனில் தனக்கு நல்ல சம்பளம் கிடைப்பதற்கும் அல்லது மெத்த பணம் சம்பாத்தியத்திற்கும், அதிகாரத்திற்கும், சந்தர்ப்பம் கிடைக்கின்றது. ஆனல் கர்மதேவர்கள் இங்கேயும் இவன் கைக்கீழிருக்கும் எல்லோருக்கும் உதவும்படி இவனுக்கு ஓர் சந்தர்ப்ப நிலையை கொடுத்ததாக நினைக்கின்ருர்கள். ஒரு எஜமானன் தனது வேலையாட்களை பெரும்பாலும் வெளிப்படையாக ஓர்வித வெறுப்புடன் பார்க்கிருன். இவனிடமிருந்து கூடியஅளவு பணம் இழுக்க வேண்டுமென்றும், அநேக வழிகளில் இவனுல் பிரயோஜனப்பட வேண்டுமென்றும், இவர்களிருப்பதாக நினைக்கிருன. அவர்களோ சாதாரணமாய் இவன், அவர்களை நசுக்கிவிடவேண்டுமென்றும்,அவர்களிடத்தில் கூடுமான அளவு வேலை வாங்கவேண்டுமென்றும், அதற்குப் பதில் கூடியமட்டில் குறைவாய்க்கொடுக்க வேண்டுமென்றும், கருதுவதாக நினைக்கிருர்கள். அதிர்ஷ்டத்திற்கு தக்கவாறு சில சந்தர்ப்பங்களில் இருபக்கத்தாரும் நினைப்பது வாஸ்தவமாய் தானிருக்கின்றது.இந்த நோக்கத்துடனிருக்கும் எஜமானர்களிருக்கின்ருர்கள். தங்களுடைய எஜமானர்களின்மேல் முந்தி சொல்லியபடி நினைத்திருக்கும் வேலையாட்களுமிருக்கின்ருர்கள். ஆனல் தெரிந்தவன் எவனும் கொஞ்சமாவது அந்த நோக்கத்துடன் பார்க்கமாட்டான். அந்த அந்தஸ்தில் அநேகருக்கு உதவிகொடுக்கும்படியான சந்தர்ப்பம் அவனுக்கு கொடுப்பதாக மாத்திரம் கர்மதேவர் நினைக்கிருர்கள். கர்மதேவர்கள் நாம் நோக்குகிறபடி விஷயங்களை நோக்குவதில்லை. உதாரணமாக ஜனங்கள் சாதாரணமாய் மரணத்தை வெகு பயங்கரமானதாகவும் கனத்த தண்டனையெனறும் நினைக்கின்ருர்கள். ஆனல் இதை யொரு வெகுமதியாக கொடுக்கின்றனா. மேலான சீர்பெறக்கூடிய நிலைக்குப்போக விடை கொடுக்கப்படுகிறது.

> "வயல்,காடுகளில்போய் பிராணிகளைவேணு
> மென்று கொன்றுஅதை வேட்டையென்றுசொல்
> லுகிறவருடைய கதிஅதோகதிதான்."

C. W. L.:—இங்கிலாந்திலே உள்நாட்டில் "பனச்" என்கிற பத்திரிகையில் "இது ஓர் நல்ல நாள் நாம் வெளியேபோய் ஏதாவதொன்றைக் கொல்லுவோம்" என்று ஓர் எடுப்பாக சொல்லும் வாக்

கியம் தப்பிதமாகவேயில்லை. நான் இங்கிலாந்தில் ஒரு நாட்டுப் புறத்து சர்ச்சில் பாதிரியாயிருந்தபோது நாயோடும் துப்பாக்கியுட னும் வேட்டையாடுபவருடனும், மீன் பிடிப்பவர்களுடனும், அன்னி யோன்னியமாயிருந்தேன. அவர்கள் இவைகளையெல்லாம் தினசரி வேலையாகச் செய்தார்கள். இது அவர்களுடைய முக்கிய சம்பா ஷணையாக விருந்தது; என்றாலும் இவர்கள் தங்களுடைய ஜனங்க ளிடத்தில் மெத்த சாந்தமாயும், அன்பாயும் இருந்தார்கள். இவர் கள் புகழத்தக்க தகப்பனார்களாயும், கணவர்களாயும், விட்டுக்கொடுக் கும் நியாயஸ்தர்களாகவும், பிரேமையுள்ள சிநேகிதர்களாகவும இருந்தார்கள். ஆனால் இந்த ஒரு விஷயத்தை தப்பிதமாக நினைக் கவே இல்லை. மானையும் இன்னும் பக்ஷிகளையும் கண்மூடி சுடும் இவர்களில் ஒருவன தனது நோய்கண்ட நாயண்டை இரவெல்லாம் உட்கார்ந்து தன்னுடைய இளக்கமான இதயத்தன்மையைக் காட்டு வான். இவன் மிருகங்களிடத்தில் கூட கொஞ்சம் சகோதர தனத்தை உணர்ந்திருந்தான. துன்பறுத்தும் செய்கை எல்லாம் ஒருவித மனக்குருடால் வருகின்றது. அவர்களுக்கு அறிவில் குறைவில்லை. ஆனால் இவ்விஷயத்தைப்பற்றி அவர்கள் நினைக்கவே யில்லை. இந்த ஜந்துக்களெல்லாம் இவர்களுடைய உபயோகத்திற் காகவும் அவைகளைக் கொல்லும் சாமர்த்தியத்தால் வரும் சந்தோஷத் திற்காகவும் சிருஷ்டிக்கப்பட்டிருக்கின்றன வென்று எண்ணியிருக் கிறார்கள். ஜனங்கள் இதேவித எண்ணமற்ற நினைப்புடன மாமி சம் புசிக்கின்றார்கள். நான் சிறியவனாக இருந்தபோது நானும் சாப்பிட்டேன். அது எனக்கு தப்பிதமென்று அதைப்பற்றி ஒரு புத்தகத்தில் வாசிக்கும் வரையில் தோன்றவில்லை இது தியாசபி சங்கம் ஏற்படும் வெகு நாளைக்குமுன.

அப்பேர்ப்பட்ட வேட்டைவிளையாட்டை ஓர் பயங்கரமான விஷயமென்றும், அதைப் பின்பற்றி போவதால் கடவுளுடைய பிராணிகளை கொலை செய்வதில் உழன்றிருக்கிறோமென்றும், ஒரு தரம் நாம் தெரிந்துகொண்டபோது இதை ஏன் முந்தியே தெரிந்து கொள்ளவில்லை. என்று ஆச்சரியப்படுகின்றோம். ஆயிரக்கணக் கானவர்கள் அதையினனும் தெரிந்துகொள்ளவில்லை. வழக்கம் என் பது அவர்களை மயக்கி மூடிக்கொண்டிருக்கின்றது. செய்யும் பயங்

காமான கெடுதியை அவர்கள் நினைக்கவேயில்லை. உடுக்கும் உடைகளைப்பற்றியும் இது உண்மையாகவிருக்கின்றது. உதாரணமாக சிலவித இரகுகள் இரக்கமில்லாது உயிரை மாய்த்துத்தான் எடுக்க வேண்டியிருக்கிறது. தாய்ப்பக்ஷியை கொலை செய்ததுமல்லாமல் அதனால் பாதுகாக்கப்படும் குஞ்சுகளை பரிதாப நிலையில் விடவேண்டியிருக்கிறது இவ்விதமாய் எடுக்கும் ஆபரணங்களை உடுப்பவர்கள் வாஸ்தவத்தில் குற்றமுடன் அக்கரையற்றிருக்கின்றார்கள். இவர்கள் வேணுமென்று அன்புறுத்துபவர்களல்ல. அப்படிக்கு கொஞ்சமேனுமில்லை. இவர்கள் வெறுமையாக வழக்கத்தினபடி போகின்றவர்கள் என்றாலும் கர்மம்விடாது. ஒருவன் உறங்கிக்கொண்டே ஒரு மலைச் சாரலின ஓரத்தில் போகக்கூடும். இவன போகுமிடம் இவனுக்கு தெரியாதிருக்குமானால் அது இவன விழுவதை நிறுத்தாது.

"இப்பேர்ப்பட்ட இம்சைகளை நீ செய்ய மாட்டாய் என்று எனக்குத் தெரியும்; கடவுளின் பேரில் உனக்கிருக்கும் பக்தியின் பொருட்டுச் சமயம் கிடைத்தபோதெல்லாம் நீ இவைகளைக் கண்டித்து தெளிவாய் எடுத்துச் சொல்லுவாய்."

C. W. L.:—இவ்விடத்தில் "சந்தர்ப்பம் நேரும்போது" என்னும் வார்த்தைகளை கவனிக்கவேண்டியது, நாம் நமது கருத்துகளை மற்றவர்களின்பேரில் நுழைக்கக்கூடாது, ஆகையால் விஷயங்களைப்பற்றிய அபிப்பிராயங்களை கேட்கும்போதுதான் சொல்லவேண்டியது; அல்லது அந்த விஷயம் சாதாரண விவகாரப்போக்கில் வரும் போது சொல்லவேண்டியது. ஒருவனுடைய கருத்துகளை அவைகள் எவ்வளவு நேர்த்தியானவையாக இருந்தபோதிலும், அவைகளை முன் சொல்லி நுழைப்பதால், சாதாரணமாய் நல்லதைவிட்டு கெடுதியையுண்டாக்குகின்றன. இப்படிச்செய்யும் அக்கிரம ஜனங்கள் எப்போதும் கோபத்தை மூட்டுகிறார்கள். தெருவேபோகும் ஒருவன் உன்னைக் கூப்பிட்டு நீ ஏசுநாதனைக் கண்டுகொண்டாயா என்றும், அல்லது உன்னுடைய ஆன்மா ரக்ஷிக்கப்பட்டதாவென்றும் கேட்பவன அவ்வளவு அபிமானம் உள்ளவனாக தென்படுகிறதில்லை. அவன தன் மத விஷயத்தைப்பற்றி சாதுர்யமில்லாததால், அவனுடைய மதமும்

அவ்வளவாகத்தான் இருக்கும் என்று நினைக்க வருகிறது. ஏதோ ஒரு தகுதியான சந்தர்ப்பம் கிடைத்தபோது, ஒருவன் புத்தகம் அல்லது பத்திரிகை ஒன்றை வாசிக்கக் கொடுக்கலாம். அல்லது அவ விஷயத்தைப்பற்றி சாந்தமாய் சம்பாஷிக்கலாம். ஆனால் நீ வேட்டைக்காரர்களிடையில் இருக்க நேருமானல் வேட்டையாடுவது ஒரு கெட்டதாயிருந்தபோதிலும் "இது வொருகெட்ட விஷயம்" என்று எடுத்தவுடனே துவக்குகிறது சரியானவழியல்ல. அதைப்பற்றி என்னைக் கேட்டால் நான் எல்லா பிராணிகளையும் பிரேமையோடு பார்க்கின்றேன். இந்தமிருகங்கள் உண்மையில் நம்முடைய இளைய சகோதரர்கள். எப்படி ஒருமனிதனைப்போய் வேடிக்கையாகக்கொல்ல சுதந்திரமில்லையோ, அப்படியே இவைகளை கொல்லஉரிமையில்லை, என்று மெதுவாய்ச் சொல்லுவேன் அவர்கள் ஆச்சரியப்படுவார்கள். அதற்கு சந்தேகமில்லை; ஒருக்கால் அவர்கள் என்னை ஏளனம் செய்வார்கள். ஆனால் அவர்களை எதிர்த்தால் காட்டுவதுபோல அவ்வளவு விரோதம் காட்டமாட்டார்கள்.

மரக்கறி சாப்பிடும் நாம் மாமிசம் சாப்பிடுவர்களுடன் சேர்ந்து சாப்பிட உட்கார மெத்த அருவருப்படைகிறோம். என்றாலும் பிரயாணஞ் செய்யும்போது அடிக்கடி அது சம்பவிக்கின்றது; அப்படியிருந்தாலும் நாம் நம்முடைய அருவருப்பைக் காட்டுவது சரியல்ல. மற்றவர்களை சாப்பிடாதிருக்கும்படி செய்வதற்கு அதுநல்லவழியல்ல. ஆனால் அவர்கள் நம்முடைய அபிப்பிராயங்களைக் கேட்பார்களானல் அப்போது நம்முடைய கருத்துகளை சாந்தமாயும், சாதாரணமாயும் உறைக்கும் வண்ணம் சொல்லவேண்டும். நாம் இப்படிச் செய்தால் அவன் அதைப்பற்றி நினைக்க ஆரம்பிப்பான். அநேகமாய் அவன் நம்முடைய கருத்தின்படி வருவான்.

"ஆனால் செய்கையிலிருப்பதுபோல வார்த்தையிலும் இம்சை இருக்கின்றது. மற்றவனைப் புண்படுத்த வேண்டுமென்று வார்த்தை யொன்றைச் சொல்கிறவன் இக்குற்றத்திற்கு ஆளாகிறான். இதையும் நீ செய்யமாட்டாய்; என்றாலுஞ்

சில சமயங்களில் யோசிக்காமற் சொல்கிறவார்த்தையொன்று பகைச்சொல்லைப்போலவே மெத்த தீங்கை விளைவிக்கின்றது. ஆனபடியால் தெரியாமற் செய்யும் இம்சையைத் தடுத்துக்காக்க நீ ஜாக்கிரதையா யிருக்கவேண்டும்."

C. W. L:—சிலர் தாங்கள் நினைத்ததை, அது மற்றவர்களை வருத்தம் கொடுத்தாலும் சரி, அதை எடுத்துச்சொல்ல ஆர்பாட்டம் செய்கிறார்கள். மேலும் இதை ஓர் நல்லொழுக்கமாக கருதுகிறார்கள். மாஸ்டர் வார்த்தைகளை எப்போதும் அஜாக்கிரதையோடு பேசுவதில்லை. கொடூரமாயிருந்தால் இது ஒரு குற்றமாக சொல்லுகிறார். விவாதஞ் செய்யும்போதும் நியாயம் பேசும்போதும் நம்முடைய கருத்தை எடுத்துக் காட்ட தடையிருக்கப்படாது. ஆனால் அதை ஜாக்கிரதையோடும் மரியாதையுடனும் சொல்லவேண்டியது. அபோஸ்டல் ஒருவர் "ஒவ்வொருவனும் தன்னுடைய மனதை முழுவதும் இசைந்து வரச்செய்து கொள்ளட்டும்" என்றார். அதனால் மற்றவர்களை வசமாக்கும்படி செய்யவேண்டுமென்கிற அருத்தமில்லை. ஆனால், தான் என அந்த நம்பிக்கையை வைத்திருக்கிறேன் என்பதை தெரிந்துகொள்ள வேண்டியது. அப்படியிருந்தால் தனனுடைய கருத்துகளை தேவையானபோது சாந்தமாயும் சாதாரணமாயும் எடுத்துச் சொல்லமுடியும்.

உலகில் ஆயிரக்கணக்கான விஷயங்கள் இருக்கின்றனவென்றும், இவைகள் ஒவ்வொன்றிற்கும் அநேகர் அநேக கருத்துகளை வைத்திருக்கின்றனர் என்றும், ஒவ்வொருவருடைய கருத்தும் மற்றவருடையதைப்போலவே திடமானதென்று தெரிந்திருந்தும், மற்றவர்களுடைய அபிப்பிராயம் வேறுபட்டபோது சற்றேறக் குறைய கோபப்படாமலிருக்க முடியாதது விசித்திரமான விஷயம். காதொலிக் கிருஸ்தவனுக்கும் "ஆரஞ்சு" தேசமனுஷனுக்கும் நடக்கும் வாக்குவாதம் அநேகமாய் குத்து சண்டையில் முடியும். இதை முடிவாய்ப் பார்க்கில் தெளிவாய் அறியும்படி எடுத்துக்காட்டின வழியன்று. ஒருவன் மற்றவனுடைய அபிப்பிராயத்திற்கு வேறுபட்டால் அதை அசட்டை என்று எடுத்துக்கொள்ளப்படுகிறது. அப்படி

கொள்பவன் தன்னுடைய கருத்து உண்மையானதென்றும் அதை ஒத்துக்கொள்ளாதவன் எவனும் வேணுமென்று விரோதத்துடன் எடுக்கமாட்டேன் என்கிறான என்றும் நிச்சயம் கொண்டிருக்கிறான. ஆகையால் நாம் மற்றவர்களுக்கு நமது கருத்துகளை எவ்விதம் கொடுப்பது என்பதில் ஜாக்கிரதையா யிருக்கவேண்டும்.

தியாசொபி விஷயத்திலும் முக்கியமான மயக்கம் ஒன்று இருக்கின்றது. அதாவது நாம் நம்முடைய கொள்கைகளை நியாயத்தோடு வைத்திருக்கின்றோம். இதை நாம் ஜனங்களுக்கு காட்டமுயலுகிறோம் என்றாலும்மற்றவன் இதைப் பார்க்கமுடிகிறதில்லையே என்பதில் இருக்கின்றது. நியாயம் எவ்வளவு பூரணமாயிருந்தாலும் எவ்வளவு சாஸ்திரயுக்தப்படி யிருந்தபோதிலும் சாதாரணமானவனுக்கு எவ்வகையிலும் மனதில் தட்டுவதில்லை. அவன் நியாயத்தோடு இருப்பதில்லை; மற்று அவனுடைய உணர்வோடிருக்கிறான. இதை கிளறிவிட்டால்நியாயப்படி எவ்வளவு சொன்னாலும் கேட்க மாட்டான, பேசப்பேச கோபம் அதிகரித்தேபோகும்.

> "இது சாதாரணமாக கவனமற்று இருப்பதிலிருந்து உண்டாகிறது. ஒருவன் பேராசையாலும், பணத்தாசையாலும் பிடிபட்டு கூலி மிகக்குறைத்துக் கொடுப்பதாலும், அல்லது தன் மனைவி மக்களை பாதி பட்டினி போடுவதாலும், பிறருக்குத்தான் உண்டாக்குந்துன்பத்தைசற்றேனும் நினைக்கிறதே இல்லை. மற்றொருவன் தன் காம வெறியிலேயே எண்ணமிட்டு அதைத் திருப்திசெய்ய எத்தனையோ ஜீவர்களையும், உடல்களையும் சீர்குலைத்து அழிக்கிறதைப்பற்றிக் கொஞ்சமேனும் அவன் கவலைபடுகிறதில்லை. ஒருவன் சில நிமிஷ நேரம் தனக்குத் தொந்தரவென்று பால்மாறிக்கொண்டு வேலையாட்களுக்கேற்பட்ட நாளில் கூலியை கொடுக்கிறதில்லை; அவர்களுக்கு இதனால்உண்டாகும் கஷ்டங்களைச்

சற்றேனும் யோசிக்கிறதில்லை. இவ்வளவு துன்பம் விசாரமற்றதால், அதாவது ஒரு காரியத்தால் மற்றவர்களுக்கென்ன நேரிடும் என்பதை யோசிக்க மறந்து விடுகிறபடியால் இக்கஷ்டம் உண்டாகிறது. ஆனால் கர்மம் ஒருபோதும்மறக்காது, மாந்தர் மறந்து விடுகிறார் களென்பதைக் கவனிக்காது. உனக்குமார்க்கத்திற் செல்லஇச்சையிருந்தால் உன்னுடைய அஜாக்கிரதையால் பிறருக்குஇம்சை நேரிடுமெனப்பயந்து, நீ செய்யுஞ் செய்கையாலென்ன வருமென்பதைக் கவனிக்க வேண்டும்.''

C. W. L.—ஒரு வேலையின் மதிப்புக்கு கொஞ்சம் குறைத்து கூலி கொடுப்பதால் வேலையாட்களுக்கும் அவன பெண்சாதிபிள்ளைகளுக்கும் மெத்த கஷ்டம் உண்டாக்கலாம். ஒரு நாட்கூலியில் ஒரு அணா குறைப்பது என்றால் அவனுடைய குடும்பத்திற்கு அன்றைக்கு போதுமான ஆகாரமில்லை என்று அருந்தும். வேலையில் எப்போதும் கருத்தாயிருக்கவேண்டும் என்பது எனக்குத் தெரியும். ஆனால் முடியுமானால் எளிய வேலையாட்களை நசுக்கும் பாபத்தில் விழுவதைவிட, கொஞ்சமாய் சம்பாதிப்பது நல்லது. "ஹென்றிபோர்டு" என்பவர் உலகில் இப்போது பெருத்த கோடீஸ்வரன். இவர்போன்ற எஜமானர்கள் நல்ல கூலி கொடுப்பதால் மெத்த லாபம் கிடைக்கின்றது என்று கண்டு பிடித்திருக்கிறார்கள். நான் பாதிரியாயிருந்தபோது எளியவர்களிடத்தில் போய் அவர்களுடைய நோக்கம்போல பார்க்கும் வழக்கம் எனக்கிருந்தது. அநேக தரம் இவர்களுடைய திக்கற்ற நிலையைக்கொண்டு ஜனங்கள் தலைமேலேறிக்கொள்வார்கள். இப்படியே தான இந்தியாவிலும். இவ்விடத்திலும், பறப்பிள்ளைகளுக்கு சாப்பாடு கொடுக்க ஏற்பாடு செய்கிறவரையில் பள்ளிக்கூடத்தில் பிள்ளைகள் பசியால் துவண்டு விழுந்தார்கள்.

---

## 28-வது அத்தியாயம்.

### மூட நம்பிக்கை.

"மூடநம்பிக்கை மூடபக்தி, விபரீதம், யென்பது மற்றொரு கனத்ததீங்கு. இது மெத்த கொடூரமான துன்பத்தை யுண்டாக்கி யிருக்கிறது. இதற்கு அடிமைப்பட்டவன், அவனிலும் மிக்க புத்திசாலிகளைப் பழித்துத் தான் செய்கிறபடி அவர்களைச் செய்யும்படி. கட்டாயப் படுத்துகிறான்".

C.W.L:— மூட பக்தியுடையோர்கள் ஜனங்களுக்குள்ள சுபாவங்களை கவனிக்கிறதில்லை. அவர்கள் ஒருவித கொள்கையை வைத்திருக்கின்றார்கள். இதை எல்லார்பேரிலும் சுமத்த பிரியப் படுகிறார்கள். ரசாயன விதிகளைத் தவிர, மற்ற கருத்துகள் யாதையும் எவரையும் நம்பச் செய்யமுடியாது என்பதை அறிகிறதில்லை. ஏனெனில் வாழ்வைப்பற்றிய நோக்கங்கள், எத்தனை ஜனங்கள் இருக்கிறார்களோ, அத்தனை விதம் இருக்கின்றன. அநேக ஜனங்கள் உனக்குத் தெரிந்திருந்தபோதிலும் அவர்களில் ஒரே இடத்தில் ஒரே விதமாயிருக்கப்பட்ட இருவர்களைக் காண்பதரிது. மொத்தத்தில் அநேகரைக் குறித்து சாதாரணமாய் கூடுமான ஏதோ ஒரு அபிப்பிராயத்தை முன்னலேயே சொல்லமுடியும். ஆனால் அவர்களை நீ நன்றாய்த் தெரிந்திருக்கும் வரையில், அவர்கள் சிலவிஷயங்களைப்பற்றி என்ன விதமாய் செய்வார்கள் என்று திட்டமாய் மதிக்கமுடியாது. ஆதலால் மூடபக்தி என்பதால் மற்ற அருத்தங்களோடு, இரக்கம் என்பது மெத்த இல்லை என்பதாக குறிக்கின்றது. இதற்குள் அகப்பட்டவன் எவனுக்கும், விஷயங்களைப் பார்க்கும் வழி தன்னுடையதை விட மற்ற வழிகள் இருப்பதாக தெரிகிறதில்லை.

மூட பக்தியானது; அதையுடையவனுக்கு கெடுதி தருவதுமன்றி; அது உசிதமாயிருக்கும்போது மற்றவர்களை எப்போதும்

பலவந்தப்படுத்தும்படி எத்தனிக்கச்செய்கின்றது. சரித்திரமுழு வதிலும் மதத்தைப்பற்றிய மூடபக்தி மெத்த பயங்கரமான கஷ்டத்தைக்கொண்டு வந்துவிட்டிருக்கிறது. இதனால் மகம்மதியர்கள் காலாகாலங்களில் ஆசியா,ஐரோப்பா, ஆப்ரிக்கா கண்டங்களில் ஒரு கையில் கோறானையும் மற்ற கையில் வாளையும் எடுத்துகொலையாடி தேசம் மெங்கும் இரத்தகளமாக்கி விட்டார்கள். மூடபக்தியால் கிருஸ்துவ நாட்டில் கொடுமைபுண்டாக்கினதைப்பற்றி முந்தியே விவரித்திருக்கின்றது. 'செயன்ட் பார்த்தலோமியோ' எனபவரை சங்கரித்ததும், சிசலியில் மாலை ஆராதனை வேளையில் கரதோலிக் இனத்தாரும் ப்ராடஸ்டென்டு வகுப்பினர்களும் ஒருவருக்கொருவர் சம்ஹாரித்துக் கொண்டதும், இந்த மூடபக்தியின கொடுமையால் தான். கடைசியாக நடந்தது கொஞ்சம் ராஜரீக விஷயத்தில் சம்பந்தப்பட்டிருந்தது. முந்தியது மதசம்பந்தப்பட்டது. கிருஸ்து மதத்திலிருக்கும் வெவவேறு கக்ஷிகளில் இருந்த வெறுப்பால் இவவித சம்ஹாரம் அநேகமாய் விளைந்தது. என்றாலும் ராஜரீக விஷயங்களும் அதில் கொஞ்சம் சம்மந்தப்பட்டிருந்தன. 'பைசான்டைன' இராஜாங்கத்தில் நல்ல ஆட்டம் ஆடலாமென்கிற எண்ணத்துடன் "கான்ஸ்டன்ஸ்" என்பவர் கிருஸ்துவராக ஆனபோதும் இப்படி நடந்தது.

'க்ரூஷேட்' என்று நடந்ததும் இவ்வித மூடபக்தியில் மற்றொருவகை. ஆசாரியர் ஏசுநாதர் பிறந்து, வளர்ந்து, மரணமடைந்தார் என்று ஆதாரமில்லாத கதைக்காக, அவர் பிறந்த இடத்தை கிருஸ்தவர்கள் கைகொள்ளப்போய்இருபது லக்ஷஜனங்களை மடித்தார்கள். இந்தக் கதை தீக்ஷைபெற்ற ஒவ்வொருவருடைய வாழ்வைக் குறித்த பரிபாஷையென்றும், எப்போதாவது ஒரு காலத்தில் உலகத்திலுள்ள ஒவ்வொரு தேசத்திலும் ஏகதேசமாய் இவ்விதமாய் நடக்கும் என்பதை அவர்களுக்குத் தெரியும்படி சொல்லியிருந்தால் அந்த உயிர்ச்சேதத்தை தடுத்திருக்கக் கூடும். என்றாலும் ஒருக்கால் இது நஷ்டமாக நினைக்கக்கூடாது. ஏனெனில் நாகரீகமுள்ள "சார்சீனர்" களுடன் சண்டைசெய்ய போனதால் கிருஸ்தவர்கள் ஐரோப்பா கண்டத்திற்கு மெத்த உபயோகமான சமாசாரங்களைக் கொண்டுவந்தார்கள். மேலும் அவர்களுக்குண்டான பக்தியின்

பொருட்டு, உயிரிழக்க சித்தமாயிருந்தார்கள். மதத்திற்குரிய திவ்ய க்ஷேத்திரங்கள் அந்தந்த மதஸ்தர்களிடத்தில் இருக்கவேண்டும் எனும் கருத்தில் சந்தேகமின்றி வீரியத்தைக் காட்டியது நேர்த்தியாயுமிருந்தது. என்றாலும் இந்த விஷயத்தில் கிருஸ்தவர்கள் ஜயிக்காதது நல்லது என்பதை நாளாகாக நிரூபித்தது. அந்த திவ்விய க்ஷேத்திர நாட்டில் மகம்மதிய ராணுவ சேவகர்கள், கிரீக் கிருஸ்தவர்களுக்கும் லாடின் கிருஸ்தவர்களுக்கும் இருந்த கக்ஷி சண்டை சச்சரவுகளை தடுத்து, இல்லாதபடி இவர்களை அடக்கிவைக்க வேண்டியிருந்தது. ஏனெனில் இவர்கள் பூஜா பீடத்திலிருக்கும் அக்கினியைப்பற்றியும் கர்ப்பகிரஹத்தைப் பற்றியும் முதலில் யார் பூஜிக்க வேண்டியது என்பதைப்பற்றி சண்டைசெய்து கொண்டிருந்தார்கள்.

தற்காலத்தில் இந்தியாவில் அதேவித வழக்கு ஒன்று இருக்கின்றது. ஆனால் இதை "க்ரூஸேஷட்" மாதிரி தீர்த்துக்கொள்ள எவரும கனவிலும் நினைக்கவில்லை. புத்தர்களுடைய திவ்ய க்ஷேத்திரங்களாகிய புத்தபகவான் பிறந்த இடம், அவா புத்ததீக்ஷைபெற்ற இடம் கடைசியாய் தேகத்தைவிட்ட இடம்—இவைகளெல்லாம் இந்துக்கள் வசத்திலிருக்கின்றன. கிருஸ்தவமதமும் மகம்மதிய மதமும் எப்படி வெவவேறாயிருந்ததோ, அப்படி இந்த மதமும் ஹிந்து மதமும் வெவவேறானது. புத்தர்கள் அவர்களுடைய க்ஷேத்திரங்களை தங்கள் வசம்வைத்துக்கொள்ள ஊக்கத்தோடு பிரயத்தினப்படுகிறார்கள், ஆனால் சண்டைசெய்து ஜயிக்க வேண்டுமென்கிற எண்ணம் புத்தாகளுக்கு புலப்படவில்லை. இதற்கு நாம் மெத்த நன்றியறிதலாக விருக்கவேண்டும். ஏனெனில் இப்போது ஐம்பதுகோடி புத்தர்கள் இருக்கிறார்கள். அவர்களுடைய மதம் அப்பேர்ப்பட்ட மதிகெட்ட விஷயத்தைசெய்ய விடுகிறதில்லை. சில புத்தர்கள் அந்த இடத்தை விலைக்கு வாங்க எத்தனித்தார்கள். அது பெரும்பாலும் கைக்கூடிவந்தது. தியாசொபிகல் சங்கமும் அதற்கு உதவிகொடுத்தது. ஆனால் தாரதிர்ஷ்டமாய் சேர்த்து வைத்திருந்த பணத்தில் பெரும்பாகம் கச்சேரி வழக்கில் செலவழிந்தது ; அந்த ஏற்பாடும் படுத்துப்போய்விட்டது.

பெருத்த மதங்களில் ஒருபோதும் துன்பப்படுத்தாதது புத்த மதத்தை தவிர மற்ற மதங்கள்யாதுமில்லே. இது அதனுடைய உடன் பிறந்த கொள்கையால் அந்தப்படி செய்யக்கூடவில்லே. அதை ஏற்படுத்தின புத்தபகவானுடைய வார்த்தைகளிலிருக்கும் பொறுமையால் கட்டுண்டிருக்கிறார்கள். புத்த மதஸ்தன் யார்? என்ற கேள்விக்கு புத்தபகவானுடைய போதனைப்படி பின்தொடரு கிறவன் புத்தன், இதையும், அதையும் நம்பிக்கொண்டிருக்கிறவ னல்ல,மற்றுஜனங்கள் எப்படி வாழவேண்டும் என்று புத்தபகவான் சொல்லியபடி நடப்பவன். ஒரு நல்ல உண்மையாய் நடக்கும் புத்த னுக்கு என்ன ஆகும் என்று ஒரு பாதிரியைக் கேளுங்கள். "சாதா ரணமாய் கிருஸ்துவை அவன் நம்பாமல்போனுல் அவன கரை ஏற மாட்டான்" என்று சொல்லுவான்; அல்லது அவன் நல்லவனுக விருக்கும் பக்ஷத்தில் கடவுளுடைய வரம்பில்லாத தயவுக்கு விட வேண்டியதுதான் என்பான. ஒரு நல்ல கிருஸ்தவனைப்பற்றி இதே கேள்வியை புத்தன் ஒருவனை கேட்போமாகில் "அவன் நல்ல புத் தன், அவன் கிருஸ்தவன் என்று சொல்லிக் கொள்கிருன். ஆனுல் புத்தபகவானுடைய போதனைகளின்படி நடக்கின்ருன், அவனுக்கு எல்லாம் நன்ருய் முடியும்" என்பான். புத்த மதத்திலிருக்கும் பொறுமை அப்பேர்ப்பட்டது. இதை முந்தி விவரித்திருக்கிறேன். வாஸ்தவமாகவே ஒவ்வொரு மதத்திலும் உண்மையில் துவேஷத் தையும் கொடுமையையும் விலக்கி இருக்கின்றது ஆனுல் இவைகள் சிலவற்றில் இருக்கும் மூடத்தனமும் மதபித்தமும் ஜனங்களை கண் திறந்து பார்க்கவிடவில்லே.

ஜாதி வெறுப்பென்பது மூடபக்தியின் ஒருவகை மதிமயக்கு. ஒரு ஜாதியார் மற்ற ஜாதியாரை சுபாவமாகவே வெறுக்கிறது மதி யீனம். ஏனெனில் ஒவ்வொரு ஜாதியிலும் நல்லதும் இருக்கிறது. பொல்லாததும் இருக்கின்றது. இங்கிலாண்டில்நாட்டுப்புறத்தி லிருக் கும் ஜனங்கள் அன்னியரைக் கண்டால், சந்தேகிக்கிறதும், பழிக்கி றதுமான தன்மையோடிருக்கிருர்கள். ஒருவன் வேறு பாஷையில் பேசினுனுல், அந்த அறிவீனர்களிடத்தில், அது ஏதோ ஒரு சிரிக்கத் தக்கதாயிருக்கும். அந்த விஷயத்தில் மரியாதையோடிருக் கும் இதர நாட்டுப்புறத்தார் இருக்கின்ருர்கள். ஒரு அன்னிய

தேசத்தான் நம்மைப் பார்க்கவந்தானுனல், நாம் அவனுக்கு விருந்து கொடுப்பவராக விருக்கின்றோம், என்று எனக்கு படுகின்றது. மேலும் அவனுக்கு வேண்டிய சௌகரிய மெல்லாம் செய்து வைக்கவும், நம்முடைய ஜனங்களைப்பற்றியும் தேசத்தைப்பற்றியும் நம்மால் கூடிய வரையில் நல்ல அபிப்பிராயங் கொள்ளும்படி காட்ட வேண்டியதும், நமது கடனாயிருக்கின்றது.

நெப்போலியன் இருந்த காலத்தில் பிரானசுகாரர்களை பிசாசுக ளென்றும், அவர்கள் செய்கிறது தப்பிதமாயிருக்கிறதென்றும், கட வுளுக்கு அடுக்காதென்று அவர்களுக்குத் தெரிந்திருந்தும் நம்பேரில் சண்டை தொடுத்திருக்கிறார்கள் என்கிற மதிமயக்கம் இங்கிலாந் தில் இருந்தது. இன்றைக்கும் அப்படி ஏதோவொரு கருத்தால் பிடி பட்டு ஒருவகை தேச பித்தம் பிடித்ததுபோலிருக்கும் ஜனக் கூட்டங்களை அநேகமாய்க் காணலாம். அவ்வித கடுமையான சொற்ப கால பயித்தியத்தால் பயங்கரமான படுபாவங்கள் ஏற்படுகின்றன. இவர்களே மற்ற காலங்களில் இப்படிச் செய்ய கனவிலும் நினை யார்கள். இந்த சந்தர்ப்பத்தில் ஒவ்வொருவரும் அடக்கமுடியாமலே தங்கள் காலை வாரிக்கொண்டு போக விட்டிருக்கும் வரையில் அவ ரவர் உத்தரவாதியாயிருக்கிறார்கள். இவர்கள் செய்கிற விஷயங் கள் பித்தம் பிடித்தவனால் செய்யப்படுவதே தவிர சாதாரணமானவ னால் அல்ல. ஒருவன் சில சமயங்களில் கோபத்தால் தன்னை மறந்து அசங்கிய வார்த்தைகள் சொல்லுவது போலிருக்கின்றது. இப்படி பேசும் கோபம் மனிதனல்ல. அவன தன்னையாளாதபடி கோபத்திற்கு விட்டு கொடுக்கிறதினால் அவன் பழிக்குள்ளாகிறான். ஆனால் வெகுவாய், பிற்பாடு அவன் சொன்னதைக் குறித்துவிசனப் படுவான் என்பதை நாம் யோசிக்கவேண்டும்.

> "மிருகங்களை பலிகொடுக்க வேண்டுமென்
> கிற மூடபக்தியால் உண்டாகும் கோரகொலையை
> நினைத்துப்பார்."

C. W. L.:—மத விஷயமாய் மிருகங்களையும் இன்னும் இதர ஜந்துக்களையும் பலிகொடுப்பதை எடுத்தால் கடவுளுக்கும் மனித

னுக்குமுள்ள சம்பந்தத்தைப்பற்றிய கேள்வி வருகின்றது. இவ்விஷயத்தைப்பற்றி மூன்று வித மூல கருத்துகள் இருக்கின்றன. முதலாவது கடவுள் பிரபஞ்சத்தை ஆரம்பித்து உண்டாக்கின பிறகு அதற்கு என்ன நேரிடும் என்பதை கவனியாமலே (அக்கரை வையாமலே) அதுவாகவே போகும்படி விட்டுவிட்டிருக்கிறார் என்பது ஒன்று. கடவுள் குரோத நோக்கத்துடன் இரத்தம்அல்லது இதர நைவேத்தியங்களில் களித்திருக்க இச்சித்திருக்கின்றார் என்பது இரண்டாவது. தன்னுடைய சிருஷ்டிகளுக்கு எப்போதும் அன்பார்ந்த தகப்பனாராக விருக்கின்றார் என்பது மூன்றாவது.

முதலாவது கருத்து வாஸ்தவத்தில் தற்கால அனுபவத்திலிருக்கும் உலகாயதக் கொள்கை; இதோடு மூலக்கடவுளைச் சேர்த்து வைக்கவேண்டும். இரண்டாவது கடவுளை இரத்தம் குடிக்கும் பூதமாக கொள்வது. அநேக பழைய சாஸ்திரங்களில் கடவுளை இவ்விதமாக தவறான கருத்தில் கொள்கிறார்கள். பைபிலில் பழைய ஏற்பாட்டில் யூதர்கள் ஒரு காலத்தில் இலக்ஷத்திருபதினாயிரம் எருதுகளை பலிகொடுத்ததாக பெருமை பாராட்டி இருக்கிறது. வெகுவாய் இது அக்காலத்திலிருந்த அவர்களுடைய வழக்கம்போல பெருக்கிச் சொன்ன சொல்லாயிருக்கலாம். "ஜஹோவா" என்கிற கடவுள் பலியை கேட்டாராம். தனக்கு வேண்டியது கிடைக்கும் வரையில் அதனால் எவ்வளவு துன்பம் விளைவிப்பதைப்பற்றி கவலைப்படவில்லையாம், பலிவேண்டுமென்றும் அதை தனக்கே கொடுக்கவேண்டுமென்பதாகவும் மற்ற தேவதைகளுக்கு கொடுக்கக் கூடாதென்றும் அவர் எப்போதும் ஓலமிட்டுக்கொண்டிருந்தாராம். தற்கால யூதர்கள் அப்பேர்ப்பட்ட விஷயத்தைக் கேட்டால் பயப்பட்டு போவார்கள். பார்க்கப்போனால் "டேவிட் சாலமோன்" காலத்தில் அப்படியாதொன்றும் செய்யவில்லை யென்று தெளிவாகிறது. இதிலிருந்து பார்த்தால் அவர்கள் பூஜித்த ஜஹோவா என்பவரை நாம் கடவுள் என்று சொல்லக்கூடியவரல்ல. மேலும் கடவுள் எப்பேர்ப்பட்டவர் என்கிற கருத்திற்கு அவர்கள் அப்போது வரவில்லை. ஆனால் அது (அட்லாண்டியன்) காலத்திலிருந்து பூஜித்து வரும் ஒருபெரிய காட்டேரிபூதம். யூதர்கள் முன்னமே இஜிப்து நாகரீகத்தை பெற்றிருந்தார்கள். என்றாலும் அதனுடைய பெருத்த கருத்துகள் இவர்களுக்கு

தட்டவில்லை. ஆனால் பினனுக்கு பாபிலோனை பிடித்தபோது அவர்கள் மகத்தான கடவுளைப்பற்றி தெரிந்து கொண்டார்கள். அவர்கள் உடனே கடவுளை விசேஷகுணமாக தங்களுடைய ஜஹோவாவுடன் சேர்த்துக்கொண்டார்கள். பின்னால்வந்த ஆசிரியர்கள் அவரைப்பற்றி வெகு சிறப்புடன் எழுதியிருக்கிறார்கள். என்றாலும் பழைய கருத்துகள் அடிக்கடி வருகின்றன.

இரத்தபலி கொடுப்பது மனிதவர்க்க இளம்பருவத்தைச் சேர்ந்தது. இவைகள் ஆதி தந்திரீகர்கள் பூதகணங்களை பூஜிப்பது. இவைகள் இரத்த கவிச்சில் வசிக்கும் சிறு பூதகணங்களைச் சேர்ந்தவை. பூதகணம் பலிவேண்டுகிறது. ஏனெனில் இது இரத்த வாசனையை உரிந்து அதைக்கொண்டு இவைகளுக்கு வெளிக்கு பிரசன்னமாகும் சக்தி கிடைக்கின்றது. மலையாண்டிகளில் சிலர் இவ்வித பலி செலுத்தாவிட்டால் இவர்களுடைய பயிர்சாவியாய் போவதாயும், வீடு தீபிடித்தெரிகிறதாயும்இவ்விதக் கஷ்டங்கள் வருவதாகச் சொல்கிறார்கள். ஆகையால் இந்தியாவிலுள்ள மலை தேவதைகளும் வெகுவாய் அட்லாண்டிலிருந்த காட்டேரி வகைகளாய்த்தான் னிருக்க வேண்டும்.

பெரியார்கள் இவ்வித பலிகளை கொடுக்க ஒருபோதும் சம்மதியார்கள் என்று நாம் நிச்சயமாயிருக்கலாம். உதாரணமாக இந்தியாவில் மூலவேத கிரந்தத்தில் வாஸ்தவத்தில் இவைகள் இல்லவேயில்லை, ஆனால் பூர்வ ஜனங்களிலிருந்து தொனறுதொட்டு வரும் வழக்கத்தைப் பொருத்தவை அவைகள் இனனும் கொஞ்சம் இருக்கின்றன. புத்தபகவான் மிருகபலியை குறித்து தடுத்து பேசினார். இதை நீக்குவதற்காக பிம்பாசுரர் இராஜனை அவனுடைய இராஜ்ஜியத்தில் கல் ஸ்தம்பங்களில் சாசனமாக வரைந்து ஸ்தாபிக்கச் செய்தார்.

நாம் பூஜிக்கப் பிரியப்படும் எந்த தேவதையும் சுத்தமாய் இரத்த நைவேத்தியங்களை வேண்டுவதில்லை; என்றாலும் சிலகாட்டேரிகள், இயற்கை கணங்கள், இதை வேண்டுகின்றன. ஆகையால் இவ்வித நைவேத்தியங்களை விதிக்கும் சாஸ்திரங்கள், நாம் கடந்துவந்த பண்டைய நாளில் மானிடவர்க்கம் இருந்த இளம் பருவத்தை குறிப்ப

தாக கொள்ளவேண்டும். இதை சிலர் பகிரங்கமாக சொல்ல விரும்புகிறதில்லை; ஏனெனில் அவர்கள் சாஸ்திரங்களை பயபக்தியோடு பூஜிக்கின்றவர்கள். ஆனால் சில வாக்கியங்களை மட்டும் எல்லாகாலங்களிலும் தெய்வபக்தியோடு மதிப்பதும் மூடபக்திதான். மற்ற விஷயங்களில் விவேகத்தை செலுத்துவதைப்போலவே நாம் சாஸ்திர விஷயத்தில் பகுத்தறிவுடன் பொறுக்கி எடுக்கும் சமர்த்தியராயிருக்க வேண்டும். நாம் ஒரு புஸ்தகத்தை எடுத்தால் வெகு நேர்த்தியாயும் அனுகூல முள்ளதாயுமுள்ள வாக்கியங்களை மதித்து அவைகளை ஞாபகப்படுத்திக் கொள்ளுகிறோம். அல்லவா? இவ்விதமாகவே சாஸ்திரங்களிலிருந்து வெகு சிறப்பாகவும், நேர்த்தியாகவும், எல்லாகாலங்களிலும் கம்பீரமாகவுள்ள பாகங்களை எடுத்துக் கொள்ளவேண்டும். அந்த தரத்திற்கு வாரதவைகளை கவையுடன் தள்ளிவிடவேண்டும். பைபிலிலும், சங்கீத பாட்டிலும், இன்னும் இதர பாகங்களிலும் இரத்த பலியை சொல்லியிருந்தபோதிலும், கடவுள் அப்பேர்ப்பட்டதை வேண்டுவதில்லை எனும் உண்மையை எடுக்கவேண்டும். இது கடவுளை ஒரு கொடிய பூதமாகவும், அதை திருப்தி செய்ய வேண்டுமென்கிற கொள்கையுடைய மதத்தை சார்ந்தவைகள்.

கடவுளைப்பற்றியும் எல்லாம் அன்பாயுள்ள பிதாவைப்பற்றியும், கொடுத்த கிருஸ்து பகவானுடைய கருத்தோடு இக்கருத்துகள் சேர்ப்பது கிருஸ்துவ மதத்திற்கு துக்ககரமானதுதான். கடவுளுக்கு மிருகபலி என்பதால் கிருஸ்துவமதத்தை அவமானப்படுத்தவில்லை. ஆனால் கடவுளை திருப்தி செய்யாவிட்டால் கஷ்டங்கொடுப்பார் என்கிற கருத்துகளை பெரிய கிருஸ்தவ சங்கங்களில் போதித்துவருகின்றன. கடவுள் மற்றவர்கள் எல்லாரையும் விட்டு தன்னுடைய குமாரனை பலிகொடுத்ததாகவும், இப்படி செய்யாவிடில் எல்லோரும் நரகத்திற்கு போவார்கள் என்றும், ஓர் பிரமிக்கும் கட்டுக்கதையை யுண்டாக்கினர்கள். அநேகர் இப்பேர்ப்பட்ட பலிவேண்டுமென்றாவது அல்லது செய்ய சம்மதிக்கும் கடவுள் எப்பேர்ப்பட்டவரென்றாவது கவனிக்கின்றதில்லை போலிருக்கின்றது. ஒரு பூலோகத்திலிருக்கும் ஒரு அரசன் பயங்கரமான மரண தண்டனைக்கு அநேக ஜனங்களை அகஸ்மாத்தாய் தண்டித்து விட்டு, பிறகு "தனது குமாரன் வந்து யாரையாவது கொல்லவேண்டியிருந்தால் என்னைக்கொல்லுங்கள்

னான் ஒரு குற்றமும் செய்யவில்லை என்றாலும் என்னை கொல்லுங்கள் இந்த ஜனங்களை விடுதலை செய்யுங்கள்" என்று சொன்ன உடனே அவர்களை விட்டுவிட்டால் அந்த இராஜனை எப்பேர்ப்பட்டவன் என நீங்களே மதிக்கக்கூடும். இக்கொள்கை கிருஸ்து மதத்தினுடையதல்ல.

கர்னல் இங்கர்சால் என்பவர் "நேர்மையான கடவுள்கண்ணியமான மனிதனுடைய வேலை" என்று சொன்னது சரிதான். தேர்ச்சியில் முந்தியே முன்னுக்கு வந்ததேசத்தார்தான் கடவுளைப்பற்றி உண்மையில் சிறப்புடன மகிமை வாய்ந்த கருத்தை அறிந்துகொள்ளும் நிலையிலிருப்பார்கள் என்றது உண்மைதான். காட்டில் அங்குமிங்கும் திரிந்து கொண்டும் நீலவர்ண பச்சை குத்திக்கொண்டுமிருந்த நம்முடைய முன்னோர்களும், பழையகால வீரத்தன்மையுள்ள யூதர்களும், இன்னும் மற்றவர்களும், கடவுளைப்பற்றி அல்ப கருத்துகளை வைத்திருந்தனர். ஆனால் அவைகளை தற்காலத்தில் எடுக்கவேண்டுமென்கிற நியாயம் கொஞ்சமேனுமில்லை.

மூன்றாவது கருத்து:—தியாசொபியில் ஏற்பட்டுள்ளது—கடவுள் கருணா நிதி என்றும், ஜீவராசிகளின அமைப்பை எல்லாம் ஒரு கிரமத்தினபடி கொண்டு வந்திருக்கின்றார். அதனபடி எல்லாகாலத்திலும் நடத்திவருகின்றார். ஆகையால் எதுநேரிட்டாலும் அது அவருடைய வேலையின் பகுதி எனும் கருத்து இது. இவர் மானிடர்களுக்கு சுயஇச்சை கொஞ்சம் விடுகின்றார். இவர்கள் அவருடைய ஏற்பாட்டிற்கு சுத்தமாய் ஒத்து வாராத விஷயங்களை செய்து வருகிறார்கள், என்றாலும் அவர்களுடைய இச்சை அவருடைய அமைப்பின் ஒருபகுதி, எல்லாம் முடிவினில் அவருடையவேலை.

கடவுள் மனிதனுக்கு சுதந்திரம், அல்லது தன்னிஷ்டபடி செய்ய உரிமை விட்டிருக்கின்றார் என்று நாம் சொல்லும்போது அது வரம்புள்ளதாகவும் அதிகமாகிக்கொண்டே வருவதாகவும் தெளிவாக தெரிந்திருக்கவேண்டும். ஒருவன் தன்னிடத்திலிருக்கும் சுதந்திரத்தையும் அதிகாரத்தையும் நன்றாய் உபயோகப்படுத்தினால் அவனுக்கு அவை அதிகமாய் கொடுக்கப்படும். சிறு குழந்தையைநடக்க கற்றுக் கொடுக்கிறமாதிரி இது இருக்கின்றது. தாயார் குழந்தையை முயர்சித்து தடுமாடும்படியும் மறுபடி எத்தனிக்கும்படி

யும் விடுகிறாள். தடுமாடி தவறிவிழுமோ எனப் பயந்து இடுப்பிலே எப்போதும் தூக்கிக்கொண்டிருந்தால் அது நடவாமுடமாகும். ஆனால் தாயார் செய்வது யாதெனில் குழந்தை கற்றுக்கொள்ளும் காலத்தில் கல்தரையிலும் படிக்கட்டுகளில் அல்லது மற்ற அபாயகர மான விடங்களில் விடுகிறதில்லை. பிறகு வளர்ந்தபோது காட்சி களை பார்க்க பிரியப்பட்டால் மலைச்சாரல் ஓரத்திலும் நடக்கக்கூடும் இவ்விதமான ஏதோ ஒருவகையில் ஈசுவரன் நம்மை பயிற்சிக்கும் போது காப்பாற்றி வருகிறார். அப்படியிருப்பதால் நாம் நம்மு டைய உயிரை இழக்கவாவது அல்லது தீராகாயம் படவாவது நம்மை விடமாட்டார்.

மூன்றாவது கருத்து படிப்படியாய் நிலைத்து வருகின்றது. கிருஸ்தவ மதம் இப்போது வெகுகாலமாக அதனுடைய கொள்கை களைவிட மெத்தமேலுக்கு வந்திருக்கின்றது. கிருஸ்தவர்கள் தங்கள் சர்ச்சுகளில் கட்டளையுடன் சொல்லும் கருத்துகளைவிட மேலான வைகளை வைத்திருக்கிறார்கள். உதாரணமாக "சர்ச் ஆப் இங்கி லாந்த்" கக்ஷியில் மதக்கொள்கைகள் என்று சில கருத்துகளை ஏற் படுத்தி யிருக்கிறார்கள். ஆதீனத்திற்குவரும் பாதிரிமார்கள் இவைக ளுக்கு ஒத்துகையொப்பமிடவேண்டியிருக்கிறது. ஆனால் அவர்களில் ஒருவர் இந்த விதிகளை எப்படி நான ஒத்துக்கொள்வது, இவை ஒன்றுக்கொன்று முரணாயிருக்கின்றதே" என்று கேட்டால் அவ னுக்குப் பதில், இதை எழுதினபோது ஒற்றுமைப்படாத இருகக்ஷி கள் இருந்தனவாயும், இவ்விருவரையும் பிரியப்படுத்த ஏதோவொன் றைசொல்லவேண்டி வந்ததாயும், சொல்கிறார்கள். இன்னும் அவர்கள் "பிஷப்பும் மற்றவர்களும் இவைகளில் கையொப்பமிட் டாய் விட்டது. இக்கருத்துடன சாந்தமாய் நாங்கள் எல்லோரும் எடுத்துக்கொண்டோம். நாங்கள் எடுத்துக்கொண்டதனால் நீங்க ளும் அப்படிச்செய்வது நல்லது என்கிறார்கள். வாலிபனும் வெகு வாய் நல்லது அதனால் ஒரு கருத்துமில்லையென்று எனக்கு நிச்ச யம் சொன்னீர்களானால் நான்அதை ஒத்துக்கொள்ளக்கூடும்" என்று சொல்லுவான், ஆனால் அந்நிலை சிறப்பானதல்ல.

கிருஸ்துவ கொள்கைகளில் எனக்கு யாதொரு ஆக்ஷேபனையு மில்லை. கிருஸ்தவன் சாதாரணமாய்க் கருதுவதைவிட ஆழ்ந்த

கருத்துகள் அதிலடங்கி யிருக்கின்றன. ஆனால் 39 கட்டளை விதிகளைப் பற்றியும், விசுவாச நிவேதனத்தைப் பற்றியும் நான் ஆக்ஷேபிக்கின்றேன்; ஏனெனில் அவர்கள் அநேக நேர்த்தியான கருத்துகளுடன் கண்டிப்பாய் அசாத்தியமான மற்றவைகளை சேர்க்க எத்தனிக்கின்றார்கள். வினா விடை புத்தகத்தில் முதல் கேள்வியாகிய மனிதனுடைய முக்கிய முடிவு என்ன? என்பதற்கு "கடவுளை சிறப்பிக்கவும் அவருடன் எப்போதும் ஆநந்தித்திருக்கவும்" என்கிற பதிலோடு நிறுத்தி விட்டிருந்தால் அது மெத்த சிறப்பாயிருக்கும்.

கிருஸ்து மதமானது அதில் ஏற்பட்டிருக்கும் கொள்கைகளுக்கும் உறுதிப்பாடுகளுக்கும் அப்பால் கடந்து வெகுதூரம் போயிருக்கிறது. இதை தெளிவாக காட்டுகிற ஒரு வாக்கியத்தை நான் அன்றையதினம் கண்டேன். "டென்ரிப்பன" என்பவர் எழுதிய ஓர் புத்தகமிருக்கிறது. அவர், "கிருஸ்தவமதத்தின் கருத்து யாதெனில் மனிதனுக்குள்ளிருக்கும் கிருஸ்துவை விருத்தி செய்யவேண்டியது" என்று அதில் எழுதுகிறார். பிறகு மனிதனுக்குள்ளிருக்கும் கிருஸ்து என்கிற பொருள் எப்பேர்ப்பட்டது என்பதை விவரிக்கின்றார். அதாவது. "ரசாயன சாஸ்திரியின் அறிவு அது, லாயர்களுடைய சொல்வளம் அது, ஞாயாதிபதியுடைய நடுநிலை அது, சிற்பி ஆசிக்கும் அழகு அது, பரோபகாரியின் மானிடவர்க்க அன்பு அது" என்று இப்படி விவரித்திருக்கின்றார். அப்பேர்ப்பட்ட கிருஸ்துவ மதத்தை நாங்கள் எல்லோரும் ஒத்துக்கொள்ளுகிறோம். இக்கருத்து கீதையில் உள்ளதைப்போல் தான் இருக்கின்றது "அரசர்களில் நான் செங்கோல், ஜெயம் விரும்புகிறவர்களில் நான் மந்திரித்துவம், இரகசியங்களில் நான் மௌனம், அறிஞர்களில் அறிவு நான்" என்று ஸ்ரீகிருஷ்ணபகவான் சொல்லுகிறார். இன்னும் "சிறப்பாயும் நல்லதாயும் நேர்த்தியாயும் பலமுள்ளதாயும் இருக்கின்றது எதுவோ, அது என்னுடைய சிறப்பிலிருந்து ஒரு துண்டாய்ப்போனதென்று நீ தெரிந்துகொள்" என்கிறார் இந்த கிருஸ்தவபாதிரி எழுதியது பகவத்கீதை ஆசிரியருடன் ஒத்திருக்கின்றது. இது வெகு நாளைய சாஸ்திரம். மஹாபாரதத்தைவிட முந்தியது. என்றாலும் அதனது ஒருபாகமாய் இருக்கிறது. கீதையிலடங்கி

யிருக்கும் சிறப்பான போதனைகளில் அநேகம் ஆரியவம்சத்தார் படை எடுத்து வருவதற்கு முந்தி இந்தியாவிலிருந்த அட்லாண்டி யன் வம்சத்தாரிடத்தில் இருந்தன. இது சாதாரணமாய் ஒத்துக் கொள்ளப்படமாட்டாத கருத்து என்று எனக்குத் தெரியும். என்று லும் இது நாங்கள் நேராய் கண்ணெதிரில் பார்த்த உண்மை.

உண்மையாகவே நாம் முற்றிலும் கடவுளை விசுவாசிக்கலாம்; ஏனெனில் அவர் தெரிந்தவர், நாம் தெரியாதவர்கள். அவருடைய விகாசமுறையின் அமைப்புக்கு உதவவேண்டி இருக்கும் வகையை பொதுவாய் நமக்குத்தெரியும். ஆனால் அதனுடைய விவரம் தெரி யாது. என்றாலும் அதனுடைய விவரங்களெல்லாம் தகுதியான வர்களிடத்தில் இருக்கிறதென்று நமக்குத் தெரியும். நம்முடைய கர்மம் எப்படியிருக்குமோ என்பது நமக்குத் தெரியாது, என்று லும் இவ்விஷயங்களை நிருவகிக்கும் பெருத்த அதிகாரிகள் எல்லாம் அறிவார். மேலும் அவற்றில் (கர்மத்தில்) எவ்வளவு நமக்கு இப் போது பிரயோஜனப்படும்படி கொண்டு வரக்கூடுவதையும் எவ்வ ளவு முன்னுக்கு எடுத்துவைக்க வேண்டியதையும் யோசனையுடன் வகுத்து தீர்ப்பார்கள். நாம் எப்படி இருக்கவேண்டுமென்று நாம் கோரியதைக் கேட்டு அதன்படி நம்முடைய விதிவசத்தை பெரி யோர்கள் திருத்துவார்களானால் அது நமக்கு நிச்சயமாகவே கெடுதி யாயிருக்கும். இவ்விஷயங்களில் நமக்கிருக்கும் அவா எல்லாம் பிர யோஜனமற்றது என்று நான சொல்லவில்லை; அதற்கு மெத்த டாருகவிருக்கும். ஏனெனில் நமக்கு வாஞ்சைகளிருக்குமானால் இவை கர்மானுபவ வர்த்தமானத்தில் புதிய சக்தி பலங்களாக நுழை யும். மேலும் கர்ம அமைப்பை (விதிவசத்தை) மாற்ற அதிகாரி களுக்கு ஒத்தாசை தரும். ஒருக்கால் கடனை கழித்து சீக்கிரத்தில் ஒழிக்கும்படியாக கர்மத்தை அதிகமாய் கொடுக்கவரும். ஒருக்கால் அதுவரும் வகையை திருப்பி வேறு விதமாக கொண்டுவிடவரும், ஆனால் எவ்விதமாய் வந்தபோதிலும் சிலருக்கு மாத்திரம் அல்லாமல் ஒவ்வொருவருக்கும் உன்னதமானவிதத்தில் செய்துவருகிறது. ஆகை யால் நாம் கடவுளுடைய இச்சையை (திருவுள்ளத்தை) மாற்ற எத் தனிக்கக்கூடாது. நமக்கு வருவது எதையும் நன்றியுடன் ஏற்றுக் கொள்ளவேண்டும் அதினால் வரும் கெடுதியைத் தள்ளி பிரயோ

ஜனத்தை எப்போதும் எடுக்கவேண்டியது. நாம் நமது கஷ்டங்களை கடந்து போக்கக்கூடிய ஏதோ ஒரு விஷயமென்று மதிக்கவேண்டும். என்றாலும் எப்போதும் சந்தோஷமாய் இருக்கவேண்டும் ஏனெனில் எல்லாவற்றின பிந்தியும் கடவுள் இருக்கின்றார் என்றும் அவர் முற்றிலும் நன்மை செய்கிறார் எனறும் நமக்குத் தெரியும்.

> "மனிதனுக்கு மாமிச உணவு தேவையென்கிற, இன்னும் கொடிய அறிவீனக் கொள்கையால் உண்டாகுங் கோர (மிருக) கொலையை நினைத்துப்பார்."

C. W. L.:—இது ஒரு விபரீத மதிமயக்கம். ஏனெனில் மாமிசமில்லாமலே பூரண சௌக்கியத்தில் கோடிக்கணக்கான ஜனங்கள் இருக்கின்றனர். என்றாலும் பரம்பரையாய் வந்த பழக்கத்தாலும் அவர்களுடைய கர்மத்தாலும் சுத்தமான ஆகாரத்தை உண்மையில் ஜீரணிக்க சகதியில்லாதவர்களாய் சிலரிருக்கின்றனர். ஆனால் அப்படியிருப்பவர்கள் வெகு வெகு சிலரே. நூறு நூறாயிருக்கும் தியாசொபி மெம்பர்களிலும் உண்மையில் வெகுகாலம் வரையில் மாக்கரி பதார்த்தத்தை சாப்பிட எத்தனித்து முடியாதென்று விட்டவர்களில் சிலர் எனக்குத் தெரியும். ஆனால் மற்ற எல்லோரும் முதலில் கொஞ்சம் கஷ்டப்பட்டு பிறகு மாக்கரி சாப்பாட்டில் நிலைத்து தங்களுடைய தேக சௌக்கியத்தை மேலாக்கிக் கொண்டார்கள்.

மிருகங்களை கொலைசெய்யும் பாதகத்தை, தங்கள்மேல் சுமத்திக் கொள்ளாமல், தடையில்லாது பூரண சௌக்கியத்தில் ஜனங்களில் பெரும்பான்மையோர் இருந்தார்கள். என்று ஐயந்திரிபற நிரூபித்திருக்கின்றது. மாக்கரிபதார்த்தத்திற்கு சரிப்பட்டு வராத தேகங்கள் நூற்றில் ஏதோ வெகு கொஞ்சந்தான் இருக்கின்றன.. இது இவர்களுடைய துரதிர்ஷ்டத்துக்குரிய நிலை; ஆனால் சொல்லிய முறையின்படி விவேகத்துடன் தனது, சாப்பாட்டை திருத்த உண்மையில் எத்தனித்து அது முடியாததாக காண்பானானால், அதை தனது கர்மம் என்று ஏற்றுக்கொள்ள வேண்டியதே தவிர வேறு வழியில்லை. அப்பேர்ப்பட்ட சந்தர்ப்பங்களில் "நான் என்னு

டைய தேகத்தை என்னிச்சைப்படி செய்ய பலவந்தம் செய்வேன். அல்லது அசுத்த உணவை உண்பேன்" என்று சொல்லுவது எப் போதும் சரியல்ல; அறிவுமல்ல. மற்றவர்களை காப்பாற்றவேண்டிய கடமை தொழில்கள் ஒருவனுக்கிருக்கலாம் அதை, பலஹீன தேகத் தைக்கொண்டு செய்ய முடியாது. கை கால் பலம் மெத்தவேண் டியதாயிருக்கும் தொழில்கள் செய்யமுடியாது. நல்ல மேலான ஆகாரத்தை பிரியப்படாதவர்களும், அல்லது தங்கள் தேகத்தை புதிய வித ஆகாரத்திற்கு திருத்திக்கொள்ள கொஞ்சம் கஷ்டமெ டுக்க பிரியப்படாதவர்களும், இதை ஒருகாரணமாக சுலபமாக சொல் லிக்கொள்ளலாம் என்று எனக்குத் தெரியும். என்றாலும் இவர்கள் மாமிசம் புசிக்க வேண்டியிருக்கிறது ஏனெனில் தங்கள் பழைய வழக் கத்திலேயே போகவேண்டியிருக்கும் துர்பாக்கியமுள்ள சிலரிருக் கின்றனர்.

மாமிச ஆகாரம் விரும்பக்கூடியதல்ல. ஏனெனில் மிருகங்களைக் கொல்லுவது கொடுமை. ஏனெனில் இது இன்னும் நம்முடைய தேகத்தில் தகாத அணுக்களை சேர்க்கின்றது, தேகத்தை முரணைச் செய்து ஜீவபூதங்களிருக்கும் மிருக தாபங்களை எழுப்பிவிடுகிறது. இன்னும் இதர காரணங்களு மிருக்கின்றன, இவைகளெல்லாம் என்னுடைய புத்தகம் Some Glimpses in Occultism என்பதில் சேர்த்திருக்கின்றேன். அனுபவத்தில் எல்லா நியாயங்களும் ஒரே பக்கமாய் இருக்கும் சில விஷயங்களில் இது ஒன்று. ஏனெனில் மாமிச ஆகாரத்தைப்பற்றி அனுசரணையாக சொல்ல நியாயம் யாது மில்லை, ஜனங்கள் பிரியப்படுகிறதினால் வழக்கத்தை தொடுத்தி ருக்கிறார்கள் என்றுசொல்லுவது ஒன்றைத்தவிர மற்றயாதும் நியாய மில்லை. இதைப்பற்றி விசாரிக்கும் எவனுக்கும் இதை சாப்பிட வேண்டாமென்று சொல்லுவது முற்றிலும் அவனுடைய நன்மைக் காகவே என்று நாம் தெளிவாகச் சொல்லக்கூடும். மரக்கறி ஆகாரம் நல்லது என்பதற்கு நமக்குப்போதுமான ஆதாரம் இருந்தபோதிலும் இது அப்படிக்கு மாத்திரமல்லாது மேலான தேக சௌக்கியமென் றும், சில கொடிய வியாதிகளை தடுக்கின்றது என்றும் அருத்தம்; மே லும் சராசரியாய் பார்க்குமிடத்து மரக்கறிசாப்பிடுவோன் அதிகமாய் தாக்குப்பிடிப்பான் என்று திடமாய் அனுபவத்தில் காட்டுகின்றது.

ஜனங்கள் சில சமயங்களில் இக்கருத்தை ஆக்ஷேபித்து எப்படியிருந்தாலும் பிழைப்பதற்காக உயிரைக்கொல்லவேண்டியிருக்கிறதென்றும், மரக்கறி சாப்பிடுகிறவர்களும் உயிரை கொல்லுகிறார்கள் என்றும் சொல்லுகிறார்கள். அது கிஞ்சித்து உண்மை தான். தாவர வஸ்துக்களிலுள்ள உயிரை கொல்லுவதாக நம்மை சொல்லுகிறார்கள்; என்றாலும் அது வெகு சொற்பமான பிராணன். தவிர மிருகங்களுக்கிருப்பது போல உணர்வு அவைகளுக்கு இல்லை.

கொல்லாமைக்கு முதன்மையான ஆக்ஷேபனையாதெனில் அது விகாச முறையின ஒழுங்கில் தலையிட்டு தடுக்கின்றது. நீ ஒருவனைக் கொன்றாயானால் அவனுடைய சுகதுக்கங்களை மாத்திரம் கவனித்தால் அவனுக்கு உண்மையில் யாதொரு கெடுதியும் செய்யவில்லை. அவன பூலோகத்தில் எப்போதும் இருப்பதைவிட மெத்த சுகமான இடத்திற்கு சாதாரணமாய்ப்போகிறான். வெறுமையாக தேகத்தை கொல்லுவது எப்போதும் கொடூரமாயிருக்காது. ஏனெனில்ஒருவனை திடீரென்று கொன்றுவிட்டால் அவன அதை உணருவதேயில்லை. நீ செய்த பிழையாதெனில் விகாசமுறை கொடுக்கும் சந்தர்ப்பத்தை எடுக்காதபடி நீ அவனை தடுத்துவிட்டாய். அப்படிசெய்வதால் அவனுக்கு அந்த தேகத்தில் வரும் பிரயோஜனத்தை அவன இழந்துவிட்டான். பின்னுக்கு அவனுக்கு இன்னொரு தேகத்தில் சந்தர்ப்பம் கிடைக்க இருக்கின்றது; என்றாலும் நீ அவனை தடுக்கின்றாய். மேலும் அவனுடைய போகசாதனத்திற்காக வேறு ஒரு பிறக்கும் இடத்தைக்கண்டு பிடிக்கவும், மறுபடியும் இன்னொருதரம் மனிதனாகி வளர்ந்து வந்து, சந்தர்ப்பத்தை எடுக்க குழந்தையாயும், சிறுபிள்ளையாயும், அவனை வளர்த்துக்கொண்டு போக கரும தேவர்களுக்கு நீ,கஷ்டம் கொடுக்கின்றாய். இதற்காகத்தான மிருகத்தை கொல்வதை விட மனிதனைக கொல்லுவது மெத்த பாபம். மனிதன ஒவ்வொரு ஜனமத்திலும் சுத்தமாய் புதிய தேகான்மா ஒன்றை எடுத்து வளர்க்க வேண்டியதாய் இருக்கிறது. ஆனால் மிருகமோ தன்னுடைய (Group Soul) ஆனமகாட்பக்கூடுக்குள் திரும்பிப் போகின்றது. அதிலிருந்து திரும்பி ஜென்மமெடுப்பது சராசரியாய் வெகு சுலபம். என்றாலும் மெத்த சீர்திருத்தப்பட்டு வந்த மிருகத்தின் விஷயத்தில் (இது மெத்த சிக்கான ஜென்மம்,

தோற்றம்), இது, நாம் வெகு மரியாதையுடன் செல்வோமானல், பிரபஞ்ச விருத்திக்குரிய அதிகாரிகளுக்கு மெத்த கஷ்டம் உண்டாக்குகிறது. ஒரு கொசுவை கொல்லுவதை எடுத்துச் சொல்லுவோமானல் அது ஒரு அற்பமான விஷயம். ஏனெனில் அது தனது ஆன்மகர்ப்பக் கூடுக்குள்போய் வெகு சொற்ப காலத்தில் திரும்பி ஜனித்து வருகின்றது. அவ்வித பூச்சிகளை நூறாயிரக்கணக்காய் கொல்லுவதால் வரும் கஷ்டம் குதிரையையாவது, மாட்டையாவது, பூனையையாவது, நாயையாவது கொல்லுவதோடு ஒத்திட்டுப் பார்த்தால் ஒப்புமை கொஞ்சமேனும் இல்லாததுபோலிருக்கும்.

தன்னை காப்பாற்றிக் கொள்ளும் அவசரத்திலாவது, அல்லது மற்றவரை காப்பாற்றும் சந்தர்ப்பத்திலாவது தவிர, தன்னுடைய சொந்த கருத்தைக்கொண்டு ஒருவனைக் கொல்லுவது சரியான விஷயம் என்று எவ்விதத்திலும் நினைக்கக்கூடியதல்ல. யோகிகளாய் இருப்பவர் தங்களைக் காப்பாற்றிக்கொள்ளுவது கூட இல்லை. இவர்கள் இப்பேர்ப்பட்ட விஷயங்களை கர்மநியதியின் கையில் விட்டுவிட்டிருக்கிறார்கள். (கர்மானுசாரப்படி நடக்குமென்று விட்டிருக்கிறார்கள்) என்றாலும் நம்மை எதிர்த்தபோது நம்முடைய உயிரை காப்பாற்றிக்கொள்ள நமக்கு நியாயமிருக்கின்றது என்று நான நம்புகிறேன். மேலும் ஒருகுழந்தையையாவது சிநேகிதனையாவது துன்பப்படுத்த ஆக்கிரமித்து வருபவனை கொலை செய்தாவது காப்பாற்ற நமக்கு நியாயமிருக்கிறது என்பது எனக்கு நிச்சயமாய்த் தெரியும். எல்லாவித மிருகங்களைப்பற்றியும் இதே நியாயம் இருக்கின்றது. ஒரு மிருகம் உன்னை எதிர்த்து உன்னுடைய உயிருக்கு அபாயமாவது அல்லது தொந்தரவாவது கொடுக்க வந்தால் காப்பாற்றிக்கொள். ஒருவேளை அதை கொல்லும்படி நேரிட்டாலும் அதைக் கொல்ல உனக்கு நியாயமிருக்கிறது. இப்பேர்ப்பட்ட விஷயங்களில் எதனல் மெத்த கெடுதிவரும் என்பதை யோசிக்கவேண்டியது. உதாரணமாக கொசுக்கள் தங்களுடைய சாதாரண ஆகாரத்தைவிட்டு உன்னைக் கடித்து உன்னுடைய இரத்தத்தில் விஷத்தை கலந்தால் ஒருக்கால் உன்னுடைய முக்கியமான வேலைகளை கெடுத்துவிடுமானல் இக்கொசுக்களை கொல்லுவது குறைந்த தீங்கு. நீ கொசுவலைக்குள் இருந்து அவைகளை துரத்திவிடுவது மெத்த நல்லது.

கொசுவானது இயற்கையிலும், சுபாவத்திலும் மாக்கரி பதார்த்தத்தில் வளருவது. இரத்தத்தையே ருசிபார்க்காத கொசுக்கள் கோடாநு கோடிகளாய் இருக்கின்றன. அவைகளைக் கொண்டுவந்து ஜனங்களோடு விட்டு அவைகளுக்கு அந்த கெட்டருசி, இரத்தருசி காத்தை கொடுங்கள். அது எனனவிதமாய் திரும்பும் என்று உங்களுக்குத் தெரியவரும். இன்னும் இதர பூச்சிகளில் அநேகவிதம் இவ விதமாகத்தான இருக்கின்றன. அவைகள் இருக்குமிடத்து நல்லவைகள் தான. ஆனல் ஜனங்களோடுகூட நெருங்கி சேர்ந்திருப்பது நல்லதல்ல. நம்மைககடிக்க இவைகளை விட்டால் நாம் மாத்திரம் அவஸ்தைப் படுவதோடு மற்றவர்களையும வியாதிக்குட்படுத்துகிறோம். நாம் அப்படி செய்யாவிடில் அவர்கள் க்ஷேமமாய் இருப்பார்கள்.

நமக்கு தொந்தரவு கொடுக்கும் எந்த ஜந்துவையும் கொலை செய்யவாவது அல்லது ஒழித்துவிடவாவது நம்முடையஅறைகுறை அறிவில் முக்கிய நியாயம் யாதும் இல்லை. சிலவகை ஜந்துக்கள் அவைகளுடைய இனம் ஆண்டுமாறிவிட்டதாலும் அல்லது அவைகள் இருந்த தேகத்தில் அடைய வேண்டிய விருத்தியை எல்லாம் அடைந்தபடியால் இனி அந்த ஜீவராசி தேவையில்லாதிருக்கிறபடியால் அவைகள் இப்போது செத்து அத்து போக வேண்டியது வாஸ்தவந்தான. பிரபஞ்ச விருத்திக்குரிய பெருத்த அதிகாரிகள் கொஞ்சதூரம் வரையில் (ஜந்துக்களை) பரீக்ஷித்துப் பார்க்கிறார்கள் என்று நினைப்பது மரியாதைக்குக்குறைவில்லை. மைத்திரேய பகவானும் புத்தபகவானிடமிருந்து ஜகத்குரு பீடத்தை ஒப்புக்கொண்டபோது மதவிஷயங்களிலும் சிலபுதிய வழிகளை எத்தனித்தார். இவை ஏற்படுத்தியபடி சீர்படவில்லை. பிளாவட்ஸ்கி அம்மையாரும் சில செடிகளைப்பற்றியும், மிருகங்களைப் பற்றியும் தேற்றக்கூடாதவைகளென்று வெகு யோசனையோடு சில சமயங்களில் சொல்லுவதுண்டு. இவைகளிலிருக்கும் ஜீவான்மா வேறுவித தேகங்களுக்குப் போய் இவைகளை மெதுவாய் அத்துப் போகும்படி விட்டிருக்கிறது. சில சமயங்களில் இவைகளுக்குள் தாழ்ந்தபடியிலுள்ள ஜந்துக்களைவிட்டு இவைகளில் குடியிருக்கச் செய்யும் சில சமயங்களில் தாழ கீழே போகும் ஜந்துக்களை கூட

இவைகளிலிருக்கும்படி செய்துவருகிறது. அந்த அம்மையார் சில அருவருப்பான பூச்சிகளைப்பற்றியும் பாம்புகளைப்பற்றியும், தவறுதலாய் உண்டான ஜந்துக்கள் என்றும் இவைகளை கொல்லுவது மற்றபடி விகாசமுறையில் மேல் போகும் ஜந்துக்களை கொல்லுவதைப் போல இதற்கு இல்லை என்றும் சொன்னார்.

சில இடங்களில் கொல்லாமை என்கிற கருத்தை வெகுதூரம் கொண்டு போகிறார்கள். உதாரணமாக ஜனங்கள் கிருமிகளை கொல்லாது தங்களை கடித்து தின்ன அவைகளை விடுகிறார்கள். இக்கருத்து நாகரீகமுள்ள எவனுக்கும் ஏற்றதல்ல. இன்னும் ஒருவனுடைய பெட்டியில் இருக்கும் நல்ல புஸ்தகங்கள் சிற்சில பூச்சிகளால் அரித்துவிடுவதை காண்பதுண்டு. இவைகளை ஓட்டிவிடுவது நல்லதுதான. என்றாலும் தனக்கு உபயோகப்படுவதோடுகூட மற்றவர்களுக்கும் உபயோகமாகும் இப்புத்தகங்கள் வீணாய் பூச்சிகளால் கெட்டுப்போக விடுவதைவிட இப்பூச்சிகளை சம்ஹரிப்பது உண்மையில் மெத்த நல்லதுதான். அநேகவித சிறு ஜந்துக்கள் இருக்கின்றன. இவைகளை நாம் கொல்லாமல் விட்டோமானால் நம்முடைய வாழ்க்கையை உண்மையில் நடத்தமுடியாததாக செய்துவிடும். ஒருபோதும் உயிரைக் கொல்லாத யோகிகளுக்கு எப்போதும் சாப்பாடு வேற்றோரால் கொடுக்கப்பட்டு வருகிறது. ஆனால் அதை கொடுக்கும் விவசாயகாரனுக்கோ தன்னுடைய வயலை பூச்சி புழுக்களால் அழியாதபடி காப்பாற்ற வேண்டியிருக்கிறது. ஆஸ்ட்ரேலியா கண்டத்தில் பயிரிடுவோன் முக்கியமாய் குழிமுயல்களோடு கஷ்டப்பட வேண்டியதாய் இருக்கிறது. இவைகளை இத்தேசத்திற்கு ஏற்றுமதியாக்கிக்கொண்டு வந்துவிட்டார்கள். இவைகள் இலக்ஷக்கணக்காய் பிரபலமாய் இருப்பதால் இவைகளிஷ்டப்படி விடுவார்களானால் விவசாயம் அடையாளமில்லாமல் அழிந்துவிடும்.

சில பூச்சிபுழுக்களை கொல்லுவது, மனிதனுடைய ஆகாரத்திற்கு வேண்டிய தானியங்களை காப்பாற்றும் பொருட்டு மாத்திரமல்ல,மற்று சாதாரண செடிகளைக்காப்பாற்றும் பொருட்டும் கொல்ல வேண்டியிருக்கிறது; ஏனெனில் ஒருவன் செடிகளையும், மரங்களையும், காய்கறி தோட்டத்தையும் போடுவானானால் அதிலிருக்கும்

ஜீவனை காப்பாற்ற அவன் உத்தரவாதியாய் இருக்கிறான். இவ்வித விஷயங்களில் எல்லா வேளையிலும் சாதாரண யூகத்தை பிரயோகிக்கவேண்டியது. எப்படியிருக்கினும் விகாசமுறையில் மேல்படியில் வந்திருக்கும் பசுவையாவது ஆட்டையாவது, சுத்தமாய் அநாவசியமாய் இருக்கும்போதே அவைகளை தனக்கிருக்கும் இழிவான ருசிகரத்தை திருப்திசெய்ய கொலை செய்வதைவிட தனனுயிரைக் காப்பாற்றிக்கொள்ளும் பொருட்டு ஆக்கிரமிக்கும் மிருகத்தை கொல்வது நிச்சயமாய் வேறான விஷயமே.

"நமது அருமை தேசமாகிய இந்தியாவில் தீண்டலாகாது, என்கிற விபரீத கொள்கையால் தாழ்ந்த ஜாதியாரை விலக்கிவைத்து, நடத்திவரும் வழக்கத்தை கவனித்துப்பார்; தவிர, இக் கொடிய குணம், சகோதரத்துவத்தை தன் தருமமாகத் தெரிந்தவர்களிடத்திலும், இரக்கமில்லாத ஹிம்சையை விளைவிப்பதைப்பார்."

C. W. L.:—இந்தியாவில் தாழ்ந்த ஜாதியார், பஞ்சமர் அல்லது ஐந்தாவது வகுப்பினர், உண்மையில் தள்ளிவைக்கப்பட்ட பறையர்கள்,என்பவரகள், ஆரியவம்சத்தார் இமயமலையைத் தாண்டி இந்தியாவுக்கு வந்தபோது அவ்விடத்தில் குடியாயிருந்த மூலவம்சத்தாருடைய சந்ததிகள். மநுவால் ஏற்பட்ட ஜாதிரீதியின் விதிகள் அச்சமயத்தில் வம்ச விருத்திக்கும் தேகசுத்தத்தை கெடுக்காதபடி தீண்டாமலிருப்பதற்கும் வேண்டிய நல்ல விதிகளாக இருந்தன. இவைகள் குடியேறினவர்களை அவர்களோடு சேரவாவது, சாப்பிடவாவது, கலியாணம் செய்துகொள்ளவாவது விடாமல் தடுத்திருந்தது. என்றாலும் மேற்கொண்டு அவர்களை இப்போதுமெத்த கொடுமையாக நடத்துகிறார்கள். உதாரணமாக ஜாதியாருடைய கிணற்றண்டை தண்ணீர் எடுக்க பறையனை விடுகிறதில்லை. ஏனெனில் ஜாதியாருக்காகவைத்திருக்கும்கிணறு தீட்டுப்பட்டுப்போகுமாம். ஆதலால் அவன் தானாக வெட்டிய கிணறு அல்லது அவனுக்காக ஒதுக்கிவைத்த கிணறுகளிலிருந்து தண்ணீர் எடுக்கவேணடியிருக்கிறது. இது பலகாலும் மெத்த கஷ்டம் கொடுக்கின்றது. முக்கியமாய் சில

பாகங்களில் சேரிகளை சௌக்கியமில்லாத இடங்களில் கட்டவிட்டிருக்கிறபடியாலும், அநேகமாய் அவர்களை பலவந்தமாய் ஒட்டினபடியாலும், கஷ்டமாக இருக்கின்றது. தற்காலத்தில் சிலநாள் வரைக்கும் பறையன் ஒருவன், பிரியமில்லாதவகையில் கிருஸ்தவனை அல்லது மகம்மதியனுனொழிய (இந்தவழி அவர்களுடைய அநேக தேசாசார தீண்டல் முதலிய நிபந்தனைகளை எடுத்துவிடுகிறது) நல்ல ஸ்திதிக்கு வரக்கூடாமையாக இருக்கிறது.

இதுவுமன்றி இதைவிட இன்னும் கெடுதியானவகையில் விபரீதமென்பது இந்த தாழ்ந்த ஜாதியாரை சகோதரபாவத்தை ஓர் பெருமையாக வைத்திருக்கும் ஜனங்களால் நடத்திவந்தது. இந்த சந்தர்ப்பத்தில் சகோதரத்துவம் எனபதின் கருத்தை விபரீதக் கொள்கையால் மறந்துவிட்டிருக்கிறார்கள். ஒருகாலத்தில் இவர்கள் மரியாதையுள்ள சுத்தமான ஜாதியாராக வருவார்கள் என்று நம்பிக்கையிருக்கிறது. ரைல்வண்டிகளிலும், டிராம் கார்களிலும் ஒன்று சேரும்படியான தற்கால சந்தர்ப்பங்கள் இந்த தீண்டலை நீக்கி வருகிறது.

மேல் வகுப்பிலுள்ள இந்தியர்களுக்கு இவர்களுடைய முன்னோர்கள் ஜெயித்து அடிமையாக்கின இந்த தாழ்ந்த ஜாதியாரை சீர்தூக்குவது இவர்களுடைய கடமையாயிருக்கிறதும் தவிர இவர்களுக்கு ஓர் கர்மகடனுகவுமிருக்கின்றது. அவர்களிடத்திலுள்ள அந்த கண்ணியத்தன்மையும், அவர்களிடத்தில் சுயமாகவேயுள்ள ஆரியகுண சீலமும், இந்த அவசியமான சீர்தூக்குதலைச் செய்ய அவர்களைத் தூண்டவேண்டும். குழந்தை ஒன்று அசங்கியமாய் இருந்தால் அதைத் தொடாதபடி நாம் பின்னுக்குப் போவதில்லை. மற்று அதைகுளிப்பாட்ட எடுத்துப்போவோம். ஆகையால் நாம் பறையர்களைக் கண்டு ஒதுங்கக்கூடாது. ஆனால் அவனுக்கு சௌக்கியத்தையும், சுத்தத்தையும், படிப்பையும், அவன் பெறும்படியான நிலையில் அவனை வைக்க ஏற்படுத்தவேண்டியது. அவனோடு சேர்ந்து சாப்பிடவேண்டும் என்பது அவசியமில்லை. என்றாலும் நமது இளைய சகோதரர்களுக்கு நாம் தயவுடனும் அன்புடனும் இருக்கவேண்டியது கண்டிதமாய் நமது கடமை.

ஒரு ஜாதியிலோ அல்லது ஒரு வம்சத்திலோ ஒருவன் பிறப்பது அவனுக்கு எப்போதும் ஏதோ ஒரு முக்கியமான சந்தர்ப்பம் கொடுத்துவருகின்றது என்பது வாஸ்தவந்தான். என்றாலும் அவைகளிலிருக்கும் பிரயோஜனத்தை அவன் எடுக்கிறான் என்று சொல்லுவதற்கில்லை. தாழ்ந்த ஜாதியில், ஓர் நல்ல குடும்பத்தில் பிறப்பது, தகாத பிராமண குடும்பத்தில் பிறப்பதைவிட, நல்ல சந்தர்ப்பம். ஏதோ சிலவகையில் கிடைக்கும் ஏதோ ஒன்றை குறித்து ஜனங்கள் பிரயத்தினப்படுகிறார்கள். அது கிடைத்தவுடன் அது கொடுக்கும் சந்தர்ப்பங்களை எடுக்க தவறிவிடுகிறார்கள். ஆதலால் கெட்ட பிராமணனாயிருக்கப்பட்டவன் தனது முந்திய ஜென்மத்தில் இருந்த சந்தர்ப்பங்களை தவறான வழியில் உபயோகப்படுத்தினவனாகவும், அல்லது அசட்டையால் நழுவவிட்டுவிட்டவனாகவும், இருந்தபிறகு எடுத்தது முதல் ஜென்மமாய் இது இருக்கலாம். அபூர்வமான விஷயங்களில் மாத்திரம் இது உண்மையாகவிருக்கின்றது. "அடிமையாய் இருந்தவன் சாந்த தன்மையினாலும் புண்ணியச் செய்கைகளாலும் அரசகுமாரனாகவும் வரலாம்; இராஜனாக இருந்த ஒருவன், செய்த தீமைக்காகவும், நன்மையை செய்யாது விட்டதற்காகவும், பூமியில் பிச்சைக்கார கோலத்தோடும் திரியலாம்."

சாதாரண விதிப்படி வேலையாட்களாக பெருத்த கூட்டமாயிருக்கும் ஜனங்கள் படிப்படியாய் நடுத்தர நிலைமைக்கு வந்து, பிறகு மேலுக்கு போவார்கள். ஒருவன் அநேகமாய் எவர்களுடன் கூடியிருக்கிறானோ அவர்களோடுதான் அவன் கர்மம் செய்துவருகிறான். பிந்திய ஜென்மத்தில் அதைக் கழிக்க அப்பேர்ப்பட்ட நிலைக்குதான் அவன் வரவேண்டியிருக்கிறது. விகாசமுறையின் வழியும் படிப்படியாய் படிப்பிலும், நாகரீகத்திலும், போகவேண்டியிருக்கிறது. ஆகையால் திடீரென்று மெத்த உயர்ந்த, அல்லது தாழ்ந்த வகுப்பில் போவது இரணசத்திரம் வைப்பதுபோல் வெகு அருமையான கருமத்தால் அவசியமாக இருக்கும் பக்ஷத்தில் ஏற்படும். என்றாலும் மனிதவர்க்கம் என்பது ஒரு குடும்பமே. சகோதரக்கடமை என்பது தவறுதலில்லாமலே எல்லோருக்கும் பொருந்தியிருக்கின்றது.

"கருணை நிதியாயுள்ள கடவுளின் பெயரைச் சாட்டி ஜனங்கள் இந்தநடுக்கமுறும் மூடக்

கொள்கைக்கு வழிப்பட்டு அநேக குற்றங்களைச் செய்திருக்கிறார்கள்.''

C. W. L.:—விபரீதத்தை குறித்து இன்னொரு குறிப்பு யாதெனில், விபரீதத்தால் மெத்த தீங்கை விளைவிப்பவன் எவனென்றால், மெத்த நல்ல எண்ணம் உடையவனாயிருப்பவன்; மதக் கொள்கையின்படி சற்றும் ஆரோசுமில்லாமல் நடக்கிறவன். உண்மையில் சுயகாமியமாயுள்ள ஒரு கெட்டவன். இப்பேர்ப்பட்டவர்கள் அநேகமாயில்லை—அநேகமாய் தன்னுடைய சொந்த ஆசைகளை திருப்தி செய்வதில் உழன்று வருகிறவன். மற்றவர்கள் இவன் வழியில் குறுக்கே நின்றாலொழிய, அவர்களிடத்தில் இவன் தலையிடப்பிரியப்படுகிறதில்லை. ஆகையால் முடிவாய்ப்பார்க்கில் அவன் உலகத்தில் அவ்வளவு கெடுதிசெய்கிறதில்லை. நல்ல எண்ணத்தோடு இருக்கும் முட்டாளானவன், வாஸ்தவத்தில் அபாரமான அபாயமுண்டாக்குபவன். ஏனெனில் இவன் எப்போதும் மற்றவர்களுடைய வேலையில் தலையிடப்பிரியப்படுகிறவன். உதாரணமாக பாதிரிமார்கள் மத்திய ஆப்பிரிக்காவிலுள்ள காட்டு ஜனங்களுக்கும், இதைப்போன்றவர்களுக்கும், மெத்த நன்மை செய்திருக்கிறார்கள் எனபதைப்பற்றி நான் சந்தேகிக்கவில்லை. ஆனால் இந்தியாவிலோ இவவிடத்தில் சாதாரணமாய் தெருவில் போய்க்கொண்டிருக்கும் வேலைக்காரனுக்கும் தங்களுடையமதவிசாரணையிலும், உன்னதமாயிருக்கும்மேலான கருத்துகளிலும், பாதிரிமார்களைவிட அதிகமாய் தெரியும்—பாதிரிமாரோ அறியாமையால் பரியாசத்திற்கு இடங்கொடுக்கிறார்கள். இவர்களுடைய எண்ணம் கூடிய அளவு நல்லதாய்தான இருக்கின்றது, என்றாலும் அவர்கள் மெத்த கெடுதியைஉண்டாக்குகின்றார்கள். பாதிரிமார்களுடைய மதியீன வகையால் அநேக சண்டை சச்சரவுகள் உண்டாயின. அவாகள் தருவித்துக்கொண்ட பிராண அபாயத்திலிருந்து அவர்களைக்காப்பாற்ற இராஜாங்கம் தலையிடவேண்டியதாய் இருந்தது. இவர்கள் செய்வது ஒரு கிரம வழியாய் எற்பட்டிருந்தது. அதாவது முதலில் பாதிரிமார்கள் வருவதும், பிறகு பிராந்தி, ஜின் முதலிய இலாகிரி வஸ்துக்களை விறபவர்கள் வருவதும், அவர்களுக்குப் பிறகு படை எடுத்து தேசத்தையே பிடிக்கவருவது

மாய் இருந்தது. இங்கிலாந்திலும் அமெரிக்காவிலுமுள்ள எளிய கிழவிகள் இந்த பாதிரிமார்களுக்கு உதவிசெய்ய தங்களுடைய சௌகரியத்திற்கு வேண்டியவைகளையெல்லாம் விட்டிருக்கிறார்கள். கிருஸ்துவுக்காக தாங்கள் தியாகஞ்செய்வதாக நினைத்துக்கொண்டிருக்கிறார்கள். கிருஸ்து பிறப்பதற்கு ஆயிர வருஷங்களுக்குமுன்பாக இருந்தே இந்தியாவில் சிறந்த மதமும் சாஸ்திரங்களும் இருக்கிறதாகவும் அவர்களுடைய பணத்தை இங்கிலாந்திலுள்ள அஞ்ஞானிகளையே சீர்திருத்த நல்லவிதமாக உபயோகப்படுத்திக் கொள்ளலாம் எனபதையும் அவர்கள் சுத்தமாய் அறிந்தவர்கள் அல்லர்.

"ஆகையால் அதன் அங்க மச்ச வடுகிஞ்சித்தும் உன்னிடத்திலில்லாதபடி வெகு ஜாக்கிரதையாக இருக்கவேண்டும்."

C. W. L :—இதில் வற்புறுத்திச் சொல்லும் வகையால், நமக்குத் தெரியாமலே நாம் விபரீத கொள்கையிலிருக்கலாம் எனும் எச்சரிக்கையை தெளிவாய் காட்டுகின்றது. ஆகையால் நாம் வெகு விழிப்போடு கவனித்திருப்பது நல்லது. ஒவ்வொரு கேள்விக்கும் எப்போதும் குறைந்த பக்ஷம் இருபக்கங்களிருக்கின்றன, எவனும் முழுவதையும் பார்ப்பதில்லை, தியாசொபிஸ்டாய் இருப்பவனும்கூட பார்க்கிறதில்லை. நாம் ஈசுவரனோடு அவரிருக்கும் உயர்வான ஞான பூமியில் நாம் விழிப்புடன் ஒன்றாகும்போது, ஒவ்வொன்றிலுமுள்ள எல்லா பக்கங்களையும் பார்க்கமுடியும். அப்போது "என்னுடைய நோக்கம் சரியானது" என்று சொல்லமுடியும். என்றாலும் அப்படி சேரும்போது நமது நோக்கம் அநேகமாய் மற்ற எல்லோருடைய நோக்கத்தோடு சேர்ந்திருக்கும். ஏனெனில் ஒவ்வொன்றிலும் உண்மையில் ஏதோ ஒரு மூலை சாதாரணமாய் இருக்கின்றது.

"இம்மூன்று கனத்த குற்றங்களை நீகட்டாயந் தவிர்க்கவேண்டும். ஏனெனில், இவை அன்புக்கு நேர்விரோதமாக கெடுதி செய்கிறபடியால் எவ்வித விருத்தியையும் பாழாக்குகின்றது."

C. W. L:—நமது வாழ்க்கையை ஆண்டுக்கொண்டும், மற்ற சக்திகளுக்கு உயிரூட்டிக்கொண்டும் இருக்கவேண்டிய அந்த அன்

பைப்பற்றித்தான் மாஸ்டர் குதூமீ கொடுக்கும் போதனைகள். இவர்
இந்த வழியிலிருப்பவர். நமக்குத் தெரிந்தவரையில் சிறப்பானதும்
மேன்மையானதுமான குணங்களை எல்லாம் வைத்திருக்கும் மாஸ்
டர்கள் எப்படி ஒருவருக்கொருவர் ஒரு குணத்தில் மேலிட்டிருக்
கிறார்கள் என்பதை தெரிந்துகொள்ள அநேகருக்கு கஷ்டமாய்
இருக்கின்றது. முதல் ரேகையை விளக்கிக்காட்டும் **மாஸ்டர்
மோரியா** அவருடைய குணாதிசயத்தில் சித்தத்தையும், அதிகாரத்
தையும், பிரதானமாய் வைத்திருந்தாலும் மற்ற மாஸ்டர்களைவிட
அணபிலாவது, அறிவிலாவது, குறைவாயிருப்பாரென்று உத்தேசிப்
பது தவறு. அப்படியே **மாஸ்டர் குதூமி** முதல் ரேகையிலுள்ள
மாஸ்டர்களைவிட சித்ததிலும் அதிகாரத்திலும இவர் குறைந்திருக்
கிறார் என்று நினைப்பதும் சுத்த பிசகு. மானிட அறிவிற்கு
எட்டாத வித்தியாசங்கள் இவை.

இதேவிதமாகவே இன்னும் இதற்குமேல் பெரியோர்கள் இருக்
கப்பட்ட நிலைகளிலும் வித்தியாசங்கள் இருக்கின்றன. **போதிசத்
வர்** நமது மாஸ்டர்களிருக்கும் படிக்கு எவ்வளவோ மேலான நிலை
யில் இருக்கின்றார். நமக்கு அவர்களெல்லோரும் மிகப் பெரிய
வர்களாய் இருப்பதினால்அவர்களுக்குள்ளிருக்கும் வித்தியாசங்களைப்
பார்க்கமுடியாது. அவாகளெல்லோரும் கண் கூசும்படியான சூரி
யர்கள். தேவராஜனுக்கும், பெருத்த தேவனுக்கும் உள்ள வித்தி
யாசம் ஒன்றும் நமக்குத் தெரியாது. என்றாலும் ஒருவரில் ஓர்
வர்க்கம் முழுவதும், மற்றொருவரில் விகாசமுறை முழுவதும்
அடங்கியிருக்கிறது; சூரியபகவானுடைய ஒருபாகமாய் இருப்
பவர்கள். இவர்கள் எல்லாரைவிட மெத்த சக்திகளை உடைய
வராய் சூரியபகவான் இருக்கின்றார்; என்றாலும் இவர்களைவிட
மேலானவர்கள் இருக்கமாட்டார்கள் என்று நினைக்கக்கூடும். மாஸ்
டர்களுக்கிருக்கும் சக்தியும் அறிவும்எத்தனையோ மடங்கு நம்மை
விட அதிகமாய் இருப்பதால் அந்தவிஷயமெல்லாம் நமக்கு கண்
கூசும்படியான சிறப்பாய் இருக்கின்றன, என்றாலும் வித்தியாச
மிருக்கின்றது.

# 29-வது அத்தியாயம்.

## உலகசேவை—விதி.

"ஆனால் நீ இந்தப்படி தீங்கு செய்யாதிருப்பது மாத்திரம் போதாது. நன்மை செய்வதே வேலையாயிருக்க வேண்டும். உன் சுற்றிலுமுள்ள ஜனங்களுக்கு மட்டுமல்லாமல், மிருகங்களுக்கும், விருக்ஷங்களுக்கும் உதவி புரிய எப்போதாமெதிர் பார்த்திருக்கு மவ்வளவு தீவிர ஆவல் உன்னுள் நிறைந்திருக்க வேண்டும். பெருந்த விஷயங்களைச் செய்ய அருமையான சமயங்கிடைத்த போது, அதை நழுவவிடாமலிருக்க நீ ஒவ்வொரு நாளுஞ் சிறிய விஷயங்களில் உதவிபுரிந்து, அதைப் பழக்கத்திற்குக்கொண்டுவர வேண்டும்."

C. W. L.:—நாம் (கண்ணும் கருத்துமாய்) விழிப்புடனிருக்க வழக்கப்படுத்திக் கொள்ளாதிருந்தால் எவராவது ஒருவருக்கு உதவி செய்யவரும் சந்தர்ப்பத்தை அநேகமாய் அடிக்கடி தவறிவிட்டுவிடுவோம். ஆனால் நமக்கு அந்த பழக்கமிருந்தால் அநேக சந்தர்ப்பங்களை விட்டுவிட முடியாமலிருக்கும். ஏனெனில் அது பழக்கமில்லாத புதிய இடங்களிலும் அல்லது அவசர சந்தர்ப்பங்களிலும் கூட அதைச் சாதிக்கும்படி வரும். இராணுவவீரர்களை கஷ்டமாயும் நீடித்துமுள்ள ஆயுதப்பயிர்ச்சியில் பயில வைப்பது இதே காரணத்தைக் கொண்டுதான். ஏதோ ஒரு உத்தரவை கொடுத்தபோது, என்ன செய்யவேண்டுமென்பது திட்டமாய் அவர்கள் தெரிந்திருப்பது மாத்திரமல்லாமல், சில பழக்கங்கள் சுபாவமாகவே இவர்களிடத்தில் அமைந்து இருக்கவேண்டியது. பண்டையநாளில் செய்த போர்களில் இராணுவவீரன் சுத்தமாய் சுற்றுமுற்றும் ஒன்றும் தெரியாத இடங்களுக்குப் போவதுமுண்டு. அது அவன் எவ்வளவு தைரியசாலியாய் இருந்தபோதிலும் அவனுடைய வீரத்தன்மையை சோதிக்கும்

நிலைமைகள். அவை எப்படி இருக்குமென்றால், அவனுடைய தலை போய் விட்டால்தான் அவனுக்கு மன்னிப்பு உண்டு. அபஜெய மடைந்து உயிருடன் வரமுடியாது. ஆனால் அப்பேர்ப்பட்ட அவசர சந்தர்ப்பத்திலும் பழக்கம் தூக்கிக்கொடுத்து அவன் உத்தரவுபடி நடப்பான்; சொன்னபடி செய்வான்.

நல்லதைச்செய்ய சுறுசுறுப்பாய் இருக்கும்படியாகச் சொன்ன இக்குறிப்பு, மற்ற லோகங்களில் சுறுசுறுப்பாய் இருப்பவர்களுக்கு விரோதமாக சொன்னதல்ல. இந்தக் குறிப்பை தியானித்துக்கொண்டிருக்கும் சன்னியாசி கூட்டங்களின் பேரிலும், அல்லது இந்தியாவில் பிராமண ஜாதியார்பேரிலும் விரோதமாக இருக்கிறதாக சுலபமாகவே தவறுதலான அருத்தம் கொள்ளலாம். பண்டைய நாளில் இருந்த கருத்து யாதெனில், பிராமணர்கள் தேசத்தாருக்கு வைதீக வழி காட்டும் தலைவராக எண்ணப்பட்டிருந்தது. இவர் பூஜா கரும கிருத்தியங்களை செய்வதிலும், பாராயணம் செய்வதிலும், சொல்லிக்கொடுப்பதிலும், தேசத்தாருக்கு நன்மை தரும் புத்திமதிகளை சொல்வதிலும், தம்முடைய காலமெல்லாம் கழிப்பதாகக் கொண்டிருந்தது. மற்ற ஜனங்களோ தங்களுடைய வாழ்க்கையாக சாதாரண வேலையில் இருந்துகொண்டும், பணம் சம்பாதித்துக்கொண்டும், இவர்களுடைய நன்மைக்காக பரமார்த்த வேலையை செய்துகொண்டிருக்கும் பிராமணர்களை ஆதரித்துக்கொண்டும், இருந்தனர். ஏனெனில் கால்தோலிக் தேசங்களிலும் உள்ள சன்னியாசி சங்கங்களும், இந்த கருத்தினபடிக்கே ஏற்பட்டிருந்தன. இவர்கள் மரணமடைந்தவர்களைப்பற்றி பிரார்த்தனை செய்துகொண்டு காலத்தை கழித்திருந்தனர். இவ்வித ஏற்பாடுகள், நடந்துவந்த நாளில், மரணமடைந்தவர்களையும், ஜீவித்திருக்கிறவர்களையும் இவ்விருதரத்தார்களையும், ஒரே குடும்பமாக மதித்திருந்தார்கள். பயிரிடுவதைவிட இது மெத்த உபயோகமான கைங்கரியமென்று மதித்திருந்தார்கள். ஆகையால் இப்பேர்ப்பட்டவாகள் ஜனங்களுடைய பிச்சைகொடுக்கும் தருமத்தால் பிழைத்துவந்தார்கள். பிச்சை வாங்கினதால் இவர்கள் வெட்கப்படவில்லை. கொடுத்தவர்களும் தங்களுக்கு மெத்த கண்ணியமென்று நினைத்தார்கள். இக்கருத்து முழுவதும் தற்காலத்திலுள்ளதைவிட முற்றிலும் வித்தியாசமானது. பிழைப்பதற்காக பிச்சை

எடுப்பதில் யாதொரு அவமானமும் இல்லாதிருந்தது. உண்மையில் அப்படி செய்தவர்கள் (பிச்சை எடுத்தவர்கள்) ஏழ்மை Poverty பிரம்மசரியம் Chastity. கீழ்ப்படிந்து நடத்தல் Obedience, எனகிற விரதங்களால் கட்டுண்டு, வைதீகத்தில் பேர்பெற்றவர்கள், இலவிதமாய் வாழ்ந்துவந்த ஜனங்களை கண்டனம் செய்வது எப்படியிருக்கிறது எனறால் பிரான்சுதேச குழப்பத்தில் நியாய சாஸ்திரியையும், நூலாசிரியரையும், சோம்பலுடன வீண் வாழ்க்கையில் இருப்பதாக நினைத்து அவர்களை பாதைக்குவேண்டிய கல்லை உடைத்துக் கொண்டிருக்கவேண்டியது எனறு சொனனது போலிருக்கின்றது.

"ஏனெனில் நீ கடவுளோடொன்று பட்டிருக்க ஆவலாயிருப்பது, உன்சுய பிரயோஜனத்தைக் குறித்தேயல்ல, பின்னை உன் அக்கம் பக்கங்களிலுள்ள ஜனங்களுக்கு உன் மூலமாய் அவருடைய கருணைப்பிரவாகம் பாயவோர் வாய்க்காலாக நீ யிருக்கத்தான். மார்க்கத்திலுள்ள எவனும், உலகிலிருப்பது தன்னைப் பற்றியல்ல; பின்னை மற்றவர்களுக்காக வாழ்ந்துக் கொண்டிருக்கிறான்; அவன் அவர்களுக்குச் சேவை செய்யும் பொருட்டுத் தன்னை மறந்திருக்கிறான்."

C. W. L:—இப்புத்தகத்திலுள்ள கருத்துயாதெனில்: ஜனங்களை ஒருவகை நோக்கத்திறதுக் கொண்டுவர எத்தனிக்கின்றது. நோக்கை எவ்விதமாய் வைக்க வேண்டுமெனபதை தெரிந்து கொள்ளுவதோடு திவ்யஞான கருத்தினபடி வாழவும், அனபோடு பிரபஞ்சத்தை விருத்தியாக்கி முனனுக்குக் கொண்டுபோக எல்லாருக்கும் உதவி கொடுக்க மெத்த அதிதீவிர ஆவலோடு நிறைந்திருக்கவும் வேண்டும். அப்படியிருந்தால் மற்றவர்களுக்குச் செய்யும் உபகாரவேலையில் நம்மையே நாம் மறந்திருப்போம். இரணவைத்தியன் ஒருவன் பெருத்த வேலையாக நோய்கண்ட இடத்தில் அறுத்து சத்திரம் வைப்பதை நீ எப்போதாவது பார்த்திருப்பாயானல் அவன் அதிதீவிர சுறுசுறுப்போடும், மெத்த சாதுர்ய மனதோடும், கையோடும் வேலை செய்து கொண்டிருக்கும்போதே தன்னுடைய வேலை முழுவதும்

விரல்களாலேயே செய்யவிட்டு ஆழ்ந்து, தனனை மறந்திருப்பது உனக்குத்தெரியும். போர்க்களத்தில் கூட,ஒருவன சில சமயங்களில் காயப்பட்டசினேகிதனை காப்பாற்றுவதற்காகவாவது அல்லது ஏதோ ஒரு அவசரமானதாயும் ஆபத்தானதாயும் உள்ள வேலையை செய்யும் போதாவது தன்னை முற்றிலும் மறந்திருக்கிறான.

ஈசுவரன் தன்னுடைய மண்டலத்தில் எல்லா வல்லமையுள்ளவர், அந்தந்த மண்டலத்திலுள்ள எல்லாவித படிகளுக்கும் வேண்டிய சக்தியை அவர் பொழிகின்றார். அவர் எந்தப்படிக்கி எவ்வளவு சக்தி வேண்டும் என்பதை தன்னுடைய இஷ்டப்படி மண்டல முழுதும் நிறைத்து வைக்கக் கூடுமென்று நாம் நினைத்துக்கொள்ளுகிறோம். உண்மையில் அப்படி அவர் செய்வதில்லை. ஒவ்வொருபடியிலும் பொழிகிற சக்தி ஒரு கணக்கோடு தான் பொழிந்து வருகின்றது. மேலும் ஒரே விதமான சக்தியாகத் தான் இருக்கிறது. ஆகையால் அவருடைய சுயாக்கினியின் பொறியாகிய நாம் செய்யவேண்டிய வேலையாக சில இருக்கின்றன. மேலும் அவருடைய பாகமாகிய நாம் நம்முடைய மூலமாய் அதை பொழியவேண்டி வருகிறதே தவிர மற்றபடி அவர் நம்மைவிட்டு நேராக பொழிகிறதில்லை, அவர் அதை செய்யமுடியாதென்று நாம் சொல்லக்கூடாது. என்றாலும் அவர் செய்கிறதில்லை என்பது தெளிவாயிருக்கிறது. தீவிர பக்தியோடு அவருடைய திருவுள்ளப்படி வேலைசெய்ய நம்முடைய இச்சையை திருத்தி மேல் உலகங்களிலிருக்கும் சக்தியை அதிகமாய் கீழே இழுத்து அதைத் தகுந்தபடி பதமாக்கி வெளிவிடவேண்டியது நம்முடையதாயிருக்கிறது. அதை நாம் செய்தாலொழிய அவருடைய வேலை முடிவுபெறாது. அவரோடுகூட நாம் சேர்ந்து வேலைசெய்ய அவர் நம்மை எதிர்பார்த்திருப்பது போலிருக்கின்றது. என்றாலும் அதுகூட அவருடையதுதான். ஏனென்றால் அவருடையது அல்லாத சக்தியாதும் கிடையாது.

நான் அநேகதடவைகளில் மாஸ்டர்களுடைய சக்தியானது கீழ் உலகங்களுக்கு சிஷ்யர்கள் மூலமாய் பகிர்ந்து செல்லும் விவரத்தை விளக்கிக்காட்ட குழாவையும் வாய்க்காலையும் உபமானமாக உபயோ

கொத்தேன. காந்தவேகத்தை உயர்த்தவும், இறக்கவும், பக்குவஞ்செய்யும் (Transformer) எனும் யந்திரத்தை உபமானமாக எடுத்து இதற்கு சொல்லலாம். ஏராளமான காந்த சக்தியை வெகு பலமாய் அடக்கத்தோடு அதை உற்பத்திபாக்கும் இடத்திலிருந்து ஒருக்கால் 100 மைலுக்கு அப்புறம் இருக்கும் நகரத்திற்கு அனுப்பப்படுகின்றது. அங்கே வேகத்தை மாற்றும் யந்திரங்கள் இருக்கின்றன. இவைகள் இந்தப்பலமான காந்தத்தை எடுத்து விளக்கேற்றுவதற்காக அதை தாழ்த்தியும் இன்னும் இதரவேலைகளுக்கு வேண்டிய வேகம் தகுதியாகஇருக்கும்படிமாற்றியும்விடுகின்றது.அந்த உதாரணத்தைக் கொண்டு, "சிட்னியி"லிருக்கும் ஒரு சிஷியன் இமயமலையிலிருக்கும் மாஸ்டர்களிடமிருந்துவரும் மேல் லோக சக்திகளை எடுத்துக் கீழ் லோகத்திற்கு வேண்டிய சக்தியாக மாற்றுவானா. அப்படி செய்வதால் அவனைச் சுற்றியுள்ளவர்களுக்கும்,அல்லது எவருக்காகஅனுப்பி வைக்கப்பட்டதோ அவர்களுக்கும் பகிர்ந்து கொடுக்க முடியும்.

தீக்ஷைப்பெற்ற ஒவ்வொருவரும் இவ்விதமாய் தெய்வீக சக்திகளை மாற்றும் யந்திரமாக இருக்கின்றார்கள். இவர் மூலமாய் அவருடைய அந்தஸ்துக்கு அல்லது நிலைமைக்கு தக்கவாறு ஏதோ ஒரு படியில் சக்தி பொழிந்து வருகின்றது. எல்லாகாலத்திலும் நம்மைச் சுற்றிலும் சூரியப்பிரகாசம் இருப்பதுபோல தெய்வீக சக்தி இருக்கின்றது. கிரஹணகாலத்தில் மட்டும் அல்லாது, மற்றகாலங்களில் சூரியவெளிச்சம் பூமிக்குவராவிடாமல் தடுப்பது பூமியின் சேஷ்டை. பூமி இதற்கும் சூரியனுக்கும் இடையில் வரும்படியான மேகங்களை உண்டாக்குகிறது. இந்தப்படிக்கே ஜனங்களும் ஒவ்வொரு லோகத்திற்கும் விதவிதமான சக்திகளை வீசி பொழிகின்ற கடவுளுக்கும் தங்களுக்கிடையில் சுயகாமியம் என்றும், அறிவீனமென்றும், சொல்லும்படியான மேகங்களை உண்டாக்குகிறார்கள்; தீக்ஷை பெற்றவன் தக்க நிலையிலிருப்பதனால் இந்த சக்திகளுக்குத் தகுதியான வாய்க்காலாக விருக்கமுடிகின்றது. இப்படி இல்லாவிடில் சக்திகளுக்கு ஏதோ ஒரு குறை ஏற்படுகின்றது என்றல்ல. அவைகள் எப்போதும் இருக்கின்றன. அவைகளை ஏற்றுக்கொள்ளாதபடி நமக்குள் தடையுள்ளபோது, அவை நம்மூலமாய் வெறுமையாக போய்க்கொண்டிருக்கும்.

தூல உலகில்சூரியனிடத்திலிருந்து வரும் பிராணன் என்கிற சக்தியை உவமையாக நாம் எடுத்துக்கொள்வோம். ஒவ்வொருவரும் பிராணசக்தியை கவர்ந்து இழுத்துக்கொள்ளுகிறார்கள், ஆனால் சில சமயங்களின் ஒருவன் காயலாவாக இருக்கும்போது அதை உட்கொண்டு தனது தேக சௌக்கியத்தை சரிப்படுத்த சக்தி இல்லாதவனாய் சீக்கிரத்தில் தனக்குப் பலம் குறைகின்றதை அறிகிறான். என்றாலும் இவனுச்கு அப்போது பிராணசக்தியை எடுத்து சரிப்படுத்திக் கொள்ள சாமர்த்தியமில்லாவிட்டாலும் மற்றவன் எடுத்து சரிப்படுத்தியதை உபயோகப்படுத்திக் கொடுக்கக்கூடும். இவ்விதமாகவே தீக்ஷைபெற்றவன் அநேக உயர்வான சக்திகளை எடுத்து மற்றவர்கள் சடுதியில் உபயோகித்துக்கொள்ளும் வகையில் அவைகளை மாற்றி கொடுக்கமுடியும். நமது மானிட வர்க்கத்திலுள்ளவர்களில் அநேகர் இவவிதமாய் வேலை செய்யும் நிலைக்கு வரவர சாதாரண ஜனங்களின் விருத்தி விரைவாக வரும். செடிகளுக்குசூரிய வெப்பத்தைத் தாங்க ஓர் அளவு இருப்பதுபோல மனிதனுக்கும் தாங்குவதற்கு அளவிருக்கின்றது. அவன்பேரில் தெய்வீக வெப்பத்தை அதிகமாய் பொழிய முடியாது.

என்றாலும் இந்த வாய்க்கால்களை வெருமையான சும்மாவிருக்கும் குழாய்களாக நினைக்காதீர்கள். இவைகள் உயிருள்ள வாய்க்கால்கள். சிஷியன் சும்மா உட்கார்ந்துகொண்டு வெறுமையோர் குழாவாக விருக்கவில்லை. இவ்விதமாய் வெறுமையாக போகும் சக்திகளுமிருக்கின்றன. ஆனால் மாஸ்டர்களுடைய சிஷியன் அநேகமாய் அவன்மூலமாய்ப் போகும் சக்தி எவ்விதமானதென்றும் அதுயாருக்குப் போகிறதென்றும் அவனுக்குத் தெரியும். என்றாலும் இவன் எவருக்குத்தேவையோ அவர்களுக்கு இந்தப்பக்கமோ அல்லது அந்தப் பக்கமோ திருப்பி அதை எக்காலத்திலும் தன்னிஷ்டம்போல் அனுப்ப இவனுக்கு மெத்தவருகினறது. இவனுக்கிருக்கும் இசைந்து கொடுக்கும் தன்மைக்கும், சாமர்த்தியத்திற்கும் தக்கபடி உபயோகப்படுத்தும்படி வருகிறது. இவ்விதமாய் இவனுடைய வாழ்க்கை வாஸ்தவத்தில் சுறுசுறப்பான வேலையில் நிறைந்திருக்கின்றது. ஆகையால் இவனுடைய வாழக்கை குருட்டுத்தனமாய்

நடப்பதல்ல. மற்றும் மற்றவர்கள் தங்களைப்பற்றியே சோம்பலாய் நினைத்துக் கொண்டிருக்கும்போது இவன் வேலையாயிருக்கின்றான்.

சாமானிய ஜனங்களை இவ்விதமாக சாதாரணமாய் உபயோகப் படுத்தமுடியாது. ஏனெனில் இவர்கள் மேலுலகங்களில் வேலை செய்ய போதுமான அளவு விருத்திக்கு இன்னும் வரவில்லை. ஜீவான்மா கொஞ்சம் விருத்திக்கு வந்திருந்தபோதிலும் தேகான்மா வுடன் சம்பந்தப்பட்ட சூத்திரக்கயிர் பலப்படவில்லை. சிஷ்ய னைவன் திறந்த வாய்க்காலாக இருக்கிறபடியால் மாஸ்டர் இவனை உபயோகப்படுத்துகிறார். அப்படியே தீக்ஷை கர்த்தாவாகிய இறை வன் வெள்ளியம்பல சக்திக்காக தீக்ஷை பெற்றவரை உபயோகப் படுத்துகிறார். இவ்வித சந்தர்ப்பங்களில் மனிதன் என்று சொல்வது மேலிருக்கும் ஜீவான்மாவை சுட்டுகிறது. பூலோக வேலையைச்செய்து கொண்டிருக்கும்போதுகூட மனிதன் ஓர்புறத்தில் "சோஹம், நான் கடவுளின பொறி, அதற்கு தகாத விஷயம் ஒன்றையும் செய்ய மாட்டேன். கண்ணியமானவன கண்ணியமாயிருப்பேன" எனகிற உணர்வுடன் எப்போதும் இருப்பான.

வேலை முக்கியமானதாயிருப்பதால் மாஸ்டருக்கும் சிஷ்யனுக் கும் இருக்கும் சம்மந்தம், உலகத்தில் இருப்பதற்குமேல், மெத்த ஆழ்ந்த பக்ஷத்தோடு இருந்தபோதிலும், அது பக்ஷத்தை பொருந் தியதல்ல. மாஸ்டர் ஒருவனை அவனுடைய குடும்பத்தில் இருப்ப வர்களில் ஒருவர் சிஷ்யனாக விருக்கிறார் என்பதிலாவது, அல்லது அவனை ஜென்ம ஜென்மங்களாகத் தெரியும் என்பதிலாவது அவனை சிஷ்யனாக அங்கீகரிப்பதில்லை. மாஸ்டரும், சிஷ்யனும் இருவ ரும் 'இஜிப்டில்' சொல்லும் "அந்தரங்க வேலை" அதாவது 'ஓஸை ரிஸ்' எனும் கடவுளுடைய சிதறுண்டு பின்னப்பட்ட உடலை ஒன்று சேர்ப்பது, சிதறியிருக்கும் துண்டுகளை திரும்பி கூட்டி சேர்ப்பது. இதைத்தான யோசிக்கிறார்கள். ஒவ்வொருவனிடத்தி லும் மறைந்திருக்கும் ஜோதியை "பத்மபாணி"யை அவர்களுக்குத் தெரியும். இதை சரியானபடி வேண்டிக்கொண்டால் ஒருவனுக்கு எப்போதும் உதவி செய்யமுடியும். இது ஆதிகாலத்தில் 'இஜிப்டில்' தீக்ஷை பெற்றவர்களுக்கு, இப்போதிருப்பவர்களுக் கிருப்பது.

போலவே அலுவலாகவிருந்தது. அவர்கள் உலகத்தை சிருஷ்டிக்கும் சக்தியை, நிஷ்காமியமாயிருக்கும் கடவுளின் அன்பை, உபயோகப் படுத்தினார்கள். குப்தவித்தைக்கு வரவேண்டுமென்று கட்டாயப் படுத்துவதில்லை. ஆனால் அப்படி வருவானானால் சகோதரசங்கம் வைத்திருக்கும் நோக்கத்தையும் நீதிவாக்கியத்தையும் தொடுக்க வேண்டியது, அதாவது தனக்காக அல்லாமல் மற்றவர்களுக்காக வாழ்வது. சுயகாமிய விருத்திக்கும் திருப்தியடைவதற்குமல்ல ; மற்று வேலைக்காக.

"கடவுள் கரத்தில் அவன் ஒரெழுத்தாணி போலிருக்கிறான். அவன் மூலமாய் அவரது திருவுள்ளம் கீழோடி இவ்வுலகில் வெளிப்பட் டுத் தோன்றுகிறது. எழுத்தாணி யில்லாவிடில் மனதிலுள்ள எண்ணம் வெளிப்பட்டுத் தோன் றுதல்லவா ?

C. W. L:—ஒரு கவிஞர் "உன்னையும், என்னையும் கடவு ளுக்குவேண்டும், என்று சொல்லுவதுபோல அவர் எழுதவேண்டிய விகாசமுறையில் ஓர் நிலையில் இவ்விதமாய் அநேக பேருக்களாக நம்மைவைத்திருக்க கடவுள் கணக்கிட்டிருப்பதாகத்தோன்றுகிறது. நாம் கொடுக்கும் உதவியும், விகாசமுறையின் ஓர் அமைப்பாயிருக் கிறது. இது சிறப்பான கருத்து. மெத்த நியாயப்படியிருக்கின்றது. நம்மைச் சுற்றிலுமுள்ளவர்களுடைய நிலைக்குமேல் ஒருபடி நாம் அறிவிலும், அன்பிலும், சக்தியிலும் அடைவோமானால், அதை மற்றவர்களுக்கு பகிர்ந்து செலுத்த உபயோகப்படும்படியாக நாம் நம்மை ஆக்கிக்கொண்டோமென்று நமக்கு உடனே தெரியும்.

"இன்னும் அப்படியே அவன் ஜீவாக்கினிச் சுடராகவுமிருந்து தன்னிதயத்தில் நிறைந் துள்ள கடவுளின் கருணையை உலகத்தார்மேல வீசிக்கொண்டேயிருக்கிறான்."

C. W. L.:—'அலக்ஸாண்டரியா'வில் சுத்தமாய் சுசியோடு தங்களை வைத்திருக்க வேண்டுமென்று இச்சித்த இரண்டு சந்நி

யாசிகளுடைய கதை ஒன்றுண்டு. ஒருவன் தன்னைச் சுற்றிலும் கார்க்கவேண்டி எண்ணத்தால் ஓர் கவசம் (கோட்டை) செய்து கொண்டாளும்; ஆனால் மற்றவனோ தான் கடவுளிடத்தில் அன்போடு நிறைந்திருந்ததால் அது எப்போதும் வீசிக்கொண்டு அவனை சுத்தமாய் வைத்திருந்தது. எப்போதும் இரண்டு வழிகளிருக்கின்றன. உலகில் வேலை செய்துகொண்டு விருத்திக்கு வரும் குப்தன் (கர்மயோகி) ஒன்று; தனியாய் தனக்குள்ளே அகநோக்கத்தோடு இருக்கும் ஞானயோகி ஒன்று. அநேக ஞானயோகிகளுக்கிருக்கும் நோக்கம் கடவுளோடு முற்றும் ஒன்றுபட வேண்டுமென்பதே. என்றாலும் அவர்களை சுயகாமி என்று சொல்வது சரியல்ல. ஏனெனில் அவர்கள் அவ்விதமாய் ஒன்றாகும்போது கூட அவர்கள் தங்களைச் சுற்றிலுமுள்ளவர்களின் பேரில் ஏராளமாய் கருணையை பொழிகின்றார்கள். நம்முடைய நோக்கமோ குப்தனுடையது; தீக்ஷையில் ஒரு திட்டமான உயர்ந்தபடிக்கு வரும் வரையில் நாம் படிப்படியாய் மேலே நிலைக்குப்போய் பிரம்மாவின் பிரக்ஞையில் கலந்து, பிறகு விஷ்ணு பிரக்ஞையிலும், கடைசியாக மஹேஸ்வரனிலும் கலப்போம். ஞானயோகியானவன் அவனிருக்கும் நிலையிலேயே கடவுளில் தன்னைச்சேர்ந்து வைக்கிறான். ஆனால் அது கடவுளுடைய வாழ்க்கையில் தாழ்ந்தபடி, பிறகு அவன்மேல் நிலையிலும் ஒன்றாயிருக்க பிரயத்தினப்படவேண்டி யிருக்கிறது.

'உதவிபுரிய உனக்குத் ஊக்கந்தரும் அறிவும், அறிவைத் தூண்டி நெறியுடன் வழிநடத்தும் திடயிச்சையும், திடயிச்சைக்கு உற்சாகந் தரும் அன்பும், இவை மூன்றும் உனக்குகந்தவொழுக்கங்கள்; இச்சா, ஞானம், காருணை, இவை மூன்றும், கடவுளின் முகங்கள். நீ அவருக்கு

சேவைசெய்யும் அடியானாகவிருக்க வேண்டுமா
னால் இம்மூன்று குணங்களை உன்னிடத்திற்
காட்டவேண்டியதவசியம்.''

C. W. L:—எனது சகோதரர்களே, இது நேர்த்தியான மங்
களம்; ஆல்கியூனி அடைந்ததைப்போல் நீங்களும் அடைவீராக.




---

" கற்கிலுங் கேட்கிலும் ஞானக் கருத்துற
நிற்கிற் பரமனை வீடு. ''

Published by T M. SOMASUNDARAM PILLAY, Adyar, &
PRINTED AT THE NOBLE PRESS, TRIPLICANE MADRAS, S. E.

# சிற்றகராதி.

| | |
|---|---|
| Aspiration. | வாஞ்சை. |
| Astral Body. | ஆசைமயதேகம், காமமயதேகம். |
| Astral Plane. | காமலோகம். |
| Astral Elemental. | ஆசைமய ஜீவபூதம். |
| Aura. | பிரபை, தேஜஸ். |
| Bodhisatva. | போதிசத்வர், ஜகத்குரு. |
| Buddha. | புத்தபகவான், |
| Buddhic Consciousness. | துரியபிரக்ஞை. |
| Buddhic Plane. | புத்திலோகம். |
| Buddhic Body. | புத்திமயகோசம், விக்ஞானமய கோசம். |
| Brother-hood. | சகோதர மஹாசங்கம். |
| Brothers of Shadow. | தந்திரீயர்கள். |
| Common-sense. | தெளிவு, பொதுவானயூகம். |
| Consciousness. | பிரக்ஞை. |
| Conscience. | மனச்சாக்ஷி. |
| Causal Body. | காரணதேகம். |
| Devächan. | தேவலோகம். |
| Desire Elemental. | ஆசைமய ஜீவபூதம். |
| Steps in Discipleship. | சிஷ்யத்வபடிகள். |
| Probation. | சோதிக்கப்பட்டு வரும் சீஷன். |
| Acceptance. | அங்கீகரிககப்பட்ட அடியான். |
| Son-ship. | சேயன். |
| Elemental. | ஜீவபூதம். |
| Ego. | அகங்காரதத்துவ புருஷன். |
| Electricity. | காந்தம். |
| Group Soul. | ஆன்மகர்ப்பக்கூடு. |

| | |
|---|---|
| Hierarchy. | வெள்ளியம்பலம். |
| Intuition. | யூக ஞானம். |
| Instinct. | சுபாவம். |
| Inspiration. | ஆவேச அறிவு. |
| Initiation. | ஞான தீக்ஷை. |
| King. | இறைவன். |
| Knowledge. | அறிவு. |
| Masters. | ஞான சத்குரு. [ஞானான்மா. |
| Monad. | பிரத்தியேகான்மா, கூடஸ்தன் |
| Mental Plane. | மனோலோகம். |
| Mental Body. | மனோமய தேகம். |
| Nature Spirits. | தேவகணங்கள். |
| Nirvanic Plane. | நிருவாண உலகம். |
| Permanent Atoms. | சூத்திராத்மா. |
| Psychic Powers. | சித்திகள். |
| Personality. | தேகான்மா. |
| Personal Magnetism. | தேக காந்தம். |
| Rounds | மன்வந்தர சுற்று. |
| Races & Sub-Races. | வம்சம், கிளை வம்சம். |
| Seances. | இறந்தவர்களை பார்க்கும் இடம். |
| Super-human. | மனுஷாதீதம். |
| Soul. | ஜீவான்மா. |
| Spirit. | கூடஸ்தன். |
| Triple Atma. | மும்முக ஆத்மா. |
| Thought Form. | எண்ண உருவம். |
| Thought Power. | மனோ சக்தி. |
| Theosophy. | திவ்யஞானம், தியாசொபி |
| Theosophical Society. | திவ்யஞான சபை. |
| Will. | சித்தம். |
| Wisdom. | ஞானம். |